# ஔரங்கசீப்

H. அமீர் அலி



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த. பா. நி. (க. வெ.) வரிசை எண் — 659

# ஔரங்கசீப்

ஆசிரியர்

**H. அமீர் அலி**, எம்.ஏ., பி.ஈடி.,
பேராசிரியர், வரலாற்றுத் துறை,
அ. வ. சு. கல்லூரி,
மாயூரம்.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

# பொருளடக்கம்

# 1. வரலாறு

வரலாறு என்பது ஒரு புனிதமான ஏடு; ஏன்? மனித வரலாறு ஒரு புனிதமான படைப்பும்கூட ஆகும். எவ்வாறெனில், பல்லாயிரக்கணக்கானோர் தம் குருதியைக் கொடுத்து இதனைப் படைக்கின்றனர். வரலாறு என்பது ஒரு காட்டு வெள்ளம் போன்றது. அதில் அனைவரும் அடித்துச் செல்லப்படுகின்றனர். உலக உத்தமர்கள், தலைவர்கள், ஞானிகள், விஞ்ஞானிகள் போன்ற ஒருசிலரே இந்தக் காட்டு வெள்ளத்தில் அடித்துச் செல்லப்படாமல் ஆலமரம் போன்று நிலையாக நிற்கின்றனர். அவர்களின் வாழ்க்கைச் சரித்திரமே வரலாறு ஆகின்றது. அவர்களிலும், விரல்விட்டு எண்ணக்கூடிய வெகு சிலரே (வேர் விடுவது போன்று) தழைத்து நிற்கின்றனர். மற்றொரு விதத்தில் பார்க்கும்போது வரலாறு ஒரு காலக்கண்ணாடி. அதை நம் காலக்கண் கொண்டு பார்ப்பின், நம் காலச் சூழ்நிலையின் முகமே அதில் பிரதிபலிக்கும். அதுமாத்திரமன்று; வரலாறு அடிப்படை ஆதாரங்களின் ஓர் அரிய தொகுப்பு. ஆதாரங்கள் இல்லையேல் வரலாறு எனும் மாளிகை எழாது. அடிப்படை ஆதாரங்கள், நீதிமன்றத்தில் தேவைப்படும் சாட்சியங்களைப் போன்றவை.

வரலாற்றாசிரியர்களோ நடுவர்கள்; சிறந்த நீதிபதிகள்—வரலாற்றில் காணக்கிடக்கும் சாட்சியங்களையும் உண்மைகளையும் நிறுத்துப்பார்த்து, விளக்குவதில், ஏற்பதில், ஒதுக்குவதில் அவர்கள் வழக்கறிஞர்களாக மாறிவிடக்கூடாது; தகைசான்ற நடுவர்களாகவே பணியாற்றவேண்டும். சாட்சியங்களைப் பொறுத்துத்தான் நீதியும் அமையும். வரலாற்றில் அடிப்படைச் சாட்சியங்களோ, ஆதாரங்களோ முன்னுக்குப்பின் முரணாகவும், குறைபாடுகள் உடையனவாகவும் இருப்பின், ஏற்பனவற்றை மட்டுமே ஏற்றுப் பிறவற்றை ஒதுக்கத்தான் வேண்டும்.

மாபெரும் குறை: மேற் கூறப்பட்ட அடிப்படையில் தலைவரும், பேரரசருமான ஒருவரின் வரலாறு எழுதப்பட்டுள்ளதா என்று வினவினால், 'இல்லை' என்ற பதில்தான் கிடைக்கும். இன்று மட்டுமன்று; இப் பேரரசரின் காலத்திலேயே வாழ்ந்தவர்கள்கூட முற்றிலும் நடுநிலை கொண்டு இவரை உற்று நோக்கித் தம் சாட்சியங்களை விட்டுச் சென்றுள்ளனரா என்றால், அதுவும் இல்லை என்றுதான் கூறவேண்டும். ஏனெனில், இப் பேரரசரைப்பற்றிய குறிப்புகளை விட்டுச் சென்ற பலரும் வெளிநாட்டவர்கள். இவர்கள் இனத்தால், சமயத்தால், மொழியால் வேறுபட்டவர்கள். குறிப்பாளர்கள் வாழ்ந்த காலத்திலேயே, அவர்கள்தம் தாய்நாடுகளிலேயே சமயப் பொறையை அவர்களால் காணமுடியவில்லை. வெளிநாட்டவர்களாதலின், அவர்களுக்குச் சொந்த விருப்பு வெறுப்பு மிகுதியாக இருந்தது. தம் நாட்டுச் சாயல்கள் அவர்கள்மீது ஆழமாகப் படிந்திருந்தன. அவர்கள் தங்கள் அரசுகளின் தூதர்களல்லர். எனவே, அவர்களுக்குப் பேரரசினால் ஆதாரபூர்வமான குறிப்புகள் அளிக்கப்பட்டதில்லை. எனினும், தம் சொந்த முயற்சிகளினால் தடயங்களையும் செய்திகளையும் சேகரித்து, தம் சொந்தக் கருத்துகளையும் அபிப்பிராயங்களையும் இணைத்து, வரலாற்றுச் செய்திகளாக விட்டுச் சென்றுள்ளனர். எனினும், இவர்களது குறிப்புகள் முற்றிலும் நிறைவு பெற்றனவும் அல்ல; முற்றிலும் குறைபாடுகள் உள்ளனவும் அல்ல. இவர்களின் குறிப்புகளிலிருந்து உண்மைச் செய்திகளைத் திரட்டுவது குப்பைமேட்டிலிருந்து குன்றிமணிகளையும், வைரக்கற்களையும் பொறுக்கி எடுப்பதற்கு ஒப்பாகும். இது போன்ற மாபெரும் முயற்சிக்குப் பின்னர்த்தான் பேரரசரின் உண்மையான வரலாற்றைக் காண முடிகிறது. ஆயினும், இப் பேரரசரைப்பற்றிய செய்திகளைப் பொறுத்தவரை அவர் ஒரு புரியாத புதிர் என்றுதான் நாம் கருத நேரிடும். யார் அப் பேரரசர்?

தூற்றட்டும் அல்லது போற்றட்டும்: தூற்றுபவர் பலர் இவரைத் தூற்றட்டும்; போற்றுபவர் சிலர் இவரைப் போற்றட்டும். ஆனால், இவர் உண்மைக்காக, நீதிக்காக, எல்லாம் வல்ல அருளாளனின் தயை நாடி நடுநிலை கொண்டு, யாக்கையின் நிலையாமையை நன்கு உணர்ந்து, தம் கடன் பணி செய்து கிடப்பதே என்பதனை முற்றும் உணர்ந்து, அகன்ற பெரும் பேரரசின் உச்சிக் கொம்பில் வீற்றிருந்தும், உள்ளத்தில் உயர்ந்த ஞானியின் அருள் தன்மையைப் பெற்று, உள்ளத்தளவில் சமயப் பெரியார்களின் அடிச்சுவட்டைப் பிறழாது பின்பற்ற

முயன்று, மறு உலக வாழ்விற்காக இவ்வுலகில் நன்மையைப் பயக்கச் செய்து, வான்புகழ் கொண்டு வாழ்ந்து, மறைந்த நம் தாய் நாட்டுப் பேரரசர்தாம் இவர். அப் பேரரசர் யார்? அப் பேரரசர்தாம் முஹயத்தீன் அஹமத் ஔரங்கசீப் ஆலம்கீர் என்பவராவார்.

ஔரங்காபாத் என்னும் ஊரில் சில கல்லறைகள் காணப் படுகின்றன. அவற்றில் சமயப்பெரியார் ஒருவரின் கல்லறை ஒன்றும் உள்ளது. அதனை அடுத்துள்ள ஒரு கல்லறை பார்வை யாளர்களை ஈர்க்குமாறு ஓங்கி நிற்கின்றது. 'பீபியின் கல்லறை' என்று வழங்கப்படும் இச் சமாதிக்கு அருகில்தான், இந்தப் பெருநாட்டில் கொடி கட்டி வாழ்ந்த ஆலம்கீரின் கல்லறையும் உள்ளது. ஆனால், இது வானளாவ ஓங்கி நிற்க வில்லை; மாறாக, மண் மூடி, மரங்கள் சூழக் கல்லறைமீது உதிர்ந்த சருகுகள் நிறைந்தும், ஆடம்பரமின்றியும், வெளிறிய தோற்றத்துடனும் காட்சியளிக்கின்றது. இப் பேரரசர் தாம் வாழ்ந்த போது, அடக்கம் எளிமை ஆகிய குணங்களைப் பின் பற்றினார் என்பதற்கு அடையாளமாகவே அச் சமாதியும் அவ் வாறு காட்சியளிக்கின்றது போலும்!

ஔரங்கசீப் வாழ்ந்திருந்த காலையிலும், அவர் தம் கல்லறை யில் அமைதி கொண்ட பின்னும் அவரது புகழ் வளர்ந்த வண்ணமாகவே உள்ளது. அப் பேரரசரிடம் குறைகள் பல காணப்பட்டாலும், எளிமையே உருவான அவர் நம் தாய்த் திருநாட்டின் வரலாற்றில் அரை நூற்றாண்டுக்கும் மேலாக ஆட்சி புரிந்து ஒரு திருப்பத்தை அளித்தவர். ஔரங்கசீபுக்குப் பின், முகலாயப் பேரரசு சரிந்துவிழத் தொடங்கியது. அதற் குக் காரணங்கள் பல இருந்தன. ஆனால், அவற்றிற்கு இப் பேரரசரே மூலகாரணமானவர் அல்லர் என்பது ஆய்வாளர் களின் துணிவான முடிவு.

மாயாஜாலக் கண்ணாடி: இவர்தம் காலத்தில் வாழ்ந்த பலர் இவர் மீது அன்பைச் சொரியாமல், இவரைக் கண்டு அஞ்சி, நடுநிலைகொண்டு இவரைக் காணாது தாம் சார்ந் திருந்த இன, சமய, மொழி ஆகிய கோணங்களிலிருந்து இப் பேரரசரை உறுத்து நோக்கினார்கள். ஔரங்கசீப் ஆலம்கீர் ஒரு மாயாஜாலக் கண்ணாடி. ஏனெனில், இவரைப் பார்த் தவர்கள் தங்கள் உருவங்களையே அவரில் பார்த்துக் கொண்டனர். இவரது முப்பாட்டனாரான அக்பரின் ஆட்சியில், தம் சமயத்திற்கு வரவேற்பு இருக்கும் எனச் சில ஐரோப்பிய

அறிஞர்கள் எதிர்பார்த்து ஏமாந்து போயினர். அம் மரபில் வந்த மற்றும் சில ஐரோப்பிய அறிஞர்கள் ஔரங்கசீபின் போற்றற்குரிய சில குண நலன்களையும் மறந்து, அப் பேரரசரின் மதத்தையும், பேரரசரையும் சாடத் தொடங்கிவிட்டனர். இவரது சமயக் கொள்கைகளை உறுத்து நோக்கியோர் இவர் நீக்கிய வரிகளைப்பற்றிப் போற்றத் தவறிவிட்டனர். ஆட்சி முறையின் உயர்வினைப் போற்றிய சிலர் ஔரங்கசீபின் ஆட்சிக் காலத்திலேயே, ஏன்? அதற்குப் பற்பல ஆண்டுகளுக்கு முன்பே தோன்றிவிட்ட இராணுவ முறையின் குறைகளைக் கண்டறியத் தவறிவிட்டனர். இதனை அறிந்த சிலர் ஔரங்கசீப் வாழ்ந்த சமூகச் சூழ்நிலைகளையும் அவர் ஆற்றிவந்த நற்றொண்டையும் உற்றுணரத் தவறிவிட்டனர். முடிவு, ஔரங்கசீபைப் பற்றி அரைகுறை மதிப்பீடே! இவரைக் கண்டவர் விண்டிலர்; விண்டவர் கண்டிலர்.

ஔரங்கசீபும் நெப்போலியனும்: ஔரங்கசீபை இங்கு மாவீரன் நெப்போலியனுடன் ஒப்பிட்டுப் பார்ப்பது பொருத்தமுடையதாகும். ஒருவிதத்தில் ஔரங்கசீபின் வாழ்க்கையும் நெப்போலியனின் வாழ்க்கையும் ஒன்றுபோல அமைந்திருந்தன. நெப்போலின் எளிய குடும்பத்தில் பிறந்திருந்த போதிலும், ஆட்சியின் உச்சியை எட்டிப் பிடித்து, இறுதியில் சரிவையும் தோல்வியையுமே கண்டான். அதுபோன்றே ஔரங்கசீபும் இறுதியில் தோல்வி எனும் கசப்பு மாத்திரையை விழுங்க நேரிட்டது. நெப்போலியனின் கால் நூற்றாண்டு வரலாறுதான் ஐரோப்பாவின் வரலாறாக அமைந்திருந்தது என்பர். அதுபோன்றே ஔரங்கசீபின் அரை நூற்றாண்டுகால வரலாறுதான் இந்தியாவின் வரலாறாக இருந்தது எனில் அது மிகையாகாது. எளிய குடும்பத்தில் பிறந்து, ஏழ்மையான சூழலில் வளர்ந்து, இராணுவப் பள்ளியில் பயின்று, புரட்சியினூடே புகழ் ஏணியில் ஏறி, அலை அலையாக வெற்றிகளைக் கண்ட நெப்போலியன் இறுதியில் கண்டது பரிதாபகரமான தோல்விதான். ஹெலீனா தீவில் கைதியாக வாழ்ந்தான்—இல்லை—உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு காலத்தைக் கடத்தினான். ஔரங்கசீப் தக்காணப் போர்களிலும், மேற்குப் புற எல்லைப்பகுதிகளிலும் வெற்றிகளைக் கண்ட போதிலும், வாழ்வின் இறுதியில் கசப்பையே சுவைத்தார். மேற்கே ஸ்பெயினிலிருந்து கிழக்கே இரஷ்யாவரை நெப்போலியன் படையெடுத்து வெற்றிகளைக் குவித்திருப்பினும், நெப்போலியனின் பேரரசு ஔரங்கசீபின் பேரரசைக் காட்டிலும் அகன்றதன்று; பெரிதன்று. ஆனால் மத்திய கால இந்தியப்

பேரரசர் ஔரங்கசீபோ, அசோகர், சமுத்திரகுப்தர், ஹர்ஷ வர்த்தனர் ஆகிய பெரும் பேரரசர்களின் எல்லைப் பரப்புகளை விட மாபெரும் பேரரசைக் கட்டி ஆண்டபோதிலும் இறுதியில் வெற்றியைக் காணுதது ஏன்? ஔரங்கசீப் கண்ட தோல்வி வரலாற்று மாணவர்களின் நெஞ்சை நெகிழ வைக்க வல்லது. நெஞ்சை உருக்கும் அத் தோல்வியின் காரணம் என்ன ?

துன்பவியல் நாடகம்: நெப்போலியனின் வாழ்வினை அறிஞர்கள் ஒரு நாடகத்திற்கு ஒப்பிடுவர். கிரேக்க நாடகங்களைப் போலும், ஷேக்ஸ்பியர் நாடகங்களைப்போலும், நெப்போலியனின் வாழ்க்கையையும் ஐந்து களங்களாகப் பிரித்துக்கொள்ளலாம். அவற்றில் முதல் இரு களங்களை நாடகத்தின் தொடக்கமாகவும், மூன்றும் களத்தை உச்சகட்டமாகவும், நாடகத்தில் போற்றற்குரிய வெற்றியான பகுதியாகவும் கருதினுல், நான்காம் களத்தை ஒரு திருப்பமாகவும், ஐந்தாம் களத்தை நாடகத்தின் முடிவாகவும் பார்க்கின்ருேம். குறிப்பாகத் துன்பவியல் நாடகத்தில் உள்ளத்தை நெகிழச் செய்யும் காட்சிகள் பல நிறைந்திருக்கும். அதுபோன்றே நெப்போலியனின் வாழ்க்கையையும் சிறந்ததொரு துன்பவியல் நாடகத்துடன் ஒப்பிடலாம். நெப்போலியனின் இளமையையும், இராணுவப் பயிற்சிக் காலத்தையும் முதல் இரு களங்களுடன் ஒப்பிட்டால், புரட்சிக்குப்பின் பெற்ற எழுச்சியை மூன்ருவது களத்துடனும், 'ஆஸ்டர்லிட்ஸ்' வெற்றிக்குப்பின் பெற்ற மாபெரும் வெற்றிகளை நான்காம் கட்டத்துடனும், 'வாட்டர்லூ' வீழ்ச்சியிலிருந்து இறுதிக் களம் தொடங்கியது எனவும் ஒப்பிடலாம். ஆட்சியின் உச்சிக்கொம்பிலே வீற்றிருந்த நெப்போலியன் பல சீர்திருத்தங்களைச் செய்து நற்பெயரையும் ஈட்டிக்கொண்டான். ஐரோப்பிய உலகையும் இங்கிலாந்தையும் கதிகலங்கச் செய்த இவ் வீர சிங்கம் வாட்டர்லூவில் தோற்கடிக்கப்பட்டு, ஹெலீனுத் தீவுச் சிறைக்கூடத்தில் காலத்தைக் கழித்த நிலை விதியின் விளையாட்டேயன்றி வேறு என்ன?

பயண முடிவு: அதுபோன்றே நீண்டகாலப் பயிற்சியும் போரிடும் ஆற்றலும் பெற்றுப் பற்பல வெற்றிகளையும் கண்ட பேரரசர் ஔரங்கசீபின் நேர் அரசியல் எதிரி 1680-ல் இறந்த பின்னரும், 25 ஆண்டுகள் ஓயாது, தளராது, வீழாது, தம்மை வாழ்நாள் முழுவதும் எதிர்த்து வந்தோரிடம் போராட்டம் நடத்தியும் கண்ட முடிவை—ஔரங்கசீபின் சொற்களிலேயே கூறவேண்டுமானுல் 'பயண முடிவு' (கத்தமுஸ் ஸஃபர்—Khathamus Safar—The End of Journey) தான் என்பதை அகமதுநகரை நெருங்கிய

பொழுதே உணர்ந்துவிட்டார் பேரரசர். ஔரங்கசீபின் வாழ்வும் ஒரு சிறந்த துன்பவியல் நாடகத்தைப் போன்றதுதான். ஔரங்க சீபின் பிறப்பையும் வளர்ப்பையும் முதல் களத்துடன் ஒப்பிட் டால், அவர் பெற்றபயிற்சியையும் மேற்குப்புற எல்லைமாகாணப் பகுதிகளில் பெற்ற வெற்றிகளையும் இராணுவ-நிர்வாகப் பயிற்சி களையும் இரண்டாவது களத்துடன் ஒப்பிடலாம். 1658—59ஆம் ஆண்டுகளில் நிகழ்ந்த வாரிசுரிமைப் போரை உச்சகட்டமான மூன்றாவது களத்துடன் ஒப்பிட்டால், தம்மைச் சுற்றிச் சூழ்ந்து இருக்கும் மக்களுள் மராத்தியர்களும் பிறரும் தொடங்கிய, தொடர்ந்த எதிர்ப்புகளை நான்காவது களத்துடன் ஒப்பிடலாம். ஔரங்கசீபின் முதல் 40 ஆண்டுகள் தம் திறமையை வளர்ப்ப திலும் பயிற்சியைப் பெறுவதிலும் கழிந்தன என்றாலும், வாரி சுரிமைப் போராட்டத்தில் வெற்றிபெற்ற பின்னரும், 22 ஆண்டுகள் தொல்லைகள் மிகுந்த இடையூறுகளுக்கு இடையே கழிந்தன. ஔரங்கசீப் பெற்ற வெற்றிகளே அப் பேரரசரை அடுத்துவந்த ஆண்டுகளில் அவல நிலையின் எல்லைக்கோட்டிற்கு இழுத்துச்சென்றன. மராத்தியர்கள், இராஜபுத்திரர்கள், தக் காணத்தவர்கள், ஜாத்துகள், சத்னாமியர்கள், இன்னும் பிற மக்களும் அளித்த இடையூறுகளும், தொல்லைகளும், ஔரங்க சீபை நிலையாக நிற்கச் செய்யாமல் அலைக்கழித்தன. 1680ஆம் ஆண்டிற்குப் பிறகு ஔரங்கசீப் வாழ்ந்த வாழ்வை இறுதிக் களத்துடன் ஒப்பிடலாம். தம் இறுதி நாள்களில் ஔரங்கசீப் தக்காணம் நோக்கி வந்தார். இல்லை—விதி அவரை இழுத்து வந்தது. இறுதியில் தக்காணம் ஔரங்கசீபின் புகழைக் குழிதோண்டிப் புதைத்த பகுதியாக மட்டுமன்றி அவர்தம் பூத உடலை அடக்கித் தாங்கி நிற்கும், பாதுகாக்கும் இடுகாடாகவும் கல்லறையாகவும் ஆகிவிட்டது. ஔரங்கசீப் தம் மகனுக்கு இறுதியாகத் தீட்டிய மடலில் இரத்தக் கண்ணீர் வடித்து எழுதி இருப்பதைப் பார்க்கும்போது உருகாத உள்ளமும் உருகும்; கரைந்திடாத நெஞ்சமும் கரையும்; ஒரு துன்பவியல் நாடகத்தைப் பார்த்து முடித்த எண்ணமே நம் மனத்தில் மேலோங்கும்.

அவர் இறுதியில் தோல்விகளையும் கசப்பையும் சுவைத்தது ஏன்? ஔரங்கசீப் உண்மையில் திறமை மிக்கவர்; ஆற்றல் படைத்தவர்; ஓயாது உழைத்தவர்; உழைக்கச் சலிக்காதவர்; நேரில் எதனையும்கண்டு திடமாகச் செய்துமுடிப்பவர்; அரசியல் ஆசான்; தந்திரத்தின் இருப்பிடம்; பேரரசரே ஆயினும், எளிய வாழ்க்கை வாழ்ந்தவர்; அரச பதவியில் வீற்றிருந்தும் ஆடம்

பரத்தை வெறுத்தொதுக்கிச் சுயமாக உழைத்துத் தாமே ஈட்டிய வருமானத்தில் வாழ்க்கையை நடத்தியவர்; எந்தப் பயங்கரமான சூழ்நிலையையும் கண்டு மருளாதவர்; போரில் வெற்றிகளைக் குவித்தவர்; இலக்கியத்திலும் சட்ட நுணுக்கத்திலும் போற்றற்குரியவர். இத்தனை அரும் பெரும் நற்குணங்களைப் பெற்றிருந்தும் இவர் தோல்வியைக் கண்டது ஏன்? அதுதான் விதியின் விளையாட்டு! இக்கருத்தை ஏற்கும் முகமாகப் பேராசிரியர் ஜாதுநாத் சர்க்கார் கூறுகிறார், 'இம் மாமன்னர் குண நலன்களிலும், ஆற்றல்களிலும், விடாமுயற்சியிலும் ஆசியாவிலேயே குறிப்பிடத்தக்க மிகச்சிறந்த மன்னர்களுள் ஒருவராக இருந்தார். வரலாற்றில், துன்பவியல் நாடகத்தைப் போன்றதொரு வாழ்க்கையும், சரியான நாடகத்தின் அமைப்பை ஒத்தாற்போலவே வளர்ந்து வந்தது.'[1]

[1] Sir Jadunath Sarkar—'A Short Histroy of Aurangzeb' (Volume I)

# 2. ஔரங்கசீபைப்பற்றிய அடிப்படைச் சான்றுகள்

மொகலாயர்களின் வரலாற்றை அறிவதற்குப் பற்பல நூல்கள் அடிப்படைச் சான்றுகளாக அமைந்து நமக்குத் துணைபுரி கின்றன. அடிப்படைச் சான்றுகளை அகச்சான்று என்றும், புறச்சான்று என்றும் இருவகைகளாகப் பிரிக்கலாம். இவ் விரு சான்றுகளும் அமோக விளைச்சற் பயிரை ஒத்துள்ளன. வெளி நாட்டு அறிஞர் பலர் அக்பர் காலம் முதற்கொண்டு ஔரங்கசீப் காலம் வரை நம் நாட்டிற்கு வந்து சிறப்பான வரலாற்றுக் குறிப்புகளை விட்டுச்சென்றுள்ளனர். ஆனால், அவர்களின் சான்று களில் காணப்படும் குறைபாடுகளைக் களைவதற்கு உள்நாட்டுக் குறிப்பாளர்களின் உதவியை நாடவேண்டும். சந்தர்ப்ப வசமாக உள்நாட்டுக் குறிப்பாளர்களுக்கு அரசாங்க ஆணைகளையும், குறிப்புகளையும், ஏடுகளையும் படித்துப் பார்த்துத் தம் குறிப்பு களை விட்டுச் செல்வதற்கு வாய்ப்புகள் இருந்தன. ஏனெனில், அப்போது பாரசீக மொழி தாய்மொழியாகவும் ஆட்சிமொழி யாகவும் இருந்ததால், அம் மொழியைப் பலரும் அறிந்திருந் தனர். ஆனால், வெளிநாட்டவர்களுக்கு இவ் வாய்ப்பு இல்லா மற்போயிற்று. எவ்வாறாயினும், ஔரங்கசீபின் வரலாற்றை அறிவதில் அமோகவிளைச்சலைப்போன்ற குறிப்புகளில் ஒரே ஒரு தடைமட்டும் இருப்பதைப் பார்க்கிறோம். அது என்னவெனில், ஔரங்கசீபின் மதத்தைச்சார்ந்த பல அறிஞர்கள் பேரரசரின் உயர்வையும் மதிப்பையும் உயர்த்துவதாகக் கருதி, அக் காலச் சூழ்நிலைக்கு ஏற்றவாறு மன்னர்களின் சிறப்பும் புகழும், பிற மதத்தவர்களை அடக்குவதிலும் அல்லது அவர்களின் ஆல யங்களை நிர்மூலமாக்குவதிலும், அவற்றைப் பட்டியல்களாக அடுக்கி அடுக்கிச் சொல்வதிலும்தான் உயர்வு அடங்கியுள்ளது என நினைத்து, சந்தர்ப்பவசமாகவோ, உண்மையான அர

சியல் காரணங்களுக்காகவோ மேற்கொள்ளப்பட்ட அரசியல் முயற்சிகளுக்கும் மதத்தின் வர்ணத்தைத் தீட்டிவிட்டனர். இதனுல் பிற்கால வரலாற்ருசிரியர்களும் இதனை முழுமையாக நம்ப வேண்டியதாயிற்று. இம் மாபெரும் குறையைத் தவிர முகலாயர்களின் வரலாற்றில் அகச் சான்றுகளை அளித்ததில் இவர்களைப்போன்று வேறு யாரும் அவ்வளவு தெள்ளத் தெளிவாக ஆண்டு, மாதம், நாள் வாரியாக நிகழ்ச்சிகளை எழுதிச்செல்லவில்லை.

ஔரங்கசீபின் ஆட்சியில் வரலாற்ருசிரியர்கள் மாபெரும் சோதனைகளை எதிர்நோக்க வேண்டி இருந்தது. பேரரசர் ஔரங்கசீப் பெருமையையும் புகழையும் அறவே வெறுத்தவர். ஆதலால், முதல் பத்து ஆண்டுகளுக்குப் பிறகு 'ஆலம்கீர் நாமா' என்னும் நூல் சமர்ப்பிக்கப்பட்ட பொழுது மேலும் அந் நூல் எழுதாமல் தடை செய்யப்பட்டது. இதனுல், முதல் பத்தாண்டு கால ஆட்சிவரை நிகழ்ந்த நிகழ்ச்சிகளை ஒளிவு மறைவு இன்றியும், 1668ஆம் ஆண்டிற்குப் பிறகு நிகழ்ந்த உண்மை நிகழ்ச்சிகளை மறைக்காமல் மறைவில் எழுதியும், பின்னர் வெளியிடப்பட்டன. இப்படிப்பட்ட எண்ணற்ற சான்றுகளிலிருந்து நாம் ஔரங்கசீபின் வரலாற்றைத் திரட்ட முடியும்.

(1) பாத்ஷா நாமா (Badshah Nama): அப்துல் ஹமீத் லாகூரி என்பவர் இந் நூலை இயற்றினுர். இவருக்கு முன்பு முஹம்மத் அமீன் கஜ்வினி என்னும் மற்ருேர் ஆசிரியர் அதே தலைப்பில் 'பாத்ஷா நாமா' (Badshah Nama) என்னும் நூலை, ஷாஜஹானின் முதல் பத்து ஆண்டு கால ஆட்சியைப் பற்றிய வரலாருகப் படைத்துச் சென்ருர். அப்துல் ஹமீது லாகூரிக்கு இதுவே முன்மாதிரியாக இருந்தது. ஆனுல், அப்துல் ஹமீது லாகூரி ஷாஜஹானின் வரலாற்றை எழுதினுலும், இந் நூலின் உதவியினுல் ஔரங்கசீபின் இளமை, ஆளுநர் பதவி, பதக்ஷான் படையெடுப்பு ஆகிய வரலாற்றுச் செய்திகளை அறிய முடிகிறது. இந் நூலாசிரியர் 1654ஆம் ஆண்டில் இறந்தார். ஔரங்கசீப் ஆட்சியின் பிற்காலத்தில் அறிஞர் காபிகான் நூல் ஒன்றை எழுதத் தமக்கு இந் நூல் பெரிதும் துணை புரிந்தது என அவரே கூறியுள்ளார். மிகமிக நுணுக்கமான பொருள்களையும் விவரங்களையும் 1662 பக்கங்களில் விவரித்துள்ளார் அப்துல் ஹமீது லாகூரி. ஆங்கில அறிஞர் ஜான் டௌசன் (John Dowson) இந் நூலை மொழி பெயர்த்து வெளியிட்டுள்ளார். அதில் சில செய்திகள் :

1. 'முஹம்மத் தாரா ஷுக்கோ, முஹம்மத்ஷா ஷுஜா, முஹம்மத் ஔரங்கசீப் நூர்மஹாலின் (நூர்ஜஹான்) உவளகத்தில் அடைக்கலம் ஆக இருந்தனர்.' (28, அக்டோபர் 1627/ ஹிஜ்ரி 1037, சபர் மாதம் 28ஆம் தேதி). ஔரங்கசீப் அப்போது ஒன்பது வயதை அடைந்திருந்தார்.

2. ஷாஜஹானின் மயிலாசனத்தைப்பற்றியும் இவர் விவரிக்கிறார். இளவரசர் ஔரங்கசீப் தக்காணத்தின் கவர்னராக 1635ஆம் ஆண்டில் (ஹிஜ்ரி 1035 ஹஜ்மாதம் 3ஆம் பிறை) நியமிக்கப்பட்டார். தக்காணத்தில் 4 மாகாணங்களும், 64 கோட்டைகளும் அடங்கி இருந்தன. நான்கு மாகாணங்கள்—தௌலத்தாபாத், தெலுங்கானா, காந்தேஷ், பீரார் ஆகியவை.

3. 1643ஆம் ஆண்டில் (ஹி. 1053) இளவரசர் ஔரங்கசீபை ஷாஜஹான் கவர்னர் பதவியிலிருந்து நீக்கினார். ஆனால், அவரை 1644ஆம் ஆண்டில் (ஹி. 1054) குஜராத் கவர்னராக மீண்டும் நியமித்தார்.

4. 1646ஆம் ஆண்டில் (ஹி. 1056, ஹஜ், 24) ஔரங்கசீபுக்குப் பால்க் பதக்ஷான் பகுதிகள் அளிக்கப்பட்டன. மீண் சப்தார் பதவியில் 15,000 வீரர்களுக்குத் தளபதியாக உயர்த்தப்பட்டார். பெஷாவருக்குச் செல்லுமாறு பணிக்கப்பட்டார். இதுபோன்று மற்றும் பலப்பல சிறப்பான குறிப்புகளை இந் நூலின் மூலம் அறிகிறோம். இனி, அடுத்த நூலைப் பார்ப்போம்.

(2) ஷாஜஹான் நாமா (Shah Jahan Nama) : ஷாஜஹான் நாமா என்னும் நூலை இனயத்கான் (Inayat Khan) என்னும் பட்டம் பெற்ற முஹம்மத் தாஹிர் என்பார் இயற்றினார். இவர் காஜா அபுல் ஹசன் ஜபர்கான் என்பவரின் மகன். தாஹிர், சைஃப்கான் என்பவரின் மருமகன். சைஃப்கான் ஆக்ராவின் கவர்னராக இருந்தார். ஷாஜஹான் ஆட்சியில் உயர் பதவியை வகித்த தாஹிர் 1657—58ஆம் ஆண்டு வரைக்கும் உள்ள வரலாற்றை எழுதியுள்ளார். ஆனால், இனயத்கான் ஔரங்கசீபின் வாரிசுரிமைப் போர் வெற்றிகளைப் பற்றியோ, 1658ஆம் ஆண்டில் ஔரங்கசீப் அரியணை ஏறிய செய்தியையோ அறிந்ததாகத் தோன்றவில்லை. ஏனெனில், இவற்றைப்பற்றிக் குறிப்புகள் இல்லை. எனினும், ஔரங்கசீபின் இளமை, மேற்குப்புற எல்லைகளின்மீது படையெடுத்தபொழுது ஔரங்கசீபின் பங்கு ஆகிய செய்திகளை இந் நூலில் காணமுடி

கின்றது. 561 பக்கங்கள் கொண்ட இந் நூலை ஆங்கில அறிஞர் எச். எம். எலியட் மொழிபெயர்த்துள்ளார். அதில் சில செய்திகள் :

1. 1647ஆம் ஆண்டில் ஔரங்கசீப் பால்க்-பதக்ஷான் பகுதிகளிலிருந்து எழுதிய கடிதங்கள் மூலம் இளவரசர் தாம் வெற்றிகொண்ட பகுதிகளில் உழவர்களுக்கு உழவுக் கருவிகளையும் விதைகளையும் வழங்கினர். ஆனல் அல்மானியர்களின் எதிர்ப்பாலும் வறட்சியின் காரணத்தாலும் பயிர்கள் அழிந்தன. மேலும் மேலும் உதவிகளை வழங்க முடியவில்லை. எனவே, ஔரங்கசீப் தாம் மேலும் அங்குத் தங்க மனமில்லாததைத் தந்தைக்குத் தெரிவித்தார்.

2. ஔரங்கசீபும், தம் உற்ற நண்பரும் பிற்காலத் தளபதியுமான ஜகத்சிங் என்பாரின் மகன் மம்ஜா ராஜா ஜயசிங்கும் கூட்டாகப் பிருதிவிராஜ் ராதோரின் படைகள் முன்னே செல்ல, காபூலிலிருந்து புறப்பட்டு உஸ்பெக்கியர்களைத் தாக்கச் சென்றனர்.

3. 1648ஆம் ஆண்டில் இளவரசர் ஔரங்கசீபும், அல்லாமி சாதுல்லாகான் என்னும் அமைச்சரும் காண்டஹாரைக் கைப்பற்றுமாறு பணிக்கப்பட்டனர். மீண்டும் 1651—52ஆம் ஆண்டுகளில் அவ் விருவரும் முயன்றனர்.

4. வாரிசுரிமைப்போரின் முக்கியக் காரணங்களுள் ஒன்று, தாரா ஷுக்கோ-ஔரங்கசீப் இடையேஎழுந்த தப்பெண்ணமும் பொருமைக் குணமும் ஆகும். இதற்குத் தந்தை ஷாஜஹான் தாம் பொறுப்பு என்பதை 'ஷாஜஹான் நாமா'வின் ஆசிரியரும் சாற்றுகிருர்.

5. மீர் ஜும்லா ஔரங்கசீப் சந்திப்பு, இருவரும் பின்னர்க் கோல்கொண்டாவைத் தாக்குமாறு பணிக்கப்படுதல் ஆகிய இன்னும் பற்பல சுவையான செய்திகள் இந் நூலில் குறிப்பிடப்பட்டுள்ளன.

(3) அமலெ சாலிஹ் (Amali-Salih) : அமல் என்னும் சொல்லுக்கு 'நடத்தை', 'சாலிஹ்' என்னும் சொல்லுக்கு 'நேர்மைக்குணம்' என்றும் பொருள்படுகின்றன. 'அமலெ சாலிஹ்' என்னும் நூல் ஷாஜஹான் ஆட்சியைப்பற்றி அறிவிப்பதால் ஷாஜஹானின் இறப்பு வரை (1666) விரித்துரைக்கிறது. எனினும், ஔரங்கசீபைப்பற்றிய செய்திகள் பல

அறியக்கிடக்கின்றன. 'கம்பு' (Kambu) என்னும் சுருக்கமான பெயரையும், 'முஹம்மத் சாலிஹ் கம்பு' என்னும் முழுப்பெயரையும் தாங்கிய அறிஞர்தாம் இந் நூலை இயற்றினர். இவருடைய தந்தையும் தம்பியும் அழகிய கையெழுத்திற்காகச் சிறப்பான பாராட்டுகளையும் பட்டத்தையும் பெற்றனர். முஹம்மத் சாலிஹ், 'மீர முஹம்மத் அப்துல்லா' என்னும் பாரசீக-இந்தி மொழிகளின் சிறந்த பாடகரின் மூத்த மகன் ஆவார். மீர் முஹம்மத் சாலிஹ் 5000 மன்சப்தார் பதவியையும் வகித்துள்ளார். இவரது நூல் 1000—1200பக்கங்களுள் அடங்கியுள்ளது. அமலெ சாலிஹ் என்னும் இம் முழுநூலை அறிஞர் டௌசன் (Dowson) மொழிபெயர்த்துள்ளார்.

1. ஷாஜஹானின் 31ஆவது ஆட்சியாண்டில் (1627+31=1658)[1] ஔரங்கசீப் பேரரசின் தளபதியுடனும், இக்பால் புலந்த்-தாரா ஷுக்கோ உடனும் தக்காணம் சென்று, பீடார், குல்பர்க்காப் பகுதிகளை வென்று வருமாறு பணிக்கப்பட்டனர். ஔரங்கசீப் கல்யாணியை நோக்கி விரைந்தார்.

2. பேரரசர் ஷாஜஹானுக்குத் தாரா ஷுக்கோமீது அளவு கடந்த பற்றும் பாசமும் இருந்தன. பிற பிள்ளைகள் தம் மாகாணங்களுக்குக் கவர்னர் பதவி ஏற்றுச் சென்றாலும், தாராவை மட்டும் அவ்வாறு செல்ல அனுமதிப்பதில்லை. வேறு எந்த இளவரசருக்கும் அளிக்கப்படாத சலுகைகள் தாரா ஷுக்கோவுக்கு மட்டுமே அளிக்கப்பட்டன. மற்றப் பிள்ளைகளிடத்தில் ஷாஜஹான் ஓரவஞ்சகமாகவே நடந்து கொண்டார் என 'அமலெ சாலிஹ்' ஆசிரியர் கூறுகிறார்.

(4) தாரிக்கெ முஃபஸ்ஸலி (Tarikhi Mufazzali) : 'தாரிக்' என்றால் வரலாறு எனப் பொருள்படும். இது 'சையத் முஃபஸ்ஸல்கான்' என்பார் எழுதிய வரலாற்று நூல் ஆகும். உலகின் படைப்பிலிருந்து தொடங்கும் வரலாற்றை எழுதி இருப்பதாக இவ்வாசிரியர் கூறினாலும், ஔரங்கசீபின் ஆட்சியைப்பற்றி அறிவதற்கு இந் நூல் துணைபுரிகிறது. ஏனெனில், ஷாஜஹான் ஆட்சியின் தொடக்கத்திலிருந்து பருக்சியர் ஆட்சிக்காலம் வரையில் மிகத் தெளிவான குறிப்புகள் விவரமாக அளிக்கப்பட்டுள்ளன. இந் நூலின் சில கைப்பிரதிகளில் இருந்து இந் நூல்

[1] இது சரியன்று. 29ஆவது ஆட்சியாண்டாக இருத்தல் வேண்டும். எவ்வாறாயினும், வாரிசுரிமைப் போருக்குச் சில ஆண்டுகளுக்கு முன்பு இருத்தல் வேண்டும். 1656ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் = சமமான 29ஆவது ஆட்சியாண்டு.

1666ஆம் ஆண்டின் வரலாற்றுடன் முடிவடைகிறது என அறிகிறோம். 1000 பக்கங்களைக்கொண்ட 'முஃபஸ்ஸலி'யை அறிஞர் எலியட் மொழி பெயர்த்துள்ளார். குறிப்புகள் சில:

1. ஜும்மா மசூதி 'சாதுல்லாகானின்' பார்வையில் 10 இலட்சம் ரூபாய் செலவில் கட்டி முடிக்கப்பட்டது.

2. அதே நேரத்தில் (நோயுற்றிருக்கும்போது) தாரா ஷுக்கோ பேரரசருக்கு வாரிசு என அறிவிக்கப்பட்டார். எனவே, அரசாங்கம் எல்லாம் அவர் கைக்குள் சென்றது. இளவரசரும் அதிகாரங்களைத் தம் கரங்களில் வைத்துக்கொண்டார். ஆனால், ஊழ்வினையோ (Providence) தெய்வசங்கல்பமோ வேறாக இருந்தது. நாடு சிறந்த இளவரசரும், சிறந்த நீதிமானுமாகிய ஒருவரால் ஆளப்பட வேண்டும் என்று விதி இருந்தது. (The Country was destined to be ruled by a juster and better Prince). மேலும், அந் நாள்களில் நிகழ்ந்த ஒவ்வொரு சூழ்நிலையும் அவருக்கு அரியணையைப் பெறத் துணைபுரிந்தது. (Every circumstance which occurred in those days combined to assist him in obtaining the throne).

(5) மீரத்தெ ஆலம் (Mirati Alam): 'மீரத்தெ ஆலம்' என்னும் இந் நூலில் 'மீரத்தெ ஜகன் நுமா' என்னும் மற்றொரு நூலும் ஒரு பகுதியாக இணைந்துள்ளது. இவ் விரு பகுதிகளும் மீரத்தெ ஆலம் எனப் பொதுப் பெயரால் வழங்கப்படுகின்றன.

ஆக்ராவுக்கு அருகில் இருக்கும் ஃபரீதாபாத் என்னும் ஊரில் வாழ்ந்து வந்த நஜீர் பக்த்வார்கான் (Nazir Bakhtawarkhan) என்பார் இந் நூலை 1667ஆம் ஆண்டில் (ஹி. 1078) எழுதி முடித்தார் எனக் கருதப்படுகிறது. ஆயினும், இவர் 1669ஆம் ஆண்டின் நிகழ்ச்சிகளையும், இவர் நூலின் ஆறுவது பகுதியில் அக்பர், ஜஹாங்கீர், ஷாஜஹான் ஆகியோரைப்பற்றியும் குறிப்பிடுகின்றார். ஏழாவது பகுதி ஔரங்கசீபின் வழித்தோன்றல்கள், பேரரசின் எல்லைப் பரப்பு, வருவாய், அமைச்சர்கள், சிறப்பான ஞானாசிரியர்கள், அறிஞர்கள் ஆகியோரைப்பற்றிக் குறிப்பிடுகின்றது. பக்த்வார்கானை அடுத்து முஹம்மத் பக்கா என்பவரும், (இவர் மகன்?) முஹம்மத் ஷாபி என்பாரும், பின்னர் முஹம்மத் ரிஜா என்பாரும் தனித்தனியே சில பகுதிகளை 'மீரத்தெ ஆலம்' என்னும் தலைப்பில் எழுதி முடித்ததாகக் கூறப்படுகிறது. பக்த்வார்கானின் நூலில் பல முக்கியமான

செய்திகளைக் காணலாம். எனினும், இந்நூலில் மிகைபடக் கூறல் அதிகம் காணப்படுகின்றது. இந் நூலை எழுதி முடிப்பதற்கு முன்பே ஔரங்கசீபின் ஆட்சியில் பக்த்வார்கான் 1000 வீரர் களுக்கு மன்சப்தாராக நியமிக்கப்பட்டிருந்தார். பிறகு ஔரங்க சீபின் 16ஆவது ஆட்சியாண்டில் மேலாளராக (Superintendent) நியமிக்கப்பட்டார். இந் நூலாசிரியர் 1684ஆம் ஆண்டில் இறந்தார்.

இவர் சிறந்த வரலாற்று அறிஞர் என்பதற்கு எடுத்துக்காட் டாக அந் நூலின் முதற்பகுதியில் இஸ்ரவேலர்கள், ஏசுநாதர், அவரது சீடர்கள், சாம்சன் ஆகியோரின் வரலாறும் காணப்படு கிறது. அதுமட்டுமன்றிக் கிரேக்க அறிஞர்களான சோலோன், பித்தாகோரஸ், சாக்ரடீஸ், பிளாட்டோ, அரிஸ்டாட்டில், பிளினி (Pliny) வரலாற்றாசிரியர், புலவர் ஹோமர், டாலமி (Ptolemy), யுக்லிட் ஆகியோர்களின் வரலாறும் இணைக்கப் பட்டுள்ளது. ஆனால், ஔரங்கசீப் ஆட்சியின் நிகழ்ச்சிகளைத் தாம் கண்டவாறே எழுதியுள்ளது பிற்பகுதியாகும். 'மீரத்தெ ஜஹான் நுமா' என்னும் இந்திய வரலாற்றுக்குரிய மூலக் குறிப்பான இப் பகுதியை டாக்டர் டார்ன் என்பாரும் கர்னல் டௌ (Dr. Dorn and Col. Dow) என்பாரும் மொழிபெயர்த்துள் ளனர். அறிஞர் எலியட்டும் மொழிபெயர்த்துள்ளார். இப் பகுதி நூலில் எட்டாவது அத்தியாயம் மூன்று பகுதிகளாக உள்ளது. முதல் பகுதியில் இளமையைப்பற்றியும், வாரிசுரிமைப்போர் முதற்கொண்டு பத்து ஆண்டு கால ஆட்சி வரையிலும் உள்ள விவரங்களைப்பற்றியும் குறிக்கப்பட்டுள்ளன. இரண்டாவது பகுதியில் ஔரங்கசீபின் குண நலன்களும், அடுத்த பகுதியில் பேரரசின் முக்கிய நிகழ்ச்சிகளும் காணப்படுகின்றன.

ஔரங்கசீபின் ஈகை: (1) ஒவ்வோர் ஆண்டிலும் 1 இலட்சத்து 49 ஆயிரம் ரூபாய்களைத் தர்மமாக வழங்கினார். (2) தூய இஸ் லாமியர்—தொழுகை, நோன்பு ஆகியவை ஒழுங்காக நடை பெறுகின்றன. பல தடைகளினால் புனித யாத்திரை (ஹஜ் ஜுக்கு) செல்லவில்லை. (3) மதம் தடைப்படுத்தியவற்றைச் செய்வதில்லை. வெள்ளி, தங்கம் ஆகிய உலோகங்களால் ஆன உண்கலங்களை உபயோகிப்பதில்லை. மேலும், பல முக்கியக் குறிப்புகளை அளித்துள்ளார் 'மீரத்தெ ஆல'மின் ஆசிரியர் பக்த்வார்கான்.

(6) லுப்பூத் தவாரிக் ஹிந்த் (Lubbut Tawarikh-Hind): இந் நூலின் சுருக்கமான பெயர் 'லுப்பூத்' என்பதாகும். 'ராய்

பஹாராமால்' என்பாரின் மகன் 'ராய் பிந்த்ராபன்மால்' (Rai Bindrabanmal) என்னும் இந்துத் திவான் இந் நூலை இயற்றினர். இவர் தாரா ஷுக்கோவின்கீழ் திவான் பதவியை வகித்தார். ஔரங்கசீபின் வரலாற்றை அறிய இந் நூல் மிகவும் துணைபுரிகிறது. ஆசிரியரே ஔரங்கசீபின் நாட்டு எல்லைப் பரப்பு நான்கு பக்கங்களிலும் பரவியுள்ளதாகவும், ரோமானியப் பேரரசு (ரும்—Rome) மட்டுமே இதனுடன் ஒப்புநோக்கத் தக்கது என்றும் கூறியுள்ளார். இது ஹிஜ்ரி 1100ஆம் ஆண்டில் முடிக்கப்பட்டது. எனவே, இதனால் 1696ஆம் ஆண்டு வரையில் உள்ள வரலாற்றை அறிய முடிகிறது. தாரா ஷுக்கோவின் இந்துத் திவானிடத்தில் இருந்து ஔரங்கசீபுக்கு ஏற்ற சான்று வருகிறது எனில் அது குறிப்பிடத்தக்கதாகும். ஔரங்கசீபின் சமயக்கொள்கை, பிற மக்களின் கலகங்கள் ஆகியவற்றைப் பற்றி 'லுப்பூத்' ஆசிரியர் அறிஞர் ராய் பிந்த்ராபன்மால் கூறும் சான்றுகள் மறுக்க முடியாதனவாக இருக்கும் என்பதில் ஐயமில்லை.

வரலாற்றாசிரியர்கள் சாதாரணமாகவே ஔரங்கசீப் தம் மதத்தின் ஆணைகளை ஏற்றுச் செயல்படுத்தினர் என்று கூறுவர். அவற்றுள் ஒன்று, பேரரசருக்கு மக்கள் மண்டியிட்டு மரியாதை செய்வதைத் தடைப்படுத்தியதாகும் என்பர். ஆனால், இவ் வழக்கத்தை ஔரங்கசீப் அல்லர், ஷாஜஹானே தடை செய்தார் என்பதை அறிஞர் ராய் பிந்த்ராபன்மாலின் நூலிலிருந்து அறிகிறோம். அறிஞர் எலியட் மொழி பெயர்ப்பு நூலில் 'ஷாஜஹான் சாஷ்டாங்க நமஸ்காரத்தை, வணக்கத்தை நீக்கினர்' என்ற தலைப்பில் குறிப்பு ஒன்று உள்ளது.

இந் நூலின் பிரதி ஒன்று பிரிட்டிஷ் மியூசியத்தில் உள்ளது. இந் நூல் 10 பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது; டெல்லி மன்னர்களின் வரலாற்றில் தொடங்கி, காஷ்மீர் மன்னர்களின் வரலாற்றுடன் முடிவடைகிறது. முதற் பகுதியில் மியூசியத்தின் 'முஹம்மத் சாமின்' வரலாற்றில் தொடங்கி ஔரங்கசீபின் வரலாற்றுடன் முடிகிறது. மொத்த நூல் 412 பக்கங்களுள் அடங்கும்.

(7) ஆலம்கீர் நாமா (Alamgir Nama): முஹம்மத் அமீன் முன்ஷி என்பவரின் மகன் 'மிர்ஜா முஹம்மத் காசிம்' என்பவரால் இந் நூல் 1688ஆம் ஆண்டில் இயற்றப்பட்டது. ஔரங்கசீபின் முதல் பத்து ஆண்டு கால ஆட்சி வரைக்கும் உள்ள இவ் வரலாற்று நூலைப் பேரரசருக்குச் சமர்ப்பித்தபொழுது இவ்

வாசிரியர் மேலும் நூலை எழுதலாகாது என ஔரங்கசீப் தடுத்த தாகக் கூறப்படுகிறது. இதனை ஆங்கிலக் கவர்னராக இருந்த வரலாற்ருசிரியர் அறிஞர் எல்பின்ஸ்டன், மாவீரர் அலெக் சாண்டர் தம் குறிப்பாளர் வரலாற்ருசிரியர் அரிஸ்டோபுலுஸ் (Aristobulus) என்பார் போரஸுடன் நடத்திய போரைப்பற்றி விவரிக்கும்போது மிகைபடுத்திக் கூறிய கூற்றைக் கேட்டு, அரிஸ்டோபுலுஸின் குறிப்புகளை ஜீலம் நதிக்கரையில் விசிறி எறிந்ததுடன் ஒப்பிடுகிருர். இந் நூலாசிரியர் காசிமுக்கு ஔரங்கசீபின் வரலாற்றை எழுதும்போது, முன்பு எழுதப்பட்ட வரலாற்றுக் குறிப்புகளை ஒப்புநோக்க வேண்டும் என்றும், முரண்பாடு காணப்படும் இடங்களில் பேரரசரிடமே உண்மை களை நேரில் கேட்டறியலாம் என்றும் வாய்ப்பு அளிக்கப்பட்ட தாகவும், ஔரங்கசீபின் பேரவையில் பல முறைகளில் விவரங் களை நேரில் கண்டறிய அனுமதிக்கப்பட்டதாகவும் அறிகிருேம். எனினும், இந் நூலாசிரியர் மேலும் எழுதாமல் தடைப்படுத்தப் பட்ட காரணம் பேரரசர் ஔரங்கசீபை மிகவும் உயர்வாக ஏற்றிப் புகழும் வகையில் அமைந்துள்ளதாக அவரே உணர்ந் திருக்க வேண்டும். உதாரணமாக, ஔரங்கசீப் ஒரே மூச்சில் அண்ணன்மாரையும், தம்பிமாரையும், தந்தையையும் கொன்று குவித்தார்; இந்துக்களை மத எதிரிகள் எனக் கருதி அவர்களின் ஆயிரக்கணக்கான ஆலயங்களைத் தரைமட்டமாக்கினுர் என் றெல்லாம் வருணித்தல் அரிஸ்டோபுலுசின் மிகைபடுத்திய வருணனையை ஒத்துள்ளது. அரிஸ்டோபுலுசின் நூலை நதியில் தூக்கி எறிந்துவிட்டு அலெக்சாண்டர் சொன்னுர்: 'என்னு டைய போர்களை விவரிப்பதாகக் கூறி ஒரே ஈட்டியில் 6 யானை களைக் கொன்று குவித்தேன் என்னும் பொய்யுரைக்கு இதுதான் பரிசு'. ஆயினும் இந் நூலை வெறும் பொய்யுரை என்றே, வாலாற்று மூல நூல் அன்று என்றே கூறிவிடுவதும் தவருகும். ஏனெனில், உண்மையான வரலாற்றைத் தெரிவிக்கும் காஃபிகான் இந் நூலாசிரியரைச் சிறப்பான மூல நூலாசிரிய ராகக் கருதுகிருர். (Khafi Khan has made Alamgir Nama a chief authority)

1100 பக்கங்கள் கொண்ட இந் நூலை வான்சிடார்ட் மொழி பெயர்த்தார். அறிஞர் எலியட்டும் மொழிபெயர்த்துள்ளார். சுவையான செய்திகள் சில :

(1) 1657ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 8ஆம் தேதி ஷாஜஹான் நோயுற்ருர்.

(2) தாராஷுக்கோ இஸ்லாமிய சமயத்திலிருந்தும் பிறழ்ந்து விட்டார். வேதியர்கள், அந்தணர்கள், இந்துத் துறவிகள் ஆகியோருடன் அவர் கொண்டிருந்த நட்புக் காரணமாகத் தொழுகை, நோன்பு ஆகியவற்றை நிறுத்திவிட்டார்.

மேலும் நிறையச் செய்திகள் இதில் அடங்கியுள்ளன. இந் நூலை முற்றும் ஒதுக்கிவிடுவது முறையாகாது.

(8) மஆசீரெ ஆலம்கீரி (Ma-A'siri A'lamgiri): ஔரங்கசீபின் வரலாற்றை முழுமையாக அறிய உதவும் குறிப்பிடத்தக்க சில நூல்களுள் 'மஆசீரெ ஆலம்கீரி' என்னும் நூலும் சிறப்பான இடத்தைப் பெறுகிறது. இந் நூலை இரு பகுதிகளாகப் பிரிக்கலாம் என்றால், முதல் பகுதியில் ஔரங்கசீபின் முதல் பத்தாண்டு கால ஆட்சியைப்பற்றிய வரலாறாக 'லுப்பூத்', 'ஆலம்கீர் நாமா' ஆகிய நூல்களின் சாரம் பிழிந்து கொடுக்கப்பட்டுள்ளது. இனி, அடுத்த பகுதியில்தான் 1717ஆம் ஆண்டு வரையில் உள்ள வரலாற்றை 'முஹம்மத் சகீ முஸ்தயித்கான்' (Muhammad Sakhi Mustaiddkhan) தாம் கண்டவாறே எழுதியுள்ளார். இவர் 40 ஆண்டுகளுக்கும் மேலாக ராஜியப் பேரவையில் கலந்துகொள்ளும் வாய்ப்பைப் பெற்றிருந்தார். அரசாங்கப் பதிவேடுகளைப் பெற்றுப் பார்க்கும் வாய்ப்பு இவருக்கு இருந்தது. பஹதூர் ஷாவின் ஆட்சியில் இனயத்துல்லாகான் என்னும் அமைச்சரிடம் எழுத்தர்-கணக்கர் பதவியில் (முன்ஷீ) பணியாற்றி வந்த முஹம்மத் முஸ்தயித்கான், வரலாற்றை எழுதுமாறு இவருக்கு முன்பே பணிக்கப்பட்ட பணியினை 1710ஆம் ஆண்டில் செய்து முடித்தார். ஔரங்கசீப் பத்தாண்டுகளுக்குப் பிறகு வரலாற்றை எழுதத் தடைப்படுத்தியதனால் முஸ்தயித்கானும்கூடப் பிறருக்குத் தெரிவிக்காமலேயே செய்திகளைச் சேகரித்து ஔரங்கசீப் இறந்த பின்னரே வெளியிட்டார். இந் நூலின் இணைப்புப் பகுதியில் ஔரங்கசீபைப்பற்றிய பல்சுவைப் பகுதி (Anecdotes) ஒன்றும் அவரது குடும்ப வரலாறும் உள்ளன. முதன்முதலில் இந் நூலை ஹென்றி வான்சிட்டார்ட் (Henry Vansittart) 1785-ல் மொழிபெயர்த்து வெளியிட்டார். எலியட் டெசைன் தம் நூலில் கொடுத்துள்ள இந் நூலின் சாரமாவது:—

அ. (ஹிஜ்ரி 1079 ஜுல்காயிதா மாதம் பிறை 1) 1669ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 18ஆம் தேதியன்று ஔரங்கசீபுக்குத் தட்டா, முல்தான், பனாரஸ் ஆகிய பகுதிகளில் அந்தணர்கள் தங்கள் மத நூல்கள், மதக்கோட்பாடுகள் ஆகியவற்றை வெளிப்படையாகப் பிரசாரம் செய்து வருகிறார்களென்றும், அவற்றைக்

கேட்கப் பல முஸ்லிம்களும் இந்துக்களும் தூர இடங்களிலிருந்து கூட வந்து குழுமுகிறூர்கள் என்றும் தகவல் அளிக்கப்பட்டது. இதைக் கேட்டதும் 'மதக்காவலர்' உடனேமாகாணக் கவர்னர் களுக்குப் பள்ளிகளேயும் ஆலயங்களேயும் அழிக்குமாறு உத்தர விட்டார். அவ்வாறே கவர்னர்கள் அந்த அந்தணர்கள் தங்கள் மதப் பிரசாரம் செய்வதை நிறுத்துமாறு கட்டளே யிட்டனர். ரபீயுல் ஆகிர் பிறை 15-ல், அரச கட்டளேக்கு இணங்கப் பனாரஸ் விசுவநாதர் ஆலயத்தை அதிகாரிகள் அழித்து விட்டதாகப் பேரரசருக்குத் தெரிவித்தனர். சர்க்கார் முதற்கொண்டு பல அறிஞர்கள் முஸ்தயித்கானின் ஆதாரத்தின் பேரில் பல ஆலயங்கள் அழிக்கப்பட்டதாகக் கருதுகின்றனர். முஹம்மத் முஸ்தயித்கானின் ஆதாரம் மறுக்க முடியாத தொன்றுதான். ஆனால், ஒரே ஓர் ஐயப்பாடு எழுகின்றது. முஸ்தயித்கான் ஔரங்கசீபை 'மதக்காவலர்' என்றும் 'மேன்மைதங்கிய சமயாச்சாரியார்' என்றும் (Director of Faith), ஆலயங்கள் அழிக்கப்படுவதனுல் 'அஞ்ஞானம்' அழிந்தது என்றும் தெளிவாகவும் சில இடத்தில் குறிப்பாகவும் கூறியதனுல், உண்மை ஏதோ ஒன்று மறைந்திருக்க, அதனே இவ் வாசிரியர் மிகவும் அதிகமாகவே மிகைபடுத்திக் கூறி இருக்க வேண்டும் என்பதுதான் அவ் வையப்பாடாகும். எனி னும், இவ் வாசிரியரின் சாட்சியத்தை மறுப்பதற்கு இல்லே.

ஆ. இவ் வாசிரியருக்கும் அடுத்துச் சிறந்து விளங்கிய வரலாற்ருசிரியர் காபிஃகானுக்கும் இடையே ஒரு முரண்பாடு காணப்படுகின்றது. காபிஃகானின் கூற்றுப்படி சத்னுமியர் களின் எழுச்சியை ஒட்டித்தான் ஜசியா வரி விதிக்கப்பட்டது. முஸ்தயித்கான், காபிஃகானின் கூற்றை ஏற்பது போன்று எதுவும் கூறவில்லே. ஆனால், சத்னுமியர்களின் கலகத்திற்குக் காரணங்களேயும் அவற்றின் தன்மையையும் விளக்கும்போது அது ஔரங்கசீபின் 15ஆவது ஆட்சியாண்டில் (1658+15= 1673) நிகழ்ந்ததாகக் கூறுகிருர். (மஆசீரெ ஆலம்கீரி பக். 114; எலியட் பக். 185)

(9) ஃபுதூஹாத்தெ ஆலம்கீரி (Futuhati – Alamgiri): 'பதஹ்' என்னும் அரபிச் சொல்லுக்கு 'வெற்றி' என்று பொருள்படும். 'பதஹ்' ஒருமை, 'புதூஹாத்' பன்மை. இதே நூலுக்கு 'வதீகியாத்தே ஆலம்கீரி'—'ஆலம்கீரியின் வரலாறு' என்ற மற்ருெரு பெயரும் உண்டு. இதனே 'சாலிஹ்' என் பாரின் மகன் முஹம்மத் மஅசூம் என்பவர் இயற்றினூர். இவர் ஔரங்கசீபின் அண்ணன் ஷா ஷுஜாவின் பணியில் இருந்தவர்.

இது விரிவான வரலாறு அன்று; ஏனெனில், இரண்டு, மூன்று ஆண்டுகளின் வரலாற்றை மட்டுமே எழுதி இருப்பதாக இந் நூலாசிரியரே தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். அது மட்டுமன்றி, ஷாஷுஜாவின் பணியாள்களுள் ஒருவர் என்பதனால் இவரிடம் ஷாஷுஜாவின் தம்பி ஔரங்கசீபின் வரலாற்றைப்பற்றி அதிக மான உண்மைகளை எதிர்பார்க்க முடியாது.

ஔரங்கசீபின் ஆணையின் பேரில் தாராஷுக்கோவை 'ஷாநஜர் சேலா' (Shahnazar Chela) என்பான் கொன்றதாக ஃபுதூஹாத் கூறுகிறது.

ஆனால், இந் நூலை இயற்றியவர் முஹம்மத் மஅசூம் அல்லர், குஜராத் நகரின் அந்தணர் தாஸ் என்பவர்தாம் இயற்றினார் என்று ஓர் அறிஞர் கருதுகிறார். இவ்வாறு கருதக் காரணம் இதே தலைப்பில் மற்றொரு நூல் இருப்பதாகக் கருதப்படுகிறது. இதனை இயற்றிய 'தாஸ்' என்பவராவார். அப்துல் வஹாப் அஹ்மதாபாதி என்னும் பெரியார் ஒருவரின் மகன் ஔரங்க சீபின் அவையில் 'ஷேகுல் இஸ்லாம்' பதவியை வகித்து வந்தார். அவரிடத்தில் 'தாஸ்' பணியாற்றி வந்தார் என்றும் சொல்லப்படுகிறது.

(10) வா:கியா (Wakhia): வாஃகியா எனில், வரலாறு என்று பொருள்படும். இதனை முஹம்மத் நியமத்கான் என்பார் எழுதினார். இவர் ஔரங்கசீபிடம் செய்தி அறிவிப்பாளராக நியமிக்கப்பட்டிருந்தார். இதனால் உயர் மன்சப்தார் பதவியும் இவருக்குக் கிடைத்தது. ஆனால், பேரரசரையும், உயர் பதவியில் இருந்தோரையும் கேலியும் கிண்டலும் செய்து இவர் கட்டுரைகள் எழுதவே உயர் பதவியையும், மரியாதைகளையும் இழந்தார். இவருக்குத் தானிஷ்மந்த்கான் என்ற பட்டமும் அளிக்கப்பட்டிருந்தது. ஆனால், இவரது நூல் முன்குறிப்பிட்ட நூலைப்போன்று விரிவான வரலாறு அன்று; ஏனெனில், ஔரங்கசீபின் ஆட்சியில் குறுகியகாலப் பகுதியைப்பற்றிய குறிப்புகள் இதில் உள்ளன. நூல் முழுமையும் புலவர் ஒட்டக் கூத்தரின் சிலேடை மொழியைப்போன்று அமைந்திருப்பதனால் உண்மை வரலாற்றுக் குறிப்புகள் பின்னிடத்தைப் பெறு கின்றன.

(11) ருகா:அத்தே ஆலம்கீரி (Rukha Ati Alamgiri): பொது வாக இது பேரரசர் ஔரங்கசீபின் கடிதங்களின் தொகுப் பாகும். ஔரங்கசீப் எழுதிய கடிதங்கள் மூன்று வகைப்படும்.

முதல் வகை கலிமாத்துத் தையிபாத் (Kalimaṭi Taiyibat) எனப் படும். இரண்டாவது, ரகாமியே கராயிம் (Rakaami Karayim). மூன்றுவது, 'தஸ்தூருல் அமல்' என்பதாகும். முதல் இரு வகைக் கடிதங்களும் பேரரசர் தாமே எழுதியவை; அவை அவருடைய கையெழுத்தில் உள்ளன. பேரரசரிடம் செயலராகப் பணியாற்றிய இனுயத்துல்லாகான் என்பார் இவற்றைப் பதிப் பித்தார். இரண்டாவது வகையில் குறிப்பிடப்பட்ட கடிதங்கள் தனியே மீர் அப்துல் கரீம்கான் என்பாரின் தந்தை சையத் அஷ்ரப் மீர் முஹம்மத் ஹுசைன் என்பவருக்குப் பேரரசர் எழு தியவை. தஸ்தூருல் அமல் என்னும் தொகுப்புப் பேரரசர் ஔரங்கசீப் இளவரசர்களுக்கும் தம் அவையின் பிரபுக்களுக்கும் எழுதிய தொகுப்பு ஆகும். இவற்றை 1743ஆம் ஆண்டில் ராஜா அயாமால் (Raja Aya Mal) என்னும் இந்து அரசர் தஸ்தூருல் அமல் எனும் தலைப்பில் சேகரித்து வெளியிடச் செய்தார். தஸ்தூருல் அமல் பகுதியில் காணப்படும் கடிதங்கள் குறிப்பாக நில வருவாய், வருவாய்க்கணக்கு முறை, வேறு பல அரசு அலுவல்கள் ஆகியவற்றை விளக்குகின்றன. தஸ்தூருல் அமல் மற்றும் முன் இரு பகுதிகளையும் அறிஞர் எலியட் மொழி பெயர்த் துள்ளார். தஸ்தூருல் அமல் பகுதியை மட்டும் சமீப காலத்தில் ஜாதுநாத் சர்க்கார் மொழி பெயர்த்துள்ளார்.

(12) முன்தகப்புல் லுபப் (Muntakhabbul Lubab) : முழுமை யாகவும், திரிபு இல்லாததாகவும், நடுநிலை கொண்டும் எழுதப் பட்ட ஔரங்கசீபின் வரலாற்று நூல் ஒன்று இருக்குமேயானுல் அது 'முன்தகப்புல் லுபப்' என்னும் நூல் ஒன்றுதான் ஆகும். இதனைக் 'காபிஃகானின் வரலாறு' (அல்லது காபிஃகான் எழு திய வரலாறு) என்றும் வழங்குவர். காபிஃகானின் வரலாறு பாபரின் இந்தியப் படையெடுப்பிலிருந்து தொடங்கினுலும், 1618ஆம் ஆண்டிலிருந்து 1707ஆம் ஆண்டுவரை உள்ள வரலாறு தொடராகவும், ஒரே தொகுப்பாகவும், காலநிலையின் அடிப்படையிலும் எழுதப்பட்டுள்ளது. நாமும் இதனை முழுமை யாக அறிய முடிகிறது. ஔரங்கசீப் வரலாறு அல்லது புகழ்ச்சி யுரை எதையும் எழுதலாகாது எனத் தடைப்படுத்தியது காபிஃகானையும் பாதித்தது. ஆயினும், காபிஃகான் தாம் செய் திகளை அறிந்தவாறே எழுதி இருக்கும் இந் நூல் இந்தியாவின் நவீன கால வரலாற்று நூல்களில் மிகவும் சிறப்பானதும், நடு நிலைகொண்டு சார்பற்ற முறையில் உவப்பு, காழ்ப்பு இன்றி எழுதப்பட்டதுமான நூலாகும்.

'முஹம்மத் ஹாஷிம்' அல்லது 'முஹம்மத் ஹாஷிம் அலீ கான்' என்பது இவரது இயற்பெயராகும். இவர் தந்தை காஜாமீர் என்பவர் முஹம்மத் முராத்பக்ஷ் இளவரசரிடத்தில் உயர் பதவியை வகித்து வந்தவர். 'மீர்' என்னும் செல்லப் பெயரால் அழைக்கப்பட்டு வந்த காஜாமீரும், அவர் மகன் ஹாஷிம் அலீயும் முராத்பக்ஷ் கொலையுண்டபின் ஔரங்கசீபின் சேவையை நாடினர். முஹம்மத் ஹாஷிம் காபிஃகான் இடத்தில் ஔரங்கசீபுக்கு அலாதியான பற்று இருந்தது. குஜராத் கவர்னர் காபிஃகானைப் பம்பாயில் இருக்கும் ஆங்கிலப் பண்டக சாலைக்குத் தூதுவராக நியமித்து அனுப்பினர். ஔரங்கசீபின் மதிப்பைப் பெற்றிருந்த காபிஃகான் முகலாயர்களின் அலுவலகப் பணியில் சிறப்பான இடத்தைப் பெற்றிருந்தார். காபிஃகானுக்குக் கிடைத்திருந்த நல்வாய்ப்பைப் பிற வரலாற்றுசிரியர்கள் பெற்றிருக்க இயலாது. காபிஃகானுக்குச் சரியாக அரை நூற்றுண்டு காலத்திற்கு ('53 ஆண்டுகள்'—எலியட்) முகலாயப் பேரவையில் வீற்றிருக்கவும், அலுவலகங்களிலும், பதிவேடு அறைகளிலும் எல்லாவற்றையும் பார்க்கவும், பேரரசருடன் பணிமுகாம்களுக்கும், இடங்களுக்கும் சென்றறிந்து நிலைகளைக் கண்டு உணரவும், நூலை எழுதவும் நல்வாய்ப்பு இருந்தது. பாபர் ஆட்சி (படைஎடுப்பு ஈருகத்) தொடங்கி ஷாஜஹான் ஆட்சி வரைக்கும் உள்ள காலத்தின் வரலாற்றிற்குப் பழைய வரலாற்றுக் குறிப்புகளை ஆதாரமாகக்கொண்டு இவர் எழுதினர் என்றல், பிற்பகுதியைத் தாம் கண்டவண்ணமே எழுதினர். இவரது வரலாற்று நூல் ஔரங்கசீபின் ஆட்சி முடிவடைந்ததுடன் முடியாமல், 1733ஆம் ஆண்டுவரையில் தொடர்ச்சியாக எழுதப்பட்டதாகும். தடை காரணமாக மறைவாக நூலுக்குரிய ஆதாரங்கள் சேகரிக்கப்பட்டு, பிறகு மறைவாகவே எழுதப்பட்டு, 1707ஆம் ஆண்டுக்குப் பிறகே வெளியிடப்பட்ட இது 1710ஆம் ஆண்டிலிருந்து தொடர்ந்து 1733ஆம் ஆண்டு வரை ஒளிவு மறைவின்றி எழுதி முடிக்கப்பட்டதாகும். ஔரங்கசீபின் 50 ஆண்டு கால வரலாற்றை எழுதுவது, அதிலும் குறிப்பாக 40 ஆண்டு கால வரலாற்றை எழுதுவது (1658+10=1668) கடலின் நீரை ஒரு பாத்திரத்தில் பிடித்துக்கொண்டு அளப்பதற்கு ஒப்பாகும். ஆயினும், பிறர் எழுதத் தயங்கிய இடத்தில் தம் காலத்தில் வயது முதிர்ந்த அலுவலர்களிடத்தில் செய்திகளை ஒப்பிட்டுப் பார்த்தும், அரசாங்க எழுத்தாளர்களிடத்தில் புதுச் செய்திகளை அறிந்தும், தாம் அறிந்த பழைய செய்திகளுடன் ஒப்பிட்டுப் பார்த்தும், பிற செய்திகளைத் தாமே நேரே பார்த்தவாறும் விவரித்துத் தம் நூலை எழுதியிருப்பதாக இவர் கூறுகிறர்

(எலியட், ப. 218). எனவே, '40 ஆண்டுகள்' என்று குறிப்பிடப் படுவதிலிருந்து புலனாகிறது என்னவெனில், ஔரங்கசீப் (1658+10=1668) 1668ஆம் ஆண்டிலிருந்து வரலாற்றை எழுதத் தடை செய்ததனால், காபிஃகான் 1670ஆம் ஆண்டிலிருந்து 1710 வரைக்கும் தலைமறைவாகவே செய்திகளைச் சேகரித்து எழுதி வந்திருக்கவேண்டும். இறுதியாகப் பேரரசர் முஹம்மது ஷா வசம் இவர் தாம் எழுதிய வரலாற்றை அன்பளிப்பாகச் சமர்ப்பித்ததாகக் கூறப்படுகிறது.

இதனை அறிந்த முஹம்மத் ஷா, முஹம்மத் ஹாஷிம் அலீகானுக்குக் காபிஃகான் என்ற புதுப் பட்டப்பெயர் ஒன்றைச் சூட்டியதாகவும் கூறப்படுகிறது. காபிஃகான் என்ற சொல் 'மறைவானது' என்று பொருள்படும். முஹம்மத் ஷா கேலியாகக் காபிஃகான் என்று சூட்டிய பெயர் நிலைத்து விட்டது. ஆனால், எலியட் இதனை ஏற்க மறுத்து, 'ஷேக் ஜைனுத்தீன் கஹபிஃ' என்னும் வழித் தோன்றல் 'கஹபிஃ' என்னும் இடத்திலிருந்து குடிபெயர்ந்து வந்திருக்க வேண்டும் என்றும் கருதுகிறார்.

இது ஒருபுறமிருக்க, இவரது நூல் சற்றேறக்குறைய 1000 பக்கங்களாக உள்ளது. கர்னல் லீஸ் (Col. Lees) என்பாரும், மேஜர் கார்டன் என்பாரும் இந் நூலின் சில பகுதிகளை மட்டும் மொழிபெயர்த்ததாகத் தெரிகிறது. இறுதியாக, அறிஞர் எல்பின்ஸ்டன் தாம் முதன்முதலில் முழு நூலையும் மொழி பெயர்த்ததன் மூலம், முழு ஆதாரமின்றி ஔரங்கசீப் வரலாறு எழுதாமல் விடுபட்டுவிட்டது என்னும் குறையைத் தீர்த்தார். அறிஞர் டௌசன் தனியே 330 பக்கங்கள்வரை இந் நூலை மொழி பெயர்த்து வெளியிட்டார். (எலியட் டௌசன் ப. 206-லிருந்து 533 வரை).

இந் நூலின்கண் மற்றும்பற்பல செய்திகள் கையாளப் பட்டுள்ளமையால், தனியே காபிஃகானின் கூற்றுக்கள் தொகுத்து அளிக்கப்படவில்லை.

இனி வெளிநாட்டுக் குறிப்பாளர்களைப்பற்றிப் பார்ப்போம்.

## வெளிநாட்டுக் குறிப்பாளர்கள்

1. தாவெனியர் (Tavernier): இவர் பிரெஞ்சுக்காரர். இவர் 1641ஆம் ஆண்டிலிருந்து 1666ஆம் ஆண்டு வரை இந்தியாவிற்கு ஐந்து தடவைகள் வந்துள்ளார்; மேற்கே சூரத் பண்டகசாலையிலிருந்து கிழக்கே டாக்கா வரை பல பண்டக

சாலைகளில் தங்கி ஆங்காங்கே நிலவிய அரசியல் செய்திகளைத் திரட்டியுள்ளார். இவர் இந் நாட்டில் பத்தாண்டு காலம் தங்கியுள்ளார். ஷாஜஹானின் பிற்பகுதி ஆட்சியைப்பற்றியும், ஔரங்கசீப் அரியணையில் அமரும் வரையில் நிகழ்ந்த வரலாற்றுச் செய்திகளையும் அறிய இவரது நூல் துணை புரிகிறது. இவர் பிரெஞ்சு மொழியிலேயே தம் நூலை எழுதினார்.

2. தேவனோ (Thevenot) : இவரும் பிரெஞ்சுக்காரரே. தாவெனியரைப் போன்றே சூரத்திலிருந்து மசூலிப்பட்டினம் வரை பல இடங்களுக்கும் பல பண்டகசாலைகளுக்கும் சென்று தங்கி, இவர் தாம் கண்டவாறே அரசியல் செய்திகளைச் சேகரித்து விட்டுச் சென்றுள்ளார்.[1] கோல்கொண்டாவின் குப்துஷா மன்னர்களைப்பற்றியும், நிஜாம்ஷா ஆதில்ஷா அரசர்களைப் பற்றியும் எழுதியுள்ள குறிப்புகள் ஔரங்கசீப் இவ்வரசுகளுடன் கொண்டிருந்த தொடர்புகளைப்பற்றி அறியத் துணைபுரியும். மெடோஸ் டைலர், பிங்களே கென்னடி[2] ஆகிய சமீப கால அறிஞர்கள் தக்காண வரலாற்றை எழுதத் தேவனோவின் நூல் துணை புரிந்துள்ளது.

3. பெர்னியர் (Bernier) : பெர்னியரும் பிரெஞ்சுக்காரரே. இவர் ஒரு மருத்துவர். ஔரங்கசீபின் வரலாற்றை அறிவதற்குத் துணைபுரியும் நூல்களுள் இவரது கடிதங்களின் தொகுப்புச் சிறப்பான இடத்தைப் பெறுகிறது. இவர் இந்தியாவிற்கு வந்தபொழுது இவர்தம் நாட்டில் கால்பெர் என்பார் நிதியமைச்சராகப் பணியாற்றி வந்தார். கால்பெருக்குப் பெர்னியர் தாம் இந்தியாவில் கண்டறிந்த நிலைமைகளை அவ்வப்போது கடிதங்கள் மூலம் விளக்கி வந்தார். வாரிசுரிமைப்போர் முடியும் தறுவாயில் இவர் இந்தியாவிற்கு வந்தார். சுமார் பத்தாண்டு காலம் இவர் இந்தியாவின் பல பகுதிகளுக்குச் சென்று பார்வையிட்டுள்ளார். 1658ஆம் ஆண்டிலிருந்து 1667ஆம் ஆண்டு வரை இவர் இங்குத் தங்கியிருந்தபொழுது ஔரங்கசீபுடனும், ஷாஜஹானுடனும், முகலாயப் பேரவையினருடனும் நெருங்கிப் பழகும் வாய்ப்புக் கிடைக்கப்பெற்றார்; ஔரங்கசீப் வரைந்த கடிதங்கள் சிலவற்றைத் தாமே பார்த்ததாகவும் கூறுகிறார். காஷ்மீரம் முதல் கோல்கொண்டா வரை, மசூலிப்பட்டினம் உட்படப் பஞ்சாபிலிருந்து வங்காளம் வரை பெர்னியர் பல பகுதிகளில் சுற்றி அரசியல் செய்திகளைத் திரட்டியுள்

[1] Thevenot was in India between 1665—1667.

[2] Meddows Tylor and Pingle Kennedy—'A History of Deccan'

ளார். இவற்றிலிருந்து ஆக்ரா, டெல்லி ஆகிய முக்கிய நகரங்கள் பற்றிய முழு விளக்கங்களை நாம் அறியலாம். பெர்னியர் வங்காளத்தை எகிப்துடன் ஒப்பிடுகிறார்; முகலாயர்களின் அரசியலில் உலகத்தின் செல்வாக்குப் பெருகி வருவதைக் குறிப்பிட்டுக் குறை கூறியுள்ளார். பேரரசர் ஔரங்கசீப் தம் ஆசிரியரை அழைத்துத் தமக்குக் கற்றுத்தராதவற்றைப்பற்றிக் குறை கூறிக் கண்டித்ததாகச் சொல்லப்படும் கூற்றை ஒரு வரலாற்றாசிரியர் பொய்யுரை எனக் கருதுவது பொருந்தாது. ஏனெனில், பாரசீக மூல நூல்களின் குறிப்பாளர்களும் பெர்னியரின் கூற்றை அங்கீகரிக்கும் முறையில் குறிப்பிட்டுள்ளனர். மீர் முஹம்மத் ஹாஷிம் என்பார்தாம் ஆசிரியராக இருந்தார் எனப் பிற நூல்களிலிருந்து நாம் அறிகிறோம். இது பிரயாணக் குறிப்புகள் (Travels in the Moghul Empire) என்னும் தலைப்பில் பிரெஞ்சு மொழியிலிருந்து ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. மேலும் கான்ஸ்டபில், ஸ்மித் (Constable and Smith) என்னும் அறிஞர்கள் 1916ஆம் ஆண்டில் பெர்னியரின் குறிப்புகளைத் தொகுத்து இந் நூலை வெளியிட்டனர். பெர்னியர் தாரா ஷுக்கோவின் உற்ற நண்பர் என்றால் மிகையாகாது. பெர்னியர் தாராவின் சேவையிலிருந்தார். இவரது குறிப்புகள் பல ஆங்காங்கே இந் நூலில் கொடுக்கப்பட்டுள்ளன. எனினும், மற்றும் சில :—

(1) இந்துஸ்தானத்தில் பேரரசர் (இன்னும்) அந்நியராகவே கருதப்படுகிறார்; எதிரி நாட்டில் இருப்பது போலவே உணர்கிறார். அவர் தாம் நாட்டின் நிலங்கள் அனைத்திற்கும் உரிமையாளர். மாகாண அறிஞர்கள் எல்லாம் கொடுங்கோலர்களாகவே நடந்து கொள்கின்றனர். மண்ணிலிருந்து எண்ணெயைப் பிழிவது போன்றுள்ளது இவர்களின் செயல்கள் என ஒரு பாரசீகர் வர்ணிக்கிறார்.

(2) நிலங்களை உழுவதைப் பலரும் கைவிட்டு வருகின்றனர் உழவர்களும் எளியோரும் பெரும் வேலைகளையோ, இலகுவான வேலைகளையோ நாடிப் பட்டினங்களுக்கும் நகரங்களுக்கும் சென்றுவிடுகின்றனர். நாட்டின் வியாபாரமும் செல்வமும் ஏகபோகமாக இந்துக்களிடம்தாம் உள்ளன.

(3) முகலாயர்களின் பெரும் இராணுவம் பெரும் சாதனைகளைப் புரிகின்றது. ஆனால், இராணுவத்தினரிடையே குழப்பம் ஏற்பட்டுவிட்டால், அவர்களை மீண்டும் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வருவது மிகவும் கடினம். ஆயினும், இவர்களுடைய

படைகள் எவ்வளவு பெரிதாக இருப்பினும், இளவரசர் கொந்தே அல்லது மார்ஷல் துரேன் (Conde or Marshal Turene) போன்ஞேர் படைகளை நடத்தினுல் இவர்களை வெகு எளிதில் தோற்கடித்துவிடமுடியும்.

எனவே, பெர்னியரின் பிரயாணக் குறிப்புகள் என்னும் நூல் ஔரங்கசீபின் வாலாற்றை அறிய மிகவும் இன்றியமையாத ஒரு நூலாயிலங்குகிறது.

4. மனூச்சி (Manucci): இவர் ஓர் இத்தாலியர்; வெனிஸ் நகரில் பிறந்து வளர்ந்தவர்; வணிகராக இந்தியாவிற்கு வந்தவர். ஆனுல், இந்நாட்டில் பல ஆண்டுகள் தங்கினமையால் பற்பல அலுவல்களை இவர் மேற்கொண்டார். டாக்டர் பெர்னியர் தாரா ஷுக்கோவின் நட்பை நாடியதைப் போன்றே மனூச்சியும் தாராவின் நண்பராக விளங்கினுர். 1656ஆம் ஆண்டில் இந்தியாவிற்கு வந்த இவர் போர்ச்சுகீஸிய பிரெஞ்சு மொழிகளையும், தாய் மொழியான லத்தீன்-இத்தாலிய மொழியையும் நன்கு அறிந்தவராவார்; முதன் முதலில் தாராவிடத்தில் பீரங்கிப்படையில் அலுவலராகப் பணியாற்றத் தொடங்கினுர்.

பிற்காலத்தில், வாரிசுரிமைப்போருக்குப் பிறகு ஔரங்கசீபை இவருக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லையாயினும், குண நலன்களை விவரிப்பதைத் தவிர்த்துத் தாம் பொதுவாக நினைந்த செய்திகளையே தருகிருர். அறிஞர் மனூச்சிதாம், சிவாஜி-அப்சல் கான் கொலை நிகழ்ச்சியின்போது சையத் பர்தாவைத் தடுத்து நிறுத்தியதாகக் குறிப்பிட்டுள்ளார். இவ்வறிஞர் தாம் ராம்சிங்கின் உடந்தை, சிவாஜி ஆக்ரா விஜயம், தங்கி இருந்த கூடாரம், பாதுகாப்பு, பழக்கூடை—ஆகிய எல்லாச் செய்திகளையும் கூறுகிருர். இவர் ஔரங்கசீபின் மனைவி மக்களைப் பற்றியும் கூறியுள்ளார்.

ஆயினும், சில அறிஞர்கள் இவரது செய்திகளைக் கடைகளிலும் அங்காடிகளிலும் உலவி வந்த சில வதந்திகள் கலந்த கூட்டுச் சரக்கு என்று கேலி செய்கின்றனர். ஆனுல், இவ்வறிஞர் கூறும் பல செய்திகளைப் பொறுத்தவரை நாம் ஏற்க மறுக்கலாம்; எனினும், அவை உண்மையானவையாகவே இருத்தலும் கூடும். ஏனெனில், ஔரங்கசீப் காலத்திய பிற செய்தியாளர்கள் இவற்றை மறுப்பதாகத் தோன்றவில்லை. எனினும், இவர் தம் காலத்திய ஐரோப்பிய நாடுகளின் கண்ணேட்டத்தின் அடிப்படையில் உற்று நோக்கினுர் என்பது தெளிவு. இவரது நூல் 'ஸ்டோரியா டீ மொகோர்' (Storia de Mogor)—முகலாயர்களின் வரலாறு 1907ஆம் ஆண்டில் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டது.

# முகலாய பரம்பரை விளக்க இணைப்பு
(அக்பரிலிருந்து)

அக்பர் = ஆம்பர் பீகார்மல் மகன்

பிறப்பு 1542 — ஆமர்கோட் பதவி பானபட்டுக்குப் பின் 1556 இறப்பு 1605

பிறப்பு 1569 (அக்பரின் 27ஆவது வயது) பதவி ஜஹாங்கீர் = ஜகத்கோஸ்வேய்ன் இறப்பு 1627

1. குஸ்ரு
2. பர்வீஸ்
3. ஷாஜஹான் குர்ரம்
4. ஷா:ரியர்

ஜஹாங்கீரின் 23ஆவது வயது பிறப்பு ஜனவரி 5, 1592. லாகூர் பதவி ஏற்பு 1627 இறப்பு 1666

1. ஜஹானுராபேகம் பிறப்பு 1614
2. தாரா ஷுக்கோ பிறப்பு 1615
3. ஷுஜா பிறப்பு 1616
4. ரோஷனுரா பிறப்பு 1617
5. முஹையத்தீன் ஔரங்கசீப் ஆலம்கீர்
பிறப்பு நவம்பர் 3, 1618
(சிலர் அக்டோபர் 24, 1618)
6. முராத் பக்ஷ் 1624
7. கௌஹரா 1630

திருமணம்: தில்ராஸ்கோனுபேகம் = இடம் ''தௌஹத்''
(ஷா நவாஸ்கானின் மகள்) உஜ்ஜயினிக்கு அருகில்

இறப்பு: வெள்ளிக்கிழமை காலை பிப்ரவரி, 20ஆம் தேதி, 1707.

1. முஹம்மது சுல்தான் தந்தையால் தண்டிக்கப்பட்டார் (1676)
2. முஅஜ்ஜம் (1707—12) அல்லது பகதூர் ஷா—ஷா ஆலம்
3. முகம்மது ஆஜம் (1707)
4. காம்பக்ஷ் (1709)
5. அக்பர் (1704)

# 3. பிறப்பும் வளர்ப்பும்

பேரரசர் அக்பர் இந்தியப் பண்பாட்டுடன் இரண்டற இணையக் கருதி இராசபுத்திரர்களுடன் திருமண உறவுகளை வளர்த்துக்கொண்டார். — கலப்புத் திருமணத்தின் திருவுரு வாகப் பேரரசர் ஜஹாங்கீர் பிறந்தார். ஆயினும், அக்பரோ அவர் தந்தை ஹுமாயூனோ தம் தந்தையர்களிடம் இதுவரை நடந்திராத, தகாத முறையில் ஜஹாங்கீர் புரட்சிக் கொடியை உயர்த்தினார். ஹுமாயூனோ தம் சகோதரர்களிடம் பாச உணர்ச்சியையும், அன்பின் அரவணைப்பையும் தயங்காது வெளிப்படுத்தினார். ஆனால் ஜஹாங்கீரின் மகன் ஷாஜஹானோ தந்தையிடத்தில் வெறுப்பையும் எதிர்ப்பையும் காட்டினார். தந்தை ஷாஜஹான் வழியிலேயே மகன் ஔரங்கசீபும் சென்றார்.

பிறப்பு: ஷேக் சலீம், ஜகத்கோஸ்வேயின் என்னும் ராஜ புத்திரப் பெண்ணை மணந்தார். ஜோத்பாய் என்றும் 'மான்மதி' என்றும் வெவ்வேறு பெயர்களால் அழைக்கப்பட்ட ஜகத்கோஸ்வேயின், மார்வார் மன்னர் இராஜா உதயசிங் என்பாரின் மகள் ஆவார். முகலாய பரம்பரை கலப்புத் திருமணத்தில் இரண்டாவது கட்டத்தை அடைந்தது. 1586 ஆம் ஆண்டில் இத்திருமணம் நடந்தேறியது. 1593 ஆம் ஆண்டில் ஜனவரி 5ஆம் தேதியன்று லாகூர் நகரில் பிறந்த குர்ரம்தாம் பின்னர் 'ஷாஜஹான்' என்னும் பட்டத்துடன் அரியணை ஏறினார். அக்பரின் மனைவியர்களில் ஒருவரான 'ரொகையா பேகம்' என்பவரால் குர்ரம் வளர்க்கப் பட்டார். மொழி, கலைகள் ஆகிய எல்லாவற்றிலும் இவருக்குப் பயிற்சி அளிக்கப்பட்டது. தந்தை ஜஹாங்கீர் இறப்பதற்கு முன்பே தந்தையை எதிர்த்து ஷாஜஹான் போர்க் கொடியை உயர்த்தினார். 1607 ஆம் ஆண்டில் ஆசிப்கானின் மகள்

அர்ஜுமந்து பானு பேகம் என்பாருடன் ஷாஜஹானின் திருமணம் நிச்சயிக்கப்பட்டது. 1612ஆம் ஆண்டில் திருமணம் நடந்தேறியபோது ஷாஜஹான் இருபது வயதை அடைந்திருந்த இளவரசராக இருந்தார். 1614 ஆம் ஆண்டில் அஜ்மீர் நகரில் ஜஹானாரா என்னும் முதல் பெண் குழந்தை பிறந்தது. 1615 ஆம் ஆண்டில் இளவரசர் குர்ரத்துக்கு 'தாரா ஷுக்கோ' என்னும் மூத்த மகன் பிறந்தார். இவ்வாறு அர்ஜுமந்து பானு தொடர்ந்து பிள்ளைப் பேற்றைப் பெற, 1618 ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் 24ஆம் நாளன்று உஜ்ஜயினிக்கு அருகில் 'தௌத்' (Dhaud) என்னுமிடத்தில் முஹயத்தீன் முஹம்மது ஔரங்கசீப் பிறந்தார். பேராசிரியர் ஜாதுநாத் சர்க்காரின் கூற்றுப்படி ஔரங்கசீப் 1618 ஆம் ஆண்டில் நவம்பர் 3ஆம் தேதி பிறந்தார். ஔரங்கசீப் 'தூத்' (தௌஹத்) என்னுமிடத்தில் ஹிஜ்ரி 1027ஆம் ஆண்டில் துல்காயிதா மாதம் 15ஆம் பிறையில் 1618, நவம்பர் 3ஆம் தேதி பிறந்தார். 'தம் பாட்டனார் அஹமதாபாதிலிருந்து மாவைத்தில் உஜ்ஜயினிக்குச் செல்லும் வழியில் அவருடைய முகாமில் இவர் பிறந்தார். அவர் முகாமில் பிறப்பதும் இறப்பதும், பல ஆண்டுகளை முகாம்களிலேயே கழிப்பதும் அவரது விதியாகும்,' என்று இஸ்லாமியக் கலைக்களஞ்சியம் கூறுகிறது.[1] இக் கலைக்களஞ்சியமும் 'முன்தகப்புல்லுபப்' ஆசிரியர் காபிஃகானின் ஆதாரத்தின் மீதுதான் கூறுகிறது. ஆனால், காபிஃகானே ஹிஜ்ரி 1028 துல்காயிதா மாதம் 15ஆம் பிறையில் பிறந்ததாகக் கூறுகிறார். தற்காலக் காலண்டர் முறைப்படி இதற்குச் சரியான ஆண்டு 1619 ஆகும். எலியட்டும், டௌசனும் இதைக் குறிப்பிட்டுள்ளனர்.[2] ஆனால், ஔரங்கசீப் பிறந்த பொழுது முகாமிலோ, பிறகு அரண்மனையிலோ எந்த அளவுக்கு மகிழ்ச்சி பொங்கியது, பணியாள்களுக்கு என்ன வெகுமதிகள் அளிக்கப்பட்டன என்ற விபரங்களை அறிய முடியவில்லை. ஆறு ஆண்டுகள் கழிந்த பின்னர், 1624ஆம் ஆண்டில் முராத்பக்ஷ் என்னும் மற்றோர் மகன் பிறந்தார். பின்னர் எழுந்த வாரிசுரிமைப் போட்டி இந் நால்வரிடையேதான் நிலவியது. ஏற்கெனவே ஜஹானாரா, ரோஷனாரா ஆகிய இரு பெண் குழந்தைகளை ஈன்ற அர்ஜுமந்து பானு மற்றோர் பெண் குழந்தையையும் ஈன்றார். இக் குழந்தைக்கு கௌஹரா என்று பெயரிடப்பட்டது.

[1] Encyclopaedia of Islam—Vol. I

[2] Khafi Khan in 'Muntakhabbul Lubab' in Eliot and Dowson 'History of India as Told by her own historians'—Vol. VII, P. 213.

அர்ஜுமந்து பானு ஈன்ற 14 குழந்தைகளில் எழுவர் இறந்து விட்டனர்; எழுவர் மிஞ்சினர். ஆனால், ஷாஜஹான் அரியணை ஏறியபோதே அர்ஜுமந்துபானு 'மும்தாஜ் மஹல்' என்ற பட்டப் பெயரிடப்பட்டுக் கவுரவிக்கப்பட்டிருந்தார் — (1628 ஆம் ஆண்டு, பிப்ரவரி 6ஆம் தேதி). ஆசிப்கானின் மகளாகிய அர்ஜுமந்து பானு இயற்கையிலேயே ஆற்றல் மிக்கவர்.

நூர்ஜஹானின் வளர்ப்பு: ஆசிப்கான் நூர்ஜஹானின் அண்ணன். ஆயினும், அண்ணனுக்கும் தங்கைக்கும் இடையில் எழுந்த உட்பகை, போட்டி ஆகிய வருந்தத்தக்க சூழ்நிலையில் தான் ஜஹாங்கீரின் இறுதி நாள்கள் கழிந்தன. கணவரைக் காப்பாற்றும் பொறுப்பை ஏற்ற நூர்ஜஹானுக்கும், மருமகனை அரியணையில் அமர்த்தும் உறுதியைப் பூண்டுவிட்ட ஆசிப் கானுக்கும் இடையே பகைமைச் சுவர்கள் எழலாயின. இரு வரிடையே காணப்பட்ட பகை தங்கள் வலிமையையும், அரசியல் வினைத்திறனையும், செல்வாக்கையும் சோதித்துப் பார்க்கும் தருணத்தை எதிர்பார்த்து நின்றது. படை வலிமை காரணமாக ஆசிப்கானும் அவர் மருமகன் குர்ரமும் வெற்றி கண் டனர். அரசியலில் செல்வாக்கை இழந்துவிட்ட நிலையினைக் கண்ட நூர்ஜஹான் ஆட்சியிலிருந்து விலகி, ஒதுங்கிவாழ விரும்பி னார். ஆசிப்கான் வற்புறுத்தியதும் அதுவே. எனவே, ஆசிப் கானின் கை ஓங்கியது. தங்கைமீது வெற்றி அடைவதற்கு முன்பு ஷாஜஹானின் மூன்று ஆண் குழந்தைகளும் நூர்ஜஹானின் உவ ளகத்தில் பணயமாக வைக்கப்பட்டிருந்தன. யாமிலுத் தௌலா ஆசிப்கானும், இராதத்கான் என்பாரும் கூட்டமாகத் திட்டமிட்டு எவ்வாறாயினும் இம் மூவரையும் விடுவிக்கக் கருதினர். முஹம்மத் தாரா ஷுக்கோ, முஹம்மத் ஷாஷுஜா, முஹம்மத் ஔரங்கசீப் ஆகிய இளவரசர்களை விடுவிக்க முற்பட்டு, நூர்ஜஹான் இருக்குமிடம் நோக்கிப் படையுடன் சென்று, மூன்று இளவரசர்களையும் விடுவித்து, அவர்களை சாதிக் கான் வசம் பாதுகாத்து வருமாறு ஒப்படைத்தனர். 'பாத்ஷா நாமா'வின் ஆசிரியர் அப்துல் ஹமீது லாகூரியின் ஆதாரத் திலிருந்து மூவரும் ஷாஜஹான் வடகிழக்குப் பகுதியிலிருக்கும் போது நூர்ஜஹானிடம் அடைக்கலமாக இருந்ததாகவும், பின்பு அம் மூன்று இளவரசர்களும் விடுவிக்கப்பட்டதாகவும் அறி கிறோம். விடுவிக்கப்பட்ட பொழுது ஔரங்கசீபுக்கு வயது எட்டு அல்லது ஒன்பது இருக்கும்.

ஆசிப்கான், அவர் தங்கை ஆகியோர் பாரசீகத்திலிருந்து உயர் பதவிகளை நாடி அக்பர் ஆட்சியிலேயே இந்தியாவிற்கு

வந்தனர். பாரசீகத்தில் ஆசிப்கானின் தந்தை அமைச்சர்ப் பதவியை வகித்து வந்ததாகச் சில குறிப்புகள் கூறுகின்றன. எனவே, தந்தை வழியில் முன்னரே இந்தியக் குடும்பத்தைச் சார்ந்தவராயினும், ஔரங்கசீப் தாய் வழியில் பாரசீகக் குடும்பத்துடன் இணைந்து கொண்டார். ஔரங்கசீப் தந்தை வழியில் ஒரு முழு இந்தியர். ஏனெனில், தந்தையும் பாட்டனும் முழு இந்தியர்கள். எனவே, தாய் வழியில் பாரசீகக் குலத்தைச் சார்ந்தவராயினும், இந்திய மண்ணில் பிறந்தது மட்டுமன்றி, இந்தியரின் குணநலன்கள் முழுமையும் இவர் அமையப் பெற்றிருந்தார் என்பதை மறுப்பதற்கு இல்லை.

1618 ஆம் ஆண்டில் தௌஹத்தில் ஔரங்கசீப் பிறந்த போது ஷாஜஹான் தக்காணத்தின் திறமை மிக்க மாலிக் ஆம்பரை எதிர்த்துப் போரிட்டுக் கொண்டிருந்தார். மூன்று வயதுக் குழந்தையாக இருந்ததிலிருந்து நூர்ஜஹானிடத்தில் மூவரும் வளர்ந்து வந்தனர். ஆனால், தம் தந்தையை எதிர்த்து ஷாஜஹான் வாரிசுரிமைப் போரில் ஈடுபட்டிருந்தபோது, ஆசிப்கான் தம் பேரர்களை நூர்ஜஹானிடத்திலிருந்து பிரித்து ஆக்ராவிற்குக் கொண்டு சென்றார்.

கல்வி: ஔரங்கசீப் இளம் வயதிலேயே கல்வி கற்க ஏற்பாடுகள் செய்யப்பட்டன. மீர் முகம்மது, மாலிக் ஷா, முல்லா சாலிஹ் ஆகிய ஆசிரியர்கள் கல்வி கற்றுக்கொடுக்குமாறு நியமிக்கப்பட்டனர்.[1] மீர் முகம்மது பாரசீகத்திலுள்ள ஜீலான் என்னும் மாகாணத்தைச் சார்ந்தவர். இஸ்லாமிய ஞானியர்களுள் சிறந்தவராகிய, குருவின் குரு என்றழைக்கப்படும் பெரியார் கவுதுல் ஆலம் தஸ்தகீர் (ரலி) என்பவர்களும் இதே இடத்தைச் சார்ந்தவர்களே. எனவே, இப் பெரியாரின் சமயக் கருத்துக்களும் மற்றும் பல தத்துவங்களும் ஔரங்கசீபுக்கு அவரது பத்தாவது வயதிலிருந்தே கற்றுக் கொடுக்கப்பட்டன. தித்திக்கும் திருமறையாம் திருக்குர்ஆனை மனனம் செய்யப் பழக்கம் அளிக்கப்பட்டது. திருக்குர்ஆனின் பதவுரை, விளக்கவுரை ஆகியவை எல்லாம் கற்றுக் கொடுக்கப்பட்டன. நபிகள் நாயகம் திருவாய் மலர்ந்த 'ஹதீஸ்' என்ற பொன்மொழிகளும் இதனூடே விளக்கம் செய்யப்பட்டன. ஆசிரியரின்

[1] மீர் முஹம்மத் (Mir Mohammed) 'மாலிக்ஷா' (Malik Shah) முல்லா சாலிஹ் (Mulla Salih) ஆகியவர்கள் ஆசிரியர்கள். ஷேக்மீர் (Shaik Mir) என்பவர் போர் முறைகளைக் கற்றுக்கொடுத்தார். Manucci—Storia de Mogor Vol II. P. 29—33

நூல் பயிற்சி காரணமாக இளவரசரின் அரபிய, பாரசீகக் கையெழுத்துகள் மிக அழகாக அமைந்தன. இதுவே பின்பு பேரரசர் திருக் குர்ஆனைத் தாமே எழுதி, விற்றுப் பொருளீட்ட நல்வாய்ப்பாக அமைந்தது.

இந்தியாவின் மத்திய காலத்தில் பாரசீக மொழி ஆட்சி மொழியாக இருந்தது. எனவே, பாரசீக மொழியிலும் இலக்கியத்திலும் பயிற்சி அளிக்கப்பட்டது. ஆனால், ஔரங்கசீபிற்கு நுண்கலைகளில் அவ்வளவாக ஈடுபாடு இருந்தது கிடையாது. இசை, ஓவியம் அல்லது வேறு எவ்வகை நுண்கலைகளோ இப்பேரரசரின் மனத்தைக் கவர்ந்ததாகத்தெரியவில்லை. பாரசீகம், உருது, ஹிந்தி மொழிகளிலும் நிறையப் பயிற்சி அளிக்கப்பட்டது. இஸ்லாமிய சட்டத்திலும் பயிற்சி பெற்றதன் காரணமாக ஆட்சிப் பொறுப்பை ஏற்றபின் இஸ்லாமிய சட்ட விளக்கங்களை ஔரங்கசீபே தொகுத்து வெளியிட்டார்.

15 வயதை அடைந்த இளைஞர் ஔரங்கசீப், 1633 ஆம் ஆண்டு மே மாதம் ஒரு நாள் தந்தையுடனும், அரசப் பேரவையினருடனும் யானைக் களியாட்டங்களை ரசித்துக் கொண்டிருந்தார். யாரும் எதிர்பாராத வகையில் யானை ஒன்று இளவரசரை நோக்கித் தாக்க நகர்ந்தது. ஆனால், இளவரசர் நகர்ந்து கொடுக்கவில்லை. யானையின் உருவமோ, அதன் சீற்றமோ இளவரசரை அசைத்துவிடவில்லை. தம்மை மீறும் நிலைமையைப் புரிந்து கொண்ட இளவரசர் அருகிலிருந்த ஈட்டியைக் கொண்டு எய்து அந்த யானையைக் கீழே வீழ்த்தினார். ஔரங்கசீபின் சூழ்நிலையைக் கண்ட ஷாஜஹான் மகனைக் கடிந்து கொண்டார். இதற்கு இளவரசர் 'இதுவே போராக இருந்து போரில் யானை என்னைக் கொன்றிருக்குமாயின், யான் வெட்கப்படுவதற்கு ஒன்றுமில்லை. பேரரசர்கள் மீதும் இறப்புத் தன் திரையை விரிக்கின்றது என்பதை நினைவில் கொள்ள வேண்டும். இதில் யான் வெட்கப்படுவதற்கோ, அஞ்சுவதற்கோ இடம் இல்லை' என்று பதிலுரைத்தார். 1634 ஆம் ஆண்டில் தம் 16 ஆம் வயதில் இவர் பத்தாயிரம் குதிரைப் படை வீரர்களின் மன்சப்தாராக நியமிக்கப்பட்டார். மேலும், நாலாயிரம் ஜாதிக் குதிரைகளைப் பராமரிக்கும் பொறுப்பும் இவருக்கு அளிக்கப்பட்டது.

# 4. தக்காணத்தின் ஆளுநர்

ஜுலை மாதம் 14ஆம் தேதி 1636 ஆம் ஆண்டிலிருந்து எட்டு ஆண்டுகள் வரை ஔரங்கசீப் தக்காணத்தின் ஆளுந ராகப் பதவியேற்றுப் பணிபுரிந்தார். உண்மையில் ஔரங்கசீப் பொறுப்பை ஏற்றிருந்த சமயம் துடித்து விளையாடும் பருவம்; வாழ்வின் சுமைகளை அறியவேண்டாத தோள்கள்; கவலைகளைக் காண வேண்டாத நெற்றி; ஆயினும், எதிரிகளை வெட்டி வீழ்த்தத் துடிக்கும் தினவு எடுக்கும் தோள்கள்; எஃகு போன்ற உள்ளம். இப்படிப் பல ஆற்றல்களைப் பெற்ற இளவரசர் பல பிரச்சினைகளும் பல எதிரிகளும் சூழ்ந்த தக்காணத்திற்கு அரசப் பிரதிநிதியாக அனுப்பப்பட்டார். ஆனால், தக்காணமோ தலை சிறந்த தானைத் தலைவர்களையும் மண்ணைக் கவ்வச் செய்யும் பகுதியாகும். இஸ்லாமிய ஆண்டுக் கணக்குப்படி ஹஜ்ஜு மாதத்தில் மூன்றாம் தேதி பதவியேற்றார். 63 கோட்டைகள் இவருக்குட்பட்ட மண்டலத்தில் அடங்கியிருந்தன. அவை பெரும் பகுதி மலைகளில் அமைந்திருந்தன. 53 கோட்டைகள் மலையிலும் மீதி 10 கோட்டைகள் சமவெளியிலும் அமைந் திருந்தமையால், எதிரிகளை நேருக்கு நேர் போரில் இழுத்து வெல்வது அரிதிலும் அரிது என்பதனைப் பின்னர் உணர்வதற்கு முதற்படியாக இப்போதே ஔரங்கசீப் அறிந்து கொண்டார். அவருக்கு உட்பட்ட தக்காண மண்டலத்தில் நான்கு உட்பகுதி கள் இருந்தன.

உட்பகுதிகள்: (1) அகமது நகர், மற்றும் புறப்பகுதிகளைக் கொண்ட தௌலத்தாபாத் போன்ற பகுதிகள். (2) தெலிங் கானப் பகுதி. (3) காந்தேஷ் — அசிர்கார் கோட்டையும் அதனைச் சுற்றியுள்ள பகுதிகளும். (4) பீகார் பகுதியும், எலிச்பூர் கோட்டைகளும் உட்கொண்டிருந்தவை. நிர்வாக இராணுவச் சீரமைப்பு, தனிப்பெரும் ஆற்றல் ஆகியவற்றின்

அடிப்படையில் ஔரங்கசீபின் நியமனம் மிகவும் பொருத்த மானதாகக் கருதப்பட்டது.

இவர் தக்காணத்திற்கு நியமிக்கப்பட்ட பொழுதுதான், சந்தர்ப்பவசமாக அகமதுநகர் அரசின் வரலாறு முடிவுக்கு வந்தது. அறிஞர் சர்க்கார் கூறியதுபோலத் தக்காணத்தின் முக்கியப் பிரச்சினை முடிந்தது. முகலாயப் பேரரசின் அரசியல் நிலை எதிர்க்க முடியாத அளவிற்கு வலிமை பெற்றது. பேரரசின் எல்லைகள் வரையறுக்கப்பட்டன. தெற்கிலும் பேரரசின் ஆதிக்கம் உறுதியாக நிறுவப்பட்டது.

இந் நான்கு பகுதிகளிலும் கோட்டை கொத்தளங்களும், பெரு நகரங்களும் குறிப்பிடத்தக்கனவாகவே அமைந்திருந்தன.

1. காந்தேஷ் பகுதி — இது தபதி நதிப் பள்ளத்தாக்கில் இருந்தது. புர்க்கான்பூர் இதன் தலைநகரம். அசிர்கார் இதன் முக்கியக் கோட்டையாகவும் அரணாகவும் விளங்கியது.



சுமை காணாத தோள்கள்—
இளமையில் ஔரங்கசீப்

2. இது போன்றே பீகார் தனி நாடாகத் திகழ்ந்து வந்த போதிலும், அக்காலையில் காந்தேஷிற்குத் தென்கிழக்கிலிருந்த, இன்றைய மத்தியப் பிரதேசத்திற்கு உட்பட்ட பகுதிக்கு எலிச்பூர் தலைநகராகத் திகழ்ந்தது. 'குவைல்கர்' (Gwilgarh) இதன் முக்கியக் கோட்டையாகும்.

3. மூன்றாவதாக, கோல்கொண்டா நாட்டிற்கும் பீகாருக்கும் இடைப்பட்ட நிலப்பரப்பிலுள்ள கோட்டைகளும் குன்றுகளும் நிரம்பிய பகுதிதான் அன்றைய தெலிங்கானாப் பகுதியாகும். அன்று 'நாஞ்சுடார்' அதன் தலைநகராக இருந்தது.

4. தௌலத்தாபாத் பகுதியில் அகமது நகர் நாடும், மற்றைய எல்லைப் பகுதிகளும் அடங்கியிருந்தன. ஔரங்காபாத் இதன் தலைநகராகத் திகழ்ந்தது.

இராஜப் பிரதிநிதி : இந் நான்கு பகுதிகளையும் உள்ளடக்கிய தக்காண மண்டலத்தில் 63 கோட்டைகளைத் தவிரக் காடுகளும், குன்றுகளும் நிறைந்திருந்தன. இம் மண்டலத்திலிருந்து முகலாய மத்திய அரசு ஆண்டொன்றுக்கு 5 கோடி ரூபாய் வருவாயைப் பெற்று வந்தது. தக்காண மண்டலத்தில் அரசப் பிரதிநிதி வருவாய்த் தொகையிலிருந்தே இராணுவச் செலவுகளைக் கவனிக்க வேண்டியிருந்தது. எனவே, மத்திய அரசிற்குப் பலன் எதுவுமில்லையாயினும், அமைதிக்கும் நிர்வாகச் செலவிற்கும் மண்டலத்தின் வருவாயிலிருந்து செலவை ஈடு கட்ட முடிந்து, நிர்வாகமும் ஒழுங்கும் நிலைநாட்டப்பட்டால் அதுவே போதும் என்று மத்திய அரசு கருதியது.

தக்காணத்தின் பிரதிநிதியாகப் பணியாற்றிய பொழுது ஆலம்கீர் வெற்றிகண்ட இடங்கள் பலப்பல ஆகும். அவற்றுள் உத்கீர், அவுஸா, பக்லானு ஆகிய இடங்கள் ஔரங்கசீபுக்குச் சிறப்பையும் பெருமையையும் தந்தன. பக்லானு இன்றைய நாஸிக் நகருக்கு அருகில் உள்ளது. அதிலும் குறிப்பாக, அக் கோட்டையின் பாதுகாவலராக இருந்த சிவாஜியின் தந்தை ஷாஜி பான்ஸ்லேமீது அவர் வெற்றி பெற்றது மறக்க முடியாததாகும். ஔரங்கசீபின் வீரத்தையும் தனிச்சிறப்பையும் இவ் வெற்றிகள் எடுத்துக்காட்டுகின்றன. ஷாஜியும் அவருக்குத் துணை நின்ற கேலோஜி பான்ஸ்லேயும் ஔரங்கசீபுக்கு எளிதில் பணிந்தனர். அக் கோட்டைகளும் எளிதில் வீழ்ந்தன.

திருமணம் : 'அறத்தாற்றின் இல்வாழ்க்கை யாற்றின் புறத்தாற்றிற் போஒய்ப் பெறுவது எவன்' என்று வலியுறுத்தியுள்ளார் தெய்வப்புலவர். இது போன்று, இஸ்லாமிய சமயத்திலும் துறவறம் தடுக்கப்பட்டுள்ளது. இல்வாழ்க்கை, மணமாட்சி, நன்மக்கட்பேறு ஆகியவற்றின் சிறப்புகளைப்பற்றியெல்லாத் திருமறைகளும் போற்றி உயர்த்துகின்றன. இயற்கை ஆணைக்கு ஏற்றவாறே ஔரங்கசீபின் திருமணம் 1637 ஆம் ஆண்டில் நடந்தேறியது. பாரசீகத்திலிருந்து உயர்பதவிகளை நாடி நம்நாடு போந்த உயர் குடும்பத்தினரான ஷாநவாஸ் கானின் மகள் தில்ரோஸ் பானு பேகம் என்னும் கட்டழகியை ஔரங்கசீப் தமது 19ஆவது வயதில் திருமணம் புரிந்து

கொண்டார். இளம் வயதில் திருமணத்தைத் தவிர்ப்பது, குடும்பக் கட்டுப்பாட்டினை மேற்கொள்வது இன்று நாட்டிற்கு ஆற்றும் நற்றொண்டாக இருக்கலாம். ஆனால், அன்றோ இளமைத் திருமணம், குறிப்பாக இளவரசரின் இளமைத் திருமணம் புராதன இந்தியாவிலும் சரி, மத்திய காலத்திலும் சரி இயற்கை நியதியாகக் கருதப்பட்டு வந்தது.

திருப்பம்: தக்காணத்தின் ஆளுநராக இருந்தபோது பெரும் இடர்ப்பாடுகளையும் ஆபத்துகளையும் ஔரங்கசீப் எதிர் நோக்க வேண்டியிருந்தது. 1646 ஆம் ஆண்டில் (மார்ச்சு மாதம், 26 ஆம் தேதி) தம் தங்கை, தந்தையின் கருமணி, இளவரசி ஜஹானாராவின் ஆடையில் தீப்பிடித்து உடல் வெந்து விட்டது. இதனால் அவள் சற்று நோயுற்றிருந்தாள். இளவரசியைக் காண அண்ணன் ஆக்ரா சென்றார். ஔரங்கசீப் ஆக்ராவில் மூன்று மாதங்கள் வரை தங்கினார். அப்போதுதான் அரசியலில் ஒரு திருப்பம் ஏற்பட்டது. ஔரங்கசீபின் அண்ணன் தாரா ஷுக்கோ தந்தையிடம் நிறைந்த செல்வாக்குப் பெற்றிருந்தமையால், அவரால் எதனையும் சாதிக்க முடிந்தது. தம்பி மீது அண்ணனுக்கு நெடுநாள்களாகவே பகையிருந்து வந்தது. எனவே, தாராவின் தூண்டுதலால் தக்காணத்தின் ஆளுநர்ப் பதவியிலிருந்து ஔரங்கசீப் நீக்கப்பட்டார். சகோதரர் நால்வரிடையே எழுந்த வாரிசுரிமைப் போராட்டத்திற்கு இந் நிகழ்ச்சி வித்தாக அமைந்தது. தாரா தம் தம்பி மீது கொண்ட வெறுப்பையும், உட்பகையையும், பொறாமையையும் வெளிப்படையாகவே காட்டிக் கொண்டதன் மூலம் தாம் விவேகம் அற்றவர் என்பதனையும் ஆணித்தரமாக உறுதிப் படுத்தினார். அன்பிற்கும், பாச உணர்ச்சிக்கும், ஆதரவிற்கும் மாறாக, கொஞ்சி விளையாடும் 26 ஆம் வயதில் வஞ்சகமும் வெறுப்பும் கணைகள் போன்று தம்மீது தொடுக்கப்படும் போது ஔரங்கசீப் மனச் சோர்வு அடைந்ததில் வியப்பு என்ன இருக்க முடியும்? 'பிறர்க்கு இன்னா முற்பகல் செய்யின் தமக்குஇன்னா பிற்பகல் தாமே வரும்' என்பதைத் தாரா அறிந்திருக்கவில்லை. எனவே, 13 ஆண்டுகள் கழித்து உரிமைப் போர் எழுந்ததில் வியப்பும் இல்லை. தம் உள்ளக் கிடக்கைகளையும், தாம் வஞ்சிக்கப்படுவதையும், தம் அண்ணனின் சூழ்ச்சிகளையும் தம் மடல் ஒன்றில் ஔரங்கசீப் தெளிவுபடுத்தியுள்ளார். அவர் அரச அவையின் நிகழ்ச்சிகளிலிருந்து எட்டு மாதங்கள் ஒதுங்கியிருந்தார். தந்தையும் இம்மகனைப் பொருட்படுத்தாதது விந்தையிலும் விந்தையே! மூத்தோனுக்கு மட்டும் செல்

வாக்கும் அளவுக்கு மீறிய மரியாதையும் அளிக்கப்பட்டன; கனிவும், பணிவும், பாச உணர்ச்சிகளும் காண்பிக்கப்பட்டன; இவை போன்ற பேத உணர்ச்சிகள் அந் நால்வரிடையே பொருமைத் தீயை வளர்த்தன. ஔரங்கசீப் இவ்வாறு ஒதுங்கி யிருத்தலைக் கண்டு, அவர் அரசியல் துறவறம் பூண்டுவிட்டதாகப் பலர் தவருகக் கருதினர். பேராசிரியர் உல்ஸி ஹேக் (Wolsey Haig) கூறுவதுபோல, 'அரசியற் சூழலில் இருந்து ஒதுங்கும் தனியராக ஔரங்கசீப் வாழ்ந்ததன் காரணங்கள் சரிவரத் தெரிவிக்கப்படவில்லையாயினும், ஔரங்கசீப் தாமே மன முவந்து அவ்வாறு ஒதுங்கியிருக்கத்தான் விரும்பினுர் என்பது உண்மையன்று. உண்மையில் அவரது மூத்த சகோதரனே இவ் விஷமத்திற்கு அடிப்படையாய் இருந்தான். தந்தையின் கோபத் தீயை அவன் விசிறி விட்டான் என்பதில் சந்தேகம் ஒன்றும் இருக்க முடியாது. இத் தீஜ்வாலை ஆறியபின் ஜஹானுராதான் தந்தைக்கும் மகனுக்கும் இடையே எழுந்திருந்த மனக்கசப்பை அகற்றி, இருசாராரையும் ஒருமுகமாய் இணைத்தாள்' —(கேம்பிரிட்ஜ் 'சுருக்கமான இந்திய வரலாறு' பக்கம் 406).[1] ஆனுல், இளவரசர் ஔரங்கசீப் வினைத்திட்பம் பெற்றவர்; செயல்வகை அறிந்தவர்; கூர்மையான அறிவு படைத்தவர்; கூர்ந்த முன்னேக்கு உடையவர். எனவே, புலி பதுங்குவது பாய் வதற்காகவே என்பதுபோல, ஜஹானுராவைத் தந்தையிடத் தில் அணுகிப் பணிந்து, சில அரசியல் முக்கியப் பதவிகளை அளிக்குமாறு தூண்டச்செய்தார். ஜஹானுராவின் வேண்டு தலின் பேரில், 1646 ஆம் ஆண்டு பிப்ரவரி 16 ஆம் தேதி ஔரங்கசீப் குஜராத் மாகாணத்திற்கு ஆளுநராக நியமிக்கப் பட்டார். இப் பணியில் இரண்டே ஆண்டுகள் அவர் அமர்ந் திருந்தாலும், தாம் மிகச் சிறப்பான ஆளுநர் என்பதைத் தம் நிர்வாகத் திறமை மூலம் நிரூபித்தார். நிர்வாகத்தில் ஒழுங்கும், சீரமைப்பும், திறனும், சீரான வருவாயும் மிளிர்ந்தன. தொடர்ந்து நற்புகழைத் தேடிக்கொள்ள ஔரங்கசீபை குஜராத் மாகாணத்திலும் ஷாஜஹான் விட்டுவைக்கவில்லை. ஈராண்டுகள் கழித்து, எல்லைப்புற மாகாணத்திற்குத் தளபதி யாகவும் ஆளுநராகவும் ஔரங்கசீப் மாற்றப்பட்டார்.

[1] Wolsey Haig, Allen and H. H. Dodwell in 'Cambridge Shorter History of India'— P. 406.

# 5. எல்லைப்புற மாகாணங்கள்

தைமூர்கான் வழிவந்த முகலாயர்கள் தம் பூர்விக நாடான மத்திய ஆசியா – ஆக்ஸியானுப் பகுதிகளை மீட்பிக்கவேண்டும் என்றும், அவற்றை இந்தியாவுடன் இணைத்துக்கொள்ள வேண்டும் என்றும் பேரார்வம் கொண்டு, பேராயத்தங்கள் செய்தனர். அதிலும் குறிப்பாக, பாபரும் அவர்தம் மூதாதையர்களும் பர்கானுப் (Fargana) பகுதியிலிருந்து விரட்டப்பட்ட காலம் முதற் கொண்டு அப் பகுதிகள்மீது பாச உணர்ச்சி கொண்டதிலும், அப்பகுதிகளை மீட்பிக்க அவர்களும் பிற்காலத்தில் ஔரங்கசீபும் முயற்சிகளை மேற்கொண்டதிலும் விந்தை ஒன்றும் இல்லை. அதுமட்டுமன்றி, அன்றைய சூழ்நிலையில் வணிகம், பாதுகாப்பு, போக்குவரத்து ஆகியவற்றிலும் மத்திய ஆசியா சிறந்த முக்கியத்துவம் பெற்றிருந்தது. பாபர் குறுகிய காலமே ஆட்சியிலிருந்ததாலும், ஹுமாயூன் தம் ஆட்சியின் மீட்சிக்குப்பின் சில காலமே வாழ்ந்திருந்ததாலும், இப் பகுதிகளை அவர் மீட்பிக்கிற எண்ணத்திற்கு நேரமே இல்லாது போயிற்று. ஆனால், பாரசீகத்திலிருந்து இந்தியாவிற்குப் பேராபத்து என்றும் காத்திருந்தது என்னும் உண்மை வெளியாயிற்று.

அக்பர் காலத்தில் : அக்பரின் இளமையில் பாரசீகர்கள் இப் பகுதிகளை மீட்டனர்; ஆனால், 1595ஆம் ஆண்டில் மீண்டும் இழந்து விட்டனர். அக்பர் காண்டஹாரை மீட்டுக் கொண்டார். ஆயினும், குழந்தைகளின் கண்ணாமூச்சி விளையாட்டுப் போன்று பாரசீகர்கள் இப் பகுதிகளை இழப்பதும் மீட்பதுமாக இருந்தனர். ஆனால், மாஷா அப்பாஸ் என்னும் பாரசீக ஏகாதிபதி 1638-ல் பர்கானுப் பகுதிகளைக் கைப்பற்றித் தம்மிடமே வைத்துக் கொண்டார். மாஷா அப்பாஸிடம் சேவை புரிந்த அலீ மர்தான் கான் என்பான் வஞ்சகமும் சூழ்ச்சியும் கொண்டு, ஆளுநராகத் தான் ஆட்சிபுரிந்த பகுதியை ஷாஜஹான் இடத்தில் சில பொற்

காசுகளுக்காகப் பறிகொடுத்தான். இது எவ்வாறு எனில், ஷாஜஹான் 1640ஆம் ஆண்டில் காண்டஹாரை மீண்டும் கைப் பற்றக் கருதிக் காபூலிலிருந்த தம் கவர்னருக்கு எழுதிய கடிதம் ஒன்றில், அலீமர்தான் கானுக்கு வெகுமதிகளை அளித்துச் சூழ்ச்சி மூலம் அதைக் கைப்பற்றலாம் என்று அறிவித்திருந்தார். இதன் படி, காபூலிலிருந்து இந்தியப்படைகள் மேற்கே சென்றன. அப் பொழுது அலீமர்தான் கோட்டைகளை எதிரிகளுக்குத் திறந்து விட்டான். இதனால் அலீமர்தானுக்கு 1 லட்சம் ரூபாய் அளிக்கப் பட்டது என்ற செய்தியை பாத்ஷா நாமா கூறுகிறது—(எலியட் டௌசன், ப. 64). இறுதியாக, இவனுக்கு ஷாஜஹான் ஆட்சி யில் சில உயர் பதவியும் கிட்டியதில் வியப்பில்லை. தமக்குச் சாதகமான இச் சூழ்நிலையைக் கண்ட பேரரசர் ஷாஜஹான் காபூல், காண்டஹார், பால்க், பதக்ஷான் போன்ற ஏனைய பகுதிகளையும் வெல்லும் முயற்சிகளை மேற்கொண்டார். இல்லை யாயின், பாரசீகத்திலிருந்துவரும் பேராபத்திலிருந்து பாது காத்துக் கொள்ள வேறு வழியில்லை என்றும் அவர் அறிந்திருந் தார். தாக்குதலுக்குக் காத்திராமல், முதல் அடியைத் தாமே கொடுத்து விடுவது சிறந்தது என அவருக்குத் தோன்றியது.

பால்க் படையெடுப்பு: பால்க், பதக்ஷான் பகுதிகளில் வலிமைமிக்க 'ஷாஃபானியர்'களுக்குப் பிறகு 'ஜானித்கள்' அங்கு ஆட்சியிலிருந்தனர். ஹிந்துகுஷ் மலைக்கும் ஆக்ஸஸ் நதிக்கும் இடைப்பட்ட பால்க் பகுதிகளில் அப்பொழுது அரசர் நசீர்முகம்மத் கானுக்கும் அவர்தம் மகன் அப்துல் அஜீஸுக்கு மிடையே உட்பகையும் பதவிப் போட்டியும் நிலவிவந்தன.

முகலாயப் படைகள் நகர்ந்து வருவதை யறிந்த இவ்விரு வரும் தமக்கிடையே இருந்த பகையை மறந்து ஓர் உடன்பாட் டிற்கு வந்தனர். நசீர் முகம்மது பால்க்கையும், அப்துல் அஜீஸ் பதக்ஷானையும் அவரவர் வைத்துக் கொள்வதாக இருவருமே ஒப்பினர். ஷாஜஹானின் இளைய மகன் முராத் பக்ஷ், அமீருல் உம்ரா ஆகியோர் தலைமையில் சென்ற படைகள் பொக்காரா, சமர்க்கந்து பகுதிகளை விடுவித்து இணைத்துக்கொள்ளும் பொருட்டு பால்க்கைத் தாக்கின; ஆக்ஸஸ் நதியில் அமைந் திருக்கும் திர்மீஸ் (Dirmiz) நகரையும் தாக்கின; 'காமந்த்', 'கோரி', 'கந்தூஸ்' ஆகிய இடங்களையும் முற்றுகை யிட்டுப் பிடித்துக் கொண்டன. புதிய தட்ப வெப்பநிலை, மக்களின் பழக்க வழக்கங்கள் ஆகியவை முராத் பக்ஷுக்கு வெறுப்பை ஊட்டின. எனவே, அவர் தம்மைத் தாய்நாடு திரும்பிவர அனு மதிக்குமாறு ஷாஜஹானுக்கு எழுதினார். முராத் பக்ஷும் பெரும்

வெற்றிகளைப் பெறாததால், முராத் பக்ஷின் வெற்றிகளில் நம்பிக்கை இழந்தார் ஷாஜஹான். எனவே, இவர் பிரதமர் சஅதுல்லாகானை அனுப்பிவைத்தார். பிரதமர் சஅதுல்லா சென்றதுமே அந்த உஸ்பெக்கியர்களின் (Uzbeks) பால்க் பகுதியில் அமைதியை நிலைநாட்ட முயன்றார். இதையும் முழுவெற்றி என்று கூற முடியாது; பாதி வெற்றியே. தம் தலைமையில் பால்க்மீது இரண்டாவது முகலாயப் படையெடுப்பு நிகழ்த்து முன்பாக, 1643ஆம் ஆண்டில் ஔரங்கசீப் துறவி வாழ்க்கையை மேற்கொள்ள முயன்றதாகத் தெரிகிறது. உடனே அவருடைய மன்சப்தார் பதவி நீக்கப்பட்டது. ஷாஜஹான் நற்போதனை செய்து ஔரங்கசீபை மீண்டும் அரச காரியங்களில் ஈடுபடுத்தினார். இதனைத் தொடர்ந்து, 1644ஆம் ஆண்டில் (ஹிஜ்ரி 1054 ஹஜ் மாதம் 29ம் பிறை—ஷாஜஹானின் 18ஆவது ஆட்சியாண்டு) ஔரங்கசீப் குஜராத் கவர்னராக நியமிக்கப்பட்டார். ('பாத்ஷா நாமா'—எலியட் டௌசன்.)

## இரண்டாவது படையெடுப்பு—1647
## (ஹிஜ்ரி 1056, ஹஜ் மாதம், பிறை 24)

ஔரங்கசீப் தலைமை :

முராத் பக்ஷின் திறமைக்குறைவை உணர்ந்த பேரரசர், இளவரசர் ஔரங்கசீபை 1647ஆம் ஆண்டில் பெற்ற வெற்றிகளை நிலைபெறச் செய்யவும், மேலும் பல வெற்றிகளைப் பெறவும் படைத்தளபதியாக நியமித்து அனுப்பினார். அப்பொழுது ஔரங்கசீபுக்கு வயது 19 தான் ஆகி இருந்தது. இயற்கையிலேயே ஆற்றல், சிறப்பான பயிற்சி, இளவரசர்ப் பதவி ஆகியவை காரணமாகத் தளபதிப் பதவிக்கு அவர் முற்றிலும் தகுதி பெற்றிருந்தார்.

அது மட்டுமன்றி, நசீர்முகம்மது முன்பே பேரரசருக்குத் தம் மகனை எதிர்த்து உதவுமாறு வேண்டுகோள் விடுத்ததன்பேரில், ஷாஜஹான் முதலில் முராத் பக்ஷை நியமித்தார். ஆனால், அதில் ஏமாற்றம் காணவே அவர் ஔரங்கசீபை நியமிக்க நேர்ந்தது. ஏற்கெனவே முராத் பக்ஷுடன் சென்ற தளபதி அஸாலத் கானும் (Asalat Khan) உடன் சென்றார். எனினும், தேவைக்கும் அதிகமான தளபதிகள் அனுப்பப்பட்டனர். அல்லாமா, சஅதுல்லா கான், பஹதூர் கான், மிர்ஜா ராஜா ஜயசிங், ருஸ்தும் கான், ராஜாபிஷால் தாஸ் ஆகிய தளபதிகளும் ஔரங்கசீபுடன் சென்றனர். காரணம், அங்கு முகலாயர்களின் கண்காணிப்பாளராக இருந்த அலீமர்தான் கானுடன், கூட்டா

லோசனை செய்து, அதற்குத் தேவையான தகுந்த நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும் என்பதற்காகவேயாகும். அஸாலத் கானும், அலீமர்தானும் பதக்ஷான் மீது படையெடுத்தனர். மீண்டும் முராத்பக்ஷின் படைகளும் இவ் விரு தளபதிகளுக்குத் துணையாகச் சென்றன. பேரரசின் படைகள் மீண்டும் பால்க்கின் மீது பாய்ந்தன. நசீர்முகம்மது பாரசீகத்திற்குள் ஓடி ஒளிந்து கொண்டார். காபூலில் தங்கியிருந்த தந்தையிடத்திருந்து ஆக்ஸியானுவிற்குள் மேலும் நகர்ந்து சென்று தாக்க உத்தரவிற்காக முராத் காத்திருக்க வேண்டி இருந்தது. ஆனால், முராதுக்கும் மேற்கொண்டு படைகளை நடத்திச் செல்ல மனமில்லை; நாடு திரும்ப விழைந்தார். எனவே, மனமில்லாத தளபதியை எல்லைக்கு அப்பால் வெற்றியை எதிர்பார்த்து, இரண்டும் கெட்டான் நிலையில் வைத்திருப்பது ஏற்கக் கூடியது அன்று என்பதை ஷாஜஹான் உணர்ந்தார். மேலும், அச் சூழ் நிலையில் எதையும் சமாளிக்கும் திறமை தம் மகன் ஔரங்கசீபுக்கு மட்டுமே இருந்தது என்பதையும் பேரரசர் நன்கறிந்து கொண்டார். எனவே, முராத் பக்ஷுக்கு நாடு திரும்பும்படி கட்டளையிடப் பட்டது. குஜராத்தின் ஆளுநராக அப்போது பணியாற்றிவந்த, இருபது வயதையும் அடையாத இளவரசர் ஔரங்கசீப்—முன்னமே படையை நடத்திச் சென்றிருந்தவர் — மத்திய ஆசியப் பகுதிகளுக்குத் தளபதியாகவும், கண்காணிப்பாளராகவும் நியமிக்கப்பட்டார். பால்க், பதக்ஷான் பகுதிகளை வெற்றி கொண்டு தாமே அவற்றை இணைத்துக் கொள்ளலாம் என்று ஔரங்கசீபுக்கு அனுமதி அளிக்கப்பட்டது. இளவரசர் ஔரங்கசீப் 15,000 வீரர்களின் 'அமீராக' மன்சப்தார் பதவியில் உயர்த்தப்பட்டார் என 'பாத்ஷா நாமா' கூறுகிறது.

ஔரங்கசீபின் வெற்றிகள்: 1647ஆம் ஆண்டில் பேரரசர் ஷாஜஹானே காபூலில் தொடர்ந்து முகாமிட்டு வந்தார். ஔரங்கசீபுடன் 25,000 படையினர் அனுப்பப்பட்டனர். ஆனால், எதிரிகளான உஸ்பெக்கியர்களின் படை எண்ணிக்கையோ, 10,00,000-மாக இருந்தது. எடுத்த எடுப்பிலேயே ஔரங்கசீப் பால்க் பகுதியைத் தாக்கத் துணிந்தார். மூன்று நாட்கள் அஸ்கா (Aska) என்னுமிடத்தில் தங்கியபின், ஔரங்கசீபின் படைகள் அப்துல் அஜீஸ் படையுடன் மோதும் நிலையில் எதிர்கொண்டு நின்றன. உஸ்பெக்கியர்களின், ஆல்மேனியர்களின் எதிர்ப்பைச் சமாளிக்கும் பொருட்டு ராஜா ஜயசிங், சலாதத்கான், பஹாதூர்கான், இராதத்கான் ஆகியோர் வரவழைக்கப்பட்டனர். ஔரங்கசீப் தம் படைகளுடன்

பைஸாபாத் என்னுமிடத்திற்கு அருகில் பாளையம் இறங்கினர். ரம்ஜான் மாதம் 14ஆம் தேதியன்று அஸ்கா (Aska) முகாமிலிருந்து புறப்பட்ட படைகளுக்கு ஔரங்கசீப் தலைமை தாங்கினர். ஜயசிங் இளவரசரின் இடப் பக்கத்திலும், அமீருல் உம்ரா வலப் பக்கத்திலும் படைகளை நடத்திச் சென்றனர். பிருதிவிராஜ் ராத்தோரின் படைகள் இவற்றிற்கு முன்னே சென்றன. மூன்றும் நாளன்று ஆல்மேனியர்கள் 'அர்பாங்க்' என்னுமிடத்தில் தலையைக் காட்டினர்; ஆனல், முகலாயப் படைகளால் விரட்டியடிக்கப்பட்டனர். இறுதியாக, ஔரங்கசீப் பாளையம் இறங்கியதிலிருந்து பதினைன்காவது நாளில் முகலாயப் படைகள் பால்க்கின் உட்பகுதியில் புகுந்தன; ஔரங்கசீப் சில இடங்களில் வெற்றி கண்டார். ஆனல்,அவை நிரந்தரமானவையல்ல. ஏனெனில்,உஸ்பெக்கியர்களின் பால்க் பகுதியில் முகலாயர்களால் நிரந்தரமாக முகாமிட்டு இருக்க முடியவில்லை. மலை போன்று நிலைகுலையாத வீர உள்ளத்தைப் பெற்றிருந்த இளவரசர் ஔரங்கசீபும் சற்றுத் தயங்கி நின்ருர். காரணம், அவருடன் துணைக்கு வந்த தளபதிகள் வெறும் கோழைகள்; சிறுமதி படைத்தவர்கள்; அரண்மனைக் காற்றைச் சுவாசித்து வளர்ந்து விட்ட தானைத் தலைவர்கள். இந்துகுஷ் மலைக்காற்றையே சுவாசித்து உடல் வலிமை பெருகி, உள்ளமும் உடலும் உரம் பெற்றிருக்கும் மலைவீரர்களை வெற்றிகொள்ள இவர்களால் எவ்வாறு இயலும்? இது இயலாது என்பதை உணர்ந்துதான் இவர்களும் இளவரசருக்கு உதவாமல் ஒதுங்கி நின்றனர்.

ஆனல், ஔரங்கசீப் தைரியத்தை இழக்காமல்,பொக்காரா இராணுவ வீரர்களுடன் தம் படைகளை மோதவிட்டார். அவை வெகுவாக முன்னேறின. போர் ஒருபுறம் நடந்து கொண்டிருந்தது. அந் நிலையிலும் இறைவனுக்குத் தாம் செலுத்த வேண்டிய கடமை அவரது நினைவிற்கு வந்தது. மாலை வேளையில் தொழுகை நேரம் வந்ததும், தாம் போரிட்டுக் கொண்டிருக்கையிலும் குதிரையிலிருந்து கீழே இறங்கி, துணியை விரித்து மேற்கு நோக்கி ஔரங்கசீப் தொழுகை நிகழ்த்த ஆரம்பித்தார். ஔரங்கசீபை எதிர்த்த எதிரிப்படைகள் இதைக்கண்டபொழுது மயங்கி நின்றன. 'இத்துணை ஆன்மிக பலம் பொருந்தியவருடன் போரிடுவது நாமே நம் அழிவை வரவேற்பதாகும்'[1] என்று கருதி, எதிரிகள் போரைக் கைவிட்டனர்.

[1] ஜாதுநாத் சர்க்கார், 'ஔரங்கசீப் வரலாறு' பகுதி 2.

ஆனால், அறிஞர் N. சுப்பிரமண்யம் அவர்கள், இராஜ ராஜன் அரசுரிமைப்பெற உரிமை உடையவனல்ல என்று கூறுவர். உத்தம சோழருடைய மகனாகிய மதுராந்தகன் கண்டராதித்தனை சாதாரண அரசியல் அதிகாரியாக்கிவிட்டு அவன் பெறவேண்டிய அரசுரிமையை முதலாம் இராஜராஜன் பெற்றது பெரியதொரு துரோகச் செயலாகும் என்று கூறுவர்.[1]

உத்தம சோழருடைய கல்வெட்டுகள் தொண்டைநாட்டில் உள்ள திருமுல்லைவாயில், காஞ்சிபுரம், திருவொற்றியூர், திருவடந்தை, மீஞ்சூர், பழங்கோயில், திருமால்புரம், திருவதிகை முதலிய இடங்களில் காணப்பெறுகின்றன. தொண்டை மண்டலத்தில் இக் கல்வெட்டுகள் காணப்பெறுகின்றமையால் இராட்டிரகூட அரசர்களிடமிருந்து இப் பகுதி மீண்டும் சோழருடைய ஆட்சிக்கு மீட்கப் பெற்றிருத்தல் வேண்டும். மேற்கூறப்பெற்ற கல்வெட்டுகள், அக் காலத்தில் நிலவிய பொருளாதார, சமூக நிலைமைகளை நன்கு உணர்ந்துகொள்வதற்கும், அக் காலத்தில் தமிழ் வரிவெழுத்தின் நிலைமை எவ்வாறு இருந்ததென நாம் அறிவதற்கும் துணைசெய்கின்றன. இக் கல்வெட்டுகளில், உத்தம சோழருடைய மனைவிமார்களாகிய திரிபுவனமாதேவி, பஞ்சவன்மாதேவி, சொர்ணமாதேவி, ஆரூரன் அம்பலத்தாடிகள் முதலிய பெயர்கள் காணப்பெறுகின்றன. இவ்வரசிகள் எல்லோரும் தங்களுடைய மாமியாராகிய செம்பியன்மாதேவிபால் மிகுந்த பக்திகொண்டு அவர்களுடைய பெயரில் தேவாலயங்களுக்குப் பல நிவந்தங்களை விடுத்துள்ளனர். தஞ்சை மாவட்டத்தில், நாகப்பட்டினம் தாலுக்காவிலுள்ள செம்பியன்மாதேவிச் சதுர்வேதிமங்கலத்தில் உள்ள சிவன் கோவிலுக்கு மேற்கூறப்பெற்ற அரசிகள் பல விலையுயர்ந்த அணிகலன்களை அளித்துள்ளனர்.

திருக்கோவலூர் பகுதியாகிய மலைநாட்டை சித்தவடத்தடிகள் என்ற சிற்றரசன், உத்தமசோழருக்கடங்கி ஆண்டு வந்ததாகத் தெரிகிறது. அம்பலவன் பழுவூர் நக்கன் என்பான், விக்கிரமசோழ மாராயன் என்ற பட்டப்பெயரொடு உயர்தர சோழ அரசாங்க அலுவலாளனாக விளங்கினான். திருச்சி மாவட்டத்திலுள்ள கோவிந்தபுத்தூரில் உள்ள சிவன் கோவிலுக்குப் பல நிவந்தங்களை ஏற்படுத்தியுள்ளான். நடுவில் புலியுருவத்தோடு, வடமொழியில் உத்தமசோழன் என்ற பெயர் பொறிக்கப்பெற்ற ஒரு பொற்காசு கிடைத்துள்ளது. இஃது, சோழ அரசர்கள் வெளியிட்ட பொற்காசுகளில் மிக்க

1 Dr. N. Subramaniam, Ibid., P.178.

நாமா'வின் ஆசிரியர் இனயத்கானே இதனைக் கூறுகிறார்: 'பால்க், பதக்ஷான் பகுதிகள்மீது படையெடுக்கத் தொடங்கிய காலந்தொட்டு, இப் பகுதிகளை நசீர்முகம்மதுவுக்கு அளிக்கும் வரை அரசாங்கக் கருவூலத்திலிருந்து இரண்டு கோடி ரூபாய் செலவழிக்கப்பட்டது'—(எலியட் டௌசன்)[1]. ஆனால், வெற்றி கண்ட பகுதிகளில் சில ஆண்டுகள் மட்டுமே மொத்தத்தில் 22லட்சம் ரூபாயை வரியாகத் திரட்ட முடிந்தது. ஆளும் வமிசத்தையும் மாற்றியமைக்க முடியவில்லை; எதிரி வமிசத்தையும் கவிழ்க்க முடியவில்லை.[2]

3. முகலாயப் படையினரின் ஆற்றல் குறைவும் திறமையின்மையும் தெள்ளத் தெளிவாக அம்பலமாயின. உண்மையில், எதிர்பார்த்த அளவிற்குப் பேரரசின் படைப் பலம் அவ்வளவு வலிமையானதன்று என்று நிரூபணமாகியது.

## காண்டஹார் முற்றுகை—1649

காண்டஹாரை முற்றுகையிடுதற்காகவும், முன்னரே முகாமில் தங்கியிருந்த பேரரசின் படைகளுக்கு உதவுதற்காகவும் மீண்டும் ஔரங்கசீப் 1649-ல் படைக்குத் தலைமையேற்று நடத்திச் சென்றார். ஆனால், காண்டஹாரின் தளபதியாகவும், ஆளுநராகவும் பணியாற்றி வந்த தௌலத்கான் என்பார் தம் கவனக்குறைவாலும், மடமையினாலும் பெறற்கரிய வெற்றியை இழந்து, பாரசீகப் படைகளிடம் சரணடைந்தார். 1649 ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் 11 ஆம் நாளின் இந் நிகழ்ச்சி பேரரசிற்குப் பேரிடியாக இருந்தது என்பதில் ஐயமில்லை. பேரரசரின் பிரதமர் சஅதுல்லாகான் ஒரு சிறந்த தளபதி. பிரதமரின் படைகளும் ஔரங்கசீபிற்குத் துணை சென்றன. கூட்டுப்படைகள் அதே ஆண்டில் செப்டம்பர் மாதம் 5 ஆம் தேதி காண்டஹாரை முற்றுகையிட்டன. ஆனால், இம் முயற்சியும் முற்றுகையும் தோல்வியிலேயே முடிந்தன. இத் தோல்வி பலரின் மனத்தை வாட்டியது. இதனை ஈடு செய்யும் வகையில் ஔரங்கசீப் தனியே 'அர்கந்தாப்' பகுதியில் 'ஷாமீர்' என்னும் இடத்தில் பாரசீகர்களைத் தோற்கடித்தார். இது சிறு வெற்றியேயாயினும், மனத்திற்கு ஆறுதல் அளிக்கவல்லதாக அமைந்தது.

[1] Shah Jahan Nama Extracts in Eliot Dowson—The History of India as told by our own Historians—Vol. VII

[2] ஜாதுநாத் சர்க்கார், ஔரங்கசீப் வரலாறு—பகுதி 2. (முன்குறிப்பிட்ட நூல்-மு. கு. நா.)

ஏனெனில், மீண்டும் ஒரு முறை ஔரங்கசீபின் படை வெற்றி கண்டவுடன் தம் ஆன்மிக சக்தியையும் அவர் வெளிப்படுத்தி வெற்றி கண்டார்.

முக்கிய நிகழ்ச்சி ஒன்றை இங்குக் குறிப்பிடுவது பொருத்த முடையதாகும். தோல்விகளைக் கண்டு மருளாமல், பெரிது படுத்தாமல், ஐங்காலத் தொழுகையைப் பின்பற்றி வந்த ஔரங்கசீப் முன்பு பால்க்கில் செய்தது போன்று, மீண்டும் ஒரு முறை போரின் நடுவில், போர்க்களத்திலேயே விரிப்பை விரித் துத் தொழ ஆரம்பித்து விட்டார். சுற்றிச் சூழப் படைகள் போரிட்டுக் கொண்டிருந்தன. இதனால் எதிரிப் படைகளின் உள்ளங்களில் அச்சம் குடிகொள்ள ஆரம்பித்தது. விளைவு, மீண்டும் வெற்றிதான்!

## இரண்டாவது முற்றுகை—1652

இளவரசரும் பேரரசரும் எவ்வாறாயினும் காண்டஹாரை முற்றுகையிட்டு வெற்றி பெறுவதென உறுதி பூண்டனர். இள வரசர் படைப் பலத்தைப் பெருக்க எண்ணி, அவசரமாக மூல் தானுக்குத் திரும்பினர். படைப்பலம் இரட்டிப்பாக்கப்பட்டது. ஔரங்கசீபும், சஅதுல்லாகானும் முன்பைவிட வீராவேசம் கொண்டு படை யெடுத்துச் சென்றனர்; போரிட்டனர். பேரர சரும் மீண்டும் காபூல் வரை சென்று, அங்கு முகாமிட்டுத் தங்கி, அவ்வப்பொழுது ஆணைகளைப் பிறப்பித்து வந்தார். கோட் டையை முற்றுகையிட்டு அதனைச் சரிய வைக்கும் வரை முழுப் படையின் பலம் கொண்டு தாக்க வேண்டும் என்றும் பேரரசர் கட்டளையிட்டு இருந்தார். 1652 ஆம் ஆண்டு மே மாதம் 2ஆம் தேதியன்று பேரரசின் படைகள் காண்டஹார் நகரை முற்றுகை யிடத் தொடங்கின. இரண்டு மூன்று மாதங்கள் இடைவிடாது தாக்கியும் கோட்டை அசைந்து கொடுப்பதாகத் தெரியவில்லை; பேரரசின் படைகள் பெரும் ஏமாற்றம் அடைந்தன. எலிச்சு கானும் (Elich Khân), ருஸ்தும்கானும் பாரசீகப் படைகளை முறி யடித்தனர். அதே நேரத்தில் அற்கந்தாப் நதிக்கரையில் (காண்டஹாரில் இருந்து 38 கி. மீ.) நடைபெற்ற போரில் ஔரங்கசீபின் படைகள் வெற்றி கண்டன. ஆனால், இதில் ஔரங்கசீபின் வீரத்தையோ, அவர்தம் தனிப்பெரும் ஆற் றலையோ குறைத்து மதிப்பிடுவது பொருத்தமுடையதாகாது. காண்டஹாரைக் கைப்பற்ற இயலாமைக்கு ஔரங்கசீபை மட்டும் குறைகூறிப் பயனில்லை. ஏனெனில், படைத்தலைமை யிலும் போர் முறைகளிலும் பல குறைபாடுகள் இருந்தன. முத

லாவதாகப் பேரரசர் ஆர்வம் மிகுதியாலும், தம் தளபதிகளின் மீது கொண்ட அவநம்பிக்கையினாலும் காபூலிலிருந்தவாறே தளபதிகளுக்கும், பிரதமருக்கும் ஓலை விடுத்தவண்ணமாக இருந்தார். தம் மைந்தர் ஒளரங்கசீபின் திறமையிலும், ஆற்றலிலும் தந்தைக்கு நம்பிக்கை சற்றுக் குறைவே என்பதற்கு இது ஓர் எடுத்துக்காட்டு. இரண்டாவதாக, தம் தந்தை ஜஹாங்கீர் தம்மை முன்பு இதே பகுதிக்குச் சென்று வென்று திரும்புமாறு பணித்தும், தாமே புரட்சிக் கொடியை உயர்த்தியதை மறந்து, தாமே பல மைல்களுக்கு அப்பால் இருந்து கொண்டு அன்றாடம் படைத் தளபதிகளுக்கு ஆணைகளை இட்டு வந்தது பெரும் தவறு என்பது இப்போது உறுதியாயிற்று. மூன்றாவதாக, ஒளரங்கசீப் உபதளபதி வரிசையில்தான் இருந்தாரேயன்றிப் பிரதம தளபதியாகப் பணியாற்றவில்லை. எனவே, அவரே வெற்றி தோல்விகளுக்கு நேரடிக்காரணமாக இருக்க முடியாது. நான்காவதாக, மலைகளும், குன்றுகளும், பள்ளத்தாக்குகளும் சூழ்ந்த இப் பகுதிகளில், சூழ்நிலைக்கேற்றவாறு தளபதிகள் முடிவெடுக்க வேண்டுமேயல்லாது, தலைமைப்பீடத்தின் ஆணைகளை எதிர்பார்த்த வண்ணமிருந்ததால், வெற்றி பெறுவது அரிதிலும் அரிதாகியது. ஐந்தாவதாக, பேரரசின் காலாட் படைகள் எப் பகுதியிலும் போரிட்டு வெற்றி வாகை சூடும் அளவிற்குப் பயிற்சியோ திறமையோ பெற்றிருக்கவில்லை. இத் தோல்விகள் ஒளரங்கசீபின் மனத்தை உலுக்கியது ஒருபுறம்; மற்றொரு புறத்திலோ தம் அண்ணன் தாரா ஷுக்கோ இத் தோல்விகளை எடுத்துக்காட்டி எள்ளி நகையாடியபோது அவரது துயர் வெறுப்பாக மாறியது. பேராசிரியர் ஜாதுநாத் சர்க்கார் கூட ஒளரங்கசீபைக் குறைகூறுவது நியாயமற்றது எனச் சுட்டிக்காட்டுகிறார். 'உண்மையில், காண்டஹாரின் தோல்விக்காக ஒளரங்கசீபைக் கண்டனம் செய்வது நியாயமற்றது ஆகும். அவர் முற்றுகை முழுவதும் தளபதிகளின் இரண்டாம் வரிசைகளிலேயே இருந்தது. பேரரசரே சஅதுல்லாகான் மூலமாகக் காபூலில் இருந்து கொண்டு, படையின் ஒவ்வோர் அசைவுக்கும் ஆணையிட்டு வந்தார். ஒவ்வொரு முக்கியமான அசைவுக்கும் அவருடைய உத்தரவு தேவைப்பட்டது...இதனாலேயே அடுத்த ஆண்டு தாரா ஷுக்கோவின் தலைமையில் இன்னும் அதிகமான படைகள் அவமான மிக்க தோல்வியை எதிர்கண்டபொழுது இது ஊர்ஜிதப்பட்டது.[1]

[1] J. N. Sarkar's 'A Short History of Aurangzeb.'

## மூன்ருவது முற்றுகை—1653

ஏமாற்றம் கண்ட பேரரசர் ஷாஜஹான் 1653 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் தாரா ஷுக்கோவின் தலைமையில் மற்ருெரு படையை அனுப்பிக் காண்டஹாரை முற்றுகை இடுமாறு பணித்தார். நாணிலான் சால்பும், நடையிலான் நன்நோன்பும், ஊணில்லான் செய்யும் உதாரதையும், ஏணிலான் சேவகமும், செந்தமிழ் தேற்ருன் கவிபுனைதலும் நகைத்தற்குரியன என்பது போல், உண்மையில் ஆற்றலும் படைத்திறமையும் பெற்றிராத, திறமையற்ற, அரண்மனைப் புருவான தாரா ஷுக்கோ போர்க்களத்திற்குப் படைத்தலைமையை ஏற்றுச் சென்றது பெரிதும் நகைப்புக்கு இடமானது. இதை நிரூபிக்கும் வகையில் தான் தாராவின் செயல்கள் தொடர்ந்து நடைபெற்றன. தாரா ஒரு சிறந்த அறிஞன்; தத்துவஞானி; கவியரசன்; எழுத்தோவியங்களைப் படைத்தவன்; எழுத்தாளர்களைப் போற்றியவன். இதில் சிறிதளவும் சந்தேகமில்லை. ஆனல், ஒரு கையில் நூலை வைத்துக் கொண்டு மற்ருெரு கையில் வாளேந்திப் போர் புரிதல் இயலுமா? எனவேதான், எதிரிகளுக்குச் சவால் விடுதல் போலத் தன் நோக்கங்களை விளக்கிக் கவிதையாக வடித்து அதனைத் தன் எதிரிகளுக்கு அவன் அனுப்பிவைத்தபொழுது எதிரிகள் விழித்துக் கொண்டனர். தாராவின் படைகள் ஓர் அடி கூட எடுத்து வைக்க முடியவில்லை. காண்டஹாருக்குச் சென்ற படைகள் தோல்வி கண்டு திரும்பின. எனவே, மேலும் வெகுண்ட ஷாஜஹான் அதே ஆண்டில் செப்டம்பர் மாதத்தில் தாராவைத் திரும்ப அழைத்துக்கொண்டார். மொத்தத்தில், எல்லைப்புற மாகாண விவகாரத்தைப் பொறுத்தவரை, முகலாயப் பேரரசு தோல்வியையே கண்டது. இதனல்தான் பாரசீகப் பேரரசர் கூறினர்: 'டெல்லியினர் பொன் கொடுத்துக் கோட்டையைக் களவாடுவர்; ஆனல், உண்மைப் படைப் பலம் கொண்டு கோட்டையைக் கைப்பற்ற மாட்டார்.'[1]

## தோல்விக்குக் காரணங்கள்

தோல்விக்குக் காரணங்கள் பல இருந்தன. உதுமானியத் துருக்கியர்கள் மத்திய ஆசியர்களின் எதிரிகள். இவர்கள் தங்கள் எதிரிகளை எதிர்த்து வெற்றிகள் பல கண்டனர். இதனல் இயற்கையிலேயே அவர்கள் போர் ஆற்றலைப் பெற்றிருந்தனர். இரண்டாவதாக, இந்திய தரைப்படையும் குதிரைப்படையும் ஆற்

[1] J. N. Sarkar's 'Shivaji'. Also S. R. Sharma, 'The Mughal Empire in India' and Lanepoole, 'Aurangzeb'

றவில் குறைவானவை மட்டுமன்றி, மலைப்பாங்கான பகுதிகளில் நீண்டகாலம் போரிட்டு வெற்றி பெற்ற மரபினைத் தோற்றுவித்த தில்லை. பீரங்கிகள் பெரும் பிளவைப் போன்று அகன்ற வாயினைப் பெற்றிருந்தனவேயல்லாது, விரைவாகக் குண்டு களைப் பாய்ச்சி அழிக்கவல்ல கருவிகளாயிலங்கவில்லை. எனவே, தோல்வியில் முடிந்ததில் வியப்பு ஒன்றும் இல்லை. மேலும், உஸ் பெக்கியர்கள் கொரில்லாப் போர் முறையைப் பின்பற்றினர். எனினும், ஔரங்கசீப் இரு பெரும் வெற்றிகளைப் பெற்ற பின், சமர்க்கந்து முற்றுகையின் பிற்பகுதியில் தலைமைப் பதவியை மாதவ்சிங் ஹரதா எனும் தளபதியிடம் ஒப்படைத்துவிட்டு நாடு திரும்பினர். எனினும், பொதுவாக இந்திய தளபதிகளுக்கு மலைப்பகுதிகளில் போரிடும் பயிற்சி மிகக் குறைவே. சில முக்கிய முகலாய தளபதிகள் எதிரிகளின் (உஸ்பெக்கியர் களின்) வரிசையில் இடம் பெற்றனர். முகலாய தளபதி களின் வஞ்சகமும் ஒரு காரணமாகும். இனுயத்கான் என் னும் ஆசிரியரின் கூற்றுப்படி, சில முகலாய மன்சப் தார்களே எதிரிகளுக்குக் காட்டிக்கொடுத்தனர். தவுலத்கான், மாதவ்சிங் ஹரதா ஆகிய தளபதிகளின் திறமைகளும் பேராற் றலும் உஸ்பெக்கியர்களுக்கு ஈடுகொடுக்க முடியாத அளவுக்குக் குறைந்தவை என்பதை மறுப்பதற்கில்லை. சர்க்கார் கூறியது போன்று, 'காண்டஹார் இழப்பிற்கு ஷாஜஹானும் அவரது அவையினரும் தாம் முழுப் பொறுப்பாவர். ஷாஜஹான் எதிரி களின் வலிமையைக் குறைவாக மதித்துவிட்டமையால், படைக்குத் தேவையான உடனடி உதவிகளை வழங்கத் தவறிவிட்டார்.' எனவே, இளவரசர் ஔரங்கசீபை மட்டும் குறைகூறிப் பயனில்லை.

விளைவுகள் : முகலாயர்கள் பல இடங்களை இழந்து கோட்டை விட்டதுமல்லாமல், அவர்களுக்குப் பெருத்த பொருள் நட்டமும் ஏற்பட்டது என்பதில் ஐயமே இல்லை. பொருள், பணம் ஆகியவை விரயமாகிக் கருவூலத்தைப் பாதித் தன. 2. இந்தியப் பேரரசின் புகழ் பெருமளவிற்குச் சிதைந் தது; கூடவே பாரசீகத்தின் புகழும் ஓங்கியது; பின்னர் நாதிர்ஷா, அகமதுஷா, அப்தாலி ஆகியோரின் படையெடுப் பிற்கு இது வித்தாக அமைந்தது. 3. உண்மையில், கண்ணிமை யைப் போன்று நாட்டைப் பாதுகாத்து வந்த பெரும் தள பதிகள் பலர் மடிந்தனர். இது ஈடு செய்ய இயலாத இழப்பாக அமைந்தது. 4. மிக முக்கியமாக மத்திய ஆசியப் பகுதி யிலும் வடபகுதியிலும் மட்டுமே ஆழ்ந்த கவனம் செலுத்திய

தால், தெற்கே மராத்தியர்களின் எழுச்சிக்கு அடிகோலி விட்டது. 5. மத்திய அரசு வெகுதூரத்தில் இருந்துகொண்டு எல்லேக்கும் அப்பால் உள்ள பிற நாடுகளை வெல்ல இயலாது என்பது நிரூபணம் ஆயிற்று.

ஔரங்கசீபின் பங்கு: எவ்வாருயினும், ஔரங்கசீபின் பங்கு மிகவும் குறிப்பிடத்தக்கது என்பதை எவரும் மறுத்தல் இயலாது. ஏனெனில், அலீமர்தான்கான், ஜயசிங், சஅதுல்லாகான், மாதவ்சிங் ஹரதா ஆகிய தளபதிகளின் ஊடே சிறந்த பொறுப்பும் தலைமைப் பதவியும் ஒருங்குசேரத் தமக்குக் கிட்டிய அவரது பணியைத் திறம்பட ஆற்றினர். அறிஞர் லேன்பூல் கூறியது போல, 'தொடக்கத்தில் அவர் பெயரளவில் மட்டும் தளபதியே ஒழிய, உண்மையில் அவருக்கு அப் பதவி கிட்டவில்லை...ஆனல், காலப்போக்கில் தம் வீரத்தையும் போர்த்திறமையையும் நிரூபிக்கும் வாய்ப்புகள் கிடைத்தன. அவருடைய தளபதிகளே அவரது திறமையைப் போற்றத் தொடங்கினர். மேலும், அவர்கள் தம் இளவரசருங்கூடச் சிறந்த தளபதி போன்று எதற்கும் பதட்டம் அடையாத நிதான சிந்தை உள்ளவர் என்பதையும் உணர்ந்தனர்.'[1]

[1] Lane Poole, 'Aurangzeb'.

# 6. மீண்டும் தக்காணத்தின் ஆளுநர்

பால்க்கிலும் காண்டஹாரிலும் அவ்வளவு சிறப்பான வெற்றியைப் பெறமுடியாததால், ஔரங்கசீப் தலைநகருக்குத் திரும்ப அழைக்கப்பட்டார். தம் மீது அண்ணன் தாரா கொண்டிருந்த பகையும் வெறுப்பும் ஒரு புறம், தந்தை கொண்டிருந்த அவநம்பிக்கை மற்றொரு புறம், இவ்விரண்டும் ஔரங்கசீபை வாட்டின. ஓர் ஆண்டுக்கு முன்புதான் 1653–ல் தாரா ஷுக்கோவுக்கு மிகுந்த மரியாதைகள் அளிக்கப்பட்டுப் பரிசுகள் வழங்கப்பட்டன; தந்தை ஷாஜஹான் பட்டமும் வழங்கி இருந்தார். எனவே, இந் நிலையில் தாராவின் தூண்டுதலின் பேரில், ஔரங்கசீப் மீண்டும் தக்காணத்திற்கு ஆளுநராக நியமிக்கப்பட்டார். ஆனால், உள்ளம் சோர்ந்த ஔரங்கசீப் பொறுமையுடனும், சிறிது நம்பிக்கையுடனும் புகழ்வாய்ந்த பிரதமர் மாலிக் அம்பரின் (Malik Amber) மாளிகையான 'கச்சி' என்னும் இடத்தைத் தம் தலைநகராக ஏற்றுப் பொறுப்பேற்றார் எனப் பதிப்பாசிரியர் டாட்வெல் கருதுகிறார்.[1] அறிஞர் வின்சென்ட் ஸ்மித்தோ ஔரங்காபாதிற்கு அருகிலேயே, தவுலத்தாபாத் கோட்டையை அவர் தலைநகராகக் கொண்டிருந்ததாகக் கருதுகிறார்.[2] எவ்வாறாயினும், ஔரங்கசீபை எடுத்த எடுப்பிலேயே பல நிர்வாகச் சிக்கல்கள் எதிர்கொண்டன. அவற்றை அவர் எவ்வாறு திறமையுடன் அவிழ்த்து விட்டார், தெரியுமா?

## நிர்வாகச் சிக்கல்களும் தனித்திறமையும்

முன்பு ஆளுநராக இருந்தபொழுது எதிர்கொண்ட சிக்கலைக் காட்டிலும் இப்போது அவை பன்மடங்கு அதிகரித்து இருந்தன.

[1] டாட்வெல் : கேம்பிரிட்ஜ் சுருக்கமான இந்திய வரலாறு—
Haig Allen and Dodwell - Cambridge Shorter History of India.

[2] Vincent A. Smith-Oxford History of India.

ஓர் இயந்திரத்தில் சில பகுதிகள் மட்டுமே பழுது அடைந்திருக்குமாயின், அதைப் பழுதுபார்க்க இயலும். ஆனால், இயந்திரம் முழுதுமே பழுதடைந்திருக்குமாயின், அதனை இயக்குவது எவ்வாறு இயலும்? இதைப் போலத்தான், நிர்வாக அலுவலர்களின் திறமையும் குன்றி, நாட்டின் வருவாயும் மிகக் குறைந்து, ஆட்சி செவ்வனே செயல்பட முடியவில்லை.

அவர் பொறுப்பேற்கு முன்பு மத்திய அரசின் வருவாய் 3,00,00,000 ரூபாய்க்குக் குறையாமல் இருந்தது.[1] ஆனால், நிர்வாக அலுவலர்கள் அடிக்கடி மாற்றப்பட்டு வந்தனர். மேலும், பல தடவைகளில் பஞ்சமும் சிறு போர்களும் ஆங்காங்கே பரவலாக நீடித்தமையாலும் அப் பகுதிகளில் இயற்கையாகவே பயிர்த் தொழில் நசித்து வந்தது. இதனால் கிராமங்கள் சீரழிந்தன. அதுமட்டுமன்றிக் காடுகளும், வளம்குன்றிய விளை நிலங்களும், பெரும் கோட்டைகளும் அடங்கிய இப் பகுதிகளில் வறுமை மிஞ்சி, வளம் சரிந்து வந்ததில் வியப்பில்லை. இதனால் வரித்தீர்வை சரிவர வசூலிக்கப்படும் வாய்ப்பு இல்லாமலும் போயிற்று. இதன் பயனாக, மத்தியப் பேரரசின் கருவூலமும் மாநில அரசின் வருவாயும் குன்றி வந்தன. 1652 ஆம் ஆண்டிற்கு முன்பு இப் பகுதிகளிலிருந்து 8 கோடி ரூபாய் வருவாய் வந்தது. ஆனால், ஔரங்கசீப் பொறுப்பேற்ற சமயத்தில் ஜாகிர்தார்கள் பலரும் தங்கள் கடமைகளிலிருநது நழுவி வந்தனர். அரசுக்குத் தேவைப்படும்போது அவர்கள் படை உதவி செய்ய இயலாத நிலையில் இருந்தனர். எனவே, அச் சூழ்நிலையில் ஔரங்கசீபை எதிர்கொண்ட பிரச்சினைகள் ஏராளம், ஏராளம். எனவே, இவற்றிற்கெல்லாம் தம் கருவூலத்தையே அவர் நம்பி இருக்கவேண்டி இருந்தது. நிர்வாகச் செலவுகளுக்கும், இன்னும் பல தேவைகளுக்கும் வற்றி வந்த கருவூலத்தையே நம்பவேண்டி இருந்தது. தந்தைக்கு மகன் விடுத்த வேண்டுகோள்கள் நிராகரிக்கப்பட்டன. 'உள்ளதைக் கொண்டு போதுமாக்கிக் கொள்ளுமாறு'[2] தந்தை அறிவுரை கூற ஆரம்பித்தார். தம் இயல்புக்கு அப்பாற் பட்ட சூழ்நிலையிலும், இளவரசர் வருவாயை அதிகரித்து, நிர்வாகத்தைச் சீராக்கும் நோக்கம் கொண்டு உழவுத் தொழிலைச் செம்மையுறச் செய்தார். இதனால் எல்லாச் செலவும் போக, ஒவ்வோர் ஆண்டிலும் சற்றேறக்குறைய 1½ கோடி ரூபாய் வருவாய் கிடைத்தது.

[1] Lane Poole—Aurangzeb.

[2] 'Cut the coat according to cloth.'

சீரமைப்பு: ஷேர்ஷா, தோதர்மல் ஆகியோரின் நில முறைச் சீரமைப்பு தக்காணம் வரை எட்டவில்லை என்பது உண்மைதான். நிலங்களைத் தரமாகப் பிரித்தலும், பின்னர் அவற்றை அளத்தலும், அதன் பின்னர்த் தரத்தின் அடிப்படையில் வரியை நிர்ணயித்தலும், நிர்ணயித்த வரியை அறுவடைக்குப் பின் வசூலித்தலும், தோர்தர்மல், ஷேர்ஷா ஆகியோர் அமைத்துக் கொடுத்த படிப்படியான நிலவரி முறைகளாகும். ஆனால், தெளிந்த, சிறந்த இம் முறையை அமைதிக் காலங்களிலோ அமைதியான பகுதிகளிலோ அன்றிப் போரினால் பாதிக்கப்பட்ட பகுதிகளில் அமலாக்குவது அத்துணைச் சிறந்ததும் அன்று, இயலவும் இயலாது என்பதனை இளவரசர் ஔரங்கசீபும், அவருக்கு உறுதுணையாக இருந்த முர்ஷித் குலீ (Murshid Quli) என்பாரும் உணர்ந்தனர்.

முர்ஷித் குலீ கான் பாரசீகத்திலிருந்து நம் நாடு வந்த ஒரு சிறந்த அலுவலர்; நல்ல திறமை பெற்றவர். அலீமர்தான் கானுடன் சேவை புரிந்து வந்த முர்ஷித் குலீயை ஔரங்கசீப் தக்காணத்திற்கு அழைத்துவந்தார்.

## முர்ஷித் குலீயின் நிலச் சீர்திருத்தம்

இடர்ப்பாடுகளையும் குழப்பங்களையும் உணர்ந்த முர்ஷித் குலீ தக்காணத்தை இரு பகுதிகளாகப் பிரித்தார். அவை பயண்காட் (Payanghat) பாலாகாட் (Balaghat) என்பவையாகும். 'தாழ்ந்த நிலம்' என்று அழைக்கப்பட்ட பயண்காட் பிரிவில் பீரார், காந்தேஷ் பகுதிகள் அடங்கி இருந்தன. 'மேட்டு நிலம்' என்று கூறப்பட்ட பாலாகாட் பிரிவில் ஏனைப் பகுதிகள் இருந்தன. இவ்விரு பகுதிகளிலும் உள்ள நிலங்களின் மீது சராசரியில் வரி விதிக்கப்பட்டது. நிலத்தை அளப்பதோ, தரமாகப் பிரிப்பதோ மேற்கொள்ளப்படவில்லை. எனினும், இங்குப் பழைய மரபிற்கு ஏற்றவாறே மொத்தத்தில் பல நிலங்கள்மீது ஒரு சிறு தொகை வரியாக விதிக்கப்பட்டது. பலரும் அத் தொகையைக் கூட்டாகச் சேர்ந்து செலுத்தினர். வரித்தொகை மிகவும் குறைவானதால், இம் முறையைப் பலரும் குறை சொல்லாமல் ஏற்றனர். மேலும், உழவர்களுக்குத் தேவையான கால்நடைகள், விதைகள், உழவுக்கருவிகளைக் கடனாக முர்ஷித் குலீ வழங்கினார். அத்துடன், உழவர்களுக்குத் 'தக்காவீ' (Taqqavi or Takkavi) என்னும் கடன் புதிதாக வழங்கப்பட்டது.[1] இம் முறை

[1] வின்சென்ட் – ஆக்ஸ்போர்டு இந்திய வரலாறு, பக்கம் 388.

களினால் 1658 ஆம் ஆண்டில், (அயல்நாட்டினர் ஒருவர் அன்று கூறியது போல) தக்காணத்தில் சாகுபடியாகாத நிலமே கிடையாதென்று கூறிவிடலாம். இதனல் அரசுக்கு எதிர்பார்த்த அளவுக்கு மேல் வருவாய் பெருகிற்று.

தக்காணத்தில் விரிவாக்கம்: நிர்வாகச் சீரமைப்பிற்குப் பிறகு ஔரங்கசீப் தக்காணத்தின் சிற்றரசர்களை எதிர்த்து மேற்கொண்ட செயல்களை ஈண்டுப் பார்ப்போம்: தக்காணத்தில் கோல்கொண்டா, பீஜப்பூர் ஆகிய தனி நாடுகளைப் பேரரசுடன் இணைக்க முயன்றதைப்பற்றிப் பிற்கால வரலாற்று ஆசிரியர்கள் பலவாருக எடை போடுகின்றனர். இவர்களின் தராசுக் கோலின் முள் பொருள்களுள்ள தட்டின் பக்கம் சாயாமல் எடை உள்ள பக்கமே சாய்ந்து நிற்கின்றது. கோல்கொண்டா, பீஜப்பூர் சுதேச மன்னர்கள் இஸ்லாமிய சமயத்தில் ஷீஆ பிரிவைச் சார்ந்தவர்களாகையாலும், முகலாயப் பேரரசர்களின் மதப் பிரிவிலிருந்து மாறுபட்டு இருந்தமையாலும், ஔரங்கசீபும் பேரரசர் ஷாஜஹானுமே இம்மன்னர்களை அழிக்க உறுதிபூண்டு போரிட்டதாகக் கூறப்படுகிறது. குறிப்பாக, வின்செண்ட் ஸ்மித் இக்கருத்தை வலியுறுத்துகிருர். ஆனல், ஈண்டு ரோமானியப் பேரரசின் வளர்ச்சியில் ஒரே இனத்தைச் சேர்ந்த சேம் வம்சத்தாருடன் ரோமானியர்கள் போருக்குச் சென்றதையும், பின்னர்க் கார்த்தேஜியர்களுடன் பலவந்தமான போரில் ஈடுபட்டு ரோமானியர்கள் பேரரசை வளர்த்த வரலாற்றையும் நினைவில் நிறுத்துவது மிகப் பயனுடையதாகும். அதுபோன்றே, ஐரோப்பாவில் புராட்டஸ்டண்டு, கத்தோலிக்க சமயப்பிரிவு நாட்டினரிடையே கூடப் போர்கள் தோன்றியதை மறத்தல் ஆகாது. உண்மை என்னவெனில், பேரரசு வளர்ச்சியில் இன, சமய, மொழி, மண்டல உணர்ச்சிகளுக்கு இடம் இருப்பதில்லை என்பது வரலாறு கண்ட உண்மை. இதை மறைத்துப் பயனில்லை. ஏன், ஹுமாயூனின் மனைவி, ஔரங்கசீபின் முப்பாட்டிகூட ஷீஆ பிரிவைச் சார்ந்தவரேதாம். ஆகவே, சர்க்கார் கூறியது போல பீஜப்பூர், கோல்கொண்டா அரசுகள் தாமே அழியும் தறுவாயில் இருந்தன; அவை அழுகி வந்த பழங்கள். மேலும், பஞ்சடைந்த கண்களுக்கும், வற்றிய வயிற்றுக்கும், வலுவிழந்த உடலுக்கும் வயிருர உண்ண விருந்து கிடைத்தால் எவ்வாறு ஆசை உணர்வுகள் மனத்தைக் கிளறச் செய்யுமோ, அது போன்றே எதிர்ப்பு, பகைமை ஆகியவற்றுக்கு இடையிலும் எளிதில் வெற்றி கிடைக்கும் வாய்ப்புக் கூறுகள் இருப்பதைப் பார்த்த இளவரசர் படைகொண்டு தாக்கிப் பொருள்

திரட்ட நினைத்தது இயற்கையிலும் இயற்கையாகும். எனினும், வேறு காரணங்களும் இல்லாமல் இல்லை.

காரணங்கள்: முதலாவதாக, 1636ஆம் ஆண்டிலிருந்தே கோல்கொண்டா சுதேச அரசு முகலாய அரசுக்கு ஆண்டு ஒன்றுக்கு 8 லட்சம் ரூபாய் கப்பம் கட்டும் நாடாகவே இருந்து வந்தது. இது 1636 ஆம் ஆண்டில் இரு நாடுகளும் ஏற்றுக் கொண்ட உடன்படிக்கையின் அடிப்படையில் ஆகும். ஆனால், பல ஆண்டுகளாகவே பாக்கித்தொகை கொடுக்கப்படாமல் இருந்து வந்தது. மேலும், ஒவ்வோர் ஆண்டிலும் சிறு தொகை மட்டும் செலுத்தப்பட்டு, 2 லட்ச ரூபாய் கடன் பாக்கி இருந்து கொண்டே வந்தது. அதே நேரத்தில், இவ் வரசிடத்திருந்து முகலாயர்களின் வருமானமும் குறைந்து வந்தது. அது மட்டு மன்றிக் கோல்கொண்டாவும் பீஜப்பூரும் காவிரி நதிக்குத் தெற்கேயும் வடக்கேயும் 1636 ஆம் ஆண்டின் உடன்படிக் கைக்கு மாருகத் தம் எல்லைகளைப் பரப்பிவந்தன. கிருஷ்ணவி லிருந்து தஞ்சை வரை இந் நாடுகளின் எல்லைகள் பரவி நின்றன.

இரண்டாவதாகக் குதுப்ஷா பரம்பரையைச் சேர்ந்த அப் துல்லா ஓர் இளம் வயதினன். இதனுல்தான் மீர் ஜும்லா என்னும் பிரதமர் எளிதில் புகழையும், பொருளையும், பத வியையும் ஈட்ட முடிந்தது. அதனுடன், மீர் ஜும்லாவின் விவ காரமே பேரரசை வலுச்சண்டைக்கு இழுத்தது. வளர்ந்து வரும் மீர் ஜும்லாவின் செல்வாக்கைக் கண்ட இளவரசன் அப்துல்லா பொருமை கொண்டு, மீர் ஜும்லாவைத் தண்டிக்க விரும்பி, ஜும்லாவின் குடும்பத்தினரைச் சிறைப்பிடித்தான். மீர் ஜும்லா ஷாஜஹானுக்கு விடுத்த வேண்டுகோளினுல் பலன் கிட்டியது; விளைவு, கோல்கொண்டா மீது படையெடுப்பு.

மூன்ருவதாகப் பீஜப்பூரைப் பொறுத்தவரை, உடன் படிக்கைக்கு மாருகத் தெற்கிலும் கிழக்கிலும் பீஜப்பூர் நாட்டு எல்லைகளையும் தனது அதிகாரத்தையும் அது பரப்பி வந்தது பேரரசுக்கு ஆத்திரத்தை மூட்டியது.

நான்காவதாகக் காவிரி வரை உள்ள வளம்மிக்க பகுதி களும், ஓங்கிய வருவாயும், அளவற்ற செல்வமும் பேரரசைத் தென்பகுதிக்கு இழுத்தன.

எனவே, பொருளைத் திரட்டும் நல்வாய்ப்பைக் கருதித் தொடுக்கப்பட்ட போர்களேயன்றி, அவை மதப்பிரிவு வேற்

றுமை காரணமாகத் தொடுக்கப்பட்ட போர்கள் ஆகா என்று உறுதியாகக் கூறலாம். அப்படியே மதப்பிரிவு காரணமாக நிகழ்ந்தனவாக இருந்தால், விஜயநகரப் பேரரசின் கடைசிச் சின்னமாகத் திகழ்ந்த சந்திரகிரி மன்னரை முகலாய இளவரசர் அடிபணியவைக்காதது ஏன்? சந்திரகிரிக்கும் முகலாயப் பேரரசுக்கும் பிணக்குகள் இருந்ததில்லையே! அப்படியேயாயின், ஒரே இனத்தை, ஒரே சமயத்தைச் சார்ந்த இங்கிலாந்திற்கும் ஸ்காட்லாந்திற்கும் இடையே பல நூற்றாண்டுகளுக்குப் போர் நீடித்தது ஏன்? எனவே, நிதிப் பெருக்கமும் பேரரசின் விரிவாக்கமுமே பீஜப்பூர், கோல்கொண்டா மீது தொடுக்கப்பட்ட போர்களுக்கு அடிப்படைக் காரணங்களாக இருந்தனவேயல்லாது, வேறு காரணங்களைக் கற்பிக்க முயல்வது அவ்வளவு பொருத்தமாகாது.

## கோல்கொண்டா முற்றுகை—(1656)

1656 ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்களில் கோல்கொண்டா அரசு முற்றுகை இடப்பட்டது. முகம்மது ஆசிப்கானின் படைகள் 'ஹீசைல்' ஏரிக்கு அருகில் (ஹைதராபாதுக்கு அருகில்) முகாமிட்டு இருந்து தாக்கத் தொடங்கின. ஹைதராபாத் கோல்கொண்டாவின் தலைநகராகத் திகழ்ந்தது. பல கட்டங்களுக்குப் பின் சுலபமாகவே கோல்கொண்டா அரசு சரணடைந்தது. கோல்கொண்டா அரசர் அப்துல்லா பணிந்து, அஞ்சி, அளித்த உடன்படிக்கையைத் தூரத் தூக்கி எறிந்தார் இளவரசர் ஔரங்கசீப். ஏனெனில், இவரது குறிக்கோள் பொருள் திரட்டுவதும், முடியுமானால் அந் நாட்டைப் பேரரசுக்கு உட்படுத்துவதுமேயாகும். பேரரசர் ஷாஜஹானுக்கும் ஒரு சிறு தொகையை ஒப்புக்கொண்டு உடன்படிக்கையை ஏற்றுக்கொள்வது நியாயமுடையதாகவும் பொருத்தமுடையதாகவும் தோன்றியதால், இதனை வற்புறுத்தினர். தாராவும் ஜஹானாராவும் வற்புறுத்தவே முற்றுகையை நிறுத்திப் போரையும் முடிவுக்குக் கொண்டு வருமாறும், உடன்படிக்கையை ஏற்றுக்கொள்ளுமாறும் அவர் பணிக்கப்பட்டார். ஆனால், மீண்டும் மார்ச் 30 ஆம் தேதி கோல்கொண்டாவை அவர் முற்றுகையிடவே, வேறுவழியின்றி அப்துல்லா போர் உடன்படிக்கையை ஏற்றுக்கொள்ளுமாறு மன்றாடினார்.

மன்னர் குதுப்ஷா ஔரங்கசீபுக்கு இழப்புத் தொகையையும் ராங்கீர் (Rangir) மாவட்டத்தையும் அன்பளிப்பாக அளித்தார். ஔரங்கசீபின் மகன் முகம்மது சுல்தானுக்குக் குதுப்ஷா தம்

உறவினரின் மகளைத் திருமணம் செய்துகொடுக்க முன்வந்தார். ஆனால், ஔரங்கசீபின் முழு வெற்றி அவர்தம் திறமையால் மட்டுமின்றி, மீர் ஜும்லாவின் துணையினாலும் பெறப்பட்டது என்று கூறவேண்டும். குதுப்ஷா மன்னருக்கு மீர் ஜும்லா இழைத்த துரோகம் மன்னிக்க முடியாத குற்றமாகும். குதுப்ஷாவை விட்டகன்று ஔரங்கசீபிடம் சேர்ந்து கொண்டது தான் அக் குற்றமாகும். ஏனெனில், தம்மை வளர்த்துத் தமக்குப் பெருமையளித்து, உயர் பதவிகளையும் செல்வத்தையும் வாரி வழங்கிய குதுப்ஷா பரம்பரையினருக்கு எதிராக, முகலாயர்கள் வெற்றி பெறும் சூழ்நிலையைக் கண்டு மீர் ஜும்லா பச்சோந்தி போன்று எதிரிப் படையிடம் கொஞ்சிக் குலாவத் தொடங்கிவிட்டார். மீர் ஜும்லா முகாம் மாறியது பேரரசுக்கு வலிமையான தூண்போலாயிற்று.

ஔரங்கசீபின் மகன் சுல்தானுக்குக் குதுப்ஷா அரச குடும்பத்தில் திருமணம் செய்து முடித்ததே, இப் போர் சமயப் பிரிவு காரணமாக எழுந்தது என்ற கூற்றைப் பொய்ப்பித்து விடுகிறது. அதுமட்டுமன்று; முர்ஷித் குலீகான், அலீமர்தான்கான், கலீச்கான், மீர்ஜும்லா ஆகியோர் உட்படப் பலரும் முகலாயர்களின் சிறந்த தளபதிகள் ஆவர்; ஔரங்கசீபுக்குத் துணை புரிந்தவர்கள்; இவர்கள் ஷீ ஆப் பிரிவினர்கள். எனவே, ஸ்மித்தின் கூற்று ஏற்கக் கூடியதன்று.

## வைர வணிகர்

யார் இந்த மீர் ஜும்லா?[1] 1656 ஆம் ஆண்டின் படையெடுப்பின்போது மீர் ஜும்லா கோல்கொண்டாவின் பிரதமராக இருந்தார். ஔரங்கசீப் கோல்கொண்டாமீது பாய்வதற்கு மீர்ஜும்லா ஷாஜஹானுடன் கொண்டிருந்த கடிதத் தொடர்பும் ஔரங்கசீபுக்கு அனுப்பிய நயவஞ்சக அழைப்பும் ஒரு காரணமாக இருந்தது. படையெடுப்பின்போது மீர் ஜும்லாவின் வளர்ச்சியையும், அவர் புகழேணியில் ஏறிவருவதையும் கண்டு பொறாமைப்பட்ட மன்னர் அப்துல்லா, ஜும்லாவின் குடும்பத்தினரைக் கைது செய்தார் என்பதை முன்னரே பார்த்தோம். மீர்ஜும்லாவின் மகன் முகம்மது அமீன் என்பாரும் காவலில் இருந்தார். தம் குடும்பத்தினரை விடுவித்துக் காப்பாற்றுமாறு ஷாஜஹானுக்கு ஜும்லா வேண்டுகோள் விடுத்தார். இம் மடல், படையெடுப்பின்போது, 'காக்கை உட்காரவும் பனம்பழமும் விழுந்தது' என்ற கதையாய் முடிந்தது.

1. Prof. R. Sathianathier — History of India, Vol. II.

மீர் ஜும்லாவின் உயர்வு: மீர் ஜும்லா நம் இந்தியத் தாய் நாட்டவர் அல்லர்; பாரசீகத்தின் ஆர்தீஸ்தான் பகுதியைச் சேர்ந்தவர். இவர் இஸ்பஹான் பகுதியைச் சேர்ந்தவரென்றும் கூறுவர். இவர் வணிகர் குடும்பத்தைச் சார்ந்தவர். இவர் தந்தை ஓர் எண்ணெய் வியாபாரி. இயற்கையாகவே திறமை யும் சுறுசுறுப்பும் நுண்ணறிவும் இவரிடம் ஒருங்கே அமைந்திருந் தன. 1630ஆம் ஆண்டில் இவர் தக்காணம் வந்துசேர்ந்தார். தம் திறமையாலும், வணிகத்தில் ஈடுபட்டிருந்ததாலும் இவர் பெரும் பொருளை ஈட்டினார். எனவே, செல்வம் காரணமாகக் கூடவே செல்வாக்கும் வளர்ந்தது. படிப்படியாக, அரசியலிலும் அவர் செல்வாக்கைப் பெறலானார். செல்வம் கொழிக்கத் தொடங்கியதும், அவர் இருபது மணங்கு வைரக் கற்களுக்கு அதிபதியானார்.

குதுப்ஷா அரசில், அமைச்சர்ப் பதவியிலிருந்து பிரதமர் பதவிக்கு உயர்வு பெற்ற அவர் சில ஆண்டுகளில் மன்னர் குதுப்ஷாவிற்கே போட்டியாக முளைத்தார்; சந்திரகிரி மன்ன ருக்குச் சொந்தமாக இருந்த சில கன்னடப் பகுதிகளை (இன்றைய தெலுங்குப் பகுதிகளை) ஆக்கிரமித்து இணைத்துக் கொண்டார்; 480 கி.மீ. நீளத்திற்கும், 80 கி.மீ. அகலத்திற்கும் குறுநாடு ஒன்றை உருவாக்கி அதன் முடிசூடா மன்னர் என்னும் அளவுக்குப் பூதம் போல் வளர்ந்து விட்டார். அவர் இணைத்துக் கொண்ட பகுதியில் மட்டுமே ஆண்டொன்றுக்கு ஏறத்தாழ 40 லட்ச ரூபாய் வருமானம் கிடைத்து வந்தது. மேலும் தாமே சில ஐரோப்பியத் தளபதிகளையும் தம் சொந்த இராணுவப் படையில் பணிபுரியுமாறு நியமித்திருந்தார். எனவே, மீர்ஜும்லா ஒரு சிறு போட்டி அரசையே உருவாக்கி இருந்தார் என்றால், அது மிகை யாகாது. தம் குடும்பத்தவர் சிறையில் அடைபட்டிருப்பதைக் கண்ட மீர் ஜும்லா ஔரங்கசீபுடன் தொடர்பு கொண்டார். கடி தங்கள் பறிமாறின. ஔரங்கசீப், தம் மகன் முகம்மது சுல் தானைப் படையுடன் அனுப்பினார். முகம்மது அமீன் சிறையி லிருந்தும் தப்பி, சுல்தானைச் சந்தித்தார். சந்திப்புப் பலனளித் தது. இத்துணைப் பணப்பலமும், படைப்பலமும், அரசியல் செல் வாக்கும் ஒருங்கே பெற்றிருந்த மீர் ஜும்லா முகலாயப் பேரரசின் சேவையை நாடியபொழுது, பழம் பாலில் நழுவி விழுந்ததாகப் பலரும் குதூகலித்து வரவேற்றனர்.

கோஹெநூர் கதை: கோல்கொண்டா முற்றுகையின் வெற்றி மீர் ஜும்லாவின் சொந்த வெற்றியே என்று கூறவேண்டும்.

மீர் ஜும்லா ஷாஜஹானை 15,000 குதிரை வீரர்களுடனும், துப்பாக்கி வீரர்களுடனும், மிகுந்த வெகுமதியுடனும் சந்தித்த பொழுது, மீர் ஜும்லா 6000 படை வீரர்களின் மன்சப்தாராக நியமிக்கப்பட்டார். மீர் ஜும்லா ஷாஜஹானுக்கு அளித்த வெகுமதியின் தொகை சுமார் 20 லட்சம் பவுன்களுக்குச் சமமானது என்று கூறப்படுகின்றது. அவர் அளித்த வெகுமதிகளுள், 'கோஹெனூர் வைரம்' மிக முக்கியமான ஒன்றாகும். பேராசிரியர்கள் லேன்பூலும், சத்தியநாதய்யரும் விலை உயர்ந்த கோஹெனூர் வைரத்தின் வரலாற்றை விவரிக்கின்றனர். லேன்பூல் கூறியது போலத் தந்திரம் மிக்க பாரசீகர் வெறும் சொல்லில் நிற்காது, பேரரசருக்குக் கிருஷ்ணா நதிக்கரையில் இருக்கும் கொல்லூரின் விலை மதிக்க முடியாத வைரக்கல் ஒன்றை வெகுமதியாக அளித்தார்; அது புகழ் வாய்ந்த கோஹெனூர் அல்லது 'ஒளிமிக்க மலை'[1] என்னும் வைரக்கல்லாகும்; பெரும் முகலாயரிடத்திருந்த இக் கல் பாரசீகத்தின் நாதிர்ஷாவினால் கொள்ளையடிக்கப்பட்டது. பின்னர், ஆப்கானிஸ்தானத்திற்கு அகமது ஷா துர்ரானியினாலும், அங்கிருந்து பஞ்சாபின் ரஞ்சித் சிங்கினாலும் மீண்டும் கொண்டு வரப்பட்டது. இறுதியாக, இங்கிலாந்து மன்னரின் கிரீடத்திற்கு (பஞ்சாப் இணைக்கப்பட்டவுடன், 1849ஆம் ஆண்டில்) சென்றது.[2] சத்தியநாதய்யர் கூறியது போல், 'பேரரசுக்கு அளிக்கப்பட்ட அன்பளிப்புகளுள் கோஹெனூர் வைரமும் ஒன்றாகும்; இது பல மாற்றங்களுக்குப் பின் இன்று பிரிட்டிஷ் (மன்னர்) கிரீடத்தை அலங்கரிக்கிறது.'[3] இந்தக் கோஹெனூர் வைரம் 1656ஆம் ஆண்டில் 216 கேரட்டு எடை இருந்தது. இதுவன்றி, மீர் ஜும்லா அளித்த பிற வெகுமதிகளின் மதிப்பு 20 லட்சம், 15 லட்சம் பவுன் ஆகும் என்று பலவாறாகக் கணிக்கின்றனர்.

## பீஜப்பூர் விவகாரம்—(1657)

20 ஆண்டுகளுக்கு முன் ஏற்பட்டிருந்த உடன்பாட்டை மீறியதாக பீஜப்பூர்மீது குற்றம் சாட்டப்பட்டது. 1649ஆம் ஆண்டிலேயே தென்னார்க்காடு மாவட்டத்தில் இருக்கும் செஞ்சிக்

[1] பாரசீக மொழியில் 'கோஹ்' என்றால் மலை என்றும், 'நூர்' என்றால் ஒளி என்றும் பொருள் கூறுவர். அம்மொழிச் சந்தி இலக்கணப்படி, இச்சொல் 'கோஹெனூர்' என்று அழைக்கப்படுகிறது. ஆங்கிலத்தில், Kohinoor என்று வரைவர்.

[2] Lane Poole - Aurangzeb.

[3] Prof. R. Sathianathier — History of India - Vol. II & III.

கோட்டை பீஜப்பூர் சுல்தானின் கைவசமாயிற்று. பீஜப்பூரின் தென் எல்லை செஞ்சிக் கோட்டை வரை பரவி நின்றது. இவ்வரசு மேற்கு, கிழக்குக் கடற்கரைகளை இணைக்கும் பாலமாக நின்றது. 'அமலெ சாலிஹ்' ஆசிரியர் கூறுகிருர்: 'நல்ல அழகிய பீடார் நகரம் தெலுங்காணுவின் எல்லையில் நிற்கின்றது; தக்காணத்தில் ராயர்களின் அரசின் தலைநகரமாகவும் விளங்கியது. கர்நாடக, மராத்தா, தெலுங்காணு ராஜ்ஜியங்கள் பீடார் ராயர்களுக்கு அடிபணிந்தன.'[1] எனவே, வலிமை மிக்க பீஜப்பூர் இயற்கையிலேயே பேரரசின் விரிவாக்கத்தை ஈர்த்த பெருமை முகமது ஆதில்ஷா என்பவரைச் சாரும். பொதுவாகவே, ஆதில்ஷா என்னும் பட்டப் பெயருடன்தான் பீஜப்பூர் மன்னர்கள் அரியணை ஏறினர்.

பீஜப்பூரின் வீழ்ச்சி: முகம்மது ஆதில்ஷா 1656 நவம்பர் மாதத்தில் இறந்துவிட்டார். ஔரங்கசீபுக்கும் அவருடைய புதிய நண்பர் மீர் ஜும்லாவுக்கும் இது ஒரு நல்வாய்ப்பாகத் தோன்றியது. கழுகுப் பார்வையுடன் பார்த்து வந்த இவர்கள் இதையும் தாக்கி இணைத்துக்கொள்ள விரும்பினர். முகம்மது ஆதில்ஷாவை அடுத்து வந்தவரோ, 20 வயதையும் காணுத இளைஞர். பீஜப்பூர் கைவசமான பீடார்க் கோட்டையின் முற்றுகைபற்றி அமலெ சாலிஹ் ஆசிரியர் கூறுகிருர்: 'மிகப் பலத்த இக் கோட்டையின் விட்டம் 4500 கெஜம். கோட்டையின் உயரம் 12 கெஜம். ஆழம் மிக்க அகழிகள் மூன்று உள்ளன. இளவரசரும் (ஔரங்கசீப்) முஅஸ்ஸம்கானும் (மீர் ஜும்லா இப்பெயராலும் அழைக்கப்பட்டார்) கோட்டையைச் சுற்றி வேவு பார்த்தனர். கோட்டையைத் தாக்க வழிகளும் இடங்களும் குறிக்கப்பட்டன. கோட்டையின் அடிவாரத்திலிருந்து பலத்த எதிர்ப்பு இருந்தபோதிலும், முஅஸ்ஸம்கான் 10 நாட்களில் பல கோணங்களிலிருந்து முன்னேறினுர். பல தடவைகளில் கோட்டை தாக்கப்பட்டபோது அகழியின்மீது குண்டுகள் பாய்ந்தன. (பேரரசின்) படைகள் பின்வாங்கின. குண்டுகள் தாக்கியபொழுது பலர் உயிரிழந்தனர். ஆயினும், இறுதியில், 1657ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் பீடார்க் கோட்டை விழுந்தது. கோட்டையின் தளபதி சித்தீ மர்ஜான் (Siddi Marjan) காயமுற்றவராயிருந்தும், மிகுந்த அடக்கத்துடன் கோட்டையின் சாவிகளைக் கொடுத்தனுப்பி இளவரசரிடம் புகலிடம் தேடினுர். அவர்கள் அனைவரும் மரியாதையுடன்

1 'Amal-i- Salih'—Extracts in Eliot & Dowson - History of India as told by her own historians, Vol. VII.

வரவேற்கப்பட்டனர். பீடார்க் கோட்டை வீழ்ந்ததும், பலருக்குப் பேரரசின் 'விருதுகள்' அளிக்கப்பட்டன; உயர் பதவிகள் அளிப்பதாக வாக்குறுதி கொடுக்கப்பட்டது. இளவரசர் நகருக்குள் நுழைந்தார். 200 ஆண்டுகளுக்கு முன் பஹ்மினி சுல்தான்கள் கட்டிய மசூதியில் இளவரசர் ஔரங்கசீப் தொழுதார். மொத்தத்தில் 27 நாட்களில் இக் கோட்டை கைப்பற்றப்பட்டது. இதற்கு 12 லட்சம் ரூபாய் ரொக்கப்பணமாகவும், வெடி மருந்து, தளவாடச் சாமான்கள், ஈயம், மற்றும் பல பொருள்களுக்காக 18 லட்சம் ரூபாயும் செலவாயிற்று.'[1]

இதற்கிடையில், பீஜப்பூர் மன்னரே குல்பர்காவில் படை திரட்டுவதாகச் செய்தி எட்டியது. இதற்குரிய எதிர்நடவடிக்கை எடுப்பது மிகவும் அவசியமாயிற்று. ஆதில் ஹசன் குல்பர்காவில் படைகளைத் திரட்டி, ரகசியமாகப் போராயத்தம் செய்து வருவதாக இளவரசருக்குச் செய்தி எட்டியது. 15,000 குதிரைப்படை வீரர்களை மகமத்கானின் தலைமையில் அவர் அனுப்பி வைத்தார். ஆதில்கானின் படைகள் ஒவ்வொரு நாளும் பின்வாங்கி வந்தன.

இறுதியாக, 1657 ஆம் ஆண்டு மே மாதத்தில் முகலாயப் படைகள் பீடாருக்கு 64 கி. மீ. மேற்கேயுள்ள புகழ் வாய்ந்த கல்யாணியையும் தாக்கின. இதே ஆண்டு ஆக்ஸ்ட் மாதம் முதல் தேதியன்று இக் கோட்டையும் வீழ்ந்தது.

விளைவுகள்: 1. பீடார், கல்யாணி, பரேண்டா ஆகிய பகுதிகள் முகலாயப் பேரரசுடன் இணைந்தன. 2. பேரரசுக்கு 1½ கோடி ரூபாய் போர் இழப்பீடு தருவதாக ஆதில்ஷா வாக்களித்தார். ஆனால், ஷாஜஹானே அதில் மூன்றிலொரு பகுதியை மன்னித்துக் குறைத்துவிட்டார். 3. எல்லைப் புறத்திலும் மத்திய ஆசியப் பகுதிகளிலும் இழந்த புகழையும் நற்பெயரையும் ஔரங்கசீப் சிறப்பாகத்தேடிக் கொண்டார். கிடைத்த வெற்றிகளை நிலைபெறச் செய்யாமல், ஔரங்கசீப் மீண்டும் தலைநகருக்குச் செல்ல வேண்டியதாயிற்று. ஏனெனில், ஔரங்கசீபைப் பொறுத்தவரையில், 'வாழ்வா? சாவா?' எனப்படும் ஒரு பெரும் போராட்டம் காத்திருந்தது. அதுதான் வாரிசுரிமைப் போராகும்—(War of Succession).

[1] Eliot & Dowson, History of India as told by her own historians, Vol. VII.

# 7. வாரிசுரிமைப் போர்

## (War of Succession)

1657ஆம் ஆண்டில் பேரரசர் ஷாஜஹான் நோயுற்றார். வாரிசுரிமைக் குரலுக்கு இது பச்சைக் கொடியெனக் கருதிப் பேரரசரின் பிள்ளைகள் நால்வரும் வரிந்து கட்டி நின்றனர். அச் சூழ்நிலையில்தான் பிரெஞ்சு நாட்டின் எழுத்தர், வரலாற்றுக் குறிப்பாளர் பெர்னியர் (Bernier) என்பார் இதனை எல்லாம் கண்டறிந்து, இதை 'வாரிசுரிமைப் போர்' என்று வழங்கித் தம் நாட்டவருக்குக் கடிதங்கள் மூலம் செய்தியைத் தெரிவித்தார்.[1] ஆனால், துரதிருஷ்டவசமாக, அடிப்படைக் கருத்துகள் சில வற்றை அமைத்துக்கொண்டு, வரலாற்று ஆசிரியர்கள் பலரும் தங்கள் கோணங்களிலிருந்து இப் பிரச்சினையை உற்று நோக்குகின்றனர். அடிப்படை ஆதாரங்களையோ உண்மைச் செய்திகளையோ, அறிந்தோ அறியாமலோ ஔரங்கசீப் மீது பல குற்றச் சாட்டுகள் சுமத்தப்படுகின்றன.

இப்பொழுது வாரிசுரிமையின் பொதுத் தன்மையைப் பார்ப்போம்: இஸ்லாம் மதத்தைப் பொறுத்தவரை அது பொது வாக ஜனநாயகத்தையும் தொழுகை மூலம் சமத்துவத்தையும் ஏற்படுத்தியது—வற்புறுத்துகிறது என்பதனை நாம் ஈண்டு நினை வில் வைப்பது மிகவும் நன்றாகும். மேலும், இஸ்லாத்தின் எழுச்சி யுடனேயே அதன் ஆரம்ப காலத்தில் மக்கள் ஆட்சியும் ஓங்கி வளர்ந்து வந்தது. மிக முக்கியமாகக் கவனிக்க வேண்டியது என்னவெனில்: இஸ்லாம் முடியாட்சியை ஏற்கவில்லை—ஏற்ப தில்லை; குடியாட்சியையே உயர்த்திப் போற்றுகிறது. எனவே,

[1] Bernier's Letters to Jean Colbert and Others - in the form of book called 'The Travels of Bernier in the Moghul Empire' by Constable and Smith. Recently S. Chand & Co. also.

முடியாட்சியில் எழும் வாரிசுரிமைப் பிரச்சினை இஸ்லாம் மதத்தின் முன் இருந்த பிரச்சினையன்று. ஆனால், காலப்போக்கில் இஸ்லாம் மதத்தை ஏற்றுக்கொண்ட நாடுகளிலும், இந்திய முஸ்லிம் மன்னர்கள் ஆட்சியிலும், முடியாட்சி ஏற்றுக் கொள்ளப் பட்டதனால், குடியாட்சியின் தத்துவம் மெல்ல மறைந்து, மறக்கப்பட்டு, குடும்பச் சண்டைகளும் வாரிசுரிமைப் போர் களும் காளான்கள் போன்று பெருகத் தொடங்கின. இதனால் தான் உதாரணமாக, 1202ஆம் ஆண்டிலிருந்து 1526ஆம் ஆண்டு வரையில் நீடித்த ஆட்சிக் காலத்திலும், பின்னர் முகலாயர்களின் ஆட்சிக் காலத்திலும் (1526—1707) அரண்மனைக் கொந்தளிப்புகளும் உரிமைப் போர்களும் சர்வ சாதாரணமாக நிகழ்ந்த வண்ணமிருந்தன.

எங்கும் வாரிசுரிமைப் போர் எழுவதன் முக்கியக் காரணங்களுள் ஒன்று என்னவெனில், 'மூத்தோனுக்கு அரசுரிமைச் சட்டம்' (Law of Primogeniture) என்னும் கொள்கை பொதுவாக ஏற்றுக்கொள்ளப்படாததே யாகும். இந்திய வரலாற்றில் பண்டைக் காலத்திலும் சரியே, குறிப்பாக, இந்திய முஸ்லிம் மன்னர்களின் ஆட்சியிலும் சரியே, இதுவே நியதியாக இருந்தது. பண்டைக்கால வரலாற்றைப் பொறுத்தவரை, ஓர் உதாரணத்தை அளிக்கலாம்: பேரரசர் அசோகர் கூட வாரிசுரிமைப் போருக்குப் பின்னரே அரியணை ஏறி இருக்கவேண்டும் என்பது அவருக்கு இருந்த 'கால சோகர்'—'அசோகர்'— என்ற அடைமொழிகளிலிருந்து (இவ்வுண்மை) அறியக் கிடக்கின்றது. இங்கிலாந்து போன்ற நாடுகளில்தாம், அதிலும் ஒரு சில நூற்றாண்டுகளாகத்தான் வாரிசுரிமையைப் பொறுத்தவரை சில வழக்காறுகளும் நன் மரபுகளும் பின்பற்றப்படுகின்றன. இதனால்தான் இந்திய முஸ்லிம் மன்னர்களின் ஆட்சியில் காணப்பட்ட அரசியல் கொந்தளிப்புகள் போன்று, இங்கிலாந்தில் அவை மிக அதிகமாகவும் அடிக்கடியும் ஏற்பட்டதில்லை.



பளிங்கு மாளிகையைக் கட்டிய
பேரரசர் ஷாஜஹான்

இரண்டாவதாக, பொதுவாகவே வாரிசுரிமைப் போர் எந் நாட்டிலும் இயல்பாகவே நிகழ்ந்துள்ளதைப் பார்க்கின்றோம். ஐரோப்பிய வரலாற்றை அறிந்தோர் இதன் உண்மையை நன் குணர்வர். உதாரணமாக, ஐரோப்பிய வரலாற்றில் பிரெஞ்சு, ஸ்பானிய, ஆஸ்திரிய, போலந்து வாரிசுரிமைப் போர்கள் சிறந்த சான்றுகளாக உள்ளன. இங்கிலாந்தின் ரோஜாப்பூப் போர்கள் குடும்பச் சண்டையல்லாது வேறு என்ன? இங்கிலாந் தின் மன்னன் ஜான் தன் அண்ணன் மகனைக் குருடாக்கித் தன் பாதையிலிருந்து அகற்றிய பின்னர்த்தான் மன்னன் ஆனான். ஆனால், இங்கு அவ்வாறு நிகழவில்லையே! தன் மகன் மகா அலெக்சாந்தர் அரியணை ஏறுவதற்காகவும், தன் கணவர் இரண்டாம் பிலிப் மற்றொரு திருமணத்தை ஏற்றுக்கொண்ட தாலும், அக் கணவர் பிலிப்பையே எதிர்த்துச் சதிசெய்து கொன்றாள் அலெக்சாந்தரின் அன்னை. ஆனால், ஔரங்கசீப் ஷாஜஹானைக் கொல்லவில்லை என்பதை நாம் நினைவில் வைத் துக்கொள்ளவேண்டும். '(முட்டாள்) ஆயத்தமற்ற எத்தல் ரெட் (Ethelred the Unready) அரியணை ஏறுவதற்காகத் தாய் எல்ப்(F)ரீ ரீடா தன் சக்களத்தி மகனைக் கொன்று எத்தல் ரெட்டை ஆட்சியில் அமர்த்தினாள்.[1] ஆனால் ஷாஜஹானையோ ஷுஜாவையோ மற்றும் யாரையுமோ இளவரசர் கொல்ல வில்லை. ஏன், உதாரணமாக, மராத்திய மண்டலத்தில் கூட சாம்பாஜீ இறந்தபின் வாரிசுரிமைப் போர் பல ஆண்டுகளுக்கு நீடிக்கவில்லையா? எனவே, 1657 — 1658ஆம் ஆண்டுகளில் நிகழ்ந்த வாரிசுரிமைப் போர் புதியதும் அன்று; நிகழக்கூடா ததும் அன்று; இயற்கைக்கு அப்பாற்பட்டதும் அன்று. இனி, இப் போருக்குரிய சூழ்நிலைகளை ஆராய்வோம். இதற்கு ஆதாரம் பெர்னியரின் நூலாகும்.

## சூழ்நிலைகளும் விளக்கங்களும்

பேரரசர் ஷாஜஹானின் மக்கள் நால்வர். தாரா ஷுக்கோ, ஷுஜா, ஔரங்கசீப், முராத் பக்ஷ் ஆகிய நால்வருமே போராட் டத்தின்போது வயது முதிர்ந்தவர்கள்; காப்பாளர் (Guardians) தேவைப்படுபவர்கள் அல்லர். அப்பொழுது தாராவுக்கு 43 வயது, ஷுஜாவுக்கு 41 வயது, ஔரங்கசீபுக்கு 39 வயது, முராதுக்கு 33 வயது ஆகும்.

[1] Keith Feiling, History of England. Also Carter & Mears, History of England.

தாரா ஷுக்கோ ஆக்ராவிலேயே தந்தையுடன் இருந்து பல ஆண்டுகளைக் கழித்தவர். எனினும், தாரா காபூலின் ஆளுநராக நியமிக்கப்பட்டு இருந்தாலும், எல்லைப்புற மாகாணங்களுக்கோ, பஞ்சாபிற்கோ இவர் சென்றது கிடையாது; இம் மாகாணங்களை இவர் தம் உதவியாளர்கள் மூலமே நிர்வகித்து வந்தார். ஷுஜா ஒரிஸ்ஸா மாகாணத்தின் ஆளுநர்ப் பதவியில் இருந்தார். ஔரங்கசீப் தக்காண ஆளுநராக நியமிக்கப்பட்டு இருந்தார். இதனுடன், கோல்கொண்டா, பீஜப்பூர் ஆகிய சுதேச அரசர்களின் வெளிநாட்டு விவகாரங்களும் இவருக்கு உட்பட்டு இருந்தன. கடைசி மகன் முராத் பக்ஷ் மேற்கு மண்டலத்தில் குஜராத் மாகாணத்திற்கு நியமிக்கப்பட்டு இருந்தார். நான்கு சகோதரர்களுக்கும் அவர்கள் பொறுப்பில் அளிக்கப்பட்ட மாகாணங்கள் தனித்தனி நாடுகளாகத் திகழும் அளவிற்கு மிகப் பெரியவையாகும். அவற்றின் வருவாயும் மத்திய அரசை ஊக்குவிப்பதாக இருந்தது.

குண நலன்கள்: நால்வரில் மூவருக்குச் சிறந்த போர்ப் பயிற்சி இருந்தது. ஆனால், ஆற்றலில் யாரும் குறைந்தவர்களல்லர்; ஆளுநர்களாக இருந்து நிர்வாகப் பயிற்சி பெற்றவர்கள். தாராவிடத்தில் சீரிய, போற்றற்குரிய நற்குணங்கள் சில இருப்பினும், அவரது அகந்தையும், ஒருவித முரட்டுக் குணமும், எல்லை மீறிய செருக்கும், அந் நற்குணங்களின் மதிப்பை இழக்கச் செய்தன ஷுஜாவினிடமும் தளபதியின் திறமையும் வீர உணர்வும் இருப்பினும், மடிமையும், கூடா நட்பும் காரணமாக இவருக்குச் சுயமாகச் சிந்தித்துத் துணிவான முடிவெடுக்கும் ஆற்றல் இல்லாது மழுங்கிப் போயிற்று. 'முராத் பக்ஷ் தலை கொழுத்தவன்; கொடுங்கோலன்; ஆனால், வீரம் மிக்க துணிச்சல்காரன்; எனினும், குடிகாரன்; வழுக்கி விழுந்தவன்; அறிவு இழந்தவன்' என்று அறிஞர் ஸ்மித் கூறுகிறார்.[1]

தாரா ஷுக்கோ: இங்குத் தாராவின் குண நலன்களை[2] ஆராய்வது மிகவும் அவசியமாகிறது. ஏனெனில், தாரா

[1] ஸ்மித், ஆக்ஸ்போர்டு, இந்திய வரலாறு – பக்கம் 392. மற்றும், Dr. Qanungo—Dara Shukoh - Vol. I.

[2] 'In the eyes of his father, the Emperor, Prince Dara Shukoh was superior to his brothers in merit and age... The Emperor from excess in love and partiality would not allow Dara Shukoh to go away from him. He also evinced the greatest partiality and affection for the Prince, providing for his honour and dignity'—Mohamed Salih in 'Amal-i Salih'—in Eliot and Dowson Vol VII, P. 137.

கொண்டிருந்த சமயப் பொறை, சகிப்புத்தன்மை காரணமாக, ஷாஜஹானை அடுத்துப் பதவிக்கு அவர் வந்திருப்பாரேயானால், பேரரசும் வீழ்ந்திருக்காது; அதன் வரலாறும் மாறி இருக்கும் என்று சிலர் கருதுகின்றனர். ஆனால், பேராசிரியர் சத்திய நாதய்யர், 'தாரா பதவி ஏற்று இருப்பாரேயானால், முகலாயப் பேரரசு சரிந்து இருக்காது என்று கருதுவது தவருகும்'[1] என்று கருதுகிறார். 1615ல் பிறந்த தாரா பெரும்பாலும் தந்தையின் பிடியிலேயே, பேரவையில் இருந்து காலத்தைக் கழித்தவர். ஆகவே, மற்ற மூவரும் பெற்ற நல்வாய்ப்புகள் தாராவுக்கு அளிக்கப்படவில்லை என்று ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும்.

இதன் விளைவாகத் தாராவுக்குத் தத்துவத்திலும், இலக்கி யத்திலும், நுண்கலைகளிலும் ஈடுபாடு இருந்ததேயொழிய, அவர் நிர்வாகம், இராணுவத்திறமை ஆகியவற்றை வளர்த்துக் கொண்டதாகத் தெரியவில்லை. தாரா ஷுக்கோவை மாபெரும் அறிஞன் எனக் கூறுவதே பொருத்தமுடையதாகும். ஆனால், அவர் சிறந்த தளபதியல்லர். அவர் காண்டஹார் முற்றுகையின் போது நடந்துகொண்ட விதமே[2] வரலாறு அறியாத பள்ளிப் பிள்ளைகளும் கேட்டு எள்ளி நகையாடக்கூடியதாகும். தந்தை ஷாஜஹான் தாராவுக்கு எல்லைமீறிய செல்வாக்கு அளித்ததன் காரணமாகத் தாரா நாட்டை ஆளும் வாய்ப்பைக் கோட்டை விட்டார். ஏனெனில், வாரிசுரிமைப் போர் தொடங்கியபோது எதனையும் சமாளிக்கும் திறமையையோ, துணிவையோ அவர் வளர்த்திருக்கவில்லை என்பது தெளிவாகியது. மேலும், பல ஆண்டுகள் அரண்மனைப் பறவையாக இருந்ததால், செருக்கும், தானே மேலோன் என்ற எண்ணமும் இவரைக் கெடுத்து விட்டன.

தாராவின் சீரழிவிற்கு ஷாஜஹானே முக்கியப் பொறுப் பாளராவார்.[3] ஏனெனில், அவர் நீதி நடுநிலைமை ஆகியவற்றை மறந்து, தாராவுக்கு மட்டுமே உயர் பதவிகளையும் சலுகைகளை யும் அள்ளிக் கொடுத்தார்; பதவியின் உச்சியிலிருக்கும்போது அரியாசனத்துக்கு அருகிலேயே ஒரு சிறு சிம்மாசனம் தயா ரிக்கப்பட்டு அதில் தாரா அமர்த்தப்பட்டார். பேரரசருக்குப் பதிலாகப் பல நேரங்களில் தாராவின் ஆணைகள் ஏற்றுக்

[1] Prof. R. Sathianathier — History of India, Vol. II.

[2] முன் பக்கம் 46 பார்க்க.

[3] 'Marks of distinction bestowed on Dara' in Shah Jahan Nama in Eliot & Dowson, Vol. VII P. 105.

கொள்ளப்பட்டன. தாராவுக்கு 'ஷாபுலந்த் இக்பால்' (Shah Buland Iquebal) 'மேன்மை தங்கிய உயர்வு பெற்ற அதிருஷ்ட சாலி மன்னன்' என்றெல்லாம் விருது அளிக்கப்பட்டது. விருது அளிக்கப்பட்டபொழுது அவரது ஆடையில் இரத்தினக் கற்களும், வைரங்களும் இழைக்கப்பட்டு அளிக்கப்பட்டதாகக் கூறுவர். அவ் வாடையின் மதிப்பே 50,000 பவுன் என்றும் சொல்லப்படுகின்றது.[1]

தாராவின் நூல்கள் : தாரா ஒரு சிந்தனையாளர். இதனை மறுத்தல் இயலாது. எவ்வாறு ரோமானிய ஏகாதிபதி மார்க்கஸ் அரேலியஸ் (Marcus Aurelius) தத்துவ சிந்தனைகளில் ஈடுபட்டுச் சிந்தனைகள் (Meditations)[2] என்னும் நூலை இயற்றினாரோ, அது போன்றே தாரா ஷுக்கோவும் பாரசீகம், வடமொழி இலக்கியங்கள் ஆகியவற்றின் தத்துவங்களின் சாற்றினைப் பிழிந்து பருகினார்; இந்தியர்களுக்கும் கொடுத்தார்.

தாராவின் நூல்கள் எனக் கருதப்படுபவை : (1) 'சிர்ருல் அஸ்ரார்' (Sirrul Asrar). இது 50 உபநிஷத்துகளின் பாரசீக மொழி பெயர்ப்பாகும். (2) மஜ்மு உல்- பஹ்ரைன் (Majmua Al-Bahrain). இது இந்து வேதாந்தத்தின் கலைச் சொற்களும், தத்துவத்திற்கு ஈடான சூபி (Sufi) தத்துவக் கலைச்சொற்களின் தொகுப்பும் ஆகும். (3) பாபாவுடன் சொற்போர் (Discussion with Baba Lal). (4) சகீனத்துல் அவுலியா (Sakinatul Aulia) 'அவுலியாக்கள்—ஞானகுருநாதர்களின் வரலாறு' (5) அதர்வ வேதத்தைப் பாரசீக மொழியில் மொழி பெயர்த்தார். எனவே, தாரா ஷுக்கோ ஒரு சிறந்த இலக்கியப் படைப்பாளர் என்பதில் சிறிதும் சந்தேகமே இல்லை. மேலும், உபநிஷத்துகளையும் இந்துத் தத்துவங்களையும மொழிபெயர்த்தது மட்டுமின்றித் தாரா 'இரு ஆழிகளின் இணைப்பு' (Mingling of Two Oceans) என்னும் நூல் ஒன்றையும் தாமே எழுதினார். தம் தந்தையைப் போன்று தாமும் அவைப் புலவர் 'ஜகந்நாத் பண்டித ராஜா'வை ஆதரித்தார்.[3]

தாராவின் சிந்தனை சிறகடித்துப் பறக்க விரும்பினதே யொழிய, ஒரு குறிப்பிட்ட சமய எல்லைக்குள் நிற்க விரும்ப

[1] Lane Poole - Aurangzeb.

[2] Marcus Aurelius—'Meditations'—World Classics Publications - Also C. Rajagopalachari's Tamil Translation-'சிந்தனைகள்'

[3] Dr. Qanungo—Dara Shukoh - Vol. I, Chapter, 'Works of Dara', 'Dara and Friends' etc.

வில்லை. தம் மோதிரத்தில் இறைவனைக் குறிக்கும் 'பிரபு' என்னும் சொல்லைத் தேவநாகரி எழுத்தில் பொறித்து அணிந்து கொண்டார். அவர் ஓர் அரண்மனைப்பறவை மட்டுமின்றிச் சிந்தனை உலகிலும் ஒரு சுதந்திரப்பறவை என்றே சொல்ல வேண்டும். எனவேதான், தாராவுக்கு இஸ்லாமிய சமயத்தில் அவ்வளவு ஈடுபாடு, ஈர்ப்பு, உத்வேகம், பற்றுதல், பேணுதல் இருந்ததாகத் தெரியவில்லை. சிந்தனைகளில் சிறகடித்துப் பறக்கும்போது சமயவழிபாடு என்னும் தரையில் எப்படித் தட்டுப்பட்டு உழலமுடியும்? எனவே, சூபிகள் அல்லது 'சமய குரவர்'களின் தத்துவங்களின் மீது கொண்டிருந்த வேட்கை தாராவை ஈர்த்தன என்றாலும், உண்மையில் அவர் ஒரு மெய்யான முழுமையான இஸ்லாமியரின் உள்ளத்தைப் பெற்றிருந்தாரா என்பது சந்தேகத்திற்குரியதே என்று அவரது காலத்திய 'உம்ராக்களும்' (Omrahs) அல்லது 'பிரபுக்களும்' பொது மக்களும் முடிவுக்கு வந்தனர். சிலர் தாராவைப் புலவர் மில்டனுடன் ஒப்பிட்டு, மில்டனின் சுதந்திரப் பார்வை தாராவிடமும் காணப்பட்டது என்பர். டாக்டர் கானுங்கோ (Dr. Qanungo) போன்றோர் தாராவை வானளாவப் போற்றுகின்றனர். 'யாராவது இந்தியாவின் சமயச் சகிப்புத்தன்மை என்னும் பிரச்சினைக்குப் பரிகாரம் காணவேண்டுமானால், அவர் தாரா எங்கு விட்டுச் சென்றாரோ அங்குத்தான் தொடங்கவேண்டும். அவர் காட்டிய வழியில்தான் செல்லவேண்டும்'[1] என்று டாக்டர் கானுங்கோ பறை சாற்றுகின்றார்.

தாராவும் சர்மதும்: சமயப் பொறை என்பது வேறு; சமயத்தையே துறந்து, புறக்காட்சிகளிலும் நம்பிக்கை இழந்து, தம் சமயத்தின் வேர்களையே வாள்கொண்டு வெட்டி ஒதுக்குவதும், ஒதுங்கி நிற்பதும் வேறு. 17ஆம் நூற்றாண்டில், உலகெங்கும் சமயச் சகிப்பு இல்லாத அந் நூற்றாண்டில், தம்பியே சமயச் சகிப்புத்தன்மை அற்றவராகக் கருதப்படும் அச்சூழ்நிலையில், தாராவின் சகிப்புத்தன்மையைக் குறைகூற இயலாது. ஆனால் உண்மை என்னவெனில், தாரா ஷுக்கோவிற்குத் தாம் பின்பற்றியதாகக் கூறிய இஸ்லாமிய சமயத்தின் உயிர்க் கொள்கைகளில் நம்பிக்கை இருந்ததா என்பதுதான் கேள்வி. தாரா ஷுக்கோ இஸ்லாமிய சமயத்திலிருந்து முற்றிலும் பிறழ்ந்து விட்டாரென்று அவர் காலத்திய மூலக்குறிப்பாளர்கள் கூறுகிறார்களே, இதைமட்டும் ஏன் வரலாற்று ஆசிரியர்கள் சுட்டிக்

[1] Ibid.

காட்டுவது இல்லை? 'ஆலம்கீர் நாமாவின்' ஆசிரியர் மிர்ஜா முஹம்மத் காசிம் தாரா ஷுக்கோ வேதியர்கள், அந்தணர்கள், இந்துத் துறவிகள் ஆகியோருடன் கொண்டிருந்த நட்புக் காரணமாகத் தொழுகை, நோன்பு ஆகியவற்றை நிறுத்தி விட்டார் எனக் கூறுகின்றார்.[1] அது மாத்திரமன்று. தாரா ஷுக்கோ மியான்மீர் (Mian Mir) என்பாரின் சீடனாகக் கருதப் பட்ட 'ஷாமுகம்மது பதக்ஷி' என்பவரையும், அவருடைய சீட னை முகம்மது சையது என்ற இயற்பெயரும் 'சர்மத்' (Sarmad)[2] என்ற புனைபெயரும் தாங்கிய நிர்வாணக் கோலப் பக்கிரியையும் தம்முடைய குருவாக ஏற்றுக்கொண்டார். முகம்மது சையது என்னும் சர்மத் பெயரளவில்தான் இஸ்லாமியப் பெயரைத் தாங்கினரேயொழிய, அவருடைய கோலமும் செயல்களும் அச் சமயத்திற்கு முற்றிலும் மாறுபட்டிருந்தன. நாடெங்கும் சர்மத் அலைந்து திரிந்து வந்தார். இவருக்கு ஷாஜஹானிடத்திருந்து பரிசுகள் வழங்கப்பட்டன. எனவே, சர்மதுடன் தாரா கொண் டிருந்த நட்புத் தாராவுக்கே தீங்காக முடிந்தது.

தாரா அரசியலிலும் போரிலும் ஒரு தோல்வியின் எடுத்துக் காட்டு. தாரா தம் குற்றத்தைக் கண்டு மனம் நொந்து பிறர் குற் றத்தை மன்னித்த பெருந்தகையல்லர். அவர் வீரமும் விவே கமும் அற்றவர் என்பதைச் சாமூகாப் போர் ஒன்றே நிரூபிக் கின்றது. இக் கருத்தை மஜூம்தார், ராய்ச்சௌத்ரி, டட்டா ஆகிய ஆசிரியர்களும் கூறுகின்றனர். 'தந்தையின் அளவு கடந்த அன்பும், அவர் நிரந்தரமாக அரச அவையில் தங்கி இருந்ததும்தாம், அவரிடத்தில் அரசியல்வாதியின் அல்லது வீர மிக்க தளபதியின் குணங்கள் அமையாவாறு தடுத்தன. இதனாலேயே அவரிடம் ஒருவிதச் செருக்கும் வளர்ந்தது'[3] என அம் மூன்று அறிஞர்களும் கருதுகின்றனர்.

## போருக்குப் பச்சைக் கொடி

1657ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 8ஆம் தேதி (ஹிஜ்ரி 1067 ஹஜ் பிறை 7) ஷாஜஹான் நோய்வாய்ப்பட்டார்.[4] ஒரு

[1] Eliot & Dowson - History of India as told by her own Historians.

[2] Dr. Qanungo—Dara Shukoh Vol. I - Also History of Inda Vol. II - by Prof. R. Sathianathier.

[3] Mujumdar, Ray Chaudri & K. N. Datta - Advanced History of India Part II.

[4] Lane Poole's—Aurangzeb - Also, Eliot & Dowson - Ibid. Vol. VII P. 213.

வாரத்திற்கு மன்னர் மக்கள் மத்தியில் பலகணியில் நிற்பது (ஜரோக்கா) தடைப்பட்டது. இதனால் மக்களிடையே பீதியும் பொய் வதந்தியும் பரவ ஆரம்பித்தன. நிலைமையை நேராகக் கண்ட டாக்டர் பெர்னியர் கூறுகிறார்: 'முகலாயரின் ஜுரம் அவரது பேரரசின் எல்லைகளுக்குள் பீதியை உண்டாக்கி விட்டது. தாரா நாட்டின் முக்கிய நகரங்களான ஆக்ராவிலும், டில்லியிலும் பெரும் படையைச் சேகரித்துவிட்டார். வங்காளத்திலும் சுல்தான் ஷுஜா அதுபோன்றே பலத்த ஆயத்தங்கள் செய்தார். தக்காணத்தில் ஔரங்கசீபும், குஜராத்தில் முராத் பக்ஷும் பேரரசுப் போட்டிக்குத் தயாராகி வந்தனர். நான்கு சகோதரர்களும் தங்களைச் சுற்றி நண்பர்களையும், ஆதரவாளர்களையும் திரட்டிக் கொண்டனர். எல்லோருமே கடிதங்கள் எழுதினர்; வாக்குறுதிகள் அளித்தனர். பலவிதமான சூழ்ச்சியில் இறங்கினர்.'[1]

பெர்னியர் கண்ட உண்மை நிலை: 'இதற்கிடையில் பேரரசரின் ஜுரம் அதிகமாகவே அவர் இறந்து விட்டதாகவே செய்தியை அறிவித்தனர். அரச அவை முழுவதுமே குழப்பத்தில் ஆழ்ந்திருந்தது. ஆக்ராவில் மக்கள் அச்சத்தினால் நடுங்கினர். கடைகள் பல நாட்கள் மூடப்பட்டிருந்தன. நான்கு இளவரசர்களும் வெளிப்படையாகவே வாள் ஒன்றுதான் தங்கள் பிரச்சினையைத் தீர்க்கவல்லது எனப் பறைசாற்றிக் கொண்டனர். இப் போரிலிருந்து யாரும் பின்வாங்க முடியாத அளவுக்குக் காலம் கடந்துவிட்டது. கிரீடம் வெற்றியினால் மட்டுமே பெற வேண்டிய ஒன்று; தோல்வி ஏற்படுமேயானால் உயிர் நீங்கும் என்பதும் உறுதியாயிற்று. அப்பொழுது ''மணிமகுடம் அல்லது சவப்பெட்டி'' (Takht ya Takhta or Crown or Coffin) என்பதையன்றி வேறு வழியே இல்லை[2] என்பதை நால்வரும் உணர்ந்தனர்.'

பெர்னியரின் கருத்துகள் உண்மையானவையே. எப்படியெனில், நால்வருமே 1657-ல் போர்க்கொடியை உயர்த்தத் தொடங்கிவிட்டனர். எனவே, இதற்கு ஔரங்கசீபை மட்டும் குறைகூறிப் பயனில்லை. தாம் உயிருடன் இருப்பதாக ஷாஜஹான் மட்டும் மக்கள் அறியும்படி ஜரோக்காவில் தோன்றி இருப்பாரேயாயின், இந்தப் பூசலைத் தவிர்த்திருக்க

[1] Bernier—'The Travels'. Also S. R. Sharma - The Mughal Rule in India and Lane Poole's - Aurangzeb.

[2] J. N. Sarkar—Military History of India.

முடியும்; போரும் நிகழ்ந்திருக்காது. மேலும், ஔரங்கசீப் சில மாதங்கள் வரை இப்போரில் கலந்து கொள்ள விருப்பமில்லாமல் இருந்தார் என்பதையும், அன்றைய சூழ்நிலையில் தம் தந்தை உயிருடன் இருக்கும்போதே போரில் ஈடுபடுவது தவறு என்பதையும் ஔரங்கசீப் முராத் பக்ஷுக்கு எழுதிய கடிதமொன்றில் தெளிவுபடுத்தியுள்ளார்.

ஹிஜ்ரி 1067ஆம் ஆண்டு ஹஜ் மாதம் பிறை 7-ல், செப்டம்பர் மாதம் 1657ஆம் ஆண்டு ஷாஜஹான் நோயுற்றார். இதற்கு முன்பே தாரா ஷுக்கோதான் வாரிசு என ஷாஜஹான் அறிவித்திருந்தார். அவர் நோயுற்றபோது இச் செய்தியைப் பரவவிடாமல் தாரா பாதுகாத்தார். எவ்வாறோ செய்தியை அறிந்த முராத் பக்ஷ் குஜராத்தில் தாமே பேரரசர் எனப் பிரகடனப்படுத்திக் கொண்டார். ஔரங்கசீபைக் கண்டு அஞ்சிய தாரா தந்தையிடமுள்ள தமது செல்வாக்கைப் பயன்படுத்தி, ஔரங்கசீபிடம் இருக்கும் படைகளைத் திரும்ப அழைத்துக் கொள்ளுமாறு செய்தார். முராத் பக்ஷையும் ஔரங்கசீபையும் தம் வழியிலிருந்து அகற்றுவதே தாராவின் நோக்கமாகும். பேரரசர் ஷாஜஹான் அதிகமாக ஜுரத்தால் அவதிப்பட்டுக் கொண்டிருந்த நிலையிலும் அவரை டில்லியினின்று ஆக்ராவுக்கு அழைத்து வந்தார் தாரா. ஜயசிங், சுலைமான் ஆகிய தளபதிகளின் தலைமையில் ஷுஜாவை எதிர்த்து முதலில் படைகள் அனுப்பப்பட்டன. 'இந்த இந்து இராஜா (ஜயசிங்) இந்துஸ்தானத்திலேயே மிகச் சிறந்த அரசராவார். இவர் பேரரசருக்கு நெருங்கிய உறவினரும் ஆவார்,' என்று தாரிக்கெ முபஜ்ஜலியின் ஆசிரியர் முபஜ்ஜல்கான் கூறுகிறார்.[1]

மூவரின் ஆயத்தங்கள்: வாரிசுரிமைப் போரில் முதல் தவறு ஷா ஷுஜாவுடையதே. அவர் வழியையே தாராவும் முராதும் பின்பற்றினர். ஷுஜா, தம் தந்தை பயங்கரமான நிலையில் படுக்கையில் இருந்ததாக வந்த செய்தியை அறிந்து அப்போதைய தலைநகரான ராஜ்மஹலில் (வங்காளம், பீஹார்) தாமே (1657 செப்டம்பர் மாதத்தில்) பேரரசர் எனப் பட்டம் சூட்டிக் கொண்டார். தாரா தந்தையை விஷம் வைத்துக் கொல்ல முயன்றதாக ஷுஜா குற்றம் சாட்டினார். பட்டம் சூட்டியதைத் தொடர்ந்து வங்கத்தில் தம் பெயரிலேயே நாணயங்களை

[1] (எலியட்-டௌசன் ஆதாரம் – பக்கம் 143 ஷாஜஹான் நோயுற்றது – செப்டம்பர் 8, 1657ஆம் ஆண்டு – ஆதாரம், காபிஃகான் - எலியட், பக்கம் 213).

அச்சிட்டுக் கொண்டார்;[1] ஆக்ராவின் மீது படையெடுக்கவும் தொடங்கி விட்டார். இச் செய்தியைக் கேட்ட ஷாஜஹான் தாம் இறக்கவில்லை என்று சொல்லி அனுப்பியும் அதை நம்ப மறுத்தார் ஷுஜா.

ஷுஜாவின் தவறு: அண்ணன் ஷுஜாவைப் போன்றே முராத் பக்ஷும் மேற்கே அகமத் நகரில் பேரரசர் எனப் பட்டம் சூட்டிக்கொண்டு, நாணயங்களையும் வெளியிட்டார். இந் நிகழ்ச்சி 5 ஆம் தேதி டிசம்பர் மாதம், 1657ஆம் ஆண்டில் நடைபெற்றது. முன் கூறியது போல, ஔரங்கசீப் தந்தை உயிருடன் இருக்கும்போதே அரச ஆணையை மீறிப் பட்டம் சூட்டிக் கொள்வது முற்றிலும் தவறு என்று சுட்டிக்காட்டி இருந்தார். எனவே, ஔரங்கசீப் தொடக்கத்திலேயே தம் தம்பியின் எதிர்ப்பினைக் கண்டித்தார்.

இளவரசர் ஔரங்கசீபைப் பொறுத்தவரையில் தம் திட்டத்தைப் பரம இரகசியமாகப் பாதுகாத்து வைத்திருந்தார். எனினும், தந்திர உபாயங்களில் கைதேர்ந்தவராகையால் தம் திட்டங்களைத் தம் மனத்திலேயே அவர் ஒளித்து வைத்திருந்தார் என்று பலவாருகக் கூறப்படுகின்றது. எவ்வாருயினும், ஔரங்கசீப் தக்க தருணத்திற்காகக் காத்திருந்தார் என்பது மட்டும் உண்மை. தாராவின் செருக்கும் சினமும், ஷுஜாவின் மடமையும் மடிமையும், முராத் பக்ஷின் கயமையும், என்றும் மகிழ்ச்சிக் கடலில் திளைக்கும் கேளிக்கைத் தன்மையும் சேர்ந்து, முற்றிலும் ஆற்றல் பெற்றிருந்த இளவரசர் ஔரங்கசீபையே முன்னுக்கு இழுத்துச் சென்றன.

தாரா ஒருபடி மேலே சென்று, ஆக்ராவில் ஔரங்கசீபின் மாளிகையைக் கைப்பற்றி, அங்குள்ள அரசியல் பிரதிநிதியைக் கைது செய்தார். இச் சூழ்நிலையில் நால்வருள் எவர் அரியணை ஏறியபோதிலும் எஞ்சிய மூவரின் உயிருக்கு ஆபத்து உண்டு என்பது உறுதியாயிற்று. அறிஞர் லேன்பூல் கூறியது போல, 'தற்காப்புக்காகவே அவர் அரசுரிமைப் போட்டியில் கலந்து கொள்ள வேண்டி இருந்தது. இது மட்டும் நிச்சயமாகத் தீர்மானிக்கப்படுமாயின் பின்னர்ப் பின்பற்ற வேண்டியதாக ஒன்று மட்டுமே எஞ்சி நின்றது—அதுவே செயலில் இறங்க வேண்டிய காலமாகும்.'[2]

[1] Majumdar, Ray Chaudri & K. N. Datta - Advanced History of India-Part II.

[2] Lane Poole—Aurangzeb - S. Chand & Co. Publication.

தாராவின் சீற்றம் : தம் நிலையை மறந்து, ஷுஜாவும் முராத் பக்ஷும் மேற்கொண்ட நடவடிக்கைகளைக் கண்டு தாரா சீற்றம் கொண்டார். அதனால், தந்தைக்குப் பதிலாகத் தாமே அதிகாரங்களையும் ஆணைகளையும் பிரகடனம் செய்யத் துணிந்தார்; ஷுஜாவையும், முராத் பக்ஷையும் தண்டிப்பதற்காக சுலைமான் ஷுக்கோ, ராஜா ஜஸ்வந்த்சிங், தளபதி காசிம்கான் ஆகியோரின் தலைமையின் கீழ்ப் பெரும் படைகளை அனுப்பினார். எந்நேரத்திலும் போர் நிச்சயமாக மூளும் என்ற அறிகுறியை அறிந்த ஷாஜஹான் இதனைத் தடுக்க விரும்பி, சுலைமான் ஷுக்கோவின் படைமூலம், மூவரும் மேற்கொண்டு நடவடிக்கைகள் எடுக்காமல் இருக்க முயன்றார். ஔரங்கசீபும் முராதும் சந்தித்துத் திட்டங்களை உருவாக்காதவாறும், அவர்களின் தொடர்புகளைத் துண்டிக்குமாறும் சுலைமான், ஜஸ்வந்த்சிங், காசிம் ஆகியோர் பணிக்கப்பட்டனர். மஹாராஜா ஜஸ்வந்த் சிங் படையுடன் அனுப்பப்பட்டு, ஔரங்கசீப் தக்காணத்திலிருந்து வடக்கே வராமல் தடுக்குமாறு பணிக்கப்பட்டார்.[1] ஔரங்கசீபின் இயக்கத்தைப்பற்றித்தான் தாராவுக்கு அதிக கவலையாக இருந்தது. தாரா எதிர்பார்த்ததற்கு மாறாக, ஷுஜா தனியே விடப்பட்டார். எனவே, அச் சூழ்நிலையில் ஜயசிங்கின் தலைமையில் உள்ள தாராவின் படைகள் ஷுஜாவின் படைகளை வாரணாசியின் முகாமில் திடீரென்று தாக்கின. குடிப் போதையில் இருந்த ஷுஜா மறுநாள் காலையில்தான், தாம் தாக்குதலுக்கு இலக்காகி இருப்பதை உணர்ந்தார். ஷுஜாவின் படைகள் சிதறடிக்கப்பட்டன.

ஔரங்கசீபின் தயக்கம் : மேற்கு மண்டலத்தில் முராத் பக்ஷ் சூரத் நகரைக் கைப்பற்றி இணைத்துக் கொண்டதைக் கேள்வியுற்ற ஔரங்கசீப் தம் தம்பியை மேலும் கடிந்து கொண்டார். ஔரங்கசீப் கடிதத்தில் எழுதினார் :—'நம்முடைய கைவிடப்பட்ட சகோதரரின் வெட்கமற்ற, தர்மமற்ற செயல்களை எதிர்த்து நீ என்ன முடிவெடுத்தாலும் என்னைக் கூட்டாளனாக நீ சேர்த்துக் கொள்ளலாம். ஆனால், நம் தந்தை இன்னும் உயிருடன்தான் இருக்கின்றார்; நாம் இருவரும் அவருக்கு உதவிசெய்யக் கடமைப்பட்டவர்கள்; துரோகிகளின் செருக்

[1] About the same time Mohammad Dara Shukoh was declared to be the successor to the throne and the entire management of Government was placed in his hands. He also ordered Rajah Jaswant Singh to march with a large army to Deccan to meet the enemy from advancing - Tarikhi Mufazzali, in Eliot & Dowson Vol. VII P. 143.

கையும், துடுக்கையும் தண்டிக்கக் கடமைப்பட்டவர்கள்.'[1] அநேகமாக ஔரங்கசீப் இவ்வாறு எண்ணக் காரணம் தாராவின் கொடுங்கோன்மைக்கு அஞ்சியதனுல் இருக்கக்கூடும், அல்லது தம்முடைய சுயநன்மைக்காகவும் இருக்கக்கூடும். எனவே, உடனே எதிர்ப்பதை ஔரங்கசீப் விரும்பவில்லை என்பதை இது தெளிவுபடுத்துகின்றது. தம் அன்பும் இரக்கமும், முராத் பக்ஷின்பால் உண்டு என்பதை உறுதிப்படுத்தும் முறையில் அவர் தம்பிக்கு 1 லட்சம் ரூபாய் அனுப்பினுர்.

அதே ஆண்டு டிசம்பர் மாத இறுதியில் தக்காணத்திலிருந்து தலைநகருக்கு விரைந்து வருமாறு மீர் ஜும்லாவிற்கு ஓர் ஓலை விடுத்தார் பேரரசர் ஷாஜஹான். ஆனுல், மீர் ஜும்லா ஆக்ரா செல்வதை ஔரங்கசீப் தடுத்து நிறுத்தினுர் என்பது உண்மை.

மீர் ஜும்லா தாமே தம்மைக் கைது செய்யப்படுவதை வரவேற்ருர் என்று வின்சென்ட் ஸ்மித் கூறுகிருர். ஔரங்கசீப் மீர் ஜும்லாவைக் கைது செய்தார் என்று சொல்வதைவிட, அப்துல்லா குதுப்ஷாவுக்குத் துரோகம் செய்துவிட்டுப் பிரதமராக வந்த இந்த வைர வணிகர், அநேகமாக அரசியலில் ஒரு திருப்பம் ஏற்பட்டு வருவதை உணர்ந்து, தம் அறிவினுலே ஒரு எடை போட்டு, உயர் பதவிகளை எதிர்பார்த்து நம்பி, நாணல் போல வளைந்து கொடுத்துத் தாமே போக மறுத்தார் என்று ஏன் கருதக் கூடாது? உண்மை இவ்வாறுதான் இருந்திருக்க முடியும். ஏனெனில், மீர் ஜும்லா போட்ட கணக்குப்படி ஔரங்கசீப் வெற்றி பெற்று, பிறகு ஆட்சியில் இருந்தபோது, ஔரங்கசீபின் பிரதம மந்திரியாகவும் ஆகிவிட்டார் இந்த மீர் ஜும்லா.

1658ஆம் ஆண்டில் பிப்ரவரி மாதத்தில் முராதின் படைகள் தெற்கு நோக்கி நகர்ந்தன. சூழ்நிலையைக் கண்ட ஔரங்கசீப், ஒரு துணிவான முடிவெடுத்தார். 'எண்ணித் துணிக கருமம் துணிந்தபின் எண்ணுவம் என்பது இழுக்கு' என்னும் பொய்யாமொழிப் புலவரின் கருத்து ஔரங்கசீபைப் பொறுத்தவரை முற்றிலும் பொருத்தமாக இருந்தது. இம் முடிவையடுத்து மார்ச்சு மாதத்தில் ஔரங்கசீபின் படைகளும் வடக்கு நோக்கி நர்மதை நதியைக் கடந்து, குஜராத்திலிருந்து வந்த முராதுடைய படைகளுடன் ஒன்று கூடின. இரு படைகளும் உஜ்ஜ

1 Wakhiat—Eliot & Dowson - Quoted by Lane Poole's Aurangzeb,

யினுக்கு அருகில் கூடி இணைந்த பின்னும், ஔரங்கசீபுக்குப் போரிடலாமா வேண்டாமா என்று சபலம் தோற்றியது மிகமிக விந்தையிலும் விந்தையே. இது இளவரசன் ஹாம்லெட்டின் (Hamlet) சபலம் போன்று இருக்கவில்லையாயினும், தந்தையை எதிர்க்கத் துணிந்தபின், தன் நெஞ்சு அறிந்தவற்றைக் கூற வில்லையாயின், தன் நெஞ்சே பிறகு தன்னைச் சுடும் என்ற காரணமாகவும் ஔரங்கசீப் ஷாஜஹானை எதிர்த்திருக்க வேண்டும். 'தன்நெஞ்சறிவது பொய்யற்க பொய்த்தபின் தன் நெஞ்சே தன்னைச் சுடும்' என்ற தெய்வப் புலவரின் வாக்கு ஔரங்கசீபின் முடிவுக்குப் பொருத்தமாக அமைந்திருக்க வேண்டும்.

உஜ்ஜயினுக்கு அருகில் 'தார்மத்' (Dharmat) என்னும் இடத்தில் ஏப்ரல் மாதம் போரின் முதல் குண்டு முழக்கம் கேட்டது.[1] ஆனால் அதற்கு முன்பே ஔரங்கசீப் பிராமண நாவலர் ஒருவர் மூலம் ஜஸ்வந்த்சிங்கிற்கு மடல் ஒன்றை அனுப்பித் தம் மன நிலையைத் தெளிவுபடுத்தினர்: 'நான் என் தந்தையைப் பார்க்கவே விரும்புகிறேன்; நான் போரை விரும்பவில்லை. ஆக்ராவுக்கு என்னுடன் வாருங்கள், அல்லது என் பாதையை விட்டு விலகுங்கள்; நாம் இரத்தம் சிந்த வேண்டியதில்லை,'[2] என்று ஔரங்கசீப் ஜஸ்வந்த்சிங்கிற்கு எழுதினர். இதே ஜஸ்வந்த்சிங் பிறகு ஔரங்கசீபிடம் பல ஆண்டுகளுக்குத் தள பதிப் பதவியை வகித்துவந்தார் என்பதை இங்கு நாம் நினைவில் கொள்ளவேண்டும். ஜஸ்வந்த்சிங்கின் துடுக்கான, அவமான மூட்டும் பதில் ஔரங்கசீபின் உள்ளத்தை வேல்கொண்டு பாய்ச்சுவதுபோல் இருந்தது. எனவே, அச் சூழ்நிலையிலும் போர் தவிர்க்க முடியாதென்பது உறுதியாயிற்று. 'ஷாஜஹான் அச் சூழ்நிலையிலும் தாமே படைநடத்திச் சென்று தம் புதல்வர்களை அடக்கி இருப்பாரேயானல் பேரரசின் வரலாறு மாறி இருக்கக் கூடும்' என்று அறிஞர் லேன்பூல் கருதுவது இங்குச் சிந்தித்தற் குரியதாகும். வாரிசுரிமைப் போரில் இளவரசர் ஔரங்கசீபுக்கு மொத்தம் 124 மன்சப்தார்கள் ஆதரவளித்தனர். அவர்களுள் 103 முஸ்லிம்களும், 21 இந்துப் பிரபுக்களும் இருந்தனர். தாரா ஷுக்கோவை ஆதரித்தவர்கள் மொத்தம் 87 பிரபுக்கள். இவர்களுள் 63 முஸ்லிம்களும், 24 இந்துப் பிரபுக்களும் சேர்ந்து போரிட்டனர். ஷா ஷுஜா, முராத் பக்ஷ் சகோதரர்களை 10, 11 இந்து, முஸ்லிம் பிரபுக்களே ஆதரித்தனர்.

[1] J. N. Sarkar—Military History of India - 1960 Edn.

[2] Lane Poole - Aurangzeb.

## போர்

### தார்மத் (Darmat) : 25 ஏப்ரல் 1658

அறிஞர் சர்க்காரை ஒட்டி[1] அறிஞர் ஸ்மித்தும், 1658 ஏப்ரல் 15 ஆம் தேதி போர் நடந்தது என்கின்றார்.[2] அறிஞர் லேன்பூல் ஏப்ரல் 25-ந் தேதி எனக் குறிப்பிடுகின்றார்.

உஜ்ஜயினுக்கு 14 மைல் அருகில் தார்மத் என்னும் இடத்தில் தாராவினால் அனுப்பப்பட்ட படைகளுக்கும் ஔரங்கசீப்-முராத் பக்ஷின் கூட்டுப்படைகளுக்கும் இடையே முதற் போர் முழக்கம் கேட்டது. எதிர்பார்த்ததற்கு மாறாகக் கூட்டுப்படைகள் பேரரசின் படைகளை மண்ணைக் கௌவச் செய்தன. ஜஸ்வந்த்சிங் எவ்வளவோ போராடி வெற்றி காண முயன்றாலும், அவரது தோல்வியைக் கண்டு தலைநகரில் பலரும் சிந்தையில் மூழ்கினர்; நடுக்கம் கொண்டனர். ஏன்? ஜஸ்வந்த்சிங்கின் மனைவிகூடத் தம் கணவனை ஏறிட்டுப் பார்க்க வெட்கப் பட்டார் எனவும், ராஜபுத்திர மாது எனச் சொல்லிக்கொள்ள மறுத்தார் எனவும் பெர்னியர் குறிப்புகள் கூறுகின்றன. உண்மையில் ஜஸ்வந்த்சிங்கின் தோல்வி ராஜபுத்திர மரபுக்கு மாறான படு தோல்வியாகும். எப்படியெனில், அவருடைய 8000 ராஜ புத்திர வீரர்களில் 600 வீரர்களே உயிர் தப்பினர்; எஞ்சியவர் பலரும் பிறகும் கூட்டுப்படைகளால் கொல்லப்பட்டனர். தோல்விக்கு முக்கியமான, குறிப்பிடத்தக்க காரணங்களுள் ஒன்று, ஔரங்கசீபின் தனித் திறமையும் போர் ஆற்றலும் ஒரு புறமிருக்க, ஜஸ்வந்த்சிங், காசிம்கான், சுலைமான் ஆகியோரிடையே எழுந்த பிளவுகளும், பிணக்குகளும் குறிப்பிடத்தக்கனவாகும். மேலும், இரண்டாவது கட்டத்தில் இருந்த சில தளபதிகளும் கூட்டுப்படைகளுக்குக் காட்டிக் கொடுத்தனர். இப் போரில் தாராஷுக்கோவே நேரே போர்க்களத்தில் போர் செய்யாதிருந்ததை நாம் கவனத்தில் வைக்கவேண்டும். ஆனால், இத் தோல்வியினால் தாராவிற்கு ஏற்பட்ட அதிர்ச்சிக்கும் சீற்றத்திற்கும் அளவேயில்லை.

### சாமுகார் (Samugarh) போர் : ஜூன் 9, 1658

ஹிஜ்ரீ 1068ஆம் ஆண்டு ஷாபான் மாதம் பிறை 15-ல் தாரா ஷுக்கோ, கலீலுல்லாகானின் படைகள் ஔரங்கசீபை

[1] J. N. Sarkar—A Short History of Aurangzeb.

[2] V. A. Smith—Oxford History of India.

எதிர்த்து தோல்பூருக்கு (Dholpur) அருகில் வந்தாலும் அவை அடுத்த மாதம்—ரம்ஜான் மாதம் பிறை 5ல் தான் நேருக்குநேர் சந்தித்துக் கொண்டன. (10 மே, 1658 — 20, 22 நாட்கள் கழித்து—ஜூன் 2, 1658)[1]

சர்க்கார், ஸ்மித் ஆகியோர் பழைய கணக்குப்படியே மே, 29, 1658ஆம் ஆண்டு என்கின்றனர்.[2] அறிஞர் லேன்பூல் பெர்னியருடைய ஆதாரத்தில் ஔரங்கசீபின் தலைமையில் கூட்டுப்படைகள் ஜூன் மாதம் 2ஆம் தேதி சாப்பலைக் கடந்த தாகக் கூறுகின்றார்.[3] கிழக்கே சென்று, ஜூன் மாதம் 7ஆம் தேதி இரு படைகளும் ஆக்ராவிற்கு எட்டு மைல் கிழக்கே நேருக்கு நேர் சந்தித்துக் கொண்டன. இந் நிலையி லாவது ஷாஜஹானே போரைத் தடுக்க விரும்பி முடிவெடுத் திருந்தால், அவர் வெற்றி யடைந்திருக்கக்கூடும். ஆனால், ஜூன் 7ஆம் தேதியே கிழக்கே வங்கத்தில் இருந்து படைகள் துணைக்கு வருவதாகவும், காத்திருக்குமாறும் தாராவுக்கு ஷாஜ ஹான் கடிதம் எழுதி இருந்தார். தம் வழக்கமான வீருப்பைத் தாரா காட்டத் தவறவில்லை. சகோதரர்கள் மூவரையும் மூன்றே நாட்களுள் சங்கிலியால் கட்டிக் கொண்டு வருவதாகத் தாரா பதில் எழுதினர். மூன்றுவது நாள் போர் தொடங்கியது.

ஔரங்கசீபும், முராத் பக்ஷும் தம் உயிரைப் பணயம் வைத்துப் போராடினர். அண்ணன் ஔரங்கசீப் தலைமைப் பதவியை ஏற்றுப் படை நடத்தினர். ஔரங்கசீபுக்கு இடப் புறத்தில் முராத் பக்ஷ் இருந்தார். வலப் புறத்தில் பகதூர்கான் தலைமை தாங்கினர். ஔரங்கசீபின் மகன் முகம்மது சுல்தான் சற்றுத் தூரத்தில் பீரங்கிப் படைகளுக்குத் தலைமை தாங்கிச் சென்றுர். பீரங்கிகள் இரும்புச் சங்கிலிகளால் வரிசை வரிசை யாகப் பிணைக்கப்பட்டுச் சென்றன. பீரங்கிப் படைகளைத் தொடர்ந்து காலாட் படையும் துப்பாக்கி வீரர்களும் சென் றனர். இதுமட்டுமன்றிக் குதிரைப் படை வீரர்கள் ஈட்டி களும், எறி பொருள்களும் தாங்கிச் சென்றனர். ராஜபுத்திரப் படைகள் எல்லாவற்றுக்கும் மேலாகப் பின்தொடர்ந்தன.

தாராவின் இடப்புறத்தில் கலீலுல்லா கானும் வலப் புறத்தில் ருஸ்தும்கானும் படைகளுக்குத் தலைமைப் பொறுப்பை ஏற்றனர்.

[1] Khafi Khan in 'M. L.' in Eliot & Dowson.
H. I. as told by her own historians Vol VII 220—226.
'Defeat of Dara by Aurangzeb' & also Lanepoole—Aurangzeb.

[2] J. N. Sarkar—Military History of India—29th May 1658.

[3] Lanepoole, Aurangzeb. Bernier quoted.

ஷேக் மீர் என்பாரின், ராஜா சத்தர்சால் (Raja Satter Sal) என்பாரின் படைகளும் தாராவுக்குத் துணை நின்றன. தாரா ஷுக்கோ இலங்கை யானை ஒன்றின் மீது வீற்றிருந்ததாகப் பெர்னியர் கூறுகிறார். தாராவின் முன்னணி வீரர்களும் தாராவின் மகன் 'சிபர் ஷுக்கோ' (Siphir Shukoh), பகதூர்கான், கோக்கா ஆகியோரின் படைகளும் முதன்முதலில் எதிரிப் படைகள் மீது தாக்குதலைத் தொடங்கின. ஔரங்கசீபின் படையில் பலர் வீழ்ந்து மடிந்தனர். வீரர்களின் இறப்பையும், தோல்வியையும் கண்டு வந்த ஔரங்கசீப் 'மனம் தளராதீர்கள், ஆண்டவன் துணை இருக்கின்றான்' (தில்-ந-ஹார்ணு; குதா ஹை—Dil na Haarna, Khuda Hai) என்று அடிக்கடி சொல்லித் தம் படைகளை ஊக்குவித்துக் கொண்டிருந்தார்.

போரில் படுதோல்வி : தாராவுக்குத் துணையாக வெகு அருகிலேயே ராஜா ராம்சிங்கும், ராத்தோர் ராஜாவும், ரூப்சிங்கும் சலியாது போரிட்டு வந்தனர். ராஜபுத்திரர்கள் தாராவின் சார்பாக ஔரங்கசீபின் படைகளைச் சூழ்ந்துகொண்டனர். ஔரங்கசீபின் படைகள் திக்குமுக்காடின. ஆனால், எப்பொழுதும் வெறும் விருப்பிலேயே நம்பிக்கை கொண்டிருந்த தாரா இப்பொழுதும் இமாலயத் தவறு ஒன்றைச் செய்தார். தாமே போரில் முன்னேறுமல் சில வீரர்கள் இறந்துபடுவதைக் கண்டு உதவிசெய்ய நாடியும், யானையின் பிளிற்றின் காரணத்தாலும், கலீலுல்லாகான் என்னும் உபதளபதியின் தவறான ஆலோசனையின் பேரிலும் மையத்தில் இருந்து சற்று விலகிநின்று யானையிலிருந்து இறங்கிப் போர்க்களத்தை விட்டு அகன்றார்.[1] நிச்சயமாக இது இமாலயத் தவறாகும். ஏனெனில், போரின் போக்கை இந் நிகழ்ச்சிதான் மாற்றிவிட்டது. தாராவைக் காணாத படைகள் அனேகமாகத் தாராவை ஔரங்கசீபோ முராதோ கொன்றிருக்கக்கூடும் என்றும், இனிப் போரிட்டுப் பயனில்லை என்றும் ஒரு நிமிடத்தில் தவறான முடிவுக்கு வந்துவிட்டன. அதுமட்டுமன்றி, மிக வெட்கக்கேடானது என்னவெனில், போர்க்களத்திலும் இல்லாமல், 1,000 பிரபுக்களின் படையினருடன் ஆக்ராவை நோக்கி தாரா ஷுக்கோ புறப்பட்டு விட்டார்.

[1] Khafi Khan also says, 'The sight of the ill-timed alarm and of the empty hauda...disheartened the soldiers. The men lost heart in sympathy with their leader and began to think of flight...Dara, beholding the dispersing of his followers and the reverse of his army, prizing life more than the life of a crown, turned away and fled.'... E & D. Vol VII. P. 224.

இதனால் வெறுக்கத்தக்க மன்னிக்கமுடியாத கோழைத்தனம் என்ற ஒன்றினைச் செய்ததாக தாரா ஷுக்கோ உறுதிப்படுத்தி விட்டார். இதனால்தான் கிரீடத்தின்மீது கொண்டிருந்த நம்பிக்கையைவிட உயிரையே மேலாகக் கருதிய 'துரதிருஷ்ட இளவரசர் திரும்பி ஓட்டமெடுத்தார்' என்று அறிஞர் லேன்பூல் கூறுகிறார். (ஆதாரம் பெர்னியர்.)[1] தாரா ஷுக்கோ விடத்தில் படைமாட்சியின் அணிகலன்கள் ஒன்றுமில்லை என்பதற்கு இதைவிடச் சான்றுகள் வேறு என்ன வேண்டும்? 'கூற்றுடன்று மேல் வரினும் கூடி எதிர் நிற்கும் ஆற்றலதுவே படை' என்று வெகு அழகாகப் படை மாட்சியைப் பற்றித் திருவள்ளுவர் கூறியிருப்பதைத் தாரா அறிந்திருக்கவில்லை போலும்! தாரா போர்க்களத்தில் இல்லாமலேயே ஆக்ரா நோக்கி விரைந்தார். தம்மை எதிர்த்து வந்த ஔரங்கசீப், முராத், ஷுஜா ஆகிய பகைவர்களின் போர் வலிமையையும் ஆற்றலையும் தோற்கடிக்கவல்ல தன்மையைத் தாரா பெற்றிருக்கவில்லை என்பதற்குத் தாரா போர்க்களத்தை விட்டு ஆக்ராவிற்கு விரைந்து சென்றதே சாட்சியாகும். அறிஞர் ஸ்மித் கூறியதுபோல 'இந்தப் போர்க்களம் தான் வாரிசுரிமைப் போரை முடிவுக்குக் கொணர்ந்தது.'[2]

## ஆலம்கீர் (A'lamgir)

போரின் திருப்பத்தைக் கண்ட சில தளபதிகள் திடீர் என்று ஔரங்கசீபுக்கு மிகுந்த மரியாதையையும் வணக்கத்தையும் செலுத்த ஆரம்பித்தனர். காற்று எப்பக்கம் வீசுகிறது என்பதைப் பலரும் புரிந்துகொள்ளலாயினர். சூழ்நிலைக்கேற்றவாறு மாறிக்கொள்ள நினைத்தவர்களுள் மீர் ஜும்லாவும் ஜஸ்வந்த்சிங்கும் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர். ஆசிப்கானின் மகனான ஷயிஸ்தாகான் (ஔரங்கசீபின் தாய்மாமன்—ஷாஜஹானின் மைத்துனன்—மும்தாஜ்மஹலின் தம்பி) தம் முதல் காணிக்கையாக ஔரங்கசீபுக்கு வாழ்த்துகளையும் வெகுமதிகளையும் அனுப்பி வைத்தார். அவற்றுள் குறிப்பிடத்தக்கதும், சிறப்பு வாய்ந்ததுமான பரிசு சிறந்த வாள் ஒன்றாகும். அதில் அவர் 'ஆலம்கீர்' (Alamgir) என்ற சொல்லைப் பொறித்து, அதனை வெகுமதியாக அனுப்பி வைத்தார். அடுத்து, இத்தனை காலமும், வாரிசுரிமைப் போரின் போதும் தாராவின் பக்கம்

[1] Lanepoole, Aurangzeb.

[2] V. A. Smith, Oxford History of India.

வெகு வீரத்துடன் போர் புரிந்து தோற்றுப்போன ஜஸ்வந்த் சிங், ஔரங்கசீபின் பக்கம் சாய்ந்து விட்டார். தாராவின் சரிவைக்கண்டு, தமக்கு முன்னமே ஔரங்கசீபிடம் இருந்து வந்த பகையை மறந்து, ஜஸ்வந்த்சிங் ஔரங்கசீபின் பக்கம் சாய்ந்தது நியாயமற்ற செயலாகும்.

## பேரரசர் கைது

தம் கண்ணுக்கு இனிய மகன் தோல்வி கண்டதை அடுத்து ஔரங்கசீபுக்கு உடனே கடிதங்கள் தீட்டினர் ஷாஜஹான். ஆனால், வெற்றி நெருங்கி வருவதையும், தந்தை தம்பால் கொண்டிருந்த உட்பகையையும் ஔரங்கசீப் மறந்துவிட வில்லை. அச் சூழ்நிலையில் ஷாஜஹானுக்குப் பெரியதோர் வாய்ப்பு இருந்தது. என்னவெனில், தாராவின் படைகளுக்கு ஷாஜஹான் தலைமை தாங்கி இருப்பாரேயானல், அவரைக் கண்ட மாத்திரத்திலேயே போர்க்கொடியை உயர்த்திய தலைவர்கள் போரைக் கைவிட்டிருக்கக்கூடும். ஷாஜஹான் அவ் வாய்ப்பையும் இழந்துவிட்டார். இரண்டாவதாக, சாமூகர்ப் போருக்குப் பின்பாவது, தம் படைசூழ ஆணைகளை வெளிப் படுத்தி அரண்மனையிலிருந்து வெளிவந்திருப்பாரேயானல், எல்லோரையும் மன்னிப்பதாக வாக்குறுதி அளித்திருப்பாரே யானல், ஒருவேளை அவர் சொல்லும், தலைமையும் மந்திரம் போலப் பலித்து இருக்கக்கூடும். ஆனல், இந்த இரண்டு சந் தர்ப்பங்களையும் இழந்துவிட்ட பின்னர், ஷாஜஹான் ஔரங்க சீபைக் காணத் துடிப்பதாகக் கடிதம் எழுதியபோது, அதன் உட்கருத்தையும் தந்திரத்தையும் நன்கறிந்த ஔரங்கசீப் தம் தந்தை விரித்த வலையில் விழத் தயாராக இல்லை. முள்ளை முள் கொண்டு எடுப்பது போலத் தந்தையின் வலையில் தாமே விழாமல் தம் மைந்தன் சுல்தானைத் (Sultan) துணிந்து செல்லுமாறு பணித்தார். திருவள்ளுவப் பெருந்தகை கூறியது போல, 'உட்பகை அஞ்சித்தற் காக்க உலைவிடத்து மட் பகையின் மாணத் தெறும்' என்பதைச் செம்மையாக அறிந் திருந்த ஔரங்கசீப் சுல்தானுடன் படைகளை அனுப்பினர். ஔரங்கசீபை எந் நேரமும் கைது செய்யக் காத்திருந்த படைகள் சுல்தானின் படைகளுடன் மோதவே, ஷாஜஹானின் பேரன் சுல்தானே பாட்டனரைக் கைது செய்தார். லேன்பூல் கூறியதுபோல, 'தம் மகனை அழிக்க ஷாஜஹான் விரித்த வலை யில் வயது முதிர்ந்த அரசரே வீழ்ந்துவிட்டார்.'[1] ஷாஜஹான்

[1] Lanepoole, Aurangzeb.

1658ஆம் ஆண்டு ஜூன் மாதம் 18ஆம் தேதி கைது செய்யப்பட்டார். அவர் அரண்மனையிலேயே காவலில் இருந்தார். உடனே ஷாஜஹான் காபூல் கவர்னர் மஹபத் கானுக்கு லாகூர் நோக்கிச் செல்லும் தாராவுடன் காபூலிலிருந்து படையெடுத்து வருமாறு எழுதினார்.

ஷாஜஹானுக்கு வசதிகள்: தந்தையை மகன் உடனே சந்தித்தார். தந்தை-மகன் சந்திப்பு ஏற்பட்டும் சில நாட்களுக்குக் கசப்பு இருந்து வந்தது. ஆனால், தந்தைக்குத் தேவையான எல்லா வசதிகளும் செய்து கொடுக்கப்பட்டன. இதனைக் கைது என்று சொல்வது அவ்வளவு பொருத்தமுடையதாகாது என்று கூறினாலும், ஷாஜஹான் தங்கக் கூண்டில் உள்ள கிளியைப் போன்றிருந்தார். எனினும் வயது முதிர்ந்த குடும்பத் தலைவனுக்கு அளிக்கப்பட வேண்டிய மரியாதைகள் கொடுக்கப்பட்டன. தத்துவ விவகாரங்களில் ஈடுபடவும், ஆத்ம சாந்திக்காகவும் தேவையான வசதிகளும் செய்து கொடுக்கப்பட்டன. கனோஜ் நகரின் சையத் முகம்மது (Syed Muhammad of Kanuj) எனும் தத்துவ ஆசிரியர் ஒருவர் ஷாஜஹானுக்குத் தத்துவ விளக்கங்களை அளித்து இறுதி நாட்கள் வரை ஆத்ம நண்பராக விளங்கினார். ஷாஜஹானே மியான் மீர் (Mian Mir) என்னும் சூஃபி (Sufi) ஞானியின் மானசீகமான சீடராகையால் அவரின் தத்துவ விளக்கங்களைப்பற்றியும் சையத் முகம்மதுடன் தாமே விவாதிப்பார்.[1] ஷாஜஹானுக்கு, மகன் ஔரங்கசீப் தந்தைக்கு வேண்டிய வசதிகள் எல்லாவற்றையும் செய்து கொடுத்தார். ஆனால், விடுதலை ஒன்றை மட்டும் அளிக்கவில்லை. ஔரங்கசீபை வெறுத்து வந்த பெர்னியர் கூட, தந்தையிடத்தில் மகன் காட்டிய அளவு கடந்த மரியாதை முற்றிலும் போற்றற்குரியது என்று குறிப்பிட்டுள்ளார்.[2] இதை லேன்பூல் சுட்டிக்காட்டுகிறார். 1666ஆம் ஆண்டில் ஷாஜஹான் இறக்கும் வரை ஆக்ராவில் காவலில் இருந்தார்.

## பிற நிகழ்ச்சிகள்

ஜூன் மாதம் 25ஆம் தேதி முராத் பக்ஷ் திடீர் என ஔரங்கசீப்மீது சந்தேகக் கண் கொண்டு பார்த்து எதிர்ப்பைத்

[1] Dr. Qanungo—Dara Shukoh Vol. I and Dr. Tara Chand—'Influence of Islam on Indian Culture.'

[2] 'Yet the deposed monarch was otherwise treated with indulgence and respect'—Bernier, 'The Travels'—P. 166 (S. Chand & Co Publication 2nd edn. 1968)

தெரிவிக்கலானர். முராத் பக்ஷ் குடியின்றி, கேளிக்கையின்றிப் போரில் ஈடுபட்டதே மிகவும் ஆச்சரியத்திற்குரியதாகும். எப் போதும்போலப் போர் நிகழ்ச்சிகளுக்கு இடையிலும் முராத் பக்ஷ் குடியிலும், கன்னியர்களுடன் கொஞ்சிக் குலவுவதிலும் மூழ்கியதைக் கண்டு ஔரங்கசீப் மனம் நொந்தார். இவர் அரியணை ஏறினல் இத்துணைப் பெரிய நாடு என்ன கதியாகுமோ என்று ஔரங்கசீபின் உள்ளம் நினைத்து நடுங்கியது ஒருபுறம். அந்தச் சந்தர்ப்பத்தில் இளவரசர் முராத் பக்ஷை எதிர்த்துப் பழைய பகை காரணமாக வஞ்சிக்கப்பட்ட ஒருவரின் மகன் ஔரங்கசீபுக்கு மனுச் செய்திருந்தார். இது, ஔரங்கசீபுக்குப் பழம் நழுவிப் பாலில் விழுந்தது போலாயிற்று. இந்தச் சந்தர்ப் பத்தை ஔரங்கசீப் நழுவவிடாமல் பயன்படுத்திக் கொண்டது முறையாகாது என ஒருவிதத்தில் ஏற்றுக் கொண்டாலும், முராத் பக்ஷின் வாழ்வை இறுதியாக முடித்த விதத்தைப் பற்றிய பலருடைய குற்றச்சாட்டுகள் மற்றொரு விதத்தில் நாம் சிந்தித்ததற்குரியனவாகும். முராத் பக்ஷ் டில்லிக்கு அருகில் 'சலீம்கர்' (Salimgarh) நகரில் அதாவது முகாமிலேயே கைது செய்யப்பட்டார். ஆனல், முராத் பக்ஷ் உடனே கொல்லப்பட வில்லை. கைது செய்யப்பட்டபின்னர் மூன்ருண்டுகள் வரையிலும் குவாலியர் சிறைக்கு மாற்றப்பட்டு, அங்குக் கைதியாக இருந்தார்.

## ஷுஜாவின் முடிவு

இதுகாறும் கிழக்கு எல்லையில் அனுப்பப்பட்ட ஷுஜாவின் படைகள் தம்பி ஔரங்கசீபின் பக்கம் திரும்பின. எனவே, ஔரங்கசீபுக்கு இருமுனைத் தாக்குதல்கள் காத்திருந்தன: 1. மேற்கே தப்பியோடிய தாராவின் எதிர்ப்பு; 2. கிழக்கே ஷுஜாவின் படையின் ஆபத்து. கிழக்கே வங்கத்திலிருந்து முஹமத் ஷுஜா 25,000 துருப்புகளுடன் ஆக்ரா நோக்கி வருவ தாக ஔரங்கசீபுக்குச் செய்தி எட்டியது. 1658 செப்டம்பர் 30ஆம் தேதி லாகூர் நோக்கி விரைந்தார் ஔரங்கசீப். ஷுஜா காசியில் கஜானவிலிருந்து 3 லட்சம் ரூபாயைப் பெற்றுக் கொண்டு ஆக்ராவை நெருங்கினர். சையத் ஆலம் பர்ஹா என் பவர் ஷுஜாவின் ஒரு பக்கத்தின் படைகளுக்குத் தலைமை தாங் கினர். ஔரங்கசீபுக்கு முர்த்துஜா குலீகான் துணை சென்ருர். அலகாபாதின் தளகர்த்தர் காசிம் கானும் ஷுஜாவுடன் சேர்ந்துகொண்டார். இறுதியாகக் கிழக்கே ஷுஜாவைத் துரத்திச் சென்ற பொழுது ஷுஜாவின் படைகளை ஔரங்கசீப் நேரிலேயே எதிர்த்து, காஜ்வாஹா (Khajwaha) என்னுமிடத்தில்

1659ஆம் ஆண்டு, ஜனவரி 7ஆம் தேதி அன்று தோல்வியுறச் செய்தார். இவ் வெற்றியைத் தொடர்ந்து, ஔரங்கசீப் மீர் ஜும்லாவை அனுப்பி வைத்தார். மீர் ஜும்லா டாக்கா வரை (இன்றைய பங்களாதேஷின் தலைநகர்) ஷுஜாப் படைகளை விரட்டி அடித்தபோது, ஷுஜாவே அரக்கான் மலைகளில் ஓடி ஒளிந்துகொண்டார். ஷுஜாவுடன் அவர் தம் குடும்பத்தார் அனைவருமே கூடச் சென்றனர். ஷுஜாவின் தளபதிகளும் ஷுஜாவுக்குத் துணையாகவே சென்றனர். ஷுஜாவின் மகன் புலந்த் அக்தர் (Buland Akhthar) என்பவரே தளபதிகளுள் ஒருவராவார். ஷுஜாவின் வேறு மகன்கள்: 1. மிர்ஜா ஜான் பெக், 2. சையது ஆலம் பர்ஹா, 3. சையத்குலி உண்பேக், 4. மிர்ஜா பேக் ஆகியோர். ஆனால், ஷுஜாவோ, அவருடைய தளபதிகளோ, மகன்களோ எதிர்த்துப் போரிடாததிலிருந்து, ஔரங்கசீபை எதிர்க்கும் திறமையையோ, வலிமையையோ அவர்கள் பெற்றிருக்கவில்லை என்பது தெளிவாகின்றது. சில ஆண்டுகளுக்குப் பின் அரக்கானியர்களே ஷுஜாவையும் அவரது குடும்பத்தினரையும் கொன்றுவிட்டனர் என்ற செய்தியை வ்ங்காளத்திலிருந்த டச்சுக்காரர்களின் குறிப்புகள் மூலம் அறிகின்றோம்.[1] ஆகவே, அண்ணன் ஷுஜாவைத் தம்பி ஔரங்கசீப் கொல்லவில்லை என்பது உறுதியாகின்றது.

## சுலைமானின் முடிவு

தாரா ஷுக்கோவின் மகன் சுலைமான் ஷுக்கோ 1658ஆம் ஆண்டில் வடக்கே காஷ்மீருக்கு ஓடி ஒளிந்து கொள்ள முயன்ற போது, ஸ்ரீநகர் மன்னன் பாதுகாப்பு அளிப்பதாக வாக்குறுதியளித்து ஆசைகாட்டி மோசம் செய்தான். ஆனால், சுலைமான் ஷுக்கோவை 1659ஆம் ஆண்டில் ஸ்ரீநகரின் இளவரசன் கேவலம் சில பொற்காசுகளுக்காகக் காட்டிக் கொடுத்துவிட்டான். சுலைமான் ஷுக்கோ டெல்லிக்குக் கொண்டு வரப்பட்டார். பின்னர், குவாலியர் சிறையில் இரண்டு ஆண்டுகள் வரை காவலில் வைக்கப்பட்டார்.

## தாராவின் முடிவு

பஞ்சாபின் முல்தான்வரை ஓடிச்சென்ற தாரா, சிந்து நதிக் கரையை ஒட்டி 'பக்கர்' கோட்டைவரை சென்றார். ஆனால்,

[1] S. R. Sharma—'The Crescent in India'; The Mughal Empire in India; J. N. Sarkar—A Short History of Aurangzeb; History of Aurangzeb, Vol. II; Manucci—Storia de Mogor, Vol. II.

திடீரென்று தம் மெய்காப்பாளராகப் பணியாற்றிவந்த தாவூத் கானைக் காரணமில்லாமல் வேலையிலிருந்து நீக்கிவிட்டு, அவர் மட்டும் தனியாகத் திரியலானார்; பிறகு சிந்து மாகாணத்தில் தத்தா (Thatta) என்னும் இடத்தைக் கடந்தார். அப்பால் நேரே தெற்கே வந்து, கட்ச் ரான் (Raan of Cutch)பகுதியைக் கடந்தார். பின்னர், அவர் அஹ்மதாபாத் நகரை யடைந்தார்.

அஹ்மதாபாத் கவர்னர் தாராமீது இரக்கம்கொண்டு, படை பொருள் ஆகிய எல்லா உதவிகளையும் அளிப்பதாக வாக்குறுதி யளித்தார். அவருடைய ஆலோசனையின் பேரில் தாரா சூரத் நகருக்குச் சென்றிருப்பாரேயானால், இவருடைய தலைவிதி மாறி யிருக்கக்கூடும்; அல்லது படைத் துணை கொண்டு தக்காணத்திற்கு வந்திருப்பாரேயானால், அனேகமாக ஔரங்கசீப் அஞ்சி நடுங்கக்கூடிய வகையில் உரமிக்க, வலிமைமிக்க எதிரியாக மாறியிருக்கக் கூடும். தாராவுக்கு வெற்றி வாய்ப்புகள் மேலோங்கியே இருந்தன. அவர் ஆளுநர் ஷாநவாஸ்கான் காட்டிய வழியை விடுத்து, மார்வாரின் ஜஸ்வந்த்மீது நம்பிக்கை கொண்டு, கிழக்கே அஜ்மீர் நோக்கிச் சென்றார். ஆனால், மார்வாரின் ராஜா ஜஸ்வந்த்சிங் தம் செஞ்சோற்றுக் கடனை மறந்து, ஔரங்கசீபுடன் இணைந்துவிட்டதைத் தாரா மறந்து விட்டார். இந் நிலையில், அவரது உதவியை நம்பித் தாரா சென்றது, புலிக்கு அஞ்சி ஓடிய ஒருவன் பாழும் கிணற்றில் குதித்தபொழுது அங்கு அரவம் இருப்பதைக் கண்டு நடுங்கும் கதை போலாயிற்று.

## தேவ்ராய்ப் (Deorai) போர்—ஏப்ரல் 12, 1659

அஜ்மீருக்கு அருகில் ஜஸ்வந்த்சிங் ஔரங்கசீபின் படையுடன் சேர்ந்து கொண்டு, நேரே தாராவை எதிர்த்தார். 1659ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 12 முதல் 14ஆம் தேதி வரை மூன்று நாட்களுக்குப் போர் நீடித்தது. அடுத்து அடுத்துப் பல தோல்விகளைக் கண்டுவந்த தாரா ஒவ்வொரு நாளிலும் ஒரே ஒரு வேளை உணவும் கொஞ்ச நீரும் மட்டும் பருகுவதும், தரையில் படுத்து உறங்குவதும், மனத்தில் கவலைச் சுமையைக் கொண்டிருப்பதும் கண்ணீர் உகுக்கும் காட்சிகளாக அமைந்தன. தியாகத் தழும்புகளைப் பெற்றுவந்த தாரா, தேவ்ராய்ப் போரிலும் வழக்கம் போலக் கண்டது தோல்வியே. தாராவின் படைகள் சிதறடிக்கப்பட்டன. தோல்வித்துயர் ஆறாமல், ஆற்றிக்கொள்ளவும் முடியாமல், அவர் மீண்டும் தெற்கே சென்று, கட்ச் ரான் வழியாகவே நகரலானார். அப்போதுதான் சந்தர்ப்ப வசமாக, டாக்டர் பெர்னியர் தாராவைச் சந்தித்தார்.

## தாரா - பெர்னியர் சந்திப்பு

தாராவும் பெர்னியரும் ஒருவரை ஒருவர் சந்தித்துக் கொண்டபோது இருவரும் பிரமித்தனர். எல்லோருடைய கண்களிலும் நீர் மல்கியது. அனைவருடைய உள்ளங்களிலேயும் ஒரு விநாடி கடந்த கால எண்ணங்கள், சிதைந்த கனவுகள், அடுக்கு அடுக்காக வந்த துயரங்கள் நினைவு வந்து, பேச்சற்றவர்களாக ஆக்கி விட்டன; தம்மை நொந்து, விதியை நினைந்து உருகிக் கண்ணீர் விட்டனர். தாராவுடன் மருத்துவர் இல்லாத காரணத்தால், பெர்னியரைத் தம்முடனே வருமாறு தாரா வேண்டிக் கொண்டதற்கிணங்கப் பெர்னியரும் இசைந்தார். பெர்னியர் கூறுகிறார்: 'நான் தாராவுடன் மூன்று நாட்கள் தங்கி இருந்தேன். தாராவை எதிர்பாராத விதமாகச் சந்தர்ப்ப வசமாகச் சந்திக்க நேர்ந்தது; அவருடன் மருத்துவர் எவரும் துணையில்லாததால், என்னை மருத்துவர் என்ற முறையில் தம் கூடவே வருமாறு அவர் வேண்டிக் கொண்டார். மறு நாள் பொழுது புலர்ந்தது; கவர்னரின் செய்தி எங்களுக்கு அறிவிக்கப்பட்டது. (அஹ்மதாபாதில் நாங்கள் தங்கி இருக்கக்கூடாது; உடனே வெளியேற வேண்டும் என்ற செய்தி.) செய்தியைக் கேட்டுப் பெண்கள் அலறித்துடித்தனர். அவர்களின் ஓலமும் ஒப்பாரியும் எல்லோருடைய கண்களிலும் கண்ணீரை வரவழைத்தன. குழப்பத்தில் எல்லோரும் ஆழ்ந்தவர்களாய், எந்த உத்தரவைக் கொடுக்க வேண்டும், எப்போது யாது செய்யவேண்டும் என்பதை யாரும் அறியாதவர்களாய்—ஊமையர்களாய்—நாங்கள் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டோம். அவருக்கு (தாரா) என்ன கதி ஏற்படுமோ? அவர் எங்கே செல்வாரோ?' என்று கூறி, நம்மையும் அறியாமலே கண்ணீரை உகுக்குமாறு செய்கிறார் டாக்டர் பெர்னியர்.[1] நெஞ்சைப் பிளக்கும் பெர்னியரின் இவ் வார்த்தையால் உண்மையில் தாராமீது எத்தனை வெறுப்புக் கொண்டவர்களாயினும், நிச்சயமாக அவ்வெறுப்புக் கரைந்து தாராமீது இரக்கம் காண்பித்தே தீர்வர். ஏனெனில், தாரா கண்டுவந்த எல்லையற்ற தோல்விகளுக்கும் தொல்லைகளுக்கும் அவர் பிராயச்சித்தம் செய்துவிட்டார். இயற்கையின் ஆணைபோலும்! தாரா தொடர்ந்து துயரங்களையே கண்டு வந்தார். இவற்றிற்கெல்லாம் சிகரமாக அமைந்தது ஜீவன்கானின் துரோகம்.

1 Bernier, 'The Travels'— Also quoted by Lanepoole in his 'Aurangzeb'.

## ஜீவன்கானின் துரோகம்

புலியிடம் தப்பிச் சென்றவன் பாழும் கிணற்றில் குதிக்க, அங்குள்ள பாம்பிடம் அகப்பட்டதுபோல, ஜஸ்வந்த்சிங், தேவ் ராய்ப் போர் ஆகிய ஆபத்துகளிலிருந்து தப்பிய தாரா இறுதியாகத் துரோகி ஜீவன்கானினுல் காட்டிக் கொடுக்கப்பட்டார். ஜீவன்கான் தாராவையும், அவர் மகன் சிபிர் ஷுக்கோவையும் ஔரங்கசீபின் அவைக்குக் காவலுடன் இழுத்துச்சென்று சேர்ப்பித்தான். இயற்கையின் நீதியை எவராலும் வெல்ல முடியாது. நிச்சயமாக, இயற்கை நீதி தவருமலும் தக்க அளவிலும் வந்தே தீரும். ஜீவன்கானின் துரோகத்தை அறிந்த மக்களே ஜீவன் கானைக் கல்லால் அடித்துக் கொன்றனர். மனுச்சி கூட (Manucci) இதை உண்மையான செய்தி எனத் தம் குறிப்புகளில் சுட்டிக்காட்டியுள்ளார்.[1]

## தாராவின் இறுதி நாட்கள்

கைது செய்யப்பட்ட தாரா ஷுக்கோ நகரத்தின் தெருக்களில் வலம் அனுப்பப்பட்டார். 1659ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதத்தில் கூடிய 'உம்ரா' என்னும் பிரபுக்களின் சபை தாரா மீது குற்றம் சாட்டியது. குற்றச்சாட்டுகளுக்கு ஔரங்கசீபின் தூண்டுதல் இருந்திருக்கக்கூடும். ஆனுல், அறிஞர் வின்சென்ட் ஸ்மித் கூறுவதுபோல, 'ஔரங்கசீப் இங்கிலாந்து மன்னன் 8ஆம் ஹென்றியைப்போலச் சட்டப்படி எதையும் செய்வதில் நம்பிக்கை கொண்டவர். சட்டத்திற்கு முரணுக எதனையும் செய்து அறியாதவர். காரசாரமான விவாதங்களுக்குப் பிறகு உம்ராக்கள் (Omrahs) சபையும் உலமாக்களும் தாராவைக் குற்றவாளி எனத் தீர்ப்பளித்தனர்.'[2] நாட்டையும் பேரரசரையும் எதிர்த்துப் புரட்சிக் கொடி எழுப்பியது குற்றமெனில், மூவரும் தண்டிக்கப்படக் கூடியவர்களே. ஆனுல், இவற்றை மட்டும் உம்ராக்கள் குற்றமெனக் கருதியதுடன் நில்லாமல், அரசியல் காரணங்களுக்கென்றும் குறிப்பாகத் தாராவின்மீது மரண தண்டனை விதித்தனர். இப்படி விதித்தது மதக் காரணமாகத்தான் என்று கூறுவது தவறு என்பது இங்குக் குறிபபிடத் தக்கதாகும். சட்டப்படி தாராவுக்கு அளிக்கப்பட்ட தண்டனை நிறைவேற்றப்பட்டது. ஆனுல்,

[1] Manucci—'Storia de Mogor' Vol I &II— Also quoted by V. A. Smith—Oxford History India.

[2] Vincent Smith—Oxford History of India, New Edn., Part II, by Harrison.

17ஆம் நூற்றுண்டின் சிறந்த தத்துவஞானி ஒருவரை இந்தியா இழந்துவிட்டது.[1]

## திறனாய்வு (Criticism)

'ஔரங்கசீப் இரக்கமின்றித் தந்தையைக் கைது செய்து, அண்ணன்மார்களையும் தம்பியையும் கொன்று குவித்து, அவர்களது சாம்பல்மேட்டின்மீது வெற்றிக் கொடி நாட்டித் தகாத முறையில் ஆட்சியைக் கைப்பற்றினர்' என மனுச்சி, பெர்னியர் போன்றவர்கள் ஔரங்கசீப்மீது குற்றஞ் சுமத்துகின்றனர். இது எந்த அளவுக்கு உண்மைக்கு மாருன தென்பதை நாம் முன்னரே பார்த்துவிட்டோம். ஆயினும், ஆய்வுக்கண் கொண்டு மீண்டும் ஒருமுறை பார்ப்பது மிகவும் அவசியமாகிறது.

பெர்னியர் தாரா ஷுக்கோவின் செல்லமான மருத்துவர். மனுச்சிக்கு ஔரங்கசீபைக் கண்டால் வேப்பங்காயாய்க் கசக்கும். எனவே, பொதுவாக இவர்களுடைய ஆதாரங்களை உரைகல்லில் உரைத்துப் பார்த்துத்தான் ஏற்கவேண்டும்.

(1) தாரா ஷுக்கோ கொல்லப்பட்டார். ஆனல், ஔரங்கசீப் அவரைக் கொல்லவில்லை. மாருக, பிரபுக்கள் சபைதான் தாரா ஷுக்கோ மீது குற்றம் சுமத்தித் தண்டனை விதித்தது. இது ஔரங்கசீபுக்கு ஒரு கருவிபோல் உதவியதே ஒழிய, இது ஔரங்கசீபின் தூண்டுதலினுலோ, அவர் பிறப்பித்த ஆணையினுலோதான் நடந்தது என்பதற்கு ஆதாரம் இல்லை. தாராவின் கதியையும் விதியையும் நினைத்துப் பார்க்கும்போது நிச்சயமாக நமது மனம் கரைந்து உருகத்தான் செய்கின்றது. ஆனல், தாராவின் குணநலன்களை நம் கருத்தில் வைத்துப் பார்க்கும்போது, ஔரங்கசீப் மட்டும் ஆற்றல் அற்றவராக இருந்திருப்பாரேயானுல், தாரா ஔரங்கசீபுக்கும், பிறருக்கும் இது போன்ற தண்டனையைத்தான் அளித்திருப்பார் என்பதில் ஐயம் எதுவும் இல்லை.

(2) கிழக்கே ஓடிப் போன ஷுஜா அரக்கானியர்களால் கொல்லப்பட்டார். தாராவைச் செய்தது போல, ஷுஜாமீது பழிசுமத்திய நிலையில் ஔரங்கசீப் கொல்லவில்லை. ஷுஜாவின் இறப்புக்கும் ஔரங்கசீபுக்கும் யாதொரு தொடர்பும் இல்லை.

[1] Prof. R. Sathianathier—History of India, Vol II.

(3) முராத் பக்ஷ் குவாலியர் சிறைக்கு மாற்றப்பெற்ற பின், மூன்றாண்டுகள் வரை வெஞ்சிறையில் உழன்றார். பின்னர், அவர் கொலை செய்த, வஞ்சிக்கப்பட்டவனின் மகன் ஔரங்க சீபுக்கு விடுத்த வேண்டுகோளின்பேரில், மீண்டும் ஒரு தடவை பிரபுக்கள் சபை முராத் பக்ஷின் மீது கொலைக் குற்றம் சாட்டி, பதிலுக்குப் பதிலாக முராத் பக்ஷுக்குத் தண்டனை வழங்கியது. ஔரங்கசீபுக்கு முராத் பக்ஷ் பெரிதும் உதவியதால், இவர் தம் தம்பியைக் காப்பாற்றியிருக்க வேண்டும். ஆனால் கூடி, கேளிக்கைகள் மன்னருக்கு அப்பாற்பட்டவை என்று கருதியத னாலும், குடும்பத்தின் காளான் முராத் பக்ஷ் எனக் கருதியத னாலும், ஔரங்கசீப் அத் தண்டனையை மாற்றாமல், ரத்து செய்யாமல் ஏற்றுக் கொண்டார். இது ஔரங்கசீபுக்குச் சாதக மாக இருந்தது. ஆனால், தாராவைப் போன்று முராத் பக்ஷ் அவ்வளவு பெரிய பகைவன் அல்லன் என்பதனால் ஔரங்கசீப் முராத் பக்ஷை மன்னித்து விடுவித்து இருக்கலாம்.

(4) ஔரங்கசீப் தம் தந்தையின் இறுதி நாட்களில் அவரைக் காவலில் வைத்ததைப் பலரும் தவறு எனக் குற்றம் சாட்டுகின்றனர். ஆனால், ஷாஜஹான் செய்த தவறுகளை நாம் மறந்து விடுகிறோம். மாறாக, ஔரங்கசீப் நினைத்திருந்தால் அச் சூழ்நிலையில் தந்தையைத் தம் வாளுக்கோ, தந்திரத் துக்கோ இரையாக்கி இருக்கமுடியும். ஆனால், யாரும் நேரிடை யாகவோ, மறைமுகமாகவோ தம் தந்தைக்கு விஷம் கலந்து கொடுத்து விடாமல் ஔரங்கசீப் தம் தந்தையைக் காத்து வந்ததை நிச்சயம் போற்றத்தான் வேண்டும்; நினைத்திருந் தால் அவரே இம் மாதிரி முயற்சிகளை மேற்கொண்டிருக்கலாம்; யாரும் தடுத்திருக்க முடியாது. ஆனால், மாறாக, ஷாஜஹானுக் குத் தொடர்ந்து பல பணிவிடைகளைச் செய்யச் செய்தார். அரண்மனையிலேயே காவலில் வைக்கப்பட்டிருந்தாலும், ஷாஜ ஹான் ஆளும் பொறுப்பை மட்டுமே தான் இழந்தார். எனவே, ஷாஜஹான் தங்கக் கூண்டில் வாழ்ந்து வந்த ஒரு கிளியானார்.

(5) வெறும் விருப்புகளிலும் வாய் வீச்சுகளிலும் புகழ் பெற்ற தாரா ஆட்சிக்கு வந்திருந்தாலும், பிற சகோதரர்கள் மீது சினம் கொண்டு வஞ்சம் தீர்த்திருப்பார் என்பதில் சந்தேகமே இல்லை. அவருடைய வீழ்ச்சிக்கு அவருடைய சூழ்நிலையைவிட அவருடைய குணநலன்களே காரணமாக இருந்தன. தந்தை யிடம் செல்வாக்குப் பெற்றிருந்ததன் காரணமாகச் செருக்கும், அளவு கடந்த விருப்பும் அவரிடம் இருந்தன. அவர்

பெற்றிருந்த கோழைத்தனத்திற்கும், விஷமத்தனத்திற்கும் ஔரங்கசீப் பொறுப்பாக முடியாது. வீர மரணத்தை விரும்பாத தாரா—உயிருக்கு அஞ்சி ஓடிய தாரா தோல்விகளைக் கண்டதில் வியப்பென்ன இருக்க முடியும்? 'கால்களின் நுனியில் நடப்பவன் வேகமாக நடப்பதில்லை, செய்து காட்டுவதாக வீரப்புப் பேசுபவன் செய்து முடிப்பதில்லை' என்பது சீனப் பழமொழி.[1]

(6) முராத் பக்ஷ் ஒரு மிடாக் குடியர்; கயமைக்கும் ஓர் அளவு உண்டு. அறத்தை மீறுபவர்கள் நாட்டைக் காக்கும் அறங்காவலர்களாக எவ்வாறு இருக்க முடியும்? பாலுக்குப் பூனை காவலா? பல ஆண்டுகளுக்கு முன் நடந்த கொலை நிகழ்ச்சிக்கு வஞ்சிக்கப்பட்டவன் இப்போது வஞ்சித்தது உண்மைதான். ஆனால், இது இயற்கையின் திருவிளையாடலாகும்.

(7) மத்திய கால இந்தியாவில் 'உம்ராக்கள்' என்னும் சபையின் அரசியலமைப்பின் இடத்தைப் பற்றிய ஒரு விளக்கம்: அமீர்—(ஒருமை)=பிரபு, உம்ரா—(பன்மை)= பிரபுக்கள். இச்சபை இங்கிலாந்தில் உள்ள பிரபுக்கள் சபை போன்று (House of Lords and Privy Council) மன்னருக்குச் சம அந்தஸ்துப் பெற்றிருந்த வலிமைமிக்க சபையாகும். நிச்சயமாக, இச் சபை சமித்தியை (Samithi)விடப் பலம் வாய்ந்தது. இச் சபையின் வலிமைக்குரிய மூலகாரணம் முகலாய அரசியலமைப்பின் மூலவேர் 'மன்சப்தார்' முறையில் அடங்கி இருந்ததுதான். மன்சப்தாரி முறை ராணுவ-நிலப் பிரபுத்துவ முறையாகும். இச் சபையில் மன்சப்தார்களைப் போன்றே உலமாக்களும் (மார்க்க அறிஞர்கள்) இடம் பெற்றிருந்தனர். எனவே, வலிமை பொருந்திய இச் சபை, மாறிவரும் சூழ்நிலையைக் கண்டு, நடுநிலைமையில் இருந்து பிறழ்ந்து, அரியணை ஏறிய பேரரசருக்கு மத்தளம் தட்டிய தென்றால், ஔரங்கசீப் எவ்வாறு பொறுப்பாவார்?

(8) இறுதியாக, ஷாஜஹானே இந்தச் சூழ்நிலைக்கு உண்மையான பொறுப்பாளர். 'ஷாஜஹான் நாமா' வின் ஆசிரியர் இனயத்கானும் (Inayath Khan) இதற்கு ஷாஜஹான் முழுப்பொறுப்பு என்று சாற்றுகின்றார். ஏனெனில், தந்தை தம் மகனுக்கு ஆற்ற வேண்டிய கடமையைச் செய்யத் தவறி விட்டார். தாராவைப் பொறுத்தவரையில் அவரை அவையில் முந்தி இருக்கச் செய்தார்; தம் சார்பாக ஆணைகள்

[1] Arnold Toynbee-A Study of History. D. C. Somerwell abridged edition quotes the proverb.

இடவும் ஒப்பினர்; ஆனால், தாராவைக் கோழையாக்கி விட்டார். ஷாஜஹானே தம் தந்தையை எதிர்த்துநின்ற வரலாறு தம் பிள்ளைகளுக்கு முன்மாதிரியாக அமைந்து விட்டது. தம் தந்தை ஜஹாங்கீர் தம்மை மத்திய ஆசியப் பகுதிக்குச் செல்லுமாறு பணித்த போது எதிர்த்தவர், தம் பிள்ளையை அதே பணியைச் செய்யுமாறு வற்புறுத்தினர் எனில், எவ்வாறு அது முறையாகும்?

பிள்ளைகளுக்கிடையே தம்மை யறியாமலே பேத உணர்ச்சியை வளர்த்துவிட்டார். 'அமலெ சாலிஹ்' என்னும் நூலின் ஆசிரியர் முஹம்மத் சாலிஹ் கம்பு என்பவர் இதனை உண்மையென்று சுட்டிக்காட்டியுள்ளார். மூத்தவருக்குச் சலுகை காட்டினர்; இளையவர்களை மறந்தார். ஔரங்கசீபைத் தண்டிக்க எண்ணி, கைது செய்யக் கருதி, வஞ்சக வலையை விரித்தார். அவரே அவ் வலையில் வீழ்ந்துவிட்டார்.

(9) பெர்னியரின் கூற்றை இங்கு உற்று நோக்குவது மிகவும் பொருத்தமுடையதாகும்: 'என் வாசகர்கள், இப்பொழுது ஆளும் முகலாய (மன்ன)ர் ஆட்சியைக் கைப்பற்றிய விதத்தைக் குறை கூறியுள்ளனர் என்பதில் சந்தேகமில்லை. ஏனெனில், இவர் கையாண்ட முறைகள் உண்மையில் நியாயமற்றனவும் கொடுமை மிக்கனவும் ஆகும். ஆனால், நாம் ஐரோப்பிய அரசர்களுக்குப் பொருந்தக் கூடிய முறைகளின் அடிப்படைகளை இவருக்குப் பொருத்திப் பார்ப்பது நியாயமானதன்று. நம் உலகில் (ஐரோப்பா) நம் பகுதிகளைப் பொறுத்தவரை, வாரிசுரிமை மூத்த மகன்பால் சென்று அமையவேண்டும் என்பதைத் திட்டவட்டமாகச் சட்டங்கள் ஏற்றுக் கொண்டுள்ளன. ஆனால், இந்துஸ்தானத்தைப் பொறுத்தவரை, ஆளும் உரிமையை இறந்த மன்னரின் பிள்ளைகள் எப்பொழுதுமே வழக்காடியே பெற்றுள்ளனர்... நாட்டின் சூழ்நிலை, பிறப்பு, கல்வி, அறிவு ஆகியவை எல்லாம் ஔரங்கசீபின் நடவடிக்கைகளுக்கு உதவவில்லை என்பதை அறிந்தவர்களும் இந்த இளவரசர் ஆழ்ந்த அறிவும் மிகச்சிறந்த அரசியல் ஆற்றலும் பெற்ற மாபெரும் மன்னர் என்பதை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும்.'[1]

பெர்னியரின் கூற்றிலிருந்து ஓர் உண்மை தெளிவாகின்றது. அது, வாரிசுரிமைப் போர் உலக அரசியல் வாழ்வில் இயற்கையானதென்பதாகும். கௌடில்யரின் மூலக் கொள்கையான

[1] Bernier's 'The Travels' quoted. Lanepoole's-Aurangzeb.

'எவ்வாருயினும்—வெல்க'[1] என்பதைவிட, ஆட்சியைக் கைப் பற்றும் முறையில் கூடிய வரையில் அறவழிகளையும் பின்பற்ற வேண்டும் என்று ஔரங்கசீப் கருதி இருக்கவேண்டும். இதனையே பெர்னியர் மறைமுகமாக ஐரோப்பியர்களின் நிலை வேறு, இந்தியர்களின் நிலை வேறு என்று சுட்டிக்காட்டுகிருர்.

(10) ஜஸ்வந்த்சிங் வெகு சீக்கிரத்தில் தாராவை விட்டு விலகி ஔரங்கசீபின் முகாமிற்கு மாறினுர். ஔரங்கசீபுக்கு இதனுல் ஏற்பட்ட வலிமையையும், ஜீவன்கானின் துரோகச் செயலையும், ஸ்ரீநகர் அரசனின் துரோகத்தையும் நாம் மறந்து விடுவதற்கில்லை. ஆனுல், ஔரங்கசீப் உண்மையில் இரக்க மற்ற நெஞ்சுடையவராக இருந்திருப்பாரேயானுல், தம் குடும்பத்திற்குத் தீங்கிழைத்த ஜீவன்கானை மக்கள் கல்லால் அடித்துக் கொன்ற செய்தியைக் கேட்டபொழுது மகிழ்ச்சி அடைந்திருக்க மாட்டார். ஜீவன்கான் தமக்கு உதவி புரிந் திருந்தும், வாளா இருந்திருக்க மாட்டார். எனவே, ஔரங்கசீபைப் பொறுத்தவரை, ஜீவன்கானுக்கு மக்கள் அளித்த தீர்ப்பு நியாயமானதே என்று அவர் கருதினுர்.

## தாராவின் தோல்விக்குக் காரணங்கள்

(1) மிக இரத்தினச் சுருக்கமாகப் பேராசிரியர் ஜாதுநாத் சர்க்கார் தாராவின் தோல்விக்குக் காரணங்களை ஒரே வாக்கி யத்தில் அடக்கியுள்ளார்: 'அவர் தந்தையின் அளவுகடந்த அன்பு அவருக்குத் (தாரா) திட்டமான தீமையில் முடிந்தது.'[2] உண்மையில் அளவுகடந்த பற்றுக் காரணமாகப் பிறபிள்ளைகள் பெற்ற போர்ப் பயிற்சி, ஆற்றல், நிதான புத்தி, நிர்வாகத் திறன் ஆகியவற்றை எல்லாம் தாராவினுல் பெறமுடியவில்லை. காண்டஹாருக்குச் சென்று தோல்விகண்டு திரும்பிய ஒரு நிகழ்ச்சியைத் தவிர, தாரா வேறு எந்தப் போரிலும் ஈடுபட்டு வெற்றி பெற்றதாக வரலாற்றுக் குறிப்புகளே இல்லை.

(2) அரண்மனைப் பறவையாகவும், சுதந்திரப் பறவையா கவும் காலத்தைக் கழித்தமையால், வெளி மாகாணங்களுக்குச் சென்று நிர்வாகத்திறனை வளர்த்து மன்னராவதற்குரிய பயிற்சி களைப்பற்றி அவர் நினைத்துக்கூடப் பார்த்ததில்லை.

[1] K. A. Nilakanta Sastri-The Age of Nandas & Mauryas-Chapter on Artha Sastra - Also Tamil Translation of Artha Sastra 'Excuses on Artha Sastra. Pantithamani M. Kathiresan Chettiar.

[2] Sir. J. N. Sarkar -A Short History of Aurangzeb.

(3) இந்து, முஸ்லிம் துறவிகளிடத்தில் பெருத்த நம்பிக்கை கொண்டிருந்ததால் அவர்களுடைய தத்துவங்கள், இலக்கிய வேதாந்த சித்தாந்தங்கள் தாராவை வெகுவாகக் கவர்ந்தனவே யொழிய, ஆட்சிக்குரிய இலட்சணங்களை அவர் வளர்த்துக்கொண்டதாகத் தெரியவில்லை. அதிலும் குறிப்பாகத் துறவறத்தை இஸ்லாம் தடைப்படுத்தி இருக்க, நிர்வாணக் கோலமாக அலைந்து வந்த 'சர்மத்' (Sarmad) எனப்படும் முகம்மது சையது என்னும் நிர்வாணப் பக்கீருக்குத் தாரா வெகுவாக ஆதரவளித்தது அக் கால இஸ்லாமிய அறிஞர்களைத் திடுக்கிடச் செய்தது. எனவே, தம் சமயத்திற்கு மாறுகக் கருத்துகளை ஏற்றும், ஒழுகியும், பரப்ப முயன்றவும் பொழுது தாரா அவ்வறிஞர்களின் சினத்திற்கும் எதிர்ப்புக்கும் ஆளாகியதில் வியப்பில்லை. இதைவிட மிக முக்கியமான காரணம், ஔரங்கசீப் சர்மதின் அரசியல் செல்வாக்கைக் கண்டு அஞ்சினுர்.

(4) மனிதர்களைச் சந்தர்ப்பச் சூழ்நிலைகளிலும் இடுக்கண்களிலும் ஆய்ந்து பார்த்து, நல்லவர்களைத் தெரிந்தெடுக்கும் தகுதி பெற்றவரல்லர் தாரா. இவருடைய செல்வ நிலையும், ஷாஜஹானை அடுத்து அனேகமாகத் தாமே பேரரசராக உயருவார் என்ற நினைப்பும், அதனுல் எழுந்த செருக்கும் இவரிடம் எஞ்சியிருந்த சில நல்ல ஆதரவாளர்களையும் விரட்டியடித்தன. தாரா ஆட்களை எடைபோட்டு அறியும் திறமைசாலி அல்லர்; குண நலன்களை யறிந்து நல்லோர்களையும் உயர்ந்தோர்களையும் அணைத்து வயப்படுத்தும் ஆற்றல் பெற்றவருமல்லர்.

(5) திட்டங்களைத் தீட்டுவதிலும் அவர் வல்லவரல்லர்; இங்ஙனமே அவற்றைச் செயல்படுத்தும் பொழுது எதிர்ப்படும் சிக்கல்களை அறுத்து வெற்றி காணும் துணிச்சல் உடையவரும் அல்லர். தாரா சிறந்த அன்புள்ளம் கொண்ட கணவர்; பாசமுள்ள தந்தை; கடமை உணர்ச்சியுடன் தொண்டாற்றும் மகன்; ஆனுல், கடினமான காலங்களில் சமாளித்து மக்களை ஆள முடியாமல் தோற்ருர்; எனவே, போர்கள் மலிந்த மத்திய காலத்தில் போர் ஆற்றலுமில்லாத, பயிற்சியையும் பெற்றிராத, ராணுவ நடவடிக்கைகளை மேற்கொள்ளாத தாரா ஷுக்கோ, முற்றிலும் சிறப்பான பயிற்சிகளையும் பெற்று, மகத்தான வெற்றிகளையும் கண்ட தம்பியை வெல்வது எவ்வாறு முடியும்?

(6) அனேகமாக, தாரா சாமூகர்ப் போரில் யானையிலிருந்து கீழே இறங்கி ஆக்ராவுக்குத் திரும்பாதிருப்பாரேயானுல், அவர்

வெற்றி பெற்றிருக்கக் கூடும் என்று சிலர் கூறுவர். ஆனால், இது 'இருக்குமேயானால்'—'ஆனால்' என்ற நிலையே ஒழிய, உண்மை அதுவன்று. எகிப்திய அழகி கிளியோபாத்ரா அழகாக இல்லாதிருந்தால் அனேகமாக ஜூலியஸ்ஸீஸரும், ஆக்டேவியஸ் ஸீஸரும் அவள் மீது காதல் கொண்டிருக்க மாட்டார்கள், ரோமானியப் பேரரசும் பிளவுபட்டிருக்காது, வீழ்ந்திருக்காது என்பதைப் போன்றதுதான் இதுவும். எனவே, அவர் போரிலிருந்து தப்பிய நிகழ்ச்சி ஒன்றே தாரா விழுப்புண் காணாதவர் என்பதை நிரூபிக்கின்றது. தாராவுக்கு உயிர் சர்க்கரைப் பொங்கல்; மயிர் நீப்பின் வாழாத மானல்லர் அவர். சாமூகர்ப் போரில் தோற்றார், ஓடினார்; எனவே, அவர் இறுதியாக ஜீவன் கான் காட்டிக் கொடுக்கும்வரை எதிர்த்து, வாழ்வு அல்லது சாவு என்ற நிலையை மேற்கொண்டதாகத் தெரியவில்லையே!

(7) ஔரங்கசீபுக்குச் சாதகமாக உலமாக்களும், அமீர்களும் இருந்தனர்; இவர்கள் தாராவை எதிர்த்தனர். அன்புள்ளம் கொண்ட தாரா வைதிகர்களைப் பகைத்துக் கொண்டதனால் தோற்றுப் போனார் என்று சொல்லப்படுகிறது. ஆனால், உண்மை என்னவெனில், விளையும் பயிர் முளையிலே தெரியும் என்பதைப்போல, உலமாக்களின் அமீர்களின் உதவியுடனே தாரா ஆட்சிக்கு வந்திருப்பினும், ஔரங்கசீப் ஆட்சி புரிந்தது போல 50 ஆண்டுகளுக்காவது முகலாயப் பேரரசு நீடித்திருக்குமா என்பது சந்தேகத்திற்குரியதே.

(8) சுருக்கமாகக் கூறினால், தாராவின் குணநலன்களே அவருக்குப் பகையாக அமைந்தன. எல்பின்ஸ்டன் (Elphinstone) கூறியதுபோல, 'தாரா கபடமற்ற, வெள்ளை உள்ளம் கொண்ட இளவரசர்; செலவு செய்வதில் கொடைவள்ளல்; கருத்துகளில் தாராளம் கொண்டவர்; பகைமையில் வெளிப்படையானவர்; ஆனால், அவசர புத்தியும், விவேகமற்ற தன்மையும் படைத்த நிதான நோக்கில்லாதவர்.'[1] இஸ்லாமிய கலைக் களஞ்சிய ஆசிரியர் கூறியதுபோலத் தாரா ஷுக்கோ பண்பு, செயல்கள், கொள்கைகள், எண்ணங்கள் ஆகியவற்றில் இங்கிலாந்தின் முதலாம் சார்லஸை ஒத்துள்ளார்.[2] தாராவின் தோல்வியையும், இறுதி நாட்களையும் முதலாம் சார்லஸின் இறுதி நாட்களுடன் ஒப்பிட்டால், ஔரங்கசீபை ஆலிவர் கிராம்வெல்

[1] M. Elphinstone,-History of India-Hindu & Mohammadan Periods, Kitab Mahal Publications.

[2] A. A. Macdowel in Encylopaedia of Islam-Vol I, Letter-'Dara Shukoh.'

லுடன் ஒப்பிடுவது மிகவும் பொருத்தமாகும். இதே கருத்தையே அறிஞர் லேன் பூல் என்பாரும் கூறுகிறார்: 'எவ்வாறு கிராம்வெல் வெறும் வார்த்தைகளிலோ பெயர்களிலோ நம்பிக்கை வைக்காமல் தம்மையே இறைவனின் பணிக்கு அர்ப்பணித்துக் கொண்டு மக்களுக்குச் சேவை புரியும் கருவியாகத் தம்மைப் பயன்படுத்தினாரோ, அதுபோன்றே ஔரங்கசீபும் மக்களுக்குச் சேவை செய்வதும், இறைவனுக்குப் பணி செய்வதும் தம் கடமையெனக் கொண்டார்.'[1] கலைக்களஞ்சிய ஆசிரியரின் கருத்து: 'அவர் (தாரா) ஔரங்கசீபுக்குச் சரியான இணையல்லர். என்னைப் பொறுத்தவரை அவர் முதலாம் சார்லஸை ஒத்துள்ளார். அவரது தலைவிதியிலும் அவரையே ஒத்துள்ளார்.'

## ஔரங்கசீபின் வெற்றிக்குக் காரணங்கள்

1) ஷாஜஹானின் திறமையின்மையும், அவர் இழைத்த தவறுகளும் ஔரங்கசீபின் வெற்றிக்கு முதல் கராணமாகும்.

2) ஔரங்கசீபின் போராற்றல், அபாரமான திறமை, எதிலும் துணிவு, திடச் சித்தம், கலங்காத உள்ளம், நிர்வாகத் திறமை ஆகியவை இரண்டாவது காரணமாகும்.

3) ஔரங்கசீபின் பீரங்கிப் படைகளும், அப் படையை அவர் நடத்திச் சென்ற விதமும் அவருக்கு வெற்றியை நல்கின. மேலும், முராத் பக்ஷின் படைகளும் ஔரங்கசீபின் வெற்றிக்குத் துணைபுரிந்தன.

4) மாறாக, தாராவின் கூட்டுப் படைகளும், தாராவின் படைக் களத்தில் காணப்பட்ட பிளவுகளும் ஔரங்கசீபுக்குச் சாதகமாக அமைந்தன.

5) தாரா தோல்வி அடைவதைக் கண்ட பலர் தாராவை விட்டு நழுவியது ஔரங்கசீபுக்கு மிகவும் சாதகமாக அமைந்தது. ஏனெனில், போர்கள் பலவற்றுள் வெற்றிகளைக் கண்ட ஔரங்கசீபுக்குப் பல சிறந்த தளபதிகளை எதிர்க்க வேண்டிய அவசியமில்லாமல் போயிற்று. சுருங்கச் சொன்னால், இப் போருக்கும், பிற்கால நிகழ்ச்சிகள் பலவற்றுக்கும் பேரரசர் ஷாஜஹானே முழுப் பொறுப்பாவார்.[2]

[1] Lane Poole—Aurangzeb.

[2] Eliot and Dowson, History of India as told by her own historians, Vol. VII.

# 8. பேரரசின் விரிவாக்கம்

இனி, ஔரங்கசீப் அரியணையில் அமர்ந்த பிறகு பேரரசு எவ்வாறு விரிவடைந்தது என்று சற்றுப் பார்ப்போம்.

முகலாயப் பேரரசின் கிழக்குப் பகுதியில், வங்காள மாகாணத்தில் பல்லாண்டுகளாக நிர்வாகம் ஒழுங்காக நடைபெறவில்லை. ஷுஜாவின் ஆட்சிக்குட்பட்ட பகுதிகளிலேயே பல எழுச்சிகள் தோன்றின. வாரிசுரிமைப் போரில் கலந்துகொண்ட ஷுஜா தம் மாகாணத்தில் திரட்ட முடிந்த செல்வம் அனைத்தையும் திரட்டி, இப் போரில் செலவிட்டார். எனினும், வாரிசுரிமைப் போரில் எதிர்த்து வெற்றிபெற முடியாமல், அரக்கான் பகுதிகளுக்கு உயிருக்கஞ்சி அவர் ஓடினார் என்பதை முன்னரே கண்டோம்.

அஸ்ஸாம் மாகாணத்திற்கும், முகலாயப் பேரரசுக்கும் நீண்ட காலமாகவே தொடர்பு நிலவி வந்தது. 'பாத்ஷா நாமா' என்னும் மூலக் குறிப்புகளடங்கிய நூல், அப் பகுதியில் இரு நாடுகள் இருந்தனவெனக் கூறுகிறது. அவையாவன: 1. கூச்பீஹார் (Kuch Bihar), 2. கூச்ஹாஜோ (Kuch Hajau) என்பனவாகும். கூச்ஹாஜோப் பகுதி பிரம்மபுத்திரா நதிக் கரையை ஒட்டிய வளம் மிக்க பகுதி. கூச்பீஹார் டாக்காவிலிருந்து—அன்று 'ஜஹாங்கீர் நகர்' என்று அதற்குப் பெயரிடப்பட்டிருந்தது—20 நாள் பயணத் தூரம் என்று முஹம்மத் அமீன் என்னும் மூலநூலாசிரியர் கூறுகிறார். பேரரசர் ஷாஜஹானது ஆட்சியில், 1636-ஆம் ஆண்டில், 'சூசங்' பகுதியின் ஜமீன்தார் ரகுநாத் என்பவர், பரீட்சித் (Paritchit) என்னும் தம் எதிரி தம் மனைவி மக்களைச் சிறைப்படுத்தி இருப்பதாக முறையிட்டு, அவர்களை விடுவிக்கப் பேரரசரிடம் உதவி கோரினார். ஷாஜஹான், ஷேக் அலாவுத்தீன் என்னும் தளகர்த்தரை அப்

பகுதிக்கு அனுப்பிப் பரீட்சித்தையும், அவரது உறவினரும் பரீட்சித்துக்குத் துணைபுரிந்தவருமான இலட்சுமிநாராயணன் என்பவரையும் முறியடித்து வருமாறு பணித்தார். இவ்வாறு தான் முகலாயப் பேரரசின் ஆதிக்கம் வடகிழக்குப் பகுதியில் மெல்ல மெல்ல வளரலாயிற்று.

அஹோமியர்கள்: வங்கத்திற்கு வடகிழக்குப் பகுதியிலுள்ள அஸ்ஸாம் பகுதியில் அப்பொழுது 'அஹோமியர்கள்' என்னும் இனத்தவர்கள் வாழ்ந்து வந்தனர். மங்கோலிய இனத்தைச் சார்ந்த அஹோமியர்கள் பூர்விகமாக மங்கோலியப் பகுதிகளில் வாழ்ந்து வந்தனர். பின்னர் 13-ஆம் நூற்றுண்டில் அஸ்ஸாம் பகுதியின் தென்மேற்கில் சாங்கோஷ் (Sangosh) நதிக்கும், வடமேற்கில் 'பார்நதி' (Barnadi) ஆற்றுக்கும் இடைப்பட்ட இடங்களில் அவர்கள் குடியேறி வாழலாயினர். இப் பகுதி கூச்பீஹார் என வழங்கப்பட்டது. இது தற்கால மேற்கு அஸ்ஸாமில் கோல்பாரா—காம ரூபாப் பகுதியாகும். மங்கோலிய இனத்தைச் சார்ந்த அஹோமியர்கள் தம் பூர்விக மதத்தைப் பின்பற்றி வந்தனர். ஆனுல், அம் மக்கள் தம் குடியேற்றத்திற்குப் பிறகு இந்து மதத்தைத் தழுவலாயினர். ஷாஜஹான் ஆட்சியிலேயே அஸ்ஸாமின் கூச்பீஹார்ப் பகுதியில் முகலாயப் பேரரசுடன் 1639 ஆம் ஆண்டில் ஓர் உடன்படிக்கையின் மூலம் அஹோமியர்களின் பகுதிகள் இணைக்கப்பட்டிருந்தன. இணைக்கப்பட்ட இப் பகுதிகளில் கூச் ஹாஜோப் (Kuch Hajau) பகுதியும் அடங்கி இருந்தது. கோல்பாரா-காமரூபம் மாவட்டங்கள் அடங்கிய ஹாஜோப் பகுதியில் வாரிசுரிமைப் போரின்போது வீர நாராயணன் என்பவர் செல்வாக்கை வளர்த்துக்கொண்டு, மன்னரைப் போன்று திகழ ஆரம்பித்தார். பேரரசில் இளவரசர்களிடையே காணப்பட்ட பிளவை யொட்டி, வீரநாராயணன் அஸ்ஸாம் மாகாணத்தைத் தனி நாடாகப் பிரகடனம் செய்யக் கருதி, அதற்குரிய முயற்சிகளை மேற்கொள்ளலானுர்.

இவர் 1659 ஆம் ஆண்டில் கௌஹாத்தியைக் கைப்பற்றினுர்; முகலாயர்களின் 40 பீரங்கிகள், 1400 குதிரைகள் ஆகியவற்றையும் கைப்பற்றியிருந்தார். இச் சூழ்நிலையில்தான், பேரரசின் பிரதமராக ஓர் ஆண்டிற்கு முன் பதவியேற்ற மீர் ஜும்லா அஸ்ஸாமிற்கு அனுப்பப்பட்டார்.

அஸ்ஸாமில் மீர் ஜும்லா: பிரதமர் மீர் ஜும்லாவின் முழுத் திறமையும் அஸ்ஸாம் மாகாணத்தில் செலவிடப்பட்டது. வீர நாராயணனை முறியடித்து, அவரது நிலப்பரப்பை அஸ்ஸாம்

பேரரசுடன் இணைத்துக் கொள்வதே இவர் அனுப்பப்பட்டதன் முக்கிய நோக்கமாகும்.[1] இது ஒருபுறம் இருக்க, மற்ெருரு காரணமும் இருந்தது. கிழக்கே ஓடிச் சென்ற ஷுஜாவின் படைகள் திரும்பித் தாக்காமல் இருக்கவும், அப் படைகளை முறியடிக்கவும் கிழக்கு எல்லைக்கு மீர் ஜும்லா அனுப்பப்பட்டார். எதிர்பார்த்தவாறே, 1660ஆம் ஆண்டிற்குப் பிறகு, மீர் ஜும்லாவின் இரண்டு நோக்கங்களும் நிறைவேறின: 1. வீரநாராயணனது தோல்வி, 2. ஷுஜா நாடு திரும்பாமை. உயிருக்கு அஞ்சி ஓடிய ஷுஜா முதலில் டாக்கா நகருக்கும், பிறகு பர்மா எல்லைக்கும் ஓடிச் சென்ருர். பர்மாவின் அரக்கமான் மாகாணத்தில் ஷுஜா கொல்லப்பட்டதாக டச்சுச் செய்திகள் கூறின. ஆனல், பேரரசைப் பொறுத்தவரை வீரநாராயணன் விவகாரம் ஒரு சிறு நிகழ்ச்சியே.

மீர் ஜும்லாவும் நாராயணனும்: 1661ஆம் ஆண்டு நவம்பர் மாத ஆரம்பத்திலேயே மீர் ஜும்லா அஸ்ஸாமிற்குப் புறப்பட்டார். இவருடன் 12,000 குதிரைப் படை வீரர்களும், 30,000 காலாட்படை வீரர்களும், பீரங்கிப் படையும் துணை சென்றன. ஓர் ஆண்டிற்குப் பிறகு அவர் 'கார்காங்' (Gargaon) நகரைக் கைப்பற்றினர். அஹோமியர்கள் பலத்த எதிர்ப்பேதும் தெரிவிக்கவில்லை. அஹோமியர்கள் தோல்வி அடைந்தனர். மன்னர் போர்க்களப் பொருள்கள் பலவற்றை அளித்தார். '82 யானைகள், 3 லட்சம் ரூபாய் தொகை, 675 பீரங்கிகள், 1345 மணங்கு வெடிமருந்து, 1000 படகுகள், 175 கிடங்கு பெறுமான நெற்கதிர்கள்'[1] ஆகியவை அன்பளிப்பாக அளிக்கப்பட்டன. ஆலம்கீர் நாமாவின் கூற்றுப்படி, மீர் ஜும்லாவை எதிர்க்கச் சக்தி இல்லாமல், வீரநாராயணனின் மகன் ஜெயத்துவஜ் என்பவர் போர்க்களத்தை விட்டு ஓடினர்.

அஸ்ஸாமில், முகலாயப் பேரரசுக்கு அஹோமியர்களின் கோட்டைகள் பல வீழ்ந்தன. 1. ஜோகி குபா (Jogigupha), 2. கௌஹாத்தி, 3. ஸ்ரீகட், 4. கஜோலி (Kajoli), 5. சந்தாரா (Sandhara), 6. பாண்டு, 7. பெல்டாலா போன்று இன்னும் பல கோட்டைகள் வீழ்ந்தன. மீர் ஜும்லா, மீர் முர்த்துஜா என்பவரை உபதளபதியாக நியமித்தார்; மேலும், அவரைப் பிரமபுத்திராவிற்கு வடக்குப் பகுதியில் நுழைந்து செல்லுமாறு கட்டளையிட்டார். படைகளைக் கண்ட பரத்துவஜ் 'நாமரூப்' என்னும் கிழக்குப் பகுதிக்கு ஓடிச் சென்ருர்.

[1] J. N. Sarkar—A Short History of Aurangzeb.

இயற்கையின் சதி: அஹோமியர்கள் போரிடத் தொடங்கிய போதும், அவர்கள் தோல்விகளைக் கண்டு வந்தபோதும் அவர்களுக்கு இயற்கை துணை நின்றது. எவ்வாறெனில், வெகு சீக்கிரத்திலேயே நாட்டில் தொற்று நோய் பரவ ஆரம்பித்தது. 1662 ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் வரை பேரரசின் படைகள் முற்றுகையிட்ட வண்ணமாக இருந்தன. போதிய உணவு இன்மை காரணமாகவும், பஞ்சம் காரணமாகவும் பலர் மடியலாயினர். 1662 ஆம் ஆண்டிலேயே ஃபுளு ஜுரம் தாக்கத் தொடங்கிப் பல முகலாயப் போர் வீரர்களைச் சூறையாடிச் சென்றது. குறிப்பாக, மதுராப்பூர் பகுதியில் ஜுரமும் இயற்கையின் சதியும் பெரிதும் பாதித்தன. திலேர்கானின் படைகளின் எண்ணிக்கை மூன்றில் ஒரு பாகமாகக் குறைந்துவிட்டது. மேலும், பொருள்களின் விலைகளும் உயர ஆரம்பித்தன. இன்றியமையாது தேவையான உணவுப் பண்டங்கள் கிடைப்பது அரிதாயிற்று. கோதுமை, நெல், சர்க்கரை ஆகிய பொருள்களின் விலைகள் உயர ஆரம்பித்தன. உதாரணமாக, ஒரு சேர் துவரம் பருப்பு 10 ரூபாய். ஒரு சிறு சுங்கானுக்குத் தேவையான புகையிலை 3 ரூபாய். ஒரு மணங்கு உப்பு 10 ரூபாய்—இவ்வாறாக விலை உயர்ந்தது என காபிஃகானின் ஆதாரத்தில் சர்க்கார் குறிப்பிடுகிறார்.[1] மேலும் அப் பேராசிரியர் கூறுகிறார்: 'முகலாயர்களின் முகாம்களில் நோயாளிகளுக்குத் தகுந்த உணவோ வசதிகளோ செய்து கொடுக்கப்படவில்லை. எல்லோரும் வெறும் அரிசி உணவை நம்பி யிருக்க வேண்டியிருந்தது. கோதுமை கிடைக்கவில்லை; நெய் கிடைக்கவில்லை... இந்துஸ்தான் வீரர்களும் துருக்கிய வீரர்களும் கோதுமை ரொட்டி இல்லாமல் வாடினர்; குதிரைகள் அரிசி உணவைச் சாப்பிட்டு இறந்தன.' இந்தத் தொல்லைகள் போதாவென்று பேய் மழையும் தொடர்ந்தது. மீர் ஜும்லாவின் படைகள் திக்குமுக்காடின.

ஜும்லாவின் வெற்றி: மழை ஓய்ந்தபின், சளைக்காது மீண்டும் மீர் ஜும்லா தாக்குதலைத் தொடங்கினார். ஜெயத்துவஜின் உறவினராகிய பதூலிபூக்கான் என்னும் அஹோமியத் தளகர்த்தர், ஜெயத்துவஜின் சேவையை விட்டுவிட்டு, ஜும்லாவின் முகாமுக்கு மாறினார். இதனாலும் முகலாயப் படைகள் வெற்றி கண்டன. ஆனால், உண்மையில் முகலாயர்களின்

[1] Sir Jadunath Sarkar - A Short History of Aurangzeb—Also, A History of Aurangzeb Vol. III, and A. K. Datta—North Eastern Policy of the Mughals.

தாக்குதலைப் பரத்துவஜினால் தாங்கிக்கொள்ள முடியவில்லை. எனவே, போர் நிறுத்த உடன்படிக்கையை ஏற்றுக்கொள்ளும் நிலையில் இருந்த பரத்துவஜ் போரிட முடியாமல், சமாதானத்தை நாடினார்.

உடன்படிக்கை: இவ் வுடன்படிக்கை ஔரங்கசீபின் 5ஆவது ஆட்சி ஆண்டில் (ஹிஜ்ரி 1072—கி.பி. 1662 ஆண்டு) நிகழ்ந்ததாகக் காபிஃகான் கூறுகிறார். உடன்படிக்கையின் விவரங்களையும் காபிஃகான் விளக்குகிறார். (முன்தகப்புல் லுபப், எலியட்-டௌசன், ப. 298).[1]

1. அஹோமிய மன்னன் போர் நஷ்ட ஈட்டுத் தொகையாக 20,000 தோலா தங்கம், 1,20,000 தோலா வெள்ளி, 20 யானைகள் ஆகியவற்றைப் பேரரசருக்கு உடனடியாகக் கொடுத்தான். 2. அடுத்த ஓர் ஆண்டிற்கு 90 யானைகளையும், 3 லட்ச ரூபாயையும் அளிக்க வேண்டும். 3. ஆண்டு தோறும் பரத்துவஜ் செலுத்த வேண்டிய கப்பத் தொகைக்கு ஈடாக 20 யானைகளை அளிக்க வேண்டும். 4. பராலி நதிக்கு மேற்கே பிரமபுத்திரா நதிக்கரையை ஒட்டிய பகுதிகளைப் பேரரசு இணைத்துக்கொள்ளலாம்.

வெற்றிகரமாகப் போரை முடித்து, உடன்படிக்கையை ஏற்றுக்கொண்டு நாடு திரும்பிய மீர் ஜும்லா தலைநகர் திரும்ப முடியாமல், 1663 ஆம் ஆண்டு மார்ச் மாதம் 31 ஆம் தேதி டாக்கா நகருக்கு அருகில் உயிர்நீத்தார்.

மீர் ஜும்லாவைப்பற்றிய மதிப்பீடு: மீர் ஜும்லாவைப் போன்று வேறு எந்தத் தளபதியும் போர்களை மனிதத்தன்மையுடன் நடத்தியதில்லை. அவர் உபதளபதிகளையும் போர்வீரர்களையும் சமமாகவே கருதி நடத்தினார்; கொள்ளைக்காரர்களையும் கட்டுப்பாட்டில் அடக்கினார். வேறு எந்தத் தளபதியும் கடைசி வரை இவ்வளவு பயங்கரங்களும் நடுங்கத்தக்க கஷ்டங்களும் இருப்பினும், தம் வீரர்களின் நம்பிக்கை, அன்பு, பற்றுதல் ஆகியவற்றுக்குப் பாத்திரமாகி ஜும்லாவைப் போன்று வெற்றி பெற்றிருக்கவே முடியாது. கிழக்கு வங்கத்திலும் அஸ்ஸாம் பகுதியிலும் அவர் போர் நடத்திய விதம் உண்மையில் போற்றற்குரியதாகும். உதாரணமாக, 1662-ல் கைப்பற்றப்பட்ட

[1] 'Muntakhabbul Lubab' of Khafi Khan - Extracts in Eliot and Dowson- History of India as told by her own historians, Vol. VII.

கௌஹாத்தி 4 ஆண்டுகட்குப் பிறகு இழக்கப்பட்ட நிலையைப் பார்த்தாலே மீர் ஜும்லாவின் வெற்றியின் தன்மையும் போர் ஆற்றலும் நன்கு விளங்கும். பேராசிரியர் சர்க்கார் கூறுகிறார் : '20 மணங்கு வைரக்கற்களின் சொந்தக்காரர்; வளம்மிக்க வங்க மாகாணத்தின் ஆளுநர்; சாதாரண எளிய வீரருடன் தாமும் சமமாகவே கஷ்டங்களை அனுபவித்தவர். மகிழ்ச்சியை வெறுத்து ஒதுக்கியதனாலும், உபத்திரவங்களை வரவேற்று ஏற்றுக்கொண்டதாலும் அவர் அகால மரணத்தை வரவழைத்துக்கொண்டார். கொள்ளையடித்தல், கற்பழித்தல், சூறையாடுதல், ஒடுக்குதல் ஆகியவற்றில் போர்வீரர்கள் நிச்சயமாக ஈடுபடக்கூடாது என்று கண்டிப்பான, திட்டமான உத்தரவு இட்டார். உண்மையில், இவ்வுத்தரவு அமல்செய்யப்பட்டபோது, ஆணையை மீறியவர்களுக்கு முதலில் அளித்த தண்டனை நற்பயனை அளித்தது. பிறரிடம் காணாத அளவிற்குச் சிறப்பான குணநலன்கள் மீர் ஜும்லாவிடம் இருப்பதை நாம் நன்றாக உணர்கின்றோம். மீர் ஜும்லாவைப் போன்ற வீரர்களைப்பற்றித் தாலீஷ் போன்ற வரலாற்று ஆசிரியர்கள் உரைகோவையை எழுதுவார்களேயானால் அது வெறும் புகழ்ச்சி உரையாக இருக்காது. உண்மையில், அது ஒரு பிறவி மன்னனுக்குச் சூட்டப்படும் புகழ் ஆரமாக இருக்கும்.'[1]

மீர் ஜும்லா கடின உழைப்பு, காலம் தவறாமை, சகிப்புத்தன்மை, நிதானம்தவறாமை ஆகிய நற்குணங்களைப் பெற்றிருந்தார். சர்க்கார் கூறுவது போல, 'மீர் ஜும்லாவின் உழைப்பு, வேலையில் சுறுசுறுப்பு, நிர்வாகத் திறமை, இராணுவச் சீரமைப்பு இயற்கையிலேயே அவர் மேற்கொண்ட பணிகளில் எல்லாம் வெற்றியை உறுதிப்படுத்தின.' பேராசிரியர் சத்தியநாதய்யர் கூறுகிறார் : 'மீர் ஜும்லாவின் தளபதித்தன்மையும் ஆற்றலும் அவர் கிழக்கிலும், அஸ்ஸாமிலும் நடத்திய போர்களிலிருந்து தெளிவாகின்றன. அவர் தம் வீரர்களின் கஷ்டங்களைப் பகிர்ந்து கொண்டார். தம் போர்வீரர்கள் குடியானவர்களைத் துன்புறுத்துவதோ பெண்களைச் சீரழிப்பதோ அறவே தகாதென்று தடுத்து நிறுத்திய கட்டுப்பாடுடையவராவார்.'[2]

[1] Sir Jadunath Sarkar - A Short History of Aurangzeb.
Also, J. N. Sarkar, History of Aurangzeb Vol. II., and
Prof. R. Sathianathier's—History of India, Vol. II.

[2] Prof. R. Sathianathier's—History of India, Vol II.

கோல்கொண்டா குதுப்ஷா மன்னரின்கீழ்ச் சேவை புரிந்த பின்னர், அவர் முகலாயப் பேரரசரிடம் பணியாற்ற வந்த வரலாற்றை நாம் முன்னரே கண்டோம். பாரசீகத்திலிருந்து நம் நாடு வந்து, பேரரசுக்கு உறுதுணையாகப் பல ஆண்டுகள் வரை ஊழியம் புரிந்த திறமைமிக்க மீர் ஜும்லா போற்றற்குரியவரே ஆயினும், அப் பெரியவரிடம் குறிப்பிடத்தக்க அளவிற்காவது தன்னலம் பேணுதல் என்னும் குணம் இருந்ததை மறுத்தற்கு இயலாது. மீர் ஜும்லா முற்றிலும் தன்னலம் அற்றவர் அல்லர்; பெருமளவிற்குச் சுயநலவாதியே!

ஷயிஸ்தாகான் : மீர் ஜும்லாவை அடுத்து, பேரரசரின் தாய் மாமன் ஷயிஸ்தாகான் அஸ்ஸாம் மாகாணத்திற்கு ஆளுநராக நியமிக்கப்பட்டார். 1667ஆம் ஆண்டு வரை மீர் ஜும்லாவின் வெற்றிகள் நிலைத்திருந்தன. ஜும்லாவின் முன்னேற்றக் கொள்கைகளைப் (Forward Policy) பேரரசு உடும்புப் பிடியாகப் பின்பற்றிவந்தது. இச் சூழ்நிலையில் 1667ஆம் ஆண்டிலிருந்தே அரக்கானின் அரசன் 'சட்டகாந்து' (சிட்டகாங்) கொள்ளைக்காரர்களை ஆதரித்து வந்தான். எனவே, பேரரசர் அஸ்ஸாமிய அரசனைத் தண்டிக்கக் கருதி, அஸ்ஸாமிய எல்லைகளைக் கைப்பற்றுமாறு ஷயிஸ்தாகானுக்கு உத்தரவு அளித்தார். ஷயிஸ்தாகான் அவ்வாறே சிட்டகாங்கைக் கைப்பற்றினார்; கொள்ளைக்காரர்களும் ஒடுக்கப்பட்டனர். ஷயிஸ்தாகானுக்குத் துணையாகப் பேரரசின் தளபதி ராஜா ஜெய்சிங்கின் மகனான ராம்சிங் அஸ்ஸாமிற்கு அனுப்பப்பட்டார். 8,000 துருப்புக்களுடன் ரங்மதி (Rangmati) என்னுமிடத்தை அவர் அடைந்தார். ஆனால், அவர் உண்மையில் அவருக்கு இடப்பட்ட பணியைச் செய்யாது, காலங் கடத்தி வந்தார். சிவாஜி ஆக்ராவிலிருந்து தப்பிச் செல்லக் காரணமாக இருந்தவர் இதே ராம்சிங் என்பவர்தாம். அஸ்ஸாமிற்கு அனுப்பப்பட்ட ராம்சிங் ஷயிஸ்தாகானுக்குத் துணைபுரியாமலும், தாமே தனியாக இடங்களைப் பிடிக்காமலும், பேரரசின் விரிவாக்கத்திற்கு உதவிபுரியாமலும் காலத்தைக் கடத்திவந்தது ஔரங்கசீபிற்கு இழைத்த அநீதியாகும்.

மீண்டும் அஹோமியர்கள் : குறுகிய காலத்திலேயே அஹோமியர்கள் மீண்டும் எழுச்சி பெறலாயினர். அஹோமியர்களின் மன்னன் பரத்துவஜிற்குப் பிறகு, சக்கரதுவஜ் என்பார் பெரும் முயற்சிக்குப் பிறகு கௌஹாத்தி நகரைக் கைப்பற்றினார். இவரும் 1670ஆம் ஆண்டில் இறந்துவிடவே, உள்நாட்டுக் குழப்பம் தோன்றிற்று. 9 ஆண்டுகள் வரை முகலாய-

அஸ்ஸாமியப் போராட்டம் தொடர்ந்து நீடித்தது: இடங்களை விடுவதும் பிடிப்பதுமாகக் கண்கட்டு விளையாட்டு விளையாடினர். 1679ல் பார்பூக்கன் புர்ஹாகோஹைன் (Bar Phukon and Burha Gohain) ஆகிய தலைவர்களிடையே போட்டி, பொறாமை, ஒற்றுமையின்மை எழுந்தன; இதனால் ஒருவரை யொருவர் காட்டிக் கொடுத்துவிட்டனர். இச் சூழ்நிலையை ஔரங்கசீபின் ஆளுநர்கள் நன்ருகப் பயன்படுத்திக் கொண்டனர். இறுதியாகத் தென்மேற்கு, மேற்கு ரங்பூர் பகுதிகள் ஆகியவற்றை முகலாயப் படைகள் கைப்பற்றிய பின்னர், வேறு வழியின்றி அஹோமியர்கள் மீண்டும் முகலாயப் பேரரசுக்கு உட்பட்டு இருப்பதாகவும், பேரரசின் ஆணைகளை ஏற்பதாகவும் ஒப்புக் கொண்டனர். எனவே, அஸ்ஸாமில் முகலாயரின் வெற்றிக்கு மீர் ஜும்லாவும் ஷயிஸ்தாகானும் பொறுப்பானவராவர்.

போர்ச்சுகீசியரின் வாலாட்டம்: இப்பொழுது கிழக்குப் பகுதிகளில் போர்ச்சுகீசியர்கள் அளித்த தொல்லைகளைப் பார்ப்போம். மேற்குக் கடற்கரை ஓரமாக உள்ளே நுழைந்த போர்ச்சுகீசியர்கள் இந்திய அரசியலில் குழப்பமான சூழ்நிலை நிலவுவதைக் கண்டனர். அவர்கள் விஜயநகரப் பேரரசை ஆதரித்து, தக்காணத்தில் பிற மன்னர்களை எதிர்த்து, அரசியற் குட்டையைக் கலக்கி அதில் மீன் பிடிக்க முயன்றனர். தெற்கே வெற்றி கண்ட போர்ச்சுகீசியர்கள் படிப்படியாகக் கிழக்குப் பகுதிகளில் தங்கள் வணிகத்தையும், செல்வாக்கையும் வளர்த்துக் கொண்டனர்; வணிகத்தில் ஓங்கி இருந்த அரேபியர்களின் செல்வாக்கைக் குறைத்து, தங்கள் வியாபாரம் மூலமாகக் கிழக்கிந்தியத் தீவுகள்வரை அவர்கள் தங்கள் ஆதிக்கத்தைப் பரப்பினர்.

ஆனல், போர்ச்சுகீசியர்கள் இந்தியர்கள் பலரை இந்து-இஸ்லாமியர் என்ற வேறுபாடு இல்லாமல், பலவந்தமாக மத மாற்றத்தில் ஈடுபடுத்தி வந்தனர்; அதே நேரத்தில் வியாபாரத்தையும் வளர்த்து வந்தனர். இவர்களின் அடாத செய்கைகளுக்கு ஷாஜஹான் ஆட்சியிலேயே எச்சரிக்கை விடுக்கப்பட்டது. எச்சரிக்கைக்குப் பின்னும் போர்ச்சுகீசியர்கள் தொடர்ந்து அதே தொல்லைகளை அளித்து வந்ததனுல், ஔரங்கசீப் இவர்களைத் தண்டிக்க ஷயிஸ்தாகானை அனுப்பினுர். இவர் 300 படகுகளுடன் சென்று, போர்ச்சுகீசியர்கள் வயமிருந்த தீவுகளையும் 'சட்டகாந்து' (சிட்டகாங்) என்னுமிடத்தையும் கைப்பற்றினுர்.

போர்ச்சுகீசியர்கள் அரக்கான் கொள்ளைக்காரர்களுடன் இணைந்துகொண்டனர். இவர்கள் தந்திரமாகக் கைப்பற்றிய இந்தியர்களை டச்சு, பிரெஞ்சு, ஆங்கிலேயர்களிடம் அடிமைகளாக விற்றுவந்தனர். அரக்கான் கொள்ளைக்காரர்கள் டாக்காவின் ஒரு பகுதியான 'பகர்கஞ்சு' அல்லது 'பாக்லா' மாவட்டம் போன்ற பகுதிகளிலெல்லாம் சூறையாடி, அட்டூழியம் புரிந்துவந்தனர். இவ்வாறு போர்ச்சுகீசியக் கொள்ளைக்காரர்கள் அரக்கான் அரசனுக்குக் கொள்ளை அடித்த பொருள்களில் பாதிப் பணத்தைச் சுங்கமாகச் செலுத்தி வந்தனர். இந்தக் காணிக்கைக்கு 'ஹர்மாத்' (Harmath) என்று வழங்கினர். அனேகமாக இது 'ஆர்மாடா' என்னும் சொல்லிலிருந்து பிறந்திருக்கக்கூடுமென அறிஞர்கள் கருதுகின்றனர்.[1]

இவ்வாறு கொள்ளை, மதமாற்றம் ஆகியவற்றில் ஈடுபட்டு வந்த போர்ச்சுகீசியர்களை ஒடுக்கவும், மீர் ஜும்லா விட்டுச் சென்ற பணியை நிறைவேற்றவும் ஷயிஸ்தாகான்தாம் சிறந்த தளபதி என ஔரங்கசீப் கருதினார். ஆனால், வங்காளப் (அஸ்ஸாமிய) பகுதிகளில் படகுகளின் மூலம் இயக்கப்படும் இராணுவ முஸ்தீபுகளுக்கே மிகச் சிறந்த வெற்றி கிடைக்கும் என்பதைக் கண்டறிந்த ஷயிஸ்தாகான் டாக்கா, ஹூக்ளி, ஜெஸ்ஸூர் (Jessore)த் துறைமுகங்களில் பெரும் படகுப் படைகளைத் தயாரித்துக் கொண்டு, சங்கர் ராம்கர் (Sankar Ramghar), சத்கான் (Satgaon)ஆகிய இடங்களைக் கைப்பற்றுதற்குரிய முயற்சியில் ஈடுபடும் முகமாக, அபுல் ஹசன் என்னும் தளபதியிடம் அப் படைத்தலைமையை ஒப்படைத்து விட்டுத் தம் தாக்குதலைத் தொடுக்க முயன்றார். புஜுர்ஸ் உம்மதுகான் (Buzurs Ummad Khan) என்பார் ஷயிஸ்தாகானின் மகனுவார். சிவாஜியுடன் கைகலப்பு நிகழ்ந்தபோது உயிர்நீத்த அப்துல் ஃபதா (Abdul Fatah) என்பவரும் ஷயிஸ்தாகானின் மகனுவார். ஆனால், இப்பொழுது உம்மதுகானின் தலைமையில் படைகள் தாக்குதலைத் தொடுத்தன. இப்னு ஹுஸைன், பர்ஹத்கான் ஆகிய தளபதிகளும், உம்மதுகான், அபுல் ஹசன் ஆகியோர்கட்குத் துணையாகச் சென்றனர். அடுத்தடுத்து முகலாயப் படைகள் குமாரியா, கரன்பூலி நதிக்கரைப் போர்களில் வெற்றி பெற்றன. முனவ்வர் கான் (Munavvar Khan) என்பவரும் பேரரசுப் படைகளுடன் தோளோடு தோள்நின்று, அரக்

1 Prof. S. R. Sharma—The Mughal Empire in India,
Also, J. N. Sarkar—Ibid.

கானியர்களையும் போர்ச்சுகீசியர்களையும் விரட்டி அடித்தார். இவை அனைத்தும் ஷயிஸ்தாகானின் போர் யுக்தியினாலும் போர்த் திட்டங்களாலுமே வெற்றி அடைந்தன என்பதில் ஐயமில்லை.

ஷயிஸ்தாகானின் குணநலன்: ஷயிஸ்தாகான் தளராத ஊக்கம் உடையவர்; கூர்ந்த அறிவு படைத்தவர்; ஒரு சிறந்த தளபதி; படைகளை நடத்திச் செல்வதிலும், தாமே போர்களில் கலந்து கொண்டு வெற்றி பெறுவதிலும் இணை யற்றவர். போரில் மட்டுமன்றி, அமைதிக் காலத்திலும் சீரான நிர்வாகத்திறமையைப் படிப்படியாக அவர் வளர்த்துக் கொண் டார். 30 ஆண்டுகட்கு மேலாக ஷயிஸ்தாகான் ஆளுநர்ப் பதவியை வகித்துவந்தார். இவர் தம் திறமையாலன்றி, உறவு முறையினால் ஆளுநர்ப் பதவியைப் பெறவில்லை. ஔரங்கசீபும் இவரிடம் திறமை காணப்பட்டதாலேயே 30 ஆண்டுகளுக்கு இவரை அப் பதவியில் நிலைபெறச் செய்தார். தைரியமான முன்னேற்றக் கொள்கை கடைப்பிடிக்கப்படாமற் போயிருப் பின், அரக்கான் பகுதிகள் முகலாயப் பேரரசுடன் இணைந்திரா. இதனை அறிஞர் டாக்டர் வின்சன்ட் ஸ்மித் ஏற்றுக்கொள் கின்றார். 'அவர் ஆட்சியின் தொடக்கத்திலேயே பிரம புத்திரா நதிக்கரையில் அலைக்கழித்து வந்த போர்ச்சுகீசியக் கொள்ளைக்காரர்களை அகற்றினர்; மேலும், அரக்கானிய மன்னனைத் தமக்குச் சிட்டகாங்கைக் கொடுக்குமாறு செய் தார்,'[1] என்று ஸ்மித் கூறுகின்றார். முகலாயப் பேரரசுக்கும், தம் மருமகன் ஔரங்கசீபுக்கும் சிறந்த முறையில் பணியாற்றிய ஷயிஸ்தாகான் ஆக்ராவில், 1694ஆம் ஆண்டில் தம்முடைய 93ஆம் வயதில் காலமானர்.

1 Vincent Smith—Oxford History of India, Part II, Edn. E.B. Harrison,

# 9. ஔரங்கசீபும் ஆப்கானியர்களும்

**நிர்வாகத்தின் தன்மை :** ஔரங்கசீப் தம் பேரரசின் எல்லைகளை விரிவாக்கியதன் முக்கிய நோக்கம், நீதி வழுவா நிலையில் ஆட்சி செலுத்த வேண்டுமென்பதேயாகும். பேரரசின் எல்லைகள் விரிவடைவதும், ஆட்சி நிலைபெறுவதும், பின்னர் வேரூன்றுவதும் எப்பேரரசுக்கும் இயல்பேயாகும். அது போன்றே, முகலாயப் பேரரசின் விரிவாக்கம் தெற்கேயுள்ள தக்காண அரசுகளை எதிர்த்து, அல்லது மராத்திய மண்டலத்தை எதிர்த்து இருப்பினும் சரியே, அல்லது கிழக்கே அஸ்ஸாம் எல்லையாக இருப்பினும் சரியே, பேரரசர் ஔரங்கசீப் இப் பகுதிகளில் எல்லாம் தம் ஆட்சிக் கொடியை நிலைநாட்டக் காரணம், அம் மக்கள் தம்மை விட்டும் வேறு பிரிவைச் சார்ந்தவர்கள் என்பதனுல் அல்லாமல், பேரரசு மேலும் விரிவடைய வேண்டும் என்ற ஒரே அரசியல் காரணத்திற்கே ஆகும். அவ்வாறு இல்லையாயின், தம் இஸ்லாமிய மதத்தையே சார்ந்த ஆப்கானியர்களுடன் மேற்கு எல்லையில் ஔரங்கசீப் போருக்குச் செல்வானேன்?

தக்காணத்தில் பீஜப்பூர், கோல்கொண்டா அரசுகளின் மன்னர்களும் தம் சமயத்தையே பின்பற்றியவர்களாக இருந்தும், அவ்வரசுகளின்மீது அவர் போர் தொடுப்பானேன்? ஆகவே, ஆப்கானியர்களும் இஸ்லாமியர்களாக இலங்கி இருந்தும் அவர்கள் மீது போர் தொடுக்க உண்மையான காரணம் என்னவெனில், ஆப்கானியர்கள் ஔரங்கசீபின் பேரரசுக்கு ஓயாத தொல்லைகளைக் கொடுத்து வந்தனர் என்பதேயாகும். இதற்கு முன்பே ஷாஜஹான் ஆட்சியிலும் கூட இவர்கள் தொல்லைகள் கொடுத்து வந்த வண்ணம் இருந்தனர். அவர்களை அடக்குவதுதான் முக்கியக் குறிக்கோளாகும். ஆகவே, பேரரசு வளர்ச்சி யடையும்

பொழுது சில தொல்லையான கட்டங்களையும் இடர்ப்பாடுகளையும் தாண்டிச் செல்லவேண்டும். இம் மாதிரியான கட்டம் எந்த ஒரு பேரரசின் சுற்றுச் சார்புகளையும், இது அமைந்திருக்கும் இடத்தையும் பொறுத்ததாகும். இது வரலாற்றின் அடிப் படைச் சட்டம் ஆகும்.

உதாரணங்கள் : எடுத்துக்காட்டுகள் சிலவற்றை இங்குக் காண்போம்.

எந்த ஒரு பேரரசின் வளர்ச்சியிலும் அல்லது விரிவாக்கத் திலும் ஒரு சில கட்டங்களில் அது எதிர்கொள்ளும் இடையூறு களைச் சமாளித்து, அதன் சுற்றுப்புறங்களுக்கேற்றவாறு விரிவு படுத்திக்கொள்வது மிகவும் இயற்கையாகும்.

1. உதாரணமாகத் தெற்கே பாலக்கா (பாலக்காடு) வரை படையெடுத்துச் சுற்றி வந்த சமுத்திர குப்தர், வட மேற்கு எல்லையின்மீது படையெடுக்க நினைக்காததேன்? மஹாகாந் தாரா, கௌரலா, பிஸ்தபுரா, கொட்டூரா, யாண்டபாளா, காஞ்சீ, அவமுக்தா, லேங்கி, பாலக்கா, குஸ்தலபுரா ஆகிய பல குறுநாடுகளை வென்று திக் விஜயம் செய்து பாடலிபுத்திரம் திரும்பிய சமுத்திரகுப்தர், அஸ்ஸாம் எல்லைக்கோ, ஆப்கானிஸ் தான் எல்லைக்கோ, தெற்கே மதுரை எல்லைக்கோ, இலங் கைக்கோ ஊடுருவிப் பாய்ந்து செல்ல வேண்டுமென நினைக் காததேன்? 2. கங்கை நதிவரை படையெடுத்துச் சென்ற ராஜேந்திர சோழனுக்கு முன்பாக வடக்கே பல்லவர்களோ, பாண்டியர்களோ, (ஆதிகாலச் சோழர்களைத் தவிர்த்து) படை யெடுத்துச் செல்ல நினைக்காததேன்? அல்லது இராஜேந்திர சோழரே வடக்கே கங்கை நதிவரை சென்றும், வடமேற்கே படையெடுத்துச் செல்லவேண்டும் என நினைக்காதது ஏன்? 3. ரோமானியப் பேரரசை வளர்த்த பேரரசர்கள் ஆப்பிரிக்க கண்டத்தின் உட்பகுதிக்குள் நுழைந்து வெற்றிக் கொடியை நாட்ட நினைக்காததேன்? எனவே, எந்த ஒரு பேரரசும் அதன் வணிகம், பொருட் பெருக்கம், செல்வநிலை, வளர்ச்சி ஆகிய வற்றின் அடிப்படையில்தான் விரிவாக்கத்தை நாடுமே யொழிய, வெறும் சமய வேறுபாடு மட்டும் விரிவாக்கத்தில் மூல காரணமாக அமைய முடியாது, முடியாது; முகலாயப் பேரர சைப் பொறுத்தவரை அதன் வணிகமும், போக்குவரத்தும், அரசியல் தொடர்பும், ஆப்கானிஸ்தானம் வழியே மேற்கே

யுள்ள உலகுடன் இணைந்து இருந்தன. தெற்கே தக்காணத்தின் மன்னர்கள் ஷியாப் பிரிவைச் சார்ந்திருந்தார்கள் என்ருல், ஆப்கானியர்கள் ஔரங்கசீப் பின்பற்றிய 'சுன்ஞ' (Sunna) என்னும் மதப் பிரிவையே சார்ந்திருந்தனர்தாமே? அவர்களும் இமாம் அபூஹனீபாவின் வழியைப் பின்பற்றியவர்கள்; பேரரசர் ஔரங்கசீபும் அதே இமாம் அபூஹனீபாவின் வழியை முழுமனத்துடன் நம்பிப் பின்பற்றியவர் ஆயிற்றே! பின், படையெடுப்பு ஏன்? எனவே, பேரரசின் விரிவாக்கத்திற்கு வேறு பல காரணங்கள் இருந்தன. அவை:— 1. இந்தியாவில் ஆப்கானியர்களின் புது எழுச்சி ஷேர்ஷாவிற்குப் பின் மறைந்துவிட்டது. இவர்களின் மறைவு தம் நாட்டிலேயே வேருன்றவும், முகலாயப் பேரரசுக்குச் சலியாத இடையூறுகளைக் கொடுக்கவும் தூண்டியது. மீண்டும் ஹுமாயூன் தம் ஆதிக்கத்தை நிலை நிறுத்திய பின், ஷேர்ஷாவின் வழித் தோன்றல்கள் வேரறுக்கப்பட்டதையும் ஆப்கானியர்களால் மறக்க முடியவில்லை. முகலாயப்பேரரசு மறந்தாலும், ஆப்கானியர்கள் தம்பழைய வரலாற்றை மறப்பதாக இல்லை. எனவே, ஆப்கானியர்கள் முகலாயப் பேரரசுக்குத் தீராத தலைவலியை அளித்து வந்தனர். 2. ஆப்கானியர்கள் தம் நாடு செழிப்புருமல் இருந்ததால், கொள்ளையிலும் சூறையாடுவதிலும் ஈடுபட்டு வந்தார்கள். அவர்கள் இவ்வாறு சூறையாடி வந்த பொழுது, கிழக்கே பேரரசின் மேற்கு எல்லையான பஞ்சாப் மாகாணம் வரை பரவிவிட்டனர். எனவே, இவர்களைப் பஞ்சாப் எல்லையிலாவது தடுத்து நிறுத்துவது முகலாயப் பேரரசின் கடமையாயிற்று. 3. வடமேற்கு எல்லைப்புற மாகாணங்கள் பேரரசுக்குப் பாதுகாப்பாக இருப்பதற்காகவும், மலையடிவாரங்களைக் கொள்ளைக்காரர்களிடமிருந்து பாதுகாத்துப் பஞ்சாப் மாநிலத்தைப் பறிகொடாமல் இருப்பதற்காகவும் ஔரங்கசீப் மேற்கு எல்லையில் போர் தொடுக்க வேண்டியதாயிற்று.

ஆப்கானியர்களின் பிரிவுகள்: ஆப்கானியர்கள் அப்ரீதீகள் (Afridis) என்றும், யூசுப் ஜாஹீகள் (Yusuf Zahis) என்றும், கத்தாகியர்கள் (Kathaks) என்றும், சின்வாரியர்கள் (Chinwaris) என்றும் பலவேறு வகுப்பினர்களாகப் பிரிந்திருந்தனர். காபுலிலிருந்து இந்தியா வரையில் உள்ள பகுதிகளில் இத் தலைவர்கள் வரி வசூலித்துக் கொள்ள முன்னமேயே முகலாய அரசு உரிமை அளித்திருந்தது. குறிப்பாக, ஷாஜஹான் இவ் வினத்தவர்

களுக்குக் கையூட்டுக் கொடுத்து[1] அவர்களைத் தமக்குச் சாதகமாய்ப் பணிய வைத்திருந்தார். ஆனால், ஔரங்கசீபோ பலம் பெற்றிருந்தும், எத்தல்ரெடைப் போன்று மக்களிடத்திருந்து டேன்கெல்டை வசூலித்துக் கையூட்டாகக் கொடுக்காமல், துணிந்து ஆப்கானியர்களை எதிர்த்து, அவர்களால் எழும் பேராபத்தை மேற்கு எல்லையிலேயே தடுத்து நிறுத்த விரும்பினார்.

யூசுப் ஜாஹீகள்: ஔரங்கசீப் ஆலம்கீர் ஆட்சி புரியத் தொடங்கி ஒன்பது ஆண்டுகளுக்குப் பிறகு, மேற்கு எல்லைப் புறத்தில் விரிவாக்கத்தின் அவசியம் ஏற்பட்டது. யூசுப் ஜாஹீ களின் தலைவராக இருந்த முஹம்மது பாக்கர் என்பார் 1667ஆம் ஆண்டில் படையெடுப்பைத் தொடங்கினார். இவரை 'பாகூ' (Bhagu) என்றும் அழைத்தார்கள். இவர் பல ஆப்கானியக் குடும்பங்களை ஒன்றுபடுத்தி, முல்லா சாலக் (Mulla Chalak) என்னும் பெரியாரின் ஆசீர்வாதத்தோடு 5000 படையினரைத் திரட்டிச் சிந்து நதியின் வடபுறத்திலுள்ள அட்டாக் (Attock) என்னும் இடத்தைக் கடந்து 'பாக்லி' என்னுமிடத்தைத் தாக்கினார். இவர் காஷ்மீருக்குச் செல்லும் பாதையைத் தடைப் படுத்தினார். இவர் அட்டாக்கிற்கு வடக்கே 'ஹஜாரா' மாவட்டத்தில் பல இடங்களில் ஊடுருவினார். இவருடைய வெற்றிகளைக் கண்டு சுவாத் (Swat), பஜாவுர் (Bajaur) பள்ளத்தாக்குகளில் வசித்து வந்த பல்வேறு ஆப்கானியர்களுக்கும் தலைவராக 'பாகூ' தேர்ந்தெடுக்கப்பட்டார். அவர் சிந்து மாகாணத்தில் இருக்கும் ஹாரூன் (Haroun) என்னுமிடத்தைத் தாக்கித் தம்மிடமே வைத்துக்கொண்டு, முகலாயப் படைகள் மேற்கொண்டும் முன்னேற முடியாமல் தடுத்து நிறுத்தினார். இவர் முகலாயப் பேரரசின் உட்பகுதியின் மீதும் படையெடுக்கத் திட்டமிட்டிருந்ததை யறிந்து, ஔரங்கசீப் பெஷாவரிலிருந்த ஃபௌஜ்தார் (முகாம் இராணுவத் தளபதி), காமில்

[1] அரசியல் காரணங்களுக்காகக் கையூட்டுக் கொடுத்து நாட்டின் ஒரு பகுதியினரைப் படிய வைப்பதோ, படையெடுப்பிலிருந்து தம் நாட்டைப் பாதுகாத்துக் கொள்வதோ வரலாறு காணாத நிகழ்ச்சியன்று. உதாரணமாக, இங்கிலாந்தில் எத்தல்ரெட் மன்னனாக இருந்தபோது, டேனர்கள் படையெடுத்தனர். அவர்களைத் தடுத்து நான்கு தடவையும் 'டேன்கெல்ட்' (Danegeld) என்னும் 'தலைவரியை' வசூலித்து விடுவித்தான் எத்தல்ரெட். பலவீனனான எத்தல்ரெட் 5 லட்சம் பவுண்டுத் தொகையை டேனர்களுக்கு அளித்தான்.— Keith Feiling-History of England. Also Warner, Marten and Muir—Groundwork of British History.

கான், முஹம்மது அமீர்கான் (காபுல் ஆளுநர்) ஆகியோருக்கு அவசர ஆணையொன்றைப் பிறப்பித்துத் தாக்குமாறு ஏவினர்.

இம் மூன்று தானைத் தலைவர்களும் கூட்டாக இணைந்து, யூசுப் ஜாஹீகளின் பகுதிகளைத் தாக்கிச் சீரழித்தனர். ஷம்ஷேர் கான் என்னும் தளபதி ஆப்கானிஸ்தானத்திற்குள் புகுந்து, யூசுப் ஜாஹீகளின் எல்லைப் பகுதிகளைப் பலமாகத் தாக்கிச் சீரழித்தார். ஒஹிந்துப் (Ohind) பகுதியிலும், மந்தார்ப் பகுதியிலும் பாகூவின் படைகளை ஷம்ஷேர் புறமுதுகு காட்டச் செய்தார். எனினும், 'மன்சூர்' எல்லையில் முஹம்மது அமீர்கான் தலைமைப் பொறுப்பை ஏற்று, ஷம்ஷேரைவிடப் பெரும் வெற்றிகளைக் கண்டார். நூற்றுக் கணக்கான யூசுப் ஜாஹீகள் கொல்லப்பட்டனர். போரில் பலர் கைது செய்யப் பட்டனர். ராஜா ஜஸ்வந்த்சிங் பிரதம தளபதியாக நிய மிக்கப்பட்ட பின் காராமர் பள்ளத்தாக்கு சூறையாடப்பட்டது. இதன் பிறகு (1672க்கு பிறகு) யூசுப் ஜாஹீகள் மீண்டும் எழ முயற்சிக்கவில்லை.

அப்ரீதியர்கள் : யூசுப் ஜாஹீகளை ஒடுக்கியபொழுது, மற்றோர் இனத்தவர் எழும்பலாயினர். அப்ரீதீகள் என்னும் அந்த இனத்தவர்கள் அக்மல் கான் (Akhmal Khan) என்னும் தலைவரின் கீழ்ப்பேரரசை எதிர்க்கலாயினர். இவர் பிறவியிலேயே ஒரு தளபதி என்று கூறவேண்டும். தம் இனத்தவர்களை ஒன்று படுத்திக் கைபர்க் கணவாயில் இவர் படைகளை நிறுத்திப் பேரரசின் படைகள் நுழையாமல் தடுத்து நிறுத்தினார். அப் பொழுது யூசுப் ஜாஹீகளை வெற்றிகண்ட முஹம்மது அமீர்கான் என்பவர்தாம் காபுலின் ஆளுநராக நியமிக்கப்பட்டிருந்தார். ஆப்கானியர்களின் வீரத்தையும் போர்த் திறமையையும் மறந்து, முன்னெச்சரிக்கை இல்லாமலேயே இவர் அலீ மஸ்ஜித் என்னும் இடம்வரை படைகளை நடத்திச் சென்றார். அப்ரீதீகள் அமீர்கானைத் தோற்கடித்து, அவருக்குக் குடிப்பதற்கு நீரும் கிடைக்காது அவரைத் திண்டாடச் செய்தனர். எவ்வாறோ அமீர்கானும் வேறுசில தளபதிகளும் பெஷாவருக்குத் தப்பி ஓடினர். கோழையாக ஓடிய அமீர்கானின் தாய், மனைவி, மகள் ஆகியோர் கைது செய்யப்பட்டு, அடிமைகளாக விற்கப் பட்டனர். இப் போரில் சற்றேறக்குறைய 10,000 முகலாய வீரர்கள் கொல்லப்பட்டனர்; இருபதாயிரம் வீரர்கள் தம் உடலுறுப்புக்களை இழந்தனர். பலர் கைது செய்யப்பட்டு, மத்திய ஆசியாவில் அடிமைகளாக விற்கப்பட்டனர்,

பேராசிரியர் ஜாதுநாத் சர்க்கார் கூறியதுபோல, 'ஆயிரம்போர் வீரர்கள் எதிரியின் வாளுக்கு இரையாயினர். இரண்டு கோடி ரூபாய்க்கு மேலாகப் பணமாகவும், பொருளாகவும் எதிரிகள் கொள்ளை யடித்தனர். அவர்கள் பத்தாயிரம் ஆண், பெண் களைக் கைது செய்து, அவர்களை மத்திய ஆசியாவிற்கு விற்பதற்கு அனுப்பினர்.'[1] ஆக மொத்தத்தில், முகலாயப் படையினருக்குத் தகுந்த பாடத்தை இந்த முரட்டு ஆப்கானியர்கள் புகட்டினர் என்றே சொல்லவேண்டும். அப்ரீதீகளின் வெற்றிக்கு அக்மல்கான் என்னும் தலைவரே காரணமாவார். அக்மல் கான் ஒரு பிறவித் தலைவரானதால், தமக்குத் தாமே மன்னன் எனப் பட்டம் சூட்டிக் கொண்டு, போர்க்கொடியை உயர்த்தி, நாணயங்களை அச்சடித்து, மக்களை ஒன்றுபடுத்திச் சிறந்த வெற்றியைக் கண்டார்.

கத்தாக்கியர்கள் (Kathaks) : கத்தாக்கியர்கள் எனப்படும் மற்றொரு ஆப்கானிய இனத்தவர்களும் அக்மல் கானின் எழுச்சியையும் தலைமையையும் கண்டு, தாமும் குஷால் கான் (Kushal Khan) என்பவரின் தலைமையின்கீழ் ஒன்றுபட்டு எழலாயினர். கத்தாக்கியர்களும் அடிக்கடி பேரரசின் எல்லைகளைத் தாக்கிவந்தனர். இந்தக் கத்தாக்கியர்கள் தற்பொழுதைய பெஷாவர், பன்னு, கோஹத் பகுதிகளில் வாழ்ந்துவந்தனர். குஷால் கானை எதிர்க்க மாமன்னர் ஔரங்கசீப் மஹபத் கான் (Mahabat Khan) என்பாரைத் தளபதியாக நியமித்திருந்தார். ஏனெனில், தக்காணத்திலிருந்த மஹபத் கான் முன்பு மூன்று தடவைகளில் மேற்கு எல்லைப்புறத்தில் நிர்வாகத்தை நடத்தியவர்; போரில் ஈடுபட்டு வெற்றியை நல்கித் தந்தவர். ஔரங்கசீப் எதிர்பார்த்ததற்கு மாறாக, மஹபத் கான் கத்தாக்கியர்களை ஒடுக்காமல் அவர்களுடன் ஓர் இரகசிய உடன்படிக்கையைச் செய்து கொண்டார். இந்நிலையில் வெற்றி பெறுவது எங்ஙனம்? மஹபத்தின் துரோகச் செயலை அறிந்த ஔரங்கசீப் ஷுஜாஅத் கான் (Shuja'at Khan) என்பவரைத் தளபதியாக நியமித்தார். ஷுஜாஅத் கானுடன் ராஜா ஜஸ்வந்த் சிங்கையும் கூட்டாகவே தளபதிப் பொறுப்பில் நியமித்திருந்தார் பேரரசர்.

ஆனால், வெகு சீக்கிரத்திலேயே இருவருக்கிடையிலும் பிணக்குகள் ஏற்பட்டன. எனினும், தாம் தளபதி என்பதை

[1] Sir. J. N. Sarkar -A Short History of Aurangzeb.
Also, S. R. Sharma—The Mughal Empire in India.

யும் மறந்து, ஷுஜாஅத்கான் முன் வரிசையில் நின்று போர் புரிந்து வீரமரணம் எய்தினுர். ஆனுல், அவர் இறக்கு முன்னர்ப் பெற்றிருந்த வெற்றிகளுள் ஒன்றுதான், குஷால் கான் கைது செய்யப்பட்டு டெல்லிக்கு அனுப்பப்பட்டமையாகும்.

குஷால்கான் முதலில் டெல்லிச் சிறையிலும், பின்னர் ரத்னம்பூர்ச் (Ratnambhor) சிறையிலும் காவலில் வைக்கப் பட்டிருந்தார். ஔரங்கசீபின் சொல்வன்மையில் மயங்கியவர் போல நடித்த குஷால் கான் தாம் விடுவிக்கப்பட்டால், நாடு திரும்பியதும் தம் இனத்தவர்களின் பிற தலைவர்களையும் பிடித்துக் கொடுப்பதாகப் பசப்பு வார்த்தைகளைப் பேசினுர். இதைப் பேரரசர் நம்பியது விந்தைதான்! குஷாலை அவர் விடு வித்தார். நாடு திரும்பியதும் முதல் வேலையாகக் குஷால் கான் தம் இனத்தவர்களுடன் சேர்ந்து கொண்டார். ராஜா ஜஸ்வந்த்சிங்கும் வெற்றிகளை ஈட்டித் தருவதாகத் தோன்ற வில்லை. எனவே, வேறு வழியின்றிப் பேரரசர் ஔரங்கசீப் தாமே நேரிற் செல்வது எனத் தீர்மானித்தார்.

ஔரங்கசீபின் முயற்சிகள் : 'உடையவன் பார்க்காதது ஒரு முழம் கட்டை' என்றவொரு தமிழ்ப் பழமொழி உண்டு. அது போன்று, தாமே நேரில் போய் மேற்பொறுப்பை ஏற்காத வரை முரட்டுப் பத்தானியர்மீது வெற்றிகொள்வது கடினம் என்பதை உணர்ந்த பேரரசர் ஔரங்கசீப் 1674ஆம் ஆண்டில் படைத் தலைமை ஏற்று, ஹசன் அப்தல் (Hasan Abdal) என்னு மிடத்தை அடைந்தார். ராவல்பிண்டிக்கும் பெஷாவருக்கும் இடைப்பட்ட அப்தலில் ஔரங்கசீப் ஓர் ஆண்டு தங்கினுர்; அங்குத் தாமே நேரிடையாகத் துருப்புக்களுக்கு ஆணையிட்டும், போர் வீரர்களுக்குத் தாக்குதல் உத்தரவுகள் பிறப்பித்தும் படைத் தலைமையை ஏற்று நடத்தினுர். மஹபத் கான் ஆளுநர்ப் பதவியிலிருந்து நீக்கப்பட்டு, தக்காணத்திலிருந்த துருக்கித் தளபதி அகர்கான் என்பார் தளபதியாக நியமிக்கப் பட்டார்.

அக் காலத்திய அரசியல் நிலையை நாம் உற்று நோக்கும் போது, சிவாஜி ஆக்ரா சென்று தப்பி, வீடு திரும்பிய பின்னர் முடிசூட்டு விழா நடத்தி, மீண்டும் சூரத் கொள்ளையிலீடு பட்டு, தம் நாட்டின் தளபதியாகவும் மன்னராகவும் செங்கோ லோச்சிய காலம் அது; சீக்கியர்கள் பகைமை பாராட்டி அவர் களின் தலைவர் தேஜ்பகதூர் பேரரசுக்குத் தலைவலி கொடுத்து வந்த நேரம் அது; இச் சூழ்நிலைக்கிடையேதான் பேரரசர்

மேற்கு எல்லைகளின் தொல்லைகளை எதிர்கொள்ள வேண்டி நேரிட்டது. தோல்வியை ஏற்கக் கூடாது என்ற திடமான உள்ளம் ஒருபுறம்; தீராத தலைவலியை அளித்து வந்த எல்லைப் பிரச்சினைக்குத் தீர்வு காண முடியுமா என்ற ஏக்கம் மறுபுறம்; இவ் விரண்டும் சேர்ந்து ஆலம்கீரை வாட்டவேதான், அவர் தம் பெரும் தளபதிகளுடன் 1674ஆம் ஆண்டு ஜூன் மாதம் 26ஆம் நாள் பெஷாவரை நோக்கிப் புறப்பட்டார்.

ஔரங்கசீபின் தளபதிகளான (1) அகர்கான், (2) இளவரசர் அக்பர், (3) வஜீர்கான் ஆகியோர் பேரரசருடன் சென்றனர். பேரரசர் செல்வதற்கு முன்பாகவே ராஜா ஜஸ்வந்த் சிங் பிரதம தளபதியாகப் பணிபுரிந்து வருவதையும் நாம் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். அகர்கான் 'முகம் மந்த்' என்பார்களைத் தாக்கி, அவர்களுள் ஈராயிரம் மக்களைக் கைது செய்தார். மேலும், அகர்கான் நவ்ரகார் என்னுமிடத்தையும் கைவசப்படுத்திக் கொண்டார். அடுத்த ஆண்டில் பிதாய் கான் என்னும் உபதளபதி காபுலிலிருந்து (பெஷாவரிலிருந்து) திரும்பும்போது ஆப்கானியர்கள் அவரைத் தோற்கடித்தனர். அவர்கள் இராணுவ வீரர்களின் பொருள்களையெல்லாம் கொள்ளை யடித்தனர். முகர்ரம் கான் (Mukarram Khan) என்னும் தளபதியும் படுகேவலமாகத் தோற்றெழிக்கப்பட்டார். தாம் அடைந்த தோல்விகளுக்கெல்லாம் பரிகாரம் தேடும் முகமாக, ஔரங்கசீப் ஆலம்கீர் பல போர்முனைகளில் ஆப்கானியர்கள்மீது வெற்றி கண்டார். ஆனால் இவை எல்லாம் முழு வெற்றி அல்ல.

தந்திரமும் பாதி வெற்றியும்: வெறும் போர் முனைகளின் மூலமே அன்னிய மக்களைப் பணிய வைத்தல் இயலாது என்பதை உணர்ந்த ஆலம்கீர் தந்திரம் மூலமாகவும், கையூட்டுக் கொடுத்துப் பொருள் அளிப்பதன் மூலமாகவும் பத்தானியர்களைப் பணியவைக்க முயன்றார். இதற்கிடையில், 1675ஆம் ஆண்டில் போரின் நிலை சற்றுத் திருப்தியாக இருக்கவே, அசன் அப்தலை விட்டு டெல்லிக்குப் புறப்படலானார். ஆனால், நாடு திரும்பும் முன், இப் பகுதிகளை மீர் கான் என்னும் தளபதியிடம் ஒப்படைத்து நிர்வாகப் பொறுப்பை ஏற்குமாறு ஏற்பாடு செய்துவிட்டுப் புறப்பட்டார்.

ஃகலீலுல்லா (Khaleelulla) என்னும் தளபதியின் மகனான மீர் கான் முன்னரே யூசுப் ஜாஹிகளை அடக்கி வெற்றிகண்டவர்.

காபுலுக்கு வந்த பிறகுதான் 'அமீர் கான்' என்ற பட்டம் அவருக்கு வழங்கப்பட்டது. இந்த அமீர் கான் அலீமர்தான் கானுடைய மருமகன் ஆவார். அமீர் கானே இரண்டே ஆண்டுகளில் இருமுனைத் தாக்குதலால் எல்லைகளை விஸ்தரித்தும், பத்தானியர்களை அடக்கியும், தாம் கைப்பற்றிய பகுதிகளில் அன்பு அரவணைப்புடன் நிர்வாகத்தை நடத்தியும் படிப்படியாகப் பேரரசரின் அன்புக்குப் பாத்திரரானார். எனவே, ஐந்தே ஆண்டுகளில் அமீர் கான் அப் பகுதிகளைத் தம்மிடமே வைத்துக்கொண்டது மட்டுமன்றி, பின்னர்ப் பேரரசுடன் இணைத்துக் கொள்ளவும் உதவினார். ஔரங்கசீப் பின்பற்றிய, இருவரை மோதவிட்டு அவ்விருவர் மீதும் வெற்றி கொள்ளும் கொள்கையை ('Breaking two bones by knocking them together') அமீர் கானும் பின்பற்றியதனாலேயே வெற்றிபெற முடிந்தது. சுருக்கமாக, இக் கொள்கையின் விளக்கம் யாதெனில்: ஓர் இனத்தை (ஆப்கானியர்களை) மற்றோர் இனத்துடன் மோதவிட்டு இரு இனத்தவர்களையும் முறியடிப்பது—அகற்றுவது என்பதாகும். உண்மையில், இக் கொள்கை பிற்காலத்தில் ஆங்கிலேயர்கள் பின்பற்றிய 'பிரித்தாளும் சூழ்ச்சி' (Divide et Impera or Divide and Rule) என்னும் கொள்கையை ஒத்திருந்தது என்று கூறலாம். பேராசிரியர் சர்க்கார் கூறியது போல, 'பேரரசர் ஆப்கனிஸ்தானத்தில் வெற்றி பெற்றது எவ்வாறெனில், ஓய்வுகாலத் தொகைகள் அளிப்பதன் மூலமும், ஜாகிர்கள் அளிப்பதன் மூலமும், வாக்குறுதிகள் மூலமும்—இருவரை மோதவிட்டு அவ்விருவர்மீதும் வெற்றி பெற்றார்.'[1] எவ்வாறாயினும், அலீமர்தானின் மருமகன் போருக்கு இடையிலும் சிக்கனத்தைப் பெரிதும் கடைப்பிடித்து, அரசாங்கப் பணத்தைப் பேரரசரிடமே திருப்பிக் கொடுத்தார். உதாரணமாக, 1681ஆம் ஆண்டில் அவர் எழுதிய கடிதம் ஒன்றில், தம் நிர்வாகத்திற்கு ரூபா ஆறு லட்சம் ஒதுக்கப்பட்டதாகவும், அவற்றில் ஒன்றரை லட்சம் ரூபாயை மட்டும் தாம் செலவழித்து விட்டு, மீதித் தொகையை அரசாங்கக் கஜானாவில் செலுத்தி இருப்பதாகவும் குறிப்பிட்டுள்ளார்.

மீண்டும் சில ஆண்டுகளிலேயே அமீர் கானுக்குச் சாதகமாகக் குஷால் கான் கத்தாக்கியரை அவர் மகனே காட்டிக் கொடுத்தான். குஷால் கானுக்கு அவர் மகனே 'எட்டப்பன்—மீர் ஜஃபர்' ஆனான். குஷால் கானின் பகைமை மறைந்த பின், மேற்குப் பகுதிகள் அனைத்தும் பேரரசுடன் இணைந்தன.

[1] J. N. Sarkar—Ibid.

விளைவுகள்—அரசியல் : (1) தம் நாட்டிலேயே நிலவிய தென் மண்டலத்தில் சிவாஜியின் எழுச்சியின் தன்மையையோ, தக்காண சுல்தான்களின் முயற்சிகளையோ முற்றிலும் புரிந்து கொள்ள முடியாமல், பேரரசின் விரிவாக்கத்தைக் கருதிப் படைகளை ஒருமுகப்படுத்தித் தெற்கே அனுப்பாமல், ஔரங்கசீப் அவற்றை வடமேற்கு எல்லைகளுக்கு அனுப்பிவைத்தார். இதனால் பேரரசர் தெற்குப் பகுதிகளில் எளிதில் வெற்றி காண முடியாமற்போனது மட்டுமன்றி, சிவாஜியின் வெற்றிகள் உறுதிப்படுத்தப்படவும் தம்மை அறியாமலேயே அவருக்கு நல்வாய்ப்பினை நல்கினார். (2) சிவாஜியின் தக்காணப் படையெடுப்புக்குப் பேரரசர் மேற்குப் புறத்தில் செலுத்திய கவனம் பெரிதும் துணைபுரிந்தது. (3) சிறந்த தளபதிகளைத் தக்காணத்திலிருந்து மேற்குப் பகுதிகளுக்குத் திரும்ப அழைத்துக் கொண்டார். இதனாலும் பல சிறந்த தளபதிகள் தக்காணத்தில் இல்லாது போனதால், பிற்காலத்தில் ஔரங்கசீப் மராட்டிய மண்டலத்தையே இழக்க நேரிட்டது. அது மட்டுமன்றிப் பல சிறந்த தளபதிகள் போர்க்களங்களில் மாண்டனர். எனவே, தளபதிகளின் எண்ணிக்கையும் குறையலாயிற்று. (4) எல்லாவற்றுக்கும் மேலாக, அரசியல் கண்ணோட்டமும் அகன்ற பார்வையும் கூர்ந்த முன்னோக்கும் பேரரசருக்கு இருந்திருக்குமேயானால், தக்காண சுல்தான்களுக்கு எதிராகவோ, அல்லது வீர சிவாஜியை எல்லைக்குள் கட்டுப்படுத்த மராட்டியர்களுக்கு எதிராகவோ ஆப்கானியர்களைப் பயன்படுத்திக் கொண்டிருக்க முடியும். இதில் பேரரசர் தவறியதன் விளைவாக, மாமன்னர் எத்தனை முயற்சிகள் மேற்கொண்ட போதிலும், அவை பயனில்லாமற் போயின. இடை இடையே தெற்கே மராட்டியர்கள், சிவாஜிக்கு ஆதரவு அளித்த சுல்தான்கள், வடக்கே இராஜபுத்திரர்கள் ஆகியோரின் எழுச்சிகளும் எளிதில் வெற்றி பெறும் வாய்ப்பினைப் பெற்றன. (5) பல்லாயிரக் கணக்கானோர் மத்திய ஆசியாவில் அடிமைகளாக விற்கப்பட்டனர். எனவே, இவை மேலும் பல நீடித்த போராட்டங்களுக்கு வழிகோலின.

பொருளாதாரம் :—வெளிநாடுகளுக் கெதிராகத் தொடுக்கப்படும் போர்கள் நிச்சயமாகக் கருவூலத்தை வற்றிப்போகுமாறு தாம் செய்யும். உதாரணமாக, பதினான்காம் லூயீ நான்கு போர்களைத் தொடுத்தபின் தம் பேரனை அழைத்து அறிவுரை கூறியதை இங்கு நினைவுபடுத்திக்கொள்ளலாம்: 'அமைதியைப் போற்றும் மன்னனாக இருப்பாயாக; போர்களிலும் கட்டடங்கள் கட்டுவதிலும் என்னைப் பின்பற்றாதே; நான் போர்களை வெகு

அலட்சியமாகத் தொடுத்தேன். அவற்றை அகம்பாவத்தினுல் தொடர்ந்தேன்; என்னைப் பின்பற்ருதே!'[1] ஔரங்கசீபுக்கும் இறக்கும் தறுவாயில் இதுபோன்ற உணர்வுதான் இருந்தது.

ஆனுல், போர்கள் சில சமயங்களில் பேரரசின் புகழுக்காக அல்லாமல், அதன் எல்லைகளை நிலைநிறுத்தத் தேவைப்படு கின்றன. உண்மைதான். ஔரங்கசீப் தொடுத்த ஆப்கானியப் போர்கள் பதினுன்காம் லூயீ தொடுத்த போரைப் போன்றன அல்ல. பதினுன்காம் லூயீ பெரும் போர்களைத் தொடுத்து இறுதியில் தோல்வியே கண்டார். ஆனுல், ஒருவிதத்தில் ஔரங்கசீப் தொடுத்த போர்கள் விரிவாக்கத்திற்காக என்று கூறுவதைவிட, 'டமாக்கிளிஸ் கூர்முனைவாள்' (Damocles' Sword) போன்று, என்றும் காத்திருந்த பாரசீகத்தின் பேராபத் தைத் தடுத்து நிறுத்துவதற்காக என்று கூறுவதும் பொருத்த முடையதாகும். பாரசீகப் பேரரசர் 1670ஆம் ஆண்டில் இந்தியாமீது படையெடுக்க இருப்பதாக ஔரங்கசீபுக்குச் செய்தி எட்டியது. இதனுலும், தம் தந்தை செய்யாத செயற் கரிய செயலைத் தாம் செய்து காண்பிக்க விழைந்ததாலும், இம் முயற்சியில் அவர் இறங்கினுர். எனவே, பேரரசுக்கு நிறைந்த பொருட் செலவு ஏற்பட்டது. தம் வாழ்நாள் முழுவதும் ஔரங்கசீப் எதிர்கொள்ள நேரிட்ட பலமுனைத் தாக்குதல் களுள் இது ஒருமுனையே ஆகும். இதனுல் பேரரசுக்கு நிறைந்த செலவும் பொருள் விரயமும் ஏற்பட்டதை மறுப்பதற்கில்லை.[2]

## தூதர்கள்

மேற்கு உலகுடன் நல்லுறவு:— ஔரங்கசீப் அரியணை ஏறிய இரண்டு ஆண்டுகளுக்குப் பின் (மேற்கு உலகு) மத்தியக் கிழக்கு உலகின் அரசர்கள் பலர் ஔரங்கசீபுடன் நல்லுறவை வளர்த்துக் கொள்ள விரும்பினர். இம்மாதிரியான தூதுவர் களின் பரிமாற்றம் சுமார் 1670ஆம் ஆண்டு வரை நீடித்தது. புனித மக்காவின் ஷரீப் சிறப்புத் தூதுவர் ஒருவரை அனுப்பி னுர். பால்க் (Balk), புக்காரா (Bokhara), காஷ்கர் (Kashgar), ஊர்கஞ்சு (Urgunj) ஆகிய நாடுகளிலிருந்தும் தூதர்கள் மாமன்னருக்கு வெகுமதிகளைக் கொணர்ந்தனர்; மாமன்னரிடத் தில் தம் மரியாதையையும் நல்லுறவு இணக்கத்தையும் தெரிவித்துக்கொண்டனர். பஸரா (Bassara), ஹலரமவுத்

[1] Myers—History of Europe - The Modern Age.

[2] J. N. Sarkar—History of Aurangzeb, Vol. III.

(Halaramouth), எமன் (Yemen) முதலிய நாடுகளின் ஆளுநர்கள் இந்தியாவுக்குத் தூதர்களாக வந்தனர்.[1] துருக்கியிலிருந்து ஆளுநர்களும் தூதர்களாக வந்தனர். பார்பரி (Barbari), அபிசீனியா (Abyssenia) மன்னர்களும் தூதர்களை அனுப்பினர். மனுச்சி அபிசீனியாவிலிருந்து தூதர் அனுப்பப்பட்டார் எனக் கூறுகிருர். அத் தூதரின் பெயர் முராத் அபேதான் (Murad Abedhan) என்றும் அவர் கூறுகிருர்.[2] கான்ஸ்டான்டிநோப்பிலிலிருந்து ஒரு தூதர் அனுப்பப்பட்டார். இவர்கள் அனைவரும் சிறப்பான வெகுமதிகளையும் கொண்டுவந்தனர். பேரரசர் ஔரங்கசீபும் அதற்கு மரியாதை செய்யும் முறையாக அத் தூதர்களுக்குச் சிறப்பான வெகுமதிகளையும், அம் மன்னர்களுக்கு வெகுமதிகளையும் அள்ளிக் கொடுத்தார். 'வெளி உலக மன்னர்களின் கரங்களைக் கூசச் செய்யும் வெகுமதிகளையும், தூதர்களுக்குப் பரிசுகளையும் அளித்தது, முஸ்லிம் உலகைத் தாம் தம் தந்தையிடத்தும் சகோதரர்களிடத்தும் நடந்து கொண்ட விதத்தை மறைப்பதற்காகவே இருக்கக்கூடும்; அல்லது இந்தியாவின் எல்லையற்ற செல்வங்களின் எஜமானன் அவர்களுக்குச் சாதாரணமாகக் காட்டும் மரியாதையாகவும் இருக்கக்கூடும்' எனப் பேராசிரியர் ஜாதுநாத் சர்க்கார் கூறிக் கேலி செய்கின்ருர்.[3] பேரரசர் முடிசூட்டிக்கொண்ட சில மாதங்களிலேயே (நவம்பர், 1659) மீர் சையது இப்ராஹீம் என்பார் மக்காவுக்கு அனுப்பப்பட்டார். அவரிடத்து ஆறு லட்சம் ரூபாய்த் தொகையை அனுப்பி, ஏழைகளுக்கும் மௌல்வீகளுக்கும் சமய குரவர்கட்கும் தர்மமாகச் செலவிடுமாறு ஆலம்கீர் ஏவினர். ஔரங்கசீபின் கொடைவள்ளல் தன்மையை அறிந்த மக்காவின் ஷரீப் ஒவ்வோர் ஆண்டும் இந்தியாவுக்கு வந்துகொண்டு இருந்தார். பாரசீகத்தின் இரண்டாவது ஷா அப்பாஸ் தூதர்களை அனுப்பினர். புதக் பேக் (Budaqe Beg) என்பவர் பாரசீகத்தின் சிறப்புத் தூதராக அனுப்பப்பட்டார். 1661ஆம் ஆண்டில் ஷா அப்பாஸ் 4,22,100 ரூபாய் பெறுமான வெகுமதிகளை அனுப்பினர். ஔரங்கசீப் தர்பிய்யத்கான் மூலம் 1 லட்ச ரூபாய் பெறுமான வெகுமதிகளை 1665ஆம் ஆண்டு அனுப்பினர். ஆனல், ஷா அப்பாஸ் வெகுமதிகளைப் பெற்றுக் கொண்டு, ஔரங்கசீப் சிவாஜியை அடக்க முடியாமலும் கட்டுப்படுத்த முடியாமலும் தம்மைத் தாமே 'உலகத்தை

[1] Manucci—Storia de Mogor, Vol. I & II.

[2] Manucci—Ibid Vol. II - P 109-11.

[3] J. N. Sarkar—A Short History of Aurangzeb. Also J. N. Sarkar, 'Shivaji and his times'.

வெல்வோர்'— (ஆலம்கீர்) என்ற பட்டத்தைச் சூட்டிக் கொள்வது கேலிக்கூத்து என இடித்துக் கூறியதாகப் பேராசிரியர் ஜாதுநாத் சர்க்கார் மேற்கோள் காட்டுகிறார். ஆனால், உண்மையில் பாரசீகப் பேரரசர் ஷா அப்பாஸின் கடிதம் ஔரங்கசீபைக் கேலி செய்வதற்கு மாறாக, ஔரங்கசீப்மீது அவர் இரக்கம் கொண்டுள்ளார் என்பதையே எடுத்துக்காட்டுகின்றது.

ஷா அப்பாஸின் கடிதம்: 'இந்தியாவில் பெரும்பாலான ஜமீன்தார்கள் அவர்களின் மன்னர் பலவீனராகவும், திறமையற்றவராகவும் இருப்பதனால் எதிர்க்கின்றார்கள் என்பதை அறிகின்றேன். அவர்களுள் சிவா என்பவர் தலைமையானவர் என்பதையும் (அறிகின்றேன்). வெகுகாலம் யாரும் அறியாதவராக, அவர் பேரை யாரும் தெரியாதவராக இருந்த இந்தச் சிவா, உங்களுடைய வசதியின்மையையும், உங்கள் துருப்புகள் பின்வாங்குவதையும் பயன்படுத்திக்கொண்டு, மலையின் சிகரம் போன்று தோன்றுகின்றார்; பல கோட்டைகளைப் பிடித்துள்ளார். உங்கள் வீரர்கள் பலரைக் கொன்றுள்ளார். உங்கள் நாட்டின் பல பகுதிகளைக் கொள்ளையடித்துள்ளார். நகரங்களையும் கிராமங்களையும் அழித்துள்ளார். இறுதியாக, உங்களிடமே நாம் நேர் எதிராக வருகின்றோம். நீங்களோ ''உலகத்தை வெல்வோர்'' என்று சொல்லிக் கொள்கிறீர்கள்......இப்பொழுது ஹுமாயூனின் வாரிசாக நீங்கள் கஷ்டப்படும்போது நானே நேராக என்னுடைய பெரும் படையுடன் இந்தியா வருவேன்; உங்களைச் சந்திப்பேன்; எல்லா உதவியும் அளிப்பேன். அராஜகம் என்னும் காட்டுத் தீயை அழிப்பேன்.'[1]

எவ்வாறாக இருப்பினும், பேரரசரின் வெளிநாட்டுக் கொள்கைகளைப் பொறுத்தவரை, அவர் சில குறிக்கோள்களைக் கொண்டிருந்தார் என்பது தெளிவு.

[1] Bernier, 'The Travels'—P. 150 .
பெர்னியரும் ஷா அப்பாஸின் கடிதத்தில் சுடுசொற்கள் இருக்கக் கூடும், அல்லது பாரசீகத் தூதரின் சுடுசொற்களோ அவரின் செயல்களோ புண்படுத்துவனவாக இருந்திருக்கக்கூடும் என்று கூறுகிறார். ஷாஜஹானது ஆட்சியிலும் கூடப் பாரசீகத் தூதரைத் தட்டிக் கேட்கத் துணிவு இருந்ததில்லை என்கிறார். அதிலே, ஷா அப்பாஸின் கடிதத்திலிருந்து அறியவரும் உண்மை என்னவெனில், ஔரங்கசீப் உள்நாட்டு விவகாரத்தைச் சரிவர முடிக்க இயலாத நிலையில், பேரார்வத்தாலும், அச்சத்தாலும் எல்லைப்புற விவகாரங்களில் ஈடுபட்டுவருகிறார் என்பதேயாகும்,

அவையாவன: (1) மத்தியக் கிழக்கு உலகுடன் நல்லுறவு. (2) நாட்டின் கிழக்கு மேற்கு எல்லைகளில் தொல்லை இல்லாத விரிந்த எல்லைப் பரப்பைக் கொண்ட நாடு—மேற்கே ஆப்கானிஸ்தானம் முதல் தெற்கே தஞ்சை வரை. (3) நல்லுறவு சம அந்தஸ்து ஆகிய அடிப்படையில் தம்மைப் பேரரசராக ஏற்றுக் கொள்ளப்படும் அடிப்படையில் அகன்ற பேரரசு. அவ்வாறு உறவு பலப்படுத்தப்பட்டால், புகழ் பரவுவது மட்டுமன்றி, ஆட்சியின் ஸ்திரத்தன்மையும் உறுதிப்படும் என்பதே முக்கிய மான குறிக்கோளாக இருந்திருக்கவேண்டும். ஏனெனில், ஔரங்கசீப் புகழை விரும்பாதவர்; முகஸ்துதி புரிகிறவர்களை அறவே வெறுத்தவர். ரோமானியப் பேரரசர்களும் அசோகரும் தூதுவர்கள் மூலம் நட்புறவு கொண்டது போல, ஔரங்கசீபும் வெளியுலகுடன் நட்புறவு கொள்ள விழைந்தார். ஔரங்கசீபின் வெளிநாட்டுக் கொள்கையில் 'மூன்று ரத்தினங்கள்' (Triratnas) உண்டு.

1. நல்லெண்ண நல்லுறவு (Goodwill and Cordiality).

2. தொல்லையற்ற விரிவடைந்த பேரரசு அல்லது தொல்லையற்ற எல்லைப் பரப்பு (Trouble-free Country or 'Civis Mogor')

3. சம அந்தஸ்து—பரஸ்பர அங்கீகாரம்.

இறுதியாக, அவர் இறக்கும் தறுவாயில் அவரது பேரரசின் எல்லை வடக்கே காஷ்மீரம் முதல் தெற்கே தரங்கை, நாகப்பட்டினம் வரையும், மேற்கே ஆப்கானிஸ்தானம் முதல் கிழக்கே வங்கம் வரையும் பரவியிருந்ததாகவும், அஸ்ஸாமின் பகுதிகள் சிலவும் அதில் உட்பட்டு இருந்ததாகவும் கோலின் டேவிஸ் 'வரலாற்று வரை படம்' என்னும் சிறு நூலில் குறிப்பிடுகின்றார்.[1]

1 Collin Davis—Historical Atlas of Indian Peninsula. Also, Kini & Rao Historical Atlas of India.

# 10. ஔரங்கசீபின் செங்கோன்மை

ஔரங்கசீபின் செங்கோன்மைபற்றி ஆராய்ந்து பார்ப்பது இங்கு முற்றிலும் அவசியமாகிறது. ஏனெனில், இதனைப்பற்றி இதுவரை விளக்கம் கிடைத்ததில்லை என்பது ஒரு புறம் இருக்க, அவ்வாறே இப் பேரரசருக்கு ஏதாவது அரசியல் கருத்து இருந்திருக்க முடியுமா என்ற ஐயப்பாடு வேரூன்றிய தப்பெண்ணமும் மறுபுறம் உள்ளது. இதனாலேயே அடிப்படைச் சான்றுகளிலிருந்து செங்கோன்மையைப்பற்றி ஔரங்கசீபின் கருத்துகள் என்னவாயிருந்தன என்னும் சாற்றைப் பிழிந்து எடுக்கலாம்.

பேரரசர் ஔரங்கசீப் ஆலம்கீர் செங்கோன்மையின் தன்மையை முற்றிலும் உணர்ந்திருந்தார். உலகிலுள்ள பயிர்களெல்லாம் வான் நோக்கி மழையை எதிர்பார்த்து நிற்பது போன்று, தம் குடிமக்களும் தம் செங்கோன்மையை எதிர்பார்த்தே வாழ்கின்றனர் என்பதை ஆலம்கீர் அறிந்திருந்தார். ஆயுள் முழுவதும் போரில் ஈடுபட நேரிடினும் 'வேலன்று வென்றி தருவது மன்னவன் கோலதூஉம் கோடா தெனின்' என்ற திருவள்ளுவர் வாக்கினை எம் மன்னனும் அறிந்திருக்கத் தான் வேண்டும். அதனால்தான் அவரால் அன்பு, நீதி என்னும் மழையை எல்லார்மீதும் பொழிய முடிந்தது. ஆனால், இது மரபுக்கு மாறான கருத்தாகத் தோன்றக் கூடும்; எனினும், வரலாற்று உண்மைக்கு மாறானது அன்று. ஔரங்கசீப் எழுதிய நூற்றுக்கணக்கான கடிதங்களுள் சுமார் 2000 கடிதங்களை மொழிபெயர்த்துத் தொல்பொருள் துறையினர் பாதுகாத்து வருகின்றனர். அக் கடிதங்களின் தொகுப்பே 'ருகாஅத்தெ ஆலம்கீர்' (Rukha'at-i Alamgir) என்று அழைக்கப்படுகின்றது என்றும், இவற்றை எல்பின்ஸ்டன் என்பவர் மொழிபெயர்த்துள்ளார் என்றும் நாம் முன்பே பார்த்தோம். அரசியல் விவு

காரங்களில் பொதுவாகவே ஆழ்ந்த அறிவு, அகன்ற நோக்கு, பரந்த பார்வை, அளவுக்கு மீறிய துணிச்சல், எதனுலும் பாதிக்கப்படாத நடுநிலைமை ஆகிய நற்குணங்களை ஔரங்கசீப் பெற்றிருந்தார் என்பதைப் பல இடங்களில், பல தடவைகளில் தாமே நிருபித்துக் காட்டியுள்ளார். இதற்கு ஔரங்கசீபின் கடிதங்கள் மட்டுமல்லாது, அவரது ஆணைகளும் சாட்சி பகர் கின்றன. ஆலம்கீரின் சொற்பொழிவுகளுள் ஒன்றைப் பெர்னி யரும் குறிப்பிடுகின்ருர். ஔரங்கசீபின் இச் சொற்பொழிவு, உலமாக்கள் அல்லது பிரபுக்கள் சபைக்குத் தொகுத்து அளிக் கப்பட்டதாகும்.

ஔரங்கசீபின் சொற்பொழிவு: 'மாமன்னர்களின் கடமை கள் என்ன? கஷ்டங்களிலும் ஆபத்துகளிலும் தம்முயிரைப் பணயம் வைத்துக் கைகளில் வாளை ஏந்தியவாறே தம்மிடம் ஒப்படைக்கப்பட்ட மக்களுக்காக வீரமரணம் புரிவதுதான் அவர்களது முதற் கடமை என்பதை நீங்கள் அறிவீர்கள்! பொதுநலத்தைப்பற்றி எனக்கு அக்கறை இல்லை என்று நீங்கள் கருதிவிடக்கூடாது. பொதுநலனைப் பேணுவதற்காகவும், அதைப் பாதுகாப்பதற்காகவும் இரவுகளில் மெய்ம்மறந்து உறங்குவதும், கேளிக்கைகளில் பகற்பொழுதைக் கழிப்பதும் மாபெரும் தவறு எனக் கருதுபவன் நான். ஆனுல், நான் என் உடல்நலனைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும்; சொந்தச் சௌகரியங்களையும் கவனித்துக் கொள்ள வேண்டும்; எனவே, இதனுல் என் அரச அலுவல்களை நான் எவரேனும் ஒருவரிடத் தில் ஒப்படைத்துவிட வேண்டும் என்றெல்லாம் சிலர் கருதக் கூடும். ஆனுல், அரசனின் மகனுகப் பிறந்த ஒருவன், அரியணை யில் வீற்றிருக்கும் ஒருவன் இவ் வுலகத்திற்கு இறைவனுல் அனுப்பப்பட்டது தனக்காகவே வாழ்வதற்கோ உழைப்பதற் காகவோ அன்று, பிறருக்காகவே என்பதை அச் சாரார் மறந்து விடுகின்றனர். மக்களின் நம்பிக்கையும் நலனுமே உங்களைக் கலந்து ஆலோசிக்குமாறு என்னைத் தூண்டுகின்றன. அரச அதிகாரம், நீதி, நாட்டுப் பாதுகாப்பு இவையனைத்தும் நிலை நாட்டப்பட்டே தீரவேண்டும். இந்த மனிதன் ஒரு சாரார் பரிந்துரைக்கும் மடிமையின் விளைவுகளை ஆராய்வதற்கில்லை. இவர் அதிகார ஒப்படைப்பினுல் விளையும் தீமைகளையும் அறி வார். காரணம் இல்லாமலா நம் பெரும் புலவர் ஸஅதி அவர் களே வியந்தார்கள்:

''மன்னர்கள் ஆவதைக் கைவிடுங்கள்!
மன்னர்கள் ஆவதைக் கைவிடுங்கள்!'' என்று?

உங்கள் பேரரசு உங்களாலேயே ஆளப்பட வேண்டுமென உறுதிப்படுத்திக்கொள்ளுங்கள்.' இச் சொற்பொழிவை ஔரங்கசீப் நிகழ்த்தியதாக பெர்னியர் கூறுகிருர்.[1] இச் சொற்பொழிவிலிருந்து சில உண்மைகள் புலனுகின்றன:

1. அரச பாரம் என்பது பெரும் பொறுப்பாகும்; இறைவனுல் ஒப்படைக்கப்பட்டதாகும். மக்களின் நலன்களைப் பாதுகாப்பது அரசனின் தலையாய கடமையாகும்.

2. அதிகாரம், நீதி ஆகியவற்றைத் தவருக உபயோகிக்கக்கூடாது. அவை எல்லோருக்கும் சமமாகவே அமைய வேண்டும்.

3. ஔரங்கசீப் மடிமையை அறவே வெறுத்தொதுக்க விரும்பினுர். சலியாத உழைப்பில் நம்பிக்கை கொண்டவர்.

4. முக்கியமாக, மக்களின் நலன்களைப் பாதுகாக்கும் பொறுப்பை ஏற்றபொழுது மக்களிடையே வித்தியாசங்களை அல்லது பிரிவுகளை அவர் கண்டதாகவோ, அல்லது ஏற்படுத்தியதாகவோ ஔரங்கசீபின் சொற்பொழிவு எடுத்துக் காட்டவில்லை; பெர்னியரின் சாட்சியமும் கூறவில்லை.

5. ஔரங்கசீப் தனக்கென வாழாப் பிறர்க்கென வாழ்ந்த பெருந்தகையாளர். இதனுல்தான் நாட்டுப் பாதுகாப்புடன் நீதியையும் இணைத்து உயர்த்திப் போற்றியுள்ளார்.

6. மாமன்னர் ஔரங்கசீப் எவரிடத்தும், பொதுவாக எல்லோரிடத்தும் தயை, கருணை, அன்பு ஆகியவற்றைச் சொரிய மறுத்ததில்லை. அவர் சில சமயங்களில் கடிந்து கொண்டாலும், நிகழ்ச்சிக்குப் பின்னர் அவற்றை மறந்து விடுவாராகையால், அவருடைய நல்ல உள்ளத்தைப் பலரும் தவருகப் பயன்படுத்திக் கொண்டனர்.

பொதுவான நற்குணங்களைப் பெற விழைந்தது மட்டுமன்றி, பெற்றிருந்தது மட்டுமன்றி, ஆட்சியைப்பற்றிப் பொதுவாக, அது இறைவனின் திருவுள்ளத்தைச் செயல்படுத்தும் ஒரு வாய்ப்பு என்று அவர் கருதினுர். இனி 'இறை ஒப்படைப்புக் கொள்கை' என்ன என்பதைப் பார்ப்போம்.

[1] Bernier's 'The Travels' quoted. Lanepoole's-Aurangzeb. P. 76-78.

## இறை ஒப்படைப்புக் கொள்கை அல்லது 'அமானத்' (Amanath) கொள்கை

16, 17ஆம் நூற்றாண்டுகளிலேயே, பேரரசர் வாழ்ந்த அக் காலத்திலேயே இங்கிலாந்தில் ஸ்டூவர்ட் மன்னர்கள், குறிப்பாக முதலாம் ஜேம்ஸும், முதலாம் சார்லஸும் 'தெய்விக உரிமைக் கொள்கை'யை (Divine Right Theory) நம்பினர்;[1] அதன் அடிப்படையிலேயே ஆட்சியும் புரிந்து வந்தனர். ஜேம்ஸின் 'உரிமை பெற்ற முடியரசர்களின் சட்டம்' என்னும் கொள்கைக்கும் ஔரங்கசீபின் 'அல்லாவின் அமானிதம்' அல்லது 'இறைவனின் ஒப்படைப்பு' என்னும் கொள்கைக்கும் தோற்றத்திலே ஒற்றுமைகள் இருப்பதாகக் காணப்படினும், அவற்றிற்கிடையே உண்மையில் சில வேற்றுமைகள் உள்ளன. ஆனால், இவ்விரு கொள்கைகளுக்கும் பொதுவாக விவிலிய வேதத்திலும், திருக் குர்ஆனிலும் ஆதாரங்கள் நிறையக் காணக் கிடக்கின்றன.

ஜேம்ஸின் இறை உரிமைக் கொள்கைப்படி[2] மன்னர் இறைவனிடத்திருந்து ஆளும் அதிகாரத்தைப் பெறுகிறார். ஆனால், அவ்வாறு இல்லாமல் ஔரங்கசீபோ, ஒரு படி மேலே சென்று, ஆளும் பொறுப்பு மிகப் பெரிய பொறுப்பென்றும், அது இறைவனால் ஒப்படைக்கப்பட்டது என்றும், அதனின்றும் தப்ப முடியாதென்றும் சுட்டிக்காட்டி யுள்ளார். அவருடைய அரசியல் கருத்தும் அவரது அடிப்படைக் கருத்திற்கு ஏற்றவாறு அமைந்துள்ளது. எவ்வாறெனில், 'எந்த ஒரு முஸ்லிமும் தனது ஒவ்வொரு செயலுக்கும் மறு உலகில் நிச்சயமாக இறைவனுக்குப் பதில் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறான்' என்ற மூலக் கருத்தை ஔரங்கசீப் நம்பியிருந்தமையால்தான் தம்மால் இயன்றவரை செங்கோலை வளைக்காமல், அதனைப் பாதுகாக்க அவரால் ஆவனவெல்லாம் செய்ய முடிந்தது.

தம் கருத்துகளை நிரூபிக்கும் முகமாக, ஔரங்கசீப் ஆலம்கீர் தம்மை ஓர் 'ஊழியன்', 'ஆடு மேய்ப்பவன்'[3] என்றெல்லாம் உவமைச் சொற்களை உபயோகித்துத் தமது அரச கடமைகளைத் தெளிவு படுத்தியுள்ளார். மற்றும் ஓர் எடுத்துக்காட்டாக,

[1] G. B. Adams—'Constitutional History of England,' and G. M. Trevelyan 'England under Stuarts'.

[2] Prof. Bandhari's 'History of Political Thought'. Also Sabine's 'History of Political Philosophy'.

[3] Myers' 'History of Europe - The Modern Age'.

ஔரங்கசீப் தம் தந்தைக்கு எழுதிய கடிதம் ஒன்றில் இக் கருத்துகளைத் தெள்ளத் தெளிவாகத் தெளிவுபடுத்தியுள்ளார்.

## ஔரங்கசீபின் கடிதம்

'எவர் தம் மக்களைச் சீராக வளர்த்துப் பாதுகாப்பதற்காகத் தம் கடமைகளை நிறைவேற்றுகின்றரோ, அவரிடத்தில் எல்லாம் வல்ல இறைவன் தனது கருணையை நல்குகிறன். இதிலிருந்து, ஓநாய் ஆடு மேய்ப்பவனக இருக்கத் தகுதியற்றது என்பது தெளிவுபட வேண்டும். அதுபோன்றே, கோழையும் அரசாங்கத்தின் கடமைகளை ஆற்ற முடியாது. அரச இறைமை மக்களின் பாதுகாவலாக ஏற்படுத்தப்பட்டுள்ளது; சுயக் கேளிக்கைக்காகவும், கொண்டாட்டங்களுக்காகவும் அன்று. எல்லாம் வல்ல இறைவன் இந்த ஊழியனை மேன்மை தங்கிய பேரரசராம் தங்களுடைய தவருன எண்ணங்களிலிருந்து விடுவிப்பாஞக.'[1]

ஔரங்கசீபோ தம்மைத் தாமே 'ஊழியன்' என்றும், 'மக்களின் காவலன்' என்றும் அழைத்து வந்தார். இதற்கு மாருகப் பிரெஞ்சுப் பேரரசர் 14ஆம் லூயீயோ, 'நானே அரசு' (I am the State) என்று கூறியிருப்பதை இங்கு நாம் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். பிரஷ்யாவின் இரண்டாம் பிரடரிக்கும் தம்மை ஓர் ஊழியன் என்று அழைத்துக்கொண்ட கருத்தும் இங்கு ஒப்புநோக்கத் தக்கதாம்.

## நீதி - காவல் அரசு

ஆனல், ஔரங்கசீபின் அரசியல் கொள்கைகளை 'இறை ஒப்படைப்புக் கொள்கை' என்று சொன்னல், அப் பேரரசரது இலட்சியவாத அரசை 'நீதி-காவல் அரசு' என்று குறிப்பிடலாம். ஷாஜஹானின் பேரவையினர் ஒருவர் கூறியது ஔரங்கசீபின் ஆட்சிக்கும் பொருந்தும்.[2]

'அரசியல் தந்தை' அரிஸ்டாட்டல் காலத்திலிருந்தே இலட்சியவாதக் கொள்கை பல நாடுகளிலும் இயல்புக்கும், வரலாற்று நிலைக்கும், மக்களின் மனப்பான்மைக்கும், அரசியல் அமைப்பின் முன்னேற்றத்திற்கும் தக்கவாறு ஓங்கியும், வளர்ந்தும், வீழ்ந்தும் வந்துள்ளது. இலட்சியவாதக் கொள்கையினலும்,

1 'Letters of Aurangzeb—Anecdotes of Aurangzeb' by Sarkar.

2 Ibn Hasan, 'The Central Structure of the Mughal Empire'. Also quoted by Vincent Smith.

வேறு அரசியல் தத்துவங்களினுலும் நீதியும் மக்கள் நலனும் பாதுகாக்கப்பட வேண்டும் என்பதை யாவருமே ஒப்புக்கொள்வர். ஆனுல், கிரேக்கர்களுக்குப் பல நூற்ருண்டுகளுக்குப் பின், குறிப்பாகப் பிரெஞ்சுப் புரட்சிக்குப் பின்தான், குடியரசுக் கொள்கை, மக்கள் நலன், நீதியின் அவசியம் ஆகிய அரசியல் கருத்துக்கள் வலியுறுத்தப்படுவதைப் பார்க்கின்ருேம். ஆனுல், அப் புரட்சிக்கு ஒரு நூற்ருண்டுக்கு முன்பே, அதிலும் இந்தியாவின் மத்திய காலத்திலேயே மக்கள் நலன், நீதி ஆகியவற்றின் அடிப்படையில்தான் அரசு நடத்தப்பட வேண்டுமென்பதுபற்றி முகலாயப் பேரரசர் ஔரங்கசீப் வலியுறுத்திஞரென்ருல், அது நம்பமுடியாததாக இருக்கலாம். எனினும், தந்தை ஷாஜஹான் அரியணையில் வீற்றிருந்தபோது அவர்தம் அமைச்சர், நீதி-காவல் அரசு எவ்வாறு இருக்க வேண்டும் என்று விளக்கம் அளித்தாரோ அதுதான் ஔரங்கசீபுக்கும் முன்மாதிரியாக இருந்திருக்க வேண்டும். நீதி-காவல் அரசு என்பதற்குரிய விளக்கத்தை அவ் வமைச்சர் கூறுகிருர்: 'மாமன்னரே! வாழ்க! தாங்கள் இறைவனுக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டவர்கள். எவ்வாறெனில், மன்னர் நீதியானவர்; அமைச்சர்கள் திறமை மிக்கவர்கள்; அலுவலர்கள் நேர்மையானவர்கள்; நாடு வளமாக உள்ளது; மக்கள் திருப்தியுடன் வாழ்கின்றனர்.'[1] இக் குறிக்கோள்களை லட்சியமாகக் கொண்டே தான் ஔரங்கசீப் ஆட்சியில் அமர்ந்தார். இதனை வின்சன்ட் ஸ்மித்தும் மேற்கோளாகக் காட்டி, ஔரங்கசீபின் ஆட்சிக்கும் இது பொருந்தும் என்கிருர்.[2] மேலும், பெர்னியரின் காஃபி கானின் சாட்சியங்கள் நிச்சயமாக ஔரங்கசீப் நீதி-காவல் அரசு என்ற அரசியல் கருத்தில் நம்பிக்கை கொண்டிருந்தார் என்பதை உறுதிப்படுத்துகின்றன.

## ஔரங்கசீபின் அரசியல் கருத்துகளும், மத்திய கால ஐரோப்பிய அரசியல் கருத்துகளும்

ரோமானியப் பேரரசின் வீழ்ச்சிக்குப் பின் ஐரோப்பிய அரசியல் தத்துவ ஆசிரியர்களுள், 1. மார்சிலியோ, 2. டாண்ட்டே, 3. விக்லிஃப் ஆகியோர் சிறந்தவராவர். அவர்கள் அரசியல் தத்துவ ஞானிகளாகத் திகழ்ந்தனர். அவர்

[1] ஷாஜஹான் ஆட்சியில் அமைச்சர் ஒருவர் இப்படிக் கூறியதாக இப்னு ஹசன் கூறுகிருர்— Ibn Hasan, The Central Structure of the Mughal Empire P. 360.

[2] V. A. Smith—Oxford History of India.

களின் கருத்துகள் ஔரங்கசீபின் அரசியல் கருத்துகளுக்கு இணக்கமாக இருப்பதைக் காண்கின்றோம். மேற்குறிப்பிட்ட அரசியல் தத்துவ ஞானிகளின் கருத்துகளை ஔரங்கசீபின் கருத்துகளுடன் இங்குச் சற்று ஒப்பு நோக்குவோம்:

1. ஔரங்கசீபும் மார்சிலியோவும்

மார்சிலியோ (Marsilio of Padua) (1670-1740):—மார்சிலியோவின் கருத்துப்படி, மக்களின் நலன்களை என்னவென்று கண்டறிந்து அவற்றைப் போற்றவும், பாதுகாக்கவும், குடிமக்களின் நலன்களை வளர்க்கவுமே அரசு அமைந்துள்ளது.[1] அரசின் கடமையும் அதுவேயாகும். இதைப் பேராசிரியர் பந்தாரி[2] விவரிப்பது போல, ஹாப்ஸ், லாக், ரூஸோ ஆகிய அறிஞர்களுக்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே 'மக்களின் இறையுரிமை' என்னும் கோட்பாட்டின்மீது, 'அரசு நாட்டின் நலனைக் கருதிப் பொருளாதாரக் கட்டுப்பாட்டை ஏற்றுக்கொள்வது கடமையாகும்; கல்வியின் அவசியத்திற்காகவும் அரசு சுய பூர்த்தி செய்யும் ஒரு சிறு அளவாக இயங்குகின்றது,' என்று மார்சிலியோ சாற்றினர். இங்கு இதனை நாம் ஆய்தல் பொருத்த முடையதாகும். மார்சிலியோவின் கண்கொண்டு ஔரங்கசீபின் முந்திய மடலை நாம் மீண்டும் உற்றுநோக்கினல், உறுதியாகச் சில அரசியல் கருத்துகளை அது வலியுறுத்துவதை நாம் காணலாம். இது நமக்கு விந்தையாக இருக்கும். ஆயினும், 'தம் பொறுப்பில் இறைவனல் ஒப்படைக்கப்பட்ட மக்களுக்காக அவர்களைக் காப்பதற்காகவே, கையில் வாளேந்தியாவது காத்து நின்று இறக்க வேண்டும்' என்பது அவரது அரசியல் கருத்தாகும்.[3] நிச்சயமாக, 17ஆம் நூற்றாண்டின் இந்தியப் பேரரசர் ஒருவரால் இக் கருத்து நம்பப்பட்டு வந்தது எனில், அது விந்தையிலும் விந்தையல்லவா? பேரரசர் தம் கருத்துகளை வெளிப்படுத்தியதோடு மட்டுமன்றி, அவற்றை நிறைவேற்றவும் முற்பட்ட பொழுது அவருடைய மக்களே அவரைத் தவருகப் புரிந்துகொண்டு எழுந்தனர் என்றால், அது மேலும் விந்தையாக இல்லையா? 2. இரண்டாவதாக, அதுபோன்றே அரசின் நிதியும், பொருள்களும் தனி ஒருவனுக்கு என்றில்லாமல், தம் மக்களின் நலனுக்காகவே செலவிடப்படவேண்டும்

[1] G. Sabine—'History of Political Philosophy'.

[2] Prof. R. D. Bandhari—History of Political Thought, P. 128.

[3] 'To die sword in hand in defence of the people committed to his care'—Bakhtwar Khan in Eliot and Dowson—History of India as told by her own historians, Vol. VII,

என்ற கருத்தும் ஔரங்கசீபிடம் இருந்தது. அதிலும், இது 17ஆம் நூற்றுண்டின் கருத்து என்றால், எவ்வாறு நாம் அப் பேரரசரைப் போற்றுமல் இருக்க முடியும்? 3. மூன்றுவதாக, கல்வியைப் பொறுத்த வரையில், ஔரங்கசீப் அரபிக் கல்வியை மட்டும் மிகைபடுத்தித் தமக்குக் கற்றுக்கொடுத்த ஆசிரியரைக் கடிந்துகொண்டாரென்றும், மீர் முஹம்மத் என்னும் அந்த ஆசிரியர் தமக்குப் போர் முறைகள், அரசியல் வினைத்திட்டம் ஆகியவற்றைக் கற்றுக் கொடுக்காதிருந்ததன் தவற்றைச் சுட்டிக்காட்டினுரென்றும் அறிவிக்கும் பெர்னியரின் கூற்றைப் பேராசிரியர் சத்தியநாதய்யர் நம்ப மறுக்கின்றுர்.[1] ஆனல், பெர்னியர் கூறியுள்ளதையே மனுச்சியும் தம் குறிப்பு களில் உறுதிப்படுத்தியுள்ளார். பேரரசர் தம் ஆசிரியருடன் கலந்து உரையாடியதாகக் கூறப்படும் உரையாடலையும் அவர் கொடுத்துள்ளார்.[2] பேராசிரியரின் கருத்தை ஏற்றுக்கொண் டாலும், திருக் குர்ஆனை மனப்பாடம் செய்தும், அதனை அழகு பட எழுதும் கலையைப் போற்றியும் வந்த ஔரங்கசீப் அத்துணை அளவுக்குத் தம் ஆசிரியரைக் குறைகூறி யிருப்பாரா என்பது சந்தேகத்துக்குரியதேயாகும். அது ஒருபுறம் இருக்க, இதனை அகன்ற அடிப்படையில் பார்க்கும்போது, பேரரசர் மக்கட் கல்வியின் அவசியத்தையும் உணர்ந்திருக்க வேண்டும் என்ப தைத்தான் இது சுட்டிக்காட்டுகின்றது. இனி, அடுத்து டாண்ட்டேயுடன் ஒப்பிட்டுப் பார்ப்போம்.

## 2. ஔரங்கசீபும் டாண்ட்டேயும் (Dante) :

இத்தாலியின் டாண்ட்டே ஓர் உலகப் புகழ்பெற்ற புலவர் மட்டுமன்றி, ஓர் அரசியல் தத்துவ ஞானியும் ஆவார். அரசியல் நூல்கள் சிலவற்றை அவர் எழுதியுள்ளார். அவரது தத்துவக் கருத்துகளை 'அனைத்துலக முடியரசு' (Universal Monarchy) என்பர். அவரது கருத்துப்படி, ஒரு பேரரசர் அமைதியை நிலைநாட்டும் ஆன்மிக ஆசான் ஆவார். இவருக்குச் சில ஆன் மிகக் கடமைகளும், சம்பிரதாய உலகக் கடமைகளும் நிச்சய மாக உள்ளன. ஆனல், பேரரசர் தம்மை 'ஊழியனின் ஊழியன்' (Servant of Servants or 'Servus Servorum') என்று கருதி வந்தவர்.[3] ஏறத்தாழ, இதே கருத்துகளைத்தாம்

[1] Prof. R. Sathianathier—History of Inda Vol. II, P. 326.

[2] Manucci—Storia de Mogor, Vol. II, Pages 7 - 9 1907 Edn.

[3] Lanepoole, Aurangzeb. Bernier 'Travels' quoted. Also, Prof. R. D. Bandhari—History of Political Thought and S. Sabine - History of Political Philosophy.

ஔரங்கசீப் தம்முடைய பல கடிதங்களில் வலியுறுத்தியிருக்கின்றார் என்பதை நாம் முன்னரே பார்த்துவிட்டோம். காஃபீ கான் இணைத்துள்ள கடிதத்தை எலியட்டும் டௌஸனும் மொழிபெயர்த்துத் தம் நூலில் அளித்திருப்பது நமக்கு உறுதியான சாட்சியாக அமைந்துள்ளது.[1] 'மக்கள்' என்றும், 'பொறுப்பாட்சி' (Responsible Government) என்றும், 'மன்னன் இறைவனுக்குப் பொறுப்பாளி' (Answerable to God) என்றும் ஔரங்கசீப் நம்பினாரென்றால், சமயக் கொள்கைகளிலும் அன்றாட வாழ்க்கையிலும் சகிப்புத் தன்மையையும் அறநெறிகளையுமே அவர் பின்பற்றினார் என்பதற்கு இதைவிட வேறு எந்தச் சாட்சியத்தை வழங்க முடியும்? தாமே ஒரு தொழிலை ஏற்று, அதன் வருமானத்தைக் கொண்டு அவர் வாழ்ந்து வந்தார் என்றால், அரசைப் பொறுத்தவரை, 'இறைப் பொறுப்பை' நம்பினார் என்பதற்கு மற்றும் ஓர் ஆதாரமும் தேவையா? தம் மகனே தவறு செய்யினும், தம் மகனே புரட்சி செய்யினும் வித்தியாசம் பாராது அவர் தண்டித்தாரென்றால், இதைவிட வேறு சாட்சியமும் தேவைதானா? ஔரங்கசீபும் டாண்ட்டேயைப் போன்று 'அனைத்துலக முடியரசில்' நம்பிக்கை வைத்திருந்தார்.

3. ஔரங்கசீபும் விக்லிஃபும் (Wycliffe) :

இங்கிலாந்தில் விக்லிஃப் ஒரு சமய நெறியாளர், சமயப் பரப்பாளர் மட்டுமல்லர், ஓர் அரசியல் தத்துவ ஆசிரியரும் ஆவார். விக்லிஃப் என்பார் 'இறையருள் அரசு' (Dominion of Grace) என்ற புதியதோர் அரசியல் கருத்தைத் தோற்றுவித்தார்.

அவருடைய கருத்து என்னவென்றால் : இறைவன் படைப்பவன்; அகில உலகின் அதிபதி. எல்லாம் வல்ல அதிகாரங்கள் அனைத்தும் அவனிடமே உள்ளன. தான் நாடியவர்களிடமே இறைவன் அதிகாரத்தை ஒப்படைக்கின்றான். நல்லடியார்கள் அவனது அருளிலேயே வாழ்கின்றார்கள். எனவே, நல்லடியார்கள் மட்டுமே அதிகாரம் செலுத்தத் தகுதியுடையவர்கள்.

மேற்கூறிய அரசியல் கருத்துகள் ஔரங்கசீபின் கருத்துகளுக்கு ஏற்ப அமைந்திருக்க வில்லையா? விக்லிஃபின்

[1] Emperor is like an Imperial Guardian of Peace than an actual ruler. The state performs material as well as moral functions. The Emperor is the servant of servants - Khafi Khan in Eliot and Dowson-History of India as told by her own historians - Vol. VII P. 130 - 131.

அரசியல் கருத்துகள் என்னும் உரைகல்மீது ஔரங்கசீபின் அரசியல் கருத்துகளை உரைத்துப் பார்த்தால், விக்லிஃபின் கருத்துகளுக்கும் ஔரங்கசீபின் கருத்துகளுக்கும் நிச்சயமாக வேற்றுமைகள் கிடையா என்ற முடிவுக்குத்தான் நாம் வருவோம். மேற்கூறிய விக்லிஃபின் கருத்துகளை இஸ்லாமும் வற்புறுத்துகின்றது. அதன் மூலக்கருத்தே அகில உலகையும் படைத்து, காத்து, அருள் புரிபவன் ஏக இறைவனே என்பதாகும். படைக்கப்பட்ட அனைவரும் இறைவனுக்கு மறுமை நாளில் பதில் சொல்லவேண்டும் என்பதும், நல்லடியார்களுக்கு இறைவன் அருள் பாலிக்கின்றான் என்பதும் இஸ்லாத்தின் மூலக்கருத்தாகும். விக்லிஃப் காட்டியது இறையருள் அரசியல் என்றால், ஔரங்கசீப் நம்பியது 'இலாஹியா அரசு' (Ilahia State)[1] அல்லது 'நீதி-காவல் அரசு' என்று கூறலாம். விக்லிஃபிற்குப் பைபிள் மூலவேதமென்றால், ஔரங்கசீபிற்குத் திருக் குர்ஆன் ஜீவநாடியாகும். உதாரணத்திற்குப் பேரரசரின் மற்றுமொரு கடிதத்தை[2] இங்குப் பார்ப்போம். (இதை அவர் தம் தந்தைக்கு வரைந்தனுப்பினார்.)

'பானைக்கு ஒரு சோறு'

'நான் உங்கள் கண்டனத்தைத் தவிர்க்க விரும்புகின்றேன். நீங்கள் என் குணநலன்களைப்பற்றிய தவறான அபிப்பிராயம் ஏற்படுத்திக் கொள்வதை என்னால் ஏற்க முடியாது. நீங்கள் கற்பனை செய்வது போல நான் அரியாசனத்தில் அமர்த்தப்பட்டிருப்பதனால் எனக்கு அகந்தையும் செருக்கும் ஏற்பட்டுவிடவில்லை. 40 வருட கால அனுபவத்தில் மணிமகுடம் எத்துணைப் பாரமானது, சுமையானது என்பதை நீங்கள் அறிந்திருப்பீர்கள்.........நான் நாட்டின் பாதுகாப்பிற்கும், ஆட்சியை உறுதிப்படுத்துவதற்கும் குறைவான நேரத்தைச் செலவிட வேண்டும் என்றும், அதேநேரத்தில் படையெடுப்பிற்குரிய திட்டங்களைத் தீட்ட வேண்டும் என்றும் நீங்கள் நினைப்பதாகத் தோன்றுகிறது. சிறப்பான வெற்றிகள் மாமன்னருக்குப் புகழ் அளிக்கும் என்பதை நான் மறுக்கவில்லை. இன்றைய எல்லைப் பரப்புகளைப் பரப்பாவிட்டால் நம் பெரிய மூதாதையரான தைமூரை இகழ்வதாக இருக்கும்; இதையும் ஒப்புக்கொள்

[1] Lane Poole's idea also nearly approximates to this conception; it is so on the strength of the original sources like those of Kafi Khan, Bakthwar Khan, Bernier and Manucci. The conception of 'Ilahia State' has ample scope for research - Author.

[2] Bernier asserts that he himself saw the letter.—'The Travels in the Mughal Empire' - Vol. I, P. 167-168.

கிறேன். ஆனால், அதே நேரத்தில், நான் செயலற்றுக் கிடப்ப தாக என்மீது குற்றஞ் சாட்டக்கூடாது.

சிறந்த மன்னர் யார்? 'நான் உங்களைத் தயவுகூர்ந்து சிந் தித்துப் பார்க்க வேண்டுமென விரும்புவதெல்லாம் இதுதான்: சிறந்த படையெடுப்பாளர்கள் அனைவரும் சிறந்த மன்னர் களாக ஆகிவிட முடியாது; உலகின் பல நாடுகளை நாகரிகம் அறியாத காட்டுமிருண்டிகள் அடக்கி ஆண்டுள்ளார்கள்; மிக அகன்ற, சிறந்த படையெடுப்புகளும் வெற்றிகளும் ஒரு நொடியில் பல நாடுகளைத் தவிடு பொடி யாக்கியுள்ளன. யார் தம் மக்களை நீதியுடன் ஆட்சி புரிவதைத் தம் முக்கியக் கடமை யாகக் கருதுகின்றாரோ அவரே மிகச் சிறந்த மன்னர் ஆவார்.' பெரும் படையெடுப்பாளர் சிறந்த மன்னர்கள் ஆகமாட்டார் என்னும் கருத்திலிருந்து, நாட்டுப் பாதுகாப்பு என்பது வேறு, மக்களின் நலன்களைப் பாதுகாத்தல் வேறு என்பதை ஔரங்கசீப் முற்றிலும் உணர்ந்திருந்தார் என்பதனையே இக் கடிதம் எடுத்துக்காட்டுகிறது. அதுமட்டுமன்றி, வெறும் போர் களால் மட்டுமே நாட்டை நிர்வகிக்க இயலாது; போர்களால் பெரும் பேரரசுகளும் சரிந்து சீரழிந்துள்ளன என்பதையும் இப் பேரரசர் முற்றிலும் உணர்ந்திருந்தார் என்பதையே அவருடைய கடிதத்தின் பிற்பகுதி சொல்லாமல் சொல்கின்றது.

ஔரங்கசீப் தம் தந்தைக்கு எழுதிய இக் கடிதத்தில் தம் நீதி உணர்வையும், பாச உணர்வையும், நடுநிலை உணர்வை யும் எவரும் சந்தேகிக்காத முறையில் தெளிவுபடுத்தியுள்ளார். எனவே, எந்த மன்னர் மக்கள் நலனுக்காக வேற்றுமை கற்பி யாது, நீதி உணர்வுடன் ஆட்சி புரிகின்றாரோ அவரே சிறந்தவ ராகக் கருதப்படுதல்வேண்டும் என்று ஔரங்கசீபே வலியுறுத்தி இருப்பது விந்தையாக இருக்கக்கூடும். ஆனால், இது அவரு டைய கூற்றேதான் என்பது உண்மையிலும் உண்மையாகும். எவ்வாறெனில், இக் கடிதத்தைப் பெர்னியர் தாமே பார்த்த தாக உறுதிப்படுத்துகிறார். குறுகிய கோணத்திலிருந்து பார்க் கும்பொழுது, இதனை நாம் ஏற்க மறுக்கலாம். ஆனால், உண் மையில் பேரரசர் தூய்மையான சமய நெறி உணர்வுடனும், இறைவனுக்கு மறு உலகில் பதில் சொல்லக் கடமைப்பட் டுள்ளவர் என்ற உணர்வுடனும், நீதி உணர்வுடனும் நிர்வாக இயந்திரத்தை நடத்தினார் என்பதை எவரும் மறுத்தல் இயலாது.

[1] Lane Poole, Aurangzeb. P. 80. Bernier, 'The Travels' - 167 - 168. - Bernier reproduces the letter here.

இதற்கு மேற்கூறிய கடிதமே சிறந்த எடுத்துக்காட்டாக இருக்கின்றது. மேலும், இக் கருத்துகளை ஏற்குமுகமாகப் பேராசிரியர் சர்மாவும் கூறுகிறார்: 'இவை உலகத்தை ஏமாற்றவெனக் கூறப்பட்ட அரசியல் தந்திரத்தின் வெற்று உணர்ச்சிகள் அல்ல என்பதை அவர்தம் வருவாய்த்துறை அலுவலர்களுக்கு விடுத்த மதிநுட்ப ஒழுங்குமுறை ஆணைகளே நிரூபிக்கின்றன. அவர் தாம் சொல்லியவாறே அரும்பாடு பட்டுச் செயலாற்ற முற்பட்டார் என்பதற்குத் தக்காணத்தின் ஆளுநராக இருந்தபொழுது அவர் சுயமே சாதித்த சாதனைகளே போதிய அத்தாட்சிகளாகும்.'[1]

'நீதிக்கடல்' (Ocean of Justice): தற்கால வரலாற்றாசிரியர்கள் அல்லாமன்றிப் பேரரசின் காலத்தவர்களும் ஔரங்கசீபின் நிர்வாகத்திறமையையும், நீதி உணர்வையும், பேராற்றலையும் போற்றியுள்ளனர். உதாரணமாக, ஔரங்கசீபின் சமகாலத்தவரான ஓவிங்டன் (Ovington) என்பாரும் இதனையே வலியுறுத்துகிறார். ஔரங்கசீப் மீது ஓவிங்டன் 'ஒரு நீதிக்கடல்' (Ocean of Justice) எனப் புகழ்ஆரம் தொடுக்கின்றார். 'ஔரங்கசீப் ஒரு நீதிக்கடல்...... அவர் எந்தப் பிரச்னையையும் நீதியுடனும் நேர்மையுடனும் தீர்மானிக்கின்றார்; பேரரசர் முன்னால் பிரபுக்கள் என்றும், செல்வாக்குள்ளவர் என்றும் யாரும் சலுகை பெற முடியாது; வாதாட முடியாது; உம்ராக்கள் எவ்வாறு சுலபமாகச் சீக்கிரத்தில் செவிதாழ்த்தப் பெறுவரோ, அவ்வாறே எளிய மக்களும் செவிதாழ்த்தப் பெறுகின்றனர். இதனாலேயே "உம்ராக்கள்" தங்கள் செய்கைகளில் முன்னெச்சரிக்கையுடனும், விழிப்புணர்ச்சியுடனும், பணம் செலுத்துவதில் காலம் தாழ்த்தாமலும் இருக்கின்றார்கள்.'[2]

ஔரங்கசீபிற்கு இறை ஒப்படைப்புக் கொள்கையிலும் நீதியுடன் கூடிய ஆட்சிமுறையிலும் நம்பிக்கை இருந்தது என்பதற்கு இதைவிடச் சிறந்ததோர் சாட்சியம் வேறு என்ன வேண்டும்?

[1] 'That these were no idle sentiments diplomatically expressed to deceive the world is borne out by the regulations he made for the guidance of his revenue officials. That he had also striven to act according to them has been amply demonstrated by his own civil achievements as Viceroy of Deccan'—Prof. S. R. Sharma in 'The Mughal Empire in India', P. 461.

[2] Alexander Hamilton 'The Voyage to the East Indies' - Vol. I. and Ovington quoted in S. M. Jaffars, 'History of the Mughals - Baber to Aurangzeb'.

'சமூகநல அரசு': ஔரங்கசீபுக்குச் சமூகநல அரசுக் கொள்கைகளில் நம்பிக்கை இருந்தது என்பதற்கு அடையாள மாகப் பில்லிமோரா (Billimora) என்பவர் மொழிபெயர்த்துள்ள கடிதங்கள் பலவற்றுள் மற்றொன்றையும் இங்கு மேற்கோள் வழங்கலாம். தம் கடிதம் ஒன்றில் ஔரங்கசீப் கூறுகிறார்: 'முடியரசு ஆட்சி என்றால், மன்னனொருவன் நாட்டைப் பாது காப்பதும், மக்களுக்குக் கண்காணிப்பாளனாக (பாது காவலனாக) இருப்பதும் மட்டுமே முறையன்றி, அவன் உடல் மகிழ்ச்சிக்காகவோ புற இன்பத்திற்காகவோ ஏங்கித் திரிவது ஆகாது...அரசனின் சொத்துகளும் நிலங்களும் மக்களின் நலன்களுக்காகவே உள்ளன...மன்னன் ஆளும் நாடு அவனு டைய மூதாதையர்களின் சொத்து அன்று. மன்னன் இறை வனால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு காப்பாளனே ஆவான். இவன் இறைவனின் பொருளை மக்களின் நலனுக்காகச் செலவிடும் ஓர் அறங் காவலனே ஆவான்.'[1]

இம் மேற்கோளிலிருந்து, ஔரங்கசீப் அரசைப்பற்றியும், அரசனின் கடமைகளைப்பற்றியும் மிக உயர்வான எண்ணம் கொண்டிருந்தார் என்பது தெளிவாகிறது. நாட்டின் வருமான மும் சொத்துகளும் மன்னன் ஒருவனின் சொந்தச் சுகபோ கத்திற்கென்று அமைந்தில்லை என்ற கருத்தை அதே நூற் றாண்டில் வாழ்ந்த சமகாலத்தவரான பிரெஞ்சுப் பேரரசர் 14ஆம் லூயீ ஏற்றிருக்கவில்லை என்பதையும் மறந்துவிடலா காது. ஏன், அந் நூற்றாண்டில் மட்டுமன்று; பின்னர்ப் பல காலம் வரையிலும்கூட இக் கருத்து எவர்க்கும் எழவில்லை. எனவே, ஔரங்கசீப் இவ்வுன்னதக் கருத்தை மனத்தளவில் நம்பியதோடு நில்லாமல், நடைமுறையிலும் செயல் படுத்திக் காட்டினார் என்றால் அது போற்றற்குரியதா அல்லவா? ஆகவே, நபிகள் நாயகத்தின் முன்மாதிரியும், இஸ்லாத்தின் இரண்டாவது கலீஃபா உமர் பாரூக் ஆட்சியின் எடுத்துக் காட்டும் ஔரங்கசீபிற்கு வழிகாட்டியாக இருந்திருக்க வேண்டும் என்று நாம் ஊகிக்க வேண்டியிருக்கிறது.

## அரியணை ஏறுதல்

ஔரங்கசீப் தம் அரசு 'சமூகநல அரசு' என நிரூபிக்கும் வகையில், தாம் அரியணை ஏறிய உடனேயே சில முக்கியமான அலுவல்களை மேற்கொண்டதுடன், மக்கள் மீது தம் தந்தை

[1] Bernier quoted in Lane Poole's 'Aurangzeb'.

விதித்திருந்த வரிகள் பலவற்றை நீக்கினார்; பொது நலன் களுக்கென சில ஆணைகளைப் பிறப்பித்தார். வாரிசுரிமைப் போட்டியில் வெற்றி முழுவதும் கிட்டிய பிறகு, 1658ஆம் ஆண்டு ஜூலை 21ஆம் தேதி அவர் முதன்முதலில் முடிசூட் டிக்கொண்டார். பிறகு 1659ஆம் ஆண்டு ஜூன் மாதம் 5ஆம் தேதியன்று மீண்டும் 'ஆலம்கீர்'[1] என்று பட்டம் சூட்டிக்கொண் டார். அவர் வரிகள் பலவற்றை நீக்கினார். அவை சுமார் 80 வரிகள் எனக் காஃபீகான் கூறுகிறார். இந்து, முஸ்லிம் விழாக் கள்மீது விதிக்கப்பட்டிருந்த வரிகளையும் நீக்கினார். சூதாட்டக் கொட்டகைகளையும், விலைமாதர்கள் இல்லங்களையும் அகற் றினார். அவர் நீக்கிய வரிகளுள் பலவற்றை எலியட் டௌஸன் தம் நூலில் கொடுத்துள்ளார். அவற்றுள் சில பின்வருமாறு: 1. ஆக்ரா, லாகூர், பர்ஹான்பூர் நகர்களிலும் இன்னும் சில முக்கிய நகர்களிலும் உணவுப் பண்டங்களின் மீது விதிக்கப் பட்ட வரிகள் நீக்கப்பட்டன. 2. 'பான்தாரி', 'ராஹ்தாரி' என்னும் இரு வரிகளையும் நீக்கி, அரசாங்க நிலங்கள்மீது விதிக் கப்பட்டிருந்த வரித்தொகையையும் நீக்கினார். 3. 'அப்வாப்' (Abwab) எனப்படும் சுதேச மண்டல வரிகளையும் நீக்கினார். 4. புகையிலைமீது விதிக்கப்பட்டிருந்த வரியை நீக்கினார். 8 ஆண்டுகட்குப் பிறகு (1666இல்) சூதாட்டக் கொட்டகைகள் நீக்கப்பட்டன மட்டுமன்றி, விலைமாதர்கள் அறவே இல்லை எனும் அளவிற்கு வேசையர்களை அழித்தார். விலைமாதர்கள் மறு வாழ்வு வாழ, அவர்கள் திருமணம் செய்து கொள்ள நல் வாய்ப்புகள் வழங்கப்பட்டன. எவளும் பரத்தையாய் வாழா மல், திருமணம் செய்து கொண்டுதான் தீரவேண்டுமென்று வற் புறுத்தப்பட்டாள். இந்தச் சட்டத்தை மீறுவோர் கடுமை யாகத் தண்டிக்கப்பட்டனர். மதுக்கடைகள் அகற்றப்பட்டன. கஞ்சா, அபினி முதலிய லாகிரிப் பொருள்கள் விற்பனை செய் யப்படுவதும் தடை செய்யப்பட்டது. இவற்றைத் தயாரிக்கத் தேவைப்படும் மூலப் பொருளான கசகசா (Poppy seeds) மீது அதிக வரி விதிக்கப்பட்டது. 5. எல்லா ஆளுநர்களுக்கும் அபினியின் மூலப் பொருளை எவரும் பயிரிடக்கூடாதென உத்தரவு இடப்பட்டது. 6. அரசு நிர்ணயிக்கிற தீர்வையினும் கூடுதலாக வரி விதிக்கப்பட்டால், வரி வசூலிப்பவர்களைக்

[1] 'ஆலம்கீர்' என்னும் பாரசீகச் சொல், 'அனைத்து மக்களின் இரட்சகர்' என்று பொருள்படும். 'ஆலம்' — மக்கள். 'கீர்' — தம் வசம் ஈர்ப்பவர் என்று சொல் பிரித்துப் பண்டிதர் பொருள் கொள்வர்; சாதாரணமாக, 'அனைத்துலகையும் வென்றவர்' என்றும் கருத் துரைப்பர்.

கடுமையாகத் தண்டித்தார். ஆசிரியர் லேன்பூல் கூறியது போன்று, 'ஔரங்கசீப் நீக்கிய வரிகள் அனைத்தையும் மண்டல அதிகாரிகளும், நிலக்கிழார்களும் தம் விருப்பப்படி வசூலித்து வந்தார்கள் என்பது உண்மையே. ஆனால், இது மத்திய அரசு நிர்வாகத்தின் குற்றம் அல்லது குறையே யொழியப் பேரரசரின் நல்லெண்ணத்தின் குறையாகாது.' எனவே, இவற்றிலிருந்து பேரரசர் இஸ்லாமிய சமயத்திற்கு ஏற்றவாறு அமைந்திருந்த சில சீர்திருத்தங்களைச் செய்தாரென்றறிகிறோம். ஆனால், சில வரலாற்று அறிஞர்கள் அவை இந்தியர்களுக்கு எதிரான வையாகவும் முரணானவையாகவும் இருந்தன என்று குற்றஞ் சாட்டுகின்றனர். ஆனால், நாம் பேரரசரின் ஆணையில் வகுப்பு களின் அடிப்படையில் மாற்றமோ, வித்தியாசங்களோ, பாகு பாடுகளோ இருந்தனவா என்று பார்க்கவேண்டும்; எந்த ஒரு குறிப்பிட்ட சாராருக்கேனும் சலுகைகள் அளிக்கப்பட்டனவா என்றும் ஆராயவேண்டும். அப்படியொன்றுமில்லை யாயின், ஔரங்கசீபின் அரசு ஒரு 'சமூகநல அரசே' தான் என்று நாம் ஏன் ஏற்கக்கூடாது? பேராசிரியர் ஜாதுநாத் சர்க்கார் இதுபற்றி இவ்வாறு குறிப்பிடுகிறார்: 'அரசியற் புதிராக உள்ள இவரது ஆட்சி இந்திய வரலாற்று ஆராய்ச்சி மாணவனுக்கு மட்டுமன்றி, அரசியல் தத்துவ ஆராய்ச்சி மாணவனுக்குங்கூட மிக நேர்த்தி யான கவர்ச்சியையும் பாடத்தையும் போதிக்க வல்லதாக இலங்குகிறது.'[1]

[1] J. N. Sarkar—A Short History of Aurangzeb.

# 11. ஔரங்கசீபும் மராத்தியர்களும்

ஔரங்கசீப் தமது அரை நூற்றுண்டு கால ஆட்சியில் முதற் பகுதியை வடஇந்தியாவில் கழித்தார் என்ருல், அவரது வாழ் நாளின் பிற்பகுதியை மராத்திய மண்டலத்திலேயே கழிக்க நேர்ந்தது. மராத்தியர்களின் எழுச்சி அவர்கள் தலைவர் வீர சிவாஜியுடன் பிறந்தது. ஆனால், மராத்தியர்கள் இதற்கு முன்பு எழாமல் ஔரங்கசீப் ஆலம்கீரின் ஆட்சியில் மட்டும் எழுவானேன்? என்ற கேள்வி இயற்கையாகவே பிறக்கின்றது. ஆனால், அவர்கள் இயக்கமாக எழுந்தார்களா, அல்லது தனித் தலைவரின் மயங்கத் தக்க கட்டுப்பாட்டிற்குட்பட்டு அவர்களின் எழுச்சி இயக்கமாக மாறினதா என்ற கருத்தும் நன்கு ஆராய் தற்குரியதாகும். பொதுவாகவே, ஔரங்கசீபின் மதக்கொள்கை தான் இந்துக்களிடையே எழுச்சிகளையும் இயக்கங்களையும், குறிப்பாக மராத்தியர்களின் எழுச்சியையும் தோற்றுவித்தது என்று அறிஞர்கள் கூறுவர்.[1] ஆனால், இது ஏற்புடைய கருத்து அன்று என்று வரலாற்றை நன்கு ஆராய்ந்து பார்ப்பவர்கள் நவில்கிருர்கள். மராத்தியர்களின் தலைவர் சிவாஜியின் எழுச்சி களிலிருந்துதான் ஓர் இயக்கமாக அது உருவெடுத்தது என்று கூறினுல், நிச்சயமாக அது ஔரங்கசீப் ஆட்சி தொடங்கு முன்பே தோன்றிவிட்டதென்றுதான் அனைவரும் ஒப்புக்கொள்ள வேண்டி வரும். எனவே, ஔரங்கசீபின் சமயக்கொள்கை களுக்கும் சிவாஜியின் எழுச்சிக்கும் நேரிடையான, நெருங்கிய தொடர்பு இருந்ததாகக் கூறுவது ஆராய்ச்சிக்கும் உண்மைக்கும் அப்பாற்பட்ட கூற்ருகிவிடும்.

முன்பே ஏன் எழவில்லை ? அப்படியே இஸ்லாம் மதம் தெற்கே பரவுவதைத் தடுப்பதற்கு மராத்தியர்கள் அனைவரும் ஒன்று

[1] Ranade—'Rise of Maratha Power'; G. S. Sardesai - 'A New History of Marathas'.

கூடித் திட்டமாக எதிர்க்க நினைத்திருப்பார்களேயானால், மாலிக் காப்பூர் தமிழகத்தின் தென் எல்லைவரை படை எடுத்து வந்த பொழுதே 'மராத்தியர்களின் இயக்கம்' தோன்றியிருக்க வேண்டும். அல்லது விஜயநகரப் பேரரசு 14ஆம் நூற்றாண்டில் முஹம்மது பின் துக்ளக்கின் பலமற்ற ஆட்சியின்போது எழுந்தது போல, மராத்தியர்களின் எழுச்சியும் தோன்றி யிருத்தல் வேண்டும். யாதவர்கள், காக்கத்தியர்கள், ஹொய்சாளர்கள் ஆகியோர் அமைத்துக் கொடுத்த அடித்தளத்தின் மீதாவது மராத்தியர்கள் இனஉணர்வு கொண்டு, சமய வீறுகொண்டு எழுந்திருத்தல் வேண்டும். எனவே, இங்கு அறிஞர் பெர்ஸீவல் ஸ்பியர் கூறும் கருத்து உற்றுநோக்கத் தக்கதாகும்: '17ஆம் நூற்றாண்டில் ஏன் திடீரெனப் பிரகாசமான அளவுக்கு அவர்கள் (மராத்தியர்கள்) எழுந்தார்கள் என அறிந்துகொள்வது மிகக் கடினமே. அதே நேரத்தில், முஸ்லிம் சகிப்பற்ற தன்மையோ, முஸ்லிம் படையெடுப்போ, இந்து தேசிய இயக்கத்தைத் தூண்டியது என்று கூறிவிடமுடியாது. அப்படியானால், அவர்கள் 14, 15 ஆம் நூற்றாண்டுகளில் முஸ்லிம் பஹ்மினி அரசர்களை எதிர்த்து ஏன் எழவில்லை? ஏனெனில், பஹ்மினிகள் முகலாயர்களைவிடச் சகிப்புத் தன்மையில் உயர்ந்தவர்கள் அல்லரே! எனவே, என்னைப் பொறுத்தவரை மராத்தியர்களின் எழுச்சி இந்திய வரலாற்றில், வரலாற்றுப் புதிர்களுள் ஒன்றாகவே உள்ளது.'[1]

தேசிய இயக்கமா? பல அறிஞர்கள் இதனைத் 'தேசிய இயக்கம்' என்றும், மற்றும் சில அறிஞர்கள் இதனைச் 'சமய-சமூக இயக்கம்' என்றும் கருதுகின்றனர். அவ்வாறாயின், ஔரங்கசீபின் மதக் கொள்கைகள் காரணமாக இருந்திருக்க வேண்டும் எனக் கூறுவானேன்? அவ்வாறு இருந்திருப்பின், மராத்தியத் தலைவர் சிவாஜியின் எழுச்சி ஔரங்கசீப் ஆட்சியில் அமர்ந்த பல ஆண்டுகளுக்குப் பிறகுதான் நிகழ்ந்திருக்க வேண்டும். அல்லது 1659ஆம் ஆண்டிற்குப் பிறகோ, அதற்குப் பின் எப்பொழுதாவதோ இயக்கமாகத் தோன்றியிருக்க வேண்டும். அவ்வாறில்லாமல், இதற்கு நேர்மாறாக, சிவாஜியின் எழுச்சி, முதல் தாக்குதல் முகலாயர்களை எதிர்த்து அன்று; ஷாஜஹானை எதிர்த்தும் அன்று; பீஜப்பூர்த் தனி அரசை எதிர்த்துத்தான் தொடங்கியது! ஔரங்கசீப் அரியணை ஏறிய ஆண்டோ, 1658-1659. சிவாஜி பீஜப்பூரின் கோட்டையை முதலில்

[1] Perceval Spear - 'History of India', Vol. II - Pelican edition.

தாக்கியதோ, தம்முடைய 19ஆம் வயதில், 1646ஆம் ஆண்டில். எனவே, இதனாலும் மராத்தியர்களின் எழுச்சிக்கும், ஔரங்கசீபின் கொள்கைகளுக்கும் நேரடித் தொடர்பு கிடையாது என்பது புலனாகின்றது.

ஆயினும், ஔரங்கசீப் தாராள மனப்பான்மையுடன் கோல்கொண்டா, பீஜப்பூர் மன்னர்களுடன் சுமுகமான உறவை வளர்த்துக்கொள்ள முயன்று இருப்பாரேயானால், அனேகமாக மராத்தியர்களின் எழுச்சியைச் சிறு அளவிலேனும் கட்டுப் படுத்தியிருக்க முடியும் எனச் சில ஐரோப்பிய அறிஞர்கள் கருதுகின்றனர். இதனையும் சுட்டிக்காட்டி, அப்படியே பேரரசர் முயன்றிருப்பாராயினும், அவரால் வெற்றி பெற்றிருக்க முடியாது என்று பேராசிரியர் சர்க்கார் கூறுகிறார். 'பீஜப்பூர் அல்லது கோல்கொண்டாவுடன் முகலாயப் பேரரசின் இரு உள்ளங்களின் இணைப்பு, மராத்தியர்களுக்கு எதிராக உளவியல் அடிப்படையில் முற்றிலும் நிகழ முடியாதது.'[1]

மராத்தியர்களின் எழுச்சிக்குப் பூகோள, சமய, சமூக, மொழி, இன, அரசியல் காரணங்கள் பலப்பல கூறப்படுகின்றன. அறிஞர் மான்ஸ்டுவர்ட் எல்பின்ஸ்டன் என்பார், நர்மதைக்குத் தெற்கில், மலைகளுக்கிடையில், விந்திய மலையின் தாழ்வாரத்தில், மேற்கில் கடற்கரைப்பகுதி, கோவாவிலிருந்து பீடார் வழியாக வார்தா வரை உள்ள பகுதி—இதுவே 'மராத்திய மண்டலம்' ஆகும் என்று அழைக்கின்றார். (ஸ்மித் - ப. 410).[2] மேற்குத் தொடர்ச்சிமலை இதற்கு மேற்கு அரணாக உள்ளது. இதன் குன்றுகள் வெளியே நீட்டிக்கொண்டிருப்பினும், இயற்கையிலேயே இவை கோட்டைகள் போன்றதோர் அமைப்பை அளிப்பதனால், அன்னியர் எவரும் எளிதில் உட்புகுந்து தாக்கி வெற்றிபெறுதல் இயலாது. மராத்திய மண்டலத்தை மூன்று பகுதிகளாகப் பிரிக்கலாம்: 1. கொங்கணி அல்லது பம்பாய்க்கு வட தென் பகுதிகள்; 2. மாவளி அல்லது ஷாயத்ரி மலைத்தொடர்கள் அடர்ந்த பகுதி; 3 தேசம் அல்லது நதிக்கரைப் பகுதிகள்.[3] கிராண்ட் டஃப் (Grant Duff) கூறியது போல 'இராணுவ ரீதியாக அனேகமாக உலகிலேயே இதைவிட வலிமையான நாடு இருக்க முடியாது.'[4] குறைவான உற்பத்தி

[1] Sir Jadunath Sarkar - A Short History of Aurangzeb.
[2] Monstuart Elphinstone,-History of India-Hindu & Mohammadan Periods.
[3] R. Sathianathier - History of India - Vol. II.
[4] Grant Duff - History of Marathas.

யும், விளைச்சலும் 17ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த அம் மக்களைச் சில சமயங்களில் கொள்ளைகளில் ஈடுபடச் செய்ததில் வியப் பில்லை. ஆனால், அவர்களுடைய தனித்தன்மையும், சுதந்திர மாக வாழவேண்டும் என்ற உணர்வும் அம் மலைகளிலிருந்தும், இயற்கை அமைப்பிலிருந்தும் பெறப்பட்டவையாகும்.

எழுச்சியின் காரணங்கள்: அடுத்து, இயற்கைச் சூழலி னாலே 'அம் மக்கள் வீரம், விடாமுயற்சி, எளிமை, நேர்மை, சமூக ஒப்புரவு ஆகிய குணநலன்களை வளர்த்துக்கொண்டனர்.'[1]

சமூக, சமய விழிப்புணர்ச்சிகளும் மராத்தியர்களின் எழுச் சிக்குக் காரணமாக இருந்தனவென்று கூறப்படுகிறது. பந்தர்ப் பூர் இயக்கம் சிவாஜியின் எழுச்சிக்கு உறுதுணையாக இருக்க அடிகோலியது. ராணடே இவ் வியக்கத்தைப்பற்றிக் கூறுகிறார்: 'வைதிகத்தில் பிராமணமயமாக இருப்பினும், உணர்வைப் பொறுத்தவரை கலப்புச் சமயமாகவும், சில வேளைகளில் புறக் காட்சிகளையும் சடங்குகளையும் எதிர்ப்பதாகவும், பக்தி மார்க் கத்தை நிலைநாட்டுவதாகவும் அமைந்தது......இதில் புலவர் களும், தத்துவ ஞானிகளும் பங்கேற்று வந்தனர். தையற் காரர்கள், தச்சர்கள், குயவர்கள், தோட்டவேலைக்காரர்கள், சிறுகடைக்காரர்கள், நாவிதர்கள் ஆகியோர் பிராமணர்களை விட அதிக அளவில் கலந்து கொண்டனர்.'[2] இவ் வியக் கத்தைப் பலரும் பெரிதும் போற்றி வளர்த்தார்கள். எனினும், இவ் வியக்கத்தில் கலந்து கொண்டவர்களுள், துக்காராம் ஒரு மளிகை வியாபாரி; இராமதாஸ் பிராமண குலத்தைச் சார்ந் தவர். இவ் வியக்கத்தைச் சார்ந்த பலரும் தத்தம் தொழில் களை மேற்கொண்டாலும், அவர்களின் இயக்கத்தைப் பக்தி இயக்கம் எனக் கருதுதல் பொருத்தமுடையதாகும். ராஜ வாடே, சர்தேசாய் போன்றோர் பந்தர்ப்பூர் இயக்கத்திற்கு இராமதாசளித்த தொண்டினைப் புகழ்ந்து பாராட்டிக் கூறு கின்றனர்.

மூன்றாவதாக, மராத்திய மண்டலத்தில் பஞ்சாயத்து முறை களும் நில உரிமை மரபுகளும் மராத்தியர்களுக்கு வலுவூட்டின வென்றும், ஜனநாயகப் பண்பினை வளர்த்தனவென்றும் பேராசி ரியர் சத்தியநாதய்யர் போன்றோர் கருதுகின்றனர். 'மராத்திய நாட்டின் வரலாற்று ஸ்தாபனங்களை அடித்தளமாகக் கருதினால்,

[1] J. N. Sarkar, 'Shivaji' P. 190.

[2] Ranade, 'Rise of Maratha Power' P. 149,

தேசிய இயக்கமெனும் மாடிப்படிகளை அதன் வீரர் எழுப்பினர்.'[1] அவ்வாருயின், உதாரணத்திற்கு ஒன்றைக் கூறலாம்: தமிழகத்தில் சோழர்களுக்கு முன்போ பின்போ, இந்திய நாட்டின் பிற பகுதிகளிலோ, வேறு எம் மன்னர்களும் ஜனநாயக மாண்பினை வளர்த்ததாகத் தோன்றவில்லை. ஆயினும், தமிழகத்தில் மட்டும் 13, 14ஆம் நூற்ருண்டுகளில் டெல்லி மன்னர்களுக்கு எதிர் அரணை மராத்தியர்களின் கிளர்ச்சியைப் போன்றதொரு எழுச்சியோ காணப்படவில்லையே, அது ஏன்? எனவே, பஞ்சாயத்துப் போன்ற நிறுவனங்களால் இன எழுச்சி தோன்றியதாகவோ, தேசிய இயக்கம் எழுந்ததாகவோ கூறுவது பொருந்தாத காரணமாகத் தோன்றுகிறது.

நான்காவதாக, ஔரங்கசீபின் மதக்கொள்கையும் தக்காணியக் கொள்கையும் காரணமாக இருந்தன எனக் கிராண்ட் டஃப் போன்ருேர் கருதுகின்றனர். ஆனல், ராணடேயோ, 'அவர் மராத்திய சக்தியை உருவாக்கவில்லை; அது முன்பே உருவாக்கப்பட்டுவிட்டது' எனக் கூறுகிருர்.[2]

மராத்தியர்களைப்பற்றி அறிஞர் எல்பின்ஸ்டன் இவ்வாறு கருத்துத் தெரிவிக்கிருர்: 'மராத்தியர்கள் வரலாற்றில் இனவுணர்வு பெற்றவர்களாக இதுவரை எழவில்லையாயினும், அவர்கள் ஒற்றுமையுடன் கூடிய பொதுநல அரசை உருவாக்கியவர்களைப் போன்று முத்திரை பொறித்துச் சென்றனர்...... அவர்கள் யாவருமே வலுவான உடற்கட்டு உடையவர்கள்; கவர்ச்சிமிகு வனப்புப் பெற்றில்லையாயினும், எடுப்பான தோற்றம் உடையவர்கள். அவர்களிடம் இராஜபுத்திரர்களின் பெருந்தன்மையும் செருக்கும் காணப்பட்ட போதினும், அவர்களைப் போன்ற சோம்பேறித்தனமும் உலகியல் ஞானமற்ற தன்மையும் வாய்ந்தவர்கள் அல்லர்.....மராத்தியர் தம் குறிக்கோள் ஒன்றைத் தவிர்த்து வேறு எந்த ஒன்றையும் கருதுவதே இல்லை; முடிவை அடையப் பின்பற்றும் வழியைப்பற்றிப் பொருட்படுத்துவதே இல்லை. இந்த நோக்கத்திற்காக அவர் தம் அறிவைச் செலவழிப்பார், சுகங்களைத் தியாகம் செய்வார், அஞ்சாமல் துணைபுரிவார்; ஆனல், தம் வாழ்வைத் தியாகம் செய்வது என்றுல் என்ன என்பதை அறியார்.'[3]

[1] R. Sathianathier - Ibid P. 412.

[2] Ranade - Ibid.

[3] M. Elphinstone - History of India - Hindu & Mohammadan Periods - Also, V.A. Smith, Oxford History of India - P. 410-11.

ஷாஜி பான்ஸ்லே:—சிவாஜியின் தந்தை ஷாஜி என்பவர் மாலோஜியின் மூத்த மகனாக 1594ஆம் ஆண்டில் பிறந்தார். (சில ஆசிரியர்களின் கருத்துப்படி, 1602ஆம் ஆண்டில் பிறந்தார்.) இவருக்கு முஸ்லிம் துறவி ஷா ஷரீஃப் என்பாரின் நினைவாக 'ஷாஜி' என்று பெயரிடப்பட்டது. ஷாஜி, பான்ஸ்லே குடும்பத்தைச் சார்ந்தவர். இவருக்கு இளமையிலேயே திருமணம் செய்யப்பட்டது. அஹ்மத் நகர அரசப் பணியாளர்களுள் ஒருவரான ஜாதவ ராவ் என்பாரின் மகள் ஜீஜாபாய் என்பவர் ஷாஜிக்குத் திருமணம் செய்விக்கப்பட்டார். ஷாஜி தம் மாமனாருடன் மாலிக் அம்பருக்குச் சாதகமாகச் சில ஆண்டுகள் ஒத்துழைத்தார். மாமனாருக்கும் மருமகனுக்கும் இடையே பூசல் தோன்றவே, ஷாஜி நிஜாம்ஷா அரசை விட்டு அகன்றார்; நிஜாம் ஷா அரசுக்குச் சொந்தமாயிருந்த பூனாக் கோட்டையைப் பிடித்துக் கொண்டார்; ஜீன்னாருக்கு அடுத்து இருக்கும் சத்தாராக் கோட்டையையும் பிடித்துக் கொண்டார். 1633-36 ஆகிய மூன்று ஆண்டுகளில் அஹ்மத் நகர் சுல்தானின் சார்பாக நாசிக், சங்கமேர் ஆகிய பகுதிகளில் அவர் தம் சுய ஆட்சியை நிறுவவும் முயன்றார். மாலிக் அம்பருக்குத் துணையாகப் 'பத்துவாடி' என்னும் போரிலும் அவர் கலந்துகொண்டார். ஆனால், யாதொரு காரணமுமின்றித் திடீரென அஹ்மத் நகர அரசை விட்டு அகன்று, பீஜப்பூர் அரசின் பக்கல் திரும்பி, பதவியை நாடி அவர் பாய்ந்தார். மாலிக் அம்பருக்கு முன்பு துணையாக நின்ற அந்த ஷாஜி பான்ஸ்லே பீஜப்பூர் அரசரின் கீழ்ப் பதவி ஏற்றவுடன், மாலிக் அம்பரை எதிர்த்துப் போரிட்டார். இதனால் மகாராஜா பட்டமும் அவருக்குக் கிட்டியது.

தம்மை பீஜப்பூர் மன்னர் இகழ்ந்ததாகக் காரணம் காட்டி, ஷாஜி மீண்டும் அஹ்மத் நகர் அரசரிடம் பதவியை நாடிப் பணிபுரிய அமர்ந்தார். 1630ஆம் ஆண்டில் ஜாதவ ராவ் கொலையுண்டார். ஷாஜி பான்ஸ்லேயும் பீஜப்பூர் அரசர் அளித்த ஜாகிரிலிருந்து அகற்றப்பட்டார். எனவே, அவர் சிவனேரி என்னும் கோட்டைக்குள் அடைக்கலம் புகுந்தார். பீஜப்பூர் அரசுடன் நின்று விடாமல், முகலாயப் பேரரசர் ஷாஜஹானிடத்தும் அவர் பதவியை நாடவே, பேரரசர் ஷாஜஹான் ஷாஜி பான்ஸ்லேக்கு '5000 படை வீரர்களின் மன்சப்தார்' என்னும் பதவியை அளித்துக் கௌரவித்தார். எனினும், முகலாயத் தளபதி தரியா கான் என்பவரை எதிர்த்துப் போரிட்டார் ஷாஜி.

1630ஆம் ஆண்டில், அப்பொழுது மூன்று வயதாகியிருந்த குழந்தை சிவாஜியை ஷாஜி சிவனேரிக் கோட்டையில் போய்ப் பார்த்தார். இரண்டு ஆண்டுகள் கழித்து முகலாயப் பேரரசரின் பணியிலும் அவர் நிலைத்திருக்கவில்லை. அச் சூழ்நிலையில் நிஜாம் ஷாக்களின் அஹ்மத் நகர் அரசு வீழ்வதைக் கருதி, முகலாயர்களின் கீழ்ப் பணிபுரிவதிலிருந்து விலகி, அஹ்மத் நகர் அரச விவகாரங்களில் தலையிட்டு அவர் தமது பலத்தைப் பெருக்கிக் கொண்டார். ஷாஜி பான்ஸ்லே சில ஆண்டுகள் வரை அரசர்களை நியமிப்பதும் நீக்குவதுமாகத் தம் கரங்களை வலுப்படுத்திக் கொண்டார். பேரரசர் ஷாஜஹான் ஷாஜி பான்ஸ்லேயைத் தோற்கடித்தார். எனவே, மீண்டும் அவர் பீஜப்பூர் அரசின் கீழ்ப் பதவியை நாடினார்; சில ஆண்டுகளி லேயே தமக்குரிய ஜாகிர்களைப் பெருக்கியும் கொண்டார்.

தமிழகத்தில் ஷாஜி பான்ஸ்லே: எனினும், பீஜப்பூர் அரசு தெற்கே தமிழகத்தின் செஞ்சி (Jingee)எல்லை வரையிலும் தென் மேற்கில் மைசூர் வரையிலும் பரவி நிற்பதற்குக் காரணமாக இருந்தவர் ஷாஜி பான்ஸ்லேயாவார். பீஜப்பூர் படைகள் கர்நா டகத்தைத் தாக்கிச் செஞ்சி, வேலூர், பங்களூர், பாசவபட் டணம், ஈக்கேரி ஆகிய கோட்டைகளையும் பகுதிகளையும் வென்று இணைத்துக்கொள்வதை அவர் ஆதரித்தார். ஆனால், இவ் வெற்றிகளுக்கெல்லாம் காரணமாக இருந்தவர் பீஜப்பூரின் தளபதி முஸ்தஃபா கான் (Mustafa Khan) என்பவர் ஆவார். மீர் ஜும்லாவையே கூடத் தோற்கச் செய்து வெற்றி வாகை சூடுமளவுக்கு இவர் திறமை பெற்றிருந்தார். படிப்படியாக ஷாஜி பான்ஸ்லேயே தமிழகத்தின் தெற்கெல்லையில் வந்து மதுரை வரை (கடலூர், பரங்கிப்பேட்டை ஆகிய ஊர்களையும் வென்று) பீஜப்பூரின் ஆதிக்கத்தை வளர்க்கத் துணைபுரிந்தார். ஆனால், கர்நாடகத்தைத் தாக்கித் திரும்பும்போது அவர் கீழே விழுந்து இறந்தார். இதற்கு முன்பு பீஜப்பூர் மன்னர், மகனின் அடாத செயல்களுக்காகத் தந்தையான ஷாஜி பான்ஸ்லே யைச் சிறை வைத்தார்.[1]

ஷாஜி பான்ஸ்லேயைப்பற்றிக் காஃபீகானின் மதிப்பு இது தான்: 'ஷாஜி பான்ஸ்லே தம் இனத்தவர்களிடையே வீரத் திலும் அறிவிலும் சிறப்புப் பெற்று விளங்கினார்.'[2]

[1] C. K. Srinivasan, Maratha Rulers of Tanjore.

[2] Kafi Khan in Eliot & Dowson, History of India as told by her own Historians.

ஆனால், ஷாஜியை அவருடைய தந்தை நிராகரித்தது போன்று, ஷாஜி பான்ஸ்லே சிவாஜிக்கு ஆதரவும் அரவணைப்பும் நல்காமல் விட்டது வரலாறு கண்ட உண்மை. எனினும், ஷாஜி பான்ஸ்லே தெற்கு நோக்கிப் பீஜப்பூரின் அதிகாரத்தை வலுவடையச் செய்தது சிவாஜிக்கு முன்மாதிரியாக அமைந்தது. ஆனால், அதே நேரத்தில், 'ஷாஜி பான்ஸ்லே வீழ்ச்சியுற்றுக் கிடந்த இந்து மன்னர்களின் நலன்களுக்கு ஊக்கமளித்தார்' எனப் பேராசிரியர் சத்தியநாதய்யர் கருதுகிறார்.[1]

## சிவாஜியைப்பற்றிய குறிப்புகள்

சிவாஜியைப்பற்றி உள்நாட்டு, வெளிநாட்டு அறிஞர்கள் பல குறிப்புகளை அளித்துள்ளனர். அவை பாரசீகம், மராத்தியம், இந்தி, பிரெஞ்சு, ஆங்கிலம், டச்சு, போர்ச்சுகீஸ் ஆகிய பல மொழிகளில் காணப்படுகின்றன.[2]

பாரசீக மொழியின் வரலாற்றுக் குறிப்புகளுள், மீர் ஹாஷிம் முகம்மது காஃபீகானின் குறிப்பு மிகவும் முக்கியமானதாகும். இதன் சிறப்பைப்பற்றி முன்னரே நாம் குறிப்பிட்டுள்ளோம். அந்தச் சிறப்புத் தன்மை ஒளிவுமறைவின்றி உண்மையை எடுத்தியம்புவதில் அடங்கியுள்ளது. சில சமயங்களில் காஃபீகான் சிவாஜியை இகழ்ந்துரைத்தாலும், உண்மை நிகழ்ச்சிகளை நடந்தவாறே எடுத்துக் காட்டியுள்ளார். அதுபோன்றே 'பீம்சன்' என்பாரின் குறிப்பும் சிறப்புத்தன்மை வாய்ந்தது. பீம்சன் குறிப்பிட்டுள்ள நிகழ்ச்சிகள் சிலவற்றை அவர் தாமே நேரில் கண்டவாறு விளக்கியுள்ளார். எனினும், சில நிகழ்ச்சிகளைப்பற்றிய கூற்று மிகைபடுத்தப்பட்டதாகும். மராத்திய மொழியிலுள்ள குறிப்புகளைப் 'பக்கார்'(Bhakkar) என்று வழங்குகின்றனர். இவற்றைப்பற்றி ராஜ்வாடே என்பவர் 'பொய்யுரை என்னும் கடலில் மிதந்துவரும் சில உண்மைத்திவலைகள்' எனக் குறிப்பிடுகின்றார். 'சபாசத் பக்கார்' (Sabasad Bhakkar) என்ற இந் நூல் சிவாஜியின் முழு வாழ்வைப்பற்றிக் குறிப்பிடுகிறது. ஆனால், இந் நூலைவிட, 'ஜே. கே. சகாவலி', 'ஜேதே கரீனா' ஆகிய நூல்களும் சிவாஜியின் வரலாற்றை முழுமையாகக் கூறுகின்றன.

[1] R. Sathianathier—History of India - Vol. II, P. 414.

[2] Dr. Surendranath Sen—Foreign Biographies of Shivaji (including Çosma de Guarda's 'Civaje')

வடமொழி இந்திக் குறிப்புகளும் மிகுதியாகவேயுள்ளன. அவற்றுள், பரமானந்தர் என்பாரின் 'சிவபாரதம்' என்னும் நூல் குறிப்பிடத்தக்கதாகும். ரகுநாத ஹனுமந்த், புலவர் பூசன் ஆகியோரின் குறிப்புகளும் சிவாஜியின் வாழ்க்கையை அறியத் துணைபுரிகின்றன.

வெளிநாட்டுக் குறிப்புகளைப் பொறுத்தவரை, பேரரசர் ஔரங்கசீபைப்பற்றிய குறிப்பாளர்களான பெர்னியரும், மனுச்சியும் சிவாஜியைப்பற்றியும் நிறையக் குறிப்புகளை விட்டுச் சென்றுள்ளனர். மனுச்சி தம் நூலில் (Storia de Mogor) புரந்தர் உடன்படிக்கைக்குப் பிறகு சிவாஜியுடன் அடிக்கடி தொடர்பு கொண்டதாயும், அதன் காரணமாக நட்பு வளர்ந்ததாயும் குறிப்பிட்டுள்ளார். மேலும், தாவெனியர் (Tavernier)[1] தேவனோ (Thevenot) அப்பே கேரே ஆகியோரெல்லாம் சிறப்பான குறிப்புகளை வழங்கியுள்ளனர்.[2] புதுவையில் பிரெஞ்சு கவர்னராக இருந்த மார்த்தின் (Martin) என்பாரும் சிவாஜியின் கர்நாடகப் படையெடுப்பைப்பற்றி விளக்கியுள்ளார்.[3] டச்சு நாட்குறிப்புகள் (Dagh-Register), போர்ச்சுகீசியர்களின் 'சிவாஜி வாழ்க்கை வரலாறு' (Da Guarda's 'Life of Civaje') முதலியனவும் சிவாஜியைப்பற்றி அறியத் துணை புரிகின்றன.

## பிறப்பும் வளர்ப்பும்

சிவாஜி 1627ஆம் ஆண்டு ஏப்ரல் 10ஆம் தேதியன்று பிறந்ததாக மூலக் குறிப்புகளின் அடிப்படையில் பல அறிஞர்கள் கருதுகின்றனர். ஷாஜி பான்ஸ்லே துக்காபாய் என்னும் மற்றொரு மனைவியுடன் மைசூருக்குச் சென்றபோது, அவள் வயிற்றிலுதித்த மகன் வெங்காஜிக்கு ஆதரவளித்தார்; அவருடைய முதல் மனைவி ஜீஜாபாயும் சிவாஜியும் ஷாஜியால் கைவிடப்பட்டு, பூனாவிற்கு அனுப்பப்பட்டனர். இளமையிலிருந்தே சிவாஜிக்குத் தாதாஜி சாந்தேவ் ஆன்மிக ஆசானாகவும், அரசியல் குருவாகவும், வழிகாட்டியாகவும் அமைந்

[1] Tavernies was in India between 1640 & 1666.

[2] Thevenot - was in India between 1665 — 1667

| | | | |
|---|---|---|---|
| Abbe Careri | ,, | ,, | 1668 — 1673 |
| Bernier | ,, | ,, | 1659 — 1667 |
| Dellon | ,, | ,, | 1669 — 1676 |
| De la Haye | ,, | ,, | 1670 — 1674 |

[3] Francis Martin - 'Memoirs' from S. N. Sen's 'Foreign Biographies of Shivaji'

தார். இளமையிலிருந்தே மற்போர், குதிரை ஏற்றம் ஆகிய பல வித்தைகளையும் அவர் கற்றுத் தேர்ந்தார். ஜீஜாபாய் புகட்டிய பாடங்கள் சிவாஜியின் பிஞ்சு உள்ளத்தில் பதிந்தன. தாதாஜி, சிவாஜிக்கு இந்து சமயத்தின் நெறிகளை நன்ருகப் புகட்டினர். இதனாலேயே பிற்காலத்தில் சிவாஜி தம் எழுச்சியின் மூலம் இந்து சமயக் காப்பாளராக அமைந்தார் என்ருல் அதில் வியப்பொன்றுமில்லை. தாதாஜி இறப்பதற்கு ஓர் ஆண்டிற்கு முன்னதாகவே சிவாஜி தம் அரசியல் வாழ்வைத் தொடங்கினர் என்று கருதவேண்டும். 1647ஆம் ஆண்டில் தாதாஜி இறந்தார். 1646ஆம் ஆண்டிலேயே சிவாஜி பீஜப்பூருக்குச் சொந்தமான தோர்ணக் கோட்டையைப் பிடித்தார்.

## சிவாஜியின் வெற்றிகளின் தொடக்கம்

1645ஆம் ஆண்டில் பீஜப்பூர் அரசில் தேக்கநிலை காணப்பட்டது. அச் சூழ்நிலை தமக்குச் சாதகமாயிருப்பதைக் கண்ட சிவாஜி பீஜப்பூரின் தளபதியைத் தோர்ணக் கோட்டையில் தாக்கினர். பீஜப்பூரின் கருவூலத்திலிருந்து அவர் 2 லட்சம் ரூபாய்த் தொகையை அபகரித்தார். பின்னர், வெகு விரைவிலேயே அவர் ராய்கட் கோட்டையைக் கட்டி முடித்தார். இவ் வெற்றிக்குப் பின் பீஜப்பூருக்குச் சொந்தமான கொந்தாண என்னும் கோட்டையையும் அவர் தாக்கி வெற்றி கண்டார்.

**19ஆம் வயதில் கோட்டையைக் கைப்பற்றுதல் :** சிறுவனுகிய சிவாஜி தன் 19ஆம் வயதிலிருந்து கோட்டைகளை முற்றுகையிடுவதைக் கண்ட பீஜப்பூர் அரசர் அவனைத் தண்டிக்கக் கருதி, ஷாஜி பான்ஸ்லேயை 1648ஆம் ஆண்டில் சிறைப்படுத்தினர். இது கண்டு, தந்தை ஷாஜி திகைத்து நின்ருர். தந்தையின் வருங்கால நிலையை மனத்திற்கொண்டு, சிவாஜி ஓரிரு ஆண்டுகள் பீஜப்பூரின் எல்லைக்கு ஏகாமல் தம் நடவடிக்கைகளை நிறுத்தி வைத்தார். ஷாஜியும் பீஜப்பூரின் சிறையிலிருந்து விடுதலையைக் கோரிப் பேரரசர் ஷாஜஹானுக்கு மனுச் செய்திருந்தார். பீஜப்பூரின் தளபதி அஹ்மத் கான் என்பவரின் உதவியினல் ஷாஜி பான்ஸ்லே விடுவிக்கப்பட்டார். அவர் விடுவிக்கப்பட்ட உடனே சிவாஜி மீண்டும் 1655ஆம் ஆண்டிலிருந்து பழையபடி கோட்டைகளைத் தாக்குவதில் ஈடுபட்டார்.

சிவாஜி புரந்தர்க் கோட்டையைக் கைப்பற்றிய விதம் கண்டிக்கத் தக்கதாகும். அதற்குரிமையாளர்களான 'மொரே' என்பாரின் குடும்பத்தில் தோன்றிய ஒருவரான சந்திர ராவ்

என்பாரைக் கொலை செய்து, உரிமையாளரை அகற்றிப் புரந்தர் கோட்டையைச் சிவாஜி பிடித்துக்கொண்டார். மொரே குடும்பத்தினர் மராத்திய பிராமணர்கள்; சந்திர ராவ் என்பார் பீஜப்பூர் மன்னருக்கு உட்பட்ட பணியாளராவார். சந்திர ராவுடன் திருமண விஷயமாகப் பேச்சு வார்த்தை நடத்துவது போன்று ரகுநாத பல்லால் (Ragunatha Ballal) என்னும் மற்றோர் அந்தணரை நடிக்கச் செய்து, அச் சந்திப்பின்போது சிவாஜி சந்திரராவைக் கொலை செய்துவிட்டார். ஜாதுநாத் சர்க்காரின் இக் கூற்றை (ப. 194) அறிஞர் சர்மா ஏற்க மறுக்கின்றார்.[1]

1656இல் சிவாஜி-முகலாயர் மோதல் : 1656ஆம் ஆண்டில் தக்காணத்தின் ஆளுநராக ஔரங்கசீப் பதவி ஏற்றிருந்தபோது முதன்முதலாக முகலாயர்களுக்கும் சிவாஜிக்கும் இடையே நேரிடையாகப் போர் தொடங்கியது. பல கோட்டைகளைத் தாக்கி வெற்றிகண்ட சிவாஜி பீஜப்பூரின் வலிமையின்மையை அறிந்து, சோனாஜி என்னும் தூதர் மூலமாக ஆளுநர் ஔரங்கசீப் நடுநிலைமை வகிப்பாரேயானால், அது முகலாயர்களுக்கு நலமாக இருக்குமென மடல் ஒன்றைத் தீட்டியனுப்பினார். அம் மடலில், சிவாஜி தமக்குரிய பீஜப்பூர்க் கோட்டைகளையும், கிராமங்களையும் முகலாயப் பேரரசர் தம்மிடம் அளிக்க வேண்டும் என்றும், தாம் முன்னரே கைப்பற்றியுள்ள கோட்டைகள் தமது பிடியில் உறுதிப்பட வேண்டும் என்றும் கோரினார். ஏப்ரல் 23ஆம் தேதியன்று ஔரங்கசீப் இதனை ஏற்பதாகப் பதிலளித்ததும், சிவாஜி மீனாஜி பான்ஸ்லே என்பாரின் தலைமையில் 3000 குதிரை வீரர்களை யனுப்பி ராமர்குண்டாப் பகுதியின் கிராமங்களைத் தாக்கியழித்தார். மராத்தியப் படையினர் பல கிராமங்களையும், அஹமது நகரக் கோட்டையின் பகுதிகள் சிலவற்றையும் தாக்கி அழிக்கத் தொடங்கினர். இவர்கள் அஹமது நகர் கோட்டையையே முற்றுகையிடவும் கூடத் துணிந்தனர்.

இச் செய்திகளைக் கேட்ட இளவரசர் ஔரங்கசீப் மராத்தியர்களை முறியடிக்க, நாஸர் கான், இராஜீ கான் என்னும் முகலாயத் தளபதிகளை அஹமது நகருக்குப் படைகளுடன் அனுப்பி உதவிபுரிந்தார். முகலாய சேனை பாய்ந்து வருவதைக் கண்ட சிவாஜி, நேருக்கு நேர் நின்று போர்புரியாமல் தப்பியோடினார்; அவ்வாறு ஓடும் போதே அஹமது நகர மாவட்டத்தின் பகுதிகள் சிலவற்றில் கொள்ளையடித்துச் சென்றார். ஆனால்,

[1] Prof. S. R. Sharma, 'The Founding of the Maratha Power'.

மராத்திய வீரர்கள் சிலர் பேரரசின் படைகளால் கொல்லப்பட்டனர். அச் சூழ்நிலையிலும் இளவரசர் ஔரங்கசீபுக்கு மட்டும் ஓர் உண்மை புலப்பட்டது. வளர்ந்து வரும் இளைஞர் சிவாஜி அனேகமாக, பரந்த உயர்ந்த இலட்சியம் ஏதோ ஒன்றை நோக்கி நகர்ந்து செல்வதால், அம் மராத்திய வீரர் தாம் அளிக்கும் வாக்குறுதியைக் காப்பாற்று விட்டாலும், தாம் கடைப் பிடிக்க வேண்டிய அறவழிகளைக் கைவிட்டாலும், குறிக் கோளையே பெரிதும் பாராட்டுபவர் என்ற உண்மை மட்டும் இள வரசர் ஔரங்கசீபுக்கு விளங்கி விட்டது. இதனை அறிஞர் சர்க்காரும் ஏற்றுக் கொள்கின்றார்: 'அவர் (சிவாஜி) ஓர் இளம் மராத்திய தலைவர், ஒரு கொள்ளைக்காரர், தந்திரத்தை மேற் கொண்டாயினும் தம் நலனையே பேணுபவர் என்பதனை ஔரங்கசீப் நன்றாக உணர்ந்தார்.'[1]

**1657இல் மேலும் சில கோட்டைகள் :** 1657ஆம் ஆண்டில் மேற்குத் தொடர்ச்சி மலைக் குன்றுகளின் சரிவிலுள்ள தற்கால தானா மாவட்டத்தில் கல்யாண் என்னுமிடத்தைச் சிவாஜி தாக்கி, அங்கிருந்த சொத்துகளைச் சூறையாடினார். கல்யாண், பிவந்திஜ் என்னும் கோட்டைகளை அரேபியராகிய முல்லா அஹமத் என்னும் முகலாயத் தளபதி காவல்புரிந்து வந்தார். அந்த முல்லா அஹமதை அகற்றிவிட்டு, அக் கோட்டையின் நிறைந்த பொருட் செல்வத்தையெல்லாம் சிவாஜி அபகரித்துச் சென்றார். இவர் அடுத்த ஆண்டில் 'மஹூலி' என்னும் கோட் டையையும் பிடித்து, தென்மேற்கில் கொலாபாமா என்னும் இடம்வரை முன்னேறினார். ஔரங்கசீப் வாரிசுரிமைப் போருக்குப் பிறகு அரியணை ஏறும்வரை சிவாஜியிடம் பூனா, ராய்கட், தோர்னா, கல்யாண், பிவந்திஜ், சத்தாரா ஆகிய கோட்டைகள் கைவசமாகி இருந்தன. மொத்தத்தில் வடக்கே கொங்கணிப் பகுதியிலிருந்து தெற்கே சத்தாராப் பகுதி வரை சிவாஜியின் வசமாகி விட்டிருந்தன. ஔரங்கசீபின் மதக் கொள்கைதான் சிவாஜியின் எழுச்சிக்குக் காரணம் என்று கூறு பவர்கள், அவர் பட்டம் சூட்டிக்கொண்ட 1658ஆம் ஆண்டிற்கு முற்பட்ட இந் நிலையை மிகவும் நுணுக்கமாய் நோட்டமிட வேண்டும். சிவாஜி மிகவும் மும்முரமாகப் பல கோட்டைகளைத் தாக்கிச் சூறையாடிய காலத்தில் ஔரங்கசீப் தக்காணத்தில் ஆளுநராக வீற்றிருந்தார். அப்பொழுது சிவாஜி பலமுறை ஔரங்கசீபுக்குக் கடிதங்கள் வரைந்து, அறியாமலிழைத்த தவறுகளுக்குத் தாம் வருந்துவதாகவும், தம்மை மன்னித்து

[1] J. N. Sarkar, 'A History of Aurangzeb', & 'Shivaji'

விடுமாறும் கெஞ்சிக் கேட்டிருக்கிறார். அவ்வாறு சிவாஜி வரைந்த மடல்களுள், 1657இல் எழுதப்பட்ட கடிதமும் ஒன்றாகும். இதற்கு ஜூன் 22, 1657இல் ஔரங்கசீப் பதிலெழுதி யனுப்பினார். இந்தப் பதிலில் இவர் சிவாஜியின் விசுவாச உணர்வை மெச்சிப் பாராட்டி யிருக்கிறார்.[1]

## அப்சல் கான் படுகொலை புரியப்படுதல்

மேனாட்டு அறிஞர்கள் அனைவரும் ஏகோபித்த வண்ணமாகச் சிவாஜி அப்சல் கானைப் படுகொலை செய்தாரெனச் சாற்றுகின்றனர். ஆனால், இந்திய அறிஞர்களோ இதற்கு நேர் மாறான கருத்தை விளக்குகின்றனர். தொடக்கத்திலேயே அப்சல் கான் என்பார் முகலாயத் தளபதி அல்லர், மாறாகப் பீஜப்பூரின் தளபதியாகவே அவர் இலங்கினார் என்பதை நாம் நினைவில் இருத்துதல் வேண்டும். நிகழ்ச்சியை ஒட்டிய சூழ் நிலைகள் என்ன? இந் நிகழ்ச்சியின் உண்மையை அறிய இதன் தொடர்பான 17 குறிப்புகளை நாம் கவனிப்பது மிகவும் நலமாகும்.

(1) சிவாஜி பீஜப்பூருக்குச் சொந்தமான பல கோட்டைகளைத் தம்முடைய 19ஆம் வயதிலிருந்தே கைப்பற்றலானார் என்பதை நாம் முன்னமே குறிப்பிட்டோம். இந்தியாவின் வட பகுதியில் இளவரசர் ஔரங்கசீப் வாரிசுரிமைப் போரில் ஈடு பட்டிருந்த நேரம் அது. பீஜப்பூரைப் பொறுத்தவரை, சிவாஜி யின் அடாத செயல்களைத் தடுத்து நிறுத்துவதற்காகவும், அவரைத் தண்டிக்கக் கருதியும் படை ஒன்று அனுப்பப்பட்டது.[2] இப்படையின் எண்ணிக்கை 10,000 குதிரை வீரர்களைக் கொண் டிருந்த தென்னும் காஃபீ கான் கூற்றின் அடிப்படையை

[1] Prince Aurangzeb to Shivaji, letter written on 22nd June, 1657: 'After you have displayed words of loyalty and devoted service, you have attained to the honour of interviewing me. (25th Ramzan, 31st Reignal Year)'—J.N. Sarkar, 'The House of Shivaji' 1948 Edn. P. 122.

[2] இங்கு, முஹம்மத் ஆதில்ஷா பிறப்பித்த அரச கட்டளை யொன்றை நாம் கவனிக்க வேண்டும்: 'Farman of Mohamed Adil Shah issued on 16-6-1659: Shivaji out of evil intentions and evil propensities has started looting the Mohamedans residing in the Province of Konkan......He has also plundered them...He has captured many forts in the Province...We have sent Afzal Khan possessed of valour and prestige, the most capable and efficient of our noble men...He has been sent by us...You must carry out his commands and fulfil his requirements...help him so that Sivaji may be driven out and uprooted root and branch.'—Dr. D. S. Sardesai in 'Sivaji Souvenir', English Section, P. 143.

சர்க்கார், எலியட்-டௌசன், ஸ்மித் ஆகிய அறிஞர்கள் ஒப்புக் கொள்கின்றனர். ஸ்மித், 'சுமார் 10,000 வீரர்களைக் கொண்ட பெரும் சேனையொன்று மலைத்துப்பாக்கிகளுடன் சீரமைக்கப் பட்டு, வீரமும் அனுபவமும் முதிர்ந்த அப்சல் கான் என்னும் அதிகாரியின்கீழ் அனுப்பப்பட்டது' என்று கூறுகிறார். பேராசிரியர் சர்க்காரும், 'ஆனால் 10,000 குதிரைப்படைதான் அப்சல் கானுடன் துணைக்குச் சென்றது' என்று வரைகிறார். அப்துல்லா பதாரி (Abdulla Batari) என்ற இயற் பெயருடைய அப்சல் கான், அனுபவமும் ஆற்றலும் மிக்க தளபதி. உருவத்தில் கம்பீரமானவர்; தோற்றத்தில் பருமனாகவும், நெட்டையாகவும் உள்ளவர். அப்சல் கான் 'சிவாஜியைப் பிடித்துக் கொண்டு வருமாறும், அல்லது கொலை செய்தாவது விவகாரத்தை முடிக்குமாறும்' ஏவப்பட்டதாகச் சர்க்கார் கூறுகிறார். ஆனால், இதற்கு ஆதாரம் இல்லை. சேனை புறப்படும்பொழுது அப்சல் கான் ஆதில்ஷா மன்னரிடம் சூளுரைத்து வந்ததாகவும் கூறப்படுகிறது. இதற்கும் ஆதாரமில்லை. அப்படியே ஏற்றுக் கொண்டாலும், அப்சல் கான் 'நயவஞ்சகமாகச் சிவாஜியைக் கொலை செய்ய முயன்ற'தாகச் சொல்லப்படும் கூற்று முற்றிலும் பொய்யாகி விடுகின்றது. ஏனெனில், நயவஞ்சகத் திட்டம் கடைப்பிடிக்கப்படும் போது, சூழ்ச்சிகளை வெளிப்படையாகச் சொல்லிவிட்டால், அது எவ்வாறு நயவஞ்சகமாக இருக்க முடியும்?

(2) சிவாஜி அப்போது பிரதாப்கர் கோட்டையில் இருந்தார். சிவாஜியைக் கோட்டைக்கு வெளியே கொண்டுவருவதும் இயலாத காரியம். ஆனால், சிவாஜி அப்சல் கானைச் சந்தித்துப் பேச ஒப்புக்கொள்கிறார். அப்சல் கான் 10,000 படை வீரர்களுடன் தம்மைத் தாக்க வந்துள்ளார் என்பதை எவ்வாறு சிவாஜி அறிந்தார்? இந்தச் செய்தியை அறிவித்தவர் கிருஷ்ணாஜி பாஸ்கர் என்னும் ஓர் அந்தணராவார்.

(3) அப்சல் கான் முகாமிட்டிருந்த தலம் 'வாய்' (Wai) என்னும் இடமாகும். அப்சலின் மனத்துள் நயவஞ்சகத் திட்டம் இருந்திருக்குமேயானால், அவர் சிவாஜியை அறிந்த மராத்தியருடைய துணையைத் தேடிச் சென்.றிருக்க வேண்டியதில்லை. பிரதாப்கர் கோட்டையுள் சிவாஜி இருப்பதை அறிந்ததும், அக் கோட்டையை அப்சல் தாக்கியிருக்கக் கூடும்; 10,000 படை வீரர்கள் தம்மிடம் இருக்கும்போது எளிதிலே வெற்றி பெற்றிருக்கவும் கூடும். எனவே, தாக்குதலை மேற்கொள்ளாமையால், அப்சல் கானுக்கு நயவஞ்சக எண்ணம் இருந்த

தாகக் கூறப்படுவது முற்றிலும் உண்மைக்கு மாறுனது என்று புலப்படுகின்றது. அப்படியே நயவஞ்சகத் திட்டம் இருந்திருக்குமேயானுல், 10,000 படை வீரர்களுடன் சென்றது அவசியமற்றதாகின்றது. எனவே, இதனைப் படையெடுப்பு என்று கூறலாமே யொழிய, நயவஞ்சகச் சூழ்ச்சி மூலமாக அப்சல் கொலை செய்ய முயன்ருரென்று கூறுவது சற்றும் பொருத்தமாய்க் காணப்படவில்லை.

(4) கிருஷ்ணுஜி பாஸ்கர் மூலமாக அப்சல் கான் சிவாஜியைப் பார்க்க முடியாததனுல், கடிதம் ஒன்றை அவர் சிவாஜிக்கு அனுப்பியதாகச் சர்க்கார் கூறுகிருர். அக் கடிதத்தில், 'உங்களுடைய தந்தை பல ஆண்டுகளாக என்னுடைய நண்பராக இருந்தார்; நீங்களும் எனக்குப் புதியவரல்லர்; நீங்கள் வரலாம்; என்னைப் பார்க்கலாம்; நான் ஆதில்ஷாவிடம் என்னுடைய செல்வாக்கை உபயோகித்துக் கொங்கணில் உங்களிடம் இருக்கும் இடங்களை உறுதிப்படுத்த முயலுகின்றேன்' என்று குறிப்பிடப்பட்டிருந்தது. ஆனுல், இக் கடிதத்திற்குக் கா∴பீகானே, பெர்னியரோ, மனுச்சியோ சாட்சியமளித்திருப்பதாகத் தோன்றவில்லை. அப்படி ஏற்பினும், இக் கடிதம் நட்பையும் தோழமையையும் பாராட்டியதாகத் தோன்றுகிறதே யொழிய, அப்சல் கானின் நயவஞ்சகம் இதில் தொனிக்க வில்லை.

(5) அறிஞர் எட்வர்ட்ஸ், கேரட் (Edwards and Garret) என்பவர்கள், கிருஷ்ணுஜி பாஸ்கரைச் சிவாஜி தனியே சந்தித்து, இந்து மதத்தின் பெயரால், அவரிடம் அப்சல்கானின் உண்மையான நோக்கம் எதுவாக இருக்கக்கூடும் என வினவியதாகக் கூறுகிருர்கள்.[1]

(6) ஆனுல், சிவாஜி வாய் முகாமுக்குச் சென்ருரா? இல்லை. மாருக, பிரதாப்கர் கோட்டையில் அப்சல் கான் சிவாஜியைச் சந்திப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டது; இவ் வேற்பாட்டைச் செய்தவர் கிருஷ்ணுஜி பாஸ்கர். சிவாஜியின் ஏஜெண்ட்டான பந்தாஜி கோபினுத் (Pantaji Gopinath) என்பார், அப்சல் கான் சிவாஜியைச் சந்திக்கும்போது இவரைக் கைது செய்யத் திட்டமிட்டுள்ளார் என்பதை அறிந்ததாகக் கூறப்படுகிறது.[2] கிருஷ்ணுஜி ஏற்பாட்டைச் செய்திருக்க, அப்சல் கானின்

[1] Edwards and Garret—Moghul Rule in India.

[2] Manucci—Storia de Mogor; also Sarkar's works.

உட்கருத்தைக் கோபிநாத் எவ்வாறு அறிந்திருக்க முடியும்? எனவே, கிருஷ்ணாஜி பாஸ்கரும் கோபிநாத்தும் தூண்டிய திட்டமிட்ட கொலை நிகழ்ச்சி என்பதில் ஐயப்பாடு எதுவும் இருக்க முடியாது.

(7) மனுச்சியின் ஆதாரத்தை நாம் நம்ப வேண்டுமானால், பிரதாப்கர் கோட்டையின் அடிவாரத்தில் பந்தல் ஒன்று போடப் பட்டிருந்தது. அப்சல் கானும் சிவாஜியும் சந்திக்க அவ்விடத் தில்தான் ஏற்பாடு செய்யப்பட்டது. சந்திப்பின்போது உட னிருந்தவர்கள் யார்? அறிஞர் ஜாதுநாத் சர்க்கார், இருதரப் பாருக்கும் நான்கு பேர் வீதம் இருந்ததாகக் கூறுகிறார். இது உண்மைக்கு மாறானது. மனுச்சியின் ஆதாரத்தின்படி, சிவாஜி யின் மெய்க்காப்பாளர்கள் மூவர் வாள் ஏந்தியவாறு இருந்தனர்; அப்சல் கானுக்குத் துணை யாருமே இல்லை.[1] அப்சல் கானுடன் உதவிக்குச் செல்லவிருந்த போர்வீரர் 'சையத் பந்தா' என்பவர் (Syed Banda) சந்திப்பின்போது செல்லாமல் தடுக்கப்பட்டார்.[2] (சர்க்கார் இவரது பெயரைக் குறிப்பிடவில்லை. மனுச்சி மட்டும் குறிப்பிட்டுள்ளார்.) ஆனால், டாக்டர் ஸ்ரீவத்சவா ஒவ்வொரு தரப்பினருக்கும் மூன்று மெய்க்காப்பாளர்கள் இருந்ததாகவும், நான்காவது மெய்க்காப்பாளராக சையத் பந்தா தடுக்கப்பட்டார் என்றும் விவாதிக்கின்றார்.[3] இவர் கூற்றுக்கு ஆதாரம் என்ன? அப்படி ஆதாரம் எதுவும் இருப்பதாகத் தோன்றவில்லை. அப் படியே மூவர்தாம் அனுமதிக்கப்பட்டனர் என்றால், சர்க்கார், ஸ்ரீவத்சவா, ஸ்மித் (இரண்டு மெய்க்காப்பாளர்கள் - ப. 406) ஆகிய அறிஞர்களிடையே நடந்த நிகழ்ச்சிகளில் ஏன் கருத்து வேற்றுமை காணப்படுகின்றது? சர்க்கார் நால்வர் என்று கூறு கின்றார். சில அறிஞர்கள், மூவர்; ஸ்மித் இருவர். இதிலிருந்து உண்மை எங்கோ புதைந்து உள்ளது என்று புலனாகின்றது.[4]

[1] Manucci—Storia de Mogor.

[2] 'Shivaji slowly descended down the fort under the escort of Tanaji Malasure, Yesaji Konk, Heraji Farzand, Gobinda Pant and about 50 statesmen...Bhaskar...persuaded that Afzal Khan might even dismiss his attendant, and encourage Shivaji to approach him' - 'Life of Shivaji Maharaj'—P. 169.

[3] Dr. A. L. Srivatsava - History of India 1000 to 1707.

[4] *காஃபீகான் தந்துள்ள தகவலை எலியட், டௌஸன் ஆசிரியர்கள், வால். VII, பக். 258-61-ல் இவ்வாறு வழங்குகின்றனர்.* 'He (Shivaji) begged that the armed men and the servants who have accompanied Afzal Khan's litter should move farther off. Shivaji had a weapon, called in the language of Dhakni 'Bichwa' on the fingers of his hand hidden in under his sleeves...they should rush out and fall upon the men of Afzal Khan...The treacherous foe then approached and threw himself weeping at the feet of Afzal Khan, who raised his head and

(8) அப்சல் கான், சிவாஜி ஆகியோரிடமிருந்த ஆயுதங்கள் என்ன? காஃபீகான், மனுச்சி ஆகியோர் சிவாஜியிடம் 'உறைவாள்', 'பிச்சுவா', 'புலிநகம்', 'மார்பைப் பாதுகாக்கும் கவசம்' ஆகியன இருந்தனவாகக் கூறுகின்றனர். மராத்தியக் குறிப்புகள் எதை மறுத்தாலும், மேற்கண்ட ஆயுதங்கள் எல்லாம் சிவாஜியிடம் இருந்தனவென்று ஒப்புக்கொள்கின்றன. மாறாக, அப்சல் கானிடம் 'உறைவாள்' மட்டுமே இருந்தது என ஐரோப்பிய அறிஞர்கள் கூறுகின்றனர். மராத்தியக் குறிப்பாளர்களிடையே கருத்து ஒற்றுமை இல்லை. அக் குறிப்புகளின் ஆதாரங்களின்மீது 'பிச்சுவா' அல்லது 'குத்துவாள்' (Dagger) மட்டுமே அப்சல் கானிடம் இருந்ததாகச் சர்க்கார் கூறுகின்றார்.[1] கின்கெய்ட் (Kincaid) என்பார் அப்சல் கானிடம் 'உடைவாள்' (Sword) இருந்ததாகக் கூறுகிறார்.[2] எனவே, உண்மை என்னவெனில், அப்சல் கானிடம் பிச்சுவாவோ, உடைவாளோ ஒரே ஓர் ஆயுதம் மட்டுமேதான் இருந்திருக்க வேண்டும். அதற்கு நேர் மாறாகச் சிவாஜியிடம் நான்கு ஆயுதங்கள் இருந்தன. முற்கூட்டியே பல ஆயுதங்களை ஏந்திச் செல்வது தற்காப்பாக இருக்க முடியுமா?

(9) உண்மையில், தற்காப்புக்காக ஆயுதம் தேவைப்படுமேயானால், வாள் ஒன்று மட்டுமே இருக்கலாமே யொழிய, 'புலிநகம்' என்று சொல்லக்கூடிய 'எஃகு நகம்' (Bagh-Nakh or Tiger's claw) ஏன்? தற்காப்புக்கு இக்கருவி மிகவும் உபயோகப்படும் என்ற கருத்துத் தோன்றக் காரணம் என்ன? இதற்குமுன் எந்த வீரரும் இம் மாதிரி உபயோகித்ததில்லையே!

(10) மனுச்சியின் கருத்துப்படி, சிவாஜி கோட்டையிலிருந்து கீழே இறங்கிவந்தார்; மேடை மீது ஏறினார்; அமர்ந்திருந்த அப்சல் கான் அப்பொழுது தம் ஆசனத்திலிருந்து எழுந்தார். சில அடிகள் முன்னே சென்று, அப்சல் கான் சிவாஜியைக் கட்டித்தழுவ முயன்றார்.[3] அப்சல் கான் பருமனாக இருந்ததனாலும், சிவாஜி குட்டையானவராகையாலும் இவர் அப்சல் கானின் தோள் உயரத்துக்கு வந்தார். அவர் ஆலிங்கனத்தின்போது சிவாஜியின் 'கழுத்தை நெரித்ததாக'க் கூறப்

was about to place the hand of kindness on his back and embrace him. Shivaji then struck the concealed weapon so forcibly into his stomach that he died without a quiver.' (Shivaji under Afzal Khan Bijapuri.)

[1] J. N. Sarkar, 'Shivaji'

[2] Kincaid and Parasuis, 'History of the Marathas.'

[3] Manucci, 'Storia de Mogor.'

படுகிறது.[1] கழுத்தை நெரித்துக்கொண்டிருக்கும்போது, தமது வலக் கரத்தால் பிச்சுவாவை உருவிச் சிவாஜியின் விலாப்பக்கத்தில் குத்தியதாகவும் கூறப்படுகிறது.

ஆனால், மராத்திய ஆசிரியர்களிடையே கருத்து ஒற்றுமை இல்லை. ஏனெனில், சில ஆசிரியர்கள் அப்சல் இடப்புறத்திலிருந்து கத்தியை உருவியதாகவும், இன்னும் சிலர் வலப்புறத்திலிருந்து உருவியதாகவும் கூறுகின்றனர். ஒரு கையால் குட்டையான பேர்வழியைக் கழுத்தை நெரித்துக்கொண்டு, மற்றொரு கரத்தால் ஆயுதத்தை உருவுவது என்பது எவ்வாறு இயலும்? கட்டித் தழுவுகிறார் (ஆலிங்கனம் செய்கிறார்) என்று சொல்லும்போது (முஸ்லிம்கள் மரபாக, கழுத்துடன் கழுத்தை இணைத்து, மார்புறத் தழுவிக் கொள்வது), அப்சல் கானுடைய இரு கைகளும் சிவாஜியின் இரண்டு விலாப்புறங்களிலும் இருக்க வேண்டுமே ஒழிய, அவரால் தம் இடையிலிருந்து வாளை உருவ எவ்வாறு இயலும்? எனவே, இந்தக் கூற்று முற்றிலும் ஏற்கக் கூடியது அன்று.[2]

(11) தம் கழுத்தை நெரிக்க முயலுவதைப் பார்த்த சிவாஜி உடனே பிச்சுவாக்கொண்டு அப்சல்கானின் வயிற்றைக் கிழித்தார் என்பதை மராத்தியக் குறிப்பாளர்கள் அனைவரும் ஒப்புக்கொள்கின்றனர். அப்சல் ஆலிங்கனம் செய்யும்பொழுது இவருடைய முகமும் கழுத்தும், சிவாஜி குட்டையாக இருந்ததனால், அவரது தோளின் மீது இருந்திருக்க வேண்டும். இதற்கு ஏற்றவாறு சிவாஜியின் இரு கரங்களும், அப்சல் கானின் இரண்டு விலாப்பக்கங்களையும் கட்டித்தழுவ வேண்டுமே ஒழிய, அப்சல் கானின் வயிற்றைக் கிழிப்பானேன்?

(12) கழுத்தை நெரித்திருப்பினும், சிவாஜி கோபம் அடைந்திருப்பாரேயானால், அப்சல் வாளை உருவும்பொழுது, சிவாஜியும் தம்மிடமிருந்த வாளை உருவியிருக்கவேண்டுமே ஒழியப் புலிநகம் கொண்டு அப்சலின் வயிற்றைக் குறி பார்ப்பானேன்? அப்படியே தற்காப்புக்காகச் சமயோசிதப் புத்தி கொண்டு புலிநகத்தை உபயோகிக்க நினைத்திருப்பாரேயானால்,

[1] Dr. S. N. Sen, 'Foreign Biographies of Shivaji'. Also, G. S. Sardesai's 'A New History of Marathas.'

[2] Shivaji fastened tiger's claws upon abdomen. At the same time he drew out the poniard from under the sleeves, delivered thrust upon thrust and dexterously extricated his head from under Afzal Khan's arms'—Thakar and Kelushkar—Ibid. p. 170

அப்சல் கானின் பக்கவாட்டுகளில் காயத்தை ஏற்படுத்தி இருக்கவேண்டும். அஃதல்லாமல், குறி பார்த்து வயிற்றைக் கிழிப்பானேன்?

(13) 18ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த அறிஞர் எட்மண்ட் பர்க் (Edmund Burke) இந் நிகழ்ச்சியைப்பற்றிச் சாதகமாகக் கூறியதையொட்டி, பேராசிரியர் சர்க்காரும் 'தற்காப்புக் கொலை' (Preventive Murder) என்று கூறுகிறார்.[1]

அறிஞர்களின் ஆதரவு, இசைவினாலேயே கொலை நிகழ்ச்சி அன்று என்று மறுத்திட இயலாது. எனவே, பர்க்கின் கருத்தை ஏற்பதற்கில்லை. ஏனெனில், இந் நிகழ்ச்சியுடன் தொடர்புடைய பல விவரங்களை எட்மண்ட் பர்க் ஆராயவில்லை. இயற்கையிலேயே சில கேள்விகள் எழுகின்றன :

அ. கிருஷ்ணாஜி பாஸ்கரும், கோபிநாத்தும் சிவாஜியின் திட்டத்திற்கு ஆரம்பத்திலிருந்தே துணை புரிந்தார்கள் என்பதை எவ்வாறு மறுக்க முடியும்?

ஆ. அப்சல் கானுக்கு ஒரே ஆயுதம் இருக்க, சிவாஜிக்கு நான்கு ஆயுதங்களும், குறிப்பாகப் புலிநகமும் ஏன்?

இ. தற்காப்புக்காகக் கொலை செய்யப்படுவதற்கு இங்கு ஆத்திரமூட்டக்கூடிய நிகழ்ச்சி ஏதும் நடக்கவில்லையே!

ஈ. தம்மைப் பாதுகாத்துக்கொள்ள நினைத்திருந்தாலும், ஆத்திரமூட்டப்பட்டிருப்பினும், அப்சல் கானின் விலாப்புறங்களிலோ, கைகளிலோ, மார்பின் மீதோ சிவாஜி காயத்தை ஏற்படுத்தியிருக்க வேண்டும். மாறாக, வயிற்றைச் சரியாக நேராகக் குறிபார்த்துக் கிழித்தது எவ்வாறு தற்காப்பு ஆக முடியும்? எனவே, சந்தேகமின்றி இது திட்டமிட்ட கொலை ஆகும். இக் கொலையின் தொடர் நிகழ்ச்சிகளும் இதனைக் கொலையே என நிரூபிக்கின்றன.[2]

[1] The weight of recorded evidence as well as the possibilities of the case support the view that Afzal struck the first blow and of what Burke calls 'Preventive murder'......It was a case of DIAMOND CUT DIAMOND—J. N. Sarkar's 'Shivaji and his times'—p. 73. 1928 Edition...Sathianathier also quotes Sarkar.

[2] சிவாஜி ஜய்சிங்கிற்கு எழுதிய கடிதத்தில், அப்சல் கான் கொலையைப் பற்றிப் பலர் என்ன சொன்னாலும் நம்பவேண்டாம் என்று சொல்லி விட்டு, அதே கடிதத்தில் 'அப்சல் கானுக்கு முதல் அடி கொடுத்திரா திருந்தால், எப்படி வலக்கரம் இக் கடிதத்தை எழுத முடியும்?' என்று கேட்கிறார். Shivaji's letter to Jaisingh (Translation) in 'Shivaji Souvenir' by G. S. Sardesai.

(14) சிவாஜி புலிநகத்தைக் கொண்டு வயிற்றைக் கிழித்த பின்னர்த் தம்முடைய பிச்சுவாவைக் கொண்டு அப்சலின் பக்க வாட்டில் குத்தினார். தற்காப்புக்காக இருந்திருப்பின், நிகழ்ச்சிக்குப் பின் உள்ளத்தில் அச்சம் கொண்டு நடுங்கி இருத்தல் வேண்டும். அதற்கு நேர்மாறாக, மீண்டும் ஒருமுறை பிச்சுவாக் கொண்டு தாக்குவானேன்?

(15) இந் நிகழ்ச்சி முடிந்த பின், சிவாஜி மேடையை விட்டுக் கீழிறங்கி வெளியில் இருக்கும் தம் ஆள்களுடன் ஓடி இணைந்து கொண்டார். குற்றுயிராகக் கிடந்த அப்சல் கான் 'வஞ்சகம்! கொலை! கொலை! உதவி! உதவி!' என்று அலறினார். அலறலைக் கேட்ட பின்னர்த்தான் முன்னரே தடுக்கப்பட்ட சையத் பந்தா ஓடிவந்தார். அக் கணமே ஜீவன் மேத்தா (Jeevan Mehta) சையத் பந்தாவின் வலக் கரத்தை வாள் கொண்டு துண்டித்தார். பந்தாவும் கொல்லப்பட்டார்.

(16) இதற்கிடையில் சிவாஜியும் மெய்க்காப்பாளர்களும் பிரதாப்கர் கோட்டையுச்சிக்குச் சென்றனர். உடனே பீரங்கி முழக்கம் ஒன்றைச் செய்தனர். இது பதுங்கி இருந்த சிவாஜியின் துருப்புகளுக்குச் சரியான சாடை காட்டுவதாக இருந்தது. உடனே மோரோ திரிம்பக் (Moro Trimbak), நேத்தாஜி பால்கர் (Netaji Palkar) என்னும் மராத்தியத் தலைவர்களின்கீழ் மராத்தியப் படைகள், முகாமிலிருந்த பீஜப்பூர்ப் படைகளை நோக்கித் தாக்கப் பாய்ந்தோடின. இவை எல்லாம் முற்கூட்டியே செய்யப்பட்ட திட்டம் என்று நிருபிக்கவில்லையா?

எனவே, மேற்கண்ட நிகழ்ச்சிகளிலிருந்து திட்டவட்டமாக ஓர் உண்மை புலப்படுகின்றது. சிவாஜி கிருஷ்ணாஜி பாஸ்கரின் துணைகொண்டு, எவ்வாறாயினும் அப்சல் கானை மீண்டும் பீஜப்பூர் திரும்பாமல் தடுக்க வேண்டுமென்று கருதி, கொலையே யாயினும் சரியே என்று துணிந்து, முன்னெச்சரிக்கையுடன் சென்று, முற்கூட்டித் தீர்மானித்தவாறு நிகழ்த்திய திட்டமிட்ட கொலை இது என்பதை ஏற்கத்தான் வேண்டும். இக் கருத்தை வலியுறுத்திப் பேராசிரியர் எஸ். எம். ஜாஃபர் கூறுகிறார்: 'இதற்கு நேர்மாறாகச் சிவாஜி தாம் தம் எதிரியைச் (Afzal Khan) சந்திப்பதற்கு அழைத்தார். சந்திக்கும் இடத்தையும் தாமே தேர்ந்தெடுத்துக்கொண்டார்; அப்சலின் படைகள் வரும் வழியே தம் வீரர்களை நிறுத்தினார்; அவர்களுக்குக் குறிப்புகளைச் சூசகமாக அறிவித்தார்; தம்மை

ஆயுதங்களால் காத்துக்கொண்டார்; பிச்சுவா, புலிநகம், உடைவாள், மார்புக்கவசம் ஆகியவற்றைக் கொண்டுசென்றார். குறிப்பிட்ட இடத்திற்கு ஆயுதப் பந்தோபஸ்துடன் சென்றார். ஆனால், சையத் பந்தா இருப்பதை ''வன்மையின் எடுத்துக் காட்டு'' (Show of Violence) என்று கூறித் தடுத்தார்; கானின் எதிரே அடக்கத்துடன் சென்று, சந்திப்பின்போது அவரைத் தழுவுவது போன்று நடித்துக் குத்திக்கொன்றார்.'[1]

(17) கொலையுடன் நிற்காமல், திரிம்பக், பால்கர் ஆகியோரின் படைகள் வெகு தூரத்திலிருந்தும், அப்சல் கானின் படைகளைத் தாக்கமுற்பட்டன. அப்சலின் படைகள் 'வாய்' முகாமிலேயே இருந்தனவே யொழிய, பிரதாப்கர் கோட்டைக்கு அருகில் இருக்கவில்லை. இதனாலும், நிச்சயமாக மராத்தியர்கள் இந் நிகழ்ச்சிக்கு முன்னேற்பாடு செய்திருந்தனர் என்பது தெரிகிறது. மராத்தியப் படைகள் பீஜப்பூரின் படைகளைத் தாக்கி, 10 இலட்சம் ரூபாய் பெறுமானமுள்ள பொருள்களையும் நகைகளையும், மற்றும் பீஜப்பூர்ப் படையின் 4000 குதிரைகளையும், 1600 ஒட்டகங்களையும் சூறையாடி அபகரித்துச் சென்றன.[2] அப்சல் கான் படுகொலை செய்யப்பட்ட நிகழ்ச்சி 1659ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 10ஆம் தேதி நடந்தது. திட்டமின்றி, முற்கூட்டியே ஏற்பாடு செய்யாமல், கொலையைத் தொடர்ந்து, இந் நிகழ்ச்சியும் எவ்வாறு நிகழ இயலும்? பின்பு, இதுபோன்ற சூழ்நிலையில் சிவாஜி ஜெய்சிங்கிடம் ஏன் இவ்வாறு நடந்துகொள்ள முடியவில்லை என்பதையும் நாம் மறந்துவிடுவதற்கில்லை. 1658ஆம் ஆண்டில் ஔரங்கசீப் சிவாஜியின் போக்கினைக் கண்டித்துள்ளார்.[3]

சிவாஜியும் ஷயிஸ்தா கானும்: ஷயிஸ்தா கான் பேரரசின் தக்காண அரசப் பிரதிநிதியாக 1660ஆம் ஆண்டில் நியமிக்கப்பட்டிருந்தார். சிவாஜியின் போராட்டங்களையும், அதற்கு முன்பே தக்காணத்தில் தாம் ஆளுநராக இருந்தபோது சிவாஜியின் போர்த்தன்மையையும் அறிந்திருந்த பேரரசர், ஆட்சியில் அமர்ந்த அடுத்த ஆண்டில் சிவாஜியைத் தடுப்பதற்காக

[1] Prof. S. M. Jaffar—History of Moghul Empire from Babar to Aurangzeb - p. 329-30, 1936 Edition, Lahore.

[2] Manucci—Storia de Mogor. Also, Sarkar's - A Short History of Aurangzeb.

[3] Letter written by Aurangzeb to Shivaji on 24th Feb. 1658. 'Although your offences are too many and too grave to merit pardon..., I draw the pen of pardon—Sarkar, The House of Shivaji - p. 124,

ஷயிஸ்தா கானை அனுப்பிவைத்தார். ஷயிஸ்தா கான் முதலில் அஹமது நகரை விட்டுப் புறப்பட்டுப் பூனாவிற்கு அருகில் 'சக்கான்' என்னுமிடத்தில் முகாமிட்டிருந்தார். உடனடியாகச் சிவாஜியைத் தாக்குவது அவரது நோக்கமன்று; மாறாகத் தம் தந்திரத்தால் பீஜப்பூர் அரசுக்குச் சொந்தமான பரேன்டா என்னும் கோட்டையைத் தாக்கினார். அவர் ஔரங்கசீபுக்கு விட்டுக்கொடுக்குமாறு காலிப் (Ghalib) என்னும் தளபதியைத் தூண்டினார்; இதில் வெற்றியும் கண்டார். அடுத்த ஆண்டில் வடக்குக் கொங்கணில் அவர் படையிறங்கினார்; முகலாய உபதளபதி கர்த்தலப் கான் (Kartalab Khan) என்பவரின் உதவியுடன் கல்யாண் பகுதியை விடுவித்தார். ஷயிஸ்தா கானின் படைகள் தெற்கு நோக்கி வருவதைக் கண்ட சிவாஜி மேலும் தெற்கு நோக்கி ஒவ்வொரு நகராகக் கைப்பற்றிய வண்ணம் நகரலானார்.

இதற்கிடையில், முன்பே 1659ஆம் ஆண்டிலேயே சிவாஜி பன்ஹளாக் கோட்டையைப் பிடித்திருந்தார்; சித்தியர்கள் (Siddis) என்பவர்களிடமிருந்து இராஜப்பூர் என்னும் இடத்தையும் கைப்பற்றியிருந்தார். இங்கேயே அவர் 1660ஆம் ஆண்டில் ஆங்கிலேயர்களைத் தாக்கினார். ஆங்கிலேயர்கள் எதிர்க்கவும், பீஜப்பூர்ப் படைகளும் எதிர்க்கவும் பாஜிப் பிரபு என்னும் மராத்தியத் தளபதி காஜாப்பூர்க் கணவாய் வழியே சிவாஜி தப்பிச் செல்ல உதவினார். சில ஆசிரியர்கள் காஜாப்பூர்க் கணவாய்ப் போரை 'மராத்தியத் தேர்மாப்பிலே' (Maratha's Thermapylae) என்று வர்ணிக்கின்றனர்.[1]

ஷயிஸ்தா கான் 1660—61ஆம் ஆண்டுகளில் பூனாவில் தங்கியிருந்தார். சிங்கர்க் கோட்டைக்கு அருகில் மகாராஜா ஜஸ்வந்த் சிங்கின் பெரும் படைகளும் முகாமிட்டிருந்தன. ஔரங்கசீபின் தளபதியான ஜஸ்வந்த்சிங் ஷயிஸ்தாகானுக்குத் துணைபுரிய 10,000 படை வீரர்களுடன் காத்திருந்தார். சிவாஜியின் படைகளுக்கு நேத்தாஜி பால்கர், மோரோபந்த் என்னும் மராத்திய உபதளபதிகள் தலைமை ஏற்றிருந்தனர்.

முன்னேற்பாடாகவே இச் சூழ்நிலையை யறிந்த சிவாஜி ரம்ஜான் மாதத்தில் 6ஆவது நாளன்று இரவு ஷயிஸ்தா கானின் முகாமிற்குள் சிம்னாஜி பாபுஜியுடன் உள்ளே புகுந்து, அம் முகலாயத் தளபதி எழுமுன், அவரது விரலை வெட்டிச்

[1] Prof. S. R. Sharma—The Moghul Rule in India.

சென்றார். பேராசிரியர் ஜாதுநாத் சர்க்கார் இந் நிகழ்ச்சியை விவரமாக விவரிப்பதுடன், ஷயிஸ்தா கான் முன்னெச்சரிக்கை யின்றி இருந்ததால்தான் தோல்வியுற்றா ரென்று காரணங் களுடன் விளக்குகிறார். சிவாஜியுடன் வந்த 200 படைவீரர்கள் கோட்டைக்குள் நுழைந்தனர். அக் கோட்டையிலேயே போர் தொடங்கிற்று. ஷயிஸ்தாகானின் மகன் அபுல்ஃபத்தாஹ் கொல் லப்பட்டார். ஷயிஸ்தா கானின் படைகளும், அக் கோட்டையி லிருந்த நவாபின் படைகளும் விழித்துக்கொள்ளவே சிவாஜி தப்பியோடினார். ஆனால், உண்மையில் ஷயிஸ்தா கான் இம் மாதிரியான இழிவை ஏற்கக் காரணம், ஜஸ்வந்த் சிங் முன் னெச்சரிக்கை யெடுக்கத் தவறியது மட்டுமன்றி, சிவாஜி அந்த ஜஸ்வந்த் நல்கிய துணையினாலேயே இந்த அளவிற்குத் தாக்கு வதற்கு துணிச்சல் பெற்றார் என்பதைத் தக்காணத்தில் பலரும் அறிந்திருந்தனர். இதனைச் சர்க்கார் ஒப்புக் கொள்கிறார். 'தக்காணத்தில் பொதுமக்கள் எங்கும் சிவாஜியின் இச் செய லுக்கு ஜஸ்வந்த் சிங்கின் உடந்தையே காரணமெனப் பேசிக் கொண்டனர்.'[1]

சூரத் கொள்ளை : ஷயிஸ்தா கானை இகழ்ச்சிக்குள்ளாக்கிய நிகழ்ச்சி சிவாஜிக்குத் தக்காணமெங்கும் புகழைத் தேடித் தந்தது. எனவே, இதற்கு முன் அடுக்கடுக்காகப் பல வெற்றி களைக் கண்ட சிவாஜி, சூரத் நகரைக் கொள்ளையிடத் தீர்மா னித்தார். இதற்குக் காரணம் என்ன? சூரத் நகரம் பீஜப் பூருக்குட்பட்டது அன்று. அது, முகலாயப் பேரரசுக்கு உட் பட்ட துறைமுக நகராகும். 1664ஆம் ஆண்டு ஜனவரி 10ஆம் தேதியன்று சிவாஜி இந் நகரைக் கொள்ளையிட்டார். முதல் நாளன்றே அவருக்கு 12 இலட்சம் ரூபாய் கிட்டியது. சூரத் நகரம் நான்கு நாள்கள் சூறையாடப்பட்டது.[2] ஜனவரி 5-ல் தொடங்கி 10ஆம் தேதி வரை நான்கு மைல் சுற்றளவில் உள்ள 2 இலட்சம் ஜனத்தொகை கொண்ட இந் நகரைச் சிவாஜியும் அவரது படைகளும் தாக்கியபோது, இங்கு ஆளுநரா யிருந்த இனயத் கான் என்பவர் நகரைப் பாதுகாக்காமல், கோழை யைப் போன்று வெளியேறி ஓடினார். இந் நகரில் வாழ்ந்து வந்த டச்சு, பிரிட்டிஷ் கம்பெனிகளின் அலுவலர்கள் இந் நகரைப் பாதுகாக்கத் தங்களால் இயன்றவரை முயன்றனர். பிரிட்டிஷ் கிழக்கிந்தியக் கம்பெனியின் 4 காரணிக்கர்களை

[1] J. N. Sarkar -A Short History of Aurangzeb.

[2] சிவாஜி 40 நாள்கள் கொள்ளையிட்டதாக டாக்டர் ஃபிரையர்(Dr. Fryer) கூறுகிறார் – லேன்பூல் மேற்கோள். (Lane Poole—Aurangzeb. p. 162)

(Factors) சிவாஜி கைது செய்து, அவர்களின் விடுதலைக்காகப் பணம் கிடைக்கும் வரை விடுவிக்க விரும்பவில்லை. அவர்கள்: (1) ஹென்றி ரெவிங்க்டன் (Henry Revington), (2) ரிச்சர்ட் டெய்லர் (Richard Taylor), (3) ராண்டால்ப் டெய்லர் (Randolph Taylor),(4) ஃபிலிப் கிப்பர்ட் (Philip Gybbord) ஆகியோர் எனத் தக்ககாவ், கலூஸ்கர் ஆசிரியர்கள் கருதுகின்றனர்.[1] புதன், வியாழன், வெள்ளி, சனி ஆகிய நான்கு நாட்களிலும் சூரத் நகரின் பல வீடுகள் தீக்கிரையாக்கப் பட்டன. பஹர்ஜி போரா (Baharji Bohrah) என்னும் போரா வம்ச இஸ்லாமிய இனத்தலைவர் ஒருவரின் வீடும் கொள்ளையடிக்கப்பட்டு, 80 இலட்சம் ரூபாய்கள் அவரிடத்திருந்து அபகரிக்கப்பட்டன. ஹாஜி செய்யது பேகு என்னும் மற்றொரு செல்வ வணிகர் ஒருவரின் வீடும் கொள்ளையடிக்கப்பட்டது. இவ்வாறாக, நான்கு ஐந்து நாட்கள் சூறையாடியதன் பயனாகச் சிவாஜிக்குப் பல இலட்ச ரூபாய் பெறுமானமுள்ள ரொக்கமும் பொருள்களும் கிடைத்தன.

சிவாஜி சூரத் நகரைக் கொள்ளையிட்டது சரியே என்பது எந்த ஓர் அடிப்படையிலும் ஏற்க முடியாததாகும். ஏனெனில், அந் நகர்வாசிகளால் சிவாஜிக்கு எவ்வித இடையூறும் விளைந்ததில்லை. அவர்கள் கோல்கொண்டா ஆட்சிக்குட்பட்டவர்களும் அல்லர். எனவே, சூரத் நகரைக் கொள்ளையிடுவதன் மூலம் ஔரங்கசீபின் ஆட்சியைச் சோதனைக்குள்ளாக்குவதும், கொள்ளையடிப்பதன் மூலமாகத் தமக்குத் தேவையான வருவாயைப் பெருக்கிக் கொள்வதுமே சிவாஜியின் குறிக்கோளாய் இருந்திருக்கவேண்டும். இதன் பின்னர் மீண்டும் சிவாஜி தம்மை மன்னிக்குமாறு ஔரங்கசீபுக்கு மற்றொரு கடிதம் எழுதினார்.[2]

சிவாஜியும் ஜெய்சிங்கும்: ஷயிஸ்தா கானின் தோல்வியும், சூரத் நகரின் கொள்ளையும் பேரரசர் ஔரங்கசீபைத் தீவிரமாகச் சிந்திக்கத் தூண்டின. 1664ஆம் ஆண்டிற்குப் பிறகு ஷயிஸ்தா கான் திருப்பி அழைக்கப்பட்டார்; முகலாயத் தளபதி ஜெய்சிங் என்பாரைத் தக்காணத்தின் ஆளுநராக ஔரங்கசீப் நியமித்தார். ஜெய்சிங் ஜஸ்வந்த் சிங்கை விடச் சிறந்த தளபதி மட்டு

1 Takka Khaw and Kalushker - 'A Life of Shivaj Maharaj.'

2 Shivaji's letter to Aurangzeb, 1665. 'He hopes that out of the storehouse of (Your Majesty's) grace and pardon of offences, life to this slave may be issued'—Sarkar 'The House of Shivaji' - p. 149 - 1948 edn,

மன்றிப் போர் ஆற்றலிலும் பொதுத் திறமையிலும் புகழ் பெற்றிருந்தார்; நேர்மைக்கு எடுத்துக்காட்டு என நற்பெயர் பெற்றிருந்தார். இராஜா ஜெய்சிங்கிடம் ஔரங்கசீப் பெரும் மதிப்புக் கொண்டிருந்தார். இதற்கு ஜெய்சிங்கின் தன்னலமற்ற தன்மையும், தியாக உணர்வும், விசுவாசமுமே காரணம் ஆகும். ஜெய்சிங் பாரசீக, துருக்கி, உருது மொழிகளை நன்கு கற்றறிந்தவர்.

திலேர் கான்: ஔரங்கசீபின் நட்பிற்கும், நம்பிக்கைக்கும், அன்பிற்கும் பாத்திரரான ஜெய்சிங் தெற்கு நோக்கிச் சிவாஜிக்கு எதிராக அனுப்பப்பட்டார். ஜெய்சிங் 1665ஆம் ஆண்டு மார்ச்சு 31 ஆம் தேதி புரந்தருக்கு அருகில் முகாமிறங்கினார். ஜெய் சிங்கின் நோக்கம், எவ்வாறுயினும் புரந்தரை முற்றுகையிட்டுச் சிவாஜியைக் கைது செய்ய வேண்டும் என்பதேயாகும். புரந்தருக்கு அருகில் பஜ்ராஹர் என்னும் மற்றொரு கோட்டையை ஜெய்சிங் பிடித்துக்கொண்டார். ஜெய்சிங்குக்குத் துணையாகச் சென்ற திலேர் கான் (Diler Khan) என்பவர் பஜ்ராஹர்க் கோட்டையைக் கைப்பற்றுவதற்கு மிகவும் துணையாக இருந்தார். புரந்தர்க் கோட்டை நீண்ட நாள்களின் முற்றுகைக்குப் பிறகு ஜூன் இரண்டாந் தேதி ஜெய்சிங்கின் கைவசமாயிற்று. இந்நேரத்தில் 8 ஆண்டுகளுக்கு முன்பு படையுடன் வந்த அப்சல் கானைத் தனியாகச் சந்திக்க விரும்பிய சிவாஜி புரந்தர்க் கோட்டையை இழந்ததும், புரந்தர் உடன்படிக்கையை ஏற்றுக்கொண்டதும், இதனையடுத்து மறு ஆண்டில் ஆக்ராவுக்குச் சென்றதும் மர்மமாக உள்ளன. சிவாஜி அப்சல் கானை எதிர்ப்பானேன்? ஜெய்சிங்கிற்கு உட்பட்டு உடன்படிக்கையை ஏற்பானேன்?

புரந்தர் உடன்படிக்கை: புரந்தர்க் கோட்டையின் வெற்றிகரமான முற்றுகைக்குப் பின் ஜூன் 11ஆம் தேதி காலை ஒன்பது மணிக்கு ஜெய்சிங் இருக்குமிடத்தில் சிவாஜி ஜெய்சிங்கைச் சந்தித்தார். ஜெய்சிங்குடன் மனுச்சியும் உடன் இருந்தார்.[1] சிவாஜியைத் தமக்கு ஜெய்சிங் அறிமுகம் செய்துவைத்ததாகவும் அதன்பின்னர்ச் சிவாஜியைப் பல தடவைகளில் தாம் சந்தித்ததாகவும் மனுச்சி தம் நூலில் குறிப்பிடுகிறார். உடன்படிக்கையின்படி, 1. சிவாஜி பிடித்த 23 கோட்டைகளை முகலாயப் பேரரசுடன் இணைத்துவிட வேண்டும், 2. ராய்கட் (Raigad) மற்றும் 12 கோட்டைகளை சிவாஜியே வைத்துக்கொள்ள அனுமதிக்

[1] Manucci—Storia de Mogor, Vol. I.

மன்றிப் போர் ஆற்றலிலும் பொதுத் திறமையிலும் புகழ் பெற்றிருந்தார்; நேர்மைக்கு எடுத்துக்காட்டு என நற்பெயர் பெற்றிருந்தார். இராஜா ஜெய்சிங்கிடம் ஔரங்கசீப் பெரும் மதிப்புக் கொண்டிருந்தார். இதற்கு ஜெய்சிங்கின் தன்னலமற்ற தன்மையும், தியாக உணர்வும், விசுவாசமுமே காரணம் ஆகும். ஜெய்சிங் பராசீக, துருக்கி, உருது மொழிகளை நன்கு கற்றறிந்தவர்.

திலேர் கான் ; ஔரங்கசீபின் நட்பிற்கும், நம்பிக்கைக்கும், அன்பிற்கும் பாத்திரரான ஜெய்சிங் தெற்கு நோக்கிச் சிவாஜிக்கு எதிராக அனுப்பப்பட்டார். ஜெய்சிங் 1665ஆம் ஆண்டு மார்ச்சு 31 ஆம் தேதி புரந்தருக்கு அருகில் முகாமிறங்கினுர். ஜெய் சிங்கின் நோக்கம், எவ்வாருயினும் புரந்தரை முற்றுகையிட்டுச் சிவாஜியைக் கைது செய்ய வேண்டும் என்பதேயாகும். புரந்தருக்கு அருகில் பஜ்ராஹர் என்னும் மற்ருெரு கோட்டையை ஜெய்சிங் பிடித்துக்கொண்டார். ஜெய்சிங்குக்குத் துணையாகச் சென்ற திலேர் கான் (Diler Khan) என்பவர் பஜ்ராஹர்க் கோட்டையைக் கைப்பற்றுவதற்கு மிகவும் துணையாக இருந்தார். புரந்தர்க் கோட்டை நீண்ட நாள்களின் முற்றுகைக்குப் பிறகு ஜூன் இரண்டாந் தேதி ஜெய்சிங்கின் கைவசமாயிற்று. இந்நேரத்தில் 8 ஆண்டுகளுக்கு முன்பு படையுடன் வந்த அப்சல் கானைத் தனியாகச் சந்திக்க விரும்பிய சிவாஜி புரந்தர்க் கோட்டையை இழந்ததும், புரந்தர் உடன்படிக்கையை ஏற்றுக்கொண்டதும், இதனையடுத்து மறு ஆண்டில் ஆக்ராவுக்குச் சென்றதும் மர்மமாக உள்ளன. சிவாஜி அப்சல் கானை எதிர்ப்பானேன்? ஜெய்சிங்கிற்கு உட்பட்டு உடன்படிக்கையை ஏற்பானேன்?

புரந்தர் உடன்படிக்கை : புரந்தர்க் கோட்டையின் வெற்றிகரமான முற்றுகைக்குப் பின் ஜூன் 11ஆம் தேதி காலை ஒன்பது மணிக்கு ஜெய்சிங் இருக்குமிடத்தில் சிவாஜி ஜெய்சிங்கைச் சந்தித்தார். ஜெய்சிங்குடன் மனுச்சியும் உடன் இருந்தார்.[1] சிவாஜியைத் தமக்கு ஜெய்சிங் அறிமுகம் செய்துவைத்ததாகவும் அதன்பின்னர்ச் சிவாஜியைப் பல தடவைகளில் தாம் சந்தித்ததாகவும் மனுச்சி தம் நூலில் குறிப்பிடுகிருர். உடன்படிக்கையின்படி, 1. சிவாஜி பிடித்த 23 கோட்டைகளை முகலாயப் பேரரசுடன் இணைத்துவிட வேண்டும், 2. ராய்கட் (Raigad) மற்றும் 12 கோட்டைகளை சிவாஜியே வைத்துக்கொள்ள அனுமதிக்

[1] Manucci—Storia de Mogor, Vol. I.

பொருட்படுத்தாது, அவர் கொடுத்தனுப்பிய பரிசுப் பொருள்களையும் ஏற்காது, தாம் வெகுமதிகளை வாங்குவதற்காக வரவில்லை; அவரைப் பணியவைக்கவே வந்திருப்பதாகக் கூறி, சரணடையுமாறு உத்தரவிட்டார். மேலும், சிவாஜி தமது நன்மையைக் கருதியும் அதிகமான உயிர்ச்சேதத்தைத் தவிர்ப்பதற்காகவும், சுயமே பணிந்துவிடுவாராக என்று கட்டளையிட்டார். இல்லையானால், அவரைக் கொடுமையான வன்முறையினால் பணியவைக்க வேண்டியிருக்கும் என்றும் ஜெய்சிங் கூறினார். இராஜபுத்திரத் தளபதியின் இத்திடச் சித்தமானது சிவாஜியைக் கலங்கிடச் செய்தது. கோட்டையின் முற்றுகை தொடர்ந்து நடைபெற்றது. அதைக் காத்து நின்ற முரார்பாஜி என்பவர் கொல்லப்பட்டார். இதற்கிடையில், சிவாஜி ஜெய்சிங்கிற்குத் தூது அனுப்பினார். இதைப்பற்றிக் காஃபீகான், 'ராஜா ஜெய்சிங்கிற்குச் சிவாஜி மதிநுட்பமிக்க சிலரைத் தூது அனுப்பினார்; தம்முடைய குற்றங்களை மன்னித்து விடுமாறும், தம் வசமிருந்த கோட்டைகளைச் சரண் அடையச் செய்வதாகவும், இராஜாவைத் தாம் நேரில் வந்து பார்க்க விழைவதாகவும் வேண்டிக்கொண்டார்' என்று குறிப்பிடுகிறார்.[1] ஆனால், ஜெய்சிங் சிவாஜியின் தந்திரத்தை நன்கறிவார். இதற்கிடையில் சிவாஜியிடமிருந்து சில அந்தரங்கப் பிராமணர்கள் ஜெய்சிங்கிடம் வந்து, அவர் உண்மையில் வருந்துவதாகவும், இனி ஒழுங்குற நடப்பதாக வாக்குறுதிகளை அளிப்பதாகவும் கூறினார்கள். இதன் பின்னர் இராஜா ஜெய்சிங் அப் பிராமணர்களின் வாக்குறுதிகளை ஏற்று, சிவாஜி தம்மைச் சந்திக்கலாமென்று அனுமதித்தார். ஜெய்சிங்–சிவாஜி சந்திப்பைப்பற்றிக் காஃபீகான், 'ராஜா அவரின் (சிவாஜியின்) உயிர், மானம் ஆகியவற்றின் பாதுகாப்பிற்கு வாக்குறுதி அளித்தார். ஆனால், அவர் பேரரசரைக் காண வேண்டும், பேரரசரின் பணியில் சேர ஒப்புக்கொள்ளவேண்டும் என்ற நிபந்தனை ஒன்றின்மீது தான் இது அளிக்கப்படும் என்றும், இதற்கவர் இணங்கினால், உயர்ந்த மன்சப் பதவியை வாங்கித் தருவதற்குத் தாம் உத்தரவாதம் என்றும் வாக்குறுதிஅளித்தார். சிவாஜி தகுந்த முறையில் வரவேற்கப்படுவாரென்பதற்கும் உறுதி அளித்தார்' என்று கூறுகிறார். சிவாஜி மிகுந்த அடக்கத்துடன் ஜெய்சிங்கை அணுகினார். இராஜா இவரை வரவேற்கத் தம் முன்ஷியை அனுப்பினார். வஞ்சகம் ஒன்றும் நிகழ்ந்துவிடாமல் கவனித்துக் கொள்ள, ஆயுதம் ஏந்திய சில இராஜபுத்திரர்களையும் அவர் அனுப்பி

[1] Mainly, Manucci—Storia de Mogor. Also, Sarkar - 'Shivaji' and A Short History, and History of Aurangzeb Vol. III.

வைத்தார். சிவாஜி வெளிப்படையாகப் பணிந்து, கோட்டைகளை ஒப்படைத்துவிட்டு, அடங்கி நடக்க ஒப்புவாரேயானால் தாம் மன்னிக்கப்பட வேண்டுமென்ற அவரது கோரிக்கையைப் பேரரசர் ஏற்பார் என முன்ஷீ மூலம் செய்தியைச் சொல்லி அனுப்பினார். அப்படி இந்த நிபந்தனைகளை ஏற்றுக்கொள்ளா விட்டால், அவர் திரும்பிச் சென்று மீண்டும் போரை நடத்தலா மென்று சொல்லி அனுப்பினார். சிவாஜி இந்தச் செய்தியை அறிந்தபோது, அவர் தம் வாழ்வும், மானமும், தாம் பணிந் தால் பாதுகாக்கப்படுமாக என்று அடக்கத்துடன் சொல்லிக் கொண்டார். இராஜா உயர்ந்த பதவியுடைய ஒருவரை அனுப்பி, சிவாஜியை மரியாதையுடன் வரவேற்குமாறு செய் தார்.

சிவாஜி-ஜெய்சிங் சந்திப்பு: சிவாஜி நுழைந்தபோது ராஜா எழுந்தார்; கட்டித் தழுவினார்; அவரைத் தம் அருகிலேயே அமரவைத்தார். சிவாஜி ஆயிரம் வெட்கத்துடன் தம் கைகளைப் பிசைந்து கொண்டு சொன்னார்: 'நான் குற்றம் புரிந்த அடிமையைப் போன்று மன்னிப்பை நாடி வந்துள் ளேன். உங்கள் விருப்பத்தின் பேரில் நீங்கள் என்னை மன்னி யுங்கள் அல்லது கொல்லுங்கள். நான் பேரரசரின் அதிகாரி களிடம் கொங்கணில் உள்ள கோட்டைகளை ஒப்படைத்து விடுகின்றேன். நான் என்னுடைய மகனைப் பேரரசின் பணியில் சேருவதற்கு உங்களுடன் அனுப்புகின்றேன். என்னைப் பொறுத்தவரை ஓர் ஆண்டு இடைவெளிக்குப் பிறகு, பேரரச ருக்கு என்னுடைய மரியாதைகளைத் தெரிவித்த பின்னர், அரசின் பிற பணியாள்களைப் போல அவரவர்கள் தத்தம் மாகா ணங்களில் அதிகாரத்தைச் செலுத்துவது போன்று, நானும் என்னுடைய மனைவி மக்களுடன் ஓரிரு கோட்டையில் வாழ அனுமதிக்கப்படுவேன் என்று நம்புகின்றேன். எப்பொழுதும், எங்கு இருப்பினும் என்னுடைய பணிகள் தேவைப்பட்டால், உத்தரவு வந்ததும், விசுவாசத்துடன் நான் என்னுடைய கடமைகளைச் செய்வேன்.' சிவாஜியின் இக் குழைவான சொற் களால் இராஜா மகிழ்ச்சி அடைந்து, அவரைத் திலேர்கானிடம் அனுப்பிவைத்தார்.

சிவாஜியின் வாக்குறுதி: 'முற்றுகையை முடிவுக்குக் கொண்டுவர உத்தரவு அளிக்கப்பட்டதும், ஆண், பெண், குழந்தைகள் எல்லாருமாக 7,000 பேர் கோட்டையை விட்டு வெளியே வந்தனர். அவர்கள் எடுத்துச் செல்லாத பொருள்

அனைத்தும் அரசாங்கத்தின் சொத்தாயிற்று. துருப்புகள் கோட்டையைக் கைப்பற்றிக் கொண்டன. திலேர் கான் சிவாஜிக்கு வாள் ஒன்றை அன்பளிப்பாக வழங்கினர். அவர் இவரை மீண்டும் இராஜாவிடம் அழைத்துச் சென்றார். இராஜா ஆடை ஒன்றை (பட்டாடை) அன்பளிப்பாகக் கொடுத்து, பாதுகாப்பு மரியாதையுடன் கூடிய வரவேற்பு ஆகியவற்றை அளிப்பதாக மீண்டும் வலியுறுத்தினர். சிவாஜி, ஒரு நொடியில் வாளின்மீது பிரமாணம் செய்து நன்றி உள்ள பணி செய்வதாக வாக்குறுதி அளித்தார்...பேரரசருக்குச் சிவாஜியை மன்னிக்குமாறும், அவருக்குப் பட்டாடை வழங்க உத்தரவிடுமாறும் இராஜா ஜெய்சிங் எழுதினர். உத்தரவுக்குக் காத்துக் கொண்டிருந்தார்... விரைவிலேயே ஃபர்மானும் (உத்தரவு) பட்டாடையும் வந்தன. சிவாஜியும், தமக்களிக்கப்பட்ட மன்னிப்பையும் மரியாதையையும் கண்டு மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தார்....

'எட்டு வயதுடைய அவரது மகன் சாம்பா, இராஜா ஜெய்சிங்கின் யோசனையின்பேரில், 5000 என்னும் அந்தஸ்துடைய மன்சப்தாராக அமர்த்தப்பட்டார். அவர் இராஜாவுடன் பரிவாரங்கள் புடைசூழ ஆக்ரா அவைக்குச் செல்ல வேண்டும். சிவாஜியைப் பொறுத்தவரை அவர் தம் குடும்பத்துடன் குன்றுகளில் தங்கலாம்; எப்பொழுதாவது பேரரசரின் பணிக்கு அழைக்கப்பட்டால், அவர் வரவேண்டும். அவர் இல்லம் திரும்ப அனுமதிக்கப்பட்டபோது, ஒரு பட்டாடையையும், குதிரையையும் பெற்றுக்கொண்டார்.'[1]

ஒன்பது ஆண்டுகளுக்கு முன் தாமே தேர்ந்தெடுத்த புரந்தர்க் கோட்டையில் தம்மைத் தழுவ வந்த அப்சல்கானின் கொலை நிகழ்ச்சி நடந்துவிட்டது; ஆனல், ஒன்பது ஆண்டுகள் கழிந்த பின், தம்மைக் கட்டித் தழுவிய ஜெய்சிங்கிடம் சிவாஜி வெலவெலத்துக் கைகளைப் பிசைந்துகொண்டு, அடக்கமாக நின்றார். அப்சலின் நிகழ்ச்சியின்போது கிருஷ்ணாஜி பாஸ்கரும், கோபிநாத்தும் இருந்தனர். இப்பொழுதும் ஜெய்சிங்கிடம் சில அந்தரங்கப் பிராமணர்கள் தூது சென்றனர்.[2]

[1] Manucci—Storia de Mogor and Lane Poole, Aurangzeb. For full quotation of Kafi Khan, see Eliot & Dowson - History of India as told by her own historians - Vol. VII. p. 272 - 275.
Also. S. R. Sharma—The Moghul Empire in India. p. 428.

[2] 'The House of Shivaji' என்னும் நூலில், அத் தூது சென்றவர்களுள் ரகுநாத் பந்த் (Ragunath Panth) என்பவர் குறிப்பிடத்தக்கவராவார் என்கிறார் சர்க்கார்.

எனினும், மனோநிலை மாறி இருந்தது; சூழ்நிலையும் மாறி இருந்தது.

ஏமாற்றம் அன்று: சில ஆண்டுகளுக்குப் பின், புரந்தர் உடன்படிக்கையையும் இவ் வீரர் கிழித்தெறிந்து காற்றில் பறக்கவிட்டார் என்பதை நாம் பார்க்க இருக்கின்றோம். அது மட்டுமன்றித் தம் வாக்குறுதிகளை மீறி மீண்டும் கோட்டைகளைப் பிடிப்பதிலும், வன்முறையில் ஈடுபடுவதிலும், சூறையாடுவதிலும் அவர் தொடர்ந்து ஈடுபடலானார் என்பதையும் நாம் பின்னர்ப் பார்க்க இருக்கின்றோம். அதுமாத்திரமன்றி, ஆக்ராவிலிருந்து அவர் பிறகு தப்பியதற்கு வரலாற்றறிஞர்கள் கூறும் காரணம் எந்த அளவுக்குத் தவறானது என்பதையும், சிவாஜி-ஜெய்சிங்கின் சந்திப்பும், அவர்களிடையே எழுந்த உடன்பாடுமே அடிப்படைக் காரணம் என்பதையும் நாம் இப்போதே கூர்ந்து அறிந்து கொள்ளவேண்டும். மேலும், ஔரங்கசீப் ஆலயங்களை இடித்ததாகக் கூறப்படுவதைப்பற்றிச் சிவாஜி அறவே ஒன்றும் முறையிடவில்லை என்பதையும் நாம் மறந்திடலாகாது. மேலும், அடுத்த ஆண்டில் ஆக்ராவுக்குச் சென்றபோது அவர் ஏமாற்றம் அடைந்ததாகக் கூறப்படும் கூற்றும் உண்மையன்று என்பதனை இது எடுத்துக்காட்டுகிறது. அவர் தம் மகன் 5,000 அந்தஸ்து பெற்ற மன்சப்தாராக நியமிக்கப் பட்டால் அது தமக்கு மகிழ்ச்சி அளிக்கும் என்பதைத் திட்டவட்டமாக ஏற்றுக்கொண்டிருக்கிறார். இப்படியிருக்க, ஆக்ராவில் அவருக்கு எவ்வாறு ஏமாற்றம் ஏற்பட்டிருக்க முடியும்? எதிர்பார்த்ததற்கு மாறாக, அவருக்கும், அவர் மகனுக்கும், அவர் மருமகனுக்கும் 5,000 அந்தஸ்துள்ள மன்சப்தார்ப் பதவிகளை அளித்தது ஔரங்கசீபின் பெருந்தன்மையைச் சிறப்பாக விளக்குகிறது. அது மட்டுமன்றி, அவர் ஆக்ராவிலிருந்து ஜெய்சிங்கின் மகன் ராம்சிங்கின் உதவிகொண்டு தப்பித்துச் சென்றதன் விளைவாக, அளவுக்கும் அதிகமான நன்றியுடைய மிகச் சிறந்த தளபதி பெரிதும் ஏமாற்றம் அடைந்தவராய் ஓரிரு ஆண்டுகளில் உயிர்நீத்தார் என்பதையும் நாம் பின்னர் அறிய இருக்கின்றோம். எனவே, அரசியல் விவகாரங்களில் எல்லாம் ஔரங்கசீப் பெருந்தன்மையோடு நடந்துகொண்டாரேயன்றி, ஒரு சிறு அளவுக்கும் மதப்பற்றின் அடிப்படையில் நடந்து கொள்ளவில்லை என்பதை இந் நிகழ்ச்சியும், நாம் இனிப் பார்க்க இருக்கும் வேறு நிகழ்ச்சிகளும் மிகத் தெளிவாக வலியுறுத்துகின்றன என்பதில் சந்தேகமில்லை.

## இரு துருவங்களின் சந்திப்பு

புரந்தர் உடன்படிக்கையை ஜெய்சிங்கின் ராஜதந்திரத்தின் வெற்றி யென்றுதான் குறிப்பிடவேண்டும். ஏனெனில், 1000 வழிகளைப் பின்பற்றியாவது சிவாஜியை ஆக்ராவுக்குச் செல்லுமாறு வெற்றிகரமாகத் தூண்டியதற்கு ஜெய்சிங்கே பொறுப்பாவார். ஷயிஸ்தாகான்மீது தொடுக்கப்பட்ட தாக்குதலுக்கு ஜஸ்வந்த்சிங் உடந்தையாய் இருந்தார். ஆனால், இந்த ஜெய்சிங்கோ ஔரங்கசீபின்மீது உண்மையான விசுவாசம் கொண்டு, தம் கடமையைச் செய்து முடித்தார். சில மாத காலம் யோசித்து, சிவாஜியும் அவர் நண்பர்களும் ஆக்ரா செல்வதுபற்றிப் பலமாக விவாதித்து, சிவாஜிக்கு ஜெய்சிங் வாக்குறுதி யளித்ததன் பேரில்தான், இவர் ஆக்ரா செல்லத் துணிந்தார்.[1] சிவாஜி ஆக்ரா செல்லு முன் தமது பாதுகாப்புக்குரிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து முடித்தார். ஆக்ராவில் ஏதேனும் தவறு நிகழுமேயானால், அதனைத் தொடர்ந்து எடுக்கப்பட வேண்டிய முடிவுகள் என்னென்ன வென்ற விளக்கத்தை யளித்துவிட்டு, 1666ஆம் ஆண்டு, மார்ச்சு மாதம், 5ஆம் தேதி 4000 படை வீரர்களுடனும் தம் மகன் சாம்பாஜியுடனும் சிவாஜி புறப்பட்டார். நான்கு நாட்கள் சவாரி செய்து, அவர்கள் 9ஆம் தேதி ஆக்ராவை அடைந்தனர்.

ஔரங்கசீபின் 50ஆவது பிறந்த நாள்: மூன்று நாட்கள் கழித்து, 12ஆம் தேதி பேரரசர் ஔரங்கசீபின் 50ஆவது பிறந்த நாளன்று பேரரசின் அவைக்குச் சிவாஜி அழைத்துச் செல்லப்பட்டார். பேரரசர் ஔரங்கசீப் 'திவானெ ஆம்' என்னும் பொதுச் சபையில் கொலு வீற்றிருந்தார். ஜெய்சிங்கின் மகன் குமார் ராம்சிங் என்பார் பேரரசருக்குச் சிவாஜியை அறிமுகப்படுத்தினர். இதனை யடுத்து ஜெய்சிங்குடன் பேரரசர் கலந்து ஆலோசித்த பின், சிவாஜிக்கு 5,000 படை வீரர்கள் கொண்ட மன்சப்தார் எனப் பட்டம் சூட்டிப் பேரரசர் ஔரங்கசீப் சிவாஜியைக் கௌரவித்தார்.[2] முன்பே புரந்தரில் தாம் இத்தகு கௌரவமிக்க மன்சப்தாராக நியமிக்கப்படுவார் என்பதை அறிந்திருந்த சிவாஜிக்கு ஏமாற்றத்திற்கு இடமேது?

1 Mainly Manucci—Ibid. J. N. Sarkar - 'Shivaji' and A Short History of Aurangzeb.
Lanepoole's—Aurangzeb.

2 Aurangzeb cried 'Come up, Shivaji Rajah.' Chapter - Agra Visit in 'The House of Shivaji' - J. N. Sarkar. p. 143.

எனினும், சிவாஜி தாம் இகழப்பட்டதாகவும், பிறருக்கு 7000 அந்தஸ்துள்ள மன்சப்தார்ப் பதவியும், 10,000 அந்தஸ் துள்ள மன்சப்தார்ப் பதவியும் அளிக்கப்பட்டிருக்க, தமக்கு 5,000 அந்தஸ்துள்ள மன்சப்தார்ப் பதவி அளிக்கப்பட்ட கௌரவம் குறைவானதென்று அவர் உணர்ந்ததாகவும், உடனே மூர்ச்சையாகி வீழ்ந்ததாயும் ஜாதுநாத் சர்க்கார் கூறு கின்ருர். அவையில் உடனே பரபரப்பு ஏற்பட்டது. சூழ்நிலையை அறிந்த ராம்சிங் மறைமுகமாக, 'இதுகாட்டுப்புலி; கடுமையான வெப்பம் காரணமாகக் காய்ச்சலுற்று வீழ்ந்துவிட்டது' என்று சுட்டிக்காட்டினுர். நிலைமையைப் புரிந்துகொண்ட ஔரங்கசீப் 'அப்படியாயின், மூர்ச்சையுற்ற ராஜாவை அடுத்த அறைக்குக் கொண்டு சென்று, முகத்தில் பன்னீரைத் தெளித்து மூர்ச்சை தெளிவித்து அவர் இருக்கும் இடத்திற்கு அனுப்பிவைக்குமாறு' உத்தரவளித்து விட்டுத் தர்பார் விவகாரங்களை மீண்டும் கவனிக்கலானுர்.

இந் நிகழ்ச்சியிலிருந்து இரண்டு உண்மைகள் தெளிவா கின்றன: 1. ஔரங்கசீப் தம் எதிரியான சிவாஜியுடன் கருத்து வேற்றுமைகள் கொண்டிருப்பினும், அவரைக் கண்ணிய மாகவே நடத்தினுர். 2. சூழ்நிலையையறிந்த சிவாஜி வேறு விதமான முடிவிற்கு வந்திருக்க வேண்டும். எனவே, பேரரசர் சிவாஜியை இழிவாக நடத்தினுர் என்பதற்கோ, அகௌரவப் படுத்தினுர் என்று கருதுவதற்கோ இடமில்லை. ஏனெனில், மன்சப்தார்ப் பதவி பத்திலிருந்து பத்தாயிரம் வரை இருப் பினும், முகலாய அரசர் பாரம்பரியத்தில் வந்தவர்களுக்கும் இளவரசர்களுக்கும் அன்றிப் பிறரெவருக்கும் 5000-க்கும் மேற் பட்ட மன்சப்தார்ப் பதவி யளிக்கப்படவில்லை.

மன்சப்தாருக்குரிய உதாரணங்கள்: 1. அப்போது ஔரங்க சீபின் பிரதமராக இருந்தவர் ஃபஜல் கான் (Fazal Khan) என்பவராவார். அவர் மீதும் 5000 அந்தஸ்துள்ள மன்சப் தார்ப் பதவிதான் அளித்துக் கௌரவிக்கப்பட்டது. 2. உதய பூரின் ராஜா ராய்ச்சரண் என்பவருக்கும், 3. ஏன், ராஜா ஜெய்சிங் மீதே கூட அதே 5000 அந்தஸ்துள்ள மன்சப்தார்ப் பதவிதான் அளிக்கப்பட்டது. 4. எல்லாவற்றுக்கும் மேலாக, சிவாஜியின் தந்தை ஷாஜி பான்ஸ்லேயின் மீதும் பேரரசர் ஷாஜஹான் முன்பு அதே 5000 அந்தஸ்துள்ள மன்சப்தார்ப் பதவிதான் அளித்திருந்தார். 5. நாஞ ராஜ்சிங் என்பாருக் கும் அதே 5000 அந்தஸ்துள்ள மன்சப்தார்ப் பதவியே வழங்கப்

பட்டது. எனவே, இம் மரபை யொட்டிச் சிவாஜிக்கும், அவர் மகன் சாம்பாஜிக்கும், சிவாஜியின் மருமகன் நாத்தாஜி என்பாருக்கும், ஒவ்வொருவருக்கும் 5,000 வீரர்கள் கொண்ட மன்சப்தார்ப் பதவியையே ஔரங்கசீப் அளித்தார். ஆகவே, ஔரங்கசீப் வேண்டுமென்றே, சிவாஜியின்மீது பழிவாங்க வேண்டுமென்றே நினைத்துக் குறைவான அந்தஸ்தை வழங்கினார் என்று குற்றஞ்சாட்டுவது முற்றிலும் பொருத்தமற்றதாகும்.[1]

மேலும், பேரரசர் ஔரங்கசீபே சிவாஜி, சாம்பாஜி, நாத்தாஜி, இன்னும் மற்றையோர் ஆக்ரா வருவதற்கு உண்டான பிரயாணச் செலவுக்காக 1 லட்சம் ரூபாய் அளித்தார் என்பதை நாம் மறந்துவிடலாகாது.[2]

ஒரு மாவீரரின் அந்தஸ்துக்குண்டான பிரயாணச் செலவு, படிச்செலவுகளுக்குரிய தொகையையும் அளித்து, அவருக்குரிய மரபான மன்சப்தார்ப் பதவியையும் வழங்கி, அவர் மூர்ச்சையுற்ற போது அவரை மிகவும் கண்ணியமாக நடத்தியும் வைத்த பேரரசர் ஔரங்கசீப் என்ன கௌரவக் குறைவை விளைத்திட்டார்? அல்லது அவரைச் சிறைப்படுத்த நினைத்திருப்பாரா? என்பன ஆய்வுக்கு உரியனவாகும்.

மனுச்சியின் கூற்று: வீரர் சிவாஜி தனி முகாம் ஒன்றில் சில மாதங்கள் தங்கி இருந்ததாகவும், ஜெய்சிங்கின் ஆலோசனையின் பேரிலேயே ஆக்ராவுக்குப் புறப்பட்டு வந்ததாகவும், பல மாதங்கள் காத்திருந்தும் தமக்குத் தக்காணத்தின் ஆளுநர்ப் பதவி கிடைக்காததனால் ஏமாற்றம் அடைந்ததாகவும், இதன் பின் அவர் எப்படியாவது தப்பிக்க முயன்றதாகவும், அறிஞர் மனுச்சி தம் நூலில் குறிப்பிடுகின்றார். ஆனால், சிவாஜி பெரும் மாளிகை யொன்றில் சிறைப்படுத்தி வைக்கப்பட்டிருந்ததாகவும், எனவே சிறையிலிருந்து தப்பிக்க முயன்றதாகவும் பேராசிரியர் சர்க்கார் விளக்குகின்றார். ஆனால், அறிஞர் மனுச்சி கூறுகிறார்: 'ஆக, சில மாதங்கள்வரை அவர் ஒரு முகாமில் தங்கி இருந்தார்; அரசினரின் வாக்குறுதிகள் நிறைவேற்றப்படும் என்பதற்கான அறிகுறி ஒன்றும் தோன்றவில்லை யாதலினாலும்,

[1] Manucci—Ibid. Lanepoole - Aurangzeb.

[2] 'To attach a part of Shivaji's new Jagir in Berar in order to recover th lakh of rupees advanced to him in 1666 for his journey to the court J. N. Sarkar—A Short History of Aurangzeb, p. 218.
Also S. M. Jaffer - History of Mughal India from Akbar to Aurangzeb

ஔரங்கசீபின் பிடியினின்று தப்பியோட முடியவில்லையாதலினாலும், தம்முடைய வீரர்களையும் தலைமை அதிகாரிகளையும் தம் நாட்டிற்குத் திரும்ப அனுப்பப் பேரரசரிடத்து உத்தரவு கேட்டார்.'[1]

ஆக்ராவிலிருந்து தப்பித்தல்: ஏமாற்றமடைந்த சிவாஜி தம்முடைய வீரர்கள் முற்கூட்டித் தாயகம் திரும்புவதும், தாம் எவ்வாறேனும் தப்பித்துப் பின் வெளியேறிச் செல்வதும் ஆகிய ஒன்றே சிறந்த வழி என்ற முடிவுக்கு வந்தார். ஜெய்சிங்கிற்கு, தாம் சிவாஜிக்கு ஆளுநர்ப் பதவியை வாங்கித் தரமுடியவில்லையே என்ற ஏக்கம் ஒருபுறம்; பேரரசருக்குக் காட்டி வந்த விசுவாசம் மறுபுறம். இரண்டும் அவரை வாட்டின. ஆனால், ஜெய்சிங்கின் மகன் குமார் ராம்சிங் என்பவரின் துணை கொண்டும், அவரது ஆலோசனையின் பேரிலும்தான் சிவாஜி தப்பினார் என்பதை ஆக்ரா அவையினரும், பேரரசரும், ஜெய்சிங்குட்பட அனைவரும் அறியலாயினர்.

சிவாஜி நோய்வாய்ப்பட்டு இருப்பது போலவும், அவரைப் பார்க்க வருபவர்கள் பழக்கூடைகள் கொண்டுவருவது போலவும், அவ்வாறு கொண்டுவரப்பட்ட பழக்கூடை ஒன்றில் சிவாஜி கையதுகொண்டு, மெய்யது பொத்தி முடங்கிக் கூடையில் ஒளிந்து கொண்டு தப்பிய விதம் நாடக நடிப்பு நிகழ்ச்சி போன்றது மட்டுமன்றி, வரலாற்றிலேயே புகழ்பெற்றதுமாகும்.

ராம்சிங்கின் முன்னேற்பாட்டின்படி, சிவாஜியின் ஒன்று விட்ட தம்பி ஹீராஜீ உருவத்தில் சிவாஜியைப் போல இருந்ததால், மாளிகையிலோ முகாமிலோ அவனைத் தங்கி இருக்கச் செய்துவிட்டு, நீராஜி ராவுஜி என்பார் வெளியில் குதிரைகளைத் தயாராக வைத்திருக்க, சிவாஜியுடன் நீராஜி, தத்தாஜி, திரிம்பக் ஆகியோர் நேரே ஆக்ராவிலிருந்து, கிழக்கே மதுரா நோக்கிக் குதிரைகளில் ஏறித் தப்பியோடினர். மனுச்சி கூறுகிறார்: 'ராம்சிங்கின் (ஜெய்சிங்கின் மகன்) புத்திமதியின் பேரில் ஒவ்வொரு வாரமும் பல தடவைகளில் பெரும் கூடைகளில் இனிப்புப் பண்ட வகைகள் சிவாஜிக்கு அனுப்பப்பட்டு வந்தன. இவற்றைப்பற்றி எல்லாம் ஔரங்கசீப் முன்னெச்சரிக்கை எதுவும் எடுக்கவில்லை.'

[1] Manucci - Storia de Mogor - Vol. II. Kincaid - History of Marathas, S. R. Sharma - The Founding of the Maratha Power,

ராம்சிங்கின் உடந்தை: 'ராம்சிங் (அவரது பணியாட்களும்) அவரது தந்தையின் போதனைகளை அமல்படுத்தினர். ஔரங்கசீபின் குணத்தை அவர்கள் நன்கு அறிந்திருந்தனர்... ராம்சிங் எல்லா ஏற்பாடுகளையும் செய்ததைப் போன்று சிவாஜியும் ஏற்பாடுகளைச் செய்து கொண்டு, எவரும் அடையாளம் கண்டு கொள்ளாதபடி நாட்டிற்குள் ஓடினர்.' பேராசிரியர் சர்க்காரும் ராம்சிங்கின் துரோகத்தை ஏற்றுக்கொண்டுள்ளார். மனுச்சி கூறுகிறர்: 'பேரரசர் (ஔரங்கசீப்) ராம்சிங்கின் உடந்தையினுல்தான் சிவாஜி தப்பித்து விட்டார் எனச் சந்தேகப்பட்டார். ராஜபுத்திர இளவரசர் முதலில் தர்பாருக்கு வராமல் தடுக்கப்பட்டும், பின்னர் அவருடைய பதவியும், சம்பளமும் வெட்டப்பட்டும் தண்டிக்கப்பட்டார்.'[1]

இந்தச் சூழ்நிலையை ஆய்வுக்கண்கொண்டு பார்க்கும் போது, நிச்சயமாக ஔரங்கசீப் குறுகிய மனப்பான்மை கொண்டவரென்றே, தாராளப் போக்கு அற்றவரென்றே கூறுவது பொருத்தமற்றதாகும். ஏனெனில், புரந்தர்க் கோட்டை வீழ்ச்சியிலிருந்து சிவாஜி ஆக்ராவிலிருந்து தப்பும் வரை, சிவாஜியை அரசியல் எதிரியாகவே கருதினர் பேரரசர். அது மாத்திரம் அன்று. ஜெய்சிங்கின் மகன் ராம்சிங்கைத் தண்டிக்காமல் அவரது பதவியை மட்டும் குறைத்தது, பேரரசர் ஔரங்கசீபின் மிருதுவான தன்மையையும், இரக்க குணத்தையும், பிரச்சினைகளை அவர் அரசியல் கண்கொண்டுதான் பார்த்தார் என்பதையும் புலப்படுத்துகின்றது. பெர்னியர் கூறும் மற்ருெரு நிகழ்ச்சியையும் இவ்விடத்தில் கூறுவது பொருத்தமுடையதாகும். 1663—64ஆம் ஆண்டுகளில் ஔரங்கசீப் பரிவாரத்துடன் காஷ்மீருக்குச் செல்லுகையில் லாகூருக்கு அருகில் வெடிவிபத்து ஏற்பட்டு ஊரில் தீப்பிடித்துக் கொண்டது. ஔரங்கசீப் உடனே விசாரணை ஒன்றை நடத்தினர். அவர் இதற்கு முன் போருக்குச் சென்ற பொழுது குறிப்பிட்ட இடத்தில் வெடிமருந்துகளை அரசாங்கத் துருப்புகள் வைத்திருந்தன என்றும், அவை அகற்றப்படவில்லை என்றும், அதனுலேயே தீப்பிடித்துக் கொண்டது என்றும் அறிந்தார். இதற்குப் பொறுப்பாக இருந்தவர்களைத் தண்டிக்கும் முகமாக அவர்களின் மன்சப்தாரி தரத்தைக் குறைத்தாரேயல்லாது, அவர்களை வேலை நீக்கம் செய்யவும் இல்லை; சிரச்சேதம் செய்யவும் இல்லை.[2]

[1] Manucci—Storia de Mogor, Vol. II.

[2] Bernier, 'The Travels' (S. Chand & Co. Publication 2nd Edn. 1968.)
*இங்கிலாந்தில் வரலாற்றில் நடைபெற்ற நிகழ்ச்சி ஒன்றை இங்குக்*

டாக்டர் ஃபிரையர் கருத்து: ஆனால், அறிஞர்களிடையே சிவாஜி தப்பிய விதத்தைப்பற்றியும், ஆக்ராவில் ஏற்பட்ட இரு துருவங்களின் சந்திப்பைப்பற்றியும் முடிவு பெறாத வாக்கு வாதம் நடந்துகொண்டே வருகிறது. ஔரங்கசீப் ஜெய்சிங் சிவாஜிக்கு அளித்த வாக்குறுதிகளைப்பற்றி ஒன்றும் அறியார் என்று காஃபீகான் சாற்றுகின்றார். ஆனால், ஷயிஸ்தா கானின் மனைவி, மற்றுமுள்ள வேறு பெண்கள் சிவாஜியைக் கண்டதும் கூக்குரலிட்டதன் காரணமாக ஔரங்கசீப் சிவாஜிக்கு அளிக்கப் படவேண்டிய மரியாதையை அளிக்கவில்லை என்று டாக்டர் ஃபிரையரும், பெர்னியரும் கூறுகின்றனர். மேலும், ஒருபடி மேலே சென்று, ஔரங்கசீப் தக்காணத்தில் இருக்கையில் தம்முடைய நண்பர் ஒருவரின் உயிரைச் சிவாஜி காப்பாற்றியதனால், அத் தலைவர் தப்பித்துச் செல்லுகையில் ஔரங்கசீப் ஒரு வேளை பராமுகமாக இருந்து விட்டார் போலும் என டாக்டர் ஃபிரையர் கருதுகிறார். ஆனால், இவை யாவும் நம்பத் தகுந்தவை யல்ல. உண்மையில் இரண்டு காரணங்கள் இருந்திருக்க வேண்டும்: 1. ஜெய்சிங்கின் வாக்குறுதிகளை நம்பி, அதிக நாட்கள் ஆக்ராவிலேயே தங்கினால் தம் உயிருக்கு ஆபத்து என்றேனும் நிகழக்கூடும் எனச் சிவாஜி முடிவுக்கு வந்திருக்க வேண்டும். 2. எப்படியாவது தாம் தப்பிச் சென்றால், தாம் வாழும் பகுதியில் தாம் பெற்ற வெற்றிகளின் அடிப்படையில் புதியதோர் நாட்டையும் அரசையும் உருவாக்க வாய்ப்புகள் ஏற்படலாம் எனக் கருதி இருக்க வேண்டும். ஆனால், அறிஞர் லேன்பூல் இந் நிகழ்ச்சியை விளக்கும்போது, 'நேசர் ஒருவரைப் பெறுவதற்குப் பதிலாக ஔரங்கசீப் ஓர் அடக்க முடியாத எதிரியை உருவாக்கி விட்டார்' எனக் கருதுகிறார்.[1] ஆனால், லேன்பூலின் கருத்து ஏற்கக்கூடியதன்று.

---

குறிப்பிடுவது பொருத்தமுடையதாகும். இங்கிலாந்தில் 7 ஆண்டுப் போர் 1756 ஆம் ஆண்டில் தொடங்கியது. ஆனால், துருப்புகளுக்குத் தேவையான உடைகளோ, தளவாடங்களோ போதுமான அளவுக்கு அளிக்கப்படவில்லை. நியூ கேசல் பிரபு அப்பொழுது பிரதமராக இருந்தார். இங்கிலாந்து கடற்படைப் போரில் பல தோல்விகளைக் கண்டுவந்தது. ஆனால் அத் தோல்விகளுக்கு எல்லாம் கடற்படைத் தளபதி 'பிங்' (Admiral Byng) என்பார்தாம் காரணமெனக் குற்றஞ் சாட்டப்பட்டது. தளபதி தம் கடமையிலிருந்து தவறியதாகக் குற்றம் சாட்டப்பட்டார்; அவருடைய கப்பல் தளத்திலேயே அவர் சுட்டுக் கொல்லப்பட்டார். ஆனால், பேரரசர் ஔரங்கசீப் இந்த அளவுக்கு நீதியின்றியோ, முறையின்றியோ, எல்லைக்கு அப்பாற்பட்ட வழியிலோ வீர சிவாஜியைத் தப்பிச் செல்லச் செய்த ராம்சிங் என்பாரைத் தண்டிக்கவில்லை.

[1] Lanepoole—Aurangzeb.

ஏனெனில், ஆக்ராவுக்குச் செல்லும்முன் நிகழ்ந்த நிகழ்ச்சிகளும், தப்பிவந்த பின் நிகழ்ந்த நிகழ்ச்சிகளும் ஒரே வண்ணமாக, ஏகோபித்த வண்ணமாக, சிவாஜியின் குறிக்கோள் என்ன என்பதைக் காட்டுகின்றன. எனவே, 10,000 வீரர்கள் கொண்ட மன்சப்தாராகவே நியமிக்கப்பட்டிருப்பினும், சிவாஜியின் போக்கிலே மாற்றம் நிச்சயமாக நிகழ்ந்துதானிருக்கும். மேற்கூறிய இரு காரணங்கள் ஆராய்வதற்குரியனவாகும்.

ஆக்ராவிலிருந்து தென்மேற்காய்ச் செல்லும் (மால்வா, காந்தேஷ், குஜராத்) வழியே ஏகாமல், எவரும் தம்மை அடையாளம் கண்டுகொள்ளக் கூடாது என்பதற்காக, அல்லது முகலாய படைகள் பின்தொடரக் கூடாது என்பதற்காக மதுரா, அலகாபாத், வரணுசி, கயா ஆகிய கிழக்குப் பகுதி நகரங்களின் வழியே சுற்றிக்கொண்டு, பிறகு நேர் தென்கிழக்காகக் கோண்டுவாஞ, கோல்கொண்டாப் பகுதியைக் கடந்து ராய்கர் கோட்டையை 1666ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 20ஆம் தேதி அன்று, 9 மாதங்களுக்குப் பிறகு சிவாஜி வந்தடைந்தார்.

அரசியல் சூழ்நிலையில் மாற்றம்: தாயகம் திரும்பியபோது, சூழ்நிலை மீண்டும் தமக்குச் சாதகமாக இருப்பதைச் சிவாஜி உணர்ந்தார். ஔரங்கசீபின் மகன் முஅஜ்ஜம் என்பார்[1] (Muazzam) தக்காணத்தின் அரசப்பிரதிநிதியாக நியமிக்கப்பட்டிருந்தார். அவருக்குத் துணையாக இருந்தவர் தளபதி ஜஸ்வந்த் சிங் ஆவார். ஜஸ்வந்த்சிங் ஏற்கெனவே சிவாஜியின் முன்னேற்றத்திற்கு மனமாரத் துணையாக நின்றுர் என்பதை நாம் முன்னமேயே பார்த்துவிட்டோம். அரசப் பிரதிநிதிப் பதவிக்குத் தகுதியற்ற முஅஜ்ஜமும், இலஞ்சம் வாங்குவதற்குக் கூசாத ஜஸ்வந்த்சிங்கும் தக்காணத்தில் இருந்த வாய்ப்பு, சிவாஜிக்குப் பாலில் பழம் நழுவி விழுந்ததைப் போல் இருந்தது. முகலாயரிடத்திருந்து எந்தவித ஆபத்தையும் சிவாஜி எதிர்நோக்க வேண்டியிருக்காது என்பது உறுதியாயிற்று. இவ் விருவரின் நியமனம் ஔரங்கசீப் தக்காணத்தின் அரசியல் சூழ்நிலையைச் சரியாக எடைபோடத் தவறிவிட்டார் என்பதையும் உணர்த்துகின்றது. இவ் விருவருக்கும் துணையாகத் தளபதி திலேர்கான் என்பவரும் நியமிக்கப்பட்டிருந்தார். ஆனல், துரதிருஷ்டவசமாக இளவரசர் முஅஜ்ஜமுக்கும் திலேர்கானுக்கும் இடையே

[1] இளவரசர் முஅஜ்ஜம் தக்காணத்தில் அரசப் பிரதிநிதியாக அமர்த்தப் பட்டபோது 'ஷா ஆலம்' என்னும் பட்டப் பெயர் சூட்டப்பெற்றுர்.

போட்டியும் பொருமையும், பிணக்கும் பூசலும் அடிக்கடி தோன்றலாயின. எல்லாவற்றுக்கும் மேலாகச் சோர்வு, மனத் தளர்வு, ஏமாற்றம் காரணமாக நன்றிக் கடப்பாடுடைய மிர்ஜா ராஜா ஜெய்சிங் 1667ஆம் ஆண்டில் இறந்துவிட்டார். எனவே, தம்மை இனி அடக்க வல்லார் எவருமிலர் என்ற சூழ்நிலையை வீரர் கண்டார். அதுமட்டுமன்றி, வடமேற்கே 1667ஆம் ஆண்டில் பேரரசர் ஔரங்கசீப் யூசுப் ஜாஹீகளின் எதிர்ப்பைச் சமாளிக்கத் திறமை வாய்ந்த தளபதிகளை அனுப்பிக் கொண்டிருந்தார் என்பதை முன்னமே பார்த்து விட்டோம். எனவே, அச் சூழ்நிலையில் தம் கைகளைப் பலப்படுத்திக் கொள்வதற்குச் சிவாஜி ஜஸ்வந்த்சிங்கைக் கருவியாகப் பயன்படுத்திக்கொண்டார். அவ்வாறு பயன்படவும் ஜஸ்வந்த்சிங் தயங்கவில்லை. மேலும், தாயகம் திரும்பியவுடன் 9 மாத கால இடைவெளியில் எழுந்திருந்த கோட்டைகள் அத்தனையையும் சிவாஜி மீண்டும் பிடித்துக் கொண்டார். ஆனால், பேரரசரை எதிர்த்ததற்கு ஜஸ்வந்த்சிங்காலோ, முஅஜ்ஜத்தாலோ சிவாஜியைத் தண்டிக்கவோ, கட்டுப்படுத்தவோ இயலவில்லை; அல்லது அவர்கள் முயலவுமில்லை. அதற்கு நேர்மாருக, ஜஸ்வந்த்சிங் சிவாஜிக்கு 'ராஜா' என்னும் பட்டத்தை அளிக்குமாறு பேரரசருக்குப் பரிந்துரைத்தார். ஜஸ்வந்த்சிங் எந்த அளவுக்கு அம் மராத்தியருக்கு உடந்தையாக இருந்தார் என்பதற்கு எடுத்துக்காட்டாகச் சிவாஜியின் கடிதமும், ஜஸ்வந்த்சிங், முஅஜ்ஜமின் மனநிலைகளும் விளக்குகின்றன. 'மிர்ஜா ராஜா (ஜெய்சிங்)—என்னுடைய காப்பாளர்—இறந்து விட்டார். நீங்கள் உங்கள் செல்வாக்கை உபயோகித்து நானும் மன்னிக்கப் பட்டால், நான் சாம்புவை (சாம்பாஜியை) இளவரசரைக் காண்பதற்கு அனுப்புகின்றேன்; அவருக்கு மன்சப்தார்ப் பதவி அளிக்கப் பட்டால், என்னைப் பின்பற்றுபவர்கள் அவரின் தலைமையின் கீழ் உத்தரவிட்ட இடங்களுக்கு எல்லாம் செல்வார்கள்,' என்று சிவாஜி ஜஸ்வந்த்சிங்குக்கு எழுதினர்.

மனோநிலையில் மாற்றம் ஏன்? இங்கே நாம் நன்ருகச் சிந்தித்துப் பார்க்கவேண்டியது என்னவென்ருல், இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு பேரரசரிடம் ஒரு லட்சம் ரூபாயைப் பெற்றுக் கொண்டு, ஆக்ராவின் அவையை அடைந்தபோது சாம்பாஜி 5,000 அந்தஸ்துள்ள மன்சப்தாராகக் கௌரவிக்கப்பட்டதால், தாமும் தம் குழாத்தினரும் அகௌரவிக்கப்பட்டதாகக் கருதிய சிவாஜி இரண்டு ஆண்டுகள் கழித்துத் தம் மகனை மீண்டும் அதே பிரபுகுல மன்சப்தாராக நியமிக்க வேண்டுமெனக் கோருவானேன்? இது முன்னுக்குப் பின்

முராகை இல்லையா? இங்கொரு விளக்கம் காணமுடியாத விபரீதம் நேர்ந்துவிட்டதை நாம் கவனிக்க வேண்டும். ஜஸ்வந்த்சிங் சற்றுவது பொறுப்புணர்ச்சியோ, அரச விசுவாசமோ கொண்டிருந்தா ரென்றால், இக் கடிதங் கண்டதும், 'உமக்கும், உம் மைந்தனுக்கும், உம் மருமகனுக்கும் பேரரசர் மிகப் பெரிய பிரபுகுல அந்தஸ்தாகிய 5000 வீரர் என்னும் மன்சப் பதவியை வழங்கிக் கௌரவித்தாரே, அதை அகௌரவமாக நினைத்தீர்; அவருக்குத் துரோகத்தனம் செய்து விட்டீர். உமக்கு எந்தப் பெரிய பிரபுகுலப் பதவியை ஜெய்சிங் வாங்கித் தந்தார் தெரியுமா? அவருக்கே நீர் தீங்கிழைத்தீர். இப்போது உம் மைந்தனுக்கு மன்சப்தார்ப் பதவி வாங்கித் தருமாறு என்னிடம் கோருகிறீர். முதலில் நீர் பேரரசரிடம் சென்று, அவரிடம் தஞ்சம் அடைந்து மன்னிப்புக் கோரும்' என்றல்லவா பதில் எழுதியிருக்க வேண்டும்? அப்படிக்கின்றி, சிவாஜியின் கடிதத்தைக் கண்டதுமே ஜஸ்வந்த்சிங் துள்ளி எழுந்து, இளவரசர் முஅஜ்ஜமிடம் பரிந்துரைத்து, 'மன்னர்' என்னும் பட்டத்தையே சிவாஜிக்கு வாங்கிக் கொடுத்து விட்டார்! இந்த ஜஸ்வந்த் சிங்கைப்பற்றி அறிஞர் லேன்பூலே மிகவும் வெறுப்புடன் தமது நூலில் குறிப்பிடுகிறார்.[1] இதனால் ஏற்பட்ட மத்தியஸ்தத்தின் விளைவு என்னவெனில், புது உடன்படிக்கை ஏற்பட்டது; அவ்வுடன்படிக்கையின்படி, சிவாஜி 'மன்னர்' என அங்கீகரிக்கப் பட்டார். மேலும், பீராரில் அகன்ற நிலப்பரப்பு உடைய புது ஜாகிர் (நிலமானியம்) ஒன்றை அனுபவிக்குமாறு அவ்வீரர் அனுமதிக்கப்பட்டார்!

இயற்கையாகவே இங்குச் சில கேள்விகள் எழுகின்றன: 1. பேரரசர் ஔரங்கசீப் குறுகிய மனப்பான்மை உடையவராக இருந்திருப்பாரேயானால், ஜஸ்வந்த்சிங்கின் பரிந்துரைத்தலை ஏற்றுக்கொண்டிருப்பானேன்? 2. அப்படியே கொடுமையானவராக இருந்திருப்பாரேயானால், சிவாஜியை ஆக்ராவிலிருந்து தப்ப விட்டிருப்பானேன்? 3. சிவாஜிக்கு 'மன்னர்' என்ற பட்டத்தை ஏன் அளித்தார்? சாம்பாஜியை மீண்டும் மன்சப்தாராக நியமித்துக் கொள்ள ஏன் முற்பட்டார்?

எனவே, 1668ஆம் ஆண்டின் தொடக்கத்திலேயே, யூசுப் ஜாஹீகளின் தொல்லையைக் கருதி, சிவாஜியின்

[1] 'No punishment followed up on this act of defiance, for Jaswant Singh, the friend of Hindus and affable pocketer of bribes commanded in Deccan'—Lanepoole 'Aurangzeb' (S. Chand & Co. edition).

எழுச்சியின் தன்மையையும் வலிமையையும் அறியாது, அவரை மன்னர் என ஏற்றுக்கொண்டதன் காரணம், பேரரசர் ஔரங்கசீபினிடம் அரசியல் விவேகத்தில் சற்றுத் தளர்ச்சி காணத் தொடங்கியது என்பதுதான் ஆகும்; இதுவே உண்மையுங்கூட. அல்லது அரசியல் எதிரியாயினும், அவரையும் மதிக்கின்ற மாண்பை ஔரங்கசீப் பெற்றிருந்தார் என்பதே முற்றிலும் உறுதியாகின்றது.

## சிவாஜியின் பிற நிகழ்ச்சிகள்

சிவாஜி வேண்டி நின்றதெல்லாம் ஒரு மதிப்பும், கவுரவமுமே. 'ராஜா' என்ற பட்டம் தமக்குச் சூட்டப்பட்ட உடனேயே அவர் மீண்டும் கோட்டைகளைப் பிடிப்பதிலும் தம் பழைய வழிகளிலும் ஈடுபடலானார். 1670ஆம் ஆண்டில் 'கொந்தனா'க் கோட்டையைப் பிடிக்கும் முயற்சியில், அதைக் காத்து வந்த ராஜபுத்திரத் தளபதி உதயபால் என்பவரையும், மற்றும் 1,200 ராஜபுத்திர வீரர்களையும் கொன்றார். தானாஜி மாலாசூரே என்பவரின் துணையுடன் அக் கோட்டையைக் கைப்பற்றினார். பிறகு லோடிகான் என்னும் தளபதியையும் காயப்படுத்தி அகற்றினார். இதனைத் தொடர்ந்து, அஹமது நகருக்குக் கருகில் 51 கிராமங்களைக் கொள்ளை அடித்தார்.

இளவரசர் முஅஜ்ஜமுக்கும் திலேர்கானுக்கும் இடையே அடிக்கடி சச்சரவுகள் எழலாயின. காரணம், ஜஸ்வந்த்சிங்கின் நட்புக்கு இணக்கமாக முஅஜ்ஜமும் சிவாஜிக்கு உடந்தையாக இருந்தார். திலேர்கான் இதனைப் பேரரசருக்குத் தெரிவித்து விட்டார். மேலும் ஜஸ்வந்த்சிங், முஅஜ்ஜம் ஆகியோரின் துரோகமும் எல்லையைக் கடந்து வந்தது என்பதும் உறுதியாயிற்று. எனவே, இவர்களை அச்சுறுத்துவதற்காகவும், உண்மை அரசியல் நிலையை அறிவதற்காகவும் இஃப்திஹார் கான் (Iftihar Khan) என்ற 'கானெ ஜமானை' (Khani-Zaman) (அரண்மனைப் பிரதம அலுவலர் - தளபதி) பேரரசர் ஔரங்கசீப் ஔரங்காபாதுக்கு அனுப்பி வைத்தார். இஃப்திஹார் கான் விசாரணை நடத்தினார். இதற்கிடையில், திலேர்கானே வட இந்தியாவுக்குப் புறப்பட்டார்; திலேர் கானின் விசுவாசத்தை யறிந்த குஜராத் கவர்னர் பஹதூர் கான், பேரரசருக்குத் திலேர்கானைத் தாமே நியமித்துக் கொள்ள அனுமதி கோரி வேண்டுகோள் விடுத்தார். அங்ஙனமே ஔரங்கசீப் திலேர்கானைக் குஜராத்திற்கு மாற்றல் செய்தார். முஅஜ்ஜமும் ஆக்ரா திரும்புமாறு பணிக்கப் பட்டார்.

ஆகவே, தக்காணம் அரசப் பிரதிநிதி இல்லாத வெற்றிடமாக ஆயிற்று. இது சிவாஜிக்குப் பொன்னான நேரமாக வாய்த்தது. சிவாஜியின் கட்டுக்கடங்காத இராணுவ முஸ்தீபுகளைக் கண்ட சூரத் நகர மேனாட்டு வணிகர்கள் தம் தாய்நாட்டுக்கு, 'சிவாஜி இப்பொழுதெல்லாம் முன்பு போல் திருடராக இல்லாமல், 30,000 படை வீரர்களுடன் படை எடுத்துச் செல்வதும், இள வரசர் (ஷா ஆலம்) அருகில் இருந்துங்கூட, அஞ்சாமல் போரிடுவதும் சாதாரணமாகி விட்டது' என்று எழுதினர்.[1] சிவாஜியை இவ்வாறு ஐரோப்பிய வணிகர்கள் வருணித்தது ஒரு விதத்தில் நியாயமற்ற, மிகைபடுத்தப்பட்ட கூற்றாகும்.

மீண்டும் சூரத் நகரைக் கொள்ளை யடித்தல்: இதுவரை பெற்ற வெற்றிகளுடன் திருப்தியடையாமல் மீண்டும் ஒருமுறை சிவாஜி தம் 15,000 குதிரை வீரர்களுடன் 1670ஆம் ஆண்டு, அக்டோபர் 3ஆந்தேதி கொள்ளைகளில் ஈடுபட முற்பட்டார். சிவாஜியின் படைகள் சூரத் நகருக்கு 20 மைல் எல்லைக்குள் நெருங்கவே, பேரரசின் அலுவலர்கள் கோழைகளாகி ஓட்டம் பிடித்தனர்; எல்லா இந்திய வணிகர்களும் அச்சம் மேலிட்டு வெளியேறி யோடினர். முதல் தடவை சூரத்தைச் சிவாஜி கொள்ளையடித்த பின், வெகு சீக்கிரத்திலேயே அந் நகரின் பாழ்பட்ட பகுதிகள் திருத்தப்பட்டன. மீண்டும் ஒருமுறை அவர் கொள்ளை யடித்தபோது, டச்சு, பிரெஞ்சு, ஆங்கிலேயக் கம்பெனிகளைத் தவிர்த்து நகர் முழுதுமே அவர் கைக்குள் அடங்கிவிட்டது. ஆனால், பிரெஞ்சுக்காரர்கள் 'வெகுமதிகளை அளித்துச் சிவாஜியின் நட்பைக் கோரினர். காஷ்மீரிலிருந்து குடியேறிய தார்த்தாரியர்கள் சிவாஜியைப் பலம்கொண்ட மட்டும் எதிர்த்தார்கள். சிவாஜியின் ஆட்கள் பாதி சூரத் நகரத்தைக் கொள்ளை அடித்த பின், தீக்கிரையாக்கினார்கள்; அந் நகரின் பொருள்கள் சூறையாடப்பட்டன. வியாபாரத் தொடர்பு அழிந்தது. கட்டடங்கள் அழிந்தன. பேரரசருக்கு அழியாக் களங்கம் உண்டுபண்ணப் பட்டது. சிவாஜி மொத்தத்தில் 132 லட்சம் ரூபாயைக் கொள்ளை அடித்துச் சென்றார். இதிலிருந்து சுமார் 10 ஆண்டுகள் வரை சூரத் நகர மக்கள் மராத்தியர்களை நினைக்கும்போதெல்லாம் தம்மை அறியாமலேயே நடுநடுங்கி வந்தனர்.'[2]

[1] S. N. Sen—'Foreign Biographies of Shivaji' & J. N. Sarkar's-Shivaji

[2] S. N. Sen—Ibid; Also Sarkar's 'Shivaji' & A Short History of Aurangzeb, G. S. Sardesai 'A New History.'

அதே ஆண்டிலேயே அக்டோபர் மாதத்தில் பேரரசுக்கு உட்பட்ட பீரார்ப் பகுதியைப் பிரதாப் ராவ் குஜார், வெங்காஜி கத்தோ, ஆனந்த ராவ் (சிவாஜியின் மாற்றாந்தாய்மகன்) ஆகியோரின் தலைமையின்கீழ்த் தாக்குமாறு சிவாஜி பணித்த தன் பேரில், முகலாயத் தளபதி தாவூத் கானின் படைகளை மராத்தியர்கள் வெகு சுலபமாக நசுக்கி விட்டனர். அதே ஆண்டின் இறுதியில் ஔரங்கசீபுக்கு உட்பட்ட காந்தேஷ் பகுதியின்மீது மராத்தியப் படைகள் படையெடுத்துச் சென்று, புர்ஹான்பூருக்கு அருகில் உள்ள இடங்களை எல்லாம் முற்றுகையிட்டுப் பிடித்துக்கொண்டன. கரிஞ்சா, அஹமத் நகர் ஆகிய சுற்றுப்புறப் பகுதிகளையெல்லாம் தாக்கியதன் விளைவாக, சிவாஜிக்குச் சுமார் 1 கோடி ரூபாய் கிடைத்தது. அந் நகரின் செல்வர்கள், பணம் கொடுக்கப்படும் வரை கடத்தப்பட்ட இடத்திலிருந்து திருப்பி அனுப்பப்படவில்லை. அதேசமயத்தில் மோரோ பிங்ளே என்ற மற்றொரு தளபதி, காந்தேஷின் மேற்குப் பகுதிகளைத் தாக்கிக் கொண்டிருந்தார். ஆனால், சிவாஜி அதே ஆண்டில் காந்தேஷிலும், பீராரிலும் சூறையாட முயன்றது பலனளிக்கவில்லை.

தாவூத் கானின் தோல்வி : தாவூத் கான், ஃபத்ஹுல்லா கான் ஆகியோரின் தோல்விகளைக் கண்ட ஔரங்கசீப், இப்பொழுதுதான் முதன்முதலாகத் தக்காணத்தில் அரசியல் நிலை சீரழிந்துவருவதை உணரலானார். எனவே, இச் சூழ்நிலையிலிருந்து விடுவிக்கச் சிறந்த முகலாயத் தளபதிகளான திலேர் கான், ராவ் அமர்சிங், (Rao Amar Singh) மஹபத் கான் ஆகியோரை அனுப்பினார். துணைக்கு மற்றொரு ராஜபுத்திரத் தளபதி முக்கம் சிங் (Mukham Singh) (சந்தாவத் இளவரசர்) என்பாரையும் அனுப்பிவைத்தார். எனினும், நாசிக் நகருக்கருகில் திண்டோரி (Dindori), சால்ஹிஸ் (Salhis) போர்க்களங்களில் சிவாஜி பெற்ற வெற்றிகள் குறிப்பிடத்தக்கனவாகும். 1671 — 72 ஆம் ஆண்டுகளில் பேரரசர் ஔரங்கசீப் தம் படைகள் வெற்றிகளை நழுவ விடுவதைக் கண்டு ஏமாற்றமும் கோபமும் அடைந்து வந்தார். இது ஒருபுறம். மற்றொரு புறத்தில், தாம் அடுக்கடுக்காகத் தந்திரத்தாலும், போர்த்திறமையினாலும், இன, மத உணர்வுகளைத் தட்டி எழுப்பியதனாலும், தாம் தொடர்ந்து பெற்று வந்திருக்கும் வெற்றிகளைக் கண்டு சிவாஜி பூரிப்படைந்து வந்தார்.

சிவாஜியின் முடிசூட்டு விழா : 1672ஆம் ஆண்டில் விக்ரம் ஷா என்னும் 'கோலி' மன்னரைத் திரும்பத் தோற்கடித்து,

சிவாஜி 17 லட்ச ரூபாயை அபகரித்துச் சென்ருர். இவ் வெற்றி யைத் தொடர்ந்து, நாசிக் மாவட்டத்தைப் பாதுகாத்துவந்த முகலாயத் தாஞதார்களான ஜாதவ ராவ் இராஜபுத்திரர் என் பாரும், சித்தி ஜலால் என்பாரும் திரும்பத் தோல்வி கண்டனர். ஔரங்கசீப் அடுத்த ஆண்டிலேயே பஹதூர் கான் என்ற தளபதியையும் அனுப்பிவைத்தார். ஔரங்கசீபின் தளபதிகள் சிவாஜியின் படைகளிடம் தோல்விகளையே கண்டு வந்தனர். எனவே, தொடர்ந்து ஏற்பட்டுவந்த இழுக்கைத் துடைப்பதற் காக, ஔரங்கசீப் அவசர முடிவு எடுத்திருக்கவேண்டும். ஆனல், ஆக்ரா நிகழ்ச்சிக்குப் பின்பும், சிவாஜியின் வெற்றி களைக் கேள்விப்பட்ட பின்பும், ஜஸ்வந்த் சிங்கின் ஆலோசனை யின் பேரில் அளிக்கப்பட்ட 'மன்னர்'ப் பட்டம் பயனற்றுப் போன பின்பும், வடமேற்கு ஹசன் அப்தல் என்னும் இடத்தை நோக்கிப் புறப்பட்டுச் சென்று மேற்கு அரண்களைப் பாதுகாக்க நினைத்தது, ஔரங்கசீப் அரசியல் சூழ்நிலையைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை என்பதைத்தான் ஊர்ஜிதப்படுத்து கின்றது.[1] தம் வெற்றிகளுக்கெல்லாம் மணிமகுடமாகச் சிவாஜி ராய்கட் கோட்டையில், 1674ஆம் ஆண்டு ஜூன் மாதம் 6ஆம் தேதி மன்னர் எனப் பட்டம் சூட்டிக் கொண்ட நிகழ்ச்சி வர லாற்றுப் புகழ்மிக்கதாகும். சிவாஜியின் அன்னை ஜீஜாபாய் முடிசூட்டு விழாவின்போது உடனிருந்து ஆசி கூறியது சிவாஜி யின் நற்பாக்கியமென்பது குறிப்பிடத்தக்கதாகும். அரை லட்ச ரூபாய்ச் செலவில் செய்து முடிக்கப்பட்ட இம் முடிசூட்டு விழா விற்கு ஹென்றி ஆக்ஸிண்டன் (Henry Oxynden) என்னும் ஆங்கி லேய வணிகர் தம் சொந்த முறையில் கலந்து கொண்டதும் குறிப்பிடத்தக்கதாகும்.[2]

ஆனல், அவர் மன்னர் எனப் பட்டம் சூட்டிக்கொண்டது மரபுக்கும், அரசியல் நிலைக்கும், அரசியல் அமைப்பிற்கும் சாவு மணி அடித்த நிகழ்ச்சி ஆகும். ஏனெனில், ஷாஜி பான்ஸ்லே கூட ஒரு ஜாகிர்தாராகவும், 5000 அந்தஸ்துள்ள மன்சப்தா ராகவும் பீஜப்பூரிலும் கோல்கொண்டாவிலும் பேரரசின் சிறப் புப் பணியாளராகப் பணியாற்றினுரே ஒழிய, அவருக்கு மன்னர் எனப் பட்டம் வழங்கப்படவுமில்லை; மன்னர் என அவர் பட்டம்

[1] வடமேற்கிலுள்ள ஆஃப்கானியர்களால்தான் தமது பேரரசுக்கு ஆபத்து நிகழுமென்று ஔரங்கசீப் நம்பினுரே யொழிய, தக்காணத் தில் மராத்தியர்கள் வெடி வைத்ததை ஏனே அவர் பெரிதாகக் கருத வில்லை! இதுதான் விதியின் விசித்திரம்!

[2] Sarkar, 'Shivaji' and 'The House of Shivaji.'

சூட்டிக் கொள்ளவுமில்லை. ஆயினும், 'மராத்திய மண்டல மன்னர்—சிவாஜி' எனப் பட்டம் சூட்டிக் கொண்டது, பல வெற்றிகளுக்குப் பின் இவருக்குப் பொருத்தமுடையதாகத்தான் அமைந்தது.

முடிசூட்டு விழாவைத் தொடர்ந்து, சிவாஜியின் 'இந்து அரசு' அகன்ற அடித்தளத்தில் அமைக்கப்பட்டது.

முடிசூட்டு விழாவுக்குப் பின்னரும் சிவாஜி தம் பழைய போக்கை விட்டுவிடவில்லை. அவருடைய வீரர்கள் பெத்காவ்(ன்) என்னும் ஊருக்கு அருகில் முகலாயத் தளபதி பஹதூர் கான் என்பவரின் படைகளைத் தோற்கடித்துப் பொருள்களைச் சூறை யாடினர். முன்பே தோல்வி கண்ட பஹதூர் கான் சிவாஜி யுடன் சில ஆண்டுகளிலேயே நட்புறவு உடன்படிக்கை செய்து கொண்டது விந்தையிலும் விந்தையே!

கர்நாடகப் படையெடுப்பு: தஞ்சையில் சிவாஜியின் ஒன்று விட்ட தம்பி (Step-brother) வெங்காஜி என்பார் ஆட்சி புரிந்து வந்தபோது, ரகுநாத நாராயணன் என்ற சிறந்த அந்தணர் அமைச்சராகப் பணியாற்றி வந்தார். வெங்காஜி, ரகுநாத நாராயணனைப் பதவி நீக்கம் செய்தார். கோபமடைந்த ரகுநாத நாராயணன் மராத்திய மண்டலத்துக்குச் சென்று, சிவாஜி யைச் சந்தித்துத் தெற்கே படையெடுத்து வருமாறு தூண்டிய தாகக் கூறப்படுகிறது.[2]

காரணங்கள்: முதலாவதாக, ரகுநாத நாராயணனின் அறிவுரை சிவாஜியை ஆழ்ந்து சிந்திக்குமாறு தூண்டியிருக்கத் தான் வேண்டும். இதற்கிடையில், கர்நாடகப் படையெடுப் பிற்குத் தேவையான ஆயத்தங்கள் எல்லாவற்றையும் செய்து முடிக்க வேண்டிய அவசியமும் ஏற்பட்டு விட்டது. ஏனெனில், கர்நாடகப் பகுதிகள் அனைத்தும் தெற்கே மதுரை வரை பீஜப்பூர் ராஜ்யத்துக்கு உட்பட்டிருந்தன. செஞ்சிக் கோட் டையை நசீர் முஹம்மது என்பார் தளபதியாக இருந்து காத்து வந்தார். திருச்சியை யடுத்த வளிகண்டபுரம் (பெரம்பலூருக்கு அருகில்) என்னுமிடத்தைத் தலைமைப் பீடமாகக் கொண்டு, ஷர்கான் லோடி என்பார் காவல் புரிந்து வந்தார். இதற்கிடைப்

[2] C.K. Srinivasan 'The Maratha Rulers of Tanjore,' C.S. Srinivasachari, 'History of India' Vol. II, p. 269 & 'The Nayak Rulers of Ginjee', Dr. S. N. Sen 'Foreign Biographies of Shivaji,' R. Sathianathier's—History of India, Vol II.

பட்ட தஞ்சை-மதுரைப் பகுதிகள் (பழைய நாயக்க மண்டலங்கள்) நீங்கலாக அனைத்தும் பீஜப்பூருக்கு உட்பட்டிருப்பினும், உண்மையில் இவை அவ்வளவு வலிமை உடையனவா என்பது விவாதத்திற்குரியதாகும். இதற்கிடையில், கிழக்குப் பகுதிகளில் பிரெஞ்சுக்காரர்கள் புதுவையில் தளம் அமைத்துக் கொண்டு மெல்ல மெல்லத் தங்கள் ஆதிக்கத்தை வளர்த்து வந்தனர்.

இரண்டாவதாகத் தக்காணத்தின் பிற பகுதிகளில் முஅஜ்ஜமும் பஹதூர் கானும் முறையே அரசப் பிரதிநிதியாகவும், பிரதமத் தளபதியாகவும் பணியாற்றிவந்தனர். இப் படையெடுப்புக்குச் சில ஆண்டுகளுக்கு முன்பே 'உடன் பிறந்தே கொல்லும் வியாதி' என்பது போன்று, ஔரங்கசீபின் மகனை அந்த அரசப் பிரதிநிதி முஅஜ்ஜமிற்குச் சிவாஜியைக் கட்டுப் படுத்துமாறு தந்தை ஔரங்கசீப் ஓலை விடுத்தபோது, இவன் தன் படைகள் தக்காணத்தை நோக்கி வருவதைச் சிவாஜிக்கு முன்னெச்சரிக்கையாக அறிவித்துவிட்டான். ஆலென், ஹெய்க், டாட்வெல் கூறுவது போல, (தந்தையின்) ஆணைகள் பிறப்பிக்கப்படுகின்றன என்பதை யறிந்த முஅஜ்ஜம், படைகள் வருவதை முற்கூட்டியே இரகசியமாய்ச் சிவாஜிக்குத் தெரிவித்து, எச்சரிக்கை விடுத்தான்.[1] அதற்கேற்றபடி அவர் (சிவாஜி) ஔரங்காபாதிலிருந்து பின்வாங்கினார்.

மூன்றாவதாக, பிரதமத் தளபதி பஹதூர் கானும் திலேர் கானைப் போலப் பேரரசருக்கு முற்றிலும் விசுவாசம் உடையவர் அல்லர். இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டு, 'வேலியே பயிரை மேய்வது' போன்று, பஹதூர் கானே சிவாஜியிடம் கையூட்டுப் பெற்றுக்கொண்டு, கர்நாடகப் படையெடுப்பின்போது அவரைத் தாக்காமலிருப்பதாகவும், முற்றிலும் நடுநிலைமை வகிப்பதாகவும் ஒப்புக்கொண்டார்.

சிவாஜி வெற்றிகளைப் பெறுவதற்கு உறுதிபபடுத்தும் முகமாக, நீராஜிராவுஜி என்னும் தம் பிரதம நீதிபதியை அனுப்பிப் பஹதூர் கானுக்கு நிறைந்த வெகுமதிகளைக் கொடுத்துத் தாம் கர்நாடகத்துக்குச் செல்லும்போது தமிமிடங்களைத் தாக்காமல் இருக்குமாறும், நடுநிலைமை வகிக்குமாறும் கேட்டுக்கொண்டார். இக் கருத்தைச் சர்க்காரும் ஏற்றுக்கொள்கிறார். இதில்

[1] Allan, Wolsey Haig & H. H. Dodwell 'Cambridge Shorter History of India' - 1930 edn. p. 439.

விந்தைக்குரியது என்னவெனில், பேரரசரின் மகனுன இளவரசன் முஅஜ்ஜமே தன் பகைவரிடம் கையூட்டுப் பெற்று, அவர்களுடன் இணைந்து கொண்டதாகும். இதைக் கடிந்து, முஅஜ்ஜமை ஔரங்கசீப் ஆக்ராவிற்குத் திரும்ப அழைத்துக் கொண்டார். பின்பு பிரதமத் தளபதி பஹதூர் கானையே ஔரங்கசீப் தக்காணத்தின் அரசப்பிரதிநிதியாக நியமித்தார். ஆனுல், பஹதூர் கான் கூடக் கையூட்டுப் பெற்றுர் என்பதைப் பேரரசரால் சில மாதங்களுக்குப் பின்புதான் அறிய முடிந்தது.

**உண்மையான காரணங்கள் :** ஆனுல், உண்மையில் சிவாஜி கர்நாடகத்தின்மீது படையெடுப்பதற்குக் காரணமாக இருந்தவர்கள் மூவர்களே ஆவர். தம் எஜமானராகிய வெங்காஜிமீது சீற்றங்கொண்ட—பதவி நீக்க மடைந்த—ரகுநாத நாராயணனும், கோல்கொண்டா குதுப்ஷா மன்னரின் பிராமணப் பிரதம மந்திரி மாதண்ணு (Madanna) என்பாரும், கோல்கொண்டா அரசின் பிரதமத் தளபதியும் மாதண்ணுவின் தம்பியுமான அக்கண்ணு (Akkanna) என்பவருமே யாவர். 'தாணு ஷா' என்ற பட்டப் பெயருடன் பதவிக்கு வந்த அபுல் ஹஸன் என்ற குதுப் ஷா மன்னர் 'சூரியப்பிரகாச ராவ்' என்ற இயற்பெயர் கொண்ட மாதண்ணு என்பாரை 1673ஆம் ஆண்டில் பிரதமராக நியமித்திருந்தார். மாதண்ணுவின் மற்ெருரு தம்பி கோபண்ணு என்பவர் அரசரின் உத்தரவு இல்லாமலேயே ஆறு லட்சம் வராகன்களைக் கோயில் திருப்பணிக்குச் செலவழித்திருந்தார். அரசின் பணத்தைத் திருப்பிக் கொடுக்க அவரால் முடியவில்லை. அரசியல் சூழ்நிலை மாறி வருவதை அறிந்த மாதண்ணு ஒவ்வோர் ஆண்டும் ஒரு லட்ச ரூபாயைக் கொடுத்துச் சிவாஜியுடன் நட்புப் பாராட்டி வந்தார்.[1] தக்காணப் படையெடுப்பின்போது மாதண்ணு தம் மன்னர் அபுல் ஹஸனைத் தூண்டி, சிவாஜிக்குச் சாதகமாய் இருக்குமாறு செய்துகொண்டார். இந் நிலை ஔரங்கசீபுக்கு ஆத்திரமூட்டியது.[2] பேராசிரியர் சத்தியநாதய்யர் இதனை விளக்கி, 1677ஆம் ஆண்டில் சிவாஜியுடன் மாதண்ணுவின் இணக்கமும், அவருக்குக் கர்நாடகப் படையெடுப்பின்போது மாதண்ணு அளித்த உதவியும் ஔரங்கசீபின் கோபத்தைக் கிளறின என்று கூறுகிருர்.[3]

[1] Ibid.
[2] Ibid.
[3] Prof. R. Sathianathier's History of India, Vol. II, p. 377.

(1) மாதண்ணுவின் ஆலோசனையின் பேரில், சிவாஜிக்கும் அபுல் ஹஸனுக்கும் இடையே இரகசிய உடன்பாடு ஒன்று ஏற்றுக்கொள்ளப்பட்டது. சுல்தான் அபுல் ஹஸன் நாள் ஒன்றுக்கு 3000 வராகன், அல்லது மாதம் ஒன்றுக்கு 4·5 லட்சம் ரூபாய் கொடுப்பதாயும் ஒப்புக்கொண்டார்.

(2) மிர்ஜா முஹம்மது அமீன் என்ற தளபதியின் கீழ் 5,000 இராணுவ வீரர்களைச் சிவாஜியின் படைகளுடன் ஒத்துழைக்குமாறு அபுல் ஹஸன் அனுப்பிவைத்தார்.

(3) 1677ஆம் ஆண்டில் சிவாஜியின் படை கர்நாடகத்தை நோக்கிப் பாய்ந்த போது, குதுப்ஷா சுல்தான் அபுல் ஹஸனும், அவர் பிரதமர் மாதண்ணுவும் சிறந்த வரவேற்பை அளித்துத் தம் நல்லாசிகளை நல்கினர். சுல்தான் அபுல் ஹஸன் சிவாஜியின் குதிரையின் கழுத்தில், பல லட்ச ரூபாய் மதிப்புள்ள தம் கழுத்திலிருந்த நகை ஒன்றைக் கழற்றி அணிவித்துச் சிவாஜியை வழியனுப்பி வைத்தார். மன்னரும் பிரதமரும் சிவாஜிக்கு ஹைதராபாதில் வரவேற்பளித்து அவரை வழியனுப்பினர். இதனையெல்லாம் பின்னர்க் கேள்வியுற்ற பேரரசர் ஔரங்கசீப் எழுதினர்: 'துரதிருஷ்டம் பிடித்த இக் கெடுமதியாளன் அறிஞர்களையும் பிறரையும் இந்த ஒரு மனிதனுக்கு அடிமையாக்கி, இவனுக்கு உயர்ந்த இடத்தைக் கொடுத்துள்ளான். இவன் வெளிப்படையாகவே பாவங்களையும் தீமைகளையும் செய்ய அனுமதித்துள்ளான். (பரத்தை இல்லங்கள், சூதுக் கொட்டகைகள் ஆகியவற்றை அனுமதித்தும்) இவனே இரவு பகல் முழுதும் குடித்துப் போதையில் மூழ்கியும் கிடக்கிருன். தெய்வ நம்பிக்கைக்கும் பாவத்திற்கும் நீதிக்கும் கொடுமைக்கும் இடையே வித்தியாசத்தை அறிந்துகொள்ளத் தவறிவிட்டான்.'[1] ஆனல், பேராசிரியர் சத்தியநாதய்யர், 'கர்நாடகப் படையெடுப்பிற்குக் காரணம் வெங்காஜியின் பழைய பிரதமர் ரகுநாதரும் அல்லர்; கோல்கொண்டாவின் பிரதமர் மாதண்ணுவுமல்லர்; சிவாஜியே ஆவார்,' என்று கூறுகிருர்.[2] ஆனல் இதற்குப் பேராசிரியர் காரணங்களையோ ஆதாரங்களையோ காட்டவில்லை.

**வெற்றிக்குக் காரணங்கள்:** பஹதூர் கானின் நடுநிலை, பிரெஞ்சுக் கவர்னர் மார்த்தினின் நடுநிலை, குதுப் ஷா மன்னர்

[1] Lanepoole, Aurangzeb.
[2] R. Sathianathier—History of India, Vol. II. Also, C. S. Srinivasachari-History of India, Vol. II.

அபுல் ஹஸனின் நட்பு, பிரதமர் மாதண்ணுவின் தூண்டுதல் ஆகியன வெல்லாம் சிவாஜி கர்நாடகத்தின்மீது எளிதில் வெற்றிவாகை சூடத் துணைபுரிந்தன. இந்தச் சூழ்நிலையில், பேரரசர் ஔரங்கசீப் பீஜப்பூரின் நட்பை நாடியிருக்க வேண்டும். ஆனால், அதனுடன் தொடர்ந்து நீடித்த பகை தமக்கே பல ஆண்டுகள் வரை தீமையாக அமைந்தது என்பதைப் பேரரசரால் பிறகுதான் உணர முடிந்தது.

சிவாஜி தெற்கே நகர்ந்தபோது கர்னூல், அனந்தபூர், திருப்பதி, காளஹஸ்தி ஆகிய இடங்களை யெல்லாம் வெற்றி கொண்டு, வேலூர்க் கோட்டையை 1678ஆம் ஆண்டில் தாக்கினார். கோட்டைகள் ஒவ்வொன்றாக வீழ ஆரம்பித்தன. செஞ்சிக் கோட்டையும் நாசிர் முஹம்மதிடத்திருந்து எதிர்ப்புக்குப் பிறகு விழுந்தது. சிவாஜி கடலூர், புவனகிரி, சிதம்பரம் வழியாகத் தெற்கே திருச்சி வரை வேகமாக முன்னேறிச் சென்றார். அவர் தஞ்சைக்குப் படையெடுத்து வருவதைக் கண்ட வெங்காஜி தப்பியோடியதிலிருந்தே, தம் பழைய நாள் பிரதமர் ரகுநாத் என்பார்தாம் இப் படையெடுப்பிற்குக் காரணமாய் இருக்க வேண்டுமென்று இவர் யூகித்துக் கொண்டிருக்க வேண்டும் என்பதும் உறுதியாகிறது.

ஆனால், வெற்றிகரமான தக்காணப் படையெடுப்புக்குப் பிறகும் சிவாஜி சிவனேரிக் கோட்டையை மீண்டும் கைப்பற்ற முயன்று திலேர்கானிடம் தோற்றுப் போனார். கர்நாடகப் படையெடுப்புக்குப் பிறகு சிவாஜி இரண்டு ஆண்டுகளே உயிருடனிருந்தார். மார்ச் 23ஆம் தேதி, 1680ஆம் ஆண்டு நோய் வாய்ப்பட்டார். 1680ஆம் ஆண்டு ஏப்ரல் 4ஆம் தேதி ஞாயிறன்று பகற்பொழுதில் இரத்த வாந்தியினால் இறந்தார்.[1]

## சிவாஜியின் சிறப்பும் அரசும்

முடிசூட்டு விழாவுக்குப் பிறகு சிவாஜி தனி நாட்டை உருவாக்கிய பின், மத்திய நிர்வாகத்திற்கு அஷ்டபிரதான் என்னும் 8 அமைச்சர்களைக் கொண்ட அரசாங்கம் ஒன்றையும் உருவாக்கினார். அவர்கள்: (1) பேஷ்வா அல்லது முக்கிய பிரதான், (2) மஜ்முவதார் அல்லது அமத்தியா, (3) வஹேநவீஸ் அல்லது மந்திரி, (4) சப்னிஸ் அல்லது சச்சீவ் (5) தாபீர் அல்லது சுமன்த், (6) சார நவ்பத் அல்லது சேனாபதி, (7) சதர் முஹதாஸிம் அல்லது பண்டித ராவ், (8) நியாயாதிஷ். இவ்வாறு

[1] Cosma de Guarda in Foreign Biographies of Shivaji - Dr. S. N. Sen.

எட்டு அமைச்சர்கள் இருப்பினும், சர்க்கார் கூறியது போலப் பிரெஞ்சு நாட்டுப் பதினான்காம் லூயீயைப் போன்று, அல்லது இரண்டாம் ஃபிரடெரிக் போன்று, அரசியல் அதிகாரங்கள் அனைத்தும் சிவாஜியின் கரங்களிலேயே இருந்தன. இவர் தம் அமைச்சரவைக்கு முன்மாதிரியாகப் பீஜப்பூர், கோல்கொண்டாவிலிருந்த அமைப்பைப் பின்பற்றினார் என்று சில அறிஞர்கள் கூறிய போதிலும், இது தற்கால உலகில் காணப்படும் முழுப் பொறுப்பேற்றுக் கொள்ளும் மக்கள் பிரதிநிதிகளைக் கொண்ட 'காபினட்' (Cabinet) அல்லது அமைச்சரவையைப் போன்றது என்று கூறுதல் இயலாது.

**இராணுவம் :** உண்மையில், சிவாஜி இராணுவத்தின் அடிப்படைக் குறைகளை யறிந்து அவற்றை அகற்றிய பெருமைக்கு அவரைப் போற்றத்தான் வேண்டும். முகலாய மன்சப்தாரி முறையில் நிலப்பிரபுத்துவ முறையின் அதே குறைகள் தாம் நிறைந்து காணப்பட்டன. எனவே, இக் குறைகளை அகற்றி, இராணுவ வீரர்களுக்கு நேரடியாகவே சம்பளப் பணத்தைப் பட்டுவாடா செய்திடும் முறையை அமல்படுத்தினார். ஷேர் ஷாவைப் போல சிவாஜியும் போர் வீரர்களைத் தேர்ந்தெடுக்கும் போது தாமே நேரே பார்வையிட்டுத் திருப்தியடைந்த பின்னரே இராணுவத்தில் சேர்த்துக்கொண்டார். அவருடைய படைகள் முகலாயப் படைகளைவிட வெகு விரைவாக நகர்ந்து, பாய்ந்து திரும்பும். இராணுவம் சேனாபதி தலைமையின் கீழ்ச் சீரமைக்கப்பட்டது. கோட்டைகள் சிறப்பான இடத்தில் அமைந்திருந்தமையால், ஜும்லாதார், ஹவில்தார், காஜி, செஹ்க்தார், சிலாதார் ஆகிய அலுவலர்கள் நியமிக்கப் பட்டனர்.[1]

**சௌத், சர்தேஷ்முகி:** சிவாஜி நிலத்தின் வருமானத்தில் நான்கில் ஒரு பகுதியை (காற்பங்கை) வரியாக வசூலித்து வந்தார். ஆனால், சௌத் என்னும் இவ் வரியை முன்னமே போர்ச்சுகீஸியர்கள் தங்கள் பகுதிகளில் வசூலித்துவந்தனர். எனினும், சௌத் வரியை வசூலித்த போதும், வசூலிக்கப்பட்ட மக்களுக்குப் பிற அரசர்களின் ஆக்ரமிப்பிலிருந்தோ, தாம் சூறையாடுதலிலிருந்தோ சிவாஜி விலக்கு அளிக்கவில்லை என்பதை நாம் மறந்துவிடலாகாது. இதுபோன்றே சர்தேஷ்முகி என்ற 1/10 பங்கு வரியையும் வசூலித்து வந்தார். வரலாற்று ஆசிரியர் சென் (S. N. Sen) இவ் விரு வரிகளையும் வெல்லஸ்லி

[1] S. N. Sen—Military System of the Marathas.

யின் துணைப்படைத் திட்டத்திற்கும், ஜார்ஜ் வாஷிங்டன் சில சமயங்களில் வசூலித்து வந்த வரிக்கும் ஒப்பிடுவது[1] பொருத்த மற்றதாகும். ஏனெனில், சிவாஜியே பலப்பல ஆண்டுகளில், பலப்பல இடங்களில் கொள்ளைகளில் ஈடுபட்டு வந்திருக்கும் போது, அம் மக்களுக்குப் பிற அரசர்களின் ஆக்கிரமிப்பிலிருந்து எவ்வாறு பாதுகாப்பளித்திருக்க முடியும்? அது மட்டுமன்றி, வெல்லஸ்லி நிஜாம் அசப்ஜாமீது தம் உடன்பாட்டைத் திணித்தபோது அவ் விராஜ்யத்திற்குப் பிரிட்டிஷ் படைகளைக் காவல் புரியுமாறு அனுப்பி வைத்தார். ஆனால், சிவாஜி தனியே துருப்புக்களை அனுப்பிக் காவல் புரியவில்லையே! எனவே, இக் கருத்து ஏற்புடைத்து அன்று.

**சிவாஜியின் அரசின் தன்மை:** பேரரசர் ஔரங்கசீபின் மதக் கொள்கைகள்தாம் முகலாயப் பேரரசின் வீழ்ச்சிக்கு முக்கிய காரணமாக இருந்தனவென்று முழங்கும் அறிஞர்கள் ஒரு வரலாற்று உண்மையை மறந்து விடுகின்றனர். பேரரசரின் மதக் கொள்கைகளல்ல, ஆனால் மராத்திய மண்டலத் தலைவரான வீர சிவாஜியின் எழுச்சிதான் முகலாயப் பேரரசுக்குச் சாவு மணியடித்தது என்றால் அது மிகையாகாது.[2] ஏனெனில், ஔரங்கசீப் ஆட்சிக்கு வருவதற்குப் பல ஆண்டுகளுக்கு முன்பே தோர்ணைக் கோட்டையைப் பிடித்ததிலிருந்து, மெல்ல மெல்லப் படிப்படியாகச் சில சமயங்களில் பீஜப்பூர் அரசை எதிர்த்தும், பல தடவைகளில் கொலை நிகழ்ச்சிகளில் ஈடுபட்டும், பல தடவைகளில் பேரரசருக்கு உட்பட்ட பகுதிகளில் ஊடுருவியும், அதன் கோட்டைகள் பலவற்றைப் பிடித்தும், சூரத் நகரை இருமுறை தாக்கியும், ஜெய்சிங்கிற்கு அளித்த வாக்குறுதிகளை மீறியும், ஜஸ்வந்த் சிங்கிற்கும் ஆளுநருக்கும் கையூட்டளித்தும், ஜாகிர்தார் மகன் பதவியிலிருந்து குறுநில மன்னராகப் பட்டம் சூட்டிக் கொள்ளும் வரை சிவாஜி தம் உண்மை நிலையினையும் இயல்புகளையும் குறிக்கோள்களையும் உலகுக்கு உணர்த்திவிட்டார். உண்மையில், பேரரசுக்கு ஊறு விளைவிக்காமலும், எளிய ஆனால் உயர்ந்த குடிமகனைப் போல வாழ்ந்திருக்கவும் அவர் நினைந்திருப்பின், புரந்தர் உடன்படிக்கைக்குப் பின் தம் பழைய வழிகளைக் கைவிட்டிருக்க வேண்டும். ஆனால், சிவாஜி மீண்டும் மீண்டும் அதே வழிகளைக் கடைப்பிடித்து வெற்றிகளைக் கண்டதிலிருந்து, ஔரங்கசீபின் மதக் கொள்கைகளின் தீவிர வைதிகத் தன்மையன்று, ஆனால்

[1] S. N. Sen—Administrative System of the Marathas.
[2] S. J. Owen—Fall of the Mughal Empire.

ஔரங்கசீபின் இயலாமையையும் மிருதுவான தன்மையையும் அவருடைய முஸ்லிம், இந்துத் தளபதிகளே குறுகிய இலட்சியமாய்த் தங்கள் கருத்தில்கொண்டு வீரருக்குச் சாதகமாக இருந்தமையும்தாம் கேடுகாலத்தை விளைத்துவிட்டன என்பது தெள்ளத் தெளிவாகப் புலனாகின்றது. ஔரங்கசீபின் மதக் கொள்கை காரணமாக இருந்திருக்குமேயானால், ஜஸ்யா வரி விதித்தபோது அதை எதிர்த்துக் கடிதமெழுதிய வீரர், ஔரங்கசீப் ஆட்சியில் அமர்ந்து 20 ஆண்டுகள் வரை அவரொரு மூர்க்க வைதிகரென்று ஒரு வார்த்தையும் சொல்லாதது ஏன்? எனவே, ஔரங்கசீபின் மதக் கொள்கை சிவாஜியின் எழுச்சியைத் தூண்டவில்லை.

## இந்து அரசா? தேசிய அரசா?

இனி அடுத்து, சிவாஜியின் அரசு இந்து அரசா (Hindu State), தேசிய அரசா (National State) என்பதைப்பற்றிப் பல அறிஞர்களிடையே விவாதம் நிகழ்ந்த வண்ணமாயுள்ளது.[1] ஆனால், இவ் விரு கருத்துகளுக்கும் மாறாக, வரலாற்றுப் பேரறிஞர் வின்ஸன்ட் ஸ்மித் இதனைக் 'கொள்ளைக்கார அரசு' (Robber State) என்று வர்ணிக்கிறார்:

'சாமிகளின் மீது செலுத்தப்பட்ட பரம பக்தி, அந்தணர்களுக்கு மிக மரியாதையுடன் அள்ளியள்ளிக் கொடுக்கப்பட்ட தானம், பசுக்களுக்கு வழங்கப்பட்ட பாதுகாப்பு ஆகியனவெல்லாம் அச் சாதனையுடன் இணைக்கப்பட்டிருந்த மட்டில், அந்த வீரமிக்க வெற்றி வீரர் கடவுளின் அவதாரந்தான் என்று கருதப் படத்தக்க பெற்றியையே முற்றும் பெற்றிருந்தார். ஆனால், அந்தச் சிவாஜி ஏதோ சில எதிர்பாராத நற்குண நல்லொழுக்கப் பண்புகளைப் பெற்றிருந்தார், அவற்றைச் செயல்முறையிலும் கடைப்பிடித்தார் என்னும் காரணம், அவர் எடுத்த எடுப்பில் முதற்கண் ஒரு கொள்ளைக்கூட்டத் தலைவராக இலங்கினாரென்பதையோ, அவர் கேவலம் லாபம் அடைதற் பொருட்டு, ஹிந்துக்களாயினும் முஸ்லிம்களாயினும் யாவர் மீதும் ஒத்தாற்போல் சொல்லொணா வேதனைகளைக் கொட்டிக் கவிழ்த்து அவர்களை உபத்திரவங்களுக்கு உள்ளாக்கினாரென்பதையோ, தமது இலட்சியங்களை நிறைவேற்றிக் கொள்வதற்குக் கொஞ்சமும் தயக்க முறாது அனைத்து அக்கிரமமான வழிமுறைகளையும் கடைப்பிடிக்க முற்பட்டார் என்னும் உண்மையையோ

[1] Sarkar—Shivaji. Also, Vincent A Smith - Oxford History of India and Perceaval Spear - History of India, Vol. II.

மறைத்துவிட முடியாது. மராத்திய அரசு, சிவாஜியின் ஆயுட் காலத்திலாகட்டும் அல்லது வேறெக் காலத்திலாகட்டும்...என் றைக்குமே எப்பொழுதுமே எந்த ஒரு நன்மையையும் விளைத் திடவுமில்லை, அல்லது இந்தியாவுக்கு யாதொரு நற்பலனையும் நல்கிவிடவுமில்லை.'[1] பேரறிஞர் ஸ்மித் சற்று மிகைபடுத்தி இப்படிக் கூறியதாகத் தோன்றினாலும், வீரர் சிவாஜியின் அரசு நிலைபெறுவதற்கு ராமதாஸ், தாதாஜி காந்தேவ், கிருஷ்ணாஜி பாஸ்கர், மாதண்ணா, அக்கண்ணா, ரகுநாத் ஹனுமந்தே முதலிய சிவாஜி போற்றிய வைதிகத் தலைவர்களே காரணமாக இருந்தார்கள் என்பதை எவருமே மறுத்தற்கு இயலாது. அது மட்டுமன்றிச் சிவாஜிக்குப் பின்னரும், மூன்றுவது பானிப்பட் யுத்தத்திற்குச் சற்று முன்புவரையுங்கூட, மராத்தியர்களின் ஆதிக்கம் கொடுமையாக இருந்ததனால்தான் இந்தியாவின் பிற பகுதிகள் அவர்களை விரும்பவில்லை என்பதைப் பிற்கால நிகழ்ச்சிகள் உறுதிப்படுத்தின. ஆனால், அதே நேரத்தில், மராத்தியப் பேரரசு உருவாகா வண்ணம் சிவாஜி இறந்த பின்னர்த்தான் பேரரசர் ஔரங்கசீபினால் முற்றிலும் தடுத்து நிறுத்த முடிந்தது. எவ்வாருயினும், சிவாஜியின் மராத்திய அரசு சமூகநல அரசும் அன்று, பொதுநல அரசும் அன்று என் பதை வரலாற்றின் இந் நிகழ்ச்சிகளே எடுத்துக்காட்டுகின்றன. இக் கருத்துகளை அறிஞர் பர்சீவல் ஸ்பியரும் ஏற்றுக்கொள் கிருர். ஸ்பியர் கூறுகிருர்: 'மராத்தியத் தலைமையை இந்தியா ஏற்றுக்கொள்ளவில்லை. ஏனெனில், மராத்தியர்கள் தம்மைத் தாமே வெறுப்புக்கு ஆளாக்கிக் கொண்டனர். அவர்கள் ஏன் வெறுக்கப்பட்டனரெனில், அவர்கள் முகலாயர்களுடன் நிகழ்த் திய போராட்டத்தால் பகைமை என்னும் காழ்ப்புணர்ச்சி அவர் களுடைய உள்ளத்தில் வேரூன்றி விட்டமையாலேதான். அகில இந்திய (ஹிந்து) சாம்ராஜ்யத்தை உருவாக்கித்தான் தீர வேண்டும் என்று மராத்தியர்கள் கண்ட கனவு நனவாகு முன் னரே, 80 வயது நிரம்பிய ஔரங்கசீப் அதை முறியடித்து விட்டார். அவர்கள் எந்த அளவுக்கு வெறுக்கத்தக்கவர்களாக

[1] When that success was combined with intense devotion to gods, reverant liberality to Brahmins and protection to cows, the brave and victorious leader was well qualified to be considered an incarnation of deity. But the fact that Shivaji possessed and practised certain unexpected virtues must not obscure the truth that he was in the first instance a robber chieftain, who inflicted untold misery upon innocent people, Hindus and Muslims alike, merely for the sake of gain, using without scruple all means to attain his ends. The Maratha State at any stage, whether during Shivaji's life-time......never served any good purpose or conferred any benefit upon India.'—Vincent Smith, Oxford History of India, p. 415.

வும் கொடிய ஆக்கிரமிப்பாளர்களாகவும் ஆகிவிட்டிருந்தார்களென்றால், தேசியத் தலைவர்களாக உயர்வதற்கான அருகதையை அடியுடன் இழந்துவிட்டிருந்தார்கள்; மற்றும், நாடு முழுதும் தங்களை நிரந்தரமாக நிலைநாட்டிக் கொள்ளும் சக்தியேனுங்கூட அவர்களுக்கு அறவே இல்லாதொழிந்தது... (சிவாஜி) கொரில்லாப் போர் முறைத் தந்திரங்களைப் பிரயோகித்து முகலாயர்களின் அறிவுத் திறனை மிஞ்சி விட்டதில் மட்டும் அவருடைய பேராற்றல் வெளிப்படவில்லை; ஆனால், மக்களையும், வர்ணாசிரம தர்மத்தைக் கடைப்பிடித்த பிராமணர்களையும், சுதந்தரமாக வாழ்ந்த சூத்திரர்களையும் ஒன்று திரட்டி ஓரே கட்டுக்கோப்பாய் உருவாக்கி விட்டாரே, அதில் அடங்கிக் கிடக்கிறது. பசுக்களையும், நாட்டையும், (ஹிந்து) மதத்தையும், (ஹிந்து) தாயகத்தையும் தற்காத்துத் தீரவேண்டுமென்பதே போர்முழக்கக் குரலாக எங்கும் ஒலித்தது. அது மராத்திய தேசியமும், மராத்திய ஹிந்து மதமும் ஒருங்கிணைந்த ஒரு மண்டலத் தேசிய அரசின் கருப்பிண்டமாகத்தான் காணப்பட்டது.'[1] எனவே, சிவாஜி நிலைநாட்ட விரும்பிய அரசு மராத்திய இந்து தர்மத்தை எங்கெங்கும் பரத்திவிடத்தான் குறி பார்த்ததன்றி, அது 'தேசிய அரசாக,' 'பொதுநலன் அமைந்த அரசாக' இலங்கிற்றென்று கூறுவதற்கு ஒரு முகாந்தரமும் காணப்படவில்லை!

**சிறப்புக் குணநலன்கள்:** சிவாஜி பலாத்கார மூர்க்கத்தனத்திலும் சூறையாடுதலிலும் ஈடுபட்டு வந்தாலும், தனிக் குணநலன்களில் நிச்சயமாகப் போற்றற்குரியவர் என்பதை எவரும் மறுத்திட இயலாது. ஏன், எவரும் எதிர்பார்த்திரா முறையில், அவர் காலத்து வரலாற்று அறிஞர்—குறிப்பாளர் காஃபீ கானே சிவாஜியின் குணநலன்களை வாயாரப் புகழ்கிறார்: 'சிவாஜி மன்னர் நாட்டின் இல்லாமை நிலையைக் கண்டு தைரியமாகப் பல ஜாகிர்தார்களின் உடைமைகளை அபகரித்துக் கொண்டார். இதுதான் அவரும், அவரது வழித்தோன்றல்களும், கொங்கணிலும் தக்காணத்தின் எல்லாப் பகுதிகளிலும் பரப்பிய முதல் வன்முறையின் தொடக்கமாகும். அவர் மராத்தியக் கொள்ளைக்காரர்களையும் திருடர்களையும் அதிகமாக இணைத்துக் கொண்டு, கோட்டைகளை யெல்லாம் மடக்குவதில் ஈடுபடலானார்... நாளுக்கு நாள் சிவாஜி தம் பலத்தை அதிகரித்துக் கொண்டு வந்தார். மேலும், எல்லாக் கோட்டைகளையும் கைப்பற்றினார். இதனால், காலப்போக்கில் அவர் அதிகாரமும் செல்வமும்

[1] Perceaval Spear, A History of India, Vol. II, p. 60, Pelican Edn. 1970

படைத்த மனிதரானூர்...அப் பகுதிகளிலெல்லாம் பல கோட்டைகளையும் கட்டினூர். இதன் விளைவாக, பொருள்களும் போர்த் தளவாடங்களும் பொருத்தப்பட்ட 40 கோட்டைகள் அவரிடம் இருந்தன. அவர் தைரியமாகப் புரட்சிக் கொடியை உயர்த்தி, தக்காணத்தின் குறிப்பிடத்தக்க கிளர்ச்சிக்காரரானூர்.'[1] இது வரை சிவாஜியின் அரசியல் நிகழ்ச்சிகளை ஒருவிதமாகப் படம் பிடித்துக் காட்டிய காஃபீ கான் மேலும் கூறுகிறூர்: 'அவரைப் பின்தொடர்பவர்கள் சூறையாடுகிற போதெல்லாம் மசூதிகளுக்கோ, திருமறைக்கோ (இறைவனின் புத்தகத்திற்கோ), எந்த ஒரு பெண்ணுக்கோ தீங்கிழைக்கலாகாதென அவர் உத்தரவிட்டார். எப்பொழுதாவது புனிதக் குர்ஆனின் ஒரு பிரதி அவரது கரத்தில் கிடைக்குமேயானூல், அவர் அதனை மரியாதையுடன் ஏற்று, அதனைத் தம்மைத் தொடரும் சில முஸ்லிமிடம் கொடுத்துவிடுவார். அவருடைய ஆட்களால் எப்பொழுதாவது ஓர் இந்து அல்லது முஸ்லிம் பெண் தாக்கப் பட்டால், அவளைக் காப்பாற்ற எந்த நண்பனும் இல்லாமல் இருந்தால், அவளை விடுவித்துச் செல்வதற்குத் தகுந்த தொகையுடன் உறவினர்கள் வரும்வரை, அவளை அவர் காத்து நிற்பார். எவளேனும் ஒருத்தி ஓர் அடிமைப் பெண் என்று அவர் அறிந்தால், அவளை அவளுடைய எஜமானரின் சொத்து என்று கருதி, தம்மிடமே பாதுகாப்பில் வைத்துக் கொள்வார். எப்பொழுதாவது ஓரிடம் கொள்ளை அடிக்கப் படுமேயானூல், ஏழைகளின் பொருள்களும் பித்தளை ஈயப் பாத்திரங்களும் அவற்றைக் கண்டெடுத்தவர்களுக்குச் சேர வேண்டும்; ஆனூல் தங்கமும், வெள்ளியும், மற்றுமுள்ள எல்லா நாணயங்களும், விலையுயர்ந்த ஆபரணக் கற்களும், பொருள்களும், நகைகளும் கண்டெடுத்தவருக்குச் சொந்தமில்லாது, அவற்றை ஓர் இம்மியேனும் குறைக்காது அரசாங்கத்திடம் ஒப்படைத்துவிடவேண்டும் என அவர் ஒரு சட்டத்தை இயற்றினூர்.'[2]

## மஹாராஷ்டிராவில் ஔரங்கசீபின் தோல்விக்குக் காரணங்கள்

பேரரசர் ஔரங்கசீப் ஒளிவுமறைவின்றித் தம் படைகள் சிவாஜியிடம் படுதோல்வியைக் கண்டுவந்தன என்பதை மன முருகி ஒப்புக்கொண்டார். 'என் படைகள் 19 ஆண்டுகளாக

[1] Kafi Khan in Elliot & Dowson - History of India as told by its own historians, Vol VII, p 260 - 261.

[2] Ibid - p. 256 to 268,

அவரை எதிர்த்து உபயோகப்படுத்தப்பட்டன. ஆயினும், அவரது அரசு வளர்ந்த வண்ணமாகவே உள்ளது,’[1] என்று பேரரசர் ஔரங்கசீப் இறுதியாகப் பெருமூச்சுவிட்டு, தக்காணத் திற்குப் புறப்படுவதற்கு முன்பு, இவ்வாறு ஒப்புக்கொண்டார். பேரரசர் வடமேற்குப்புற எல்லை மாகாணங்களிலும், கிழக்குப் பகுதிகளிலும், தக்காணத்தில் முன்பு ஆளுநராக இருந்த போதும் பல வெற்றிகளைக் கண்டிருந்தார். இருந்தும், இப் போது அவர் தோல்வி அடையக் காரணம் என்ன?

1. பேரரசர் ஆக்ராவிலும் டெல்லியிலுமாக, தக்காணத்தி லிருந்து வெகு தூரத்தில் இருந்தார். எனவே, தக்காணத்தில் நியமிக்கப்பட்ட ஆளுநர்களும், தளபதிகளும் பேரரசின் ஆணைகளுக்கு எதிராகத் தம் இச்சைக்கு ஏற்றவாறு நடந்து வந்தனர். மேலும், தளபதிகள் அனைவரும் பேரரசர் ஔரங்க சீபிடம் நியாயமாகவும் சட்டரீதியாகவும் வெளிப்படுத்த வேண்டிய ராஜ விசுவாசத்தைக் காட்டவில்லை.

2. உதாரணமாக முஅஜ்ஜம், ராஜா ஜஸ்வந்த் சிங், குமார் ராம்சிங், பஹதூர் கான் போன்றவர்கள் துரோகச் செயலில் ஈடுபட்டுவந்தனர். ராஜா ஜெய்சிங்கைப் போன்ற, முற்றிலும் விசுவாசங் கொண்ட தளபதிகள் விரல்விட்டு எண்ணக்கூடிய அளவில்தாம் இருந்தார்கள்.

3. ஷயிஸ்தா கான் (1660-62), ஜெய்சிங் (1665-66), மஹபத் கான் (1671-72), பஹதூர் கான் (1673-75), திலேர் கான் (1678-79) ஆகியோர் ஆளுநர்களாகவும் தளபதி களாகவும் பணியாற்றிய போதிலும், திலேர் கான், ஜெய்சிங், ஷயிஸ்தா கான் ஆகியோரைத் தவிர்த்துப் பிறத் தளபதிகள் சிவாஜியுடன் இரகசிய உடன்பாடுகளும் செய்து கொண்டு, கையூட்டமும் பெற்றுக்கொண்டு தம்மை அறியாமலேயே பேரரசுக்குச் சாவுமணியை அடித்துவந்தனர். பேராசிரியர் சர்க்கார் இக் கருத்து வரலாற்று உண்மை என்பதைத் தெளி வாக விளக்குகின்றார். பேரரசர் அக்பர் தெற்கே அசிர்கார்க் கோட்டையையோ, அஹமத்நகரக் கோட்டையையோ கைப் பற்ற முயன்றபோது, அப் பேரரசருக்கு எதிராகத் தளபதிகள் எவரும் கையூட்டுப் பெற்றுக்கொண்டு துரோகம் புரியவில்லை. ஔரங்கசீபின் துரதிருஷ்டம் போலும், இப்பால் சூழ்நிலை முற்றி லும் தலைகீழாக மாறிவிட்டது! சர்க்கார் கூறுகிறார்: ‘சிவாஜிக்

[1] Ibid

கும் முகலாயர்களுக்கும் இடையே நீண்டநெடுங் காலத்திற்குப் போர்நிலை நீடித்தது. அப் போர்க்காலத்தில் பேரரசின் தளபதிகள் துரோகத்தனமாகவே நடந்துகொண்டனர்; தூரத்தில் இருக்கும் தம் எஜமானரை ஏமாற்றுவதற்காக அருகிலிருந்த சிவாஜியிடமும், பிறகு சாம்பாஜியிடமும் லஞ்சத்தைப் பெற்றுக் கொண்டு, இரகசிய உடன்படிக்கை செய்துகொண்டனர்.'[1] தோல்விக்கு இதுவும் ஒரு முக்கிய காரணமாகும்.

4. தளபதிகளிடையே பூசலும் கருத்து வேற்றுமையும் நாளுக்கு நாள் அதிகரித்து வந்தன. திலேர் கானின் கட்டுப் பாடுகளை முஅஜ்ஜம் ஏற்பதில்லை. முஅஜ்ஜத்தின் ஆணைகளுக்கு எதிராகத் திலேர் கானும் பேரரசருக்குக் கடிதங்களை எழுதி அவரது ஆணைகளுக்குக் காத்திருப்பது வழக்கம்.

5. மிக முக்கியமான காரணங்களுள் ஒன்று, பேரரசர் ஔரங்கசீபின் இராணுவத்தில் சேவை புரிந்துவந்த இந்து வீரர்களும் தளபதிகளும் சிவாஜியுடன் இரகசியத் தொடர்பு வைத்துக்கொண்டது மட்டுமன்றி, இந்து மதம் புத்துணர்ச்சி பெற்றுயர முயன்று வருபவர் சிவாஜியே என்று கருதித் தம்மால் இயன்ற நல்லாதரவுகளையும் நல்லாசியையும் மனமார நல்கியும் வந்தனர். பற்றுததற்கு, கோல்கொண்டா அரசு போன்ற சிற்றரசுகளின் பிரதமரும், இந்து அலுவலர்களும் சிவாஜியை நவீனகால அவதார புருஷர் என்று கருதியதன் பயனுகப் பல சமயங்களில் நடுநிலைமை வகித்தோ, சிவாஜிக்கு ஆதரவளித்தோ பேரரசருக்கு எதிரான நடவடிக்கைகளை எடுத்து வந்தனர்.[2]

6. ஔரங்கசீபின் முஸ்லிம் தளபதிகளுங்கூடச் சிவாஜிக் கும் மராத்தியர்களுக்கும், தம் பகுதிகளில் நிலைநாட்டப்பட வேண்டிய அமைதியைக் கருத்தில் கொண்டு, அடிக்கடி கையூட்டுக் கொடுத்துவந்தனர். அவர்களின் இக் கோழைச் செயல் ஒரு புறம்; கையாலாகாத மடமை மற்றொரு புறம். உண் மையில், தளகர்த்தர்கள் அரசியல் நிலையை நிதானிக்கவும் இல்லை. அவர்களுக்குக் கூர்மையான அரசியல் பார்வையும் இல்லை.

7. பல ஆண்டுகள் வரை பகைமை பாராட்டிவந்த பீஜப்பூர் அரசுகூடச் சிவாஜியுடன் ஒன்றுக இணைந்து, பேரரச

[1] J.N. Sarkar - A Short History of Aurangzeb.
[2] J. N. Sarkar—A Short History of Aurangzeb. Also, Lanepoole—Aurangzeb.

ருக்கு எதிரான நடவடிக்கைகளில் இறங்கியது. பீஜப்பூர், கோல்கொண்டா அரசர்கள் ஷீஆ மதப் பிரிவைச் சார்ந்திருந்ததால், ஔரங்கசீபை அவர்கள் எதிர்த்தனர் என்று கூறுவதோ, இவ்வரசுகளை ஔரங்கசீப் நசுக்க விரும்பியதால் இவை எதிர்த்தன என்று கருதுவதோ இங்குப் பொருத்தமுடையதாகாது. ஏனெனில், பீரார், காந்தேஷ் போன்ற அரசுகளும் அதே ஷீஆப் பிரிவைச் சார்ந்தவைதாம் என்பதை மறந்து விடுவதற்கில்லை.

8. முகலாய ஆளுநருக்கும் தளபதிகளுக்கும் தேவையான பொருள்களும் தளவாடங்களும் காலா காலத்தில் தொலைத்தூரம் காரணமாகவும், வேறுபல காரணங்களாலும் உரிய காலத்தில் வினியோகிக்கப்படாமற் போயின என்பதும் முக்கியமான காரணமாகும்.

9. உண்மையில், பேரரசின் தோல்விக்குச் சிவாஜியின் பேராற்றல், அறிவுக்கூர்மை ஆகியவற்றைத் தவிர வேறு யாரும் காரணமல்லர். வேறு விதமாகக் கூறினல், பலவீனமான தக்காணிய சுல்தான்களும், மராத்திய மண்டலத்தின் அமைப்பும், சிவாஜியின் வளர்ப்புச் சூழ்நிலைகளும், சிவாஜியின் இராணுவக் கட்டுப்பாடும், அவர் இந்துக்களின் உணர்ச்சியைத் தட்டி எழுப்பிய விதமும், கொள்ளைகளிலும் போர்களிலும் அழிவிலும் ஈடுபடவே அவ் வீரரை 'இந்துமதக் காவலர்' என்று மக்கள் கருதி அவரது கொடியின்கீழ்ப் போராடிய விதமும், அவரது கூர்ந்த அரசியல் அறிவும், நல்லொழுக்கங்களும்தாம் காரணங்களாகும். உண்மை நிலையை அறியாது பொம்மைகள் போல் போராடி வந்த முகலாயத் தளபதிகளைத் தவிடுபொடியாக்கி, இந்து அரசை உருவாக்கி, முகலாயப் பேரரசு சிறிது சிறிதாகச் சீர்குலைவதற்கு வழிவகுத்து வெற்றிபெற்ருர் அவர். எனவே, பேரரசர் ஔரங்கசீப் தக்காணத்தில் மண்ணைக் கௌவித் தோல்வி அடைந்ததில் சிறிதும் வியப்பே இல்லை. S. J. ஓவன் என்பாரும் இதே கருத்தை வலியுறுத்துகிருர். மேலும், இதற்கு ஔரங்கசீபே காரணம் என்கிருர்.[1]

10. ஔரங்கசீபின் இரண்டாம் மகன் இளவரசர் அக்பர், தந்தையை எதிர்த்துப் புரட்சிக் கொடியை உயர்த்தி, மராத்தியர் இராஜபுத்திரர் ஆகியோருடன் சேர்ந்து கொண்டு, எதிரிகளுக்கு நல்லாதரவு அளித்ததும் ஔரங்கசீபை எதிர்த்துப்

[1] 'Thus the establishment of Shivaji's power which must otherwise have been crushed in its early stage was indirectly at least not a little due to Aurangzeb himself'— S. J. Owen, 'The Fall of the Mughal Empire', p. 58.

போராடியவர்களுக்குப் புதிய தெம்பையும் தெளிவையும் அளித்தது.

**சிவாஜியும் நெப்போலியனும்:** சிவாஜியைச் சில அறிஞர்கள் ஹானிபலுடனும் அலெக்சாந்தருடனும் நெப்போலியனுடனும் கஸ்டவஸ் அடல்பஸ் (Gustavus Adolphus) உடனும் ஜார்ஜ் வாஷிங்டனுடனும் ஒப்புநோக்கத் தக்கவர் என்று கருதுகின்றனர்.[1] ஆனால் அடிப்படை 'வித்தியாசங்கள்' இருப்பதை நாம் மறந்துவிடலாகாது. வாஷிங்டனின் போராட்டம் ஓர் இயக்கமாக மாறியது ஒருபுறமிருக்க; வரிச்சுமைகளையும், இரண்டாம் ஜார்ஜ், மூன்றாம் ஜார்ஜ், பிரிட்டிஷ் குடியேற்ற நாட்டு ஆட்சி ஆகியவற்றின் அநீதிகளையும் எதிர்த்து, அவ்வநீதிகள் அடுக்கடுக்காக இழைக்கப்பட்டபின் எழுந்த அரசியல் சட்டப்போராட்டமாகும் அது. ஆனால், இந்திய வீரரோ, ஔரங்கசீப் ஆட்சிக்கு வருவதற்குப் பல ஆண்டுகளுக்கு முன்பே இயக்கமாகவோ, தனியேயோ எழுச்சியுற்றார் என்பதை நாம் முன்னமேயே பார்த்துவிட்டோம். கார்த்தேஜின் ஹானிபல் கொள்ளைகளில் ஈடுபடவில்லை என்பதை நாம் மறந்துவிடலாகாது. நம் வீரரோ, டில்லிக்கோ ஆக்ராவுக்கோ படைகளைத் திரட்டிச் சென்று, ஹானிபல் ஆல்ப்ஸ் மலையைக் கடந்து சென்றது போன்று பேரரசரைக் குகைக்குள்ளேயே தாக்கியதில்லை. நெப்போலியனால் ஆங்கிலேயர்களைத் தோற்கடிக்க முடியவில்லை. அவரது திட்டம் முற்றும் தோல்வியுற்றது. ஆனால், சிவாஜி முகலாயப் பேரரசு வெற்றிகரமாகச் சரிவதற்கும், குலைவதற்கும், விழுவதற்கும் வழிவகுத்தார் என்பதை நாம் நினைவில் கொள்ளவேண்டும். அதே நேரத்தில், எளிய மக்களின் உறுப்புகளைக் களைந்தும் அவர்களைச் சித்திரவதை செய்தும் பொருளையும் பணத்தையும் கசக்கிப் பிழிந்தார் என்பதையும் மறைத்தலாகாது.[2] தவிர்க்கப்படவேண்டிய கொலை நிகழ்ச்சிகளும் நிகழ்ந்துள்ளன. எடுத்துக்காட்டு: சந்திரராவ், அம்ஜல், கோர்படே குடும்பத்தினர் ஆகியோர்.

**ஒளி மங்காத இடம்:** எனினும், மொத்தத்தில் அவர் இந்திய வரலாற்றில் ஒளிமங்காத இடத்தைப் பெற்றுள்ளார் என்பதை ஏற்கத்தான் வேண்டும். (அ) தனி மனிதராக

[1] Sardesai, Sarkar, Kincaid & others.

[2] "The charge of cold blooded cruelty against Shivaji cannot be easily dismissed; torture and mutilation of the extremities were employed to extort money from the people......Killed Baji Ghorpade and many other members of his family — Prof. R. Sathianathier - History of India, Vol. II, p. 423.

உயரிய குணப்பண்புகள் பெற்றவர். (ஆ) இந்து மதத்தில் ஆழ்ந்த பற்றுடையவர். (இ) இந்து மதக் காவலர்—புத்துணர்ச்சி அளித்தவர். (ஈ) சிறந்த போர் ஆற்றல் மிக்கவர். (உ) அரசாளத் தகுதி பெற்றுப் புதிய நாட்டை உருவாக்கி ஆட்சி புரிந்தவர்.

**இவர் கையாண்ட வழிகள் :** (1) இந்துக்களின்—மராத்தியர்களின் உணர்ச்சிகளைத் தட்டி எழுப்பியது, (2) பலவீனமான தக்காண சுல்தான்களை அடக்கி ஒடுக்கியது. எனினும், சிவாஜியின் அரசு நீடிக்கவில்லை என்றே கூறவேண்டும். மூன்றுவது பானிப்பட்டு யுத்தம்வரை அது நீடித்தது உண்மைதான். எனினும், சிவாஜி காலத்து வலிமையும் பொலிவும் இல்லை. சர்க்காரின் பொருத்தமான கூற்றுடன் இதனை முடிப்போம்: 'நவீன காலத்தில் வேறு எந்த இந்துவும் இப்படிப்பட்ட ஆக்கமான அறிவாற்றலைக் காண்பித்ததில்லை. தம் உதாரணத்தின்மூலம் இந்து இனம் ஓர் அரசை உருவாக்க முடியும்; தேசத்தை அமைக்க முடியும்; எதிரிகளைத் தோற்கடிக்க முடியும் என்பதை நிரூபித்துவிட்டார். அவர்களே தங்கள் பாதுகாப்பை ஏற்படுத்திக் கொள்ளமுடியும்; அவர்களே இலக்கியத்தையும் கலையையும் வணிகத்தையும் தொழிலையும் பாதுகாக்க முடியும்; வளர்க்க முடியும். அவர்கள் கடற்படையையும், வணிகக் கப்பல்களையும் அமைத்துக் கொள்ளவும் முடியும் என்பதையும் நிரூபித்துவிட்டார். நவீன இந்துக்கள் அவர்களின் முழு வளர்ச்சிக்கு எழமுடியும் என்பதையும் அவர் கற்றுக்கொடுத்தார்.'[1]

[1] J. N. Sarkar—A Short History of Aurangzeb. p. 240.




சிவாஜி காலமானபோது மராத்தியர்களின் ஆதிக்கம் தக்காணத்தில் பரவியிருந்த நிலையை எடுத்துக் காட்டும் படம்.

# 12. ஔரங்கசீபும் தக்காணமும்—பீஜப்பூர்

1657ஆம் ஆண்டில் இளவரசராயிருந்த ஔரங்கசீப் வட இந்தியாவிற்குத் திரும்பிச்செல்ல நேர்ந்தது. தக்காணத்தின் இரு முக்கிய அரசுகளுள் ஒன்ருன பீஜப்பூர் தாரா ஷுக்கோவின் நல்லாதரவு மூலமாகவும் மத்தியஸ்தத்திஞலும் ஒரு கோடி ரூபாய் போர் நட்டஈடு அளித்து, ஷாஜஹானின் பேராதிக்கத்தை ஏற்றுக் கொண்டது. பரேண்டா, கல்யாணி, பீடார் ஆகிய கோட்டைகளைப் பீஜப்பூர் அரசு பேரரசுக்கு விட்டுக் கொடுப்பதாக வாக்களித்திருந்தது. ஆனால், அது வாக்குறுதிகளைக் காப்பாற்றத் தவறவே, வாரிசுரிமைப் போருக்குச் சற்றுமுன்பு ஷாஜஹான் மீர் ஜும்லாவைப் பீஜப்பூர் சுல்தானிடம் உடன்படிக்கைகளை நிறைவேற்ற வற்புறுத்துமாறு அனுப்பியிருந்தார். இதற்கிடையில், வடக்கே வாரிசுரிமைப் போர் மூண்டதையும், பீஜப்பூர் அரசருக்கு உட்பட்ட கோட்டைகள் சிலவற்றைச் சிவாஜி பிடித்துக்கொள்ளவே, அவரைக் கட்டுப்படுத்த அனுப்பப்பட்ட அப்சல் கான் படுகொலை செய்யப்பட்டதையும் நாம் முன்னரே பார்த்தோம்.



ஔரங்கசீபின் அரசியல் எதிரி
மராத்திய மண்டலத் தலைவர் சிவாஜி

**பீஜப்பூர்-முகலாயர் தொடர்பு:** ஆனால், ஔரங்கசீப் பேரரசராக உயர்ந்ததும், சிவாஜியுடன் தனக்கு முன்பிருந்த பகைமை

நிலையை மறந்து, அவருக்குப் பொன், பொருள், நிலம் மற்றும் யாவற்றையும் உதவியாக அளித்து, பீஜப்பூர் அரசு சிவாஜியின் தோள்களைத் தட்டிக்கொடுத்தது. இதுவே இறுதியில் அவ்வரசுக்கு ஆபத்தாகவும் முடிந்தது. 1665-ல் ஜெய்சிங் புரந்தரை வெற்றி கொள்ளத் தெற்கே வந்த பொழுதுதான், பீஜப்பூர் சிவாஜியை முழுக்க முழுக்க ஆதரித்துவந்தது என்பதை அறிந்தார். சிவாஜி பிறகு வசூலித்த 'சௌத்' என்னும் வரியைப் பீஜப்பூர் அரசினர் ஆண்டுதோறும் கையூட்டுப் போலக் கொடுத்து, தம் ராஜ்ஜியத்தின் அமைதியைக் காக்கப் புதியதோர் வழியைப் பின்பற்றினர். எனவே, அச் சூழ்நிலையில் பீஜப்பூரின்மீது முகலாயப் பேரரசு தாக்குதலைத் தொடர இரு காரணங்கள் இருந்தன: (1) பீஜப்பூர் வாக்குறுதிகளை மீறிற்று. (2) பேரரசின் அமைதியைக் குலைக்கக் கையூட்டு அளித்து, மராத்தியர்களுக்கு உடந்தையாக இருந்தது. ஆனால், பீஜப்பூருக்கு எதிராக ஜெய்சிங் படையெடுத்தால், 2,000 குதிரை வீரர்களையும், 7,000 காலாட்படை வீரர்களையும் தருவதாகச் சிவாஜி வாக்குறுதி யளித்தாரெனக் கூறுகிறார் பேராசிரியர் சர்க்கார். எப்பொழுதும் போலவே முகலாயர்களும் லஞ்சம் கொடுத்து எதிரிகளை விலைக்கு வாங்கினர். பீஜப்பூரின் முல்லா அஹமத் என்னும் அராபியர் விலைக்கு வாங்கப்பட்டார். பின்னர், இவர் ஜெய்சிங்கின்கீழ்ப் பணியாற்ற ஒப்புக்கொண்டார் (1665). அடுத்து, ஜெய்சிங் பீஜப்பூரைத் தாக்கியபோது, கோல்கொண்டாவை ஒதுங்கி இருக்குமாறு வேண்டிக்கொண்டார்.

பீஜப்பூரை நோக்கி 40,000 முகலாயத் துருப்புகள் அனுப்பப்பட்டன. நேத்தாஜி பால்கரின் தலைமையின்கீழ்ச் சென்ற வேறு 7,000 மராத்தியக் காலாட் படைகளும் முகலாயப் படைகளுடன் சேர்ந்துகொண்டன. இவை கட்டாவ், மங்களவீடு, தத்துவாடா, பால்டன் ஆகிய எல்லாக் கோட்டைகளையும் நொடி நேரத்தில் கைப்பற்றின. 1665ஆம் ஆண்டு டிசம்பர் 25-ல் முகலாயத் துருப்புகள் திலேர்கானின் தலைமையின்கீழ்ச் சென்றன. இத் துருப்புகளுடன் சிவாஜியும் பீஜப்பூரை எதிர்த்துச் சென்றார். அப்பொழுது பீஜப்பூரின் படைகளுக்குத் தலைமை தாங்கி நடத்தியவர்கள், சிவாஜியின் மாற்றாந்தாய் மகன் வெங்காஜியும், கல்யாணியின் ஜாதவராவ் முதலியோருமாவர். இவர்களை எதிர்த்தே சிவாஜி போரிட்டார் என்பதை நாம் இங்குக் கூர்மையாக உற்றுநோக்க வேண்டும்.

1665 டிசம்பரில் பீஜப்பூருக்கு 20 கி.மீ.க்கு அருகிலேயே பேரரசின் படைகள் வந்திருந்துங்கூட, ஒன்றும் செய்ய இயல வில்லை. ஆப்கானியத் தலைவர் சிக்கந்தரின் துணை வலிமையை யும் சர்ஜா கானின் படை வலிமையையும் ஜெய்சிங் கண்டு வியந்து பிரமித்து, இன்னது செய்வதென்று ஒன்றும் புரியாமல் இருந்தார். தமக்கு வரவேண்டிய உதவிகளைப் பீஜப்பூர்ப் படைகள் தடுத்து நிறுத்தி இருப்பதையும் அவர் கண்டார். எதிர்பாராத விதத்தில் சிவாஜிக்கும் ,தோல்வி ஏற்பட்டது. இதற்கிடையில், சிவாஜி பன்ஹலாக் கோட்டையை முற்றுகை யிட முயன்றும் அவரால் வெற்றிபெற முடியவில்லை. அவருடைய 1000 வீரர்கள் கொல்லப்பட்டனர். சிவாஜியின் சேவையி லிருந்த நேத்தாஜி பால்கர் என்ற தலைவர் வேலையைவிட்டு அகன்று முகலாயக் கட்சியில் சேர்ந்துவிட்டார். ஔரங்கசீபின் பிரதம தளபதி ஜெய்சிங், நேத்தாஜி, பஹாலுல் கான் ஆகிய முகலாயத் தளபதிகள் சிக்கந்தர், சர்ஜாகான் ஆகிய இரு பீஜப் பூரர்களின் கூட்டுச்சேனையை எதிர்த்துப் பீடார், கல்யாணி மாவட்டங்களில் மூன்று போர்களில் ஈடுபடுமாறு நேரிட்டது. பன்ஹலா என்னுமிடத்தில் தோல்வி கண்டார் சிவாஜி. இதற் குப் பிறகுதான் அவர் ஆக்ராவுக்குச் சென்றார் என்பதை நாம் இங்கு மீண்டும் நினைவில் வைக்கவேண்டும்.

சிவாஜியை ஆக்ராவுக்கு அனுப்பிய வரை, ஜெய்சிங்கிற்கும் ஔரங்கசீபிற்கும் பாதி வெற்றி கிட்டியது. ஆனால், 1665-லிருந்து இரண்டு ஆண்டுகளாகப் பேரரசின் படைகள் போரிட்டும், பீஜப்பூர் இராஜ்ஜியத்தை அவற்றால் பணிய வைக்க முடியவில்லை. ஜெய்சிங்கின் பீஜப்பூர்ப் படை யெடுப்பு ஒரு மாபெரும் இராணுவத் தோல்வியே! ஓர் அங்குல இடத்தைக் கூடப் பிடிக்க முடியவில்லை; கோட்டையின் ஒரு கல்லையும் கைப்பற்ற முடியவில்லை; போர் நட்டஈடாக ஒரு பைசாவும் கிடைக்கவில்லை. இந்த இராணுவ முஸ்தீப்பு, நிதி யின் அடிப்படையில் பார்த்தால், பெரும் கேட்டையே விளைத் தது. பெரும் சீற்றமடைந்த பேரரசர் ஔரங்கசீப் ஜெய்சிங் கைத் தக்காணத்திலிருந்து உடனே திரும்பிவருமாறு அவசர மாக ஆணை பிறப்பித்தார்; ஜெய்சிங் இருந்த இடத்தில், ஜஸ்வந்த் சிங்கையும், தம் மைந்தர் முஅஜ்ஜத்தையும் நியமித் தார். ஆனால், ஜெய்சிங் ஜஸ்வந்த் சிங்கைவிட ஆயிரம் மடங்கு சிறந்தவர் என்பதை இவர் இறந்த பின்னர்த்தான் ஔரங்கசீப் உணர்ந்தார். மனமுடைந்த ஜெய்சிங், வட இந்தியா திரும்பும்போது, புர்ஹான்பூரில் 1667ஆம் ஆண்டு ஜூலை 2ஆம் தேதி இறந்தார்.

**ஜெய்சிங்கின் தன்னலமற்ற தியாகம் :** ஜெய்சிங்கின் தன்னல மற்ற சேவையை ஜாதுநாத் சர்க்கார் புகழ்ந்து நற்சான்றிதழ் அளித்துள்ளார்: 'ஜெய்சிங்கின் வளர்ச்சி, மங்காத சிறப்புமிகு ஆற்றல் பெற்றது. அவர் பன்னிரண்டு வயதுடைய அனுதை இளைஞனுக முகலாய இராணுவத்தில் (1617ஆம் ஆண்டில்) சேர்ந்தார். அன்றிலிருந்து பேரரசின் கொடியின்கீழ், பேரர சின் எல்லாப் பகுதிகளிலும், மத்திய ஆசியாவின் பால்கி லிருந்து பீஜப்பூர் வரை, மேற்கே காண்டஹாரிலிருந்து கிழக்கே மாங்கீர் வரை அவர் பணியாற்றியுள்ளார்...இராஜதந்திரத்தில் போர்க்கள வெற்றிகளை மிகைக்கும் அளவுக்குச் சாதனைகளை இயற்றினுர். ஏதாவது கடினமான அல்லது நாசூக்கான வேலை களைச் செய்யவேண்டுமேயானுல், பேரரசர் ஜெய்சிங்கைத் தாம் அணுகுவது வழக்கம். இணையற்ற இராஜதந்திரமும், பொறுமையும் மிக்க மனிதர்; முஸ்லிம்களின் பழக்க வழக்கங் களையும் மரியாதைகளையும் அறிந்த வல்லுநர்; உருது மொழி மட்டுமன்றி, ராஜபுத்தானி, துருக்கி, பாரசீக மொழிகளிலும் வல்லுநராயிலங்கினுர். ஆப்கானிய, துருக்கிய, இராஜபுத்திர, இந்துஸ்தானியக் கூட்டு இராணுவத்தின் இலட்சியத் தலைவர்; டில்லிப் பேரரசின் பிறைக் கொடியைப் பின்பற்றினுர். அவரது அறிவுக் கூர்மையும், அரசியல் தந்திரமும், அவரது மென்மை யான மொழியும், நிதான நோக்குடைய கொள்கையும், இராஜபுத்திரக் குணங்களென நாம் கருதும் நீக்குப் போக்கற்ற துணிச்சல், வெளிப்படையான தன்மை, தந்திரமறியாத அடக்கம், தாராள மனப்பான்மை ஆகிய குணங்களுக்கு நேர் மாருக இருந்தன.'

**பீஜப்பூரைத் தாக்கக் காரணங்கள் :** 1680ஆம் ஆண்டிற்குப் பிறகு பீஜப்பூர் அரச விவகாரங்களைப் பொறுத்தவரை ஔரங்க சீப் முற்றிலும் மாருன கொள்கையைப் பின்பற்றலானுர். ஜெய் சிங் இறந்தபின் சுமார் 10ஆண்டுகள் வரை, அதே தாக்குதல்—முற்றுகை ஆகிய தவருன கொள்கைகளையே பின்பற்றினுலும், ஏற்ற காரணங்கள் சில ஔரங்கசீபிற்கு இருக்கத்தான் செய்தன.

பஹ்மினிய அரசு சீர்குலைந்து பீஜப்பூர் தனி அரசாகப் பிளவுபட்ட பின்பும், ஐந்து அரசுகளுள் ஒன்ருன பீஜப்பூர் அர சிலும் பழையபடியே ஆப்கானியர்கள், குடியேறிய அபிசீனியர் கள், அரேபியர்கள் ஆகியோரிடையே பதவிப் போட்டியும், செல்வாக்குப் பெற்ற ஒவ்வொரு குடும்பத்தினரும் நிலப்பிரபுத்

துவ முறையைத் தோற்றுவிப்பதில் ஈடுபட்டிருப்பதுமாகிய எல்லாம் சேர்ந்து பீஜப்பூர் அரசைச் சீர்குலைத்து வந்தன. இவையெல்லாம் போதாவென்று, சிகரமாக அமைந்தது பீஜப் பூரைச் சிவாஜி சீர்குலையச் செய்த முயற்சிகள். எனவே, மொத்தத்தில் பீஜப்பூர் அரசில் வாழ்ந்த முஸ்லிம் இந்து சமயத் தினர் அனைவருக்கும் தங்கள் அரசின்மீது பற்று இருந் திருக்குமா என்பது ஐயமே.

ஆனால், அந் நாட்டைச் சில அரசர்கள் தங்கள் முயற்சி களால் ஆவனவெல்லாம் செய்து தகுதியுடைய அரசாக மாற்றிவிட முயன்றனர். ஆயினும், பலனில்லாமற் போயிற்று. ஔரங்கசீபின் பிரதமத் தளபதி ஜெய்சிங் தெற்கிலிருந்தபோது முஹம்மதலீ 'இரண்டாம் ஆதில் ஷா' என்னும் பட்டத்துடன் ஆட்சி புரிந்து வந்தார் (1661—1672). இவரது ஆட்சியில் மொத்தமாக 7 கோடியே 84 லட்சம் ரூபாய் ஆண்டு ஒன்றுக்கு அவருக்கு வருமானமாகக் கிடைத்து வந்தது. தமிழகத்திலும், கர்நாடகத்தின் கிழக்கு மேற்குப் பகுதிகளிலும் பல ஜமீன்தார் களும் அரசர்களும் பீஜப்பூர் மன்னருக்கு உட்பட்டுக் கப்பம் செலுத்தி வந்தனர். அப்துல் முஹம்மத் போன்ற அமைச்சர் கள் இவ் வரசின் வருவாயும் பரப்பும் பெருகுவதற்குக் காரண மாக இருந்தனர். ஆனால், துரதிருஷ்டவசமாக இங்கும் பிற அரசுகளிலும் இளம் பிள்ளைகள் பலர் அரசர்களாக ஆட்சியில் அமர்ந்திருந்ததையும், அவர்களுக்குத் துணையாக அமைச்சர் கள் கோல்கொண்டு அரசாட்சி செய்ததையும் பார்க்கிறோம். இவ்வாறு, 1672ஆம் ஆண்டிலிருந்து 1675ஆம் ஆண்டு வரை யில் நிகழ்ந்து வந்தது. இரண்டாம் ஆதில் ஷா இறந்தபின், சிக்கந்தர் என்னும் 4 வயதுடைய இளவரசனைக் கவாஸ் கான் (Khawas Khan) என்னும் அபிசீனியத் தலைவர் ஆட்சியில் அமர்த்தவே, இவரை எதிர்த்து அப்துல் முஹம்மத் என்னும் அமைச்சர் ஆட்சியை விட்டு அகன்றார். அப்துல் கரீம் என்னும் இயற்பெயருடைய மற்றொரு பிரபு 'இரண்டாம் பஹ்லுல் கான்' என்னும் பட்டப் பெயருடன் போட்டியாக முளைத்தார். பீஜப்பூர் அரசை உண்மையில் வஜீர்களே (Wazirs) ஆட்சி புரியலாயினர். பஹ்லுல் கானுக்கும் கவாஸ் கானுக்கும் இடையே பலத்த பலப்பரீட்சை நிலவியது. கவாஸ் கான் 1675ஆம் ஆண்டிலிருந்து 4 ஆண்டுகளுக்குப் பிரதமராக இருந்த நேரத்தில், பஹ்லுல் கவாஸ்கானை விருந்துக்கழைத்து, நட்புப் பாராட்டுவது போன்று பாசாங்கு செய்து, அவருக்கு மதுவைக் கொடுத்து மயக்கி, அவரைக் கைது செய்து, தம்மையே பிரதம

ராக உயர்த்திக் கொண்டார். இச் சூழ்நிலையில் சிவாஜி பீஜப்பூரின் கோட்டைகள் சிலவற்றைப் பிடித்துக் கொண்டார். இச் சமயத்தை நழுவ விடாது, முகலாய ஆளுநரான தளபதி பஹதூர் கானின் படைகள் கோல்கொண்டா, சிவாஜி ஆகியோருடன் இரகசிய ஒப்பந்தங்களை ஏற்படுத்திக் கொண்டதாக ஔரங்கசீபின் விசுவாசமுள்ள பிரதிநிதி திலேர் கான் பேரரசருக்குத் தெரிவித்தார். அவர் பீஜப்பூரைத் தாக்க இதுவும் ஒரு காரணமாகும். பேரரசரது ஒப்புதலை வாங்கிப் பீஜப்பூரைத் தாக்க அவர் திட்டங்களைத் தீட்டலானார்.

**பஹதூர் கானின் வஞ்சகம்:** பஹதூர் கானின் வஞ்சகத்தை அறிந்த பேரரசர் அவரைத் திரும்ப அழைத்துக்கொண்டார். ஆனால், ஜெய்சிங்குக்குப் பின்னர்ப் பேரரசர் கல்யாணி, பீடார், ஷோலாப்பூர், நவதுர்க், குல்பர்கா ஆகிய பகுதிகளைப் படிப்படியாக உடன்படிக்கை மூலமாகப் பீஜப்பூரிடமிருந்து மீட்டுக்கொண்டு பேரரசிற்குள் இணைத்துக்கொண்டார். ஆனால், பீஜப்பூரில் கோல்கொண்டா இராணுவத்தின் உதவியுடன் சித்தீ மசூத் இளவரசர் சார்பான பிரதிநிதியாக அமர்த்தப்பட்டிருந்தார். இவர் சிவாஜியுடன் தனியாக ஓர் ஒப்பந்தம் செய்து கொள்ளவே, திலேர் கான் பழைய குல்பர்கா உடன்படிக்கையை மசூத் மீறியதாகக் குற்றம் சாட்டினார். எனவே, மீண்டும் முகலாயப் படைகள் பீஜப்பூரை நோக்கியும் சிவாஜியை நோக்கியும் இருமுனைத் தாக்குதல்களைத் தொடங்கின. ஔரங்கசீபின் நோக்கம் பீஜப்பூர் அரசைப் பணிய வைப்பதுதான். ஆயினும், பீஜப்பூர் அரசர் ஷீஆ பிரிவைச் சார்ந்தவர் என்பதை அறிந்தும் அவருடன் திருமண உறவை நாடினாரென்றும்,(அதாவது, தம் மைந்தன் ஆஜத்துக்கு, பீஜப்பூர் சுல்தானின் சகோதரி ஷஹர்பான் என்பவளை மணமகளாக்கிக் கொள்ள ஔரங்கசீப் ஆசைப்பட்டாரென்றும்)இதுவே பீஜப்பூர் தாக்கப்படுவதற்கு முக்கிய காரணமாக இருந்ததெனவும் சிலர் சுட்டிக் காட்டுகின்றனர். இது உண்மையாயின், ஔரங்கசீப் ஷீஆக்களை வெறுத்தார் என்ற குற்றச்சாட்டுத் தவறாகி விடுகிறது. ஆகவே, அவர் ஷீஆக்களை வெறுக்கவும் இல்லை; அதே நேரத்தில் திருமண உறவை ஏற்படுத்திக் கொள்ள அவர் விழைந்ததும் உண்மைதான்; அத் திருமணம் பின்னர் நடைபெற்றதும் உண்மைதான். ஆனால், முகலாயப் படைகள் பீஜப்பூர்மீது பாய்ந்ததற்கு மிக முக்கியமான காரணம் அவ் வரசு சிவாஜியின் வளர்ச்சிக்கு உதவி புரிந்து வந்ததைத் தடுப்பதற்காகவேதான் என்பதை நாம் நன்றாக உணரவேண்டும். இது முக்கிய அரசியல் காரணமாகும்.

இப்பொழுது பீஜப்பூர்ப் படைகளும் மராத்தியப் படைகளும் ஒன்று சேர்ந்து கொண்டன. முன்பு பகைமை கொண்டாடிய இவ் வெதிரிப் படைகள் இப்பொழுது ஒன்று கூடுவானேன்? ஆகவே, சிவாஜியின் கர்நாடகப் படையெடுப்பிற்குப் பீஜப்பூர் உதவி புரிந்தமைக்காகவும், அதற்கு முன்பும் கூட உதவிகள் நல்கி வந்தமைக்காகவும் தக்க தண்டனையை வழங்க வேண்டும் என்பதற்காகவே ஔரங்கசீப் படையெடுப்பை நிகழ்த்தினர். முகலாயர்கள் பீஜப்பூருக்கு 80 கி.மீ.க்கு அருகிலுள்ள மங்கலவீடு எனப்படும் இடத்தைத் தாக்கினர்கள். பீஜப்பூர்-சிவாஜியின் கூட்டுப் படைகளின் எண்ணிக்கை 30,000க்குக் குறையாமல் பெருகி இருந்தது. நாட்டைக் காக்க வேண்டிய பீஜப்பூர் - மராத்தியப் படைகளே முகலாயர்களை விரட்டியடிக்கும் உணர்ச்சியில், நர்மதை ஆற்றுக்கு வடக்கே உள்ள இடங்களைக் கொள்ளையடித்தும், எரித்துச் சாம்பலாக்கியும், எதிரி வீரர்களைக் கொன்று குவித்தும் வந்தன. திலேர் கானின் படைகள் முன்னேற முடியாமல் திண்டாடிய போது, ஷா ஆலம் (இளவரசர் முஅஜ்ஜம்) தம் தந்தைக்கு அவசரச் செய்தியை அனுப்பியதனுல் சீற்றம் கொண்ட ஔரங்கசீப் திலேர் கானைத் திருப்பி அழைத்துக் கொண்டார். 1680ஆம் ஆண்டிற்குப் பிறகு ஔரங்கசீபின் கொள்கைகளில் சற்று மாற்றங்கள் நிகழ்ந்தன.

**மக்தூமுக்கு ஔரங்கசீபின் கடிதம்:** சிவாஜி இறந்தபின் சாம்பாஜி ஆட்சிக்கு வந்தார். இதற்கு முன் ஔரங்கசீபின் விருப்பம் நிறைவேற்றப்பட்டது. இளவரசர் ஆஜத்துக்கு ஷஹர்பான் திருமணம் செய்விக்கப்பட்டிருந்தாள். திருமண உறவிற்குப் பிறகும் ஔரங்கசீபுக்கும் பீஜப்பூருக்கும் இடையே அரசியல் பகைமை நீடித்தது. பீஜப்பூர் சுல்தானுக்குச் சாம்பாஜியை அடக்குமாறும், அவர் இழந்து விட்டிருந்த கோட்டைகளை முகலாயத் தளபதிகளின் துணைகொண்டு மீட்டுக் கொள்ளலாம் என்றும் ஔரங்கசீப் பீஜப்பூர்த் தளபதி சையத் மக்தூம் (Syed Maghdoom) என்னும் இயற் பெயருடைய ஷர்ஜா கானுக்குக் (Sharza Khan) கடிதம் ஒன்றை எழுதினர். ஆனல், முன்பு சிவாஜிக்கு உதவியவண்ணமே சாம்பாஜிக்கும் பீஜப்பூர் தொடர்ந்து உதவி வருவதை ஔரங்கசீப் திட்டவட்டமாகத் தெரிந்து கொண்டார்; சீற்றமுற்ருர். எனவே, திருமண உறவையும் மறந்து, பீஜப்பூர்மீது தாக்குமாறு பீஜப்பூர் சுல்தானின் மருமகனுகிய தம் மகன் இளவரசர் ஆஜத்தை (Azam) 1682ஆம் ஆண்டில் பெரும் படையுடன் அனுப்பினர். மைத்துனர் மீது மைத்துனர் படையெடுத்துச் சென்ருர்!

**போரின் போக்கு :** முகலாயப் படைகள் பீஜப்பூரிலிருந்து 240 கி.மீ.க்கருகிலுள்ள தாரூர் என்னும் இடத்துக்கருகில் முகா மிட்டிருக்கையில், ஔரங்கசீப் பீஜப்பூர் மன்னருக்குக் கடிதம் ஒன்று எழுதினுர் : மராத்திய வீரர் சாம்பாஜிக்கு உதவி செய் வதை நிறுத்துமாறும், உடன்படிக்கையின்படி 6,000 துருப்பு களைத் தம் தளபதிகளுக்குத் துணைசெல்ல அனுப்புமாறும் அக் கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார். இளங்கன்று பயமறியாது என் பதற்கு ஏற்ப, சிக்கந்தர் பதில் கடிதம் எழுதினுர். இவர் துணிச் சலைப் பாராட்ட வேண்டும். முகலாயப் பேரரசர்கள் இதுகாறும் பீஜப்பூரிலிருந்து பெற்றுவந்த கப்பத் தொகையைத் திருப்பித் தந்துவிட வேண்டுமென்றும், தம் எல்லையிலிருந்து பேரரசின் படைகளைத் திரும்ப அழைத்துக்கொள்ள வேண்டுமென்றும், முடியுமானுல் தம் எல்லைகள் வழியாக முகலாயர்கள் சாம்பா ஜியை எதிர்த்துப் படைகளை நடத்திச் செல்லலாம் என்றும், சிவாஜியும் சாம்பாஜியும் பிடித்துக் கொண்ட கோட்டைகளை முகலாயர்களே மீட்டுக்கொடுக்க வேண்டுமென்றும் ஔரங்க சீபுக்குப் பீஜப்பூர் அரசர் சிக்கந்தர் பதில் எழுதினுர். இவ்வாறு பதில் எழுத முக்கியமான காரணம், கோல்கொண்டாவின் ஆத ரவும் துணையும் பீஜப்பூருக்குக் கிடைக்குமென்னும் நம்பிக்கை இருந்தது. பீஜப்பூர் மன்னரின் துணிச்சல்மிக்க இப் பதில் பெல்ஜியர்கள் முதல் உலகப் போரின்போது கைசருக்கு (Kaiser) அளித்த பதிலுடன் ஒப்பிடத்தக்கது என்று பேராசிரி யர் சர்மா கருதுகிருர்.[1]

இதற்கிடையில், சாம்பாஜியின் படைகளும் பீஜப்பூரின் துணைக்கு வந்திறங்கின. 1685ஆம் ஆண்டு பீஜப்பூர் முற்றுகை தொடங்கியது. ருஹுல்லா கான், காசிம் கான் ஆகியோரின் படைகள் பீஜப்பூருக்கு வடக்கே தாக்குதலைத் தொடங்கின. இளவரசர் ஆஜமும் தெற்குப் பக்கத்தில் படையிறங்கிப் பிரதமத் தளபதிப் பொறுப்பை ஏற்றுத் தாக்குதலைத் தொடர்ந்தார். பீஜப்பூரின் அவல நிலையைக் கண்டு சித்தீ மசூதின் படைகள், கோல்கொண்டாவின் படைகள் எல்லாம் பீஜப்பூரை நோக்கி விரைந்தன.

**மற்ருெரு காரணம் :** பீஜப்பூருக்கும் ஷோலாப்பூருக்கும் இடையில் உள்ள இந்தி என்னும் ஊரில் படைகள் நேருக்கு நேர் சந்தித்துக் கொண்டன. இளவரசர் ஆஜம் முன்னேற முடி யாமல் தவித்துக் கொண்டிருக்கையில், ஔரங்கசீப் ஆஜத்தை

[1] S. R. Sharma—'The Mughal Rule in India.'

விடுவிக்கப் படைகளை அனுப்பினார். மேலும், ஆஜத்தின் படைகளுக்கு வேண்டிய உணவுப் பொருள்களையும் அனுப்பிவைத்தார். தளபதி ஃபிரோஸ் ஜங்கின் தலைமையில் துணைப்படை ஒன்றும் சென்றது. இவரது பேராற்றல், வலிமை ஆகியவற்றால் பீரார் படைகள் முறியடிக்கப்பட்டன. ஷா ஆலத்தின் படைகளும் ஹைதராபாதிற்குள் வெற்றிகரமாக நுழைந்தன. 1686ஆம் ஆண்டில் முகலாயர்களின் வெற்றி உறுதியாகிவிடும் போல் தோன்றிற்று. ஆனாலும், பீஜப்பூர் முற்றுகை தொடங்கி 1½ ஆண்டுகள் ஆகியும் போர் நிற்பதாகத் தெரியவில்லை. எனவே, இந்த மந்தமான சூழ்நிலையை மாற்றியமைக்கப் பேரரசர் ஔரங்கசீப் தாமே படைகளுக்குத் தலைமை ஏற்றார். இதற்கு முன்பு வெற்றிகளைக் காணாதவர் அல்லர் ஔரங்கசீப். 1686ஆம் ஆண்டு ஜூன் 14ஆம் தேதி ஷோலாப்பூரை விட்டுப் புறப்பட்ட அன்றிலிருந்தே ஔரங்கசீபின் தலைமையும் தொடங்கிற்று; வெற்றிகளும் உறுதிப்பட்டன. இளவரசர் ஷா ஆலம் மேற்குப் புறத்திலிருந்து தாக்குதலைத் தொடங்கி, ஆஜத்தை விடச் சிறந்த வெற்றிகளைப் பெற முயல, ஔரங்கசீபே பீஜப்பூர் முற்றுகையை நேரே நிகழ்த்தி வைக்கத் தலைமை ஏற்றபோது, பீஜப்பூரின் படைகள் பெரிதும் நடுங்கின. ஆனால், கூடியவரை அழிவைத் தவிர்ப்பதற்காகப் பீஜப்பூர் அரசர் ஔரங்கசீபிற்கு அவசரக் கடிதம் ஒன்றை எழுதினார்: 'தாங்கள் குர்ஆனின் சட்டத்தை நன்கு அறிந்தவர்கள், விசுவாச நம்பிக்கை உடையவர்கள்; குர்ஆன் சொல்லாதவற்றைச் செய்யாதவர்கள். எனவே, நீங்கள் மற்றொரு சகோதர முஸ்லிமுக்கு எதிராக ஏன் போர் தொடுக்கின்றீர்கள் என்பதைத் தாங்கள் விளக்க வேண்டும்'[1] என்று அக் கடிதத்தில் பீஜப்பூர் அரசர் கேள்வி எழுப்பியிருந்தார். பேரரசர் ஔரங்கசீப் திருக்குர்ஆனின் சட்டத்திற்கு மாறாக எதையும் செய்ய மாட்டார் என்பது மறுக்கமுடியாத உண்மைதான்; ஆனால், இஸ்லாமிய சமயமோ, திருமறையோ உண்மையான சமயப் பற்றையும் மனித உணர்வுகளையும் மனிதாபிமான எண்ணங்களையும்தாம் வளர்க்க வேண்டுமென வலியுறுத்துகின்றதே யன்றி, அச் சமயத்தைச் சார்ந்திருப்பவர் என்பதனால் குறுகிய எல்லை கொண்டு போர் தொடுக்கலாகாது என்றோ, தம் கடமைகளை மறந்துவிடவேண்டும் என்றோ அது கூறவில்லை என்பதை மறந்து பீஜப்பூர் மன்னர் மனப்பால் குடித்துவந்தார். இதே பீஜப்பூர் முஸ்லிம் மன்னர் மற்றொரு முஸ்லிம் பேரரசராகிய ஔரங்க

[1] Elliot and Dowson—History of India as told by its own historians Vol. VII.

சீபுக்கு எதிராக, மராத்திய எதிரிகளைப் பயன்படுத்தியது எந்த வகையான இஸ்லாமிய தர்மத்தைச் சேர்ந்ததென்பதையும் உணரவில்லை. எப்படியிருப்பினும், அரசியல் விவகாரங்களைப் பொறுத்த வரையில், ஔரங்கசீப் சமய மாறுபாடுகளின் அடிப்படையில் பாகுபாடு செய்ததாகத் தோன்றவில்லை. எனவே, இப் போர் பீஜப்பூர் மன்னர் ஷீஆப் பிரிவினரைச் சார்ந்திருந்தவர் என்பதனுல் மூண்டது அன்று என்ற கருத்தை நிரூபிப்பதற்காகவும், மன்னர் முஸ்லிமாக இருப்பதனுலேயே தாக்கப்படக்கூடாது என நினைப்பது தவறு என நிரூபிப்பதற் காகவும், பீஜப்பூரைக் கைப்பற்றுவதும் நோக்கமன்று என்று நிரூபிப்பதற்காகவும் உடனடியாக ஔரங்கசீப் பதில் ஒன்றை எழுதினுர்:

**பதிலும் சந்திப்பும்:** 'நீங்கள் கூறிய ஒவ்வொரு வார்த்தையும் உண்மைதான். நான் உங்கள் நாட்டை அபகரிக்க ஆசைப்படவில்லை; ஆனுல், உண்மைச் சமயத்தில் நம்பிக்கை அற்றவரின் உண்மைச் சமயத்தில் நம்பிக்கையற்ற மகன்[1] (Infidel son of the Infidel) உங்கள் அரவணைப்பில் உள்ளார்; உங்களிடம் அடைக்கலம் புகுந்துள்ளார்; அவர் டில்லியின் வாசல்கள் வரை தொல்லைகள் கொடுக்கின்றவர்; இதைப்பற்றி இரவும் பகலும் புகார்கள் வருகின்றன; அவரை என்னிடம் சரணடையச் செய்து விடுங்கள்; அடுத்த நிமிடத்தில் முற்றுகையைக் கைவிட்டுவிடுகிறேன்.' ஆயினும், ஔரங்கசீப் போரில் முயற்சிகளைத் தளர்ச்சி அடையச் செய்யாமல் முற்றுகையை மீண்டும் தொடர்ந்தார். அன்றிலிருந்து ஒரே வாரத்திற்குள் பீஜப்பூர் ஔரங்கசீபின் கரத்துள் வீழ்ந்தது. இதற்குச் சற்று முன்புதான் அப்துல் ரஹூப், ஷர்ஜா கான் ஆகியோரின் தூதுக் கோஷ்டி ஃபிரோஜ் ஜங்கைச் சந்தித்துச் சரண் அடைவதாக ஏற்றுக்கொண்டு பிறகு பேரரசரையும் சந்தித்தது. 1686ஆம் ஆண்டு செப்டம்பர் 12இல் பீஜப்பூரின் 18 வயது அரசர் ஔரங்கசீபினிடம் சரண் அடைந்தார். அதனேடு பீஜப்பூர் அரசும் ஔரங்கசீபின் பேரரசுக்குள் இணைந்தது.

பீஜப்பூர் மன்னர் சிக்கந்தர் ஔரங்கசீபைச் சந்தித்ததும், பேரரசரே சிக்கந்தர்மீது பரிதாபம் கொண்டு, அவருக்குத் தம்

[1] Khafi Khan in 'Munthakhabbul Lubab' in Elliot & Dowson's History of India as told by its own historians, Vol. VII. Also quoted by J. N. Sarkar 'Shivaji and his times.' இவை காஃபீ கானின் வார்த்தைகளாகவும் இருக்கக்கூடும்.

அரசில் உயர்ந்த பதவியையும் 'கான்' என்ற பட்டத்தையும் அளித்து, ஆண்டொன்றுக்கு ஓரிலட்ச ரூபாய் ஓய்வு காலத் தொகையையும் வழங்கினுர்.[1] ஆனால், பீஜப்பூர் அரசர் வெகு காலம் வாழ்ந்திருக்கவில்லை. அவர் தம் 32ஆம் வயதில் இறந்த போது அவரது ஆன்மிக ஆசான், பெரியார் ஷேக் பக்ஷி முல்லாவின் கல்லறைக்கு அருகிலே அடக்கம் செய்யப்பட்டார். மொத்தத்தில், 18ஆம் நூற்றுண்டின் தொடக்கத்தில், ஔரங்கசீப் இறப்பதற்கு முன், பீஜப்பூர் அரசும் அதற்கு உட்பட்ட பகுதிகளும் (தமிழகம் உட்பட) ஔரங்கசீபின் பேரரசில் இணைந்தன.

[1] ஷீஆ வம்சத்தைச் சேர்ந்தவர் என்பதற்காக, பீஜப்பூர் சுல்தானுகிய சிக்கந்தர் என்னும் இளவயதினரை ஔரங்கசீப் கொடுமைப்படுத்தினுரா? இல்லை. பேரரசர் காலம் செல்வதற்கு 7 ஆண்டுகள் முன்பு வரை உயிர் வாழ்ந்த இந்தப் பீஜப்பூர் மாஜி மன்னர் தவருமல் ஒவ்வோராண்டும் ரூ. 1,00,000 வீதம் ஓய்வுகாலத் தொகையைப் பெற்று அனுபவித்தார். அரசியல் காரணமாகவே முகலாய-பீஜப்பூர்ப் பிணக்கும் பூசலும் தோன்றினவன்றி, மத வேற்றுமை அடிப்படையில் அல்ல என்பதற்கு இந்த ஒரு நிகழ்ச்சியே போதுமான சான்ருகும்,

# 13. ஔரங்கசீபும் தக்காணமும்-கோல்கொண்டா

யூசுப் என்பார் 'ஆதில் ஷா' என்னும் பட்டத்துடன் பீஜப்பூர் அரசை ஏற்படுத்தியதைப் போன்று, சுல்தான் குத்புல் முல்க் (Sultan Qutbul Mulk) என்னும் துருக்கியர் கோல் கொண்டா அரசை நிறுவினர். அமீரலீ ஃபரீத் என்பாருக்கும் யூசுப் என்னும் பீஜப்பூரியருக்கும் உட்பகைகளும் போட்டிகளும் தொடங்கிப் போராக முற்றியபோதிலும், கோல்கொண்டாவும் படிப்படியாக வளர்ச்சி பெறலாயிற்று. அப்துல்லா குதுப்ஷா என்பார் 12 வயது பாலகனுக இருந்தபோது 6ஆவது கோல் கொண்டா மன்னராக ஆட்சியில் ஏறினர். இவர் 46 ஆண்டுகள் ஆட்சி புரிந்தார். உண்மையில் இவருடைய தாயார்தாம் அரசு விவகாரங்களைக் கவனித்துவந்தார். ஏனெனில், இவர் குடியிலும், கேளிக்கைகளிலும், சோம்பலிலும் காலத்தைக் கழித்தவர். இவருக்கு வாரிசு இல்லாததனல் இவர் மருமகன் சையத் அஹமத் என்பாரே இவருக்குப் பின் ஆட்சிக்குவந்தார். மீண்டும், சையத் அஹமதுக்குப் பின் அரசு கட்டில் ஏறப் போட்டி தோன்றியபோது கோல்கொண்டாவின் ஆளும் சபை யோர் (Ruling cliche) 1672-ல் அபுல் ஹசன் என்னும் இளைஞனைத் தேர்ந்தெடுத்தனர். அபுல் ஹசன் குதுப்ஷா என் பாரும் அப்துல்லாவைவிடச் சிறந்த மன்னரல்லர். நுண்கலை களில் இவருக்கு ஆர்வம் இருந்தது உண்மை. ஆயினும், அப்துல்லாவைவிடப் படுமோசமான நிலையில் கேளிக்கையில், குடியில் காலத்தைக் கழித்தும், அரச விவகாரங்களைப் பிராமண அமைச்சர்களான மாதண்ணு, அக்கண்ணு என்பவர்களிடம் ஒப்படைத்து விட்டும் காலத்தைக் கழித்தார். தம் பிரதமர் மாதண்ணுவின் ஆலோசனையின் பேரில், சிவாஜி கர்நாடகத் தின்மீது படையெடுப்பைத் தொடங்கியபோது இம் மன்னர் தம் விலையுயர்ந்த ஆபரணங்களை அவருக்களித்து வரவேற்ருர்

என்பதை நாம் முன்னரே பார்த்தோம். பேரரசர் ஔரங்கசீப் கோல்கொண்டாமீது படையெடுக்கக் காரணம் என்ன?

**போர்க் காரணங்கள் :** 1. கோல்கொண்டாவும் பீஜப்பூரைப் போன்று ஒரு தனி நாடாகத்தான் திகழ்ந்துவந்தது. எனினும், உண்மையில் கோல்கொண்டாவும் முகலாயப் பேரரசுக்குப் பீஜப்பூரைப் போன்றே கப்பம் கட்டித்தான் வந்தது. அபுல் ஹசன் 1672ஆம் ஆண்டில் ஆட்சிக்கு வந்ததும் பேரரசுக்குக் கப்பம் கட்டுவதை நிறுத்திவிட்டார். பேரரசர் ஔரங்கசீப் அபுல் ஹசனிடம் மிர்ஜா முஹம்மத் என்னும் அலுவலரை அனுப்பி, அபுல் ஹசனிடம் பெரும் வைரக்கற்கள் இருப்பதைத் தாம் அறிவதாகவும், அவர் அளிக்க வேண்டிய கப்பத் தொகைக்கு ஈடாக அவற்றைக் கொடுக்குமாறும் கடிதம் எழுதினர். ஆனல், அபுல் ஹசனின் பதில் பேரரசருக்குத் திருப்தியை அளிக்கவில்லை.[1] இவ்வுண்மைக்கு மாருக, அபுல் ஹசன் மாதண்ணு, அக்கண்ணு என்னும் அமைச்சர்களை நியமித்திருந்ததனுலேயே ஔரங்கசீப் போரெழுந்து சென்ருர் என்று சில வரலாற்ருசிரியர்கள் கூறுகின்றனர்.[2] இது உண்மையன்று.

2. உண்மையில், கோல்கொண்டாவின் மாதண்ணு சிவாஜியின் கர்நாடகப் படையெடுப்பிற்குத் தம் நல்லாசிகளை மட்டுமன்றி, நிதி உதவியையும் அளித்தது பேரரசருக்கு ஆத்திரத்தை மூட்டத்தான் செய்தது. எனவே, கோல்கொண்டா அரசைத் தாக்கியதற்கு முக்கிய காரணம் கோல்கொண்டா அரசுமீது கொண்டிருந்த ஆக்கிரமிப்பு நோக்கம் எதுவுமில்லை; அல்லது சமய வேறுபாடும் நிச்சயமாகக் காரணம் அன்று; ஆனல், கோல்கொண்டா அரசர் முகலாயப் பேரரசுக்குக்

[1] *குல்பர்காவிலுள்ள மஹானின் கல்லறைக்குத் தாம் 1685-86ல் வருகைதர இருப்பதாகவும், அதற்குள் (ஓராண்டுக்குள்) அபுல் ஹசன் கப்பத் தொகைப் பாக்கி முழுதையும் கொடுத்துத் தீர்த்து விட வேண்டுமென்பதாகவும் ஔரங்கசீப் அபுல் ஹசனுக்கும், அவருடைய உப தளபதியான ஹாஜிப் சஅதத் கான் என்பவருக்கும் தாக்கீது வரைந்தனுப்பினர். முதலில், தம்மிடம் ரொக்கப் பணம் இல்லையென்றும், அதற்கீடாகத் தம்மிடமுள்ள வைரக் கற்களைத் தந்துவிடத் தயார் என்றும் அம் மன்னர் பேரரசருக்குப் பதிலெழுதி விட்டு, அப்பால் மறுத்து, நற்புத்தி போதித்த சஅதத் கானையும் சிறையிலடைத்தார். இது தெரிந்து அவுரங்கசீப் அபுல் ஹசனுக்குக் கடிதம் எழுதி விளக்கம் கேட்க, இம் மன்னர் ஏதேதோ மழுப்ப, பேரரசர் படையெடுக்க நேர்ந்ததென்று கா:பீ கான் தமது நூலில் வரைந்திருப்பதை எலியட் டௌஸன், வால். VII, பக். 323-336ல் மேற்கோள் வழங்கியுள்ளனர்.*

[2] Prof. R. Sathianathier—History of India, Vol. II.

கப்பத் தொகை தர மறுத்து, சிவாஜிக்கு நல்லாதரவு நல்கியது துணைக் காரணமாக அமைந்தது.

3. இதற்கிடையில் ஜாத்தியர்களும், சத்ருமியர்களும், சீக்கியர்களும் எழுச்சியுற்றிருந்தனர். பேரரசுக்கும் அதன் படைகளுக்கும் ஏராளமான பொருள் தேவைப்பட்டது.

4. கோல்கொண்டா மன்னர் சிவாஜிக்கு அளித்ததைப் போன்று தொடர்ந்து சாம்பாஜிக்கும் நேரடி உதவி அளித்த தானது, கப்பம் கட்டிவந்த ஒரு சிற்றரசு நேரடி எதிர்நடவடிக் கைச் செயல்களில் இறங்கியதற்கு ஒப்பாகும்.

5. எல்லாவற்றையும்விடக் கோல்கொண்டா 5 ஆண்டு களுக்கு முன்னதாகவும் தொடர்ந்தும் ஔரங்கசீபுக்கு எதிராகப் பீஜப்பூருக்குப் படைகளை அனுப்பி உதவிவந்தது.

**போர் :** 1685ஆம் ஆண்டு மார்ச் மாதத்தில் போர் தொடங் கிற்று. அடுத்த மாதத் தொடக்கத்தில் இளவரசர் ஆஜத்தை ஹைதராபாதிற்குள் நுழைந்து தாக்குமாறு பேரரசர் ஏவினார். இளவரசர் மால்கட்டுக்கு அருகில் படைகளுடன் நெருங்கிய போது, கோல்கொண்டாப் படைகள் அவரைத் தடுத்து நிறுத் தின. அத் தருணத்தில் தக்காணியர்களின் படை அதிக மாகவே இருந்தது. அதனால், முகலாயப் படைகள் போரிடா மல் காலத்தைக் கழித்துவந்தன. ஆனால், நிலைமையை அறிந்த ஔரங்கசீப், இளவரசரைக் கடிந்து கொள்ளவே, மீண்டும் போர் தொடர்ந்தது. கோல்கொண்டாவின் தளபதி மீர் முஹம்மது இப்ராஹீம் ஹைதராபாத் நகரைக் காப்பாற்றப் போர்க்களத்தை விட்டே ஓடினார்! எனவே, காவல் இல்லாத தலைநகரும் கோட்டையும் அவ் வாண்டில் அக்டோபர் மாதத் தில் விழும் தறுவாயில் இருந்தன. நிலைமையை அறிந்த அபுல் ஹசன் தக்காண அரசப் பிரதிநிதி ஷா ஆலத்திற்குத் தூது கோஷ்டி ஒன்றை அனுப்பினார். கோல்கொண்டா மன்னரின் கருத்தை ஷா ஆலம் அறிந்து, அம் மன்னர் மூன்று நிபந்தனை களை ஏற்றால் மன்னித்து விடலாமென்று தம் தந்தைக்குப் பரிந் துரைத்தார். (1) பேரரசுக்குரிய பழைய கடன்கள் எல்லாவற் றையும் தீர்த்து, போர் நட்டஈட்டுக்காக 1 கோடியே 20 லட்சம் ரூபாய் அளிக்கவேண்டும். (2) ஆண்டொன்றுக்கு 2 லட்சம் ரூபாய் பழையபடி கப்பத் தொகையைத் தொடர்ந்து செலுத்த வேண்டும். (3) மால்கட், சீரம் ஆகிய பகுதிகளைப் பேரரசின் படையினர் முன்னரே வெற்றிகொண்டு விட்டமையால், அவற்றை வைத்துக்கொள்ள அனுமதிக்கப்பட வேண்டும்.

**ஔரங்கசீப் ஷா ஆலத்தைச் சந்தேகித்தல்:** இந் நிபந் தனைகள் பேரரசுக்கு ஒரு விதத்தில் நன்மையைப் பயந்த போதினும், அபுல் ஹசன் பேரரசரின் ஆணைகளுக்கு உட்பட்டு நடப்பதாக யாதொரு நிபந்தனையும் இதில் காணப்படவில்லை. இதற்கிடையில், ஷா ஆலம் (இளவரசர் முஅஜ்ஜம்) முன்பு கையூட்டம் பெற்றதைப் போலவே இப்பொழுதும் கையூட்டம் பெற்றுக்கொண்டு, கோல்கொண்டாவிற்குச் சாதகமாக இருப்ப தற்காகவே இத் திட்டத்தைத் தயாரித்திருக்கிறார் போலும் என்று பேரரசர் உணர்ந்தார். இதற்கு அத்தாட்சியாக ஷா ஆலத்தின் முகாமிற்கு எதிரியின் உளவாளிகளும், அலுவலர் களும் அடிக்கடி வந்துகொண்டிருப்பதும் பேரரசருக்கு அறிவிக் கப்பட்டது.

மீண்டும் ஒருமுறை அபுல் ஹசனுடன் ஷா ஆலமே நேரடிப் பேச்சு வார்த்தையில் ஈடுபட்டுக் கையூட்டம் பெற்றுவந்ததாகச் செய்தி எட்டியபோது, தந்தை தம் மகனைத் தம் முகாமிற்கு அழைத்து விசாரணைக்குப் பின் அது உண்மை என்பதை அறிந்த போது, பேரரசர் ஔரங்கசீப் மகன் என்றும் பாராது ஷா ஆலத்தைக் கைது செய்தார். உலக வரலாற்றில் இதற்கு ஈடான அல்லது இதைப் போன்றதொரு நிகழ்ச்சியைக் காண் பது அரிதிலும் அரிது! பேரரசர் தூய்மையான நல்லெண்ணத் தையும், பக்தியுடைய விசுவாசத்தையுமே போற்றினார் என்ப தற்கு இதுவே போதிய அத்தாட்சி யன்றோ?

## கோல்கொண்டாவின் வீழ்ச்சி

1687ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 28-ந்தேதி ஔரங்கசீபே கோல்கொண்டாவைப் பணியவைக்கும் முயற்சியில் இறங்கி னார். கோல்கொண்டாவிலிருந்து 3 கி.மீ.க்கு அருகிலேயே ஔரங்கசீபின் படைகள் நெருங்கிவிட்டன. கோழையான அபுல் ஹசன் கோட்டைக்குள் ஓடி ஒளிந்துகொண்டார். இக் கோட்டைக்கு 8 வாயில்களும், அதைச் சுற்றி 50 அடி அகலம் கொண்ட பெரும் அகழியும் இருந்தன. கோட்டை ஃபிரோஜ் ஜங்குக்கோ ஆஜத்துக்கோ எளிதில் வீழ்வதாகத் தெரியவில்லை. அப்பொழுது தொடர்ந்து 3 நாட்களுக்கு மழை பெய்தது குதுப் ஷாவுக்குச் சாதகமாக அமைந்தது. தம் நேர் மேற்பார்வை யிலேயே கோட்டையின் முற்றுகையைத் தொடங்கச் செய்தார் ஔரங்கசீப். கோட்டைக்கு வெடி வைத்தும் பலன் இல்லாமற் போயிற்று. ஔரங்கசீபின் கண் ணெதிரிலேயே மூன்றுவது முறையும் வெடி வைக்கப்பட்டது. இதுவும் பயன் அளிக்க

வில்லை. எனினும், ஔரங்கசீப் முயற்சியில் தளர்ச்சி அடைய வில்லை. இத் தோல்விகள் சில நாள்கள் மட்டுமே நீடித்தன. இறுதியில் கோட்டை விழவே செய்தது.

முழுமையான போர் தொடங்கியவுடன் எதிர்பாராத விதமாகப் பேரரசர் பல இக்கட்டுகளை எதிர்நோக்க வேண்டியிருந்தது. இரு முகாம்களிலும் தொற்று நோயும், பஞ்சமும் தொடர்ந்து வளரலாயின. 1685-86ஆம் ஆண்டுகளில் முதன் முதலில் தக்காணத்தில் பிளேக் நோய் தோன்றியது. இது 8, 9 ஆண்டுகளில் இந்தியாவின் பிற பகுதிகளிலும் பரவி நாட்டையே அலைக்கழித்தது. இந் நோய் ஆரம்பத்தில் விலாப்புறங்களுக்கு மேலும், தோள்பட்டைகளுக்குக் கீழும் அல்லது இரு காதுகளுக்குப் பின்புறத்திலும் திராட்சைப்பழ அளவு முதற் கொண்டு, சிறு வாழைப்பழ அளவுக்குக் கூடக் கொப்புளங்களாகத் தோன்றும். அப்பொழுது கண்கள் சிவந்துவிடும். உடலில் சுரமும் காணப்படும். இவைதாம் இந் நோய் தோன்றிய ஆரம்ப அறிகுறிகள் என்று காஃபீ கான் விளக்குகிறார். இந் நோய் காரணமாகவும், துரதிருஷ்டவசமாகவும் கோல்கொண்டாப் படைகள் சிறந்த தளபதிகள் ஒவ்வொருவரையும் சில நாள்களிலே இழந்து வந்தது. அப்துர் ரஜாக் லாரி என்னும் தளபதி கோட்டையைக் காத்துக்கொண்டே உயிர்நீத்தார். அவ் வீரரைப் பேரரசர் ஔரங்கசீப் போற்றத் தயங்க வில்லை. அப்துர் ரஜாக்கின் வீரத்தையும், போற்றற்குரிய நாட்டுப் பற்றையும், பண்பையும் பாராட்டி அவர் குணமடையப் பேரரசர் மருத்துவரை அனுப்பி உதவி நல்க முயன்றதாகக் கூறப்படுகின்றது. எனவே, இந் நிகழ்ச்சி மூலமாகப் பேரரசர் ஔரங்கசீப் எதிரி என்றும் பாராமல் வீரத்தைப் போற்றும் பெருந்தகை மிக்கவர் என்பதும், எதிரியையும் மன்னிக்கும் நற்குணமுடையவர் என்பதும் தெளிவாகின்றன. கோல்கொண்டாக் கோட்டை விழவும், பேரரசின் படைகள் ஆஜத்தின் தலைமையின்கீழ் அபுல் ஹசனைச் சிறைப்பிடித்துப் பேரரசரிடம் அழைத்துச் சென்றனர். அபுல் ஹசனை ஔரங்கசீப் மன்னித்துப் பீஜப்பூர் அரசுக்கு அளித்த மானியத் தொகையில் பாதியையும் (50 ஆயிரம் ரூபாய்) இவருக்கு அளித்தார். கோல்கொண்டா பேரரசுடன் இணைத்துக்கொள்ளப்பட்டது. இதன் பலனாக, மொத்தத்தில் பேரரசுக்குச் சுமார் 3 கோடி ரூபாய் வருமானம் கிடைத்தது.

**தக்காணக் கொள்கையின் விளைவுகள் :** முதலாவதாகப் பீஜப்பூர், கோல்கொண்டா அரசுகளைப் பேரரசுடன் ஔரங்கசீப்

இணைத்துக் கொண்டதே ஓர் இமாலயத் தவறாகும். தமக்கு இடையறாத தொல்லைகளை அளித்து வந்த இவ் விரு அரசுகளை யும் அரசியல் விவேகத்துடனும், கூர்மையான முன்னறிவுட னும் அவர் மராத்தியர்களுக்கு எதிராகப் பயன்படுத்தியிருத்தல் வேண்டும். இதில் ஔரங்கசீப் தவறிவிட்டார். பீஜப்பூர், கோல்கொண்டா அரசுகள் உடனடியாக இணைத்துக் கொள்ளப் பட்டாலும், ஔரங்கசீபிற்குச் சிறுசிறு பிரச்சினைகளில் விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை இல்லாமற் போயினமையால்தான், இவ் விணைப்புக் காலப்போக்கில் முகலாயப் பேரரசுக்கே தீங் காக முடிந்தது. இவ் வரசுகளை ஔரங்கசீப் பேரரசுக்குச் சாதக மான முறையில் பயன்படுத்தத் தவறியதால், 1680ஆம் ஆண்டில் சிவாஜி இறந்தபின் மராட்டிய அரசும் பூதம்போல் வளர்ந்து, ஔரங்கசீபினால் ஏற்க முடியாத சவால் ஒன்றை விட்டது. இதனால், பேரரசின் முதுகெலும்பே முறியும் நிலை ஏற்பட்டது.

இரண்டாவதாக, நட்புறவு முறிந்ததன் பலனாக, மராத்திய அரசு மேலும் வளர்ச்சியுறாமல் தடுக்கப்படவேண்டிய அவசியம் ஏற்பட்டதால், தக்காணப் போர்கள் ஔரங்கசீபின் கருவூலத் தைப் பாதிக்கு மேல் பாழடித்து வந்தன. தக்காணத்திலேயே கால் நூற்றாண்டிற்கும் மேலாகப் பேரரசர் தங்க நேரிட்டதாலும், தக்காணப் போர்களின் செலவு அதிகரித்து வந்ததாலும், பிற மாநிலங்களைக் காலா காலத்தில் பராமரிக்க இயலாததாலும், பேரரசுக்கு அவற்றிலிருந்து கிடைக்க வேண்டிய வருவாய் குறைந்துகொண்டே வந்தது. இது ஒருபுறமிருக்க; மற்றொரு புறத்தில், தக்காணக் கொள்கையின் காரணத்தாலேயே மத்திய அரசு சரிந்து விழத் தொடங்கும் அறிகுறிகள் தெற் றெனத் தோன்றலாயின.

மூன்றாவதாக, தக்காணப் போர்கள் முகலாயர்களுக்குப் பெரும் இழுக்கைத் தேடித் தந்தன. எவ்வாறெனில், பெரும் படைத் தளபதிகள் சில சமயங்களில் தோல்வி கண்டு வந்தது ஒருபுறமிருக்க, அதே நேரத்தில், 1680ஆம் ஆண்டிற்குப் பிறகு பல முகலாயத் தளபதிகள் இடையறாத போர்களில் ஈடுபடத் தயாராகவும் இல்லை. இதனால் பேரரசுக்குப் பெரும் நட்டமும், அவமானமுமே ஏற்பட்டன.

நான்காவதாக, உழவும் தொழிலும் பெரிதும் பாதிக்கப் பட்டன. தொடர்ந்து நீடித்த போர்களால் அவை நசித்து வரலாயின. எப்பொழுதும் எங்குப் பார்ப்பினும் மராத்தியர்கள்

கொள்ளைகளில் ஈடுபட்டுவந்ததனால் முகலாயர்களின் தக்காணப் போர்கள், அங்கு அவ்வப்பொழுது ஏற்பட்டு வந்த அழிவுகளை அதிகரித்துவந்தன. இதனால், காடுகளும் கழனிகளும் பெரிதும் அழிந்துவந்தன. நர்மதையாற்றுக்குத் தெற்கிலும் வடக்கிலும் கொண்டு செல்லப்படும் பொருள்களை எளிதில் பரிமாற்றம் செய்ய முடியவில்லை. சில சமயங்களில், ஐந்து, ஆறு மாதங்களுக்குமேல் போக்குவரத்துகள் தடைப்பட்டு வந்தன. தமிழகத்தில், கிழக்குக் கடற்கரைப் பகுதிகளைப் பொறுத்த வரையில், 1680ஆம் ஆண்டிற்குப் பிறகு மராத்திய உள்நாட்டுக் கலகங்களாலும், ராஜாராம் எதிர்ப்புப் போர்களாலும் அவை பெரிதும் பாதிக்கப்பட்டு வந்தன. குறிப்பாக, ஐரோப்பிய வணிகர்கள் புதுவை, கடலூர், சென்னை, மசூலிப்பட்டினம் பகுதிகளில் ஏற்றுமதி இறக்குமதி செய்வதும் பெரிதும் தடைப்பட்டு வந்தது. இச் சூழ்நிலை ஆங்கிலக் கடற் கொள்ளைக்காரர்களுக்குப் பெரிதும் சாதகமாக அமைந்தது. இவற்றினாலும் வர்த்தகப் பெருக்கம் பெரிதும் பாதிக்கப்பட்டுவந்தது.

ஐந்தாவதாக, முகலாய நிர்வாக இயந்திரம் பெரிதும் பழுதடையும் நிலையில் தேய்ந்து வந்தது. முழு நிர்வாகமுமே மன்சப்தாரி முறையின் அடிப்படையிலிருந்ததால், அடிக்கடி நிகழ்ந்து வந்த உத்தியோக மாற்றங்கள் காரணமாகவும், பேரரசர் தக்காணத்தில் தங்கியிருக்க வேண்டிய நிர்ப்பந்தம் காரணமாகவும், வட இந்தியாவில் ஆட்சித் திறனே சீரழிந்து வந்தது. இலஞ்சம் தாண்டவமாடுவது தடுக்க முடியாமற் போயிற்று. அரசாங்க அலுவல்கள் சரிவர நடக்க முடியவில்லை.

ஆறுவதாக, பீஜப்பூர், கோல்கொண்டா, மராட்டியப் போர்கள், பேரரசர் என்னதான் திறமையைப் பெற்றிருந்த போதிலும், அவர் எதையும் சாதித்துவிடவில்லை என்பதையே ஆணித்தரமாக நிரூபித்தன. தக்காணப் போர்கள் பெரும் வலிமையுள்ள முகலாயத் தளபதிகளுக்குக் கடுஞ்சோதனையாக இருந்தனவாக மட்டுமன்றி, ஔரங்கசீபின் புகழை ஆழமாகப் புதைக்கவும் வழிகோலின. பீஜப்பூர், கோல்கொண்டாவைப் பேரரசுடன் இணைத்துக் கொண்டதும், மராத்தியர்களை நேச சக்தியாக மாற்றி அமைத்துக்கொள்ளத் தவறியதும் ஓர் எதிரிக்குப் பதிலாக மூன்று எதிரிகளை உருவாக்கி விட்டன. மாவீரன் நெப்போலியனை ஸ்பானியப் போர்கள் எவ்வாறு மண்டியிடச் செய்தனவோ, அதுபோன்றே பேரரசர் ஔரங்கசீபின் புகழுக்குச் சாவுமணி அடித்தனவும் இந்தத் தக்காணப் போர்களே யாகும்.[1]

[1] 'It was the Deccan ulcer that ruined Aurangzeb' — Jadunath Sarkar,—History of Aurangzeb, Volume IV & V, and A Short History of Aurangzeb.

14

# 14. ஔரங்கசீபும் இராஜபுத்திரர்களும்

ஔரங்கசீப் தம் குறுகிய சமயக்கொள்கை காரணமாக இராஜபுத்திரர்களைப் பகைத்துக் கொண்டார் எனப் பொதுவாக நம்பப்படுகிறது. அக்பர் முதன்முதலில் தொடங்கிய இராஜ புத்திர நல்லிணக்கக் கொள்கைகளை ஔரங்கசீப் காற்றில் பறக்க விட்டார் எனவும் சொல்லப்படுகின்றது. பேரரசர் அக்பர் இராஜபுத்திரர்களுடன் நட்புறவை வளர்த்துக் கொண்டது உண்மை. ஆனால், அப் பேரரசருக்கே கூட அத்துணை இராஜ புத்திரர்களும் உடன்பட்டு நடக்கவில்லை; மேலும், சித்தூர், உதயப்பூர், மீவார் மன்னர்கள் பல ஆண்டுகளுக்குப் பகைமை பாராட்டி வந்தார்கள் என்பதையும் நாம் மறந்திடலாகாது. மார்வார், பிக்கானீர், ஜெய்சல்மீர் போன்ற சிறு இராஜபுத்திர அரசர்கள் மட்டுமே அக்பருடன் இணைந்துவந்தனர். ஆயினும், இராஜா பகவான்தாஸ், மான்சிங் போன்றோர் புதிய மதமாகிய 'தீன் இலாஹி'யை ஏற்றுக்கொள்ளவில்லை என்பதையும் நாம் நினைவில் வைத்துக்கொள்ளவேண்டும்.

ஜஹாங்கீரே பாதி இராஜபுத்திரர். எனவே, அவர் இராஜ புத்திரர்களுக்குச் சாதகமாகவே இருந்தார். ஷாஜஹானும் இராஜபுத்திரர்களுக்கு இசைவாகவே நடந்து கொண்டார். ஔரங்கசீப் மட்டும் மரபாகப் பின்பற்றப்பட்டு வந்த இராஜ புத்திரக் கொள்கையை மாற்றினார் என்பதற்குரிய சான்றுகள் எவை? இவர் மீவார் அரசையும், மார்வார் அரசையும் பேரரசு டன் இணைத்துக்கொண்டதையே ஆசிரியர்கள் முக்கியக் காரண மாகச் சுட்டிக் காட்டுகின்றனர். இவர் பிற இராஜபுத்திர அரசு களுடன் போருக்குச் செல்லவில்லை.

பேரரசர் ஔரங்கசீபிடம் எண்ணற்ற இராஜபுத்திரர்கள் தளபதிகளாகவும், பிரதம அலுவலர்களாகவும் உயர்பதவி

வகித்துவந்தனர். சிறப்பாக, இராஜா ஜெய்சிங் பிரதமத் தளபதியாக ஔரங்கசீபின்கீழ்ப் பணியாற்றினர். ஔரங்க சீபின் மிக உயர்ந்த நம்பிக்கைக்கும், பற்றுதலுக்கும், அன்பிற் கும் முற்றிலும் பாத்திரமானவர் ஜெய்சிங் மட்டுமே ஆவார். ஜஸ்வந்த்சிங், மால்தா, இராத்தோடு, தளபதி ராவ், குமார் ராம்சிங், சிங்ஹால்தா இன்னும் எண்ணற்ற இராஜபுத்திரர்கள் சிறந்த தளகர்த்தர்களாகப் பேரரசின் சேவையில் பணியாற்றி வந்தனர்.

பொதுவாக, இராஜபுத்திரர்கள்மீது வெறுப்புக்கொண்டு, ஔரங்கசீப் அவர்களைத் துன்புறுத்த முற்பட்டார் எனப் பலர் தவருகக் குறிப்பிடுகின்றனர். அவ்வாறு பேரரசர் இராஜ புத்திரர்களைத் துன்புறுத்தி இருப்பாரேயானுல், நிச்சயமாக ஜெய்சிங்கே சிவாஜி எழுந்ததைப் போன்று ஔரங்கசீபுக்கு எதிராகப் போர்க்கொடியை உயர்த்தி இருப்பாரே! ஆனுல், மிர்ஜா ராஜா ஜெய்சிங் ஔரங்கசீபிற்கு முற்றிலும் விசுவாசமாக இருந்ததனுல்தான் அவருடைய அரசு பேரரசுடன் இணைத்துக் கொள்ளப்படவில்லை. ஜெய்சிங்கின் மகன் குமார் ராம்சிங் ஔரங்கசீபிற்கு எதிராகத் துரோகம் செய்தும்கூட, ஔரங்கசீப் தந்தை ஜெய்சிங்கிற்காக ராம்சிங்கை மன்னித்து விட்டார் என்பதை நாம் முன்பே பார்த்தோம். அதுபோல், ஜஸ்வந்த் சிங்க் சிவாஜியுடன் நட்புப் பாராட்டி, அவ் வீரரிடத்திருந்து மிகுந்த கையூட்டம் பெற்று, பேரரசுக்கு எதிரான செயலில் ஈடுபட்டபோதுங்கூட, அவற்றை அறிந்தும் ஔரங்கசீப் ஜஸ்வந்த்தைத் தண்டிக்கவில்லை. சற்றேறக்குறைய இருபது ஆண்டுகள் பொறுத்தும் ஜஸ்வந்த் தம் குணத்தை மாற்றிக் கொள்ளவேயில்லை.

**பிற இராஜபுத்திர அரசுகள்:** ஔரங்கசீப் 20 ஆண்டுகளுக் குப் பிறகு இராஜபுத்திரர்களுக்கு எதிராகப் பின்பற்றிய கொள்கைகளை அவர் ஆட்சிக்கு வந்த உடனேயே பின்பற்றி யிருப்பினும் அவரை ஒருவரும் தடுத்திருக்க முடியாது. ஆகவே, 20 ஆண்டுகளாகப் பொறுமையுடன் இருந்த பேரரசர் திடீரென இராஜபுத்திரர்களுக்கு எதிரான கொள்கையை ஏன் பின் பற்றினர் என்று நாம் ஆராய்ந்து பார்க்க வேண்டும். அது மட்டுமன்றி, இராஜபுத்திரர்களைத் துன்புறுத்துவதற்காகவே மீவார்மீதும், மார்வார்மீதும் அவர் போர் தொடுத்தார் என்போமானுல், (அ) ஜெய்சல்மீர், (ஆ) உதயப்பூர், (இ) ஜெய்ப்பூர், (ஈ) ஜோத்பூர் ஆகிய அரசுகள்மீது போர் தொடுக் காதது ஏன்? என்னும் கேள்வி எழும். எனவே, உண்மைக்

காரணம் என்னவெனில், தெற்கே சிவாஜி கர்நாடகத்தின்மீது படையெடுப்பதைக் கோல்கொண்டாவின் மாதண்ணுவும் அக்கண்ணுவும் ஆதரித்த அதே நேரத்தில், வடமேற்குப் பகுதியில் ஜஸ்வந்த் சிங் போரில் இறந்தார். மேலும், பேரரசரிடத்திருந்து இளவரசர் அக்பர் தனியே பிரிந்து சென்று, இராஜபுத்திரர்களுடன் முதலில் வெளிப்படையாகத் தொடர்பு கொண்டும், பிறகு 1680–81ஆம் ஆண்டுகளில் இராஜபுத்திரர்கள், சாம்பாஜி ஆகியோருடன் தொடர்பை மேலும் வளர்த்துக் கொண்டும் வந்தார். அவர் மகன் அவரை எதிர்த்துப் போர்க் கொடி உயர்த்திய பொழுது, இராஜபுத்திரர்கள் அவ் விளவரசர் அக்பருக்குக் கருவியாகப் பயன்பட்டனர். இதனைத் தண்டிக்கக் கருதிய நேரத்தில்தான் சந்தர்ப்ப வசமாக ஜஸ்வந்த் சிங்கும் 1679ஆம் ஆண்டில் உயிர்நீத்து விட்டார். எனவே, ஒளரங்கசீப் மீவார், மார்வார் நாடுகள்மீது போர் தொடுக்க அரசியல் காரணம் ஒன்றுதான் அவருக்கு இருந்தது. அந்த அரசியல் காரணத்தின் முக்கியத்துவத்தைக் காஃபீ கானின் கூற்றும் விளக்குகின்றது.

கா:.பீ கானின் கூற்று: ‘இராஜபுத்திரர்கள் இளவரசர் முஹம்மத் அக்பரின் இளமையைப் (அவருக்கு 23 வயது) பயன்படுத்திக்கொள்ள விரும்பினர். அவர்களுக்குத் துர்க்காதாஸ் என்பவர் சிறப்பான பிரதிநிதியாக இருந்தார். அவர் தந்திர வித்தைகளில் கைதேர்ந்தவர். எல்லா வஞ்சகச் சக்திகளையும் பிரயோகித்து, 40,000 குதிரை வீரர்களையும், நிறைந்த பொக்கிஷத்தையும் அனுப்பிவைப்பதாகக் கூறி, இளவரசரை நம்பவைத்தார். இது தாஹாவுர் கான் (Tahawur Khan) உட்பட இளவரசரையும் அவருடைய பல நண்பர்களையும் மயங்கச் செய்தது. எனவே, அனுபவமில்லாத இளவரசர் பேராசை காரணமாக இராஜபுத்திரர்களின் வலையில் வீழ்ந்தார்.

‘இளவரசர் முஅஜ்ஜம் ஒளரங்கசீபுக்குத் தம் தம்பியின் இக் கட்சி மாற்றத்தைத் தெரிவித்த போது, அதனை அவர் அண்ணன் தன் தம்பி மீது கற்பித்துவிட்ட பொய்க்கூற்று என்று நினைத்தார். எனவே, முஅஜ்ஜம் தவருன குற்றச்சாட்டைச் சுமத்துவதாகக் கூறி, இறைவன் அவருக்கு நல்வழி காண்பிப்பானுக என்றும், கேடு விளைவிப்பவர்களிடத்திருந்து காப்பாற்றுவானுக என்றும் எழுதி இருந்தார்.

‘இரகசியம் சீக்கிரத்தில் அம்பலமாயிற்று. துர்க்காதாஸின் தலைமையில் 30,000 இராஜபுத்திரர்கள் இளவரசருடன்

சேர்ந்துகொண்டனர். ஒரு கூடாரத்திலிருந்து மறு கூடாரம் வரை, இளைஞர் முதல் முதியோர் வரை இச் செய்தி பரவிவிட்டது. இளவரசர் அரியணை ஏறி விட்டார் என்றும், தம் பெயரில் அவர் நாணயங்களை அச்சிட்டுக்கொண்டார் என்றும் அறிவிக்கப்பட்டன. தாஹாவுர்கான், 5,000 அந்தஸ்துள்ள மன்சப்தாராக உயர்த்தப்பட்டாரென்றும், முஜாஹித் கானும் பிறரும் மிகவும் மரியாதையுடன் தனிப்பட்ட முறையில் கவனிக்கப்பட்டனர் என்றும் அறிவிக்கப்பட்டன.'[1]

இனி அடுத்த காரணத்தைப் பார்ப்போம்: 1679ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் மார்வார் மன்னர் ராஜா ஜஸ்வந்த் சிங்குக்கு இரண்டு குழந்தைகள் அவர் மரித்தபின் பிறந்தன. ஒன்று இறந்துவிட்டது. மற்றொன்றுக்குத் துர்க்காதாஸ் என்னும் தலைவர், அஜீத் சிங் என்று பெயரிட்டார். பேரரசர், ஜஸ்வந்த் சிங் தமக்குச் செய்த சேவையைப் பாராட்டி அஜீத் சிங்கைத் தாமே வளர்த்து ஜோத்பூருக்கு மன்னராக்கத் திட்டமிட்டிருப்பதாகத் தெரிவித்தார். ஆனால், இதற்கிடையில் துர்க்காதாஸ் தாம் வைத்துக்கொண்டிருக்கிற அக் குழந்தையே தான் அஜீத்சிங் என்றும், அவனே மார்வார் நாட்டின் இளவரசனுவான் என்றும் உரிமை கொண்டாடியபோது, அது உண்மையான வாரிசு அல்ல எனக் கருத்து வேற்றுமை எழுந்து, அது போரில் முடிந்தது. ஔரங்கசீப் வெகு சீக்கிரத்திலேயே மார்வாரைக் கைப்பற்றியபின், 1679ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் டெல்லி திரும்பி, கான் ஜஹான் பஹதூர் என்பாரை மார்வாரை ஆளுகைக்கு உட்படுத்துமாறு அனுப்பி வைத்தார். ஜஸ்வந்த் சிங்கின் உறவினர் ஒருவரை மன்னராகவும் ஏற்றுக்கொண்டார் ஔரங்கசீப். எனினும், மீண்டும் ஒருமுறை ஔரங்கசீப் மார்வார் நாட்டின்மீது படையெடுக்க நேரிட்டது. காரணம் என்னவெனில், துர்க்காதாஸ் ஓர் அங்குலமும் விட்டுக் கொடுக்கத் தயாராக இல்லை. பல இராஜபுத்திர அரசுகள் பேரரசருக்குத் துணை நின்றன. ஆனால், இளவரசர் அக்பரும், துர்க்காதாஸும், ராத்தோடு வீரர்களும் முகலாயர்களைக் கடுமையாக எதிர்த்தனர். ரகுநாதபட்டி, ரஞ்ஜோர்தாஸ் ஜோதா ஆகிய இராஜபுத்திர வீரர்கள் வீரமரணம் எய்தியபோதிலும், எதையும் பொருட்படுத்தாது அவர்கள் மார்வாரைக் காத்துநின்றனர்.

'தர்மாப்பிலே': ஔரங்கசீபை எதிர்த்து, இளவரசர் அக்பர், தாஹாவுர் கான் ஆகியோர் இராஜபுத்திரர்களால்

[1] Elliot and Dowson, 'History of India as told by its own historians', p. 300-302.

அனுப்பப்பட்டனர். ஆனால், பேரரசரைக் கண்டதுமே இராஜ புத்திரப் படைகள் பின்வாங்கின. அவர்களில் பலர் ஈக்கள் போல் மாண்டனர். இப் போரைப் புகழ்வாய்ந்த கிரேக்க நாட்டுத் 'தர்மாப்பிலே' (Thermopylae) போருடன் பேராசிரியர் சர்மா ஒப்பிடுகிறார்.[1] புஷ்கர் ஏரிகரையில் இப் போர் நடைபெற்றது. சில நாள்களிலேயே மார்வார் இணைவது போலத் தோன்றவே, மீவார் ராஜ்யமும் இப் போரில் கலந்து கொண்டது. மீவார் ராஜ்யம் தானே போரில் கலந்து கொள்ள வேண்டிய அவசியம் ஏதும் நிகழவில்லை.

மீவாரின் மகாராஜா ராய்சிங் சித்தூர்க் கோட்டையைப் பலப்படுத்தித் தேவுபாரிக் கணவாயை முகலாயப் படைகள் மேற்கொண்டு கடக்காமல் தடுத்து நிறுத்தவே, ஔரங்கசீப் தெற்கே அஜ்மீருக்கு வந்து, பின்னர் உதயப்பூருக்கும் வந்து தேவுபாரிக் கணவாயில் எதிர்ப்பின்றியே தம் படைகளை விடுவித்தார். உதயப்பூரும் எதிர்ப்பின்றி விழுந்தது. எதிர்பார்த்ததற்கும் மாறாக உதயப்பூர் கைப்பற்றப்படவே, ஔரங்கசீப் அஜ்மீருக்குத் திரும்பிவிட்டார். இதுவரை நேரிடையாக ஔரங்கசீபையோ ஹசன் அலீ கானின் படைகளையோ இளவரசர் அக்பர் சந்திக்கவில்லை என்பது இங்குக் குறிப்பிடத் தக்கது. ஆனால், இளவரசர் அக்பர் மற்றொரு தளபதியால் தோற்கடிக்கப்பட்டார்.

**ஔரங்கசீபின் தந்திரம்:** தந்திரத்தில் கைதேர்ந்தவரான ஔரங்கசீப் தம் மகன் இளவரசர் அக்பருக்குக் கடிதம் ஒன்றை எழுதினார். அக் கடிதத்தில், இளவரசரின் அரசியல் நுணுக்கத்தையும் அறிவுக் கூர்மையையும் தாம் வெகுவாகப் போற்றுவதாகவும், தாம் திட்டந் தீட்டித் தந்தபடியே இராஜபுத்திரர்களிடையே உறவாடி உளவு அறிவதற்காக அக்பர் சென்றதைத் தாம் மெச்சிப் பாராட்டுவதாகவும், நாடக நடிப்புப் பாவனையில் ஒரு கடிதமெழுதி, அது இராஜபுத்திரர்களின் கரத்திடைச் சிக்குமாறு செய்தார்.[2] இக் கடிதத்தைப் படித்த இராஜபுத்திரத் தலைவர் பலரும் இதை உண்மை என நம்பி, இளவரசர் அக்பரைக் கைவிட்டு விட்டனர். எனவே, இதன் பிறகுதான் இளவரசர் அக்பர் சாம்பாஜியின் உதவியை நாட வேண்டியவராயினர். இந் நிகழ்ச்சிக்குப் பிறகு, பிக்கானீர் இராஜ்ஜியத்து ஷியாம் சிங் என்பாரின் மத்தியஸ்தத்தின்மீது

[1] Prof. S. R. Sharma—The Mughal Empire in India, p. 403.

[2] J. N. Sarkar's History of Aurangzeb, Vol IV; and Dr. Athar Ali's 'The Mughal Nobility under Aurangzeb'.

இளவரசர் முஹம்மது ஆஜம் மீவாரின் உடன்படிக்கையை ஏற்றுக்கொண்டார். (1) பெட்நோர், மண்டல் ஆகிய பகுதிகளைப் பேரரசுடன் இணைத்துக் கொள்ளலாம். (2) மீவாரிலிருந்து முகலாயப் படைகளைத் திரும்பப் பெற்றுக்கொள்ள வேண்டும். இவ் வுடன்படிக்கையின்படி, பேரரசர் மீவார் நாட்டின் ஜெய்சிங் என்பாரை அரசராக ஏற்றுக்கொண்டார்.

ஆனால், மார்வார் நாடு தொடர்ந்து போரிட்டது. இப் போர் இடையிடையே மூன்று கட்டங்களில் நிகழ்ந்தது: (1) 1681-லிருந்து 87 வரை, (2) 1687-லிருந்து 1701 வரை, (3) 1701-லிருந்து 1707 வரை.

**துர்க்காதாஸ் தலைமை:** முதற் கட்டத்தில் துர்க்காதாஸ் தலைமை ஏற்றார். ராத்தோடுகள் தொடர்ந்து போரிட்டனர். இது நெதர்லாந்தியர்கள் ஸ்பானியர்களை எதிர்த்துப் போரிட்டதற்கு ஒப்பானதாகும். இதற்கிடையில், துர்க்காதாஸ் சாம்பாஜிக்குத் துணையாக மராட்டியத்துக்குச் சென்றிருந்தார். ஆக இராஜபுத்திரர்களும், சாம்பாஜியும் ஔரங்கசீபின் பேரரசைக் குலைத்திட வெற்றிகரமான திட்டத்தைத் தீட்டினர். இரண்டாவது கட்டத்தில் துர்க்காதாஸ் புந்தி மன்னரின் உதவியை நாடினார். இளவரசர் அக்பரின் மகனைத் துர்க்காதாஸ் கடத்திச் சென்றார். அக் குழந்தையை 1694-ல் திரும்ப ஒப்படைத்தார். 1690ஆம் ஆண்டில் அவர் சிறந்த வெற்றி ஒன்றைப் பெற்றார்.

1698-ல் ஔரங்கசீப் தம்மிடத்திருந்த இளைஞன் அஜீத் சிங் மீது (19 வயது) இரக்கம்கொண்டு ஜாவோர், சங்கோட் சிவானு ஆகிய இடங்களை இனாம் ஜாகிர்களாக அளித்து, மன்சப்தார்ப் பதவியையும் வழங்கினார்; தம்மை எதிர்த்துவந்த துர்க்காதாஸ் மீதும் 3,000 தகுதியுள்ள மன்சப்தார்ப் பதவியை அளித்தார். இதனையும் ஏற்றுக்கொண்டார் துர்க்காதாஸ். ஆனால், மீண்டும் போரிடத் தொடங்கினார். இறுதியாக, மூன்றும் கட்டத்தில், 25 ஆண்டுகளுக்குப் பிறகு துர்க்காதாஸ் தம் கோரிக்கைகளை விட்டுக்கொடுத்துவிட்டார். பேரரசர் வளர்த்து வந்த இளைஞனே ஜஸ்வந்த் சிங்கின் வாரிசு என்ற உண்மையை அவர் ஏற்றுக்கொண்டுவிட்டார். 1707ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் பேரரசர் தக்காணத்தில் இருக்கையில், அஜீத் சிங் மார்வாரின் மன்னர் எனப் பட்டம் சூட்டிக் கொண்டார்.

**பறிமுதல் சட்டமே காரணம்:** ஆக மொத்தத்தில் ஔரங்கசீப் இராஜபுத்திரர்களுடன் போருக்குச் செல்ல நேர்ந்த காரணங்கள் இரண்டு: (1) முகலாயப் பேரரசில் நிலவிவந்த 'சொத்துப் பறிமுதல்' (Law of Escheats) சட்டத்தின்படி, எந்த ஒரு பிரபுவின் சொத்தும் அவர் தம் வாரிசுகளுக்கு விட்டுச்செல்லத் தக்க பரம்பரைச் சொத்து என்று கருதப்படவில்லை. பேரரசில் ஒருவர் அமீராக அலுவலில் அமர்ந்த பின், அந்த அமீரின் இறப்பைத் தொடர்ந்து அவரது சொத்துகள் பறிமுதல் செய்யப் பட்டன. இங்கு நாம், இங்கிலாந்தின் எட்டாம் ஹென்றி சொத்துகள் சேர்த்த விதத்தை நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். இச் சட்டத்தைப் பெர்னியர் 'காட்டுமிராண்டித்தனமான பழைய மரபு' (The barbarous and ancient custom) என்று வர்ணிக்கிறார்.[1] இதனைச் சர்க்காரும் ஏற்கிறார். (2) இளவரசர் அக்பர் தந்தையை விட்டுப் பிரிந்து இராஜ புத்திரர்களிடம் அடைக்கலம் புகுந்தார். துர்க்காதாஸ் இளவரசர் அக்பருக்கு முழு ஆதரவு அளித்தார். சீற்றங்கொண்ட பேரரசர் இராஜபுத்திரர்களுக்குப் பாடம் புகட்டக் கருதினார். எனவே, இங்கும் அரசியல் காரணமே மேலோங்கி நின்றது. பேராசிரியர் ஜாஃபர் கூறி இருப்பது முற்றிலும் பொருத்த முடையது.[2] ஔரங்கசீப் மத வித்தியாசம் பாராட்டவில்லை என்பதற்குச் சிறந்த உதாரணம், இதே பறிமுதல் சட்டம் தம் மாமன் ஷாயிஸ்தா கான் இறந்த போதும், காபுல் கவர்னர் அமீர் கான் இறந்தபோதும் அமல் செய்யப்பட்டதே ஆகும்.[3] அது மாத்திரமன்று; ஔரங்கசீப் இராஜபுத்திரர்களுக் கெதிராகப் போருக்குச் சென்றதற்கோ, அவர்கள் பேரரசரை எதிர்த்ததற்கோ இருவரிடையே நிலவிய மத வேறுபாடு காரணம் அன்று. மாறாகப் பேரரசினால் பின்பற்றப்பட்ட நிர்வாகச் சட்டமே காரணம் ஆகும். இச் சட்டத்தின்படி, தம்மிடம் பணியாற்றி வாரிசு இல்லாமல் இறந்துவிட்ட மன்சப்தார்களின் சொத்துகளையும் செல்வங்களையும் அரசர் பறிமுதல் செய்வது வழக்கம். அப்படி வாரிசு இருக்குமேயானால், பின்னர் அவ்

[1] Bernier—'The Travels'.

[2] 'The fact that he repeatedly pardoned Rajah Jaswant Singh for his treacherous conduct and treasonable dealings, took him into confidence in spite of all that and acknowledged his posthumous son Ajit-Singh, when he grew up in age as Rajah of Mewar, shows that Aurangzeb was not wicked to any Rajput', S M. Jaffar—History of Mugha Empire - Baber to Aurangzeb, p. 294 [1936 edition].

[3] V. A. Smith—Oxford History of India, p. 418.

வாரிசிடம் சொத்துகள் ஒப்படைக்கப்படுவதும் மரபாம்.[1] நிர்வாகச் சட்டங்களுள் பறிமுதல் சட்டமும் ஒன்ருகும். ஆனுல், பறிமுதல் சட்டத்தின் அடிப்படையில் இராஜபுத்திரர்களிடம் ஒருதலைப்பட்சமாக நடந்து, முஸ்லிம் மன்சப்தார்களுக்குச் சலுகைகளை ஔரங்கசீப் அளித்திருப்பாரேயானுல், நிச்சயமாக அது கண்டிக்கத்தக்கதாகும். ஆனுல், அவர் அவ்வாறு நடந்து கொள்ளவில்லை. அவரைப் பொறுத்தவரை, தம் தாய் மாமன் ஷாயிஸ்தா கானுக இருப்பினும் சரியே, அல்லது காபுல் கவர்னர் அமீர் கானுக இருப்பினும் சரியே, மஹபத்கானுயினும் சரியே, அல்லது ஜஸ்வந்த் சிங்காயினும் சரியே, பறிமுதல் விஷயத்தில் யாவரும் சமமாகவே கருதப்பட்டார்கள். அமீர் கான் இறந்தபின் சொத்துகள் அரசுக்குச் சேர்ந்தன. உதாரணமாக, அமீர் கானின் சொத்துகளைப் பறிமுதல் செய்ய லாகூரின் திவானுக்குக் கட்டளையிடுமாறு ஔரங்கசீப் ஆணை பிறப்பித்தார்.[2]

**பிற காரணங்கள் :** ஆகவே, மஹாராஜா ஜஸ்வந்த் சிங்கின் சொத்துகளைப் பறிமுதல் சட்டத்தின்கீழ்க் கைப்பற்ற முயன்றதனுல்தான் போர் தோன்றியது. இதில் வியப்பு இல்லை. இது மட்டுமன்றி, மேலும் சில காரணங்களும் இருந்தன. (1) ஜஸ்வந்த் சிங் அரசுக்குக் கடன்பட்டிருந்தார். (2) திருப்பிக் கொடுக்கவேண்டிய கடன் பாக்கியை அவர் வாழ்நாளிலேயே கொடுத்துத் தீர்த்துவிட்டிருந்தால், பறிமுதலுக்கே இடமில்லை. அதற்கு நேர்மாருக, நிறைந்த சொத்துகளிலிருந்து கடன் பாக்கியும் இருக்குமேயானுல், கடனை வசூலிக்கும்போது போர் மூளுவது மிகவும் இயல்பாகும். ஜஸ்வந்த் சிங்கின் மார்வார் ராச்சியத்திலும் நிகழ்ந்தது இதுவே.

ஆகவே, முகலாயப் பேரரசில் ஏறத்தாழ மூன்று நூற்ருண்டுகளுக்கு அந்தப் பறிமுதல் சட்டம் அமலில் இருந்தது. அதே

[1] There was no hereditary property among the nobility, but the Emperor always took possession of the treasures and houses of his noblemen on their death and made a gift to their children of only what he pleased.' J. N. Sarkar—'A Short History of Aurangzeb,' p. 478.

[2] Amir Khan is dead. I too shall die; write to the Dewan of Lahore to attach the property of the deceased with extreme deligence and effort......." Letter No. 99—Ruqaat-i Alamgir, quoted by Sarkar—Mughal Administration - p. 166, 1935 edn.

The few letters translated by Billimoria give three instances of confiscation...When Amir Khan, Governor of Kabul died the authorities were instructed to seize ...... Similar orders were given concerning the estates of Sheyishtakhan, the Emperor's maternal uncle ...... and Mahabat-Khan—Vincent A. Smith, O.H.I., p. 428.

சட்டத்தை ஔரங்கசீப் ஜஸ்வந்த் சிங்கின்மீது மட்டுமன்றி, குஜராத் மாகாணத்தில் சதர்ப் (Sadar) பதவியை வகித்து வந்த ஷேக் முஹையத்தீன் (Shaik Muhaiddeen) இறந்தபோதும் அவருடைய சொத்துகளையும் இது போன்றே பறிமுதல் சட்டத்திற்கு உட்படுத்தினர். அப்போது அவருடைய மகன் அக்ரமுத்தீன் கான் என்பார் தாமே தம் தந்தை பட்ட கடன்களைக் கஜானாவில் செலுத்துவதாக ஒத்துக்கொண்டார். ஆனால், பின்னர் அம் முயற்சி கைவிடப்பட்டது. பேராசிரியர் சர்க்கார் மேற்கண்ட எடுத்துக்காட்டை 'மீராத்தெ அஹ்மதீ' (Mirat-i Ahmadi, 519) ஆசிரியரின் கூற்றிலிருந்து எடுத்துக் காட்டி விளக்குகிறார். எனவே, இராஜபுத்திரர்களுடன் போருக்குச் செல்லக் காரணம் அக் கால வழக்கிலிருந்த நாட்டுச் சட்டமேயாகும் என்பதை மீண்டும் வலியுறுத்தவேண்டும். 'பறிமுதல்' என்றால், நாட்டின் எல்லோருடைய சொத்துகளும் பறிமுதல் செய்யப்பட்டன என்று பொருள் ஆகாது. இதன் முறையை ஒழுங்குபடுத்தும் வகையில் பேரரசர் ஔரங்கசீப் நிர்ணயித்த சட்டங்களை மீராத்தெ அஹ்மதீ எடுத்து விளக்குகிறது. இது பேரரசின் கட்டளையே ஆகும். இதனை ஔரங்கசீப் 1666ஆம் ஆண்டு ஜூலை மாதம் 24ஆம் தேதி பிறப்பித்தார்.[1]

**பறிமுதல் சட்டம் 1666 :** 'அரசாங்கத்தின் ஊழியர் ஒருவர் வாரிசு இல்லாமலும், அவருக்கு அரசாங்கம் வழங்கியிருந்த கடன் தொகை எதையும் கஜானாவுக்குத் திருப்பிச் செலுத்த வேண்டியில்லாமலும் உள்ள நிலையில் இறந்துவிடுவாரேயானால், அவருடைய சொத்துகளைப் 'பைத்துல் மால்' (Baitul-mal) என்னும் பொதுக் கஜானா அதிபரிடம் சேர்த்து விடவேண்டும். அவர் அரசாங்கத்துக்குக் கடன் பாக்கி ஏதும் கொடுக்கவேண்டியிருந்தால், அவர் பட்டிருக்கும் கடன் தொகையை மட்டும் கழித்துக்கொண்டு மீதிச் சொத்துகளைப் பைத்துல் மாலில் ஒப்படைத்து விடவேண்டும். அவருக்கு வாரிசு எவரேனும் இருப்பாரேயானால், அவருடைய சொத்துகளை அவர் இறந்த மூன்று நாள்களுக்குப் பிறகு கைப்பற்றவேண்டும். அவருடைய சொத்து அரசாங்கத்திற்குக் கொடுக்க வேண்டிய கடன்களை விட அதிகமாக இருந்தால், கடன் தொகையை மட்டும் கழித்துக் கொண்டு, எஞ்சியுள்ள சொத்துகளைச் சட்டபூர்வமாகத் தானே வாரிசென்று நிரூபிக்கிற அவருடைய வாரிசிடம் கொடுத்துவிட வேண்டும். இறந்தவர் அரசாங்கத்திற்குத் தரவேண்டியதாக ஒன்றுமே பாக்கியில்லை யென்றால், அவருடைய சொத்துகள்

[1] Sarkar—Mughal Administration, p. 179.

எல்லாவற்றையும் சட்டபூர்வமாக நிரூபணமாகி யிருக்கும் அவருடைய வாரிசிடம் ஒப்படைக்கவேண்டும்.'[1] பேரரசின் இந்த ஆணை நீதியானது; அறத்தின் அடிப்படையில் உள்ளது; யாவரும் ஏற்கக்கூடியது என்பதை ஒருவரும் மறுக்கமுடியாது. பேராசிரியர் சர்க்கார்கூட இதனை நேர்மையானது என்றே ஒத்துக்கொள்கிறார். ஆகவே, இச் சட்டத்திற்குச் சில முக்கிய அடிப்படைக் கருத்துகள் இருந்து வந்தன: (1) இஸ்லாமிய சட்டத்தின்படி (ஷரீஅத்) தனியார் சொத்துகள் புனிதமானவை. இவற்றை அவர் வாரிசுகள்மட்டும் அனுபவிக்கலாமே யொழியப் பிறர் அதனைக் கைப்பற்றுவதோ அனுபவிப்பதோ முறையாகாது.[2] (2) மேலும், அவ்வாறு அரசாங்கம் கைப்பற்றிய சொத்துகளைப் பேரரசரோ அரசாங்கத்தின் அலுவலர்களோ அனுபவிப்பதற்கு எவ்வித உரிமையும் கிடையாது. (3) எனவே, அரசாங்கத்திற்குச் சேர வேண்டிய கடன்கள் போக மீதிச் சொத்துகள் பைத்துல்மால் என்னும் பொதுக் கஜானாவில் சேர்ப்பிக்கப்படவேண்டும். (4) ஔரங்கசீபின் ஆட்சியிலும் சரியே, வேறு எந்த முகலாயப் பேரரசரின் ஆட்சியிலும் சரியே அமீர் அல்லது பிரபு என்னும் பட்டத்தை வழங்கப் பெற்றவர் அரசாங்கத்தின் அலுவலராக மட்டுமன்றி, அரசாங்கம் அளிக்கும் உரிமைகளையும் அனுபவிக்க முழுத்தகுதி உடையவராகவும் ஆகின்றார்.

அவர் பணிபுரியும்போது, அவருக்குரிய ஊதியத்தை மட்டுமன்றிச் சலுகைகளையும், முன்பணம், குடும்பத்திற்குத் தேவையான பொருள்கள் ஆகிய அத்தனையையும் அடைவதற்கான முழு உரிமையையும் பெறுகின்றார். எனவே, அவர் இறந்தபின் மதவித்தியாசம் எதுவும் பாராட்டாமல் மேற்கூறிய ஆணைக்கு இணங்க, அவர் சொத்துகள் சட்டமுறைப்படி ஒப்படைக்கப்பட்டன; அல்லது, அரசாங்கத்திற்குரிய சொத்தாக மாறின. ஆனால், இறந்தவரின் வாரிசு போர்க்கொடியை உயர்த்துவாரேயானால், அதனை அடக்குவதற்குப் பேரரசர் முயற்சி எடுப்பதில் வியப்பிருக்க முடியாது.

**ஜஸ்வந்த்தின் கடன் பாக்கி:** மகாராஜா ஜஸ்வந்த் சிங் மாண்ட போது அவர் அரசாங்கத்திற்குக் கடன் பாக்கித் தொகை அதிகமாகக் கொடுக்க வேண்டியிருந்தது. இதனை மீராத்தெ அஹ்மதீ கூறுகிறது. 'மகாராஜா ஜஸ்வந்த் சிங் அர

[1] *மீராத்தெ அஹ்மதீ*, I, ப. 266.
[2] I am impressed by the belief that here we have the Quranic Law of the sacredness of private property'—Sarkar, Ibid, p. 172.

சாங்கத்துக்குப் பெருங் கடன் தொகையைத் திருப்பிக் கொடுக்க வேண்டியிருந்தது; மேலும், 1670ஆம் ஆண்டில் அவர் மீண்டும் குஜராத்துக்குச் சுபேதாராக நியமிக்கப்பட்டபோது, அவர் ஒவ்வோர் ஆண்டும் தம் கடன் தீரும் வரை 2 லட்சம் ரூபாயை அரசாங்கத்திற்குத் திருப்பிக் கொடுக்கவேண்டு மென்று உத்தரவிடப்பட்டது.'[1] ஆகவே, 1678ஆம் ஆண்டு வரையிலும் கூட ஜஸ்வந்த் சிங் கொடுக்கவேண்டிய கடன் முழுதையும் திருப்பி அளித்திருக்க வழி இருந்திராது. ஜஸ்வந்த் சிங்கிற்குச் சட்டபூர்வமான வாரிசு அப்பொழுது இல்லை. அச் சூழ்நிலையில் மார்வார் நாட்டின் துர்க்காதாஸ் போர்க்கொடியை உயர்த்தியபோதும், இளவரசர் அக்பர் இராஜபுத்திரர்களுக்கு உதவியபோதும் போர் தொடங்கியது. இதுதான் வரலாற்று உண்மையாகும்.

## பொதுவான இராஜபுத்திரக் கொள்கை — இராஜபுத்திரர்கள் நியமனம்

ஔரங்கசீப் இராஜபுத்திரர்களுடன் கொண்டிருந்த தொடர்பிற்கு மற்றோர் விளக்கமும் அளிக்கலாம். ஔரங்கசீப் பொதுவாகவே இராஜபுத்திரர்களுடன் நட்புறவே பாராட்டி வந்தார். வாரிசுரிமைப் போரில் இராஜா ஜெய்சிங் ஔரங்கசீபை ஆதரித்தார். ஔரங்கசீபை ஆதரித்த '1000' அந்தஸ்துள்ள மன்சப்தார்கள் 124 பேர்களுள், 9 பேர் இராஜபுத்திரர்களே. இராஜா ஜெய் சிங்கையும், ஜஸ்வந்த் சிங்கையும் 7000 அந்தஸ்து கொண்ட மன்சப்தார்களாக ஔரங்கசீப் உயர்த்தினர். ஜஸ்வந்த் சிங்கை அவர் குஜராத் ஆளுநராக இருமுறை நியமித்தார் (1659—61, 1670—72). பெர்னியர் ஜஸ்வந்த்தை 1665-ல் சந்தித்தார். ஷாஜஹானின் ஆட்சியில் 1000 அந்தஸ்தும் அதற்கதிகமானதுமான அந்தஸ்துபெற்ற 437மன்சப்தார்களுள், 82 பேர்களே இராஜபுத்திரர்களாக விளங்கினர். மற்றும் பிற மராத்தியர்களும் வேறு பல இந்துக்களும் இருந்தனர். மொத்தம் 1000 ஜாத் என்னும் அந்தஸ்தும் அதனினும் கூடுதலானதும் பெற்றிருந்த 437 மன்சப்தார்களுள், இராஜபுத்திரர்கள் 18·7 சதவிகிதம் இடத்தைப் பெற்றிருந்தனர். ஔரங்கசீப் இந்தச் சதவிகிதத்தை முதலில் 22·4 சதவிகிதமாகவும், தம் மூன்ருவது ஆட்சியாண்டில் 24·96 சதவிகிதமாகவும் உயர்த்தினர். 1676ஆம் ஆண்டிற்குப் பிறகு எண்ணிக்கையிலும், சதவிகிதத்திலும் சரிவு ஏற்பட்டது. டாக்டர் அத்தர் அலீயின்

[1] Mirat-i Ahmadi, Vol. I, p. 277

கருத்துப்படி, ஜஸ்வந்த் சிங் 1678ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் இறந்தார். மார்வார் அரசுக்குரிய வாரிசை நிர்ணயிக்கும் பொழுதுதான் 'மார்வார், ஜோத்பூர் அரசுகளின் கலகங்கள் தொடங்க, அவை போரில் முடிந்தன.

ஜஸ்வந்த் சிங் இறந்த உடனே பேரரசர் ஜஸ்வந்த்தின் அரசுடைய சொத்துகளை, அக் காலத்தில் வழக்கத்திலிருந்த, தாமே ஆணைமூலம் பிறப்பித்த 1666ஆம் ஆண்டு 'வாரிசு இலாச் சொத்துப் பறிமுதல் சட்டத்தின்' மூலம் (மார்வார், ஜோத்பூர் உட்பட) 'காலிசா' நிலங்களாக மாற்றினார். இது சட்டப்படி நியாயமானதே. ஆனால், ஜஸ்வந்த் இறந்த பிறகே ஜஸ்வந்த்தின் பிரதம இராணி 'கர்ப்பவதி' என்று அறிய முடிந்தது. எனினும், ராத்தோடுகள் (Rathors) கொதித்து எழுந்தார்கள். 'ஆனால் கச்வாக்கள், ஹாராக்கள், பட்டிகள், பிகானீரின் ராத்தோடுகள் ஔரங்கசீபுக்கு விசுவாசமாக இருந்தார்கள்.'[1] ராத்தோடுகள் மார்வாரை இழக்கத் தயாராக இருந்தனர்; ஆனால், ஜோத்பூரை இழக்க விரும்பவில்லை. இந்நிலையில்தான் சிசோடியாக்களுக்கும், ராத்தோடுகளுக்கும் துர்க்காதாஸ் தலைவராக எழுந்திருந்தார். தந்தை காலமான பின் பிறந்த ஜஸ்வந்த் சிங்கின் குழந்தைகளைப் பேரரசர் அங்கீகரிக்காமல் இந்தர் சிங்கை (Indar Singh) வாரிசாகத் தேர்ந்தெடுத்திருந்தார். பஹதூர் கானின் ஆலோசனையையும் பேரரசர் நிராகரித்தார். அஜீத் சிங்கை ஏற்க வில்லை. இச்சூழ்நிலையில்தான் இளவரசர் அக்பர் சாம்பாஜியுடனும், இராஜபுத்திரத் தலைவர் துர்க்காதாசுடனும் இணைந்திருந்தார். இளவரசர் அக்பரின் தோல்வி பேரரசர் ஔரங்கசீப் இராஜபுத்திரர்களின் விசுவாசத்தை முற்றிலும் இழந்து விடவில்லை என்பதையே காட்டுகிறது.

## வாரிசிலாச் சொத்துப் பறிமுதல் சட்டத்திற்கு மேலும் பல சான்றுகள்

ஆயினும், இராஜபுத்திரர்கள் நாட்டு வழக்கில் இருந்த 'வாரிசு இலாச்சொத்து உரிமைச் சட்டத்தை' மறந்தே போர்க்கொடியை உயர்த்தினர். இச் சட்டம் இஸ்லாமிய சட்டத்தின் அடிப்படையில் எழுந்ததும் அன்று. ஏனெனில், இஸ்லாமிய சட்டத்தின்படியுள்ள சொத்து, வாரிசு ஆகிய ஷரத்துகளை இது மீறுவதாக உள்ளது. டாக்டர் அத்தர்

[1] Dr. M. Athar Ali's 'The Mughal Nobility under Aurangzeb'.

அலீ பல உதாரணங்களை அளிக்கின்றார். உதாரணமாக, இஸ்லாம் கான் என்பவர் 3 மகன்களையும், 10 மகள்களையும் விட்டுச் சென்றார். இறந்தவரின் சொத்து 1 கோடி ரூபாய்க்கு இருந்தது. முஸ்லிம் சட்டத்தின்படி, ஆண்களுக்கு இடையே சமபங்கு உண்டு. ஆனால், 1666ஆம் ஆண்டுச் சட்டப்படி, ஒரு மகன் இப்ராஹீம் கான் என்பாருக்கு மட்டுமே 30 லட்சம் கொடுக்கப்பட்டது. 10 பெண் பிள்ளைகளுக்கும், மீதி 2 ஆண்களுக்கும் அரசாங்கத்திற்குச் சேரவேண்டிய கடன் தொகை போக, எஞ்சியுள்ள 20 லட்சம் பிரித்துக்கொடுக்கப்பட்டது. எனவே, மார்வார் நாட்டின் மீதும் போருக்குச் செல்லக் காரணம், குறைபாடுடைய அக்கால வழக்கில் இருந்த இச் சட்டமேயாகும். இச் சட்டமே மீண்டும் 1691ஆம் ஆண்டின் ஆணை மூலம் புதுப்பிக்கவும்பட்டது.

உரிய வாரிசு இருப்பின், அந்த வாரிசிடம் சொத்துகள் சேர்ப்பிக்கப்பட்டன. எனவே, ஜஸ்வந்த் சிங்கின் மரணத்திற்குப் பின் எழுந்த போருக்கு முக்கிய காரணம் முன்பு சுட்டிக்காட்டியது போன்று, வாரிசுரிமை வழக்கும், ஜஸ்வந்த் சிங் அரசாங்கத்திற்குக் கொடுக்க வேண்டிய கடன் தொகையும், அவர் மரிக்குமுன் அவருக்குச் சட்டப்படி உரிய வாரிசுகள் இல்லாததும், ராத்தோடுகளின் கலகமும், துர்க்காதாஸின் தலைமையும், இளவரசர் அக்பர் துர்க்காதாசுக்கு இணக்கமாக இருந்ததும் ஆகியவைதாம் ஆகும். ஏனெனில், இச் சட்டம் ஜஸ்வந்த் சிங் மீது மட்டுமன்றி, இன்னும் பல முஸ்லிம் மன்சப்தார்கள் மீதும் அமலாக்கப்பட்டது. டாக்டர் அத்தர் அலீ தமது நூலில் இதற்கான பல சான்றுகளை விளக்கி விவரித்துள்ளார்.

ஆகவே, ஔரங்கசீபின் இச் சட்டத்திற்கும் ஷரீஅத்திற்கும் யாதொரு தொடர்பும் கிடையாது. இறந்துவிட்ட பிரபுக்களின் முழுச் சொத்துமோ பெரும்பான்மைப் பகுதியோ பறிமுதல் செய்யப்பட்டது என்று கருதுவதும் தவறாகும். போருக்கு மதம் குறுக்கிட வில்லையாயினும், ஔரங்கசீபின் இராஜபுத்திரக் கொள்கையில் 1666ஆம் ஆண்டிலிருந்தே சற்று மாற்றம் காணத் தொடங்கிற்று. எனினும், இது இராஜபுத்திர எதிர்ப்புக் கொள்கை போலும் என்று எண்ணிவிட லாகாது.

## இராஜபுத்திரக் கொள்கையின் விளைவுகள்

(1) முதலாவதாக, 1680ஆம் ஆண்டிற்குப் பிறகு ஔரங்கசீபின் வாரிசிலாச் சொத்துப் பறிமுதல் சட்டமே இராஜபுத்திரர்களுடன் எழுந்த பிணக்கிற்கும் போர்களுக்கும் முக்கியமான

காரணங்களுள் ஒன்ருக இருந்தமையால், இதுவரை பேரரசுக்குக் கிடைத்து வந்த இராஜபுத்திரர்களின் துணையும் பேருதவியும் இனியும் கிட்டமாட்டா என்பது முற்றிலும் உறுதியாயிற்று. இராஜபுத்திரர்களுள் சற்றேறக்குறைய 200 பேர் உயர் மன்சப்தார்களாக விளங்கி வந்த போதினும், அவர்கள் இந் நிலையை உணரத் தயாராக இல்லை. ஏனெனில், பேரரசர் ஔரங்கசீப் இராஜபுத்திரர்கள்பால் தமக்கு இருந்த பகையை வெளிப்படையாகவே காட்டிக் கொண்டார். அதுமட்டுமன்றி, இராஜபுத்திரர்களும் பறிமுதல் சட்டத்தின் பொதுத் தன்மையை உணர்ந்து பார்க்கத் தயாராக இல்லை. ஏனெனில், இச் சட்டத்தால் தங்கள் நலன் பெரிதும் பாதிக்கப்பட்டதாக அவர்கள் கருதினர். மேலும், ஔரங்கசீபும் போர்களில் ஈடுபட்டு இராஜபுத்திரர்களின் அரசுகளையும் இணைத்துக் கொண்டார். இராஜபுத்திரர்கள் இந் நிகழ்ச்சியை மறப்பதாக இல்லை. எனவே, விசுவாசமும் நம்பிக்கையும் உள்ள எஞ்சிய இராஜபுத்திரர்களின் சேவையையும் பேரரசு முற்றிலும் இழக்கும் நிலையில் இருந்தது.

இரண்டாவதாக, சிவாஜி இறந்த பின்னர், மராத்திய உள்நாட்டுக் குழப்பக் காலங்களில்தான் ஔரங்கசீபுக்கு இராஜபுத்திரர்களின் பேருதவி தொடர்ந்து தேவைப்பட்டது. மராத்தியர்களுக்கு எதிராக இராஜபுத்திரர்களை ஔரங்கசீப் நன்ருகப் பயன்படுத்தி யிருக்க வேண்டும். பேரரசர் இதனைச் செய்யத் தவறிவிட்டார். அதற்கு நேர்மாருக, 1680ஆம் ஆண்டிற்குப் பிறகுதான் இராஜபுத்திரர்கள்மீது தமக்கிருந்த பகைமையை வெளிக்காட்டும் முறையிலோ, இராஜதந்திரம் என்ற முறையிலோ இராஜபுத்திர மன்சப்தார்களின் எண்ணிக்கையைக் குறைத்து மராத்தியர்களின் எண்ணிக்கையைப் பெருக்கினர். ஆனல், இந்த அரசியல் விவேகமோ, தந்திரமோ அவர் எதிர்பார்த்த பலனைக் கொடுக்கவில்லை.

மூன்ருவதாக, மேற்கு எல்லையில் பத்தானியர்களின் எதிர்ப்பும் போரும் தொடர்ந்து நீடித்து வரவும், தக்காணத்திலும் தொடர்ந்த எதிர்ப்பு வலுப்பெற்று வரவும் நிலைமை சீரழிந்த போது, இராஜபுத்திரர்களின் உதவியை இழந்தது பேரரசுக்கு ஏற்பட்ட பேரிடியாகும். ஔரங்கசீபும், இராஜபுத்திரர்களின் நட்பை இழப்பதைப் பொருட்படுத்த வில்லை என்பது போல் பகை கொண்டு அவர்களை எதிர்த்துப் போருக்குச் சென்ற பொழுது, நலன்கள் பாதிக்கப்பட்ட இராஜபுத்திரர்களும் போருக்கு ஆயத்தமாகவே இருந்தனர். இது பேரரசுக்குப்

பெரும் அழிவையே தந்தது. ஔரங்கசீப் பகை நட்டார்; நட்புப் பிரிந்தார்; இவையே கெடுவது காட்டும் குறியாயின.

நான்காவதாக, தக்காணப் போர்களுக்கு இடையே, இராஜபுத்திரர்களுடன் நடத்திய நீடித்த போர்களின் போது இளவரசர் அக்பர் முகாம் மாறியது, பின்னர்ப் பாரசீகம் ஓடிச் சென்றது இவையனைத்தும் ஔரங்கசீபுக்கு எதிராக இராஜ புத்திரர்களின் பகையை வலுவடையச் செய்தன மட்டுமன்றி, முகலாயர்களின் படை வலிமையையும் பலவீனமடையச் செய்தன. முகலாயர்களின் பலவீனமும், அப் படையினரின் பலவீனமும் மிகவும் தெளிவாக யாரும் புரிந்து கொள்ளும் வகை யில் வெளிப்பட்டன. இவையே பேரரசு சரிவதற்கும் வழி வகுத்தன.

ஆகமொத்தத்தில், ஔரங்கசீபின் இராஜபுத்திரக் கொள்கை, அகன்ற முகலாயப் பேரரசில் முன்பே நிலவிய குழப்பங்களையும் எதிர்ப்புகளையும் கலகங்களையும் மேலும் அதிகப்படுத்திற்று; அவற்றிற்கு மேலும் வழிகோலிவிட்டது.

பொய்யில்புலவர், 'பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப் பண்டம் சால மிகுத்துப் பெயின்' என்றார். ஔரங்கசீப் இதற் கோர் உதாரணமாய் அமைந்தார். வடகிழக்கே பத்தானியர் முதல், தென் கோடியிலே மராத்தியர்வரை அவர் யாவரையும் பகைத்துக் கொண்டார். எதிரிகளின் பெரும் பாரம் ஏறிய முகலாயப் பேரரசு என்னும் வண்டியின் சக்கரம் தானே தவிடு பொடியாகி விட்டது!

[அடுத்த பக்கங்களில் இவ் வத்தியாயத்தின் பிற்சேர்க்கை யாக ஓர் அட்டவணையை வழங்கியுள்ளோம். ஔரங்கசீப் ஆட்சி யின் முற்பகுதியாகிய 1658-78-ல் அவரின் கீழ்ப் பணியாற்றிய, 1000மும் கூடுதலானதுமான அந்தஸ்துடைய மொத்தம் 486 மன்சப்தார்களுள், ஹிந்துக்களாக விளங்கிய 105 பேர்வழி களின் பெயர், அந்தஸ்து விவரங்கள் அவை.]

## ஔரங்கசீபின் கீழ்ப் பணியாற்றிய இந்து மன்சப்தார்கள்

### 3000 வீரர்கள் முதற்கொண்டு 7000 வரை

| பெயர் | பதவி வீரர்கள் | வகுப்பு இனம் |
|---|---|---|
| 1. மிர்ஜா ராஜா ஜெய்சிங் | 7,000 | இராஜபுத்திர-ஜமீன்தார் |
| 2. மகாராஜா ஜஸ்வந்த் சிங் | 7,000 | ,, ,, |
| 3. ராணு ராஜ் சிங் (Rana Raj Singh) | 6,000 | ,, |
| 4. சாம்பாஜி | 6,000 | மராத்தியர் |
| 5. ராஜ் நாயக் (Raj Nayak) | 6,000 | தக்காண-ஜமீன்தார் |
| 6. ராஜா ராம் சிங் கச்வா (Raja Ram Singh Kachwa) | 5,000 | இராஜபுத்திரர் |
| 7. மாலூஜி (Maluji) | 5,000 | மராத்தியர் |
| 8. ராஜா ராய் சிங் சிசோடியா (Raja Rai Singh Sisodia) | 5,000 | இராஜபுத்திரர் |
| 9. சம்பத் பந்தேலா (Champat Bandela) | 5,000 | இராஜபுத்திரர் |
| 10. நேதூஜீ [மதம் மாறிய பின் முஹம்மத் குலீ கான்] | 5,000 | மராத்தியர் |
| 11. ராய்சிங் ராத்தோடு (Rai Singh Rathor) | 5,000 | இராஜபுத்திர-ஜமீன்தார் |
| 12. யஷ்வந்த் ராவ் (Yashwant Rao) [மதம் மாறிய பிறகு கர்த்தலப் கான்] | 4,000 | மராத்தியர் |
| 13. இந்திர மான் தந்தேரா (Inder Man Dandera) | 4,000 | இராஜபுத்திர-ஜமீன்தார் |
| 14. ஜாதவ்ன் ராய் தக்காணி (Jadhaun Rai Deccani) | 4,000 | மராத்தியர் |
| 15. ராவ் பாவ் சிங் ஹாரா (Rao Bhao Singh Hara) | 4,000 | இராஜபுத்திர-ஜமீன்தார் |
| 16. தாமாஜி (Damaji) | 4,000 | மராத்தியர் |
| 17. ராஜா ராஜரூப் நூர்ப்பூர் (Raja Raja Rup Nurpur) | 3,500 | இராஜபுத்திரர் |

| பெயர் | பதவி வீரர்கள் | வகுப்பு இனம் |
|---|---|---|
| 18. ராஜா அனுருத் கௌர் (Raja Anurudh Gaur) | 3,500 | இராஜபுத்திரர் |
| 19. ராஜா சுஜான்சிங் பந்தேளா (Raja Sujan Singh Bandela) | 3,500 | இராஜபுத்திர-ஜமீன்தார் |
| 20. ராவ் கரன் பாரத்தியா (Rao Karan Bharatiya) | 3,500 | ,, |
| 21. பர்சோஜி தக்காணி (Parsoji Deccani) | 3,500 | மராத்தியர் |
| 22. கிராத் சிங் (Kirat Singh) | 3,000 | இராஜபுத்திரர் |
| 23. கிர்தர்தாஸ் கௌர் (Girdhar Das Gaur) | 3,000 | இராஜபுத்திர-ஜமீன்தார் |
| 24. தாத்தாஜி தக்காணி (Dattaji Deccani) | 3,000 | மராத்தியர் |
| 25. ஜகஜீவன் உதாஜி ராம் (Jagjivan Udaji Ram) | 3,000 | மராத்திய ஜமீன்தார் |
| 26. அந்தாஜீ கந்தகாலா (Antaji Kantakala) | 3,000 | மராத்தியர் |
| 27. பைராம் தேவ் சிசோடியா (Bairam Dev Sisodia) | 3,000 | இராஜபுத்திர-ஜமீன்தார் |
| 28. ரகுநாத்ராய் ராயன் | 3,000 | இந்து |
| 29. ரகுநாத சிங் சிசோடியா சந்திரவத் (Ragunatha Singh Sisodia) | 3,000 | இராஜபுத்திரர் |

மொத்தம் 141 மன்சப்தார்களுள் 'அமீர் ஆஜம்' பதவியை வகித்தவர்கள் 29 பேர்கள். மொத்த சதவிகிதம் 20·57%.

### 1000 வீரர்கள் முதற்கொண்டு 2500 வீரர்கள் வரை

| | | |
|---|---|---|
| 30. ராஜா தேபி சிங் பந்தேளா (Raja Debisingh Bandela) | 2,500 | இராஜபுத்திரர் |
| 31. அனூப் சிங் (Anup Singh) | 2,500 | இராஜபுத்திர-ஜமீன்தார் |
| 32. சுப கரன் பந்தேளா (Suba Karan Bandela) | 2,500 | ,, |
| 33. பாபாஜி பான்ஸ்லே (Babaji Bonsle) | 2,500 | மராத்தியர் |

| | பெயர் | பதவி வீரர்கள் | வகுப்பு இனம் |
|---|---|---|---|
| 34. | பகவத் சிங் (சத்தர்சால் ஹாராவின் மகன்) | 2,500 | இராஜபுத்திரர் |
| 35. | ராவ் அமர் சிங் சந்திரவத் (Rao Amar Singh Chandrawat) | 2,500 | இராஜபுத்திரர் |
| 36. | மானுஜீ பான்ஸ்லே (Manaji Bonsle) | 2,500 | மராத்தியர் |
| 37. | ருஸ்தம் ராவ் (Rustam Rao) | 2,500 | மராத்தியர் |
| 38. | சபல் சிங் சிசோடியா (Sabal Singh Sisodia) | 2,500 | இராஜபுத்திரர் |
| 39. | திரிம்பக்ஜி பான்ஸ்லே (Trimbakji Bonsle) | 2,500 | மராத்தியர் |
| 40. | ராஜா பிக்ரம் சிங் (Raja Bikram Singh of Gaur) | 2,500 | இராஜபுத்திர-ஜமீன்தார் |
| 41. | ராஜா நரசிங் கௌர் (Raja Nar Singh Gaur) | 2,000 | ,, |
| 42. | இராஜா தோடர் மால் (Raja Toder Mal) | 2,000 | ,, |
| 43. | ஜகத் சிங் ஹாரா (Jagat Singh Hara) | 2,000 | ,, |
| 44. | நாருஜி தக்காணி (Naruji Deccani) | 2,000 | மராத்தியர் |
| 45. | போரன் மல் பந்தேளா (Poran Mal Bandela) | 2,000 | இராஜபுத்திரர் |
| 46. | வியாச் ராவ் (Biyas Rao or Viyas Rao) | 2,000 | மராத்தியர் |
| 47. | தாதாஜி (Dadaji) | 2,000 | ,, |
| 48. | மோட்னி சிங் | 2,000 | இராஜபுத்திரர் |
| 49. | பிரீதி சிங் (Prithi Singh) | 2,000 | ,, |
| 50. | தானுஜி (Tanuji) | 2,000 | மராத்தியர் |
| 51. | பஹார் சிங் கௌர் (Pahar Singh Gaur of Inderkhi) | 1,500 | இராஜபுத்திரர் |
| 52. | கோபால் சிங் (Gopal Singh S/o Raja Swarup) | 1,500 | ,, |
| 53. | பாகூஜி தக்காணி (Baguji Deccani) | 1,500 | மராத்தியர் |
| 54. | சாரங்க் தார் (Sarang Dhar Zamindar of Jamun) | 1,500 | இந்து ஜமீன்தார் |

| | பெயர் | பதவி வீரர்கள் | வகுப்பு இனம் |
|---|---|---|---|
| 55. | ஜகத்சிங் | 1,500 | இராஜபுத்திரர் |
| 56. | கேசரிசிங் பாரத்தியா (Kesari Singh Bartiya) | 1,500 | ,, |
| 57. | ரம்பாஜி தக்காணி (Rambaji Deccani) | 1,500 | மராத்தியர் |
| 58. | ராய் மக்ரந்த் (Rai Makrand) | 1,500 | இந்திய-ஜமீன்தார் |
| 59. | போஜ்ராஜ் கச்வாஹா (Bojraj Kachwaha) | 1,500 | இராஜபுத்திரர் |
| 60. | மீர்சென் பந்தேளா (Mir Sen Bandela) | 1,500 | ,, |
| 61. | தக்கூஜி (Takkuji) | 1,500 | மராத்தியர் |
| 62. | ராஜா மான் சிங் (Raja Man Singh of Guler) | 1,500 | இராஜபுத்திரர் |
| 63. | ஹர்ஜிஸ் கௌர் (Harjis Gaur) | 1,500 | ,, |
| 64. | சத்தர்புஜ் சௌஹான் (Chatterbhuj Chauhan) | 1,500 | இராஜபுத்திர-ஜமீன்தார் |
| 65. | ராஜா அமர்சிங் நரோரி (Raja Amar Singh Narori) | 1,500 | ,, |
| 66. | ராஜா கிஷன்சிங் தௌனூர் (Raja Kishan Singh Taunur) | 1,500 | ,, |
| 67. | உதயபான் ராத்தோடு (Udaya Bhan Rathor) | 1,500 | ,, |
| 68. | மான்சிங் ராத்தோடு (Man Singh Rathor) | 1,500 | ,, |
| 69. | ஜகராம் கச்சவாஹா (Jag Ram Kachwaha) | 1,500 | இராஜபுத்திரர் |
| 70. | ரகோஜி (Ragoji S/o Manaji Bonsle) | 1,500 | மராத்திய-ஜமீன்தார் |
| 71. | ஷர்ஜா ராவ் காவா (Sharja Rao Kawa) | 1,500 | ,, |
| 72. | ரகுநாத் சிங் பாரத்தியா | 1,500 | இராஜபுத்திரர் |
| 73. | மஹேஷ்தாஸ் ராத்தோடு | 1,500 | ,, |
| 74. | ரகுநாத் சிங் மீரத் | 1,500 | இராஜபுத்திர-ஜமீன்தார் |

| | பெயர் | பதவி வீரர்கள் | வகுப்பு இனம் |
|---|---|---|---|
| 75. | ரகுநாத் சிங் ராத்தோடு (Ragunath Singh Rathor) | 1,500 | ஜமீன்தார் |
| 76. | கரன் கச்சி (Karan Kachi) | 1,500 | இராஜபுத்திர-ஜமீன்தார் |
| 77. | ராஜா பிரீதி சந்த் (Raja Prithi Chand) | 1,500 | ,, |
| 78. | ஷேர்சிங் ராத்தோடு (Sher Singh Rathor) | 1,500 | ,, |
| 79. | மஹரவால் ஜஸ்வந்த் சிங்-துர்காபூர் (Maharawal Jaswant Singh of Durgapur) | 1,000 | ,, |
| 80. | இந்தர்சிங் (Inder Singh Son of Rao Rai Singh) | 1,000 | ,, |
| 81. | ராஜா மஹாசிங் பஹ்தூரியா (Raja Maha Singh Bahdooriya) | 1,000 | ,, |
| 82. | ராம்சிங் (ரத்தன் ராத்தோடு மகன்) (Ram Singh S/o Rattan Rathor) | 1,000 | இராஜபுத்திரர் |
| 83. | சத்ருஜி தக்காணி (Chatruji Deccani) | 1,000 | மராத்தியர் |
| 84. | மான்தாத்தா (Man Data) | 1,000 | இராஜபுத்திரர் |
| 85. | ராஜா ஜெய்சிங் (Raja Jai Singh) | 1,000 | ,, |
| 86. | ராஜ பருஜ் (Raja Bahruj) | 1,000 | ,, |
| 87. | சூரஜ்மல் கௌர் (Suraj Mal Gaur) | 1,000 | இராஜபுத்திரர் |
| 88. | இந்தர்மன் பந்தேளா | 1,000 | ,, |
| 89. | வனீரத்ஜி மகன் மானுஜி (Manaji S/o Waneeradji) | 1,000 | மராத்தியர் |
| 90. | கட்ச் ஜமீன்தார் தாமாஜி (Tamaji Zamindar of Cutch) | 1,000 | இராஜபுத்திர-ஜமீன்தார் |
| 91. | ஸ்ரீநகரின் பீம்சிங் (Bhim Singh of Srinagar) | 1,000 | ,, ,, |
| 92. | கார்க்கூஜி (வன்கர்ராவ் மகன்) (Garkhuji S/o Wankar Rao) | 1,000 | மராத்தியர் |

| | பெயர் | பதவி வீரர்கள் | வகுப்பு இனம் |
|---|---|---|---|
| 93. | சௌன்சிங் (Saun Singh of Kali Bhet) | 1,000 | இராஜபுத்திரர் |
| 94. | பந்தாரின் கல்யாண்சிங் (Kalyan Singh of Bandhar) | 1,000 | ,, |
| 95. | பாவோசிங் பின்பு முரீத்கான் (Bhao Singh, Murid Khan) | 1,000 | இந்து |
| 96. | ரகுஜி கோப்பரே (Raghuji Goparay) | 1,000 | மராத்தியர் |
| 97. | பிரேம் சிங் (Prem Singh of Srinagar) | 1,000 | இராஜபுத்திரர் |
| 98. | மனோஹர்தாஸ் சிசோடியா (Manohar Das Sisodia) | 1,000 | ,, |
| 99. | ராஜா ஷேர்சிங் (Raja Sher Singh of Chamba) | 1,000 | இராஜபுத்திர-ஜமீன்தார் |
| 100. | பனவாலிதாஸ் பாரத்தியா (Pawali Das Bartiya) | 1,000 | இராஜபுத்திரர் |
| 101. | பஹ்லா விஜய் (Pahla Vijai) | 1,000 | மராத்தியர் |
| 102. | பகவந்த் (Phagwant) | 1,000 | இராஜபுத்திரர் |
| 103. | ராஜா ஜஸ்வந்த் சிங் பந்தேலா | 1,000 | ,, |
| 104. | மணிராம் (Mani Ram) | 1,000 | இந்தியர் |
| 105. | அமர்சிங் மகன் முகம்சிங் | 1,000 | இராஜபுத்திர-ஜமீன்தார் |

மேற்குறிப்பிட்ட 105 மன்சப்தார்களும் 1658ஆம் ஆண்டிலிருந்து 1678ஆம் ஆண்டு வரை பணியாற்றியவர்களாவர். மொத்த எண்ணிக்கை 486-ல் 105 பேர் இந்துக்கள் ஆவர். ஆகவே, மொத்த மன்சப்தார்களுள் 21·6 சதவிகித இடத்தைப் பெற்றிருந்தனர். இதைவிட வியப்புக்கு உரியது என்னவெனில், ஜஸ்யா வரி விதித்த பின்பும், (1779ஆம் ஆண்டிற்குப் பிறகும்) மொத்தம் 575 மன்சப்தார்களுள் இந்துக்கள் 182 பேர்கள் மன்சப்தார்களாக இருந்தனர். எல்லோரும் நம்பி வருவதற்கு மாறாக, எண்ணிக்கை வீதம் 31·6 சதவிகிதமாக உயர்ந்தது; ஆக 10% உயர்வு.

ஆதாரம் : டாக்டர் அத்தர் அலீ-
'The Mughal Nobility under Aurangzeb'

# 15 ஔரங்கசீபும் பிற கலகங்களும்

பந்தேலாக்களும், சத்னுமியர்களும், ஜாத்துகளும், சீக்கியர்களும் ஏதோ தேசிய எழுச்சிகளைப் பெற்றுக்கொண்டது போலவும், அவர்களும் சுதந்தர உணர்வு பெற்று வீறுகொண்டு எழுந்து ஔரங்கசீபின் பேரரசைச் சின்னபின்னமாக்க முயற்சிகள் எடுத்தது போலவும் வரலாற்று ஆசிரியர்கள் மிகைபடுத்திக் காட்டுகின்றனர். மேற்கூறப்பட்ட அனைவரும் தேசிய உணர்வு கொண்டு தங்கள் மதத்தைக் காத்திட எண்ணி ஔரங்கசீபை எதிர்த்தனரா என்றால், இல்லை என்றே கூறவேண்டும். உண்மையில், பேரரசுக்கு அவர்கள் பல வழிகளில் சிறுசிறு தொல்லைகளை உண்டுபண்ணி வந்தனரே அல்லாது, மாபெரும் எழுச்சியானதொரு பேரியக்கத்தைத் தோற்றுவித்தது மில்லை, அப்படித் தோற்றுவிப்பதில் வெற்றி பெறவுமில்லை.

## 1. பந்தேலாக்கள்

பந்தேலாக்கள் என்பவர்கள் யார்? தற்கால மத்தியப் பிரதேசத்தில், அதாவது, ஔரங்கசீபின் ஆட்சிக்கால பீரார், காந்தேஷுக்கு வட பகுதியில் பந்தேல்கந்த் பகுதியில் வாழ்ந்துவந்த மக்கள் 'பந்தேலாக்கள்' என்னும் இராஜபுத்திரர்களின் ஒரு பிரிவினராவர். ஆனால், இந்தப் பந்தேலாக்களின் தலைவராகப் பீர்சிங் என்பார் தம்மையே முதன்முதலாகத் தேர்ந்தெடுக்கச் செய்து கொண்டு, ஆதரவாளர்களின் கூட்டத்தைப் பெருக்கிக்கொண்டார். இந்தப் பீர்சிங் பந்தேலா என்பவர் யார் தெரியுமா? இளவரசர் சலீம் ஜஹாங்கீர் என்ற பட்டத்துடன் ஆட்சிக்கு வருவதற்கு முன்பு, தம் தந்தை அக்பரை எதிர்த்துப் புரட்சி செய்தார். இவர் ஆட்சியைக் கைப்பற்ற முயன்றபோது, தம் தந்தையின் உயிர் நண்பரான அறிஞர் அபுல் ஃபசலைக் கொல்லுவதற்கும் கூடத் தயங்கவில்லை. இளவரசர் சலீமின்

தூண்டுதலின் பேரில் பீர்சிங் பந்தேலாதான் அபுல் ஃபசலேக் கொன்ருர்; இதன் மூலம் சலீமுக்கு நல்லதொரு சூழ் நிலையை உருவாக்கித் தந்தார். சம்பத் ராய் என்பவர் பீர்சிங் பந்தேலாவின் வழிவந்தவர். சம்பத் ராயின் நான்கு ஆண் மக்களுள் ஒருவர்தாம் சத்ரசால் (Chatrasal) என்பவர் ஆவார். இவர் 1645-ல் பிறந்தார். சத்ரசாலும் அவருடைய சகோதரர் அங்கத் என்பவரும் ஔரங்கசீபின் கீழும் ராஜா ஜெய் சிங்கின் தலைமையின் கீழும் சிவாஜியை எதிர்த்துப் புரந்தர்க் கோட்டையைப் பிடிக்கச் சென்றனர். சிவாஜியின் வெற்றி களைக் கண்கூடாகப் பார்த்துவந்த சத்ரசாலுக்கும் ஆசை தோன்றியது. எனவே, இவர் 1670ஆம் ஆண்டில் சிவாஜியைச் சந்தித்துத் தம்மை அன்னாரின் சேவையில் சேர்த்துக்கொள்ளு மாறு வேண்டிக்கொண்டார். ஆனால், சிவாஜியோ, அவர் தம் மாநிலமான பந்தேல்கந்துக்குச் சென்று ஔரங்கசீபை எதிர்த்துப் போரிடுவாராக என்று சத்ரசாலுக்கு அறிவுரை கூறினர். வரலாற்று உண்மை இவ்வாறிருக்க, சத்ரசால் ஔரங்கசீபை எதிர்த்துச் சிவாஜியைப் போன்று கொரில்லாப் போர் முறையில் ஈடுபட்டதை, ஔரங்கசீபின் அரசு அல்லது மதக் கொள்கைகளினுல் விளைந்த நிகழ்ச்சி என்று திரித்துரைப் பது முற்றிலும் தவருகும். அவ்வாறு பந்தேலாக்கள் மதப்பற்று மிகுந்து விடுதலை உணர்வு பெற்று எழுச்சிபெற நினைத்திருப்பரே யானுல், அது சிவாஜிக்குப் பிறகு அல்லாமல், ஔரங்கசீப் ஆட்சிக்கு வருவதற்கு முன்னதாக அல்லவா நிகழ்ந்திருக்க வேண்டும்? அது மட்டுமன்றி, சத்ரசால் அப்படியே விடுதலை உணர்வு பெற்றிருப்பாரேயானுல், முதலில் ஜெய் சிங்கின் தலைமையின் கீழும், அதன் பின்னர்த் தேவ்கர்க் கோட்டையை முகலாயத் தளபதி திலாவர் கான் தாக்கியபோது முகலாயரின் கீழும் எவ்வாறு சேவை புரிய அவர் இசைவு தெரிவித்திருக்க முடியும்? எனவே சத்ரசாலின் எழுச்சியினுல் பேரரசுக்கு எவ்வித நட்டமும் விளைந்திட வில்லை. சத்ரசாலின் வழியைப் பின் பற்றித் துர்ஜன் சால் (Durjan Sal) என்னும் மற்ருெரு பந்தேலா வும் கூட்டாகக் கொள்ளை யடிப்பதில் ஈடுபடலாயினர். ஔரங்க்சீப் தக்காணத்தில் இருக்கையில், சத்ரசால் மாளவத் தையும் குஜராத்தையும் சூறையாடினர். ஷேர் ஆஃப்கன் என்னும் தளபதி சத்ரசாலைத் தோல்வியுறச் செய்தார். சத்ரசால் கோட்டைக்குள் ஒளிந்து கொண்டார். பின்னர்ப் பல ஆண்டுகள்வரை அவர் காத்திருந்து ஔரங்கசீப் இறந்த பின்னர்ப் போர்களில் மீண்டும் ஈடுபடலானர்.

## 2. சத்னுமியர்

சத்னுமியர் என்போர் யாவர்? பெயரளவில் தங்களைச் 'சத்னுமியர்கள்' அல்லது உண்மை விளம்பிகள் (சத்தியப் பெயருடையவர்கள்) என்று அழைத்துக்கொண்ட போதிலும், இவர்கள் சத்தியத்துக்கு மாருகக் கொள்ளையிலும் கொடூரமான நடவடிக்கைகளிலும் ஈடுபட்டு வந்தனர். ஈசுவர தாஸ் நகார் என்ற வரலாற்ருசிரியர் (17ஆம் நூற்ருண்டு) சத்னுமியர்களை 'எல்லை கடந்த நாற்றம் பிடித்தவர்களும் கொடுமையாளர்களும் ஆவர்' (Extremely filthy and wicked men) என்று வர்ணித்துள்ளார். இவர்கள் தங்கள் தலைகளை மொட்டை யடித்து வந்தனர். எனவே, 'முண்டர்கள்' என்றும் இவர்கள் அழைக்கப்பட்டனர். தங்கள் கண்களின் புருவத்தையும் இவர்கள் மழித்து வந்தனர். இவர்கள் பன்றி, நாய் முதலியவற்றின் இறைச்சியையும் தின்றனர். இவர்களைப்பற்றி 'மஆஸிரெ ஆலம்கீரி'யின் ஆசிரியர் ஸகீ முஸ்தஇத் கானும் கடுமையாகச் சாடுகின்ருர்: 'தச்சர்கள், தோட்டிகள், தோல் பதனிடுபவர்கள், பொற்கொல்லர்கள் ஆகியோரின் கூட்டம் புரட்சியாளர்களாகக் கூடுவதும், அகந்தையுடன் எதிர்ப்பதும் மிகவும் விந்தையாகத்தான் உள்ளது. மீவார் ராஜ்யத்தில் மக்களின் கும்பல் வெட்டுக்கிளிப் படைகளைப் போன்று குழுமிவிட்டது. நார்னுல் பகுதியில் 5000 மக்கள் கூடிக்கொண்டு, நகரங்களையும் மாவட்டங்களையும் கொள்ளையடித்து வருகின்றனர்.'[1] ஆனுல், அறிஞர் காஃபீ கான் இவர்களைப்பற்றி வேறுவிதமாகக் கருதுகிருர்: 'சத்னுமியர்கள் என்றும், முண்டியர்கள் என்றும் பெயருடைய இந்துப் பக்தர்கள் நார்னுல் மீவார்ப் பகுதிகளில் தொல்லை அளிக்கத் தொடங்கினர். பக்தர்களைப் போன்று ஆடை அணிந்து கொண்டாலும் வேளாண்மையிலும் வணிகத்திலும் ஈடுபடுகின்றனர். இவர்கள் நேர்வழியில் அல்லாமல் வேறு வழியில் பொருள் ஈட்டச் சம்மதிப்பதில்லை.'[2]

ஆனுல், சத்னுமியர்களின் எழுச்சி ஓர் இயக்கமா? அல்லது தேசிய எழுச்சியா? என்ருல், அஃது ஓர் இயக்கமுமன்று, எழுச்சியுமன்று; ஆனுல், ஒரு சிறு கும்பலின் பெரும் கலகமாகும். பேரரசின் அரசியல் கொள்கைகள் இவர்களின் கலகத்திற்குக் காரணமாக இருந்தனவா? நிச்சயமாக இல்லை. எவ்வா

[1] Elliot and Dowson—History of India as told by its own historians, p. 185-87. Also quoted by S. R. Sharma, Ibid. p. 392. Also, Dr. Darachand, Influence of Islam on Indian Culture.

[2] Op. cit. p. 294-96,

றெனில், பேரரசின் இராணுவ வீரர் ஒருவருக்கும் சத்னுமி யருக்குமிடையே எழுந்த தகராறு கலகமாக முற்றிற்று. முகலாய வீரர் சத்னுமியரின் நிலம் ஒன்றின்மீது கண்காணிப்பைச் செலுத்தி வந்தபோது, அவ் வீரருக்கும் சத்னுமியருக்கும் இடையில் கைகலப்பு ஏற்பட்டு அத் தளத்தின் சிக்கேதார் (Shiquedar) சத்னுமியர்களைக் கைது செய்ய, அவர்கள் நாற்றல் இராணுவ நிர்வாகத்திற்கு எதிராக ஆயுதங்கள் கொண்டு எழலாயினர். இது பெரும் போராக முற்றியபோது, பேரரசின் பெரும் படைகளாலும் அவர்களை அடக்கமுடியவில்லை என்றும், இதன் பின்னர்ப் பேரரசின் மந்திரங்களும், பூஜைகளுமே பலனளித்தன என்றும் காஃபீ கான் கூறுகிறார். மேற்கண்ட நிகழ்ச்சிகளிலிருந்து, சத்னுமியர்களின் எழுச்சியை ஔரங்கசீபின் கொள்கைகளுக்கு விரோதமாக எழுந்த ஒன்று என்று கூறுவது பொருத்தமாகுமா?

## 3. ஜாத்துகள்

ஜாத்துகள் என்பவர்கள் யார்? ஜாத்துகள் என்பாரும் இராஜபுத்திரர்களைப் போன்று, வடமதுராவைச் சுற்றி வாழ்ந்த எளிய வேளாண்மையினர் ஆவர். இவர்கள் ஔரங்கசீப் ஜஸியா விதித்ததை எதிர்த்து எழவில்லை; அல்லது ஔரங்கசீப் ஆட்சி பீடத்தில் அமர்ந்த உடனேயே அவரது கொள்கைகளை எதிர்த்தும் எழவில்லை. ஆனால், மதுரா, குவாலியர் ஆகிய பகுதிகளில் ஃபவுஜ்தார் (தலைமை நிர்வாகி) அப்துன் நபி என்பார் உழவர்களை 1660-லிருந்து 1669 வரை கொடுமையாக நடத்திவந்தார். மத நம்பிக்கையும் பற்றும் மிகுந்த அப்துன் நபி மதுராவில் மசூதியை நிர்மாணித்தபோது, இதற்கு எதிர்ப்பு எழுந்தது. இந்த எதிர்ப்பை ஒட்டிப் பேரரசருக்கு எதிராகச் சதிகளும் பலர் செய்யலாயினர்.[1] இந்த ஜாத்தியர்கள் கோக்குல் (Gokul) என்பவரின் தலைமையின்கீழ்க் கொள்ளையடிக்கவும் தொடங்கினர்; சாதாபாத் பர்கானுவில் கொள்ளையடித்து அந்தத் தலைமை நிர்வாகியையும் கொன்றனர். ஜூன் 1669ஆம் ஆண்டில் அப்துல் முகர்ரம் என்னும் பிரதம நீதிபதியை, உத்தவ் பைராகி (Uddav Bairagi) என்னும் ஜாத்துகளின் மதத் தலைவரின் தூண்டுதலின் பேரில் கொன்றனர்.[2] ஆக்ராவிலிருந்து டெல்லிக்கும், டெல்லியிலிருந்து தோல்பூருக்கும்

[1] 'Some frantic attempts were made on the Emperor's life, but they were childish and ended in failure'—quoted by S. R. Sarma, The Mughal Empire in India, p. 390.

[2] Dr. Tarachand—'Influence of Islam on Indian Culture'.

(Dholpur), தோல்ப்பூரிலிருந்து மாளவம், பிறகு தக்காணத்திற்கும் பொருள்கள் ஜாத்தியர்களின் மண்டல வழியாகக் கொண்டுசெல்லப்பட்டபோது, இவர்கள் பொருள்களைச் சூறையாடுவதற்குத் தக்க வாய்ப்பாக அமைந்தது. கோக்குல் என்பாரின் படைகள் 20,000 ஆகப் பெருகின. எனவே, நாளுக்கு நாள் காரணம் இன்றி, இவரின் கலகம் ஆக்ராவரை பரவிய போது, ஹசன் அலீ கான் என்பாரைப் பேரரசர் அனுப்பிக் கோக்குலைக் கைது செய்து கொண்டு வருமாறு பணித்தார். இத் தளபதியை எதிர்த்துத் தாக்கியதில் 5,000 ஜாத்தியர்கள் மாண்டனர். கோக்குலின் 7,000 ஆள்கள் கைது செய்யப்பட்டனர். ஆனால், அதே நேரத்தில் பேரரசர் இந்த ஜாத்தியர்களின் நிலங்களுக்கும் பயிர்களுக்கும் சேதம் ஏற்படாதவாறு 200 குதிரை வீரர்களை மேற்பார்வை இட்டு வருமாறும் பணித்தார்.[1] குழந்தைகள் கைது செய்யப்படவில்லை. எனவே, இதிலிருந்து ஜாத்தியர்களின் எழுச்சியுங்கூட நிலஉரிமைகளின் மீது எழுந்த வழக்குகளை ஒட்டிய எழுச்சியாக இருக்கவேண்டுமே அல்லாது, ஔரங்கசீபின் மதக்கொள்கையுடனோ வேறு அரசியல் கொள்கையுடனோ எவ்வகையிலும் தொடர்பு கொண்டிருப்பதாகத் தோன்றவில்லை. அவ்வாறு இல்லையானால், ஜாத்தியர்களின் விவகாரங்களில் மட்டும் ஔரங்கசீப் குறிப்பாக அவர்களின் நிலங்களையும் பயிர்களையும் பாதுகாப்பதற்கு வேண்டிய சிறப்பு ஏற்பாடுகளைச் செய்திருக்க வேண்டியதில்லையே!

ஆனால், ஜாத்தியர்கள் அடங்கி யிருக்க மனமில்லாமல், 1681ஆம் ஆண்டில் மீண்டும் எழுந்தனர். இதற்கும் சத்ரசால், சிவாஜி ஆகியோரின் எழுச்சிகள் எடுத்துக்காட்டாக அமைந்திருக்கவேண்டும். 1681ஆம் ஆண்டிலிருந்து சின்சாரி, சோகர் (Sinsari, Sogar) என்னுமிடங்களில் ராஜாராமும் ராமச்சந்திரரும் காடுகளில் ஒளிந்து கொள்வதும், பின்னர்ப் பொதுப் பாதையின் வழியே செல்லும் பொருள்களைச் சூறையாடுவதுமாக ஆக்ரா வரைக்கும் தங்கள் நடவடிக்கைகளைத் தொடர்ந்து நடத்தியபோது, ஆக்ராவின் கவர்னர் ஷாஃபி கான் (Shafi Khan) என்பவர், அவர்களை அடக்குமாறு அனுப்பப்பட்டார். ஷாஃபி கான் தோல்வியே கண்டார். இவர்களை அடக்க முடியவில்லை. 1688-ல் ஹைதராபாதின் மீர் இப்ராஹீம் என்பவர் பஞ்சாப் மாகாணத்தின் கவர்னராக இருந்தபோது, இவர்கள்

[1] 'Humanly detached 200 horsemen to guard the crops of the villages and prevent the soldiers from opposing any of them and taking any child prisoner' Elliot and Dowson, op. cit. p. 184. Also quoted by Sarkar and Sharma, p. 191.

அவரது மாளிகையிலிருந்து கொள்ளையடித்தும்,[1] அதே ஆண்டில் சிக்கந்தராவில் அக்பரின் கல்லறையிலிருந்த தங்கம், வெள்ளிப் பாத்திரங்களையும், ஜமுக்காளங்களையும் கொள்ளை அடித்தும் சென்றனர்.[2] 1691-ல் மீண்டும் வழிப்போக்கர்களிடம் இருந்தும் யாத்ரீகர்களிடமிருந்தும் கொள்ளையடித்து வந்தனர்; ஆக்ராவுக்கு அருகில் சில பெண்களைச் சிறைப்படுத்தினர். அவர்களை விடுவிக்க முகலாயத் தளபதி அகர் கான் (Agar Khan) அனுப்பப்பட்டார். பெண்கள் விடுவிக்கப்பட்டனர். ஆனால், போரில் அல்லது கலகத்தின் போது இத் தூரானிய தளபதி அகர் கான் கொல்லப்பட்டார். எனவே, ஔரங்கசீபின் மதக் கொள்கைகளுக்கும், ஜாத்தியர்கள் குரூரமிக்க கொள்ளைகளில் ஈடுபட்டதற்கும் என்ன தொடர்பு இருக்க முடியும்? மதக் கொள்கையே காரணமாக இருந்திருக்குமேயானால், அவர்களின் எழுச்சியும், இயக்கத்தின் வளர்ச்சியும் வேறுவிதமாக அல்லவா இருந்திருக்க வேண்டும்?

**சுராமன் எதிர்ப்பு :** பேரரசர் மதுராவின் இராணுவத் தலைவராகப் பிஷன்சிங் கச்சுவா (Bishen Singh Kachwa) என்னும் அம்பர் ராஜாவை நியமித்திருந்தார். பிஷன்சிங்கையும், பீதார் பக்தையும் சின்சாரி (Cinsari) என்னும் நகரைத் தலைநகராகக் கொண்ட ஜாத்தியர்களை மீண்டும் அடக்குமாறு அவர் பணித்தார். இதற்கு முன்பே கும்பல்சண்டையில் ராஜாராமை எதிர்த்த மற்றொரு ஜாத்தியர்களின் கும்பல் ராஜாராமைக் கொன்றுவிட்டது. இப்பொழுது சுராமன் (Churaman) என்பார் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார். 10 ஆண்டுகளுக்குள் ஜாத்தியர்கள் முன்பு அடங்கிவிட்ட போதிலும், சுராமனின் தலைமையில், ஔரங்கசீப் இறந்த பின்னர், அவர்கள் மீண்டும் எழுந்தனர். எனவே, இதுவும் ஜாத்தியர்களுக்கு நாட்டு உணர்வோ, இந்து சமயத்தைக் காத்திட வேண்டுமென்ற உண்மையான பற்றோ கிடையாது என்பதையும், அவர்களது எழுச்சி தேசிய எழுச்சி அன்று என்பதையும் நிரூபிக்கிறது.

[1] டாக்டர் சையத் முஹம்மத் லத்தீஃப் 'History of Punjab', Eurasia Publication (1964 Edn.)

[2] சிக்கந்தராவிலிருந்த அக்பரின் கல்லறையை ராஜாராம் சூறையாடிக் கொள்ளையடித்த விவரங்களைச் சுருக்கமாகச் சர்க்கார் அறிவித்துள்ளார். ஆனால், ஈசுவரதாஸும், மனுச்சியும் பின்வருமாறு கூறுகின்றனர் : They began their pillage by breaking in the great gates of bronze which it had, robbing the valuable precious stones and plates of gold and silver, and destroying what they were not able to carry away. Dragging out the bones of Akbar, they threw them angrily into the fire and burnt them'-Short History of Aurangzeb p. 399 note.

ஜாத்தியர்களைப் போன்றே ஔரங்கசீபிடம் மேற்குப் பந்தேல்கந்தில் இந்திராக்கி என்னுமிடத்தில் ஜமீன்தாராக இருந்த 'பஹார் சிங் கௌர்' (Pahar Singh Gaur) என்பவரும், குஜராத் மாநிலத்தின் நகர் (Nagar) என்னும் இடத்தின் செல்வாக்குள்ள பிராமணர் கங்காராம் என்பாரும், மாளவத்தின் ராம்பூரா என்னுமிடத்தின் ஜமீன்தாரரான கோபால்சிங் என்பாரும் ஔரங்கசீபுக்கு எதிராக ஆங்காங்கே படைகளைச் சேர்த்துக்கொண்டு எழுந்தனர் என்றாலும்,[1] இவற்றை எல்லாம் தேசிய எழுச்சி என்றோ, ஔரங்கசீபின் கொள்கைகளைக் கண்டிப்பதற்காக எழுந்தவை என்றோ கூறுவது முற்றிலும் பொருந்தாது. ஏனெனில், இவர்கள் அனைவருக்கும் நில உரிமை, ஜமீன் வழக்கு ஆகிய சொந்தக் காரணங்கள்தாம் இருந்தனவே அல்லாது, நாடு முழுவதற்கும் என்றோ, அல்லது தாம் வாழ்ந்த பகுதி மக்கள் அனைவருக்கும் ஏற்ற பொதுவான நலன் என்றோ அவர்களுக்கு எந்த ஒரு கோட்பாடுமே கிடையாது. எனவே, இவர்களின் சிறு சிறு கலகங்களையும் சிலர் மிகைபடுத்திப் 'பெரும் இயக்கங்கள்' என்று பெயர் கட்டிவிட்டிருக்கின்றனர்.

## 4. சீக்கியர்கள்

சீக்கியர்களின் முழு வரலாற்றை ஆராய்வது இங்கு நோக்கமில்லையாயினும், ஔரங்கசீபின் ஆட்சி வரைக்கும் நிகழ்ந்த வரலாறு, ஔரங்கசீப் சீக்கியர்களுடன் கொண்டிருந்த தொடர்பினை விளக்கப் பின்னணியாக அமையும்.

15, 16ஆம் நூற்றாண்டுகளில் குருநானக் இஸ்லாமிய-இந்து மதங்களின் கோட்பாடுகளைத் தொகுத்து, அவற்றை மையமாக வைத்துச் 'சீக்கியம்' என்னும் புனித மதம் ஒன்றை நிறுவினார். இம் மதத்தில் மொத்தம் 10 குருக்கள் இருந்தனர். சந்தர்ப்ப வசமாக இந்த 10 குருமார்களும் முகலாயர்களின் காலத்தில் நிகழ்ந்த எதிர்ப்புக் கணைகளை ஏற்றுத் தங்கள் மதத்தைப் பலப்படுத்தினர். குரு நானக்கோ அல்லது இரண்டாவது குருவான (ஹுமாயூன் காலத்தவர்) அங்கத் (Angad) என்பாரோ, மூன்றாவது குருவான அமர்தாஸ் (Amardas) என்பாரோ, நான்காம் குருவான ராம்தாஸ் (Ramdas) என்பாரோ மத விவகாரங்களைத் தவிர்த்து அரசு விவகாரங்களில் கலந்துகொள்ளவே இல்லை. (குரு அமர்தாஸும் ராம்தாஸும் அக்பரின் காலத்தவர்கள்; அர்ஜுன்மால் என்பாரும் அக்பர் காலத்தவர் ஆவார்.)

[1] Ibid, p. 400-402.

ஆனால், ஆதி கிரந்தத்தைத் தொகுத்துக் கொடுத்த அர்ஜுன் சிங் (Arjun Singh) என்னும் ஐந்தாம் சீக்கிய குருதாம் முதன் முதலில் அரசியலில் ஈடுபட்டு, ஜஹாங்கீருக்கு எதிராக இளவரசர் குஸ்ரூ என்பவரை ஆதரித்தார். 1606ஆம் ஆண்டிலிருந்து முகலாயர்களுக்கும் சீக்கியர்களுக்குமிடையே பெரும் பிளவு தோன்ற ஆரம்பித்தது. குரு அர்ஜுன்சிங் ஜஹாங்கீருக்கு எதிராகக் குஸ்ரூவுக்கு ஆதரவு அளித்துத் தேவையான முயற்சிகளையும் மேற்கொண்டதனால், ஜஹாங்கீர் அர்ஜுன் சிங்கிற்குத் தண்டப்பணம் கட்டுமாறு தண்டனை விதித்தார். அர்ஜுன் சிங்கும் தண்டிக்கப்பட்டது அரசியல் காரணத்திற்காகவே.

ஹர் கோவிந்த் சிங் (Har Govind Singh) என்னும் ஆறுவது குரு (1606-45) பெரும் படைகளைத் திரட்டிச் சென்று பேரரசர் ஷாஜஹானை எதிர்த்து முகலாயத் தளபதி ஒருவர்மீது அமிர்த சரசுக்கு அருகில் சங்கரானா என்னுமிடத்தில் வெற்றி பெற்றார் (1628). எனவே, இவரைத் தண்டிக்கப் பெரும் படைகள் சென்றபோது, இவர் காஷ்மீரின் கிராத்பூர் (Kiratpur) என்னுமிடத்தில் ஓடிஒளிந்து கொண்டார். ஹர் கோவிந்த் சிங்கை அடுத்து அவருடைய பேரன் ஹர் ராய் சிங் ஏழாவது குருப் பதவியை ஏற்றார் (1645-1661). இவரை இளவரசர் தாரா ஷுக்கோ அடிக்கடி சந்திப்பது வழக்கம். ஹர் ராய் சிங் வெளிப்படையாகவே வாரிசு உரிமைப்போட்டியில் தாரா ஷுக்கோவை ஆதரித்தார்.[1] ஔரங்கசீப் அரியணையேறி அமர்ந்ததும் 1659ஆம் ஆண்டில் ஹர் ராய் சிங்கைத் தமது அவைக்கு வருமாறு அழைத்திருந்தார். இவர் வெளிப்படையாகவே தாரா ஷுக்கோவை ஆதரித்து வந்தவராகையால், தாரா ஷுக்கோ தோல்வியுற்றுவிட்டமையால், ஔரங்கசீப் எங்கே தம்மைத் தண்டிப்பாரோ என்று அஞ்சி, தாமே அவைக்குச் செல்லாமல், தம் மூத்த மகன் ராம் ராய் சிங் என்பவரை அவைக்கு அனுப்பி வைத்தார். ஔரங்கசீப் ராம் ராய் சிங்கையோ ஹர் ராய் சிங்கையோ தண்டித்தாரா? நிச்சயமாகத் தண்டிக்கவில்லை. எனவே, மத வேறுபாடு காரணமாகச் சீக்கியர்களின் மீதுங்கூட ஔரங்கசீப் பகைமை பாராட்டினார் என்று கூறுவது முற்றிலும் தவறாகும். ராம் ராய் சிங்கை ஆக்ராவிற்கு அனுப்பிவிட்டுத் தமது இரண்டாவது மகன் ஹர் கிஷன் சிங் என்பாரை ஹர் ராய் சிங் எட்டாவது குருவாக நியமித்தார். 1661-ல் ஹர் ராய் சிங் இறந்துவிட்டார் (இயற்கை மரணமே). தம் தம்பி

[1] J. D. Cunningham—A History of Sikhs, Dr. Syed Mohamed Latif—History of the Punjab. Also, S. R. Sharma - The History of the Mughal Empire.

ஹர் கிஷன் சிங் எட்டாவது குருவாக வருவதைப் பொருமல் ராம் ராய் சிங் பேரரசர் ஔரங்கசீபின் உதவியை நாடினுர். ஔரங்கசீப் குறுகிய மத எண்ணம் கொண்டவரா யிருந்திருப் பாரேயானுல், ராம் ராய் சிங் அவரிடம் உதவியை நாடியிருப் பாரா? ஹர் கிஷன் சிங்கும், 1664ஆம் ஆண்டு வரை எட்டாம் குருவாகவே பதவியிலிருந்து இறந்தார். மத வேறுபாடுகள் ஏதும் ஔரங்கசீபுக்கும் சீக்கியர்களுக்குமிடையே குறுக்கிட் டிருக்குமேயானுல், ஹர் கிஷன் சிங்கையும் ஏதோ காரணம் காட்டி ஔரங்கசீப் தண்டித்திருக்க வேண்டும்!

ஹர் கிஷன் சிங் இறந்ததும், ஹர் கோவிந் சிங்கின் மகனுன தேஜ் பகதூர் (Tej Bahadur) என்பவரை ஒன்பதாவது குரு வாகச் சீக்கியர்கள் தேர்ந்தெடுத்தனர். தேஜ் பகதூர் தலைவ ராகத் தேர்ந்தெடுக்கப்பட்டதும், 1668ஆம் ஆண்டில் முகலா யர்களின் படையில் சேர்ந்து, அஸ்ஸாம் மாகாணத்தில் ஜெய் சிங்கின் மகனுன ராம் சிங்கின் தலைமையின் கீழ்ப் போரில் கலந்து கொண்டார். ஆனுல், சில ஆண்டுகளிலேயே அவர் காஷ்மீரம் சென்று, கிராத்பூரில் தங்கி, அங்குள்ள பிராமணர் களை ஔரங்கசீபை எதிர்க்குமாறு தூண்டினுர். ஆனுல், 1670-72ஆம் ஆண்டுகளில் ஔரங்கசீப் சீக்கியர்களுக்கு எதி ராக எந்த ஒரு நிகழ்ச்சியையும் ஏற்படுத்தவில்லை என்பதை யும், சீக்கியர்கள்மீதன்றி இந்துக்கள் மீதே ஜஸியா வரியை, தேஜ் பகதூர் இறந்த 4 ஆண்டுகளுக்குப் பிறகுதான் விதித்தார் என்பதையும் நாம் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். எனவே, ஔரங்கசீபின் இராணுவத்தில் பணியாற்றிய தேஜ் பகதூர் திடீரென ஔரங்கசீபை எதிர்ப்பானேன்? காஷ்மீரப் பிராமணர்களைத் தூண்டுவானேன்? அல்லது அந்தப் பிராமணர் களுக்குத் தேஜ் பகதூர் கருவியாகப் பயன்படுவானேன்? அறிஞர் மேக்கிரக்கர் (M'Gregor) என்பார்தாம் ஔரங்கசீபுக் கும் தேஜ் பகதூருக்கும் இடையே ஏற்பட்ட விரிசலுக்குரிய காரணத்தை விளக்குகின்றுர்.[1] அனேகமாக, இன்னும் உயிருடன் இருந்த ராம் ராய் சிங் என்பார் (ஏற்கெனவே ஔரங்கசீபின் உதவியை நாடியவர்) சீக்கியக் குருப் பதவியை

[1] 'Tegh Bahadur was sent for by Aurangzeb at the instigation of Ramrai, as a usurper of Sikh Gadi. The Guru was told that unless he gave some explanation of his conduct, he should not be liberated'. M. 'Gregor—The History of Sikhs' - p. 66-67, Also Sharma, p. 395. Also, Dr. S. M. Latif - History of the Punjab.

அடைய முடியாததனுல், காஷ்மீரப் பிராமணர்களைத் தூண்டியதைக் காரணமாக வைத்துக்கொண்டு, பேரரசர் ஔரங்கசீபினிடம் ராம் ராய் சிங் முறையிட்டிருக்க வேண்டும். தேஜ் பகதூர் கைது செய்யப்பட்டார். தம் நடவடிக்கைக்குரிய காரணத்தைக் கூறும்வரை அவரை விடுவிக்கப் போவதில்லை எனப் பேரரசர் திட்டவட்டமாகத் தெரிவித்தார். எனவே, தேஜ் பகதூர் விவகாரத்திலும், அச் சீக்கியத் தலைவர் அரசியலில் தலையிட்டதுதான் அவர் தலைமைப் பதவியை இழந்ததற்கு முக்கிய காரணமாக இருந்திருக்க வேண்டுமென்பது தெளிவாகிறது. அறிஞர் கன்னிங்ஹாம் உண்மையானதும் நெருக்கமானதுமான முக்கிய காரணம் ஒன்றை விளக்குகின்ருர்: 'தேஜ் பகதூர் தம் தந்தையின் வழியைப் பின்பற்றி, ஹன்ஸி–சட்லஜ் (Hansey-Sutlej) இரு பகுதிகளுக்கு இடைப்பட்ட பகுதியில் கொள்ளையடிப்பதன் மூலம் வாழ்ந்து வந்ததனுல் உழவர்களிடம் மதிப்பை இழந்துவந்தார். இவர் ஆதம் ஹபீஸ் (Adam Hafeez) என்னும் முகம்மதியருடன் கூட்டாகச் சேர்ந்து கொண்டு, செல்வமிக்க பணக்கார இந்துக்களிடமிருந்தும், இவரது கூட்டாளி முஸ்லிம்களிடமிருந்தும் பணத்தைப் பிடுங்கிவந்தனர்... ஔரங்கசீப் அந்தச் சீக்கியரைத் தண்டிக்க வேண்டுமென்று திடமாக இருந்தார்.'[1] எனவே, இதில் உண்மை என்ன இருக்கக் கூடுமெனில், 1670ஆம் ஆண்டிற்குப் பிறகு நாட்டில் ஆங்காங்குப் பலரும் கொள்ளைகளில் ஈடுபட்டு வருவதைக் கண்ட தேஜ் பகதூர் ஆதம் ஹபீஸ் என்பாருடன் கூட்டாகச் சேர்ந்து, பஞ்சாப் மாகாணத்தில் தாமும் அம் முறையில் படுகொள்ளை நடத்தும் வேலையில் ஈடுபட்டிருக்கவேண்டும். மேலும், ராம் ராய் சிங்கின் வேண்டுகோளுக்கேற்றவாறு தேஜ் பகதூர் புரட்சிக் கொடியை உயர்த்தக் காரணமாக இருந்ததனுல் கைது செய்யப்பட்டிருக்கவேண்டும். ஆனுல், கைது செய்யப்பட்ட பின்னர்த் தேஜ் பகதூருக்கு யாதொரு விளக்கமும் அளிக்க முடியாததால், அரசரை எதிர்த்த காரணத்தால் அவர் தண்டிக்கப்பட்டிருக்க வேண்டும். எனவே, ஔரங்கசீப், தேஜ் பகதூரைப் பொறுத்தவரை குறுகிய மதஎல்லைக்

[1] 'Tegh Bahadur followed the example of his father...he subsisted himself and his deciples by plunder,...leagued with a Mohamedan zealot named Adam Hafeez...levied conditions upon rich Hindus...Mohamedan saint was vanquished...Aurangzeb determined that the Sikh should be put to death'. Cunningham, 'A History of the Sikhs' - p. 92-94.

கோட்டுக்குள் எந்தப் பிரச்சினையையும் பார்க்காது, அரசியல் ரீதியாகவே தண்டித்தாரென்றால் அது மிகையாகாது. கன்னிங்ஹாமும் இதையே வலியுறுத்துகின்றார். 'ஆயினும், 1675ஆம் ஆண்டில் தேஜ் பகதூர் கலகக்காரர் என்பதனால் கொலைத் தண்டனை விதிக்கப்பட்டார் என்பது உறுதி.'[1] இல்லையாயின், கேசம், கங்கா, கிர்பால் (கத்தி), கச்சா (Kacha), காரா (Kara) ஆகிய சீக்கிய மதச் சின்னங்களை அளித்துச் சீக்கியர்களை மேலும் ஒற்றுமைப்படுத்திய 10ஆவது குரு கோவிந்த் சிங் (1676-1708) மீது ஔரங்கசீப் குற்றங்களைச் சுமத்தித் தண்டிக்காதது ஏன்? எனவே, ஔரங்கசீப் சீக்கியர் விவகாரங்களில் அரசியல் ரீதியாகவே பிரச்சினைகளை அணுகினார் என்பது இதனால் தெளிவாகின்றது. ஜஸியா வரிக்கும் சீக்கியர் கலகங்களுக்கும் சம்பந்தம் இல்லை.

[1] 'Yet it is more certain that Tegh Bahadur was put to death as a rebel in 1675'—J. D. Cunningham, A History of the Sikhs, p. 92-94.

# 16. ஔரங்கசீபும் ஐரோப்பியர்களும்

## போர்ச்சுகீசியர்கள்

பொதுவாக, ஔரங்கசீபுக்கும் ஐரோப்பியர்களுக்கும் சுமுக மான நட்புறவுடன் கூடிய தொடர்பே நிலவிவந்தது. ஏனெனில், போர்ச்சுகீசியர்களைத் தவிர, பிற ஐரோப்பியர்கள் அரசியல் சுழலில் சிக்கிக்கொள்ள விரும்பவில்லை. பேரரசர் ஔரங்கசீபின் ஆதிக்கத்தையும், அவரே பேரரசர் என்பதையும் வெள்ளையர் ஏற்றுக்கொண்டனர். அது மட்டுமன்றி, அவர்கள் பேரரசருக்குச் சேரவேண்டிய ஏற்றுமதி, இறக்குமதி, வியாபார வரிகள் முதலியவற்றைக் கொடுப்பதை நிறுத்தவில்லை. அரசாங்கத்தின் வருமானத்தில் கணிசமான அளவுக்கு ஐரோப்பியர்கள் செலுத்திய வரிப் பணம் பங்கேற்றிருந்தது. ஆனால், போர்ச்சுகீசியர்கள் மட்டுமே ஓயாத தொல்லைகளையும் தீராத தலைவலியையும் உண்டுபண்ணி வந்தனர். இதற்குக் காரணம், போர்ச்சுகீசியர்கள் பொதுவாகவே தங்கள் தாய்நாட்டின் பழங்கால வரலாற்றை மனத்திற்கொண்டு, முகலாயர்களை முற்றிலும் வெறுத்துவந்தனர். போர்ச்சுகீசியர்களின் நிலையைக் காஃபீகான் இவ்வாறு விவரிக்கின்றார்: 'போர்ச்சுகல் மன்னரின் அலுவலர்கள் அருகிலிருக்கும் துறைமுகங்களை ஆக்ரமித்துக் கொண்டார்கள்; அங்கெல்லாம் பலமான கோட்டைகளை நிருமித்துக்கொண்டார்கள். அவர்கள் கிராம மக்களிடம் அன்பாய்ப் பழகினாலும், முஸ்லிம்களுக்குத் தனியான இடங்களை அளித்தார்கள். ஆனால், அவர்கள் தங்கிய பகுதிகளில் இறைவனை வணங்குவதற்குப் போர்ச்சுகீசியர்கள் முஸ்லிம்களை அனுமதிப்பதில்லை. ஆனால், முஸ்லிம்கள் தம் பொருள்களுடன் எங்குச் சென்றாலும் ஒருதொந்தரவையும் அளிப்பதில்லை; ஆனால், அவர்களைத் தொழ மட்டும் அனுமதிப்பதில்லை. அவர்கள் கடலில் ஆங்கிலேயர்களைப் போன்று பிறருடைய கப்பல்களைத் தாக்கு

வது இல்லை. வெகு தூரத்திலிருந்து வந்த கப்பல் உடைந்து விடுமேயானால், அதிலுள்ள பண்டங்களை அவர்கள் தங்களுக்குக் கிடைத்த பரிசாகக் கருதுகிறார்கள். அவர்களின் கொடுமை எல்லாம் இதுதான்: அதாவது, ஓர் இந்தியன் இறந்து விடுவானேயானால், அவனுடைய குழந்தைகளையோ, அவன் வளர்த்த பிள்ளைகளையோ தங்கள் அரசின் சொத்தாக அவர்கள் உரிமை பாராட்டி, இச் சிறுவர்களைத் தங்கள் தேவாலயங்களுக்கு எடுத்துச் செல்கின்றனர். இவர்களுக்குக் கிறித்துவப் பாதிரியார், முஸ்லிம் சையதாக இருப்பினும், இந்துப் பிராமணராக இருப்பினும், கிறித்துவ மதத்தைப் போதிக்கின்றார். இக் குழந்தைகள் அடிமைகளாக ஆக்கப்படுகின்றனர்.

'கடற்கரைக்கு அருகாமையிலுள்ள நேர்த்தியான, புகழ்மிக்க **ஆதில் ஷாஹீ கோக்கன்** என்னும் அரணில் அவர்களுடைய ஆளுநர் வசிக்கின்றார்...அவர்கள் மற்றும் பல துறைமுகங்களையும், செழிப்புமிகு கிராமங்களையும் உருவாக்கிக் கொண்டுவிட்டுள்ளார்கள்...குல்ஷனபாதுக் கோட்டைக்கருகில் அவர்கள் ஏழல்லது எட்டு, பெரிதும் சிறிதுமான கோட்டைகளை நிருமித்துக்கொண்டுள்ளனர். அவற்றுள் இரண்டாகிய தமன் (Daman), பஸீ (Basi) என்பனவற்றை அவர்கள் கயமைத்தனமாக வஞ்சித்து ஏமாற்றி, குஜராத்தின் சுல்தான் பஹாதுர் வசமிருந்து பறித்து, வலுப்பமிக்கனவாக அவற்றை மாற்றிக்கொண்டார்கள்...அவர்களுக்கென்று தனி நாணயமுண்டு. (இந்திய நாட்டு முகலாய) மன்னரின் சட்டங்கள் அங்குச் செல்லுபடியாவதில்லை.'[1] மேற்கண்ட காஃபீ கானின் கூற்று, போர்ச்சுகீசியர்கள் எந்த அளவுக்கு மேற்கு, கிழக்குக் கடற்கரைகளில் ஆதிக்கத்தைச் செலுத்தி வந்தனர் என்பதைத் தெளிவுபடுத்துகின்றது. ஷாஜஹானின் ஆட்சியிலும், ஔரங்கசீபின் ஆட்சியின் தொடக்கத்திலும் போர்ச்சுகீசியர்கள் சிட்டகாங் போன்ற கிழக்குப் பகுதிகளில் வெகு வெளிப்படையாகவே கொள்ளைகளில் ஈடுபடலாயினர். ஷாயிஸ்தகான் வங்காளத்தில் கவர்னராக இருந்தபோது போர்ச்சுகீசியர்கள் மீண்டும் மீண்டும் வங்காளத்தின் கடற்கரை நகரங்களைத் தாக்கிவந்தனர்; அறிஞர் மனுச்சி கூறியதுபோல, 'கடினமான உள்ளத்தை உடையவர்கள்; ஈவிரக்கமின்றிக் குழந்தைகளையும் கொன்றுவிடுவார்கள்.' சிட்டகாங் கொள்ளையர்களின் தளமாக இருந்து வந்தது. ஔரங்கசீபிற்குப் போர்ச்சுகீசியர்களைப்பற்றிப் பல செய்திகள்

[1] Elliot and Dowson—History of India as told by its own historians, Vol. VII, p. 344-46.

எட்டியபோது, சிறுபடை ஒன்று புஜுர்க் உம்மத் கான் (Buzurgh Ummed Khan) என்பவரின் தலைமையின்கீழ் அனுப்பப்பட்டது. அது, சிட்டகாங்கைக் கைப்பற்றிப் போர்ச்சுகீசியர்களையும், கொள்ளைக்காரர்களையும் அகற்றியது.

ஜெய் சிங் முகலாயப் பிரதிநிதியாக இருந்தபோது அவர் எழுதிய கடிதத்திற்குப் பதில் அனுப்புகையில், போர்ச்சுகீசியர்கள் சிவாஜிக்குக் கடல் வழியாக உதவி நல்குவதில்லை என வாக்குறுதி அளித்திருந்தனர். இதற்கேற்றவாறு, ஜனவரி 1667-ல் பேரரசருக்கும் போர்ச்சுகீசியர்களுக்கும் இடையே உடன்படிக்கை யொன்று ஏற்பட்டது. இவ் வுடன்படிக்கையின்படி, 'பறங்கியர்கள் தங்கள் பகுதியில் முகலாயப் பேரரசரை எதிர்க்கும் கலகக்காரர்களுக்குப் புகலிடம் அளிக்கக் கூடாது. அக் கலகக்காரர்களைப் போர்ச்சுகீசிய மன்னருக்கு எதிராகக் கலகம் புரிந்தவர்களாகவே கருதவேண்டும்.'[1] ஆனால், போர்ச்சுகீசியர்கள் உடன்படிக்கையில் கையெழுத்திட்ட மையீரம் காயுமுன்பே அதே ஆண்டின் இறுதியில் சிவாஜியுடன் ஓர் இரகசிய உடன்படிக்கையைச் செய்துகொண்டனர். எனவே, போர்ச்சுகீசியர்களைக் கட்டுப்படுத்தக் கோவாவைக் கைப்பற்ற வேண்டிய அவசியம் ஏற்பட்டது. சிவாஜி இறந்த பின்னரும் சாம்பாஜியுடனும் போர்ச்சுகீசியர்கள் நட்புறவை வளர்த்து வந்தார்கள். இறுதியாக, 1693ஆம் ஆண்டில் போர்ச்சுகீசியர்கள் பேரரசருக்கு வெகுமதிகள் பல கொடுத்து, அவரது ஆணைக்கு உட்பட்டு நடப்பதாக வாக்குறுதி அளித்தும், மாறிய அரசியல் சூழ்நிலையில் அது தேவையற்றுப் போயிற்று.

## டச்சுக்காரர்கள்

டச்சுக்காரர்களும் பிற ஐரோப்பியக் கம்பெனிகளின் வர்த்தகர்களை, அலுவலர்களைப் போன்று, ஹூக்ளி, சின்சூரா, மசூலிப்பட்டினம், சூரத், நாகப்பட்டினம் ஆகிய பகுதிகளில் கோட்டைகளை நிருமித்துக் கொண்டனர்; தென் கிழக்கு ஆசிய நாடுகளுடன் வியாபாரத்தை வளர்த்து வந்தனர்.

பிரெஞ்சுத் தூதர்கள் பேரரசரைச் சந்தித்தது போன்று, டச்சுக்காரர்களின் சார்பாக படேவியாவின் (Batavia) கவர்னர் திர்க் வான் ஆன்ட்ரிக்ளென் வான் ஆன்ட்ரியன் (Dirk Van Andriclen Van Andrien) என்பார் ஔரங்கசீபை, முர்த்துஜா கான் (Murtaza Khan) என்பார் மூலம் 1662ஆம் ஆண்டில்

1 Quoted by Prof. S. R. Sharma, The Mughal Rule in India.

சந்தித்தார். அப்பொழுது ஆன்ட்ரியன் கவர்னர் பதவி வகித்து வந்ததுடன், சூரத் நகரின் நிர்வாகியாகவும், டச்சு அரசின் தூதராகவும் பணியாற்றியும் வந்தார். இதை மனுச்சி தமது நூல், வால்யூம் II, பக். 62-ல் குறிப்பிட்டுள்ளார்.[1]

## பிரெஞ்சுக்காரர்கள்

1664ஆம் ஆண்டில் அமைச்சர் கால்பேரின் (Colbert) முயற்சியால் பிரெஞ்சுக் கிழக்கிந்தியக் கம்பெனி நிறுவப்பட்ட பொழுது, ஔரங்கசீப் அரியணையில் ஏறி ஆறு ஆண்டுகள் கடந்திருந்தன. 1668ஆம் ஆண்டில் சூரத் நகரில் பிரெஞ்சுக்காரர்கள் முதல் பண்டகசாலையை நிறுவினர். அடுத்த ஆண்டில் மசூலிப்பட்டினத்தில் மற்றொன்றை நிறுவியபொழுது ஔரங்கசீபின் தயவை அவர்கள் எதிர்பார்த்திருக்கவேண்டியதில்லை. ஏனெனில், பீஜப்பூரும் கோல்கொண்டாவும் பேரரசுடன் இணையவில்லை. ஷேர்கான் லோடியின் அனுமதியின் பேரில், 1674ஆம் ஆண்டில் புதுச்சேரி என்னும் புதுவை நகருக்கு ஃபிரான்சிஸ் மார்த்தின் (Francis Martin) என்னும் பிரெஞ்சுக் கவர்னர் அடிக்கல் நாட்டினார். புதுவை நகர் பிரெஞ்சு இந்தியப் பகுதிகளுக்குத் தலைநகராகவும், பெரும் வாணிக மண்டலமாகவும் திகழ்வதற்கு ஃபிரான்சிஸ் மார்த்தின் ஆற்றிய தொண்டு அளவிடற்கரியது. 1690ஆம் ஆண்டில் பேரரசரிடம் இருந்து பெற்ற பட்டயம் மூலமாகக் கிழக்கே சந்திர நாகூர் என்னும் இடத்தில் ஒரு பண்டகசாலையை நிறுவக் காரணமாக இருந்தவர் ஃபிரான்சிஸ் மார்த்தினே ஆவார்.

ஔரங்கசீபின் பேரவைக்கு ஃபிரெஞ்சு அரசாங்கம் இரு தூதர்களை அனுப்பிவைத்தது. அவர்கள், (1) ஃபிரான்சிஸ் டீ லா புலோஞா (Francis de la Boulogna) (2) முஸேர் பெஹர் கோர் (Monseigneur Beher Gour) என்பவர்கள் ஆவார்கள்.

## ஆங்கிலேயர்கள்

**சென்னை நிறுவப் பெறுதல் :** ஃபிரான்சிஸ் டே (Francis Day) என்பார் சாந்தோமிலிருந்து பழவேர்க்காடு (Pulicat) வரையில் ‘மதருஸ் பட்டணத்தை’ ஏற்படுத்தி அங்கு இன்று காணப்படும் கோட்டையைப் புனித ஜார்ஜ் தினத்தன்று (1640)கட்டிமுடித்தார். சென்னையில்தான் ஆங்கிலேயர்கள் இந்தியாவில் தங்கள் முதல் கோட்டையை நிர்மாணித்தினர்; சென்னையை முதல்

[1] Bernier, ‘The Travels’ (Constable & Smith Edn).

மாகாணமாகவும் செய்தனர். இக் கோட்டைப் பட்டணமே ஆங்கிலேயர்களின் முதல் குடியேற்றப் பகுதியாகவும் இருந்தது.

1687ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்தின் இறுதியில் ஔரங்கசீப் கோல்கொண்டா ராஜ்யத்தைத் தம் பேரரசுடன் இணைத்துக்கொண்டதன் விளைவாகச் சென்னையும், அதற்குத் தெற்கில் தஞ்சை வரை உள்ள பகுதிகளும் ஔரங்கசீபின் ஆளுகைக்கு உட்பட்டன. 1680ஆம் ஆண்டில் கடலூரில்—தேவனும்பட்டணத்தில்—ஆங்கிலேயர்கள் புனித டேவிட் கோட்டையை (Fort St. David) கட்டிக் கொள்ள அனுமதிக்கப் பட்டனர்.

தாமஸ் பிட் (Thomas Pitt) என்பார் 1699ஆம் ஆண்டிலிருந்து 10 ஆண்டுகளுக்குக் கவர்னர் பதவியை வகித்தார். ஔரங்கசீபின் ஆட்சியின் போது பிட்டுக்கு முன்பு வின்டர் (Vinter), ஸ்ட்ரேஷாம் (Streysham), மாஸ்டர் (Master) என்பவர்கள் சென்னையின் கவர்னர்களாகப் பணியாற்றி வந்தனர்.[1]

**ஹூக்ளி :** கிழக்குப் பகுதியைப் பொறுத்தவரையில், ஔரங்கசீபின் ஆட்சிக்கு முன்பே, 1633ஆம்ஆண்டில், பலாசூர் (Balassore) என்னுமிடத்தில் ஆங்கிலேயர் தம் பண்டக சாலையை நிறுவினர். 1663ஆம் ஆண்டில் ஷயிஸ்த கான் வங்காளத்தில் வைசிராயாக இருந்த போது முகலாயப் பேரரசுக்கும் ஆங்கிலக் கம்பெனிக்கும் வியாபாரச் சலுகைகள், வரிகள் காரணமாகப் பிணக்குகள் தோன்றலாயின. வில்லியம் ஹெட்ஜஸ் (William Hedges) என்பவர் ஹூக்ளியில் கம்பெனியின் முகவராக இருந்தார். கம்பெனியின் வியாபார நலன்கள் வங்காள வைசிராயினாலோ, ஔரங்கசீபின் அலுவலர்களாலோ பாதிக்கப்படாமல் ஹெட்ஜஸ் பாதுகாத்துவந்தார்.[2] ஹூக்ளியில் பாதுகாப்பு இல்லை; சிட்டகாங்கைத் துறைமுகப் பட்டணமாக்கவோ, அங்குக் கோட்டையை நிர்மாணிக்கவோ முடியவில்லை. ஔரங்கசீபின் வங்காள வைசிராயுடன் நடத்திய பேச்சுவார்த்தை வெற்றி பெறவே, ஹூக்ளி நதியின் கிழக்குப் பகுதியில் ஜாப் சார்னக் (Job Charnock) என்பவர் கல்கத்தா நகரை 1686ஆம் ஆண்டில் நிறுவினார். மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு, ஆங்கிலேயர்கள் தடையற்ற வியாபாரம் செய்துகொள்ள ஔரங்கசீப் அனுமதியளித்தார்.

[1] Prof. R. Sathianathier—History of India, Vol. II & III.
[2] Dr. H. K. Mahtaf—History of Orissa, Vol. II.

1700ஆம் ஆண்டில் வில்லியம் கோட்டை கல்கத்தாவில் கட்டி முடிக்கப்பட்டது.

**ஏற்றுமதியும் பண்டகசாலைகளும்:** ஆங்கிலேயர்கள் முதன் முதலில் தம் முதற் பண்டகசாலையை 1612-ல் சூரத் நகரத்தில் அமைத்து, ஆக்ராவுக்கும் டெல்லிக்கும் தரை மார்க்கமாகப் பொருள்களை மாற்றி வந்தனர். 1620-1632 ஆண்டுகளுக் கிடையே பாட்னாவில் அவர்கள் பண்டகசாலையை ஏற்படுத்த முயன்றனர். ஆனால், போக்குவரத்து வசதி குறைவாக இருந்ததாலும், இந்துப்புப் போன்ற பொருள்களின் விலை அதிக மாக இருந்ததாலும் அங்குப் பண்டகசாலைகளை நிறுவாமல், கிழக்குக் கடற்கரையில் மசூலிப்பட்டினத்தில் ஒன்றை நிறு வினர். அடுத்த ஆண்டில் கட்டாக்கிற்கு அருகில் இருக்கும் பலாசூர் என்னும் இடத்திலும் வியாபாரக் கிடங்கை ஏற்படுத் திக்கொண்டனர். இவ் வெற்றிகளைத் தொடர்ந்து, சென்னப்ப நாயக்கன் என்பாரிடத்திலிருந்து ஒரு சிறு இடத்தை விலைக்கு வாங்கி, செயின்ட் ஜார்ஜ் கோட்டையைக் கட்டி, சென்னை நகரை 1640ஆம் ஆண்டில் ஃபிரான்ஸிஸ் டே நிறுவினர் என் பதை முன்பே கூறியுள்ளோம்.

இத் துறைமுகத்திலிருந்து பட்டு, சீனி, இந்துப்பு இன்னும் பிற பொருள்களையும் ஆங்கிலேயர் ஏற்றுமதி செய்துவந்தனர்; ஏற்றுமதிப் பொருள்கள் எல்லாவற்றுக்கும் மொத்தமாக ஆண் டொன்றுக்கு ரூ. 3000 வரியாக அளித்து வந்தனர். அவர்கள் இறக்குமதி செய்து வந்த கச்சாப் பட்டு, தங்கம், வெள்ளி எல்லாவற்றையும் இந்தியர்கள் பெரிதும் உவந்து வாங்கி வந்தனர்.

ஔரங்கசீப் ஆட்சிக்கு வந்த பின்னரும் பல ஆண்டுகளுக்கு வியாபாரம் தாராளமாகவே நடைபெற்று வந்தது. உதாரண மாக, 1668-ல் 38,000 பவுனுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டது. இது 1675-ல் 85,000 ஆகவும், 1677-ல் 1,00,000 ஆகவும் 1880-ல் 1,50,000 பவுனாகவும் படிப்படியாக உயர்ந்தது. ஆங்கிலேயர்கள் ஹூக்ளியிலிருந்து விரிகுடாவரை முதற் கப்பலை விட்டனர்.[1] இஃது ஒரு புறமிருக்க, ஆங்கிலேயர்களும் முகலா யர்களுடன் வரிகள் கொடுக்கும் விவகாரத்தில் கருத்து வேற் றுமை கொண்டு எதிர்க்கத் தொடங்கினர்.[2]

[1] Dr. R. K. Mukherjee—History of Indian Shipping and Dr. H. K. Mahtab - Ibid.

[2] Sir Charles Fawcett—The English Factories in India 1670-1677 Vol. I.

ஆங்கிலேயர்கள் சில குறைகளைச் சுட்டிக்காட்டி வந்தனர். (1) இளவரசர் ஷா ஷுஜா வங்காளத்தின் கவர்னராக இருந்த காலம் முதற்கொண்டு ஆங்கிலேயர்கள் இறக்குமதி செய்த பொருள்களுக்கு ஒருமொத்தமாக ஆண்டொன்றுக்கு ரூ. 3,000 மட்டுமே தீர்வையாகக் கட்டி வந்தனர். இம் முறையை மாற்றி, சூரத்தில் இறக்குமதி செய்யப்பட்ட பொருட்கள் மீது முகலாய அரசாங்கம் 3½% வரி விதிப்பது மரபுக்கு மாறுனது என்று எதிர்குரலெழுப்பி வந்தனர். (2) ராஹ்தாரி (Rahdari—சாலை வரி) போன்ற இன்னும் பல வரிகளையும் கம்பெனிகள் கொடுக்க நேரிட்டன. (3) சில சமயங்களில் தல இராணுவ நிர்வாகிகள் கம்பெனிகளுக்கு வரும் பொருள் மூட்டைகளைப் பிரித்துப் பரிசோதித்துப் பார்க்கும் 'தணிக்கையும் முன் பரிசோதனையும்' (Censorship & Pre-checking) என்னும் வழக்கம் கண்டிக்கத்தக்கது என்றும் கூறிவந்தனர்.[1]

**நிர்வாகத்தினரின் பதில்கள் :** (1) ஆங்கிலக் கம்பெனியார் கூறிவந்த குறைகள் மூன்றிற்கும் பொருத்தமான காரணங்கள் இருந்தன. எப்படியெனில், முஸ்லிம்கள் ஜக்காத்து என்னும் ஏழை வரியை இஸ்லாமியச் சட்டப்படி அரசாங்கத்திடம் கொடுக்கவேண்டியது கடமை என வற்புறுத்தப்பட்டது. எனவே, அவர்கள் ஏழை வரியான 2½% போக, மேற்கொண்டும் இரண்டரைச் சதவீதம் வரியைக் கொடுக்க நேரிட்டது. இந்துக்கள் மொத்தத்தில் முஸ்லிம்களுக்குச் சமமாகவே ஐந்து சதவிகிதம் வரி கொடுக்க வேண்டும் என்று அரசாங்கம் கட்டளையிட்டது. எனவே, இந்தியர்கள் (முஸ்லிம்களும் இந்துக்களும்) ஐந்து சதவிகிதம் வரிகொடுத்து வந்த போது, பல சலுகைகளைப் பெற்றுவந்த ஆங்கிலேயர்கள் இறக்குமதிப் பொருள்களுக்கு ஏற்றவாறு சதவீதமாக வரியைக் கொடுக்காமல், மொத்தத்தில் ரூ. 3000 மட்டும் தருவது என்றுல், நிச்சயமாக அரசாங்கத்திற்கு நட்டமே.

ஷுஜாவின் காலத்தில் பிறப்பிக்கப்பட்ட, எல்லாப் பண்டகசாலைக்கும் மொத்தமாகச் சூரத்தில் வரி கொடுக்கலாம் என்னும் ஒப்புதல் சட்டப்படி செல்லாது. ஏனெனில், ஷுஜா ஒரு கவர்னரேயாவார்.

(2) அது மட்டுமன்றி, 1680ஆம் ஆண்டிற்குப் பிறகு ஆங்கிலேயக் கம்பெனி 1,50,000 பவுன் வருமானம் சம்பாதித்த

[1] S. R. Sharma & Dr. R. K. Mukerjee—'History of Shivaji in India',

போதுங்கூட எவ்விதத் தல வரிகளும் கொடுக்காமல், வெறுமனே ஆண்டொன்றுக்கு மொத்தமாக ரூ. 3000 மட்டும் கட்டியது எல்லாவிதத்திலும் நியாயமற்றது ஆகும்.

(3) அரசாங்கத்திற்கு நேரிடையாகச் செலுத்தும் 3000 ரூபாயைத் தவிர, தஹதாரி, அப்வாப், பேஷ்கஷ், நஜ்ரானு, பொருள் வரி, மண்டல வரி, மன்னர் சமூகக் காணிக்கை ஆகிய வரிகள் எல்லாம் கொடுமையானவை என்றும் செல்லாதன என்றும் கூறி, ஔரங்கசீப் 1658ஆம் ஆண்டிலேயே அவற்றை யெல்லாம் நீக்கிவிட உத்தரவிட்டார். எனவே, ஆங்கிலேயக் கம்பெனியார் ரூ. 3000த்தோடு இவற்றை இன்னமும் அளித்து வந்தார்களேயானுல், அது அவர்களுடைய தவறே ஆகும். தல அதிகாரிகளின் கொடுமைக்குப் பேரரசர் பொறுப்பாக முடியாது.

**கல்கத்தாவும் சார்ஞக்கும் :** வங்காளத்தில் காசிம் பஜார் என்னுமிடத்தில் நிறுவப்பட்ட பொருள் பண்டகசாலையில் ஜாப் சார்ஞக் (Job Charnak) என்ற ஆங்கிலேயர் தலைவராகத் தேர்ந் தெடுக்கப்பட்டார். ஜாப் சார்ஞக் என்பவர்தாம் கல்கத்தா நகரை நிறுவக் காரணமாக இருந்தார் என்பதை நாம் முன்பே பார்த்தோம். இவர்மீதும், இவரது கம்பெனிமீதும் தொடரப் பட்ட வழக்கு ஒன்றில் இந்திய நீதிபதி 45,000 ரூபாய் அபராதம் விதித்தார். ஆனுல், சார்ஞக் அதைக் கட்ட மறுத்தார். எனவே, 1685-ல் முகலாயத் துருப்புகள் காசிம் பஜாரை நோக்கிப் புறப்பட்டன.

அடுத்த ஆண்டில் ஆங்கிலேய வீரர்கள் காப்டன் லெஸ்லீ (Leslie) என்பாரின் தலைமையின்கீழ்ப் பண்டகசாலையில் புகுந்து கொண்டு, தல இராணுவ அதிகாரியின் படைகளைத் தடுத்த வண்ணமாக இருந்தனர். கடல் வழியாகப் பேரரசர் அனுப்பிய கப்பல் ஒன்றையும் ஆங்கிலக் கப்பல்கள் தடுத்துநிறுத்தின. இதனை அறிந்த ஷாயிஸ்தகான் கல்கத்தாவுக்கு அருகில் சுதநதி என்னுமிடத்தில் ஆங்கிலப் படைகளை முறியடித்து, வெற்றி கண்டார். ஹிஜ்லி என்னுமிடத்தில் ஆங்கில வீரர்களும் கப்பல் தளகர்த்தர்களும் ஒன்றுகூடினர். 1687-ல் அப்துல் சமது என்னும் ஷாயிஸ்த கானின் தளபதி 12,000 துருப்புகளுடன் ஹிஜ்லியைத் தாக்க வந்தடைந்தார். ஆனுல், ஆங்கிலேயர்கள் மற்ருேர் இடத்திற்கு மாறிவிட்டனர்.[1]

[1] Letters of Masulipatnam, Balassore say that a tax was levied which they called 'Ship Money of Shaista Khan'—Dr. R. K. Mukherjee, History of Indian Shipping,

இதற்கிடையில், காப்டன் ஹீத் (Captain Heath) என்பார் சார்னுக் இருந்த இடத்தில் ஏஜெண்ட்டாக நியமிக்கப்பட்டு, 1688-ல் இந்தியா வந்தார். இவர் பலாசூரிலிருந்த 300 வீரர்களுடன் பெரும் முகலாயப் படைகளைக் கொன்று குவித்தார். உடனுக்குடன் செய்திகளை அறிந்து வந்த பேரரசர் தமக்கு ஏற்பட்ட இழுக்கினுலும், மக்கா யாத்திரைக்குச் செல்பவர்களை ஆங்கிலேயர்கள் தடுத்து வந்ததாலும், எல்லா ஆங்கிலேயர்களையும் கைது செய்யுமாறு உத்தரவிட்டார். இதற்கிடையில், காப்டன் ஹீத் சென்னைக்கு ஓடிவிட்டார். சூழ்நிலையை அறிந்து கொண்ட ஆங்கிலேயர்கள் பேரரசுடன் ஒத்துப் போவதாய்க் கூறி, 1690-ல் பணிந்து, பேரரசருக்கு மகஜர் ஒன்றைச் சமர்ப்பித்தனர். பேரரசர் இதனை ஏற்றுக்கொண்டார். இனிமேல் அவர்கள் அவ்வாறு நடந்து கொள்ளவில்லையென உறுதி கொடுத்ததன்மீது அவர்களை மன்னிப்பதாகவும் 45,000 ரூபாயிலிருந்து ரூபாய் 15,000க்கு அபராதத்தைக் குறைத்திருப்பதாகவும் ஔரங்கசீப் 1690 பிப்ரவரி 22-ல் அவர்களுக்கு எழுதினர். எனினும், கம்பெனியாரின் மனப்போக்கு மாறவில்லை. கம்பெனியின் வரலாற்றில் பிப்ரவரி மாதம் 10-ம் தேதி குறிப்பிடத்தக்க நாளாகும். ஏனெனில், அன்றுதான் கல்கத்தா நகருக்கு அடிக்கல் நாட்டப்பட்ட நாளாகும்.

**வெல்டன் தூதுக்குழு ஔரங்கசீபைச் சந்தித்தல் :** வங்காளத்தில் மட்டுமன்றி, மேற்குக் கடற்கரை ஓரப் பகுதிகளிலும் இது போன்றே ஆங்கிலேயக் கம்பெனியார் எதிர்ப்பைத் தெரிவிக்கத் தவறியதில்லை. ஆனல், 1680ஆம் ஆண்டுக்குப் பிறகு மேற்குப் பகுதிகளைப் பொறுத்தவரை பலமான எதிர்ப்பையும், முடியுமானல் ஆக்கிரமிப்புப் போரையும் தொடுப்பது என்றே பிரிட்டிஷ் கிழக்கிந்தியக் கம்பெனியின் தலைவராக இருந்த ஸர் ஜோஷியா சைல்ட் (Sir Joshiah Child) என்பார் திடமாக முடிவு செய்தார். அவர்கள் இதற்காகச் சூரத் நகரிலிருந்து வியாபாரத்தை வெட்டிவிட்டபோதிலும் சரியே, தாங்கள் பம்பாய்க்குப் பண்டகசாலையை மாற்றிக்கொண்டபோதிலும் சரியே, முகலாய ஆதிக்கத்தை ஏற்றுக் கொள்ளக் கூடாது எனத் திடமான முடிவுக்கு வந்தனர். ஆனல், ஸர் ஜான் சைல்ட் (Sir John Child) (அவருடைய சகோதரன்அல்லர்; கம்பெனியின் கருத்துகளை அமல்படுத்தும் தகுதியைப் பெற்றவரும் அல்லர்) என்பார் எவ்வாருயினும் சரி எனத் துணிந்து கம்பெனியின் ஆணைகளுக்கிணங்க 'சுவாலி' (Swali) என்னுமிடத்தில் ஒரு சிறு கப்பற் படையுடன் வந்து இறங்கினர். நிலைமையை அறிந்த சூரத்

கவர்னர் பண்டகசாலையில் இருந்த எல்லா ஆங்கிலேயர்களையும் கைது செய்து, அக் கம்பெனியைப் பாதுகாக்கச் சிறு துருப்பு ஒன்றை அனுப்பி, ஸர் ஜானையும் கைது செய்யப் படைகளை அனுப்பினுர். ஸர் ஜான் தப்பியோடி விட்டார். ஆனால், இதற்கிடையில் ஜன்ஜிராவின் சித்திக்களும் (Siddik of Jangira) அவர்களுக்குத் துணை சென்ற முஸ்லிம்களும் ஸர் ஜானின் ஆங்கிலக் கம்பெனிக்கும், அவரது துருப்புகளுக்கும் நட்டத்தை விளைவித்து வரவே, ஸர் ஜான் சைல்ட் அவசரமாக ஔரங்கசீபுக்குத் தாம் பணிவதாக வாக்குறுதி அளித்துத் தூதுக் கோஷ்டி ஒன்றை அனுப்பினுர். 1689ஆம் ஆண்டு டிசம்பர் 10ஆம் தேதி வெல்டன் என்பாரும் அப்ரஹாம் நவாரோ (G. Weldon and Abraham Navarro) என்பாரும் தூதுக் கோஷ்டியில் சென்று ஔரங்கசீபைச் சந்தித்துப் பேரரசரிடம் மன்னிப்புக் கோரினர். ஔரங்கசீபின் பேரவையில் முஹம்மத் கான் (Muhammad Khan) என்பவருக்கு மட்டும் தான் ஆங்கிலம் தெரிந்திருந்தது. இவர் தாம் ஆங்கிலேயர்களின் பேச்சுகளை மொழிபெயர்ப்பார். இறுதியில் பேரரசர் மன்னிக்க விரும்பினுர். ஆனால், அதே நேரத்தில் கம்பெனியார் $1\frac{1}{2}$ இலட்சம் ரூபாய்த் தொகையை நஷ்ட ஈடாக அளிக்க வேண்டும் என்றும், மேலும் முன்னமேயே மன்னித்துக் குறைக்கப்பட்ட அபராதத் தொகை செலுத்தப்பட வேண்டுமென்றும், இந்தியக் கப்பல்களிலிருந்து கைப்பற்றிய பொருள்களை ஆங்கிலேயர்கள் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும் என்றும் நிபந்தனை விதிக்கப்பட்டது.[1]

**ஆங்கிலக் கொள்ளைக்காரர்கள் :** போர்ச்சுகீசியர்கள் மட்டுமன்றிப் பல சமயங்களில் ஆங்கிலேயர்களும் இந்தியக் கப்பல்களை வழிமறித்துக் கொள்ளையடித்து வந்தனர். உதாரணமாக, இங்கிலாந்தின் முதலாம் சார்லஸ் மன்னனுல் அனுப்பப்பட்ட கப்பலில் காப்டன் காப் (Cobb) என்பான் 1635ஆம் ஆண்டில் செங்கடல் வாயிலில் இருந்த இரு பேரரசுக்குச் சொந்தமான கப்பல்களைக் கொள்ளையடித்தான். 1638-லும் வில்லியம் கோர்ட்டன் என்பானும் (William Courten) நான்கு இந்தியக் கப்பல்களைச் சூறையாடினுன். இதனுல் ஆங்கிலேயக் கம்பெனியின் பணியாள்கள் அதற்குரிய நட்ட ஈடு கொடுக்கப்படும் வரை காவலில் வைக்கப்பட்டனர். காப், கோர்ட்டன் மட்டுமன்றி, இன்னும் பல ஆங்கிலேயர்களும் கொள்ளையடித்துப் பொருள் ஈட்டுவதில் மகிழ்ச்சி கண்டனர். டீச் (Teach), எரோரி (Erory), கிட் (Kidd), ராபர்ட்ஸ் (Roberts),

[1] J. N. Sarkar in 'Anecdotes of Aurangzeb'.

டீவ் (Tewe) ஆகியோர் குறிப்பிடத்தக்க ஆங்கிலேயக் கடற் கொள்ளைக்காரர்கள் ஆவர். இவர்கள் பலரும் சேர்ந்து, 1681ஆம் ஆண்டில் 5 லட்சம் ரூபாய் மதிப்புள்ள பொருள்களைக் கொள்ளையடித்தனர்; மேற்கே பாரசீகத்திற்கும் கிழக்கே சுமாத் திராவிற்கும் செல்லும் கப்பல்களைத் தடுத்து நிறுத்திச் சூறை யாடினர். 'ஃபத்தஹ் முஹம்மதி' என்னும் தனியாரின் கப்பலை யும்[1] 1685-ல் கொள்ளையடித்தனர்.[2] இவற்றிற்கெல்லாம் சிகரமாகப் பேரரசருக்குரிய 'கஞ்சே ஷவாய்' (Ganje Shawai)[3] என்னும் பெரும் கப்பலைச் சூறையாடிப் பல லட்ச ரூபாய் பெறு மானமுள்ள பொருள்களை அபகரித்துச் சென்றனர். கஞ்சே ஷவாய் கப்பலைப்பற்றிக் காஃபீ கான் கூறியிருப்பதைச் சற்று உற்றுநோக்குவது பொருத்தமுடையதாகும்: 'கஞ்சே ஷவாய் என்னும் அரசரின் கப்பலைவிடப் பெரியதொன்று வேறில்லை; இது ஒவ்வோர் ஆண்டும் இறைவனின் வீட்டிற்கு (மக்கா வுக்கு)ச் செல்வது வழக்கம். இப்பொழுது இது சூரத்துக்குத் திரும்பும்போது, இந்தியப் பொருள்களை மக்காவிலும் ஜித்தா விலும் விற்றுவிட்டுத் தங்கமாகவும், வெள்ளியாகவும் 52 இலட் சம் ரூபாய் கொண்டுவந்தது. இப்ராஹீம் கான் இக் கப்பலின் மாலுமி ஆவார். இக் கப்பலில் 80 துப்பாக்கிகளும், 400 கைத் துப்பாக்கிகளும், வேறு தளவாடங்களும் இருந்தன; சூரத்துக்கு அண்மையில் இக் கப்பல் 8, 9 நாள் ஓட்டத்திற்கு நெருக்கமாக வந்து கொண்டிருந்தக்கால் அளவிலும் தளவாடங்களிலும் மிகச் சிறியதும், நான்கில் ஒரு பங்கு உடையதுமான ஆங்கிலக் கப்பல் ஒன்று தென்பட்டது. துப்பாக்கி சுடும் தூரத்தில் வந்ததும் அரசின் கப்பலிலிருந்து துப்பாக்கி வெடி ஒலி கிளம் பியது. துரதிருஷ்டவசமாக, நான்கு பேர் இறந்தனர். அதே நேரத்தில் எதிரிக் கப்பலிலிருந்தும் சுட்டதால், கப்பலின் பாய்கள் விரிக்கப்படும் முக்கியத் தளம் சேதத்திற்குள்ளாகியது. இதனால் துணிவு கொண்ட ஆங்கிலேயர்கள் நெருங்கிவந்து, தங்கள் எதிரிக் கப்பல் தளத்தில் குதித்தனர்...அவர்கள் கப்பலி லிருந்து பல பெண்களையும் (விலைக்கு வாங்கப்பட்ட துருக்கிப் பெண்கள்) இழுத்துச் சென்றனர். பல பெண்கள் தங்கள் கற்பைக் காப்பாற்றிக் கொள்ளக் கடலில் குதித்து இறந்தனர்.

[1] டாக்டர் ராதா குமுத் முக்கர்ஜி 'ஃபத்தஹ் முஹம்மதி' என்னும் கப்பலும் இன்னும் சில கப்பல்களும் பெரும் வணிகர் அப்துல் கபூர் என்பவருக்குச் சொந்தமானவை எனத் தம் நூலில் குறிப்பிடுகிறார்.

[2] Dr. R. K. Mukherjee— 'A History of Indian Shipping' & also Khafi Khan in Elliot & Dowson.

[3] ஔரங்கசீப் சற்று வைதிகப்பற்று மிக்க முஸ்லிமாகையால், இறைவ னின் பெரும் பக்தர்களாகிய அஜ்மீர் அவுலியா (அல்லது நாகூர் அவுலியா) வின் பட்டமாகிய 'கஞ்சே ஷவாய்' என்னும் பெயரையே தம் கப்பலுக்கும் சூட்டியிருந்தார்.

**ஔரங்கசீப் மன்னித்தல் :** 'இந்தச் செய்தி ஔரங்கசீபுக்குத் தெரிவிக்கப்பட்டது......ஔரங்கசீப் உடனே சூரத்திலிருக்கும் பண்டகசாலையின் ஆங்கிலேயர்களைக் கைது செய்ய உத்தர விட்டார். சூரத்தின் கவர்னரும், சூரத் துறைமுகத்தின் பிரதம அலுவலருமான இத்திமாத் கானுக்கும், சித்தீ யாக்கூத் கானுக்கும் பம்பாய்க் கோட்டையை முற்றுகையிடுவதற்கு வேண்டிய ஆயத்தங்களைச் செய்யுமாறு உத்தரவிடப்பட்டது...ஆனால், இவற்றைக் கண்டெல்லாம் ஆங்கிலேயர்கள் அஞ்சவே இல்லை... ஆனால், ஆங்கிலேயர் கோட்டை கொத்தளங்களையும் சுவர்களையும் பழுதுபார்ப்பதிலும், பாதைகளைத் துண்டிப்பதிலும், அரண்களைப் பாதுகாப்பதிலும் சுறுசுறுப்பாக இருந்தார்கள். இந்த ஆயத்தங்களை எல்லாம் பார்த்த இத்திமாத் கான் ஆங்கிலேயரை எதிர்த்துப் போராட்டத்திற்குச் சென்றால், நாடு சுங்க வரியை அதிகமாக இழக்க நேரும் என்ற முடிவுக்கு வந்தார். எனவே, அவர் அரசாங்க உத்தரவை அமல்படுத்துவதற்காகத் தீவிரமான ஆயத்தங்களைச் செய்யவில்லை. ஆனால், வெளித் தோற்றத்திற்குப் பண்டகசாலை அலுவலர்களைக் காவலில் வைத்திருப்பது போல நடித்து, இரகசியமாக அவர்களுக்கு ஆதரவு அளித்து வந்தார். ஆங்கிலேயர்கள் இதற்காகப் பழிவாங்கக் கடற்கரை ஓரத்தில் தென்படும் பேரரசின் ஒவ்வொரு அலுவலரையும் கைது செய்து வந்தனர். இம் மாதிரி வெகு காலம் நீடித்தது.'[1] எனவே, பொருள்களை இழந்த, சூறையிடப்பட்ட அக் கப்பலின் பயணிகள் சூரத் நகருக்குத் திரும்பி வந்து நிகழ்ச்சிகளை விளக்கியபோது, ஆங்கிலேயர்களை எதிர்த்து வெறியாட்டமே தலைதூக்க ஆரம்பித்தது. ஆனால், சூரத்தின் கவர்னர் இத்திமாத் கான் கொலை நிகழ்ச்சிகள் எதுவும் நிகழாதவாறு, அத்துணை எதிர்ப்புகளிடையிலும், ஆங்கிலேயர்களையும் ஆங்கிலக் கம்பெனியையும் பாதுகாத்து வந்தார். இதற்கிடையில் அன்னஸ்லி (Annesley) என்பவரும், பம்பாயின் கவர்னராகிய சர் ஜான் கேயர் (Sir John Gayer) என்பவரும் பேரரசர் ஔரங்கசீபுக்கும், சூரத் கவர்னருக்கும் பல தடவை முறையிட்டதன் காரணமாகப் பேரரசர் மூன்றும் தடவையும் ஆங்கிலேயர்களை மன்னித்தார். ஔரங்கசீபைச் சிந்திக்க வைத்தவை, 'நாங்கள் வணிகர்கள்; கொள்ளைக்காரர்கள் அல்லர்' (We are merchants and not pirates)[2] என்ற கேயரின் வார்த்தைகளும் முறையீடுமே ஆகும்.

[1] Elliot and Dowson—History of India as told by its own historians, Vol. VII, p. 350 - 51. Also quoted by S. R. Sharma, 'The Mughal Empire in India,' and 'The Crescent in India.'

[2] Dr. R. K. Mukerjee—The History of Indian Shipping; also S. H. Hodiwala 'Studies in Indo - Muslim History' Vol. II, Supplement.

**ஔரங்கசீப்-கம்பெனி உடன்படிக்கை :** 'கஞ்சே ஷவாயி'ன் நிகழ்ச்சியினால் தம் மக்களுக்கும் நாட்டிற்கும் அரசுக்கும் ஏற்பட்ட இகழ்ச்சி குறித்து மனம் நொந்தாலும், இனியும் மக்காவுக்கு யாத்திரிகர்களை ஏற்றிச் செல்லும் கப்பல்கள் தடுக்கப்படாமல் இருப்பதற்காக ஔரங்கசீப், ஆங்கிலேயருடன் தொடர்பை வளர்த்துக்கொள்ள விரும்பியது ஒருபுறம் இருக்க, தம் கப்பல்களுக்கு ஐரோப்பிய அரசுகளின் கப்பல்கள் துணை செல்லவேண்டும் என்றும் விரும்பினார். டச்சுக்காரர்கள், அரேபியாவுக்குச் செல்லும் யாத்திரிகர்களுக்குப் பாதுகாப்பு நல்கவும், இந்தியக் கப்பல்களைக் கொள்ளைக்காரர்களிடமிருந்து விடுவிப்பதற்கும் முயற்சிகள் எடுக்க முன்வந்தனர். இதற்குப் பிரதியாக, முகலாயப் பேரரசுக்குள் எந்த ஒரு வரியும் இல்லாமல் தடையிலா வாணிகம் நடத்திக் கொள்ள முழு உரிமையும் தங்களுக்கு அளிக்கப்பட வேண்டுமென அந்த டச்சுக்காரர்கள் நிபந்தனையை விதித்தனர். எனவே, பேரரசர் இதனை நிராகரித்தார். அதே சமயத்தில் ஆங்கிலேயர்களுக்கு முகலாய அரசு ஆண்டொன்றுக்கு 4 இலட்சம் ரூபாய்த் தொகையை அளித்தால், அவர்கள் அரபிக் கடலில் வெகு தூரம்வரை இந்தியக் கப்பல்களுக்குத் துணைசெல்வதாக அன்னஸ்லி என்பவர் பேரரசருக்குக் கடிதம் எழுதினார். ஆனால், இது ஆடுகளுக்கு ஓநாயைக் காவல் வைப்பது போல் ஆகும். எனினும், ஒருவிதமாகப் பேரரசருக்கும் கிழக்கிந்தியக் கம்பெனிக்கும் இடையே ஓர் உடன்படிக்கை ஏற்றுக்கொள்ளப்பட்டது. ஆயினும், வில்லியம்ஸ் கிட் போன்ற கொள்ளைக்காரர்கள் தாங்கள் கொள்ளை அடிப்பதை நிறுத்தவில்லை. 1697ஆம் ஆண்டில் கோழிக்கோட்டுக்கருகில் சில படகுகளை நிறுத்திக் கொண்டு,கிட் கொள்ளையரின் வாழ்க்கையை நடத்தி வந்தான். இவனுடைய செல்வாக்கையும் வெற்றிகளையும் கண்ட சில ஆங்கிலேயர்கள் வில்லியம்ஸ் கிட்டின் பணியில் சேரலாயினர். மெல்ல மெல்ல இவன் தென் கிழக்கு ஆப்ரிக்காவில் மடகாஸ்கர் பகுதியிலும் தளம் ஒன்றை ஏற்படுத்திக் கொண்டான். சில ஆண்டுகளிலேயே ஆங்கிலேயர்கள் மட்டுமன்றி, மொத்தத்தில் 300 ஐரோப்பியர்களையும் அவன் தன்னுடன் சேர்த்துக் கொண்டான்.

**இறுதி எச்சரிக்கை :** உடன்படிக்கைக்கு இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகும் வில்லியம்ஸ் கிட் தனித்துக் கொள்ளையனாக மாறியபோது, கிழக்கிந்தியக் கம்பெனி அவனைக் கட்டுப்படுத்தவில்லை. அவனும் அதே ஆண்டில் சூரத்துக்குச் சென்று கொண்டிருக்கும் கப்பல் ஒன்றிலிருந்து 4 இலட்சம் ரூபாய் பெறு

மானமுள்ள பொருள்களைக் கொள்ளை யடித்துக் கடத்திச் சென்றுன். ஹசன் ஹமீதான் (Husan Hameedan) என்ற செல்வரின் தனிக் கப்பல் ஒன்றில் ஏற்றிச் செல்லப்பட்ட 14 இலட்சம் ரூபாய் பெறுமானமுள்ள பொருள்களும் சூறையாடப்பட்டன. எனவே, கொள்ளைக்காரர்களின் தொல்லை நாளுக்கு நாள் பெருகிவர, இறுதியாக 1698ஆம் ஆண்டு டிசம்பர் 23ஆம் தேதி அன்று முகலாயக் கவர்னர் சூரத் பண்டகசாலையின் அதிபருக்கு ஓர் இறுதி எச்சரிக்கை விடுத்தார்:

(1) அவர்கள் கடற் கொள்ளையர்களிடத்திருந்து முகலாயக் குடிமக்களைக் காப்பாற்ற வேண்டும்.

(2) இல்லையானல், 10 நாள்களுக்குள் அவர்கள் நாட்டை விட்டே வெளியேறிவிட வேண்டும். அதன் பின்னர், கடற் பகுதிகளைக் காக்கும் பொறுப்பைப் பேரரசே ஏற்றுக்கொள்ளும்.

இதுபோன்றே பிரெஞ்சு, டச்சுக் கம்பெனிகளுக்கும் இறுதி எச்சரிக்கை கொடுக்கப்பட்டது. மேலும், ஐரோப்பியரின் கிழக்கிந்தியக் கம்பெனிகள் இந்தியர்களின் தொடர்புகளிலிருந்து துண்டிக்கப்பட்டன. இனி, மேலும் கடற்கொள்ளைகள் நிகழுமேயானுல் அதற்கு ஆங்கில, பிரெஞ்சு, டச்சுக் கிழக்கிந்தியக் கம்பெனிகளே பொறுப்பு ஏற்க வேண்டுமென்றும், நஷ்டஈடு 14 இலட்சம் ரூபாய் கொடுக்கவேண்டும் என்றும் ஔரங்கசீப் 1698ஆம் ஆண்டிலேயே எச்சரிக்கை விடுத்தார். இதனை அறிந்த மூன்று கம்பெனிகளும் கூட்டாக இணங்கினர். டச்சுக் கம்பெனி 70,000 ரூபாயைச் சூரத் கவர்னருக்குக் கொடுப்பதற்கு இசைந்தது. ஆங்கிலக் கம்பெனி 30,000 ரூபாய் கொடுப்பதாகவும், இந்து மகாக் கடல் அரபிக் கடலின் தெற்குப் பகுதி, வங்காள விரிகுடாவின் தெற்குப் பகுதி ஆகிய வட்டாரங்களைப் பாதுகாப்பதாகவும் உறுதி அளித்தது.

**கா:பீ கான்-தூதர் :** நிலைமையை உணர்ந்து கொள்ளையர்களைத் தடுத்து நிறுத்தியதனல், அடுத்த ஆண்டில் சர் நிக்கலஸ் வெயிட் (Sir Nicholas Waite) என்பவர் தலைவராகப் புதிய தோர் பண்டகசாலையை ஏற்படுத்திக் கொள்ள அனுமதிக்கப்பட்டார். இதே ஆண்டில்தான் இங்கிலாந்தின் மூன்ரும் வில்லியம் மன்னரின் சார்பாக, சர் வில்லியம் நாரிஸ் (Sir William Norris) என்பவர் பேரரசர் ஔரங்கசீபின் அவைக்குத் தூதுவராக நியமிக்கப்பட்டிருந்தார். வில்லியம் நாரிஸ் ஔரங்கசீபை, 1701 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் அவர் பன்ஹலா முகாமில்

இருக்கையில் சந்தித்தார்.[1] பேரரசரும் ஆங்கிலேயக் கம்பெனிக்குத் தூதர்களையும் வெகுமதிகளையும் அனுப்பினார். இதே ஆண்டில் அறிஞர் காஃபீ கான் தூதராக நியமிக்கப் பட்டுப் பம்பாய்க்கு அனுப்பப்பட்டார். இதற்குச் சில ஆண்டுகளுக்கு முன்பே 'எவரி' (Every) என்னும் கொள்ளைக்காரன் சூரத் நகரில் சில முகலாயக் கப்பல்களைக் கைப்பற்றிக் கொண்டு கொள்ளையடித்தபோது, அறிஞர் காஃபீ கான் ஆங்கிலக் கம்பெனிக்கும் கொரால்ட் ஆங்கியர் (Gerald Angier) என்பவரிடத்தும் தூது சென்றார் என்பதை நாம் இங்கு நினைவிலிருத்திக்கொள்ள வேண்டும். காஃபீ கான் கூறுகிறார்: 'இந்தத் தொந்தரவுமிக்க வேளையில், இந் நூலின் ஆசிரியராகிய நான், பம்பாயில் ஆங்கிலேயர்களைப் பார்க்கும் துரதிருஷ்டத்தைப் பெற்றேன்; நான் சூரத் துறைமுகத்தில் அப்துர் ரஜாக் கானின் ஏஜெண்ட்டாக இருந்தேன். சுமார் இரண்டிலட்ச ரூபாய்ப் பெறுமதியுள்ள பொருள்களை நான் வாங்கினேன். அவற்றைச் சூரத்திலிருந்து நான் கோல்கொண்டாவிற்கு அனுப்பிவைக்க வேண்டும்...இந்த ஆங்கிலேயர்களின் வக்கீல் என்னை நெடு நாள்கள் தங்குமாறு வேண்டினார். பண்டகசாலையின் ஆள்கள் கைது செய்யப்பட்டது ஏன் என அவர் என்னிடம் வினவினார். மேலும், இச் செயல் (கடற்கொள்ளை) அவரின் ஆள்களாலேயே நிகழ்ந்திருக்க வேண்டும் என்பதற்கு அத்தாட்சிகள் உள்ளனவா என்றும் வினவினார்...''நாங்கள் ஒவ்வோர் ஆண்டும் நிறைந்த பணத்தையும் வியாபாரத்தின் லாபத்தையும் எங்கள் நாட்டிற்கு அனுப்பவேண்டியுள்ளது. ஆனால், இந்துஸ்தானத்து அரசரின் நாணயம் தேய்ந்தும், மதிப்புக் குறைந்து போயும் இருக்கிறது.''...'[2]

**நாரிஸ் சந்திப்பு :** சர் வில்லியம் நாரிஸ் ஔரங்கசீபைச் சந்தித்த பின்னரும் 1703, ஆகஸ்ட் 28-ல், மீண்டும் சூரத்துக்கு அருகில், ஆங்கிலேயர்கள் மக்காவிலிருந்து திரும்பிய இரு கப்பல்களைக் கொள்ளை யடித்தனர். நஷ்டஈடாகப் பேரரசருக்கு விட்டல், கேசவயரேக் என்னும் இரு ஏஜெண்டுகள் 3 இலட்சம் ரூபாய் கொடுத்தனர். ஆனால், பேரரசர் ஔரங்கசீப் இச் செயலுக்கு இத்திமாத் கான் உடந்தையாக இருந்ததை அறிந்து, அந்த 3 இலட்சம் ரூபாயையும் திருப்பிக் கொடுத்து

[1] S. R. Sharma, Ibid. Lane-poole - Ibid. Also Dr. R. K. Mukerjee -Ibid & Sir Charles Fawcett - The English Factories in India, Vol. II.

[1] Elliot & Dowson—History of India as told by her own historians, Vol. VII. & W. H. Moreland—'Economic History of India from Akbar to Aurangzeb'

விட்டார். 1705ஆம் ஆண்டுக்குப் பிறகு பொதுவாக ஆங்கிலேயர்கள் படிந்து விட்டனர். அவர்கள் தலைச்சேரியில் (மலபார்) 1683இலும் அஞ்சங்கோயிலில் (திருவனந்தபுரம்) 1694இலும் பண்டகசாலைகளை ஏற்படுத்திக் கொண்டனர்.

**தமிழகம் :** ஃபிரெஞ்சுக்காரர்களைப் பொறுத்தவரை, சூரத்தில் 1668-1669ஆம் ஆண்டுகளிலும், மசூலிப்பட்டினத்தில் 1669ஆம் ஆண்டிலும் பண்டகசாலைகளை நிறுவ ஔரங்கசீப் அனுமதி யளித்தார். அவர்கள் 1672-ல் (சென்னை) சாந்தோமைப் பிடித்துக் கொண்டனர். 1674ஆம் ஆண்டில் ஷேர்கான் லோடியின் (ஔரங்கசீபின் கவர்னர்) அனுமதியின் பேரில் மார்த்தின் (Martin) என்னும் பிரெஞ்சுக் கவர்னர் பாண்டிச்சேரியை நிறுவ அனுமதிக்கப்பட்டார். அவர் 1690-ல் சந்திரநாகூரை ஏற்படுத்திக்கொண்டார். மார்த்தின் புதுவையை நிறுவியதிலிருந்து அவர் இறக்கும் வரையில் (1706) அனேகமாகப் பிரெஞ்சுப் பண்டகசாலை நிறுவனங்களின் மொத்த மக்கள் தொகை 40,000 இருக்கக்கூடும் என நம்பப்படுகிறது. ஔரங்கசீப் ஆட்சியில் தெற்கே தமிழகத்தில் ஆங்கிலேயர்கள் சென்னை சாந்தோமிலும், கடலூரிலும், வடக்கே மசூலிப்பட்டினத்திலும் (ஆந்திரா) பண்டகசாலைகளை நிறுவிக் கொண்டனர். பழவேர்க்காடு (Pulicat) என்னுமிடத்தில் அவர்கள் பண்டகசாலை யொன்றை நிறுவத் தவறிய பின்னர்த் தான், மசூலிப்பட்டினத்தில் தங்கள் நிறுவனங்களை ஏற்படுத்தினர். கல்கத்தாவை நிறுவுவதற்கு ஜாப் சார்ஜக் காரணமாக இருந்தார்; பம்பாய் நகரை கெரால்ட் ஆங்கீயர் நிறுவினர்; சென்னை நகரை சர் ஃபிரான்ஸிஸ் டே (Sir Francis Day) நிறுவினர்.[1] மீர் ஜும்லா ஔரங்கசீபின் பிரதமராக இருப்பதற்கு முன், அவர் கோல்கொண்டாவில் இருந்தபோது, சென்னை வரை படையெடுத்து வந்து வெற்றி கண்டு ஆங்கிலேயர்களுக்கு வியாபார உரிமைகளையும் சலுகைகளையும் அளித்துச் சென்றார். ஔரங்கசீப் ஆட்சிக்கு வந்த 7 ஆண்டுகளுக்குப் பிறகு, ஜார்ஜ் ஃபாக்ஸ் கிராஃப்ட் (George Foxgraft) என்பவர்தாம் செயின்ட் ஜார்ஜ் கோட்டையின் முதல் கவர்னராக நியமிக்கப்பட்டார். சென்னையின் மக்கள் தொகையும் அப்போது 40,000 ஆக இருந்ததாகக் கணக்கிடப்பட்டுள்ளது. வில்லியம் லாங்ஷாம் (William Longsham) என்பவர் பீஜப்பூர் அரசுடனும் முகலாயர்களுடனும் சுமுகமான உறவையே ஏற்படுத்திக்கொண்டார்.

[1] C. S. Srinivasachari—History of the City of Madras; also, History of the Rulers of Ginjee.

1681ஆம் ஆண்டில் கடலூர், பரங்கிப்பேட்டை, விசாகப் பட்டினம் ஆகிய ஊர்களில் ஆங்கிலேயர்கள் புதிதாகப் பண்டக சாலைகளை நிறுவிக்கொண்டனர்.[1] ஜுல்ஃபிகார் கான் (Zulfiqar Khan) செஞ்சிக் கோட்டையை வென்று, தமிழ் நாட்டின் தெற்கு எல்லைகளைப் பேரரசுடன் இணைத்துக் கொண்டபோது, ஆங்கிலேயர்களுக்குச் சென்னையிலும், கடலூரிலும் (டேவிட் கோட்டை) அவர்களுக்குரிய வியாபாரச் சலுகைகளுக்குப் பேரரசரிடத்திலிருந்து ஒப்புதலை வாங்கித் தந்தார்.[2]

[1] History of India, Vol. II, Prof. R. Sathianathier, p. 468-74.

[2] Quoted by Bernier — The Travels, p. 130; J. N. Sarkar, The Mughal Administration, p. 6; 'Its activities were not confined to the bare minimum of police and tax collecting functions. It performed constituent and ministrant functions characteristic of a 'Culture State', Prof. R. Sathianathier, History of India, Vol. II. p. 220.

# 17. ஔரங்கசீபின் நிர்வாகம்

'எம் மன்னர் தம் மக்களை நீதி வழுவாது நடத்துவதே தம் வாழ்வின் முக்கியக் கடமையெனக் கருதுகிறாரோ, அவரே சிறந்த மன்னராவார்' என்று பேரரசர் ஔரங்கசீபே கூறியுள்ளார். இக் கூற்று நம் பேரரசருக்கே முற்றிலும் பொருந்தும். எப்பொழுதும் சுறுசுறுப்புடனும், நேர்மை தவறாமலும், நீதியுடனும் ஆட்சி புரிந்து வந்த ஔரங்கசீபின் நிர்வாகம், இடையறாத அரை நூற்றாண்டுகாலப் போருக்கு இடையிலும் சீர்குலையாமல், பழுதுபடாமல் இயங்கி வந்ததே போற்றற்குரியதாகும்! இதற்கு ஔரங்கசீபின் பொதுத் திறமையும், தனிப்பெரும் ஆற்றலும், வித்தியாசம் பாராட்டாத கண்டிப்புமே காரணங்களாகும். முகலாயர்களின் பொதுவான நிர்வாகத்தைப் பேராசிரியர் சர்க்கார், 'இந்தியச் சூழ்நிலையில் அமைந்த பாரசீக-அரேபிய முறை' என்று விவரிக்கின்றார். பொதுவாக, முகலாயர்களின் நிர்வாகத்தை, ஔரங்கசீபின் நிர்வாகம் உட்பட, 'காகித அரசு' (Khaghazi Sarkar or Paper Government) என்று சிலர் வர்ணிக்கின்றனர். ஆனால், உண்மை என்னவெனில், முகலாயர்களின் காலத்தில்தான், குறிப்பாக அக்பர், ஔரங்கசீபின் ஆட்சிகளில்தாம் பேரரசின் அலுவலர்கள் ஒரு மாவட்டத்திலிருந்து பிற மாவட்டங்களுக்கு மாற்றப்பட்டனர். அரசாங்கத்தின் ஆணைகள் எல்லாம் வாய்ச்சொல் மூலமாக அல்லாமல், எழுத்து வடிவத்தில் பிறப்பிக்கப்பட்டன. அரசாங்க நடவடிக்கைகள் ஒவ்வொன்றுக்கும் தஸ்தாவேஜுகள் நிறைய இருந்தன. காகிதம் அதிகமாக உபயோகப்படுத்தப்பட்டது. எனவே, இதனைக் 'காகித சர்க்கார்' என்று வழங்குகின்றனர். இது ஒரு விதத்தில் பொருத்தமே.

ஆனால், மற்றும் சிலர் இதனை 'வல்லாட்சி' என்றும் விவரிக்கின்றனர். உண்மையில், ஔரங்கசீபின் அரசாங்கத்தின்

தன்மை என்ன? அவரது குறிக்கோள் என்ன? என்பனபற்றி யெல்லாம் நாம் முன்னரே பார்த்துவிட்டோம். நிர்வாகத்தின் பணிகள் அமைதியைக் காப்பதும், வரியை வசூலிப்பதும் மட்டு மன்றி, அது 'பண்பு அரசு' என்பதன் அடையாளமாகச் சில பணிகளையும் செய்து வந்தது.[1] மத்திய அரசாங்க, மாகாண, தல அரசாங்க நிர்வாகத்தைப் பொறுத்தவரை, ஔரங்கசீப் காலத்திலும் பொதுவாகவே அவருடைய முப்பாட்டனுர் அக்பர் நிலைநாட்டிச் சென்ற நிர்வாக முறைகளே பின்பற்றப்பட்டன. எனினும், மன்சப்தாரி முறையிலும், உம்ராக்களுக்கும் உலமாக் களுக்கும் அளிக்கப்பட்ட சிறப்பு மதிப்பிலும், வரிவசூல் முறை யிலும் ஔரங்கசீபின் நிர்வாகம் தம் மூதாதையர்களின் நிர் வாகத்தைவிடச் சற்று மாறுபட்டிருந்தது என்பதும் குறிப்பிடத் தக்கதாகும்.

ஔரங்கசீப் இறந்தபொழுது அவரது பேரரசில் மொத்தத் தில் 21 சூபாக்கள் இருந்தன. சூபா வென்னும் மாகாணங்கள் எல்லையிலும், பரப்பளவிலும் அக்பர், ஷாஜஹான் காலத்திய மாகாணங்களைவிட விரிவடைந்திருந்தன. 21 மாகாணங்களில் 7 மாகாணங்கள் தக்காணத்திலும், 14 மாகாணங்கள் வட இந்தி யாவிலும் இருந்தன. அவையாவன:—

வட இந்தியா: (1) ஆக்ரா, (2) அஜ்மீர், (3) இலாஹா பாத், (4) பீஹார், (5) டெல்லி, (6) குஜராத், (7) காஷ் மீரம், (8) லாஹூர், (9) மூல்தான், (10) மாளவம், (11) அவத், (12) சிந்து, (13) ஒரிஸ்ஸா, (14) வங்காளம்.

**தக்காணம்:** (1) காந்தேஷ், (2) பீரார், (3) ஔரங்கா பாத் அல்லது அஹ்மத்நகர், (4) தெலுங்கானு அல்லது பீடார், (5) பீஜப்பூர், (6) ஹைதராபாத், (7) கர்நாடகம்.[2]

ஔரங்கசீபின் ஆட்சியில் காண்டஹார் அல்லது தெற்கு ஆப்கானிஸ்தானமும், காபூல் அல்லது வடக்கு ஆப்கானிஸ்தான மும் யூசுப் ஜாஹியர்களை, கத்தாக்கியர்களை எல்லாம் பணிய வைத்த பின்னர்ப் பேரரசுடன் இணைத்துக் கொள்ளப்பட்டன. எனவே, இதற்குக் காஷ்மீரம் தலைநகரமாக இருந்தது. பேராசி ரியர் சர்க்கார் கூறுகிருர்: ஔரங்கசீபின் அரச எல்லை வடக்கே காஷ்மீரம், மேற்கே ஆப்கானிஸ்தானம் (ஹிந்துகுஷ் மலைக்குத்

[1] J. N. Sarkar, Mughal Administration. Dr Ibn Hasan, The Central Structure of the Mughal Empire.

[2] J. N. Sarkar, A Short History of Aurangzeb, Ch. XX. p. 475.




ஔரங்கசீபின் கீழிருந்த முகலாயப் பேரரசின் எல்லைகளைக் காண்பிக்கும் தேசப் படம்

தெற்கே) இருந்து, மேற்குக் கடற்கரையில் கோவா உட்படவும் தெற்கே மைசூர் வரையும் அதற்கு நேர் தெற்கே தஞ்சாவூர் வரையும், கிழக்கே அஸ்ஸாம் வரையும் பரவி இருந்தது.[1]

வங்காளத்தைப் பொறுத்தவரை, ஷாயிஸ்தகான் அரசப் பிரதிநிதியாக இருந்தபோது சிட்டகாங் துறைமுகத்தை எல்லாம் தம்வசமாக்கிக் கொண்டார். (1) முர்ஷித் குலீ கான், (2) ரஹீம் கான், (3) ஷோவா சிங், (4) ரசிக்தாஸ், (5) இப்ராஹீம் கான் ஆகியோர் படிப்படியாக அடுத்தடுத்துச் சூபாவின் ஆளுநர்ப் பதவியை வகித்துவந்தனர். அது போன்றே, ரஹீம் கான் என்பவரும், முஹம்மது ஹாரி என்பவரும் ஒரிஸ்ஸா மாகாணத்திற்கு ஆளுநர்களாக நியமிக்கப்பட்டிருந்தனர். குறிப்பிடத்தக்க வேறு ஆளுநர்கள் ஆவோர்: (1) மஹபத் கான், (2) இளவரசர் முஹம்மது ஆஜம், (3) முஹம்மது அமீன் கான், (4) அப்துல் ஹமீது, (5) தேவ்கார் மன்னர் (Raja of Deogarh), (6) ராஜா கிஷன் சிங் (Raja Krishen Singh).[2]

ஆனால், மொத்தச் சூபாக்கள் 19 தாம் இருந்தன என்பதை ஔரங்கசீபின் இறுதிச் சாசனம்[3] தெரிவிக்கின்றது: (1) ஆக்ரா, (2) மாளவம், (3) குஜராத், (4) அஜ்மீர், (5) காந்தேஷ், (6) பீரார், (7) ஔரங்காபாத், (8) பீடார், (9) டெல்லி, (10) பஞ்சாப், (11) காபூல், (12) மூல்தான், (13) தட்டா (சிந்து), (14) காஷ்மீரம், (15) வங்காளம், (16) ஒரிஸ்ஸா, (17) பீஹார், (18) இலாஹாபாத், (19) அவத் ஆகியன.

## மத்திய நிர்வாகம்

**அமைச்சர்கள் :** முகலாயர்களின் ஆட்சியிலும், ஔரங்கசீபின் கீழும் 8 அமைச்சர்கள் பணியாற்றினர். இவர்களன்றிச் சில துணை அமைச்சர்களும் இருந்தனர். 8 அமைச்சர்களின் எண்ணிக்கையும் அவர்களின் பொறுப்புக்களும் சிவாஜியின் அஷ்டப்பிரதான் அமைச்சரவைக்கு முன்மாதிரியாக இருந்தன எனச் சிலர் கருதுகின்றனர். ஔரங்கசீபின் அமைச்சர்கள்:

(1) பிரதமர் (வக்கீல்–Wakil): மீர் ஜும்லா, சஅதுல்லா கான் குறிப்பிடத்தக்க பிரதமர்கள்; (2) நிதி அமைச்சர் திவான்

[1] Ibid. Vol. II.

[2] Dr. Athar Ali—The Nobility of Mughals under Aurangzeb .

[3] Aurangzeb's last Will and Testament - In the Office Library MS 1344, quoted by Sarkar - Ibid. p. 487; S. R. Sharma, Mughal Empire in India, p. 446.

அல்லது வசீர்—(Diwan or Wazir); (3) பிரதமக் கணக்கர்-மீர் பக்ஷி—(Mir Bakshi—Pay Master-general); (4) அரசவைப் பிரதம அலுவலர் கானெ ஜமான்—(Khane-Zaman or Lord High Steward); (5) பொதுச் சொத்துகளின் பராமரிப்பாளர் சத்ரெ சுதூர்—(Sadri-Sudur—The Chief of Department of Charities); (6) பண்பாட்டுச் சீரமைப்பாளர் முஹ்தசிப்—(Muhtasib—Regulator of Morals); (7) பிரதம காஜி—(Quazi or the Chief Justice); (8) போக்குவரத்து அமைச்சர் தாரோகா—(Darogah).

**துணை அமைச்சர்கள் :** (1) மீர் ஆதீஷ் (Mir Atish); (2) மீர் அர்ஜ் (Mir Arz); (3) மீர் பார் (Mir Par); (4) மீர் பஹர் (Mir Bahar).[1]

ஔரங்கசீபின் ஆட்சியில் 'வக்கீல்' பதவி அல்லது பிரதமர்ப் பதவி அரசாங்கத்தின் மிக உயர்ந்த பதவியாக இருந்த போதிலும், பேரரசரின் இசைவு அல்லது ஒப்புதல் இல்லாமல் இவரால் ஏதொன்றையும் செய்ய இயலாது. மீர் ஜும்லாவும், சஅதுல்லா கானும் பிரதமராகப் பணியாற்றும்வரை பிரதமர்ப் பதவி முக்கியத்துவம் பெற்றிருந்தது. ஆனால், அவர்களது மறைவுக்குப் பின்னர், அப் பதவிக்குரிய மரியாதை 'திவானுக்கு' அளிக்கப் பட்டது. ஆனால், இதற்கு முன்பு பேரரசர் அக்பர் காலத்திலும் கூட 'வக்கீல்' என்னும் பதவி இருந்ததெனினும், முக்கியத்துவமும் செல்வாக்கும் 'திவான்' என்னும் நிதி அமைச்சருக்கே இருந்தன. இதற்குக் காரணம், அக்பரின் நிலவரித் திட்டத்தையே மாற்றி யமைத்துச் சீர்திருத்திய தோடர் மால் போன்ற குறிப்பிடத் தக்கவர்கள் திவான்களாக இருந்தனர். ஜஅஃபர் கான், ஷா மன்சூர் ஆகியோரும் அக்பரின் திவான்களாவர். ஆனால், ஔரங்கசீப் போர்க்காலங்களிலும், அமைதிக் காலங்களிலும் நிதி அமைச்சரின் ஆலோசனையின்பேரில் செயல்பட்டு வந்தார். பிரதமக் கணக்காளர் வரவுசெலவுக் கணக்குகள் அனைத்திற்கும் பொறுப்பேற்றார். பொதுச் சொத்துக்களைப் பராமரிக்கும் பொறுப்பில் ஏழை வரியும் (ஜக்காத்) இதனுள் அடங்கி இருந்தது. ஔரங்கசீபின் ஆட்சியில் குறிப்பாக முஹ்தசிபுக்குச் சிறப்பான இடம் கொடுக்கப்பட்டது. ஏனெனில், பொது நலன்களைக் கருத்திற் கொண்டும், 'சமூகநல அரசு' என்ற இலட்சியத்தைக் கருத்திற் கொண்டும்,

[1] Dr. Ibn Hasan—Central Structure of the Mughal Empire; Dr. A. L. Sirtvatsava—History of Mughal Empire 1526-1707.

ஔரங்கசீப் இவ் வமைச்சருக்கு உயரிய இடத்தை அளித்திருந்தார். குடி, சூது, பரத்தையரில்லம் நுழைதல் ஆகிய தீய பழக்கங்களை இந்து, முஸ்லிம் என்ற வேறுபாடில்லாமல் ஒழிக்கும் பொறுப்பு முஹ்தசிப் என்னும் இவ் வமைச்சரிடம் விடப்பட்டிருந்தது.

**பிரதம அமைச்சரின் பணிகள் :** அக்பரது ஆட்சியில் பிரதமர் 'வக்கீல்' (Wakil) என்று அழைக்கப்பட்டார்.[1] ஔரங்கசீப், ஷாஜஹான் ஆகிய இருவரின் ஆட்சியில் வஜீர் (Wazir) என்று அது மாறியது. 'வஜீர்' என்றாலே இன்றைய வழக்கில் 'அமைச்சர்' என்று பொருள் படுமாயினும், பொதுவாக அன்று 'பிரதமர்'—முதல் மந்திரி (வஜீரெ ஆஜம்) என்றே கருதப்பட்டார். இவருக்கு நிர்வாக இயந்திரத்தில் எல்லா அதிகாரங்களும் பொறுப்புகளும் இருப்பினும், ஒரு குறிப்பிட்ட இலாக்கா இவருக்கென்று ஒதுக்கப்படுவது கிடையாது. எனினும், பிரதமர் சிறப்பாக வருவாய்த் துறைக்குத் (Revenue Department) தலைமை தாங்குவது மரபு. வருவாய்த் துறையின் தலைவர் 'திவான்' (Diwan) என்று அழைக்கப்பட்டார். இந்துக்களும் திவான்களாகப் பணியாற்றியுள்ளனர். திவான் பதவி சில சமயங்களில் பொதுச் சொல்லாக அமைந்து, பல்வேறு திவான்கள் நியமிக்கப்பட்டனர். உதாரணமாக, 'திவானெ குல்' (Diwane Kul)—பொதுத்துறை திவான், 'திவானெ ஜாகீர்' (Diwane Jagir)—ஜாகிர் நிலங்களின் திவான், 'திவானெ சாதாத்' (Diwane Sadat)—அறநிலையங்களின் திவான் என்றெல்லாம் பல்வேறு அமைச்சர்கள் இருந்தனர். பேரரசர் திறமையற்றவராகவும், செயலாற்ற இயலாதவராகவு மிருந்து, பிரதமர் சக்தியும் செல்வாக்கும் மிக்கவராக விளங்குவாரானால், ஆட்சியைக் கவிழ்த்து இவரே அரியணைமீது அமர வாய்ப்புக்கள் நிறைய இருந்தன. ஆனால், ஆறு முகலாயப் பேரரசர்களும் சிறப்புமிகு ஆற்றல் பெற்றவர்கள். எனவே, ஔரங்கசீப் தக்க வல்லமையைப் பெற்றிருந்தமையால், 'வஜீருக்கு' அவர்க்குரிய இடத்தை மட்டுமே அளித்தார். பிரதம அமைச்சருக்குச் சிறப்பான பணிகள் இருந்தன. சுபேதார், ஃபவுஜ்தார், அமீர்கள், தாரோகா, தாசில்தார் ஆகிய பற்பல அரசாங்க அலுவலர்களை நியமிக்கும் பொறுப்பு இவரிடம் விடப்பட்டிருந்தது. பல ஃபர்மான்களில் (அரசு கட்டளை) பிரதமரின் கையொப்பம் அவசியமாக வற்புறுத்தப்பட்டது. அசத் கான், ஃபஜல் கான், ஜஅஃபர் கான் போன்றோர் ஔரங்கசீபிடம் சிறந்த பிரதமர்

[1] Vincent Smith—Akbar the Great Mughal.

களாக இருந்தனர். டாக்டர் சித்தீக் கூறியது போல, ஃபஜல் கான், ஜஅஃபர் கான், அசத் கான் போன்ற பிரதமர்கள் நிறைந்த நிர்வாகத் திறமையும், ஆழ்ந்த போர் அனுபவமும் பெற்றிருந்தனர். எனினும், ஔரங்கசீப் பிரதமரின் பணிகளில் அக்கறை கொண்டிருந்ததனால் அவர்கள் பேரரசருக்கு எதிராக முடிவு எடுத்தல் இயலாது.[1] பிரதமர் பல நேரங்களில் பிரதமத் தளபதியாகவும் பணியாற்ற நேரிட்டது. அவ்வாறு பணியாற்றியவர்களுள் பிரதமர் சஅதுல்லா கான், அசத் கான், மீர் ஜும்லா, ஃபஜல் கான் ஆகியோர் எடுத்துக்காட்டு ஆவர். வரி வசூலிக்கு முன் பேரரசரிடம் இருந்து ஆணைகளைப் பெறுவதும், வரித் தொகையை வசூலித்த பின்னர்ப் பேரரசருக்குக் கணக்குகளைச் சமர்ப்பிப்பதும் பிரதமரின் கடமையாகும். பிரதமர்கள் பொதுவாகவே நிர்வாகத் திறமைமட்டுமன்றி, இலக்கியத்திலும் (பாரசீக இலக்கியம்) ஈடுபாடு கொண்டிருந்தனர்.

**'திவான்' அல்லது நிதி அமைச்சர் :** பேரரசின் நிதி அமைச்சருக்கு 'திவானெ ஆலா' (Diwane Ala or Chief Diwan) என்ற பட்டம் வழங்கப்படுவதுண்டு. அவருக்குக் கீழ் 'திவானெ தன்' (Diwane Dan or Diwan of Salaries) 'திவானெ காலிஸா' (Diwane Khalisa or Diwan of Crown Lands) என இரு அமைச்சர்கள் இருப்பர். இவரது பணிகள் : (1) பக்ஷியைப் போன்று இவரும் பேரரசருக்கும் நிர்வாக உலகுக்கும் பாலமாக இருப்பார். (2) இவரது அலுவலகம் தான் தலைமைச் செயலகம் (Chief Imperial Secretariat) ஆகும். இவரது அலுவலகம் பதிவேடுகளை வைத்துப் பாதுகாக்கும் அலுவலகம் ஆக மட்டுமன்றிப் பிற அலுவலகங்களுடனும் தொடர்புகொள்ள வேண்டும். (3) எல்லா அலுவலகங்களின் கணக்குகளையும் சோதிக்க வேண்டும். (4) எல்லா நியமனப் பத்திரங்களிலும், பதவி உயர்வு அறிக்கைகளிலும் இவருடைய ஒப்புதல் கையெழுத்து இன்றி ஒன்றும் நிறைவேறாது. (5) நாட்டின் வரவு செலவுக் கணக்கு முழுவதையும் நிர்வகிப்பது இவரது பொறுப்பே. (6) வேறு பிரதம அலுவலர்கள் இவரது ஒப்புதலிலேயே ஓய்வு பெற முடியும். (7) இவருக்கு நேர் கீழே பணிபுரியும் மாகாணத் திவான்களை நியமிக்கும் பொறுப்பும் இவருடையதே. (8) அரச ஆணைகளை அமல் படுத்த இவரது கையொப்பம் மிகவும் அவசியம்.

**பக்ஷி :** இப் பதவி இராணுவ சிவில் நிர்வாகத்தின் தலைமை அமைச்சர்ப் பதவி ஆகும். ஔரங்கசீபின் ஆட்சியில் சாதாரண

[1] S. A. Siddiqi — The Land Revenue Administration under the Mughals, p. 65—Asia Publishing House, 1970 edn.

மாக 'பக்ஷி' என்று மட்டும் அழைக்கப்படாமல், இவர் 'மீர் பக்ஷி' (Mir Bakshi) என்றே அழைக்கப்பட்டார். இவருக்குக் கீழ் 3 உப பக்ஷிகள் இருந்தனர். அவர்கள் 2ஆவது, 3ஆவது, 4ஆவது பக்ஷிகள் என்று அழைக்கப்பட்டனர். மீர் பக்ஷிக்கும் தளபதிப் பொறுப்பு இருந்தது. மீர் பக்ஷியைத் தலைமைப் பாதுகாப்பு அமைச்சர் என்று கூறுவதே பொருத்தமுடையதாகும். பேரரசரே போர்ப் பயிற்சி பெற்றிருந்த காலத்தில் மீர் பக்ஷியிடம் போர்ப் பொறுப்புகள் மிகவும் குறைந்து, இராணுவ நிர்வாகத்தின் கணக்குகளைச் சரிபார்க்கும் பொறுப்பே மிகுந்துவிடுவதும் உண்டு. இவர்கீழ் உள்ள பக்ஷிகளுக்கு வெவ்வேறு பணிகள் அளிக்கப்பட்டன. பீரங்கிப் படைகளுக்கு என்று தனி அமைச்சர்—அலுவலர் நியமிக்கப்பட்டார். அவரை 'மீர் ஆதீஷ்' (Mir Atish) (ஆதீஷ் - நெருப்பு) அல்லது 'தாரோகா தோப்கானு' (Darogha Topkhana) என்று அழைத்தனர். ஆகவே, 'மீர் பக்ஷி'க்கு இராணுவ அமைச்சகத் தலைமைப் பொறுப்பு மட்டுமன்றிப் பணம் பட்டுவாடா செய்யும் பொறுப்பும் இருந்தது. எனவே, பேரரசின் தலைமைச் சம்பளம் வழங்குபவர் (Imperial Paymaster) என்றும் இவர் அழைக்கப்பட்டார்.

**கானெ ஜமான் (Khane-Zaman) :** இவர் பேரரசரின் அலுவலகங்களுக்கும் அரண்மனைக்கும் தொடர் சங்கிலிபோல் பணியாற்றியவர்; அரண்மனை அதிகாரிகளுக்கு முதல்வர். அதுமட்டுமன்றிப் பேரரசருக்கு அந்தரங்கச் செயலராகவும் பணியாற்றினர். இதனுல் பேரரசர் செல்லும் இடமெல்லாம் இவரும் உடன் செல்ல நேர்ந்தது. பிரயாணமாக இருப்பினும் சரி, அல்லது போர்க்களம் புகினும் சரி, இவரும் உடன்செல்ல வேண்டும். எனவே, பேரரசரிடம் நன்மதிப்பையும் நல்லெண்ணத்தையும் வளர்த்துக்கொண்டு, இவரால் செல்வாக்கையும் செல்வத்தையும் திரட்ட இயலும்.

**பிரதமச் சதர் :** சட்ட-நீதி அமைச்சர் 'சதருஸ் ஸுதூர்' அல்லது பிரதமச் சதர் என்று அழைக்கப்பட்டார். இவருக்கு அரபி, பாரசீக மொழி, இலக்கியங்கள், சட்டம் ஆகியவை தெரிந்திருப்பது மிகவும் அவசியமாகியது. ஏனெனில், 'காஜிகளை'யும் (Qazis), காஜியுல் - குஃஜ்ஜாத்களையும் (பிரதம காஜி Chief Qazi or Chief Justice) நியமிக்கவும், அவர்களின் தீர்ப்புகளை ஆராய்ந்து பார்த்துப் பேரரசருக்குத் தகுந்த நேரத்தில் ஆலோசனை கூறவும் இவர் கடமைப்பட்டவர். பேரரசர் ஷாஜஹான் ஆட்சியில் சட்ட மந்திரி 'சதரெ குல்' (Sadr-i Kul)

அல்லது 'சதருஸ் ஸுதூர்' (or Sadrus Sudur) என்று அழைக்கப்பட்டார்.

**பிரதம காஜி :** நீதிபதிகள் 'காஜி' என்று அழைக்கப்பட்டனர். பிரதம நீதிபதியைக் 'காஜியுல் குஜ்ஜாத்' (Qaziul Quzzat) என்று அழைத்தனர். நீதிபதிகளை நியமிப்பது பிரதமச் சதரின் பொறுப்பு. ஆனால், நீக்கும்பொழுது, பேரரசரின் கவனத்திற்குக் கொண்டுவந்த பின்னர்ப் பேரரசர்தாம் அவர்களை நீக்கவேண்டும். காஜிகளுக்குப் பதவிப் பிரமாணம் செய்து கொடுக்கு முன் பிரதமச் சதரோ அல்லது வேறு நியமிக்கப்பட்ட பிரதம நீதிபதியோ கீழ்க்கண்ட அறிவுரையை வழங்குவார்: 'நீதிபதியாக நடந்து கொள்ளுங்கள். நடுநிலைமையை விட்டுத் தவறாதீர்கள். அரசாங்கத்தின் தலைநகரிலேயே, நீதிமன்றத்திலேதான், இரு தரப்புக்காரர்களும் இருக்கும்போதுதான் வழக்கு நடத்த வேண்டும். உங்கள் இடங்களில் இருக்கும் மக்கள் அளிக்கும் வெகுமதிகளைப் பெறாதீர்கள்; நீங்கள் பணிபுரியும் இடத்தில் யார் அழைத்தாலும், எவர் அழைத்தாலும், விருந்தில் கலந்து கொள்ளாதீர்கள்' (தஸ்தூர் அமல்—ஔரங்கசீபின் 'நிர்வாகக் கையேடு').[1]

காஜிக்கும், பிரதமக் காஜிக்கும் சட்ட ஆலோசகராக முஃப்தி (Mufti) என்னும் பதவியில் ஒருவர் நியமிக்கப்படுவார். பிரதமச் சதர்தாம் இவரையும் நியமிப்பார். 'முஃப்தியெ ஆஜம்' (Mufti - Azam) என்னும் ஒரு பதவி இருந்தது. இவரை 'அட்வகேட் - ஜெனரலு'டன் ஒப்பிடலாம். பிரதமச்சதர் சதர்களை 'சூபாக்களு'க்கு (மாகாணங்களுக்கு) நியமிக்கும்பொழுது, அரசாங்க நிலங்கள், ஜாகிர்ச் சொத்துகள், நாட்டின் சட்டங்கள், மாகாணத்தில் நிலவும் வழக்குகளும் மரபுகளும் ஆகிய எல்லாவற்றையும்பற்றி விளக்கம் அளிக்கவேண்டும்.[2]

**முஹ்தசிப்** (Muhthasib or Minister for Religious Endowments) : இவரை 'அறநிலையப் பாதுகாப்பு அமைச்சர்' என்று கூறுவது பொருத்தமாகும். பேரரசர் ஔரங்கசீப் இவ்வாறு ஓர் அமைச்சரை இப்பதவியில் அமர்த்தி இந்துக்களுக்கு எதிர்ப்பான நடவடிக்கைகளை மேற்கொள்ளுமாறு பணித்ததாக ஒரு தவறான பிரசாரம் செய்யப்பட்டுள்ளது. 'முஹ்தசிப்' என்னும் அமைச்சர்ப் பதவி ஔரங்கசீப் காலத்தில் புதிதாக ஏற்படுத்தப்பட்டது அன்று. ஷேர் ஷா, அக்பர் ஆட்சியிலும் சிவாஜியின் ஆட்சி

[1] Dastur Amal—Administrative Manual of Aurangzeb.
[2] Dr. Ibn Hasan—Ibid.

யிலும் அவ்வாறு ஓர் அமைச்சர் இருந்தார்; சிவாஜியின் கீழ் 'சதர் முஹ்தசிப்' அல்லது 'பண்டித ராவ்' என்ருெரு அமைச்சர் இதுபோன்ற பணிகளை யாற்றினுர். ஔரங்கசீபின் கீழ் இவ்வமைச்சருக்கு அறநிலையங்களைப் பாதுகாப்பதைவிட, நாட்டில் அறநிலையங்களையும் ஒழுக்க நெறிகளையும் காப்பதும், அமல் படுத்துவதுமே சிறப்பான பணியாகும். பங்க் (Bang), கஞ்சா, அபினி ஆகியவற்றை மக்கள் உபயோகிக்காமல் தடுத்தலே இவரது கடமையாகும். இதில் சமூக வேறுபாடுகளுக்கு இடமில்லை. அவ்வாறு முஸ்லிம் குடிமக்களை மட்டுமே நெறிமுறைக்கு உட்படுத்துவது குறிக்கோளாக இருந்திருந்தால், நாட்டிலிருந்த பல சமயத்தினரும் எவ்வாறு ஔரங்கசீபை மாமன்னராக ஏற்றிருத்தல் முடியும்? அவரது ஆட்சி அரை நூற்ருண்டுக்கு நீடித்திருந்திருக்காது. மாகாணங்களுக்கும் (சூபாக்கள்) முஹ்தசிப்கள் நியமிக்கப்பட்டனர். புதிதாக நியமிக்கப்பட்ட முஹ்தசிபுக்குக் கீழ்க்கண்ட அறிவுரை வழங்கப்படும்: 'மனிதாபிமான கோட்பாடுகளை மீறுவோருக்கு நல்ல அறிவுரைகளையும் எச்சரிக்கைகளையும் அறிவியுங்கள். அவர்களிடம் கடுமையாக நடந்து கொள்ளாதீர்கள். ஏனெனில், அவர்கள் உங்களுக்குத் தொந்தரவு அளிப்பார்கள். முதலில் அவர்களின் தலைவருக்குப் புத்திமதி கூறி அனுப்புங்கள்; அவர்கள் அதற்கும் செவி சாய்க்காவிட்டால், உடனே கவர்னருக்குத் தெரிவியுங்கள்.' (Manual 47 & 48. Dastur Amal—ஆட்சி நிர்வாகக் கையேடு.)

**தாரோகா :** நாட்டின் பொதுவான போக்குவரத்திற்கும், இராணுவ முஸ்தீபிற்கும் தாரோகா என்னும் இவ் வமைச்சரே பொறுப்பேற்ருர்.

## மாகாணம்

மாகாண நிர்வாகத்தில் சுபேதார், மாகாணத் திவான், ஃபவுஜ்தார், மாகாணக் கொத்வால் ஆகியோருக்குச் சிறப்பான பணிகளும் பொறுப்புகளும் இருந்தன. சுபேதார் மாகாண அளவில் அரசப் பிரதிநிதியாகப் பணியாற்றினுர். சுபேதாரும், திவானும் கலந்தாலோசித்தே முடிவு எடுப்பர். பேராசிரியர் ஜாதுநாத் சர்க்கார் கூறியதுபோல, ஒவ்வொரு மாகாணத்தின் கவர்னரும் அம் மாகாணத்தின் 'பாதுஷா'வாகத் தம்மைக் கருதிக்கொண்டு, நிர்வாகத்தை நடத்தி வந்தார். 3000த்திலிருந்து 5000 வரை உள்ள மன்சப்தார்களாக அவர்கள் இருந்தனர். மாகாணத்தின் கவர்னர் சுபேதார் என்றும் அழைக்கப்பட்டார். அவருக்குத் துணையாகச் சிப்பாஹ் சாலார் அல்லது

தளபதி உடனிருப்பார். ஆனால், சட்ட ரீதியாக நிர்வாகத்தைப் பொறுத்தவரையும், இராணுவத்தைப் பொறுத்தவரையும் சுபேதாருக்கே முடிவெடுக்கும் உரிமை இருந்தது. இவருக்கு ஃபவுஜ்தார் அல்லது மாகாணக் கமிஷனர் உட்பட்டவர் ஆவார். ஒவ்வொரு மாகாணத்திற்கும் 'திவான்' என்னும் அமைச்சரும், 'காஜி' என்னும் நீதிபதி-சட்டத்துறை அமைச்சரும் (மத்தியத் திவானாலும் சதர் சுதராலும் நியமிக்கப்பட்டவர்கள்) சுபேதாருக்குத் துணைபுரிந்தனர். மாகாண அரசாங்கத்திற்குத் தஸ்தாவேஜுகளைப் பாதுகாக்கும் பொறுப்பையும் பிரதமச் செயல் அலுவலகப் பொறுப்பையும் ஏற்க 'வக்காயெ நவீஸ்' (Waqah Navis or Chief Recorder) இருந்து வந்தார். இவரது மிக முக்கியப் பணி, பெனி பிரசாத் கூறியது போல, இராணுவ, சமூக, வியாபார, விவசாய, உயிரினங்கள், இரசாயனம்—எதுவாக இருப்பினும் — எல்லாவற்றையும்பற்றிய மாகாணத்தின் நிகழ்ச்சிகளை அவ்வப்பொழுது மத்திய அரசுக்குத் தெரிவிக்க வேண்டும்.[1]

**தல அரசாங்கம் :** மாவட்டத்தைச் 'சர்க்கார்' என்று வழங்கினர். சர்க்காரின் நிர்வாகி 'ஃபவுஜ்தார்' என அழைக்கப்பட்டார். ஔரங்கசீபின் ஆட்சியில் இவருக்கு நிறைந்த இராணுவப் பொறுப்புகளும், அதற்குச் சமமாகவே நிர்வாகப் பொறுப்புகளும் அளிக்கப்பட்டன. கலகக்காரர்களை அடக்கி அமைதியைக் காத்து, வரிகளை வசூலித்துச் சர்க்காரை நிர்வகிப்பதே இவரது முக்கியப் பொறுப்பாகும். இவர் இராணுவத் தளபதியின் கடமைகளையும், நிர்வாக இயந்திரத்தில் உயர் பொறுப்புகளையும் ஒருங்கிணைத்துச் செயலாற்றினார். அமைதியைக் காப்பது மட்டுமன்றி, வருவாய் வசூல் மட்டுமன்றி, நீதிமன்றங்களிலும் தலைமையேற்று நீதி நிர்வாகத்தையும் நடத்தி வந்தார். அக்பர் ஆட்சியில் இருந்தது போலச் சர்க்கார் 'பர்கானுக்க'ளாகப் பிரிக்கப்பட்டது. இதற்கு இராணுவப் பொறுப்புகளை ஏற்றுச் 'செளத்ரீ' அல்லது 'கொத்தவால்' என்னும் அலுவலர் நிர்வாகத்தை நடத்தி வந்தார். கொத்தவாலுக்கு இராணுவ-பொலீஸ் பொறுப்புகளும் இருந்தன. இவர் மாவட்டப் பொலீஸ் அதிகாரியுமாவார். இவர் மட்டுமன்றி ஒவ்வொரு பர்கானுவுக்கும் ஷிக்கேதார் (Shiquedar), ஆமில் (Amil), போத்தார் (Potdar), கானுங்கோ (Qanungo) ஆகிய அலுவலர்களும் இருந்தனர். ஒவ்வொரு மாவட்டத்திலும் தாலுக்காவிலும், ஔரங்கசீபின் ஆட்சியிலும், பல ஆண்டுகள்வரை ஓர்

[1] Lane-poole's—Aurangzeb.

இந்துக் கணக்கரும், ஒரு முஸ்லிம் கணக்கரும், இந்துப் போத்தாரும், முஸ்லிம் போத்தாரும் ஏக காலத்திலேயே நியமிக்கப் பட்டு வந்தனர்.[1]

**அரச அமைப்பில் பேரரசர் :** முகலாயர்களின் அரசு பொதுவாகவே 'மையங்கொண்ட வல்லாட்சி' என்று வர்ணிக்கப்படுகிறது. அவ்வாறுயின், எந்த ஓர் அரசையுமே, பிரிட்டிஷ் அரச அமைப்பு அளிக்கும் நிர்வாகத்தைத் தவிர்த்து, வல்லாட்சி என்றே கூறவேண்டும். ஔரங்கசீபின் ஆட்சியும், நிர்வாகமும், அதிகாரங்களும் மையங் கொண்டிருப்பினும், ஔரங்கசீபின் அரசை முழு வல்லாட்சியே என்று திட்டவட்டமாகக் கூறிவிட முடியாது. ஏனெனில், ஔரங்கசீபின் அரசும் நிர்வாகமும் இக்காலத்திய ஜனநாயக முறை போன்றே பொதுமக்களின் நலன்களையும், குறிப்பாக அன்றைய 17ஆம் நூற்றுண்டில், உழவர்களின் நலன்களையும் பேணி வளர்த்தன என்பதற்கு அத்தாட்சியாக ஔரங்கசீபின் நிலைவரிச் சட்டங்களும், ஃபர்மான்களும் (Farmans—ஆணைகள்) திகழ்கின்றன. வல்லாட்சியெனில், அதிகாரங்கள் மையங் கொண்டிருப்பது மட்டுமன்றி, அரசும் நிர்வாகமும் பொது மக்களைப்பற்றிக் கவலை கொண்டிரா. இஃது ஒரு புறமிருக்க, பொதுவாக ஔரங்கசீபின் அமைச்சர்களுக்கு அதிக அதிகாரங்கள் இருந்திருக்க முடியா எனச் சிலர் சாற்றுகின்றனர். ஏனெனில், இயற்கையிலேயே பேரரசர் ஔரங்கசீப் சந்தேகங் கொண்டவர்; எவரையும் எளிதில் நம்பாதவர்; எனவே, அமைச்சர்களுக்கு அதிகாரங்களைப் பகிர்ந்து கொடுத்திருக்க முடியாது எனக் கருதுகின்றனர். இது ஒரு விதத்தில் உண்மையேயாயினும், எவ்வரசிலும் சரியே, சில அதிகாரங்கள் குவிந்து இருப்பதும், மற்றும் பிற அதிகாரங்களை வாய்க்கால்கள் போன்று வழிந்தோட விட்டிருப்பதும் இயல்பே. அவ்வாறு பார்த்தால், மௌரிய அரசு, குப்தர் அரசு, சோழர் அரசு, பாண்டியர் அரசு ஆகிய அரசுகளில் எல்லாம் 'அமீத்யர்களுக்கும்' 'மண்டலாதிபதிகளுக்கும்' 'உடன்கூட்டத்தார்களுக்கும்' அதிக அதிகாரங்கள் இருந்திருக்குமா என்பதும் ஐயமே. ஆனல், ஔரங்கசீபின் ஆட்சியில் மன்சப்தாரி முறை—நிர்வாக - இராணுவ - நிலப்பிரபுத்துவமுறை—நாட்டின் முதுகெலும்பாக இருந்ததனல், ஔரங்கசீப் அரசின் அலுவலர் ஒவ்வொருவரும் இராணுவப் பயிற்சி பெறுதல் அவசியம் என வற்புறுத்தப்பட்டமையால், நிர்வாக இயந்திரம் செயலற்று விடாமல் இருக்கவும் வசதியாக இருந்தது; அதே நேரத்தில், மன்சப்

[1] Dr. S. M. Siddiqi—Ibid, p. 77

தார்களுக்கும் அதிகாரங்கள் பகிர்ந்து கொடுக்கப்பட வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. அன்றியும், உயர்மட்டத்தில் அமைச்சர்களுக்கும் குறிப்பிட்ட அதிகாரங்களும் பணிகளும் இருக்கத்தான் செய்தன என்பதை நாம் முன் பக்கங்களில் பார்த்து விட்டோம். சுருங்கச் சொன்னால், ஔரங்கசீபின் அரசு கொடுமையான வல்லாட்சியாகாது. மன்சப்தாரி முறையை ஆய்ந்து பார்ப்போருக்கு இக் கருத்துத் தெளிவுபடுவது உறுதி.

## இராணுவ - சிவில் கலப்பு நிர்வாகம் அல்லது மன்சப்தாரி முறை

பொதுவாக, அரசாங்க நிர்வாகம் இராணுவச் சேவையின் அடிப்படையில் அமைந்திருந்தது. அரசாங்கத்தின் நிர்வாகம் ஒரு கலப்பு நிர்வாகம் ஆகும். இதில் இராணுவ நிர்வாகம், நீதி நிர்வாகம், பொது நிர்வாகம் என்றெல்லாம் தனிப் பிரிவுகள் கிடையா.[1] இராணுவ-சிவில் முறையில் அமைந்த இந் நிர்வாகத்தை மன்சப்தாரி முறை என்பர். இதையே மத்திய கால இந்தியாவின் நிலப்பிரபுத்துவ முறை (Feudalism of Medieval India) என்றும் அறிஞர் (Romila Thapar) குறிப்பிடுவர். *1659-66* ஆண்டுகளில் பெர்னியர் கூற்றின்படி ஔரங்கசீப் பேரரசரைச் சுற்றி *40,000* பணியாள்கள் மன்சப்தார்களாக இருந்ததாகக் கூறப்படுகிறது. பேரரசர் இராணுவ நிர்வாகச் சேவைகளுக்குத் தனியே நிலங்களை 'இனமாக' அல்லது 'ஜாகிராக' வழங்குவது வழக்கம். இதிலிருந்துதான் ஜாகிர்தார் முறையே பிறந்தது. லேன்பூல் ஒப்புக்கொண்டதுபோல, இராணுவ-சிவில் நிர்வாக முறைகள் மாகாண அரசாங்க அமைப்பில் கலந்திருந்தன.[2] மாகாணக் கவர்னர்களும் (சுபேதார்கள்) மாவட்ட ஃபவுஜ்தார்களும் தாலுக்கா ஷிக்கேதார்களும் இராணுவ-நிர்வாகப் பொறுப்புகளைக் கலந்தே ஏற்று நடத்திவந்தனர். இஸ்லாமிய நாட்டுச் சட்டங்களுக்குத் தீர்ப்புகளையும் விளக்கங்களையும் அளித்து வந்த காஜிகளும்கூட, இம் மாதிரி 'மன்சப்தார்கள்' பதவியையே வகித்துவந்தனர். மேல்மட்டத்திலிருந்து அடித்தளம் வரையில் இருந்த எல்லா மன்சப்தார்களும் உழவர்களிடத்திருந்து தேவைப்பட்ட பொழுதெல்லாம் வரிகளை வசூலித்து வந்தனர். அரசருக்கு உரிய நிலங்கள் மீதுதான் (Khalisa or

[1] 'The Mansabdari organisation included all Government Services, without any official subdivisions into military, financial and executive branches' — Dr. M. Ather Ali, The Mughal Nobility under Aurangzeb.

[2] Lane-poole, Aurangzeb. Romila Thapar, History of India, Vol. I, Pelican edn.

Crown Lands) வரிவிலக்கு அளிக்கப்பட்டது. முகலாயர்களின் ஆட்சியில் அடிக்கடி உத்தியோக மாற்றங்கள் (Transfers) நிகழ்ந்து வந்ததால், சில சமயங்களில் துருக்கி நாட்டில் நடந்ததைப் போன்று, வசூலிக்கப்பட்ட வரிகளே மீண்டும் வசூலிக்கப்பட்டன. பல சமயங்களில் 'காஜிகள்' மாகாணக் கவர்னரின் கைப்பாவைகளாக அடங்கி நடந்தனர். ஆனால், பேரரசருக்கு நெருக்கமான மாகாணங்களில் மட்டுமே கொடுமைகள் நிகழாதவாறு நிர்வாகம் சரிவர நடந்துவந்ததென்று சொல்லவேண்டும்.

**மன்சப்தாரி அமீர்கள் (Amirs):** (1) நிர்வாகி ஒருவரின் ஊதியமும் மானியமும் அவர் தலைமை ஏற்கும் படைகளின் அடிப்படையில் நிர்ணயிக்கப்பட்டது. இது 10-லிருந்து 10,000 வரையில் பல படித்தரங்களைக் கொண்ட ஓர் அமைப்பாகும். உதாரணமாக, பெர்னியரை ஆதரித்த அமீர் தானிஷ்மந்த் கான் (Danishmand Khan) என்பவர் 5,000 ஜாத் என்னும் மன்சப்தாராக இருந்தார். ராஜா ஜெய் சிங் 5,000 அந்தஸ்து மன்சப்தாராகவும், ஜஸ்வந்த் சிங், பிரதமர் சஅதுல்லா கான் ஒவ்வொருவரும் 5,000 அந்தஸ்து மன்சப்தார்களாகவுமே நிர்ணயிக்கப்பட்டிருந்தனர்.

(2) ஒவ்வொரு மன்சப்தாரும் தத்தம் தரத்திற்கு ஏற்றவாறு நிர்ணயிக்கப்பட்ட குதிரைகளையும் குதிரை வீரர்களையும் தம் பொறுப்பில் ஏற்று, அவர்களைப் பராமரிக்க வேண்டும். ஒவ்வொரு குதிரைக்கும் 2 குறிகள் இடப்படும். ஒன்று அரசாங்க இலச்சினை. மற்றொன்று, அம் மன்சப்தாரின் குறிப்பிட்ட குறி.

(3) மன்சப்தாரின் சம்பளம் எல்லாவற்றையும் கருத்தில் கொண்டு அவருடைய பதவி (rank) நிர்ணயம் செய்யப்பட்டது. உதாரணமாக, 100 ஜாத் மன்சப்தார் சுமார் 150 ரூபாயிலிருந்து ரூ. 700 வரை மாதம் ஒன்றுக்குச் சம்பளம் பெற்று வந்தார் என்று பெர்னியரின் கூற்றில் இருந்து அறிகிறோம். ஒவ்வொரு குதிரைக்காகவும் ரூ. 25 மாதம் ஒன்றுக்கு அரசாங்க கஜானாவிலிருந்து தனியாகக் கொடுக்கப் பட்டது. ஆனால், 500 அல்லது 1000க்கும் குறைந்தவர்களே 'மன்சப்தார்கள்' என்று அழைக்கப்பட்டனர். 1000க்கு மேற்பட்டவர்கள் 'அமீர்' என்றும், 'உம்ரா' என்றும், 3000-க்கு மேற்பட்டவர்கள் 'அமீரெ அக்பர்' (Amir-i Akbar) என்றும், 'அமீரெ ஆஜம்' (Amir-i Azam) என்றும் அழைக்கப்பட்டனர். சாதாரணமாக, 7000-க்கும் மேலான 'அமீர்ப் பதவி' அரச குடும்பத்தினருக்கு மட்டுமே அளிக்கப்பட்டு வந்தது.

| | | | | |
|---|---|---|---|---|
| 10-லிருந்து | 100வரை | மன்சப்தார் | '10' | என்றும், |
| 100 ,, | 500 ,, | ,, | '50' | என்றும், |
| 500 ,, | 1000 ,, | ,, | '100' | என்றும், |
| 1000 ,, | 3000 ,, | அமீர் | '1000' | என்றும், |
| 3000 ,, | 5000 ,, | ,, | 'பாஞ்ச் ஹஜாரி' | என்றும், |
| 5000 ,, | 10,000 ,, | அமீர் அக்பரீ 'தஸ் ஹஜார்' அல்லது 'அமீர் ஆஜம்' என்றும் அழைக்கப்பட்டனர். | | |

(4) மன்சப்தார்கள் பொதுவாக மூன்று தரத்தினராகப் பிரிக்கப்பட்டனர். அவர்கள் ஒவ்வொருவரும் பராமரிக்கவேண்டிய துருப்புகள் 'ஜாதிக் குதிரைகள்', 'சவாரிக் குதிரைகள்' ஆகியவற்றின் அடிப்படையில் தரம் கணிக்கப்பட்ட பின்பு, அந்த அந்தத் தரத்திற்கேற்ற வகையில் மன்சப்தார்களின் மாதச் சம்பளம் நிர்ணயிக்கப்பட்டது.

(5) இங்கே உற்று நோக்க வேண்டியது என்னவெனில், ஔரங்கசீபின் ஆட்சி வரையிலும், அதன் பின்னரும்கூட, தற்காலத்தில் உள்ளது போன்று இராணுவ அமைப்பு சிவில் நிர்வாகத்திற்கு உட்பட்டிருக்கவில்லை. மேலும், இராணுவ அமைப்பு என்றும், சிவில் நிர்வாகம் என்றும் தனித்தனியே பாகுபாடு செய்யப்படவில்லை.

(6) 'உம்ராக்கள்', 'மன்சப்தார்கள்' பதவியும் சம்பளமும், பதவி உயர்வும் ஔரங்கசீபைப் பொறுத்த வரையில், மன்சப்தாரின் திறமை, ஆற்றல் ஆகியவற்றின் அடிப்படைகளிலேயே அளித்துவரப்பட்டன. பெர்னியர், மனுச்சி, மென்டெல்சோ (Mendelso) ஆகியோரின் குறிப்புகள் அளித்துள்ள மன்சப்தார்களின் மாதச் சம்பளம் பின்வருமாறு:

| | பதவி | முதல் தரம் | இரண்டாம் தரம் | மூன்றும் தரம் | படைகளின் செலவு |
|---|---|---|---|---|---|
| | | ரூ. | ரூ. | ரூ. | ரூ. |
| 1. | 5,000 | 30,000 | 29,000 | 28,000 | 10,600 |
| 2. | 3,000 | 17,000 | 16,800 | 16,700 | 6,700 |
| 3. | 1,000 | 8,200 | 8,100 | 8,000 | 3,000 |
| 4. | 500 | 2,500 | 2,300 | 2,100 | 1,170 |
| 5. | 50 | 250 | 240 | 230 | 185 |
| 6. | 10 | 100 | 82½ | 75 | 44 |

(7) இம் முறையின்படி அரசாங்கத்தால் அளிக்கப்பட்ட சொத்துகள் அந்தக் குறிப்பிட்ட மன்சப்தார் அல்லது அமீர் இறந்த பிறகு மீண்டும் அரசாங்கத்துக்கே மீட்கப்பட வேண்டும்—(Law of Escheats). மன்சப்தார்கள் யாராக இருப்பினும் அவர் தம் சந்ததிகளுக்குச் சொத்துகளை விட்டுச்செல்ல அனுமதி யளிக்கப்படுவதில்லை. ஜஸ்வந்த் சிங்கிற்குப் பிறகு ஔரங்கசீப் போருக்குச் செல்ல முக்கியமான காரணம் அதுவே என்பதை நாம் முன்பே பார்த்து விட்டோம்.

**நிலப்பிரபுத்துவ முறை:** இதனை ஐரோப்பிய நிலப்பிரபுத்துவ முறையுடன் (Feudalism) ஒப்பிட்டுப் பார்க்கும்போது, இம் முறையில் சில சிறப்பு அம்சங்களும் குறைகளும் காணப்படுகின்றன. (1) நிலப்பிரபுத்துவ முறையில் அனைவரும் உயர் பிரபுக்களுக்குக் கட்டுப்பட்டிருக்க நேரிட்டது. (2) போர்க் காலங்களில் வலிமை உடைய பிரபுக்கள் ஒன்றுகூடி மன்னரைக் கவிழ்க்க முடியும். (3) நிலப்பிரபுக்கள் நிரந்தரமாக இருப்பதால் தங்கள் கரங்களைத் தேவைப்படும்பொழுது பலப்படுத்த முடியும். ஆனால், மன்சப்தாரி முறையில் (1) பேரரசரிடம் வலிமை காணப்பட்டபோது அமீர்கள் கூட்டாகப் புரட்சி செய்வது இயலாது போயிற்று. (2) பேரரசருக்கு நேரிடையாகக் கட்டுப்பட்டிருந்தமையால், நாட்டில் குழப்பத்தையும் நிர்வாகச் சீரழிவையும் பிரபுக்கள் எளிதில் செய்ய இயலாவிட்டாலும், அவற்றைச் செய்யச் சக்தி பெற்றிருந்தனர்; எதிர்நோக்கி இருந்தனர். (3) மன்சப்தாரிப் பிரபுக்கள் போர்க்காலங்களிலும், வாரிசுரிமைப் போர்களின் போதும் தங்கள் பதவி உயர்வுகளையும், செல்வத்தையும், செல்வாக்கையும் ஒருங்கே திரட்ட முடிந்தது. (4) இம் முறை நிலப்பிரபுத்துவ முறை போன்று நிரந்தரமானது அன்று; ஏனெனில், ஐரோப்பாவில் இருந்தது போல் மன்சப்தார்கள் நிலங்களுடன் பிணைக்கப்பட்டு இருந்ததில்லை. (5) மன்சப்தார்கள் தங்களுக்குள்ள குறைநிறைகளைப் பேரரசரிடம் நேரில் முறையிட்டு நீதி வழங்கப் பெறலாம்.

**அமீர்களும் மன்சப்தார்களும்:** முன்னர்க் குறிப்பிட்டது போல, ஔரங்கசீபின் பிரபுக்கள் சபையும் இதே மன்சப்தார்களின் அடிப்படையில்தான் அமைந்திருந்தது. அக்பர் ஆட்சியின் அடித்தளத்தில் இருந்த மன்சப்தார் 10 வீரர்களின் தளபதி எனில், ஔரங்கசீபின் ஆட்சியில் இதுவே இரட்டிப்பாகியது—(20 வீரர்கள்). மேலும், ஔரங்கசீபின் அரசில் 3,000 தகுதியுள்ள மன்சப்தார்கள் 'அமீரெ ஆஜம்' (Amir-i Azam) என்று மதிக்கப்பட்டனர் எனப் பேராசிரியர் சர்க்கார் கூறுகிறார்.

மேலும், லேன்பூல் கூறியது போன்று, 'இம் மாதிரி நிலங்களை வழங்குவதன் மூலம் பேரரசர் பிரபுக்களையும் இராணுவத்தையும் தம் கரங்களிலேயே வைத்துக்கொண்டார். நிலம் வழங்கப்படுதலும், ஊதியம் அளிக்கப்படுவதும் இராணுவச் சேவைக்கு ஈடாகவே ஆகும். சிவில் நிர்வாகம் இதே கோட்பாட்டின் அடிப்படையிலேயே நடைபெற்றது. உண்மையில், சிவில்-இராணுவ அம்சங்கள் மாகாண நிர்வாகத்தில் ஒன்ருகக் கலந்திருந்தன. மன்சப்-ஜாகிர் முறைகள் பேரரசு முழுதும் பரவி நின்றது.'[1] சர்க்காரின் கணக்கெடுப்புப்படி 3,000-க்கும் மேல் உள்ள மன்சப்தார்கள் 'அமீரெ ஆஜம்' என்றும், அதன் கீழ் வரிசையில் உள்ளவர்கள் மன்சப்தார்கள் என்றும் அழைக்கப்பட்டனர். அமீரெ ஆஜம், மன்சப்தார்களின் எண்ணிக்கை பின்வருமாறு:—

**3000 என்னும் அந்தஸ்துக்கு மேற்பட்ட அமீர்களும் அரச குடும்பத்தினரும்**

| | காலம் | | எண்ணிக்கை |
|---|---|---|---|
| 1. | 1596 | (அக்பர் இறப்புக்கு 9 ஆண்டுகள் முன்) | 65 |
| 2. | 1620 | ஜஹாங்கீர் ஆட்சி | 112 |
| 3. | 1647 | ஷாஜஹான் ஆட்சி | 99 |
| 4. | 1690 | ஔரங்கசீப் ஆட்சி | 539[2] |

**3000-க்குக் குறைவான அந்தஸ்துள்ள மன்சப்தார்கள்**

| | | | |
|---|---|---|---|
| 1. | 1596 | (அக்பர்) | 1,803 |
| 2. | 1620 | (ஜஹாங்கீர்) | 2,945 |
| 3. | 1647 | (ஷாஜஹான்) | 8,000 |
| 4. | 1690 | ஔரங்கசீப் ஆட்சி | 14,449 |

ஆனால், பெர்னியரின் ஆதாரத்தை ஆராய்ந்த அறிஞர் லேன்பூல் ஔரங்கசீப் அரியணை ஏறியபோதும் அதற்குச் சற்றுப் பின்பும் (1659-66) மொத்தத்தில் அரசாங்க அலுவலர்கள், இராணுவ வீரர்கள் ஆகியோரையும் சேர்த்து 2,00,000 பேர் இருந்ததாகக் குறிப்பிடுகிருர். அரச அவையிலும் அரச நிர்வாகத்திலும் மொத்தம் 40,000 பேர்கள், அவையில் மட்டுமே பேரரசரைச் சுற்றி 15,000 மன்சப்தார்கள்—அமீர்கள் இருந்த

[1] Lane-poole—Aurangzeb, p. 112.

[2] Dr. C. K. Kareem—What happened in . Indian History? p. 134 (Pai & Co. Edn.)

தாகவும் கூறுகிருர்.[1] ஔரங்கசீப் ஆட்சியில் அமர்ந்ததிலிருந்து 20 ஆண்டுகள் வரையிலும் (1658-1678) 486 அமீர்கள் இருந்தனர் என்றும், அவர்களுள் 105 பேர்கள் இந்துக்கள் என்றும், 1679ஆம் ஆண்டிற்குப் பிறகு இருந்த மொத்தம் 575 பேர்களுள் 182 இந்துக்கள் அமீர்களாகப் பணியாற்றினர் என்றும் டாக்டர் அத்தர் அலீ கருதுகின்ருர்.[2]

## மன்சப்தார்களின் வருவாய்

மன்சப்தார்களின் வருவாயைப்பற்றிய குறிப்பு ஒன்று இங்கு அவசியமாகிறது. 7,000 வீரர்களைக் கொண்ட மன்சப்தார்கள் 'சாத் ஹஜாரி' என்றும், 5,000 வீரர்களைக் கொண்ட மன்சப்தார்கள் 'பாஞ்ச் ஹஜாரி' என்றும் அழைக்கப்பட்டு வந்தனர். அவர்களின் ஆண்டு வருமானத்தைப்பற்றி அறிஞர் ஜாதுநாத் சர்க்கார் வேறுவிதமாகக் கருதுகிருர்:

| ஹஜாரி (அ) 'ஆயிரம்' | வருமானம் |
|---|---|
| சாத் ஹஜாரி (7000) | 3½ லட்சம் ரூபாய் |
| பாஞ்ச் ஹஜாரி (5000) | 2½ லட்சம் ரூபாய் |
| ஹஜாரி (1000) | 50,000 ரூபாய் |
| அடிப்படை-வீரர்கள் 20 | 1000 ரூபாய் |
| வீரர்கள் 10 | 500 ரூபாய் |

மன்சப்தார்களின் அடிப்படைச் சம்பளம் நிர்ணயிக்கப்படும் பொழுது இரண்டு கோட்பாடுகள் பின்பற்றப்பட்டன: (1) வீரர்களின் எண்ணிக்கை, பதவி, தரம் ஆகியவை. (2) வீரருக்கும், மன்சப்தாருக்கும் அளிக்கப்படும் மானிய நிலத்தின் தரம். ஆகவே, மன்சப்தார்கள் தம் வருவாயின் பாதியை ரொக்கப் பணமாகவும், மீதிப்பாதியை நிலமாகவும் பெற்று வந்தனர். மன்சப்தார்கள் தங்கள் குதிரைப் படைகளைப் பராமரிக்க வேண்டிய பொறுப்பும் அவர்களின் சம்பளத்தை நிர்ணயிக்க உதவியது. குதிரைப் படையிலும் இரு வகைப் பிரிவுகள் இருந்தன. அவை ஜாத் (Zat) என்றும், சவார் (Sawar) என்றும் வழங்கப்பட்டன. குறிப்பிட்ட மன்சப்தாருக்குக் குறிப்பிட்ட வகைக் குதிரைப் படை அளிக்கப்படவே அடிப்படைச் சம்பள விகிதத்தில் இதுவும் கணக்கிடப்பட்டது. வருட வருமானம், நிலத்தின் தரம்,

[1] Lane-poole—Ibid, Bernier's The Travels quoted.
[2] Dr. M. Athar Ali — The Mughal Nobility under Aurangzeb pp. 31, 35 and appendix

குதிரைகளின் எண்ணிக்கை, அவற்றின் தரம் ஆகியவற்றின் அடிப்படைகளில் கணக்கிடப்பட்டதால், ஆண்டு வருமானம் 12 மாதங்களுக்கு என்றும், 8 மாதங்களுக்கு என்றும், 6 மாதங் களுக்கு என்றும் வழங்கப்பட்டன. சராசரியாக 100 வீரர்கள் கொண்ட மன்சப்தார்ப் பதவியில் இருந்தவர் ரூ. 30,000 க்குக் குறையாமல் சம்பளம் பெற்று வந்தார்.

## குப்தர்கள் கால முறை

எம் முறையிலும் குறைகளும், நிறைகளும் இருக்கத்தான் செய்கின்றன. உதாரணத்திற்குக் குப்தர் கால நிலப்பிரபுத்துவ முறையை ஈண்டுப் பார்ப்போம். இந்தியாவில் கி.பி. 800-லிருந்து கி.பி. 1200 வரையிலும் நிலவிய முறையும் ஏறத்தாழ மன்சப்தாரி முறையில் காணப்பட்ட குறைகளையே ஒத் திருந்தன. அக் காலத்திலும் நிலப் பிரபுத்துவ முறையே நில வியது. பேரரசருக்கு உட்பட்ட குறுநில மன்னர் தம் மகளைப் பேரரசருக்கோ இளவரசருக்கோ திருமணம் செய்து கொடுக்க வேண்டும்; பேரரசர் நாடிய நேரத்தில் படை உதவி செய்ய வேண்டும். மன்சப்தாரி முறையும் ஒருவித நிலப் பிரபுத்துவ முறையே. இம் முறையின் மூலவேர் குப்தர்கள் ஆட்சியிலும் காணக்கிடக்கின்றது என்று பேராசிரியை ரொமிலா தாப்பர் கருதுகிறூர். குப்தப் பேரரசர் தம் கல்வெட்டுச் சாசனம் ஒன்றில் 'சுரேஷ்மி சந்திரா' என்பவரை 'நிலப்பிரபு'வாகவும் அவர் மாதிரி விஷ்ணுவைத் தமக்குக் கீழ்ப்பட்டவராகக் குறிப் பிடுவதாகவும் ரொமிலா தாப்பர் குறிப்பிடுகிறூர். பட்டங்கள் நிலப் பிரபுவின் தரத்திற்கு ஏற்றவாறு அமைந்திருந்தன. முக் கியமானவர்கள் 'மஹா சமந்தா' 'மஹாமண்டலேசுவரா' என் றெல்லாம் பட்டம் சூட்டிக்கொண்டார்கள். அவர்களின் கீழுள்ள வர்கள் 'சுமந்தா'(Samanta), 'ராஜா'(Raja), 'ராஜுகா'(Rajuka), தாகூரா' (Thakura), 'போக்தா' (Bokhta) என்று எல்லாம் பட்டம் வைத்து அழைத்துக் கொண்டார்கள். இவை யெல்லாம் குப்தர்கள் காலத்திலிருந்தே உள்ளன என்று கருதுகிறூர் ரொமிலா தாப்பர். மேற்குறிப்பிட்ட நிலப்பிரபுத்துவ முறையில் நிலத்தின் வருவாய் மட்டுமே மன்னரால் மானியமாக வழங்கப் பட்டதே அன்றி, நிலமன்று. ஆனல், அதே நேரத்தில் அரச ருக்கு உரிய வருவாய்த் தொகையைக் கட்டத் தவறினுல் மானிய மான, வருமானத்திற்கான நிலமும் பறிமுதல் செய்யப்பட்டது. இக் கருத்தையும் ரொமிலா தாப்பர் வலியுறுத்துகிறூர். அது மட்டு மன்றி, நிலமானியச் சொத்தும் மன்சப்தாரி முறையில் உள்ள தைப் போன்றே, 'மானியக்காரர்' இறந்த பின், மீண்டும்

அரசுக்கே சேர்ந்து விடும். பிறகு, அதுவே அவர் சந்ததிக்குத் திருப்பி அளிக்கவும் படலாம். எனவே, இந்த நிலப்பிரபுத்துவ முறையும் மன்சப்தாரி முறையையும், நிலப் பறிமுதல் சட்டத்தையும் நிகர்த்துள்ளது.

மன்சப்தாரி முறையில் நிறைகுறைகள் இல்லாமலும் இல்லை.

**நிறைகள் :** (1) போர்க்காலங்களில் பேரரசின் பாதுகாப்பு வெகு எளிதாக முடிந்தது. (2) 15ஆம் நூற்றுண்டிற்கு முற்பட்ட இராணுவ முறையைக் காட்டிலும், அரச அவையில் இருப்பவர்களும் அரச ஊழியர்களும் சமமாகவே போர்ப் பயிற்சி பெற வேண்டி இருந்ததால், இராணுவத்தின் அமைப்பும் போர் முறைகளும் வெகு எளிதாயின. (3) பலரும் போர்ப் பயிற்சியும் நிர்வாகப் பயிற்சியும் ஏக காலத்தில் பெற்றிருந்ததால், நிர்வாகத்திலிருந்து இராணுவத்திற்கும், இராணுவத்திலிருந்து நிர்வாகத்திற்கும் அடிக்கடி மாற்றப்பட்டனர். இது எளிது மட்டுமன்றி, மிகவும் உபயோகமாகவும் இருந்தது. (4) ஏக காலப் பயிற்சியினுல் அரசின் முதுகெலும்பாக அது அமைந்தது. நிர்வாக இயந்திரமும் முறிந்து போகாமல் இருக்க உதவியது.

இம் முறையே தீமைகளை வளர்த்ததாகவும் இதனுல் நாகரிக வளர்ச்சியே குன்றிப் போனதாகவும் குற்றஞ்சாட்டப்படுகின்றது. சொத்து நிரந்தரமாக நிலைத்திருக்க முடியாததால், அதிகமாகவும் வீணுகவும் செலவழிக்கும் மனப்பான்மை வளர்ந்தது. இதனுல் விடுமுதல் (Capital) சேகரிப்பதற்கு வாய்ப்பு இல்லாமல் போயிற்று. மேலும், அரசியலிலும் வல்லாட்சிக்கு ஓர் அரணுகவும், தடுப்புச் சுவராகவும் விளங்கவேண்டிய மன்சப்தாரி முறை அதன் முக்கியப் பணியிலிருந்து தவறியது. பேரரசரின் பலமே இந்த மன்சப்தாரி முறையில்தான் அடங்கி இருந்தது. மன்சப்தார்கள் தங்கள் வலிமையையும், சக்தி செல்வாக்கையும் நன்ருக உணர்ந்து, வெற்றி வாய்ப்பு இருக்கும் பக்கத்தில் சாய்ந்தார்கள்.

**குறைகள் :** (1) மன்சப்தார்கள் அடிக்கடி பொய்க் கணக்குகளை ஜோடித்து வந்தனர். அவர்கள் பெறும் சம்பளத்திற்கும், பராமரிக்கும் படைகளுக்கும் பாரதூரமான வேற்றுமைகள் நிலவின. இதனுல், போர்களால் இறுதியாகப் பேரரசே பாதிக்கப்பட்டது. (2) அமைப்பே குறையுடையது என்பதை ஏற்கத்தான் வேண்டும். லஞ்சம் பெறுவதற்கு நிறைய வாய்ப்புகள் இருந்தன. (3) இராணுவ ரீதியிலும், அரசாங்கத்திற்கு உண்டாகும் பலன்களின் கண்ணேட்டத்திலும் பார்க்கும்போது,

இம் முறையினால் பெருத்த செலவும் நட்டமுமே விளைந்தன. (4) மன்சப்தாரி முறை ஒரு நிர்வாக இயந்திரம் மட்டுமன்றி, நாட்டின் முதுகெலும்பாக இருந்த இராணுவமும் ஆகும். ஆனால், ஔரங்கசீபின் இராணுவத்தில் முஸ்லிம்கள் மட்டுமன்றி, பல இந்துக்களும், குறிப்பாக இராஜபுத்திரர்களும், தூரானியர்களும், பாரசீகர்களும், ஆப்கானியர்களும், தக்காணியர்களும் நிறைந்திருந்தனர். ஜெய் சிங், ஜஸ்வந்த் சிங், ராம் சிங், மால்தோர் ஹதா போன்ற எண்ணற்ற இராஜபுத்திரர்களும்கூட அமீர்களாகவும் மன்சப்தார்களாகவும் பணியாற்றினர். எனவே, ஔரங்கசீபின் இராணுவம் ஒரு கூட்டு இராணுவமே. இதனால் பேரரசருக்குப் பலர் நேரிடையாக விசுவாசம் தெரிவிப்பதுமில்லை; எதிரிப்படைகளிடம் கையூட்டம் பெற்றுக்கொண்டு பேரரசருக்கு எதிராகச் செயல்படுவதும் உண்டு. (5) கூட்டு இராணுவமாகையால், பதவி உயர்வு நம்பிக்கை மற்றும் வேறுபல காரணங்களினாலும் உட்பூசல்களும் போட்டிகளும் அடிக்கடி ஏற்பட்டுவந்தன. இதனாலும் போர்க்களங்களில் வெற்றி வாய்ப்புகளை அவர்கள் இழந்து விடுவர். உண்மையில், முகலாயப் பேரரசு வீழ்வதற்கு முக்கிய காரணம் பேரரசர் ஔரங்கசீபின் மதக்கொள்கை அன்று; மாறாக, மன்சப்தாரி முறையின் சீர்கேடுகளே மிக முக்கியமான காரணமாகும்.[1] சர்க்கார் ஒப்புக் கொண்டது போல, முகலாயப் பேரரசு வீழ்ச்சியுறச் சொல்லப்பட்ட காரணங்களுள், மன்சப்தார்களின் ஒழுங்கீனமும் மிக முக்கியமான காரணம் ஆகும். பிற அரசுகளில் காணாக் குறைகள் இம் முறையில் இருந்தமையால், அதன் காரணங்களை ஆராய்வது மிகவும் பொருத்தமுடையதாகும்.

## ஔரங்கசீப் ஆட்சியில் கிராம, ஜாகிர்தார் முறை

'அக்பர் நாமா'வுக்கு அடுத்தபடியாக **'மிர் அத்தெ அஹ்மதீ'** (Mirat-i Ahmadi) என்னும் நூல் முக்கியத்துவம் பெறுகிறது. இது முகலாயர்கள் பின்பற்றிய நிர்வாக ஒழுங்குமுறையின் பின்காணும் விவரத்தை யறியத் துணைபுரிகிறது.

கிராமம் 'நௌஜா' (Nauza) என்றழைக்கப்பட்டது. பல கிராமங்களின் கூட்டமைப்புப் 'பர்கானாக்கள்' (Parganas) என்று பெயரிடப்பட்டது. நௌஜா என்னும் கிராமத்தை

[1] 'Among the causes of the downfall of the Mughal Empire the inefficiency of the Mansabdars was the most important one'—S. J. Owen in 'Fall of the Mughal Empire.' W. Irwine, Army of the Mughals. J. N. Sarkar, Mughal Administration.

'ரயத்தீ தாலூக்கா' என்றும் அவர்கள் அழைத்தனர். சாதாரணமாக, கிராமத்தில் குடியானவர்களுக்கு நிலங்களை விற்கவோ, அவற்றின் அமைப்பை மாற்றவோ உரிமை கிடையாது. ஆனால், கிராமத்தில் ஜமீன்தாரே வரி வசூலித்து வந்தபடியால், அரசாங்க அதிகாரிகளுக்கு உழவர்களுடன் நேரடித் தொடர்பு ஏற்பட வழியில்லாமற் போயிற்று. அதனால்தான் ஔரங்கசீப் பிறப்பித்த ஆணை நேரடித் தொடர்புக்கு வழி யுண்டுபண்ணி வைத்தது. குடியானவர்கள் மூன்று வகையினராவர் : (1) பட்டா ரயத்துகள் (பட்டா உரிமையுடைய குடியானவர்கள்), (2) ஃபஸ்லீ ரயத்துகள் (குத்தகை எடுக்கும் குடியானவர்கள்), (3) பேஷ்கஷ் ரயத்துகள் (நிலமானியம் பெற்று அனுபவிக்கும் குடியானவர்கள்).

'தாலூக்காதார்' என்பவர்களும் ஜமீன்தார்களே. ஜமீன்தாரி நிலங்களே 'தாலூக்கா'க்களாகப் பிரிக்கப்பட்டன. நிர்வாக அவசரத்தை முன்னிட்டு அரசாங்கம் தாலூக்காக்களை வகுத்து விட்டது. சில சமயங்களில் ஜமீன்தாரி நிலங்களையும் தாலூக்காதார்கள் நிர்வகித்து வந்தனர். பல கிராமங்களின் நிலத்தீர்வையை வசூலித்துக் கருவூலத்தில் சேர்த்தவர் 'தாலூக்காதார்' (Taluquedar)[1] என்றும், நிலத் தீர்வையை வசூலித்தவர் 'தஹ்சீல்தார்'—தாசில்தார் (Tahsildar) என்றும் அழைக்கப்பட்டனர்.

நிலத் தீர்வையை 'ஜமாஅ' (Jama) என்று வழங்கினர். அதை வசூலித்து அரசுக்குக் கொடுத்த ஜமீன்தார்கள் சில சமயங்களில் 33% வரித் தொகையைத் தம்மிடமே இருப்பாட்டிக் கொண்டனர். அக்பர் காலந்தொட்டு வரிவிதிப்பு முறை மஷ்க் (Mashq), ஜப்தி (Zabt), கன்கூத் (Kankut), பஹோலி (Bhaoli) என்னும் நான்கு வகையாக விளங்கி வந்தது. ஔரங்கசீப் ஆட்சிக்குப் பின்னருங்கூட இந் நான்கும் தொடர்ந்து அமலிலிருந்தன. ஜவாஹர் மல் பேக்காஸ் (Jawahar Mal Bekas) வரைந்துள்ள 'தஸ்தூருல் அமல்' என்னும் நிர்வாகக் கையேட்டு நூலில், வயல்களில் பயிர்கள் வளரும் போதே சவுத்ரீ (Chaudri), கானுங்கோ (Qanungo) என்னும் அரசாங்க அலுவலர்களின் துணை கொண்டு நிலத்

[1] "Thus the Taluqa, it appears, signified an administrative circle created by the Government Officials, a newly purchased Zamindari and a tenure which entitled its holders to engage on behalf of other Zamindars' — N. Ahamad Siddiqi - 'Land Revenue Administration under the Mughals', p. 26 - A. M. U. & Asia Publishing House, 1970 edn.

தீர்வை வசூலிக்கப்பட்டது என்கிருர். சாகுபடியல்லாத காலத்திலும் ஆண்டு முழுதும் இது வசூலிக்கப்பட்டது. ஆனல், ஔரங்கசீபின் காலத்தில் இது ஆண்டுத் தீர்வையாகவே இலங்கிற்று; மேலும் ரொக்கமாகவும் கருவூலத்தில் செலுத்தப்பட்டது.[1]

ஜாகிர்தாரி முறையும் வழக்கிலிருந்தது. 'மததெ மாஷ்' (Madad-i Mash) என்னும் அன்பளிப்பு நிலங்களுமிருந்தன. ஜாகிர்தாரி முறையில் இதுவும் ஒன்ரும். தெற்கே தஞ்சாவூர் வரையிலுங்கூட ஔரங்கசீப் ஆட்சிக் காலத்தில் இம் மாதிரியான நிலங்கள் வழங்கப்பட்டன. இதில் சில நன்மைகளும் இருந்தன. எனினும், நிர்வாகச் சிக்கல்களும் முறைகளும்தாம் பேரரசைச் சீர்குலேயச் செய்தன. டாக்டர் அஹ்மத் சித்தீக்கி இக் கருத்தை வலியுறுத்துகிருர்.[2]

## நிலத்தின் வகைகளும் வரிவசூலும்

மொத்தத்தில் நிலங்கள் மூன்று வகையாகப் பிரிக்கப்பட்டிருந்தனவென்று கூறப்படுகிறது: (1) காலிசா நிலம் (Khalisa Lands). (2) ஜாகிர் நிலம்—ஜாகிர்தார்களுக்கும் மன்சப்தார்களுக்கும் அளிக்கப்பட்ட நிலம். பிரபுக்களும் மன்சப்தார்களும் சில சமயங்களில் தங்களுக்கு அளிக்கப்பட்ட நிலங்களிலிருந்து வரிகளே மொத்தமாக வசூலித்து, அவற்றில் கணிசமான பகுதியை அரசாங்கத்திற்குச் செலுத்திவிட்டு, எஞ்சிய பகுதியைத் தாமே வைத்துக்கொள்வர். இம் முறையின் அடிப்படையில்தான், ஜாகிர்தார், இனும்தார், மிராசுதார், மிட்டாதார் ஆகிய இனும் நிலக்காரர்கள் எழலாயினர். (3) சாயர்கள் நிலம் (Sayarghal Lands)—இவை காலா காலங்களில் அரசாங்கத்தால் குத்தகைக்கு விடப்பட்ட நிலங்கள். இம் மூன்று வித நிலங்களிலிருந்தும் நிலவருவாய் ஔரங்கசீபின் ஆட்சியில் கணிசமாகவே யிருந்தது.

தோடர் மாலின் காபூலியத் (Qabuliyat)—பட்டா முறையில் ஷாஜஹானே, ஔரங்கசீபோ எவ்வித மாற்றமும் செய்ததாகத் தோன்றவில்லே. ஏனெனில், அதே 'இலாஹி கஜ்' (Ilahi Gaz) முகலாய அளவு கோலால் (33 அங்குலங்களேக் கொண்ட மூங்கில் - இரும்புச் சங்கிலி) நிலங்களேப் 'போலஜ்' (Polaj), 'பரௌதி' (Parauti) 'கச்சர்' (Khachar) 'பஞ்சர்' (Banjar) என்று பிரித்தல், கணக்கர்களுக்குக் 'கரோரி' (Karoris) என்று

[1] Ibid, p. 55

[2] Ibid, p. 135.

பட்டம் வழங்குதல், கிராம மணியக்காரர்களை 'முகத்தம்' (Muqaddam) என்றழைத்தல், கிராம நிலங்களின் கணக்கு களைக் கானுங்கோ (Qanungo) என்பவர் வைத்துக் கொள்ளுதல் ஆகிய முறைகளில் ஔரங்கசீப் எவ்வித மாற்றமும் செய்ததாகத் தெரியவில்லை. ஆனால், பேரரசர் ஔரங்கசீப் தாமே தக்காணத்தின் அரசப் பிரதிநிதியாக இருந்தபோது அமல் படுத்திய 'வருவாய்ச் சட்டங்களை' (Land revenue laws) மீண்டும் நடைமுறைக்குக் கொணர்ந்தார். இதனைப் பேராசிரியர் சர்க்கார் தம் நூலில் எடுத்துக் காட்டியுள்ளார். பேரரசர் ஔரங்கசீப் 1669-ல் விடுத்த சட்டங்களுள் மாதிரிக்குச் சில பின்வருவனவாம்:

**(அ) ஔரங்கசீபின் நிலச் சீர்திருத்தச் சட்டம்:** 'இந்துஸ்தானப்' பேரரசின் ஒரு மூலையிலிருந்து மற்றொரு மூலையிலிருக்கும் தற்பொழுதைய 'ஆமில்'களும் (Amils) வருங்கால ஆமில்களும் நிலவரியையும் பிற வரிகளையும் மஹல்களிலிருந்து (Mahals), சட்டம் (Shariat or the Law of Faith) எவ்வாறு குறிப்பிட்டுள்ளதோ, அந்த அளவிலும் முறையிலும் வசூலிக்க வேண்டும். இவ் வரிகள் 'ஹதீதுகளின்'[1] (Hadith or Traditions) அடிப்படையில் விதிக்கப்பட்டுள்ளன.

அவர்கள் ஒவ்வோர் ஆண்டும் புதிய ஆணைகளை எதிர் பார்க்கக் கூடாது; ஆனால், தாமதப் படுத்தலையும் சட்டங்களை மீறுதலையும் இவ் வுலகிலும் மறுவுலகிலும் இகழ்ச்சிக்குரிய காரணமாகக் கருதவேண்டும்.

1. முதலாவதாக, அவர்கள் உழவர்களிடம் அன்பைக் காட்டவேண்டும்; அவர்களின் நிலையை விசாரிக்க வேண்டும்; நீதியாகவும், நிதானமாகவும் அவர்களை அணுக வேண்டும்; ஏனெனில், அவர்கள் (உழவர்கள்) விவசாயப் பெருக்கத்தை அதிகரிப்பார்கள்; மேலும், காடான ஒவ்வொரு நிலத்தையும் உழுவார்கள்.

மேற்கூறிய முதல் ஷரத்தைப்பற்றிப் பேரரசரின் விருப்பம் என்னவெனில், வரி வசூலிப்பவர்கள் நட்பையும் சரியான ஒழுங்குமுறையையும் கடைப்பிடிப்பதில்தான் விவசாயப் பெருக்கம் அடங்கியுள்ளது. அவ்விரு குணங்களும் எதில் அடங்கியுள்ளன எனில், அவர்கள் (வரி வசூலிப்போர்) எந்த ஒரு பெயரிலும் அல்லது மரபைக் காட்டியும் ஒரு தாமோ (Dham

[1] திருநபியின் ஏவல்களும் நடைமுறைகளும் 'ஹதீது' எனப்படும்.

என்னும் செப்புக்காசு) அல்லது திர்ஹமோ (Dirham என்னும் வெள்ளிக்காசு) குறிப்பிட்ட தொகைக்கு மேல் அதிகமாக வசூலிக்கக் கூடாது. ரயத்துகள் எவ்விதத்திலும் எவராலும் நசுக்கப்படவோ தொந்தரவு செய்யப்படவோ கூடாது. குறிப்பிட்ட இடத்தின் காரியக்காரர்கள் ரயத்துகளுக் குரிய உரிமைகளின் காப்பாளர்களாக இருக்கவேண்டும்.

ஷரத்து 2. உழவர்கள் சாகுபடிக்குரிய கருவிகளைப் பெற இயலாவிட்டால், அவர்களுக்கு நீங்கள் அரசாங்கத்திலிருந்து பண உதவி செய்யலாம். அரசாங்கம் அளிக்கும் அப் பண உதவி தக்க ஈடு காட்டப்பட்டபின் 'தக்காவீ கடன்'[1] (Taqqavi — Takkavi loan) மூலமாக அளிக்கப் படலாம்.

ஷரத்து 3. பேரரசர் இலகுத்தன்மையையும், நீதியையும் விரும்புவதனுல் அலுவலர்கள் அன்புடன் நிதானமாக ஓராண்டு வரை காத்திருக்க வேண்டும் (வரி வசூல் செய்ய); தாங்கள் நேரடியாகப் பயிர் செய்யும் நிலங்களுக்கோ குத்தகை நிலங்களுக்கோ குடியானவர்கள் தீர்வையை அலுவலர்களிடத்தில் நேரடியாகக் கொடுக்கவேண்டும்.

ஷரத்து 4: எங்கு நிலங்களில் உரிமை கொண்டாடப்படவில்லையோ, பயிர் செய்யப்பட்ட நிலத்தில் வரி விதிக்கப்படவில்லையோ அங்கெல்லாம் 'இஸ்லாமியச் சட்டத்தின்படி' (Holy Law) வரி விதிக்கப்பட இருப்பின், நீங்கள் எந்த வரியை விதிக்க வேண்டுமெனில், அதனுல் அல்லது அதனைக் கட்டுவதால் குடியானவர்களுக்கு அழிவு ஏற்படக்கூடாது. மேலும், எக் காரணத்தைக் கொண்டும் நிலத்திலிருந்து வரக்கூடிய வருமானம் பாதிக்கு மேல் அளிக்கப்படத் தக்கதாக விளங்கினும் சரியே, நிலத் தீர்வை விளைச்சலில் பாதிக்கு மேல் இருக்கவே கூடாது.

எங்கு வரித் தொகை விதிக்கப்பட்டு விட்டதோ, அதனை ஏற்றுக் கொள்ளுங்கள். ஆனுல் கரஜ் (Kharaj) நிலமாயிருந்தால், அரசாங்கத்தின் பங்கு பாதிக்கு மேல் இருக்கவே கூடாது. ஏனெனில், அவ்வாறு வசூலிப்பதால் ரயத்துகள் (குடியானவர்கள்) அழிந்துவிடுவார்கள். அல்லது கரஜ் நிலத்தின் வரி

[1] ஔரங்கசீப்தாம் முதலில் 'தக்காவீக் கடன்' என்னும் கடனுதவியை வருவாய்த் துறையில் புகுத்தியுள்ளார். 'தக்காவீ' என்பது அரப் மொழியின் மூலச் சொல்லாகும். 'அரசாங்கத்தார் குடிமக்களுக்குக் கொடுக்கும் கடன்' என்று அரப் அகராதி 'தக்காவீ' என்னும் சொல்லுக்குப் பொருள் வழங்குகிறது.

யைக் குறைத்து, குடியானவர்கள் சுலபமாக எவ்வளவு கட்ட முடியுமோ அந்த அளவுக்கு வரியை விதியுங்கள். அப்படியே நிலத்திலிருந்து விதிக்கப்பட்ட வரித் தொகைக்கு மேல் வரி செலுத்த அவர்களால் முடிந்தாலும் சரியே, அதிக வரியை வாங்காதீர்கள்.

ஷரத்து 5: விதிக்கப்பட்ட நிலத் தீர்வையை வரியாகவோ (Muzaf) அல்லது விளைபொருளாகவோ (Maasuma) வழங்க எவ்வாறு ஒப்புவார்களோ, அவ்வாறு நீங்கள் பெற்றுக் கொள்ளுங்கள். இல்லையானல் வேண்டாம்.

ஷரத்து 6: குறிப்பிட்ட நிலத் தீர்வைக்கு உட்பட்ட நிலங்களில் நீங்கள் பயிர்கள் இருக்கும் அந் நிலங்களுக்கு ஏதாவது பேராபத்து ஏற்படுவதாகக் கேள்வியுற்ருல், வெகு ஜாக்கிரதையாக விசாரணை நடத்தவேண்டும்; பேராபத்து நிகழ்ந்த அளவுக்கு வரிகளை நீக்கவேண்டும்; எஞ்சியுள்ள விளைச்சல்களிலிருந்து வரிகளைப் பெறும்போது பாதிக்குக் குறையாமல் குடியானவர்களிடத்தில் விட்டு வைக்க வேண்டும்.

நிலங்கள் வெள்ளத்தால் அழிந்திருக்குமேயானல், அல்லது மழை நீரால் அழிக்கப்பட்டிருக்குமேயானல், அல்லது அறுவடைக்கு முன்பாகத் தடுக்க முடியாத பேராபத்து நிகழ்ந்திருக்குமேயானல், அதனல் சாகுபடிக்காரர் ஒன்றுமே அடைய முடியாமல் இருந்திருப்பாரேயானல், அல்லது அடுத்த ஆண்டிற்கும் இரண்டாவது பயிர் செய்ய முடியாத நிலையில் இருந்திருப்பாரேயானல், அந் நிலங்களின்மீது வரிகள் நீக்கப்பட்டதாகக் கருதுங்கள்.

ஷரத்து 7: நேர்மையுடனும் பற்றுதலுடனும் சேவை புரிந்துள்ள ஜாகிர்தார்களின் கீழிருக்கும் ஆமில்கள், கரோரிகளின் பெயர்களை எமக்குத் தெரிவியுங்கள்; விதிக்கப்பட்ட சட்டங்களை ஒவ்வொரு விவகாரத்திலும் அமல்படுத்தும் நல்ல அலுவலர்களின் பெயர்களையும் தெரிவியுங்கள்; ஏனெனில், அவர்களின் நல்லொழுக்கத்தால் அரசுக்கு விளைக்கப்பட்டுள்ள லாபம் காரணமாக அவர்களுக்குத் தகுந்த வெகுமதிகள் அளிக்கப்பட வேண்டும். ஆனல், வேறு எவராவது அதற்கு மாருக நடந்திருப்பாரேயானல், பேரரசுக்கு இந்தச் செய்தியையும் தெரிவியுங்கள். ஏனெனில், அவர்களைப் பணியிலிருந்து நீக்கி விட வேண்டும்; அவர்களின் நேர்மையற்ற நடவடிக்கைகளுக்குத் தண்டனை யளிக்கப்பட வேண்டும். உழவர்களின்

தகுதிக்கும் பயிர்களின் விளைச்சலுக்கும் ஏற்றவாறு வரியை நிர்ணயிக்க வேண்டும், வசூலிக்க வேண்டும் என்று கூறியிருப்பதையும் நாம் நினைவிற்கொள்ள வேண்டும். 'மக்களுக்காக அரசே யன்றி, அரசுக்காக மக்கள் அல்லர்' என்ற கருத்தை ஔரங்கசீபின் மேற்கூறிய வருவாய் விளக்கச் சட்டம் வலியுறுத்துகிறது.

ஷரத்து 8: முயற்சி செய்து தகுந்த நேரத்தில் அரசாங்கத் தஸ்தாவேஜுகளைச் சேகரித்து வையுங்கள். நீங்கள் தங்கியிருக்கும் கிராமத்தில் அலுவலர்களிடத்திருந்து தினந்தோறும் எவ்வளவு வரித் தீர்வைகள் வசூலாயின; வேறு வரிகள் எவ்வளவு வசூலாயின; நிலவும் விலைகள் என்ன என்பனவற்றையெல்லாம் சேகரித்து வையுங்கள்; பிற பர்காணுக்களிலிருந்து வசூலாகிய வரிகள், மாதத்தில் இருமுறை பாக்கி நிற்கும் நிலுவை (மவ்ஜுதாத்—Maujudat), ஃபவுஜ்தார்களின் கருவூலங்களில் இருக்கும் நிலுவையென்ன, வசூல் பாக்கி நிலுவை எவ்வளவு, மொத்த வரித் தொகை எவ்வளவு, 'ஜமாபந்திக்கு' வந்துசேரவேண்டிய தொகை யென்ன, கருவூலங்களால் செலவழிக்கப்படும் தொகை யென்ன என்பனவற்றை யெல்லாம் சேகரித்து வைத்துக் கொள்ளுங்கள். இவற்றை யெல்லாம் கணக்குப் பார்த்துப் 'பேரரசரின் தஸ்தாவேஜு தலைமைப் பதிவு அலுவலகத்'திற்கு (Imperial Record Office) அனுப்பி வையுங்கள்.

**(ஆ) ஔரங்கசீபின் குத்தகைச் சாகுபடிச் சட்டங்கள்:** பேரரசர் ஔரங்கசீப் ஹிஜ்ரி 1079ஆம் ஆண்டில் (கி.பி. 1669) குஜராத் திவான் முகம்மது ஹாஷிம் என்பாருக்கு ஃபர்மான் என்னும் அரச கட்டளையை விடுத்தார். அது போன்றே ரசிக் தாஸ் கரோரி (Rasik Das Karori) என்னும் திவானுக்கும் (வரி வசூலிக்கும் மாகாணத் தலைமையதிகாரி) ஃபர்மான் விடுத்தார். அவை குத்தகைச் சாகுபடி முறைகளை விளக்குகின்றன. அவற்றுள் பல பெர்லின் அரசாங்க நூலகத்தில் பாதுகாத்து வைக்கப்பட்டுள்ளன. அந் நூலக ஆராய்ச்சியாளர்கள் ஆணைகளுக்கு விளக்கங்களை **அடக்க நூல்களில்** அளித்துள்ளனர். ஃபர்மான்கள் பலவற்றை மிர்அத்தெ அஹ்மதீ நூல் அளித்துள்ளது.[1] அவற்றுள் சில பின்வருமாறு:

[1] Dr. N. M. Siddiqi, 'Land Revenue Administration under the Mughals'; also, Prof. Sharma, 'The Mughal Rule in India'; and Lane-poole, Aurangzeb.

(1) குடியானவர்களிடம் அன்பைக் காட்டுங்கள்; ஏனெனில், அதனால் சாகுபடி மிகக் கூடுதலாகக் கண்டுமுத லாகும். (2) குடியானவர்கள் உழவுக்குத் தேவையான கருவிகளை வாங்க இயலாவிடில், தக்காவீக் கடன் மூலமாகக் கடனுதவி யளியுங்கள். (3) ஒவ்வோராண்டின் ஆரம்பத்திலும் கூடிய வரை ரயத்துகளின் (குடியானவர்களின்) நிலையை உழவில் ஈடு பட்டுள்ளார்களா, ஒதுங்கியுள்ளார்களா என்று அறிந்து கொள்ளுங்கள்; அவர்கள் உழுவார்களேயானால், அவர்களுக்கு அன்பு வார்த்தைகளைக் கூறுங்கள். அவர்கள் உதவியை நாடு வார்களேயானால், அவ் வுதவியை அளியுங்கள். ஆனால், நல்ல மழைக்குப் பிறகு உழுவதற்கு வாய்ப்பிருந்தும் பயிர் செய்யாம லிருந்தால், அவர்களைப் பயமுறுத்துங்கள். (4) குடியானவர் ஒருவர் உழவுக் கருவிகளை வாங்க இயலாது நிலத்தை உழாமல் விட்டு விட்டால், அந் நிலத்தைப் பிறருக்குக் குத்தகைக்கு விடுங்கள்; அல்லது நேரடிப் பயிர் செய்வதற்குப் பிறரிடம் விட்டுவிடுங்கள். அந்தக் குத்தகைக்காரர்களிடமிருந்து வரியைப் பெற்றுக் கொண்டு, எஞ்சிய தொகையைச் சொந்தக்காரர்களி டம் ஒப்படைத்துவிடுங்கள். அல்லது தேவையானல், வேருெரு வரிடம் நிலத்தை ஒப்படைக்கவும். ஏனெனில், அவர் நிலத்தை உழுத பின் வரி கட்டியது போக, எஞ்சியதை அனுபவிக்கக் கூடும். எப்பொழுதாவது நிலச் சொந்தக்காரரே பயிர் செய் வதா யிருந்தால், அவரிடத்தே நிலத்தை ஒப்படைத்துவிடுங் கள். ஒருவர் பயிர் செய்யாமல் நிலத்தை விட்டு ஓடிவிட்டால், அதை ஆண்டு முடிவில் குத்தகைக்கு விடுங்கள். (5) தரிசு நிலங்கள் எவை என்பதைச் சரியாக அறிந்து கொள்ளுங்கள். அவை பாதைகளிலும் நெடுஞ்சாலைகளிலும் இருக்குமேயானல், அவற்றைக் கிராமங்கள் நகரங்களின் பகுதிகளாக, உள்ளன உள்ளவாறே குறித்து வையுங்கள். ஏனெனில், அப் புறம்-போக்கு நிலத்தில் யாரும் பயிர் செய்யக் கூடாது. மேலும், இவையேயன்றி, வேறு பல தரிசுநிலப் பகுதிகள் இருக்குமே யானல், வருவாயைக் கருதி அம் மக்களைத் தொந்தரவு செய்யா தீர்கள். அப் பகுதிகளில் சிலவற்றைப் பயிர்செய்ய முடியு மானல், அவற்றின் உரிமையாளர்களைக் கண்டுபிடித்துப் பயிர் செய்யுமாறு வேண்டிக்கொள்ளுங்கள். உரிமையாளர்கள் இல்லை யானல், வேறு யாருக்காவது மராமத்துச் (நிலத்திருத்தம்) செய்யக் கொடுத்து விடுங்கள். (6) குறிப்பிட்ட வருவாயை வசூலிக்கும்போது, குடியானவர்கள் விரும்பினல், அவற்றைத் தானியங்களாகப் பெறலாம். விரும்பாவிட்டால் விட்டுவிடுங்கள். (7) குறிப்பிட்ட வரியை அறுவடைக் காலத்தில் தான்

வசூலிக்க வேண்டும். எனவே, எப் பயிரும் அறுவடை செய்யப்படும் காலத்தில் மட்டும் குறிப்பிட்ட வரியை மட்டும் வசூலிக்கவும். (8) நிலத்தின் சொந்தக்காரர் குறிப்பிட்ட வரியைக் கட்டாமலே பயிர் செய்தபின் இறந்து விடுவாரேயானால், அவருடைய வாரிசுதார்கள் மகசூலைப் பெறும்போது அவர்களிடம் வரியை வசூலியுங்கள். ஆனால், அவர் பயிர் செய்யுமுன்னே இறந்து விடுவாரேயானால், அளிப்பதற்கு ஒன்று மில்லாவிடில், விட்டுவிடுங்கள். (9) ஒரு நிலச் சொந்தக்காரர் நிலத்தைக் குத்தகைக்கு விட்டால், நிலச் சொந்தக்காரரிடத்திருந்து வரியைப் பெறவும். குத்தகைக் காரர் தோட்டங்களைப் பயிர்செய்தால் குத்தகைக்காரரிடத் திருந்து வரியை வசூலிக்கவும். ஆனால், ஒருவர் நிலத்தைப் பெற்றபின் வரியைக் கொடுக்க மறுப்பாரேயானால், நிலச் சொந்தக்காரரும் சாட்சிகள் மூலமாக அந்நபர் ஆக்கிரமித்துக் கொண்டதாக நிரூபிப்பாரேயானால், அவரிடத்திருந்து வரி வசூலிக்கவும். அடைமானத்திற்கு வைக்கப்பட்ட நிலங்களில் பறிமுதலுக்குரிய சட்டங்கள் எவையோ அவற்றை அமல்படுத்தவும். (10) ஒருவர் வளரும் பயிர்கள் உள்ள நிலத்தை விற்பாரேயானால், அதை வாங்கியவரிடத்திருந்து வரியை வசூலிக்கவும். இருபோகச் சாகுபடியில், விற்பவர் ஒரு போகத்தையும், வாங்குபவர் ஒரு போகத்தையும் அனுபவித்தால் இருவரிடத்துமிருந்து இரு பாதிகளாக வசூலிக்கவும். (11) ஒருவர் தம் இடத்தில் வீடு கட்டுவாரேயானால், அதற்குமுன் இருந்தது போல் வரி (Chari) கொடுக்க வேண்டும். அதுபோன்றே, தம் நிலத்தில் மரங்களை நட்டாலும் சரியே, வரி கொடுக்க வேண்டும். (12) ஒருவர் தரிசு நிலத்தைப் பூங்காவாக மாற்றுவாரேயானால், அல்லது பழத் தோட்டங்களாக மாற்றுவாரேயானால், தோட்டத்திற்குரிய உயர்ந்தபட்ச வரியாக $2\frac{3}{4}$ ரூபாய் வரி வசூலியுங்கள். (13) ஆனால் திராட்சை, பாதாம் மரங்களுள்ள தோட்டமாக இருந்தால், அவை பலனளிக்கும் காலத்தில் இருந்து $2\frac{3}{4}$ ரூபாய் வரி வசூலிக்கவும். (14) ஷாஜஹானின் கஜக்கோல்படி ($45' \times 45'$) ஒரு 'பிகா' (Bigha) நிலத்திற்கும், பேரரசரின் (ஔரங்கசீப்) அளவு கோல்படி ($60' \times 60'$) ஒரு 'பிகா' விற்கும் $5\frac{1}{2}$ ரூபாய்க்கு மேல் வசூலிக்கக்கூடாது. (15) ஓர் இந்து முஸ்லிமுக்கு நிலத்தை விற்பாரேயானால், இவர் (நிலம் வாங்கியவர்) முஸ்லிமாக விளங்கிய போதினும் இவரிடத்திருந்தே வரி வசூலிக்கவும்.[1]

[1] If an Infidel sells his land to a Muslim, demand the revenue in spite of his being a Muslim. No. 14th, 122a—'Mirat-i Ahmadi' Sarkar, Mughal Administration.

(16) ஒருவர், இந்து அல்லது முஸ்லிமாக இருப்பினும் சரியே, வருமானம் அளிக்கும் நிலத்தின் சொந்தக்காரராக இல்லாம லிருந்தால், அல்லது அவருக்கு அடைமானத்திற்கு விடப்பட் டிருந்தால் அவர் அதில் என்ன விளைந்தாலும் அந்த முழு வரு மானத்தையும் அனுபவிக்குமாறு விட்டுவிட வேண்டும்.[1] என்ன குறிப்பிடப்பட்டதோ அதை மட்டும் வசூலிக்கவும்.

**(இ) ஔரங்கசீப் ரஸிக் தாஸுக்குப் பிறப்பித்த ஆணை (1667ஆம் ஆண்டு)[2]**

(1) அக்பரின் ஆட்சியில் தோடர் மாலின் நிர்வாகத்தின் கீழ் வருவாய் முறை என்ன என்பதைப்பற்றித் தெரிந்து கொள்ளவேண்டும். தீர்வை பழையபடி இருந்ததா? அரியணை ஏறியபோது உயர்த்தப்பட்டதா? எத்தனை மவுஜாக்கள் பயிர் செய்யப்பட்டுள்ளன? எவ்வளவு தரிசாக உள்ளன? தரிசுக்குக் காரணம் என்ன?......உபயோகப்படுத்தப்படாத கிணறுகள் இருக்குமேயானால், அவற்றைப் பழுது பாருங்கள், புதுக் கிணறுகளை வெட்டுங்கள். (2) ஒவ்வோராண்டும் பயிர் செய்யப்பட்டவை, செய்யப்படாதவை, கிணற்றுப் பாசனம், வானம் பார்த்தவை, முதல்தர விளைச்சல், குறைவான விளைச் சல், தரிசு நிலங்கள் பயிர் செய்யப்படுவதற்குரிய ஏற்பாடுகள், இதற்குமுன் ஆண்டுகளில் செய்யப்பட்ட ஏற்பாடுகள், இதுவரை வசூலிக்கப்பட்ட வரித்தொகை ஆகிய எல்லாவற்றையும்பற்றி உடனே தெரிவிக்க வேண்டும். (3) ஆமில்கள், சௌத்ரீகளை நெருங்கவிடாதீர்கள். ரயத்துகளிடம் நீங்களே நெருங்கிப் பழகி, அவர்கள் உங்களிடம் குறைகளைக் கூறினால், அவற்றைக் கேட்டு இடைத்தரகர் உதவியின்றி அவற்றைக் களைய வேண்டிய ஏற் பாடுகளைச் செய்யுங்கள். (4) பர்கானாக்களின் அமீன்கள் மூலம் ஒவ்வொரு கிராமத்திலும் உள்ள குடியானவர்களின் சொத்து களைப்பற்றிய விவரங்களை அளிக்க வேண்டும். (5) பர்கானாவில் கீழதிகாரிகளிடத்திருந்து ஒவ்வொரு வாரமும் நிலவரங்களின் அறிக்கைகளைக் கேட்க வேண்டும். (6) எக் காரணத்தைக் கொண்டும் மூன்று தவணைக்குமேல் பாக்கி இருக்கக் கூடாது. (7) நீங்களே கிராமத்திற்குச் சென்றால் பயிர்களின் நிலையையும், குடியானவர்கள் பணம் செலுத்தக்கூடிய தகுதியையும் நோட்ட

[1] If a man whether Hindu or Mohammadan is not the ower of a revenue-paying land but has only bought it or holds it on pawn he ought to enjoy the profit whatever is produced in it — 'No. 16th - 124a Mirati Ahmadi' - Quoted by Sarkar as above.

[2] Dr. N. A. Siddiqi — 'Land Revenue Administration under the Mughals' பக்கம் 94 காண்க.

மிட வேண்டும். (8) பூமியிலோ (இறைவன் காப்பாற்ற வேண்டும்!) வானத்திலிருந்தோ பேராபத்து ஏற்படுமேயானல், அதன் உண்மை நிலையை அறிந்து விசாரித்துக் கீழதிகாரிகள் வித்தியாசம் பாராட்டி அனுப்பக்கூடிய அறிக்கைகளை நம்பியிரா மல், எல்லா ரயத்துகளும் நற்பயன் பெறுமாறும் நஷ்டத்தி லிருந்து காப்பாற்றப்படுமாறும் நடந்துகொள்ள வேண்டும். (9) அமீன்கள், ஆமில்கள், சௌத்ரீகள், கானுங்கோக்கள் ஆகியோர்கள் உரியதற்கு அதிகமாக வரி வசூலித்துவிடாமலும், ரயத்துகளின் நலன்களைப் பாதிக்கும் 'அப்வாப்களை' வசூலிக்கா மலும் தடுக்கப்பட வேண்டும்.

முற்கூறப்பட்ட ஆணைகள் மூலம், உண்மையில் உழவர்க ளிடையே இந்து, முஸ்லிம் என வித்தியாசம் பாராட்டாமல், அனைவருக்கும் பொதுவான நலன்களை அளிக்கவே ஔரங்கசீப் விரும்பினுர் என்பதை ஒருவராலும் மறுக்க முடியாது.

**குறிக்கோள்கள் :** ஔரங்கசீபின் குறிக்கோள்கள் மிகத் தெளிவாகப் புலப்படுத்தப்பட்டுள்ளன. (1) 'உழுதுண்டு வாழ் வாரே வாழ்வார் மற்றெல்லாம் தொழுதுண்டு பின்செல்பவர்' என்ற திருவள்ளுவர் வாக்கை ஔரங்கசீபின் விளக்கம் நினைவு படுத்துகிறது. உதாரணமாக, எக்காரணம் கொண்டும் விதிக்கப் பட்ட வரிக்குமேல் வசூலிக்கப்படக்கூடாது—ஒரு 'தாம்' அல்லது 'திர்ஹமாக' இருப்பினும் சரியே—என்று கூறிய கருத்தை வேறு எந்தப் பேரரசரும் ஔரங்கசீபைப் போன்று வலியுறுத்தியிருப்ப தாகத் தோன்றவில்லை. (2) உழவர்களுக்கு அன்பும் சலுகை களும் காட்டப்பட வேண்டும்; ஏனெனில், நாட்டின் முதுகெலும்பு அவர்களே. எவ்வாறுக இருப்பினும், விளைச்சல் அதிகமாகவே யிருப்பினும், அரசாங்கத்துக்கு உரிய தொகையை விட அதிக மாக எக் காரணத்தைக் கொண்டும் வசூலிக்கக் கூடாது என்ற கடுமையான உத்தரவு வேறு எந்தப் பொதுநல அரசினராலும் விதிக்கப்பட்டதாய்த் தோன்றவில்லை. (3) வரி வஜா செய்யப் பட்டால், அல்லது வரிகளை நீக்கினுல், அரசாங்கத்துக்கு அது பெருத்த நட்டத்தை விளைக்கும் என்பதைப் பேரரசர் ஔரங்கசீப் உணராமல் இல்லை. அறிஞர் காஃபீ கானும் பேரரசர் 80க்கும் மேற்பட்ட வரிகளை நீக்கியதாய்க் கூறுகிறுர். ஆக, வருவாயின் முதுகெலும்பான நிலவரியைப் பாதிக்கப்பட்ட பகுதியிலிருந்து வரிவிலக்கு அளிப்பதற்குச் சம்மதித்து ஆணை பிறப்பித்ததே ஔரங்கசீப் சமய வேற்றுமை பாராட்டாமல் தம் மக்கள் மீது, குறிப்பாக உழவர்கள் மீது அன்பு கொண்டிருந் தார் என்பதை விளக்குகிறது. (4) மேலும், ஔரங்கசீப்

நேர்மையையே கடைப்பிடித்தார். அதுபோன்றே, தம் கீழுள்ள எல்லா அலுவலர்களையும் தம்மைப் போன்று நேர்மையாகவும் நீதியாகவும் அன்பாகவும் குடியானவர்களிடமும் பிறரிடமும் நடந்து கொள்ளவேண்டும் என்று அவர் விரும்பியது தெளிவாகிறது. அதுபோன்றே, அவர் தீய அலுவலர்களையும் நீக்கத் தவறவில்லை. (5) மேலும் பேரரசர் ஔரங்கசீப் ஷேர் ஷாவோ தோடர் மாலோ சாதிக்காத புதிய முறைகளை நிறுவியுள்ளார். (அ) அன்றுடம் புள்ளி விவரங்களைச் சேகரிக்கவேண்டும். புள்ளி விவர நிறுவனத்திற்குத் தேவையான அடிக்கோல் இடப்பட்டது (Statistical Department). (ஆ) அன்றுடம் கருவூலங்களிலிருக்கும் நிலுவைகளை அறிதற்குப் புதிய வழிகள் வகுக்கப்பட்டன. (இ) வசூல் பாக்கியிருக்குமேயானல், அதிலிருந்து அரசாங்கத்திற்குரிய தொகையையும் அடுத்த ஆண்டு கணக்கிலுள்ள வருவாயையும் அறிதற்கு வழிவகைகள் செய்யப்பட்டன.

**கருணை :** பேரரசர் ஔரங்கசீப் தமது விரிவான நிலத் தீர்வை விளக்கங்களைத் தம் அரச ஆணைகள் மூலமாக வெளியிட்டுவிட்டிருக்கிருர். இதன் மூலம் ஔரங்கசீப் எத்துணையளவுக்கு விவசாயிகள்மீது அன்பு கலந்த நேசம் கொண்டிருந்தார் என்பது தெற்றென விளங்குகிறது. அரசப் பிரதிநிதியாக இருந்தபோது மட்டுமன்றி, பிறகுங்கூட இதுபோன்ற பல ஆணைகளை 1668-69ஆம் ஆண்டுகளிலும் அவர் பிறப்பித்தார். அந்த அரச ஆணைகள், ஔரங்கசீப் நிர்வாகத்தில் ஒப்பற்றவர், தம் மக்கள்மீது நல்லெண்ணம் கொண்டவர், உழவர்களின் அன்புக்குப் பாத்திரமானவர் என்பதைத் தெளிவாக்குகின்றன. மேலும், அவர் தமது ஆணைகளை ஷரீஅத் சட்டத்திற்கும், நபிகள் நாயகத்தின் போதனை (அல்லது ஹதீது)களுக்கும் உட்பட்டுப் பிறப்பித்ததாகக் கூறுவதிலிருந்து, இஸ்லாமிய சட்டத்திற்கும் நாட்டுச் சட்டத்திற்கும் அல்லது நாட்டின் நலன்களுக்கும் இடையே யாதொரு முரண்பாடும் இல்லையென்பதை அவரே தெளிவுபடுத்தியுள்ளார். மேலும், வருவாயைப் பெருக்கிக் கொள்ள விவசாயிகளைக் கருவியாகப் பயன்படுத்த அவர் நினைக்காதது போற்றற்குரியதாகும். முதன்முதலாக ‘ஜமாபந்தி’ என்னும் முறை — இன்றுவரை அமலில் இருந்துவரும் இந்த ‘ஆண்டு வருவாய்க் கணக்கு பைசல்’ முறை—நிறுவப்பட்டது. இதில் ஔரங்கசீபும் ஷேர் ஷா, தோடர் மால் மற்றும் அக்பரின் முறைகளையே பின்பற்றினர்.

மேற்கூறிய வருவாய் விளக்கச் சட்டங்களையும் அடிப்படைக் கருத்துகளையும் ஒன்றுகத் தொகுத்து ஆராய்ந்து பார்ப்பின்,

நிச்சயமாகச் சந்திர குப்த மௌரியரோ, சமுத்திர குப்தரோ, ஹர்ஷ வர்த்தனரோ, ராஜராஜ சோழரோ, அலாவுதீன் கில்ஜியோ, ஏன், அக்பரோ அல்லது காரன்வாலிஸோ கூடப் பேரரசர் ஔரங்கசீபைப் போன்று விளக்கமாகச் சட்டங்களை இயற்றியிருப்பதாகவோ, அவற்றைச் சரிவரச் செயல்படுத்தியிருப்பதாகவோ தோன்றவில்லை. இவர் வருவாயை மட்டுமே தம் கருத்தில் கொண்டிருப்பாரேயானால், இத்துணை விரிவான அளவுக்குக் குடியானவர்களின் நன்மையைக் கருதி விளக்கங்களையும் நற்பயன்களையும் நல்கியிருக்க வேண்டியதில்லை. மேற்கூறிய சட்டங்களையும், இப் பேரரசர் நீக்கிய வரிகளையும் நினைவில் நிறுத்திப் பார்க்கும்பொழுது, 'நீதிக்கடல்' என்று இவரை விவரித்தது எத்துணைப் பொருத்தமானது என்பது தெள்ளிதிற் புலனாகும்.

## வருவாய்

ஔரங்கசீப் ஆட்சியிலும் பிற முகலாயப் பேரரசர்களின் காலத்து வருமானத்தைப் போன்றே நிலவரியையும், ஏற்றுமதி இறக்குமதி வரியையும் அரசு நம்பியிருக்க வேண்டி யிருந்தது. 1600ஆம் ஆண்டில் நில வருமானம் 1 கோடியே 90 இலட்சம் பவுனுக்குச் சமமாயிருந்தது. அது ஔரங்கசீபின் ஆட்சியில் (பேரரசர் இறப்பதற்கு 7 ஆண்டுகளுக்கு முன்வரை—1700) 4 கோடியே 30 இலட்சம் பவுனாக உயர்ந்தது. சட்டரீதியில் பேரரசரே நிலங்களின் எஜமானராக இருந்தார். எனவே, நிலங்களின்மீது சில சமயங்களில் மூன்றில் ஒரு பகுதி வரி வசூலிக்கப்பட்டு வந்தது. அக்பர் ஏற்படுத்திய தோடர் மால் முறை அல்லது 'ஜப்தி முறை' (Zabti System) ஔரங்கசீப் ஆட்சியிலும் தொடர்ந்து நீடித்தது. இதன் அடிப்படையில் நிலத்தை அளத்தலும், அளந்த பின்னர் வரி விதித்தலும் தொடர்ந்து கடைப்பிடிக்கப்பட்டன. பேரரசர் ஔரங்கசீப் பஞ்ச காலங்களிலும், வறட்சிக் காலங்களிலும் வரி வஜா (Tax remission) செய்துள்ளார்.

'மிர்அத்தெ ஆலம்' என்னும் நூலின் ஆசிரியர் பக்த்வார் கான் (Bakhthwar Khan) என்பாரின் கூற்றுப்படி, ஔரங்கசீபின் மொத்த வருமானம் 928,17,16,080 தாம்கள் (Dams) ஆகும். இதற்குச் சமமான பவுன் தொகை 3,08,50,000 ஆகும்; அல்லது அன்றைய அளவுகோலின்படி, ஔரங்கசீபின் வருமானம் 23,20,42,902 ரூபாய்களாகும். (40 தாம்கள் கொண்டது ஒரு ரூபாய்.) 'காலிசா' (Khalisa) என்னும்

'தனித்தொகை' அரசாங்கத்தின் கருவூலத்தில் செலுத்தப்பட்டது போக, மற்றும் ஒரு தொகை ஜாகிர்தார்களுக்கு அளிக்கப்பட்டது. கருவூலத்தில் செலுத்தப்பட்ட தொகை 172,99,81,240 தாம்கள் அல்லது 4,32,49,531 ரூபாய்கள் ஆகும். ஜாகிர்தார்களுக்கு அளிக்கப்பட்டது 18,79,43,368 ரூபாய்கள் ஆகும்.

| | | |
|---|---|---|
| 1700-க்கு முன் மொத்த வருமானம் | ரூ. | 23,20,42,902 |
| ஜாகிர்தார்கள், மன்சப்தார்கள், அமீர்கள் | ரூ. | 18,79,43,368 |
| இதர செலவுகள் | ரூ. | 8,50,003 |
| எஞ்சியது அரசாங்கக் கருவூலத்திற்கு | ரூ. | 4,32,49,531 |

ஆக எல்லா அமீர்களுக்கும் மன்சப்தார்களுக்கும் அளிக்கப்பட்ட ஊதியம், வேறு செலவுகள் நீங்கலாக, எஞ்சிய தொகை கருவூலத்தில் செலுத்தப்பட்டது. இந் நிகரத் தொகை மொத்த வருமானத்தில் சுமார் 1/6 பகுதியாகும். ஆனால், இவ் வருவாய் முழுதும் நிலத்திலிருந்து மட்டும் கிடைக்கப் பெற்றதா மற்றும் வேறு வகைகளிலிருந்தும் பெறப்பட்டதா என்று திட்டவட்டமாகக் கூற இயலாது. அது மட்டுமன்றி, மொத்த வருமானமும் இன்னதென்று திட்டவட்டமாகக் கூற இயலாது. ஏனெனில், பஞ்சம், நோய், மற்றும் பல காரணங்களாலும், நிலத்திலிருந்து கிடைக்கும் மகசூல் குறைவு காரணத்தாலும் அரசுக்கு உரிய வருவாய் மாறிக்கொண்டே இருந்தது. இதனை அறிஞர் லேன்பூல் ஒப்புக்கொள்கிறார்.[1] இது மட்டுமன்றி, வரி வஜா செய்வதனாலும் வருவாய் குறைந்தது. சர்க்கார், 59 வரிகளை ஔரங்கசீப் குறைத்ததாகக் கூறுகிறார். ஆனால் ஔரங்கசீப் 80 வரிகளை நீக்கியதாகக் காஃபீ கானே கூறுகிறார்.[2] ஆக, நீக்கப்பட்ட வரிகளுக்கு உரிய தொகைபோக, அரசின் மொத்த வருமானத்தில் நில வருமானம் மட்டுமன்றிப் பிறவகை வரிகள் மூலம் பெறப்பட்ட வருவாயும் சேர்ந்திருந்தது. எனினும், மொத்த வருவாய் இவ்வளவுதானென்று திட்டவட்டமாகக் கூற இயலாது. ஔரங்கசீபின் வருமானத்தைப்பற்றி மனுச்சியும்,

[1] 'To arrive at any definite estimate of the gross revenue of Aurangzeb is impossible owing to the fluctuating character of the taxation apart from the rent drawn from the land. The Mughal Emperors were constantly remitting taxes' Lane-poole, Aurangzeb.

[2] Elliot & Dowson—History of India as told by its own historians, Vol. VII.

பெர்னியரும் வெவ்வேறு புள்ளி விவரங்களை அளிக்கின்றனர். ஆனால், அவை ஒரே ஆண்டில் கணிக்கப்பட்டவை அல்ல.

## வருவாய் (பவுன் கணக்கில்)

| ஆண்டு | டாக்டர் கேரேரி பெர்னியர் | லேன்பூல் மனுச்சி | அப்துல் ஹமீத் லாஹௌரி | 'தஸ்தூர் அமல்' (அரசாங்கக் கையேடு) |
|---|---|---|---|---|
| 1660 | 25,410,000 | | 24,750,000 | |
| 1695 | 90,000,000 | | | |
| 1697 | | 43,550,000 | | 40,000,000 |
| 1700 | | 43,000,000 | | |

ஆயினும், பேரரசர் ஔரங்கசீபைத் தக்காணத்தில் கல்கலா என்னுமிடத்தில் சந்தித்த டாக்டர் கெமில்லி கேரேரி (Dr. Gemelli Careri), தம்மிடம் பேரரசர் அவரது வருவாய் முழுதும் 'பரம்பரை ஜாகிர்களிலிருந்து மட்டுமே' கிடைத்த தாகக் கூறினார் என்று செப்புகிறார். டாக்டர் கேரேரியின் கூற்றின் அடிப்படைச்சான்றில், லேன்பூல் அனேகமாக இது 80 கோடி ரூபாய்க்கு மேல் அல்லது 90 மில்லியன் பவுனுக்கு மேல் இராது என்று கருதுகிறார். ஆனால், நில வருவாய் மட்டுமே என்று கூறி இருப்பது ஏற்புடைத்து அன்று. ஏனெனில், பீஜப்பூர், கோல்கொண்டா ஆகிய தக்காண இராஜ்ஜியங்களும் தங்கள் கப்பத் தொகையாக 10 கோடி ரூபாய்க்குக் குறையா மல் கட்டி வந்தன. 43½ மில்லியன் பவுன் தொகையில் 10 கோடி ரூபாயும் அடங்கி இருப்பதால், உறுதியாக நிலவரியும் வெவ் வேறு வரிகளும் எவ்வளவு என்று தனித் தனியே பிரித்துப் பார்க்க முடியவில்லை. ஆனால், படிப்படியாக அக்பர் ஆட்சியி லிருந்து ஔரங்கசீப் ஆட்சி வரையில் வருவாய் வளர்ந்தே வந்துள்ளது. 294, 295 பக்கங்களிலுள்ள அட்டவணைகளைக் காண்க. (Elliot & Dowson 'History of India as told by its own Historians' என்னும் நூலின் வால். VII தரும் விவரம் இது.)

அக்பர் ஆட்சியிலிருந்து ஔரங்கசீப் ஆட்சி வரையில் இந்திய ரூபாய்க்குச் சமமாக இங்கிலாந்தின் நாணயத்தில் ஷல்லிங் 2, பென்ஸ் 3 (2sh 3d) கிடைத்துவந்தது. இந்திய நாணயத்தின் மதிப்பு உயர்ந்தபொழுது, இங்கிலாந்தின் நாண யத்தில் மதிப்புக் குறைந்து, 2sh 6d ஆக மாறியது. எனவே, சாதாரணமாக ஔரங்கசீபின் ஆட்சியிலும் 1 ரூபாய்க்குச் சம மாக 2sh 6d என்று வைத்துக் கொண்டால், இங்கிலாந்தின்

## வருவாய் வளர்ச்சி அட்டவணை

| ஆட்சி - பேரரசர் | ஆண்டு | ஆசிரியர் | தொகை (பவுன், மிலியன்) | ரூபாய்களில் (கோடி) |
|---|---|---|---|---|
| அக்பர் | 1594 | அபுல் ஃபசல் | 18,640,000 | 14,91,20,000 |
| | 1605 | டேலாயட் | 19,630,000 | 15,70,40,000 |
| ஜஹாங்கீர் | 1627 | பாதுஷா நாமா | 19,600,000 | 15,68,00,000 |
| ஷாஜஹான் | 1628 | முஹம்மத் ஷரீஃப் | 18,750,000 | 15,00,00,000 |
| | 1648 | பாதுஷா நாமா | 24,750,000 | 19,80,00,000 |
| | 1655 | அரசாங்கக் கையேடு | 30,080,000 | 24,06,40,000 |

| | | | | |
|---|---|---|---|---|
| ஔரங்கசீப் | 1660 | பெர்னியர் | 25,410,000 | 20,32,80,000 |
| | 1666 | தேவ்னே | 26,700,000 | 21,36,00,000 |
| | 1667 | பக்த்வார் கான் | 30,850,000 | 24,68,00,000 |
| | 1670 | தஸ்தூர்அமல் (அரசாங்கக் கையேடு) | 40,100,000 | 32,08,00,000 |
| | 1697 | மனுச்சி | 43,550,000 | 34,84,00,000 |
| | 1707 | ரமூசியோ (Ramusio) | 33,950,000 | 27,16,00,000 |

£ 1க்குச் சமமாக இந்தியாவின் 8 ரூபாய் கிடைத்திருக்கும். சராசரி 1 பவுனுக்கு 8 ரூபாய் சமம் என்ற அடிப்படையில் தான் பேரரசர்களின் வருவாய் மேலே கண்டவாறு ரூபாய்க் கணக்கில் கணிக்கப்பட்டுள்ளது.[1] எவ்வாருயினும், பேரரசர் ஔரங்கசீபின் வருவாய் அவர் ஆட்சியில் அமர்ந்ததிலிருந்து பெருகியே வந்துள்ளது; நாணயத்தின் மதிப்புச் சீராகவே இருந்தது. ஆனல், அவர் இறக்கும் தறுவாயில் அது மிகவும் அதிகமாகவே சரிந்துவிட்டது. அவர் தக்காணத்தில் பல ஆண்டுகள் தங்கி இருந்ததே இதற்குக் காரணமாகும்.

ஔரங்கசீபின் நாணயங்களைப் பொறுத்தவரை, ரூபாய்க்குக் கீழே 'தாம்' (செப்புக்காசு) என்றும், 'திர்ஹம்' (வெள்ளி அல்லது செப்பு) என்றும் இருவித நாணயங்கள் இருந்தன. 40 தாம் கொண்டது ஒரு ரூபாய் ஆகும். ஔரங்கசீப் வெள்ளி நாணயங்களையும் வெளியிட்டார். வெள்ளி நாணயம் 175 குன்றி மணி எடையுள்ளது என்கிருர் பேராசிரியர் முக்கர்ஜி.[2] 8,00,000 தாம்கள் தற்கால நாணயத்தின்படி 20,000 ரூபாய்க்குச் சமமானவை என டாக்டர் அத்தார் அலீ கூறியுள்ளார்.[3]

## ஔரங்கசீப் ஆட்சியில் நிலத் தீர்வை வருமானம்

ஔரங்கசீபின் ஆட்சிக்கால ஆண்டுகளுள் 1658-59, 1689-93, 1699 ஆகிய மூன்று காலங்களில் ஒவ்வொரு மாநிலத்தினின்றும் எத்தனை தாம்கள் நிலத்தீர்வை மூலம் கிடைத்தன வென்பதை மூன்று மூல நூல்களான (1) தஸ்தூரெ அமல், (2) ஜவாபித்தெ ஆலம்கீரி, (3) குலாஸத்துஸ் ஸியாக் என்பன முறையே அறிவிக்கின்றன. அவ் விவரம் பின் வருமாறு :

| மாநிலம் | 1658-59 | 1689-93 | 1699 |
|---|---|---|---|
| 1. வங்காளம் | 45,78,58,000 | 52,46,36,240 | 17,28,41,000 |
| 2. ஒரிஸா | 12,55,80,000 | — | 17,28,41,000 |
| 3. பீஹார் | 54,53,00,935 | 42,71,81,000 | 39,43,44,532 |
| 4. அவத் | 30,39,82,859 | 32,13,17,119 | 47,95,79,619 |

1 Lane-poole - 'Aurangzeb.'

2 'Shahjahan and Aurangzeb had an average weight of 175 grains pure' - Dr. Radha Kamal Mukherjee in 'The Economic History of India—1600 - 1800,' p. 32.

3 Dr. M. Athar Ali & Dr. N. A. Siddiqi.

| மாநிலம் | 1658-59 | 1689-93 | 1699 |
|---|---|---|---|
| 5. அலாகாபாத் | 52,78,81,196 | 45,65,43,278 | 42,23,36,622 |
| 6. ஆக்ரா | 1,36,46,02,117 | 1,14,17,00,157 | — |
| 7. டில்லி | 1,55,88,39,107 | 1,22,29,50,177 | 1,22,19,50,137 |
| 8. லாஹூர் | 1,08,97,59,776 | 89,89,32,170 | 89,30,39,039 |
| 9. மூல்தான் | 33,84,21,718 | 21,43,49,896 | 21,77,02,418 |
| 10. தட்டா (சிந்து) | 8,92,30,000 | 6,88,16,810 | — |
| 11. காஷ்மீரம் | 11,43,90,000 | 22,49,11,687 | 27,79,10,397 |
| 12. காபுல் | 19,70,78,000 | 16,10,49,354 | 20,20,81,642 |
| 13. அஜ்மீர் | 64,86,61,658 | 85,26,45,702 | 60,29,80,270 |
| 14. மாளவம் | 39,85,00,000 | 40,39,80,658 | 40,83,46,718 |
| 15. குஜராத் | 86,92,88,069 | 45,47,42,153 | 53,65,25,000 |
| 16. பீரார் | 92,65,46,000 | 92,65,45,000 | 92,65,45,000 |

டாக்டர் நுஃமான் அஹ்மத் சித்தீக்கி வரைந்துள்ள, அலீகார் பல்கலைக் கழக வெளியீடாகிய, பம்பாய், Asia Publishing House, 1970-ஆம் ஆண்டுப் பதிப்பான 'Land Revenue Administration under the Mughals' என்னும் நூலில், பக். 164 முதல் 171 வரை காணப்படும் அட்டவணையினின்று மேலே கண்ட தகவல் எடுத்தெழுதப்பட்டுள்ளது.

1658-59 ஆண்டுக்கான தகவலறிவிக்கும் 'தஸ்தூருல் அமலெ ஆலம்கீரி'யும், 1689-93 என்னும் 31-35 ஔரங்கசீப் ஆட்சியாண்டுகளின் தகவலறிவிக்கும் 'ஜவாபித்தெ ஆலம்கீரி' யும், 1699 என்னும் 41ஆவது ஆட்சியாண்டுக்கான தகவலறிவிக்கும் 'குலாஸத்துஸ் ஸியாக்'கும் பாரசீக மொழியிலுள்ள, ஔரங்கசீபின் அரசு நிர்வாகத் தகவலறிவிக்கும் மூல நூல்களாகும்.

## ஔரங்கசீப் வழங்கிய வரிச் சலுகைகள்

ஆட்சிக்கு வந்ததுமே பேரரசர் ஔரங்கசீப் 80 வரிகளுக்கும் மேலாக நீக்கியுள்ளார் என்பதற்குக் காஃபீ கானே சாட்சி பகர்கின்றார். ஆனால், இம் மாமன்னர் 60 வரிகளை நீக்கியதாக அறிஞர் மோர்லாந்து கருதுகிறார். மக்களுக்குச் சுகம் அளிக்கவும், அவர்களின் அவல நிலையைப் போக்கிடவும் பேரரசர் நீக்கிய வரிகளை ஆறு வகைகளாகப் பிரிக்கலாம் : (1) வட்டாரங்களில் உற்பத்தியாகும் பொருள்கள் விற்பனையாகும் போது விதிக்கப்படும் விற்பனை வரி, (2) நிரந்தரச் சொத்துக்களின்

மீதுள்ள வரி, (3) அரசாங்கத்தின் சார்பாக வசூலிக்கப்பட்ட வரிகள், (4) லைசென்சுக் கட்டணங்கள், (5) கட்டாயக் கட்டணங்கள், (6) இந்துக்கள்மீது விதிக்கப்பட்ட வரிகள்.

பேரரசர் ஔரங்கசீப் இந்துக்கள் மீது விதிக்கப்பட்ட சில வரிகளையுங்கூட நீக்கினார் என்று அறியும்போது நமக்கு விந்தையாகத் தோன்றும். எனினும், அவை உண்மையே.

**நீக்கப்பட்ட பல வரிகளின் பட்டியல் :**

(1) கங்கை நதி தீரத்தில் நீராடுகையில் ஔரங்கசீப் ஆட்சிக்கு முன் ஒவ்வொரு யாத்திரிகர் இடத்திருந்தும் 6¼ ரூபாய் வரி வசூலிக்கப்பட்டது. ஔரங்கசீப் இதனை நீக்கினார். (மனுச்சி)

(2) இது போன்றே, இந்துக்கள் எரிக்கப்பட்ட சடலத்தின் எலும்புகளையோ அல்லது அஸ்தியையோ கங்கையில் கரைக்கும்போது இவரது ஆட்சிக்கு முன் வரி வசூலிக்கப்பட்டது. இதனையும் இவர் நீக்கினார்.

(3) பெரும்பாலான மக்கள் உபயோகித்து வந்த வறட்டி மீதும் வரி விதிக்கப்பட்டிருந்தது. இதனையும் ஔரங்கசீப் நீக்கினார். (மிர்அத்தெ அஹ்மதீ)

(4) விற்பனை வரி

(5) மீன்கள் பிடிப்பதற்கு விதிக்கப்பட்ட வரி

(6) காய்கறிகள் மீதான வரி

(7) பால் மீதான வரி

(8) எரிபொருள்கள்—விறகு முதலியவற்றின் மீதான வரி

(9) எண்ணெய் வரி

(10) பாண்டங்கள் மீதுள்ள வரி

(11) புகையிலை வரி (ஔரங்கசீபின் ஆணை: 'மக்களை—அவர்களின் பைகளையோ பல்லக்குகளையோ வண்டிகளையோ சோதனைக்குட்படுத்தாதீர்கள்)[1]

(12) அரசாங்கம் ஏகபோக உரிமை கொண்டாடிய பொருள்கள், பன்னீர், வாசனைத் திரவியங்கள் முதலியவற்றின் மீதான வரி

(13) அடகு வைக்கப்பட்ட நிலங்கள் மீதான வரி

[1] "Mirat-i Alam", 287. Quoted by Sarkar in Mughal Administration.

(14) விற்கப்பட்ட நிலங்கள் மீதுள்ள வரி

(15) கொத்தவாலுக்குரிய கமிஷன்

(16) வீடு விற்பனைகளின்போது அரசாங்க மதிப்பீட்டிற் கென்று செலுத்தப்பட்ட வரி.

(17) அடிமைகளின் விற்பனை வரி

(18) சில்லரை வியாபார வரி

(19) சாலை வரி (ராஹ்தாரி—Road Tax)

(20) அங்காடிகள் வரி

(21) கடன்கள்மீது விதிக்கப்பட்ட வரி (அரசாங்கம் வழங்கிய கடன்களுக்கு வட்டி கிடையாது என்பதை நினைவில் வைத்துக்கொள்ளவேண்டும்; பேரரசர் ஔரங்கசீபே தக்காவீக் கடன்களைக் குடியானவர்களுக் களித்ததை நாம் நினைவில் கொள்ள வேண்டும்)

(22) சர்க்கரை தயாரிப்பதற்கு விதிக்கப்பட்ட வரி

(23) வாய்க்கால் வறண்டு விடுமேயானால், அதற்குரிய மராமத்து வரி

(24) ஓடக்காரர்கள் வரி

(25) அரசாங்கத்தின் முத்திரைகள், நிறைகள் நிர்ணயிக் கப்படும் போது வசூலிக்கப்பட்டிருந்த வரி

(26) நில உரிமை உறுதிப்பட விதிக்கப்படும் நிலவரி

(27) பாகப்பிரிவினையின் போது நிலங்களை அளந்து கொடுப்பதற்கு விதிக்கப்பட்ட வரி

(28) மேய்ச்சல் வரி

(29) அரசாங்கத்திலிருந்து ஒட்டகங்கள், வாகனங்கள், பணியாள்கள் வாடகைக்கு அமர்த்தப்படும்போது விதிக்கப் பட்ட வரி

(30) சுங்க வரி

(31) காகித விற்பனையின்மீது விதிக்கப்பட்ட வரி. [காகிதம் அதிகமாகப் பயன்படுத்தப் பட்டமையால், அரசாங்கத்தின் பணிகளெல்லாம் எழுத்து மூலமாகவே நடைபெற்றுவந்தன. இதனால் முகலாய அரசைக் 'காகித அரசாங்கம்' என்று சொல்வதுமுண்டு.]

(32) பேரரசருக்குச் செலுத்தப்படும் காணிக்கைகள். (இவை வரி போன்றே இருந்தன)

(33) அலுவலர் உயர்பதவிக்கு நியமிக்கப்படும்போது உயர் அதிகாரிகளுக்கும் பேரரசருக்கும் தரவேண்டிய காணிக்கைகள்.

(34) கோட்டைக்குள் பொருள்கள் நுழையும்போது அவற்றுக்கான வரி

(35) தானியங்களின் மீதான வரி

(36) கரும்பு, பழங்கள் மீதான வரி

(37) பட்டுத் துணி மீதான வரி

(38) ஆட்டிறைச்சி முதலியவற்றின்மீது விதிக்கப்பட்டிருந்த வரி

(39) கீழ் ஜாதி இந்து விதவையைத் திருமணம் செய்து கொண்டால், அவன்மீது இதற்கு முன் அரசுகளில் வரி விதிக்கப்பட்டது. இதனையும் ஔரங்கசீப் நீக்கினர்.

(40) மாகாணங்களை விட்டு வேறு மாகாணங்களில் பழங்களை விற்பதற்கான விற்பனை வரி (Inter-State Tax on fruits and Commodities)

(41) முஹ்தர்ஃபா (Muhtarfa) என்னும் தலைவரி. இதனை ஔரங்கசீப் அடிக்கடி கண்டித்துள்ளார்.

(42) தொழில் வரி

(43) கைத்தொழில் வரி

(44) கூரைகளுக்கு வேயப்படும் ஓடுகள், தட்டிகள் மீதான வரி

(45) கைத்தறித் துணிகள் மீதான வரி

(46) காய்கறி அங்காடிகளில் தனியாக வசூலிக்கப்பட்ட வரி

(47) தரகர்கள்மீது விதிக்கப்பட்ட வரி

(48) கொல்லர்கள், தச்சர்கள்மீது வரி

(49) தீபாவளியின் போதும், முஸ்லிம் பண்டிகைகளான ஆஷூரா (முஹர்ரம்), பராஅத் இரவுகளின் போதும் தீப அலங்காரங்களுக்காக விதிக்கப்பட்ட வரி

(50) ஆளுநர்களுக்கு அளிக்கப்படும் காணிக்கைகள் மீதான வரி

(51) ‘மல்பா’

(52) ‘பேட்’

(53) ‘பாலாதஸ்தி’

(54) மாவட்ட ரெவின்யூ அதிகாரிக்கு அளிக்கவேண்டிய படித் தொகையை (Allowance) ஈடுகட்டுவதற்காகத் தாசில்தார் வரி (Tahsildar Tax) என்றொரு வரி வசூலிக்கப்பட்டு வந்தது. இது அப்வாப் வகையைச் சேர்ந்தது. இதனையும் ஔரங்கசீப் நீக்கி விட்டார்.

**உதாசினம் செய்த அலுவலர்மீது நடவடிக்கை :** பேரரசர் ஔரங்கசீப் மக்களின் நலன்களைக் கருதியே பல வரிகளை நீக்கினார் என்று கூறினோம். ஆனால், அரசாங்க ஆணைப்படி அவர் நீக்கிய வரிகளை மீண்டும் எவரும் வசூலித்தால் அவ்வாறு வசூலித்த அலுவலர்கள் ஔரங்கசீபினாலும், அதற்கு முன்பு ஷாஜஹானினாலும் கடுமையாகத் தண்டிக்கப்பட்டனர். ஔரங்கசீபின் ஆணைகளும் ஷாஜஹானின் ஆணைகளும் ஆயிரக் கணக்கில் இந்தியா ஆபீஸ் நூலகத்தில் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. அவை அவ்வாறு தண்டிக்கப்பட்ட அலுவலர்களின் பெயர்களையும் பட்டியல்களையும் அளிக்கின்றன. மாதிரிக்கு ஓர் உதாரணத்தை இங்குப் பார்ப்போம்.

1662ஆம் ஆண்டு ஒரிஸ்ஸாவின் சுபேதார் பேரரசர் ஔரங்கசீபிடம் முறையிட்டார். ஒரிஸ்ஸாவின் திவான் முகம்மது ஹாஷிம் கான் என்பவரின் அசட்டையினாலும் சோம்பலினாலும் அரசாங்க நிலங்கள் சீரழிந்து வருவதாக அவர் முறையிட்டார். ‘எப்போதாவது ஒரு கரோரியை (கணக்கர்) வேலைக்கு நியமித்தால், நிலங்களுக்குத் தீர்வை விதிக்கப்படுவதற்கு முன்பே அவரை வேலையில் அமர்த்துகிறார். பிறகு மற்றொருவரிடமிருந்து ஹாஷிம் கான் லஞ்சம் பெற்றுக்கொண்டு, முதல் நபரை வேலையிலிருந்து நீக்கி விடுகிறார். இவர் மூன்றாவது நபரிடமிருந்து மீண்டும் கையூட்டம் பெறும்போது மூன்றாவது நபர் அதிக வரி வசூலித்துத் தருவதாக வாக்களிக்கிறார். இவ்வாறாக ஹாஷிம் கான் வெறும் ஏட்டளவில் அரசாங்கத்திற்குரிய வரிகளையும் வருமானங்களையும் அதிகரித்துக்கொண்டே செல்கிறார். இதனால் குடியானவர்கள் தங்கள் கிராமங்களை விட்டே ஓடிவிடுகிறார்கள். இவ்விடங்களெல்லாம் காடாக மாறி வருகின்றன.’ இதனை அறிந்த பேரரசர் ஔரங்கசீப் முஹம்மது ஹாஷிம் என்னும் திவானை (Diwan) வேலையிலிருந்து நீக்கினார்.

எனவே, பேரரசரின் குறிக்கோள் எவ்வாருயினும் வரிகளை வசூலித்து வருமானத்தை உயர்த்துவது என்பதன்று. இதற்கு நேர்மாருக, உழவர்களின் நலன்களைக் கருத்தில் கொண்டு நிர்வாகம் செய்வதே தமது மகத்தான கடமை என அவர் கருதினர்.

## 'கஜானு'க்கள் என்னும் கருவூலங்கள்

ஔரங்கசீபின் ஆட்சிக் காலத்தில் பலவகைப்பட்ட நிதிச் சாலைகளாகிய கஜானுக்கள் (கருவூலங்கள்) இருந்துவந்தன. அவற்றுள் சிலபற்றிய விவரங்கள் வருமாறு :

(1) 'பைத்துல் மால்' : இஸ்லாத்தின் எழுச்சியைத் தொடர்ந்து இஸ்லாமிய அரசுகளில் 'பைத்துல் மால்' என்னும் பொதுக்கருவூலம் ஒன்று ஏற்படலாயிற்று. ஔரங்கசீபும் இதன் வரவு செலவுகளைப்பற்றி உயர்ந்த எண்ணம் கொண்டிருந்தார்; இதிலுள்ள பணத்தைப் புனிதமாகக் கருதினர். எனவே, தம் வாழ்நாள் முழுதும் இதிலிருந்து ஒரு திர்ஹம் கூட அவர் தமக்கென்று எடுத்தது கிடையாது. ஏற்கெனவே அஹமதாபாத் ஆளுநரிடம் ஒப்புவிக்கப்பட்ட பொறுப்புகளை அவர் நிறைவேற்ருமையாலும், பேரரசர் அவர்மீது திருப்திப்படாததாலும், 1690-இல் அவரைப் பதவி இறக்கம் செய்து, கருவூலத் தலைவராக நியமித்துப் பொறுப்பு ஏற்கச் செய்தார். முஸ்லிம் ஒவ்வொருவரும் இஸ்லாமிய சட்டப்படி, 2½% 'ஜக்காத்' என்னும் ஏழைவரி கட்டவேண்டும் என நிர்ப்பந்திக்கப்பட்டார். இந்த ஏழைவரிப் பணமும் பைத்துல் மாலிலேயே சேர்ப்பிக்கப்பட்டது. 'பைத்துல் மால்' என்னும் பொதுக் கருவூலம் பணத்தை மட்டும் சேமிக்கவில்லை; பறிமுதல் சட்டத்தின்கீழ்க் கிடைத்த சொத்துக்களும் இதில்தாம் சேர்க்கப்பட்டன. 'அஜ்னு' (Ajna) என்னும் பெயரில் அரசத் துப்பாக்கிகளின், பீரங்கிகளின் வெடி மருந்துகள், ஈயம் ஆகியவை இந்தப் பைத்துல் மாலின் ஒரு பகுதியாக இருந்தன. பேரரசருக்கு அளிக்கப்பட்ட 'நஜர்', 'பேஷ்கஷ்' என்னும் காணிக்கைச் சொத்துக்களும் இதில்தாம் சேர்க்கப்பட்டன. இஸ்லாமிய முறைப்படி எடுத்துத் தருமங்கள் செய்வதற்கு ஔரங்கசீப் ஒதுக்கி வைத்த ஒரு பொதுச் சொத்தாகும் இது. பேரரசரைத் தவிர்த்து இதிலிருந்து எதையும் எடுத்துச் செலவிட நிதி அமைச்சருக்கோ, அந்தரங்கச் செயலருக்கோ கூட உரிமை அளிக்கப்படவில்லை. (2) **அந்தரூன் மஹல்** (Andarun Mahal or Inner Chamber) பேரரசரின் பாதுகாவலில் தனியே

வைத்திருக்கும், ஆபத்தின்போது இறுதியாகச் செலவிட வேண்டிய தொகையின் கருவூலம் ஆகும். (3) பாகியா (Baqiya—Bad debts coffer). பழங்கடன்கள் வசூலானால் அதற்கான தனிக் கருவூலம். (4) ஜேபே காஸ் (Jebe Khas). பேரரசருக்கும் குடும்பத்தவருக்கும் செலவிடப்படும் தொகையின் சேமிப்பு. (5) ஜேபே ஃபைஜ் (Jebe Faiz). நவமணிகள், மற்றும் விலையுயர்ந்த ஆபரணங்கள் இருக்கும் கருவூலம். (6) கஜானே ரிக்காப் (Khazana Rikhab)—நடமாடும் கருவூலம். பேரரசர் போர்களுக்குச் செல்லும்போது செலவுக்காக வைத்துக்கொள்ளும் சிறு தொகை. (7) நஜர், பேஷ்கஷ் கருவூலம். (8) சர்ஃபே காஸ் (Sarfe Khas). இன்னும் இவை போன்று எத்தனையோ கருவூலங்கள் இருந்தன. 1690ஆம் ஆண்டில் பேரரசர் ஔரங்கசீப் ஆட்சியின் உச்சியில் இருந்தபோது பல ஆணைகளை வெளியிட்டார். அவற்றைத் தொகுத்து இந்தியா ஆபீஸ் நூலகம் (நெ.1641) 'ஜவாபித்தெ ஆலம்கீரி' (Zawabite Alamgiri) என்று ஒன்று வெளியிட்டுள்ளது. அந்த ஜவாபித்தெ ஆலம்கீரி மேலும் 24 கருவூலங்களின் வகைகள் இருந்தன வென்றும், அவை பேரரசின் தலைநகரில் இருந்தனவென்றும் அறிவிக்கிறது. இவற்றுள் 22 தொழிற்சாலைகளும் அடங்கி இருந்தன.

'தொழிற்சாலை' என்றால், இன்று உள்ளது போன்றது என்று நினைத்தலாகாது. அன்று கிடங்குகளும் தொழிற்சாலைகளும் பொருள் சேமிக்கும் நிறுவனங்களாக இயங்கின. இவற்றை எல்லாம் சேர்த்துத்தான் 'கார் கானா' (Khar Khana) என்று வழங்கினார்கள். இவற்றுள் லாயங்களையும் சேர்த்தே கூறினார்கள். [குதிரை, பசு, ஒட்டகம், யானை, கோவேறு கழுதை, மான் ஆகியவையும் இருந்தன. மருந்து வகைகள், மெழுகு வர்த்தி விளக்குகள், நூலகங்கள், பீங்கான் பாத்திரங்கள், குறிப்பாகச் சீனாவிலிருந்து தருவிக்கப்பட்ட பீங்கான் வகைகள், ஜமக்காளம், துணி, நெய்தது (கைத்தறி), கூடாரத் துணி வகைகள், பொற்கொல்லர்கள் தயாரித்த ஆபரணங்களும், அவர்களின் மூலக் கருவிகளும், தச்சு வேலை, தங்கம், வெள்ளி, செம்புப் பாத்திரங்கள், பன்னீர் மற்றும் வாசனைத் திரவியங்கள், எண்ணெய் மற்றும் வாசனைப் பொருள்கள், பீரங்கி மற்றும் மருந்து வகைகள், பழங்கள் மற்றும் விற்பனைப் பொருள்கள் ஆகியவை எல்லாம் கார் கானாக்களில் காணப்பட்டன. இவை கருவூலங்களாகக் கருதப்பட்டன.]

## பழுதடைந்த நிர்வாகம்

இறுதியாக, ஔரங்கசீபின் நிர்வாகத்தைத் தொகுத்துப் பார்க்கும்போது, பெரிய அகன்ற நிர்வாகத்தைப் பேரரசரால் தம் தனித் திறமையினுல்தான் செவ்வனே நிலைபெறச் செய்ய முடிந்ததென்பது புலனுகும். அவரது வருமானச் சட்டங்களும், மனப் போக்கும், நடுநிலைமையும் குடியானவர்களிடம் அவர் கொண்டிருந்த அன்பையும் கருணையையும் எடுத்துக் காட்டு கின்றன. மேலிருந்து கொண்டு வெறுமனே உத்தரவுகளை இட்டுக்கொண்டே ஆட்சி புரிந்தவர் அல்லர் அவர். தவருக நடந்து கொண்ட அதிகாரிகளையும் லஞ்சம் பெற்ற நிர்வாகி களையும் கண்டிக்கவும், வேலை நீக்கம் செய்யவும் ஔரங்கசீப் தவறவில்லை. ஆயினும், இது மிகச் சொற்பமே. ஏனெனில், பல அலுவலர்கள் ஆணைகளை மீறலாயினர். ஔரங்கசீபுக்கு 100 ஆண்டுக்குப் பிறகு வாழ்ந்தவர் மூன்ரும் ஜார்ஜ். இவரது ஆட்சி முறை கொடுங்கோன்மைமிக்கது என்று டன்லப் பிரபு குற்றஞ் சாட்டினர். ஆனுல், ஔரங்கசீபின் ஆட்சி மூன்ரும் ஜார்ஜின் ஆட்சியைப் போன்று கொடுமைமிக்கது அன்று. ஆனுல், வலிமையுடையது. ஏனெனில், நாட்டின் நிர்வாகத்தின் முது கெலும்பாக இருந்த மன்சப்தாரி முறை—இராணுவ - சிவில் கலப்பு நிர்வாகம்—மெல்ல மெல்லத் தேய்ந்தும் சரிந்தும் வரத் தொடங்கியது. காரணம், நிர்வாகத்தில் புரையோடி யிருந்த லஞ்சத்தையும் ஊழல்களையும் பேரரசரால் முற்றும் தடுத்து நிறுத்த முடியவில்லை. உதாரணமாக, மதுராவில் ஃபவுஜ்தா ராக இருந்தவர்—ஆலயங்களை அழித்ததனுல் இழி பெயரை ஈட்டியவர்—13 லட்சம் ரூபாயையும், 9300 'மொகரா'க்களையும் நாலரை லட்ச ரூபாய் பெறுமான சொத்துகளையும் விட்டுச் சென்ருர் (ஆதாரம், டாக்டர் அத்தர் அலீயின் நூல்). இன்னும் எண்ணற்ற அலுவலர்கள், மார்ட்டின் லூதரின் சமயப் புரட்சிக்கு முன்பு இருந்ததைப் போன்று, தங்கள் பணிகளையும் அரசாங்க அலுவல்களையும் விற்று வந்தனர். ஊழல்களுக்கு ஓர் உதாரணம் பின்வருமாறு : சர் வில்லியம் நோரிஸ் என்பாரின் தலைமையில் பேரரசரிடம் தூதுக்குழு ஒன்று சென்றது என்று நாம் முன்பே பார்த்தோம். அத் தூதுக்குழு மகிழ்ச்சியுடன் பேரரசரைச் சந்தித்தது. பேரரசரும் ஆங்கிலேயர்களைத் தொடர்ந்து பணியாற்றலாம் என்று அனுமதி அளித்தார். ஆனுல், அதற்குரிய ஆணையைப் பெறுவதற்கு அரசாங்க அலு வலர்களுக்கு அவர்கள் 1,00,000 ரூபாய் கொடுக்க நேரிட்டது (ஆதாரம், Manucci, Vol. III). மற்ருேர் உதாரணம் : தாவூத் கான் பானி (Dawood Khan Pani) என்பவர் 4,000 தகுதியுள்ள

மன்சப்தாரராகத் தெற்கு மண்டலத்தில் இராணுவத்திலேயே பணியாற்றி வந்தார். இவர் தெற்கு நோக்கித் திருச்சி வரை படையெடுத்து வந்தபொழுது திருச்சி நாயக்கர்கள் வமிசத்தில் சொக்கநாத நாயக்கர் இறந்து, அவர் மகன் நான்காம் வீரப்ப னுக்குப் பிறகு புகழ்வாய்ந்த இராணி மங்கம்மாள் (Mangammal) 1689ஆம் ஆண்டிலிருந்து ஆட்சி புரிந்தார். இராணி மங்கம்மாள் பற்றிப் பேரரசரிடம் பரிந்துரைப்பதற்காகப் பல வெகுமதிகளை யும், ஆங்கிலேயர்களிடம் 25,000 ரூபாயையும் பெற்றுச் சென்றுர் தாவூத் கான் பானி. நாம் முன்பே குறிப்பிட்டவாறு மன்சப்தாரி முறை கலப்பு முறை மட்டுமன்று. சில சமயங்களில் சில மன்சப்தார்கள் நிதி நிர்வாகத்திற்கும், சிலர் நீதி நிர்வாகத் திற்கும், மற்றும் சிலர் இராணுவத்திற்கும் மட்டுமே நியமிக்கப் பட்டனர். உதாரணமாக, ஜெய் சிங், தாவூத் கான் குரைஷி, திலேர் கான், பஹதூர் கான், தளபத் பந்தேலா ஆகியோர் இராணுவத் தளபதிகளாகவே பணியாற்றினர். ராஜா ரகுநாத பான்ஸ்லே, இனயத்துல்லா கான், ஃபஜல் கான் ஆகிய அமீர் களுக்கு முற்றிலும் நிதி, நிர்வாகம் ஆகிய பணிகளே அளிக்கப் பட்டிருந்தன. சில சமயங்களில் மன்சப்தார்கள் ஒரு பணியி லிருந்து வேருெரு பணிக்கும் மாற்றப்பட்டனர். அஷ்ரஃப் கான் என்பவர் தாரா ஷுக்கோவின் கீழ்ப் பக்ஷியாகப் பணியாற் றினுர். ஔரங்கசீபின் ஆட்சியில் இவர் காஷ்மீரின் ஆளுநராக நியமிக்கப்பட்டார். ரூஹுல்லா கான் என்பவர் படிப்படியாகப் பக்ஷியாகவும், ஃபவுஜ்தாராகவும், கடைசியில் ஒரிசாவின் ஆளுநராகவும் பதவி உயர்வைப் பெற்றிருந்தார். மாகாண ஆளுநராகப் பணியாற்றியவர்கள், பொதுவாக 3000 அந்தஸ் துள்ள நிலையிலிருந்து 7000 வரையிலான அந்தஸ்து நிலை வரை நியமிக்கப்பட்டனர். 500-லிருந்து 3000 வரை பெற்றி ருந்தவர்கள் ஃபவுஜ்தார்களாக நியமிக்கப்பட்டனர்.

இது ஒருபுறமிருக்க, பதவி நீக்கம் நடைபெறுவதும் உண்டு. அரச ஆணைகளை மீறியவர்களும், சட்டப்படி நிர் வாகத்திற்குத் தேவையான துருப்புகளை வைத்துக் கொண்டு பராமரிக்காமல் ஏமாற்றி வந்தவர்களும் தயவு தாட்சணியம் இன்றியும், மத வித்தியாசம் பாராட்டப்படாமலும் நீக்கப்பட்டு வந்தனர். குறிப்பாக, ஒழுக்கம் தவறியவர்களும் குடியில் ஆழ்ந் திருக்கும் மன்சப்தார்களும் தண்டிக்கப்பட்டனர். 1670, 1672, 1682, 1701, 1703, 1704 ஆகிய ஆண்டுகளில் பலப் பலரைப் பேரரசர் தண்டித்ததாக வரலாற்றுக் குறிப்புகள் கூறு கின்றன. ஆனுல், ஔரங்கசீப் பொதுவாகவே தண்டனையில் நம்பிக்கை இல்லாதவர் என்று காஃபீ கான் கூறிய கூற்றை நாம்

20

முன்பே பார்த்து விட்டோம். முற்றிலும் தண்டித்தார் என்றும் கூறிவிட முடியாது; சில சமயங்களில் கண்களை மூடிக் கொண்டதும் உண்டு என்கிறூர் டாக்டர் அத்தர் அலீ. ஆனால், இதே மன்சப்தார்களின் கரங்களில்தாம் உள்நாட்டு, வெளிநாட்டு வாணிக வளர்ச்சி அடங்கி இருந்தது. வாணிகத்தின் நசிவுக்கும், நிர்வாக இயந்திரத்தின் முறிவுக்கும் இவர்களே பொறுப்பு ஏற்க வேண்டும். ஏனெனில், 'முகலாய ஆளும் வர்க்கத்தினர் எல்லை கடந்த குறுகிய பார்வையை உடையவர்கள்; அவர்களின் சுய நலன்கள் வருங்காலத்தின் ஆபத்துகளிலிருந்து கண்களை மறைத்தன.' எனவே, S. J. ஓவன், வில்லியம் இர்வின், டாக்டர் அத்தர் அலீ, டாக்டர் அஹ்மத் சித்தீகி போன்ற அறிஞர்கள் சுட்டிக் காட்டி இருப்பது போன்று முகலாயப் பேரரசு சீர் குலைவதற்கும் வீழ்ச்சியடைவதற்கும் பேரரசரின் மதக்கொள்கையைவிட, அவருடைய மன்சப்தாரி முறையும், கலப்பு இராணுவமும்தாம் காரணமாகும்.

**ஔரங்கசீபின் ஆட்சியில் பொது ஊழியத்தின் நிறை குறைகள்**

முதலாவதாக, பொதுவாகவே முகலாயப் பேரரசர்களின் ஆட்சியில், அதிலும் குறிப்பாக ஔரங்கசீபின் ஆட்சியில், இந்திய முஸ்லிம்களை விட, இந்துக்களை விடப் பாரசீகர்களின் ஆதிக்கமே ஓங்கியிருந்தது. பாரசீகர்களின் செல்வமும் செல்வாக்கும் பிற இனங்களை, மதங்களைச் சார்ந்த மக்களைவிட மிகவும் அதிகமாகவும் உயர்வாகவும் இருந்ததால், தேசியப் பொது ஊழிய நிர்வாகம் (Public Services) என்ற பொதுவான இலக்கணத்திற்கு ஔரங்கசீபின் நிர்வாகம் உகந்ததாக இல்லை. எண்ணற்ற பத்தாணியர்களும், அரேபியர்களும், ஆப்பிரிக்கர்களும் நம் நாட்டில் வேலையைத் தேடி வந்து உயர் பதவிகளில் அமர்ந்த பொழுது, இந்திய மக்களிடையே பெரும் தப்பெண்ணத்தையும், பொருமைத் தீயையும் வேலை வாய்ப்புகளில் வளர்த்து விட்டன. நூற்றுக்கணக்கான இந்துக்களும், இந்திய முஸ்லிம்களும் உயர் மன்சப்தார்களாகவும் பொதுப் பணிவிடையாளர்களாகவும் பணிபுரிந்து வந்தாலும், அவர்களுக்குரிய சிறப்பான இடங்கள் அளிக்கப்பட்டு வந்தன என்று கூறிவிட முடியாது. இதனுலும், அவர்களின் விசுவாசமும் நன்றியுணர்ச்சியும் மாறிக் கொண்டிருக்க ஏதுவாயின.

இரண்டாவதாக, பொது ஊழியம் புரிகின்றவரின் தனித் திறமையும், சிறப்பான பணியும், தகுதியுமே அவருக்குரிய பதவி உயர்வு, சம்பளம் ஆகியவற்றிற்கு அடிப்படையாக

இருந்த போதிலும், மேல் பதவி உயர்விற்குப் பேரரசரே ஓர் அளவிற்கு நேரடியான பொறுப்பேற்று நடத்தி வந்ததால், இது பொது ஊழியத்தை ஓரளவுக்குப் பாதித்தது என்று கூடச் சொல்லலாம். எவ்வாறெனில், சில சமயங்களில் உயர்பதவியை எதிர்பார்த்து அது கிடைக்காத நிலையில், மன்சப்தார்களிடையே குழப்பத்தையும் கலக மனப்பான்மையையும் விசிறி விடுவதற்கு இது ஏதுவாயிற்று. எவ்வாருயினும், தகுதியும் திறமையுமே பொதுப் பணிவிடையாளரின் தேர்வுக்கும் பதவி உயர்வுக்கும் அடித்தளமாக அமைந்தன என்ருல், அது மிகையாகாது. எனினும், சிலச் சில சமயங்களில் மத்திய அரசில் வக்கீலாகவோ திவானுகவோ பணியாற்றி வந்தவர் மாகாணத்திற்குத் திவானுகவோ சதர் ஆகவோ நியமிக்கப்பட்டுப் பதவிக் குறைப்புக்கு ஆளாகி விடுவதும் உண்டு. இம் மாதிரியான குறைபாட்டிற்கு அடிப்படைக் காரணம் என்னவெனில், ஔரங்கசீபின் ஆட்சியில் மத்திய அரசின் பொதுப் பணிவிடையூழியம் என்றும், மாகாண அரசின் பொதுப்பணிவிடையூழியம் என்றும் பாகுபாடு செய்து பிரித்து வைக்கப்படவில்லை.

மூன்ருவதாக, ஔரங்கசீபின் ஆட்சியிலும் பொதுப் பணிவிடை என்றும், இராணுவம் என்றும், நீதி நிர்வாகம் என்றும் பிரிவு செய்யப்படாமையால், குறிப்பிட்ட மன்சப்தாருக்குக் குறிப்பிட்ட பணிதான் என்று எதுவும் நிர்ணயிக்கப்படவில்லை. இதனுல் பொதுவான நிறையாக எல்லோருமே நாட்டைக் காக்கும் பணியில் ஈடுபட்டாலும், பிறநாட்டவர்களின் எண்ணிக்கை பொது ஊழியத்தில் பெருகிக் கிடந்தமையால், நிர்வாகமும் நாட்டின் பாதுகாப்பும் பாதிக்கப்படுவதுண்டு. இளவரசர்களான ஆஜம், முஅஜ்ஜம், அக்பர் முதலியோரும், ராஜா ஜெய் சிங், ஜஸ்வந்த் சிங் ஆகியோரும் பிரதமத் தளபதிகளாகவும், மாகாண ஆளுநர்களாகவும் மாறி மாறிப் பணியாற்றியுள்ளனர். தக்காணத்தில் ஆளுநராக இருந்தவர், அஸ்ஸாமிற்குப் பிரதமத் தளபதியாக நியமிக்கப்படுவதுண்டு. ஆகவே, குறிப்பிட்ட பணியிலிருந்து தொடங்கி, அதே அமைப்பிற்குள் மேலும் மேலும் உயர்பதவிகளை எட்டிப்பிடித்து, ஓய்வு பெற்ற பின்னர் ஓய்வுத்தொகை பெறுதல் என்பனவெல்லாம் இக்கால வழக்கே ஒழிய, இவை போன்ற முறைகள் 17ஆம் நூற்ருண்டில் இருந்திருக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பது தவருகும்.

நான்காவதாக, பொதுப்பணியாளர்களுள் உயர் மட்டத்தில் இருப்பவர்கள் இருவகையினராகப் பிரிக்கப்பட்டு, ஒரு சாரார் பேரரசரின் அவையிலும், மற்ருெரு சாரார் மாகாணங்

களின் அரசுகளிலும் பணியாற்றினர். அரசவையில் இருக்கும் பொதுப்பணி யூழியர்களின் சுமைகள் மிகவும் குறைவாகவே இருந்தன. ஆனல், அவர்கள் பயனடைந்துவந்த செல்வாக்கும், செல்வமும், பொறுப்புகளும் மிகவும் அதிகம். எனவே, பொது ஊழியத்தைப் பொறுத்த வரை, இரண்டு 'ஆட்குறிப்புப் பதிவேடுகள்' (muster rolls) இருந்தன. ஒன்று, பேரரசரைச் சுற்றியிருக்கும் தலைமைப் பீடத்தில் பணியாற்றி வந்த ஊழியர்களைப்பற்றியது; மற்ருென்று, நாடு முழுவதிலும் பணியாற்றி வந்த பொதுப்பணி யூழியர்களைப்பற்றியது. எவ்வாறிருந்த போதிலும், தலைமை அரசில் பணியாற்றி வந்த பொதுப் பணி யூழியர்களுக்குச் செல்வாக்கு அதிகமிருந்தமையால், மாகாணங்களில் பணியாற்றி வந்த பணியாளர்கள் முன்குறிப்பிட்ட சாராரைக் கண்டு பொருமை கொள்ளலாயினர். இதனுலும் நிர்வாகத்தில் குழப்பம் தோன்றலாயிற்று.

ஐந்தாவதாக, பொதுப்பணியாளர்கள் அனைவருக்கும் உரிய ஊதியம் ஜாகிர் நிலமாகவும் ரொக்கப் பணமாகவும் அளிக்கப்பட்டு வந்தமையால் பொதுப்பணியாளர் ஒவ்வொருவருக்கும் தமது அரசியல், அரசாங்கக் கடமைகள் மட்டுமன்றி, தமக்கே உரிய சொந்தக் கடமைகளும் காலப் போக்கில் பெரும் சுமையாகவே அதிகரித்து வரலாயின. தங்கள் ஜாகிர் நிலங்களைப் பராமரிக்க இந்த மன்சப்தார்கள் தம்முடன் வாழ்ந்து வரும் பிற மக்களின் தயவையும், உழவர்களின் தயவையும் நாடியிருக்க வேண்டியிருந்தது. சிற்சில சமயங்களில் பதவி உயர்வு அல்லது வேறு காரணத்தால் அவர்கள் பிற இடங்களுக்கு மாற்றப்பட்டால், ஏற்கெனவே அவர்கள் அனுபவித்து வந்த நிலங்களின்மீது இருந்த பிடிப்பும் பற்றுதலும் குறைந்து வருவது இயற்கையாகவே அமைந்து விட்டது. எனவே, மாற்றம் ஏற்படுவதைத் தவிர்க்க முடியாததால், பொதுப்பணியில் கவனமும், நேர்மையும், திறமையும் பொதுப் பணியாளர்களுக்குக் குறைந்து வரலாயின. இதனல், பேரரசின் மத்திய நிர்வாகம் பாதிக்கப்பட்டு வந்தது.

ஆருவதாக, பொதுப்பணியில் தேர்வு முறை, பதவிக் காலம், ஓய்வுத் தொகை, பதவி நீக்கத்திற்குக் காரணம் ஆகியவைபற்றித் திட்டவட்டமான சட்டமோ, நெறிமுறைகளோ எதுவும் நிர்ணயிக்கப்படாமையால் பொதுப்பணியில்உட்பூசல்கள் பெருக ஆரம்பித்தன. இதனல், பரஸ்பரத் தப்பெண்ணங்கள் பெருகத் தொடங்கி, பொதுப்பணியையே பெரிதும் பாதித்து விட்டன. பொதுவாக, மேற்குறிப்பிட்ட குறைகளைக் கொண்ட மன்சப்தாரி முறைதான் ஔரங்கசீபின் பேரரசு வீழ்வதற்கு முக்கியக் காரணங்களுள் சிறந்த காரணமாக அமைந்தது.

# 18. ஔரங்கசீபின் மதக் கொள்கை

**இங்கிலாந்தில் சமயநிலை :** ஔரங்கசீபின் மதக் கொள் கையை அறிவதற்கு முன்பாக, இங்கிலாந்தின் சமயநிலையைப் பார்ப்பதும் இங்குப் பொருத்தமுடையதாகும். இங்கிலாந்தின் பெருமன்னர் 8ஆம் ஹென்றி தொடக்கத்தில் கத்தோலிக்க மதத்தைச் சார்ந்திருப்பினும், தம் சொந்த நலன்கள் காரண மாகச் சமயச் சீர்திருத்தத்தை விழைந்தார். அவருடைய சீர் திருத்தம் 'போப் ஆண்டவர் இல்லாத கத்தோலிக்க மதம்' என்று கூறப்பட்ட போதிலும், எட்டாம் ஹென்றி மடங்களுக் குரிய சொத்துகளை அபகரித்ததும், அவற்றுள் பலவற்றை அழித் ததும், க்த்தோலிக்கர்கள்பால் வெறுப்பை வளர்த்ததும், அரசரின் மதமே மக்களின் மதமெனத் தம் மதக் கொள்கைகளை அவர்க்ளின்மீது திணித்ததும் நம் மனத்தை விட்டு அகலா. 8ஆம் ஹென்றி நுழைத்த, வற்புறுத்திய வழிபாட்டு நூல் மக் களின்மீது திணிக்கப்பட்டதும் அன்றி, அக்காலத்திய பெரும் பான்மையான கத்தோலிக்கர்களுக்கு நேர் எதிராக இருந்தது என்பதையும் நாம் மறந்துவிடல் ஆகாது.

ஆனால், 6ஆம் எட்வர்டோ சாமர்சட், நார்த்தம்பர்லாந்து ஆகியோரின் கைப்பாவை யாகி, தம் பிராட்டஸ்டண்ட் கருத்தைத் திணித்தார். ஸ்பெயினின் இரண்டாவது பிலிப்பைத் திருமணம் செய்து கொண்ட இராணி மேரி எல்லாவற்றுக்கும் மேலாக பிராட்டஸ்டண்ட்டுகளைக் கொன்று குவித்து, தம் கரங் களில் இரத்தக் கறையைப் படியச் செய்தார். அவர் ஒரு பிராட்டஸ்டண்ட்டையும்கூட ஸ்பெயினில் விட்டுவைக்க வில்லை. அவர் தம் கரங்களைப் பிராட்டஸ்டண்டின் இரத்தத்திலேயே கழு வினர் என்றால் அது மிகையாகாது.

ஆனால் மாறாக, பேரரசர் ஔரங்கசீப் டூடர் (Tudor) மன்னர்களைப் போன்று கொடுமையாகவோ, அரக்கத்தனத்

தோடோ, முற்றிலும் நீதி நேர்மையின்றியோ, அறத்தைப் புறக் கணித்தோ, தகாத முறைகளிலோ தம் மக்களிடம் நடந்து கொண்டதில்லை; தம் வழிபாட்டுப் புத்தகத்தைத் திணிக்க வில்லை; மடங்களை அபகரிக்க வில்லை. பெர்ஸீவல் ஸ்பியர் கூறியது போன்று, 'ஷாஜஹான் அதிகமாக மிகைபடுத் தியே புகழப்பட்டிருப்பாரேயானால், அவருடைய மகன் ஒளரங்கசீப் மிகவும் அதிகமாகவே வேண்டாத அளவுக்கு இகழப்பட்டுள்ளார்.'[1] இது முற்றிலும் உண்மை என்பதை ஆராய் வோர் அறிவர். இவ்வாறு ஒளரங்கசீப் பல அறிஞர்களின் கண் டனத்திற்கு ஆளாவதற்குரிய காரணம், இந்தியர்கள் தாங்கள் முழுக்க முழுக்க ஆதரித்த தாரா ஷுக்கோ ஷாஜஹானுக்குப் பிறகு ஆட்சிக்கு வருவார் என எதிர்பார்த்தனர். தாரா அகற்றப் பட்டார். சந்தர்ப்பமாக, அவர் போற்றிய, ஆதரித்த பெர்னி யரும், ஒளரங்கசீபின் உருவத்தைக் கண்டே வெறுப்படைந்த மனுச்சியும் உண்மை நிலைக்கு மாறான செய்திகளை விட்டுச் சென்றனர். அன்றிலிருந்து அந்தத் தவறான விவரங்களை நாம் மெய்யென்றே மரபாக நம்பி வருகிறோம்.

**ஒளரங்கசீபும் ஃபிரான்ஸ் நாட்டுப் பதினான்காம் லூயியும்:** ஈண்டு ஒளரங்கசீபின் ஏககாலத்தவரான 14ஆம் லூயியைப் பற்றிப் பார்ப்போம்.

இவ்விரு பேரரசர்களும் ஒரே சமயத்தில் வாழ்ந்தவர்கள். ஆனால் குண நலன்களில், சமயச் சகிப்புத் தன்மையில், பொது ஆற்றல்களில் இவர்கள் மாறுபட்டவர்கள். 14ஆம் லூயி ஆடம் பரப் பிரியர்; ஒளரங்கசீப் எளிமையான வாழ்க்கையை மேற் கொண்டவர். ஃபிரான்சின் மாமன்னர் எந்நேரமும் தம்மை மக்கள் புடைசூழ்ந்து நிற்கவேண்டுமென விரும்பியவர்; ஒளரங்கசீபோ அரசியல் அலுவல்களைத் தாமே நேரில் பார்த்து முடிவு எடுக்கக் கூடியவர். 14ஆம் லூயிக்கு அரசு என்பது வணிகம், தொழில் போன்றதொரு பொறுப்பு; ஒளரங்கசீபுக்கு அரசு என்பது இறைவனால் ஒப்படைக்கப்பட்ட 'அமானிதம்' அல்லது பொறுப்பு — ஓர் அன்பளிப்பு. மதக்கொள்கைகளைப் பொறுத்தவரை 14ஆம் லூயி மனமார எல்லைக்கு அப்பால் சென்று மக்களைத் துன்புறுத்தத் தயங்கவில்லை. அவர் மக்க ளிடையே பிளவை ஏற்படுத்தினார். ஆனால், ஒளரங்கசீபைப் பொறுத்தவரை, தாம் பின்பற்றிய மதம் மனமார எல்லையை மீறு வண்ணம் தடுக்கிறது என்பதை அறிந்திருந்தார்.

[1] Percival Spear—History of India, Vol. II, Pelican Edn, 1970.

14ஆம் லூயீ கத்தோலிக்க மதத்தைச் சார்ந்திருந்ததனுல் நவாரேயின் 4ஆம் ஹென்றி அளித்த நான்டீஸ் (Nantes) ஆணையைக்கிழித்தெறிந்து, தம்நாட்டில்வாழ்ந்துவந்த ஹியூகனோக்கள் எனப்படும் பிராட்டஸ்டண்ட்டுகளை நாட்டை விட்டே விரட்டினுர். இவர் காண்பித்த சமயச் சகிப்பற்ற தன்மையின் காரணமாகப் பிராட்டஸ்டண்ட்டுகள் ஃபிரான்ஸைத் துறந்து, இங்கிலாந்திலும், ஹாலந்திலும், வேறு பல நாடுகளிலும் குடியேறினர். ஆனுல், வழக்கமாகக் கூறப்படும் குற்றச்சாட்டுக்கு மாருக, ஔரங்கசீபிடம் பல இந்து மன்சப்தார்கள் பணியாற்றினர். அவர்களை இவர் துன்புறுத்தவில்லே. அவர்கள் தங்கள் மதத்தைப் பின்பற்ற உரிமை பெற்றிருந்தனர்; வணக்க உரிமையும் சொத்துரிமையும் பெற்றிருந்தனர். ஆகவே, 14ஆம் லூயீயைப் போன்று ஔரங்கசீப் உண்மையில் அத்துணைக் கொடுமையாக நடந்துகொள்ளவில்லே.

**தவருன பார்வை:** முகலாயப் பேரரசுடன் இராஜபுத்திரர்கள் முற்றிலும் இணக்கமாவதற்கு முன்பும் பின்பும் பேரரசர் அக்பர் இராஜபுத்திரர்கள்மீது போர் தொடுத்தால், அத்தகைய போர்களைப் பேரரசின் விரிவாக்கத்திற்காகத் தொடுக்கப்பட்ட தற்காப்பெனக் கருதுகிருேம்; அதே வகையான போர்களை ஔரங்கசீப் தொடுத்தால், குறுகிய மதப்பற்றுக் காரணமாகத் தொடுத்ததாக இவர்மீது குற்றஞ்சாட்டுகிருேம். அக்பரை எதிர்த்துத் தோன்றிய கலகங்களை அவர் அடக்கினுல் அது முற்றிலும் நியாயமானதே என்கிருேம்; ஔரங்கசீபை எதிர்த்து ஜாத்துகளும் சத்னுமியர்களும் கலகங்களை விளைவித்தபோது அவற்றை இவர் அடக்க முயற்சி எடுத்தால், எதிரிகள் புரிந்த குழப்பங்களுக்குத் 'தேசிய எழுச்சி' என்ற போர்வையையும் நிறத்தையும் நாம் அளிக்கிருேம். அக்பர் பிரயாணிகளின்மீது வரியை நீக்கினுல், அதைப் புகழ்ந்து பாராட்டுகிருேம்; அதையே ஔரங்கசீப் செய்ய முற்பட்டால், நடைமுறையில் அது செயல்படுத்தப்படவில்லே என்று தட்டிக்கழிக்கின்ருேம். அக்பர் அஹமதுநகரின் சாந்த் பீபியைக் கொன்று நாட்டையும் கோட்டையையும் கைப்பற்றினுல், அதைப் பேரரசரின் புகழை நிலைநாட்டும் வெற்றிகளுள் ஒன்று எனக் கருதுகிருேம்; ஆனுல், பீஜப்பூரும் கோல்கொண்டாவும் உடன்படிக்கைகளை மீறிய காரணத்தினுல் ஔரங்கசீப் அவற்றின்மீது போர் தொடுத்தால் 'ஸுன்னீ' (ஸுன்னத் ஜமாஅத் — Sunnath Jamaath) மதப் பிரிவைச் சேர்ந்த ஔரங்கசீப், பீஜப்பூரும் கோல்கொண்டாவும் 'ஷீஆ' (Shia) பிரிவைச் சார்ந்திருந்ததனுல் அவற்றின் மீது அநியாயமாய்ப் போர் தொடுத்தார் எனக் குற்றம் பாராட்டு

கிறோம். பேரரசர் அக்பர் போருக்குச் சென்ற மாளவ, குஜராத் மன்னர்களும், அஹமதுநகரச் சாந்த்பீபீ இராணியரும் அதே ஷீஆப் பிரிவைச் சார்ந்திருந்தவர்களே என்பதை நாம் நினைத்துப் பார்ப்பதில்லை. புதிய மதமொன்றை அல்லது புதிய தத்துவக் கோட்பாடொன்றைத் தோற்றுவிக்கக் கருதி, அக்பர் தாம் 'தீன் இலாஹி' என்னும் சமயத்தைச் சார்ந்திருந்ததாகக் கூறிக்கொண்டு, இஸ்லாமிய சமயத்திற்கு அருவருப்பூட்டும் நேர் எதிரான நடவடிக்கைகளை எடுத்தால் அவரை நாம் போற்றுகிறோம்; அவ்வாறு இஸ்லாத்திற்கு எதிராக நடந்து கொண்டதனால் (அக்பர்) பேரரசருக்கு ஆபத்து இல்லை என்னும் கூற்றைக் கண்டு தாம் ஆச்சரியம் அடைந்ததாக மான்சர்ரேட் (Father Monserrate) கூறினால்,[1] அவர் கிறித்துவ மதத்தைப் பேரரசிடம் விலைக்கு விற்க எடுத்த முயற்சியில் தோற்றுவிட்டார்; அதனால்தான் அவ்வாறு கூறியுள்ளார் என்று சொல்கிறோம். அக்காலத்திய வரலாற்று அறிஞர் பதௌனி (Badauni) மேற்கோள்கள் காட்டி, எல்லாக் காரணத்தையும் திரட்டிப் பார்க்கும்பொழுது, அக்பர் தாம் பின்பற்றியதாகக் கூறிக்கொண்ட இஸ்லாமிய மதத்திற்கு நேர்முரணாக நடந்து கொண்டார் என்று கூறினால், பதௌனி குறுகிய மதப்பற்றும், தன்னலமும் கொண்டு குறைகற்பித்து இருப்பதாகப் பறைசாற்றுகிறோம். வின்சென்ட் ஸ்மித் 'நிச்சயமாக அக்பர் ஓர் இஸ்லாமியர் என்ற தன்மையை இழந்துவிட்டார்' என்று கூறினால், இவர் ஐரோப்பியக் கண்கொண்டு பார்ப்பதாக இவர்மீது குறை கூறுகிறோம். அக்பரைப்பற்றிப் பதௌனி குறை கூறினால், ஏற்க மறுக்கிறோம்; அதே நேரத்தில் ஔரங்கசீபைப் பெர்னியரும் மனுச்சியும் குறை கூறினால் ஏற்கிறோம். 'மஆஸிரெ ஆலம்கீரி'யின் ஆசிரியர் ஔரங்கசீபை வானளாவ வீணே புகழ்பாடித் துதிப்பதாக நாம் கற்பித்து, அம் 'மிகைபடுத்தப்பட்ட கற்பனைக் கூறுகளை'யே ஔரங்கசீபுக் கெதிராக நாம் பொருத்திவிட்டுவிடுகிறோம்.

**குறுகிய எல்லைக்கு அப்பால் :** சிவாஜியின் எழுச்சியின் காலத்தையும், ஔரங்கசீப் ஆட்சியில் அமர்ந்த காலத்தையும் நாம் மறந்து விடுகின்றோம். உண்மையை மறந்த பற்று மிகுதியால், நாம் சில நேரங்களில் சமய வேற்றுமை உணர்வு கொண்டு, ஔரங்கசீபின் மதக் கொள்கைகளினால்தாம் எல்லோரும் எழலாயினர் என்கின்றோம். வீரர் சிவாஜியின் எழுச்சியினால்தான் ஔரங்கசீபின் பேரரசு சீர்குலையத் தொடங்கும் முதற் கட்டத்தை எட்டிப் பிடித்தது என்பதை நாம் மறந்து விடு

[1] V.A. Smith, 'Akbar the Great Moghul'; also, Shelat, 'Akbar the Great'.

கிறோம்; சிவாஜியின் வெற்றிகரமான எழுச்சியினால்தான் பந்தல் கந்தின் சத்ரசாலின், சத்னாமியர்களின், ஜாத்தியரின் கலகங்கள் எழுந்தன என்பதையும் மறந்துவிடுகிறோம்; நேர்மாறாக, ஔரங்கசீபின் மதக்கொள்கையே அவற்றுக்கெல்லாம் காரணம் என மீண்டும் மீண்டும் தவறான முடிவுக்கு வருகிறோம். எனவே, நாம் உற்றுப்பார்க்கும் கோணம் மாறவேண்டும். உண்மை என்னவெனில், ஔரங்கசீபும் அக்பரைப் போல் ஓர் அரசியல் வாதியே; அரசியல் ஞானியே. ஔரங்கசீபின் பிரச்சினைகளை ஆராயும்போது, இப் பேரரசருக்கும் அரசியல், மதம் ஆகிய இரு கோணக் குறிக்கோள்கள் இருக்கவேண்டும் என்பதை நாம் நினைத்துப் பார்ப்பதில்லை. காரணம், ஔரங்கசீப் தாம் பின்பற்றியதாகப் பாராட்டிய, உயர்வாக மதித்த அவருடைய மதம் இந் நாட்டின் பொதுச் சமயத்திற்கு நேர் மாறானது, முரணானது என்ற கருத்துப் பல நூற்றாண்டுகளாகப் பரவி வேரூன்றிவிட்டிருக்கிறது. இதுதான் உண்மை. ஔரங்கசீப் இஸ்லாமிய சமயக் கருத்துகளுக்கு இணக்கமாக, ஆனால் அதே நேரத்தில் நேர்மை குறையாது, நீதிமிக்க ஆட்சிபுரிய முயன்றார். இதைத் திரித்து, அவர் மக்களைக் கொடுமைப்படுத்தினார், துன்புறுத்தினார், அல்லது குறுகிய மதப்பற்றை மோதவிட்டார் என்றோ, முற்றிலும் சமயச் சகிப்புத் தன்மை அற்றவர் என்றோ அவர்மீது கற்பித்துவிடுவது நயவஞ்சகமிக்க ஒரு தீர்ப்பாகும். ஔரங்கசீபுக்கும் சிவாஜிக்கும் இடையே நிலவிய அரசியல் தொடர்பு ஒன்றே ஔரங்கசீப் மத அடிப்படையில் அரசியல் பிரச்சினைகளை அணுகவில்லை என்பதைப் புலப்படுத்தும்.

(1) சிவாஜியும் சாம்பாஜியும் ஆக்ரா செல்லுவதற்குப் பேரரசர் ஔரங்கசீப் ஓரிலட்சம் ரூபாயை அளித்தார். (2) ஆக்ரா அவையில் சிவாஜி மூர்ச்சையாகி விழுந்ததும், பேரரசர் அன்பும் இரக்கமும் காட்டித் தகுந்த மரியாதை செய்து கவனிக்குமாறு உத்தரவிட்டார். சிவாஜிக்கு ஜெய் சிங் அளித்த வாக்குறுதியை நினைவில் வைத்துக்கொண்டு, சிவாஜி, அவருடைய மகன், மருமகன் ஆகியோருக்கு எல்லாம் (ஒவ்வொருவருக்கும்) 5000 'ஜாத்' என்னும் அமீர்ப் பதவியை ஔரங்கசீப் வழங்கினார். சிவாஜியின் சூரத் கொள்ளைக்குப் பின்னும் ஆக்ராவில் ஔரங்கசீப் பெருந்தன்மையுடன் நடந்துகொண்ட விதமே ஔரங்கசீபின் அரசியல் பிரச்சினைகளில் மதம் குறுக்கிடவில்லை என்பதை நிரூபிக்கின்றது. (3) சிவாஜியின் எழுச்சியின் தன்மையை அறிந்திருந்தும், அவரை ஒரு மன்னராக அங்கீகரிக்க வேண்டும் என்று ஜஸ்வந்த் சிங் பரிந்துரைத்ததன் பேரில், சிவாஜியை 'ராஜா' என்றும் ஔரங்கசீப் ஏற்றார். இதனால் தம்

பேரரசுக்கே பேராபத்து விளையக்கூடும் என்று அறிந்தும் இவர் அவ்வாறு செய்திருப்பாரா? அப்படியும் இவர் அங்கீகரித்தார் என்றால், அரசியல் பிரச்சினையில் அனேகமாக ஜஸ்வந்த் சிங்கின் பரிந்துரை பெரிதும் உதவக்கூடும் என்றும், சிவாஜியை ஓரளவுக்குக் கட்டுப்படுத்தக்கூடும் என்றும் இவர் ஆராய்ந்து ஒரு முடிவுக்கு வந்திருக்கவேண்டும். இப் பிரச்சினையில் ஔரங்கசீப் குறுகிய மதப்பற்றுடன் நடந்து கொள்ளவில்லை. 1668ஆம் ஆண்டில் ஔரங்கசீப் சிவாஜியை 'ராஜா' என ஏற்றுக்கொண்டார். சிவாஜி மீண்டும் 1670ஆம் ஆண்டில் சூரத் நகரைச் சூறையாடினார். ஔரங்கசீபின் அங்கீகாரம் 1674ஆம் ஆண்டில் முடிசூட்டு விழாவுக்குத் துணைபுரிந்தது. (4) மத வேற்றுமை குறுக்கிட்டு இருக்குமேயானால், ராம் சிங்கையும் ஜஸ்வந்த் சிங்கையும் ஔரங்கசீப் கடுமையாகத் தண்டித்திருக்க வேண்டும்; சிவாஜிக்கும் நயவஞ்சகமாக அப் பேரரசர் ஆக்ராவிலேயே பேராபத்தை உண்டுபண்ணிவிட்டிருக்க வேண்டும். எனவே, ஔரங்கசீபைப் பொறுத்தவரை, மதம் என்னும் எல்லைக்கோடு மிகக் குறுகிய ஒரு வரம்பாகும். ஔரங்கசீப் இதற்குள் அகப்பட்டுச் சிக்கிக்கொண்டு தவிக்க விரும்பவில்லை. (5) அப்படியே மதம் காரணமாக இந்துக்களைக் கொடுமைப் படுத்தவும் துன்புறுத்தவும் இவர் நினைத்திருப்பாரேயானால், 1689ஆம் ஆண்டில் (ஏழு வயதாகி யிருந்த) ஷாஹுவும் அவர் தாயாரும் கைது செய்யப்பட்ட பின்னர், ஷாஹு ஔரங்கசீபின் மகள் ஜீனத்துன்னிஸாவினால் (Zeenathunnisa) வளர்க்கப்பட்டிருப்பாரா? உண்மையில், ஔரங்கசீப் நினைத்திருப்பாரேயானால், ஷாஹுவை இஸ்லாமியராக மதம் மாற்றிவிட்டிருக்க முடியும்;[1] ஒருவருமே எதிர்த்திருக்க முடியாது; ஏனெனில், அப்பொழுது சிவாஜியும் சாம்பாஜியும் ராஜாராமும் மறைந்துவிட்டனர். (ராஜாராம் 1700-ல் மறைந்தார்.) எனினும், ஏழு வயதிலிருந்து, கால் நூற்றாண்டு கால அளவும் பேரரசர் ஔரங்கசீபின் அவையிலும், முகலாயர்களின் சுற்றுச் சார்புகளிலும் வளர்க்கப்பட்டும், ஷாஹு தம் இந்து மதத்தைச் சுதந்தரமாகப் பின்பற்ற அனுமதிக்கப்பட்டதிலிருந்து, ஔரங்கசீபின் தாராள மனப்பான்மை நன்றாக, தெளிவாகப் புரிகின்றது அல்லவா? ஷாஹுவை ஔரங்கசீப் மதம் மாற்றிட முயற்சிக்கவே இல்லை; மாறாக, அவ் விளவரசரை மராத்திய மண்டலத்தி

[1] ஔரங்கசீபுக்கு இஸ்லாத்தின் மீது இருந்த பற்றுக்கு ஈடான பற்றையே ஜீனத்துன்னிஸாவும் கொண்டிருந்தாள், எனவே, ஷாஹுவை அவ்விருவரும் தங்கள் பராமரிப்பில் ஹிந்துவாகவே வாழவிட்டார்களென்றால், இதனினும் சிறந்த சமயச் சகிப்புத் தன்மையை எங்குக் காண முடியும்? ஷாஹு 7000 தகுதியுள்ள பேரமீராகவும் விளங்கினார்.

லிருந்து பிரித்துத் தம்முடன் ஓர் இந்து நண்பராகவே வைத்துக் கொண்டார். எனவே, இதிலிருந்து ஔரங்கசீப் மதம் என்னும் குறுகிய எல்லைகளுக்கு அப்பாற்பட்டவர் என்பது நிரூபணமாகின்றதே!

அது மட்டுமன்றி, அக்பரின் அவையே போன்று, ஔரங்கசீபின் அவையிலும் எண்ணற்ற இந்துக்களும் பணியாற்றினர்கள். அக்பர் இராஜபுத்திரர்களுடன் நட்புறவு பாராட்டினர்; ஆனால், ஔரங்கசீப் அவர்களது வெறுப்பை ஈட்டிக் கொண்டார் என்று ஒரு மரபாகக் கூறப்படுகிறது. இராஜபுத்திரர்களுடன் நட்புறவு கொண்டிருந்த ஔரங்கசீப் அவர்கள்மீது போரெழுந்து சென்றது உண்மை. ஆனால், இது எப்பொழுது நிகழ்ந்தது என்பதை நாம் முன்னரே பார்த்துவிட்டோம். ஜஸ்வந்த் சிங் இறந்த மறுகணத்தில் அல்லாமல், (ஔரங்கசீபின் மைந்தரான) இளவரசர் அக்பர் இராஜபுத்திரர்களுடன் இணைந்துகொண்டு, தந்தையாகிய தம்மை எதிர்த்தே சதி செய்து வருகிறார் என்று உணர்ந்த பின்னர்த்தான் இப்பேரரசர் இராஜபுத்திர இராஜ்ஜியமான மீவாருக்குத் தலைவராக இருந்த துர்க்காதாசை எதிர்த்துப் போருக்குச் சென்றார். ஔரங்கசீப் பிற இராஜபுத்திர இராஜ்ஜியங்கள்மீது போருக்குச் செல்லவில்லையே! பேரரசர் அக்பர் இராஜபுத்திரப் பெண்ணைத் திருமணம் செய்து கொண்டிருந்தும், (ஆம்பரின் பீஹாரிமல் என்பாரின் மகளை 1567-ல் மணந்தார்) 1569-ல் ஷேக் சலீம் என்னும் மூத்தமகன் பிறந்துவிட்டிருந்தும், கலிஞ்சர், மார்வார், மீவார் ஆகிய இராஜபுத்திர இராஜ்ஜியங்களை எதிர்த்து அப்பேரரசர் போரிட வில்லையா? அதுபோலவேதான் 1679 வரை இராஜபுத்திரர்கள்மீது நட்புறவு பாராட்டி வந்தார் ஔரங்கசீப். இதற்குப் பல ஆண்டுகளுக்கு முன்பே ஜஸ்வந்த் சிங் நாணயமாகவும் தமக்கு விசுவாசமாகவும் நடந்து கொள்ளவில்லை என்பதை இப் பேரரசர் நன்கு உணர்ந்தேயிருந்தார். 'வாரிசு இல்லாத சொத்து இணைப்புச் சட்ட' (Law of Escheats)த்தின்படிதான் இவர் மீவார்மீது போரெழுந்து சென்றார் என்பதை முன்னரே பார்த்துவிட்டோம்.

**இந்துக்களின் எண்ணிக்கையை அதிகரித்தல் :** ஔரங்கசீபின் பணியில் பல இராஜபுத்திரத் தளபதிகள் இருந்தார்கள். அவர்களுள் ஜெய் சிங்கும், ஜஸ்வந்த் சிங்கும் மிகவும் குறிப்பிடத்தக்கவர்கள்; முன்வரிசையில் இருந்தவர்கள். ஔரங்கசீபுக்கு ஜெய் சிங்மீது அசைக்கமுடியாத நம்பிக்கை இல்லாமலிருந்தால், அவரை 1665ஆம் ஆண்டில் புரந்தர்க் கோட்டையைப்

பிடித்துச் சிவாஜியைக் கைப்பற்றிக்கொண்டு வருமாறு அனுப்பி இருப்பாரா? வடமேற்கு எல்லைப்புற மாகாணங்களுக்கும், அஸ்ஸாமுக்கும், தக்காணத்திற்கும் தாமே நேரிற் சென்று கவனிக்க வேண்டிய அரசியல் இராணுவ அலுவல்களுக்கு ஜெய் சிங்கை நம்பிக் காரியங்களை ஒப்படைத்திருப்பாரா? தம் மைந்தர்களான முஅஜ்ஜம், ஆஜம் ஆகியோரை விட, ஜெய் சிங்கை அதிகமாக நம்பி இருப்பாரா? அது மட்டுமின்றி, ஒளரங்கசீப் வம்சாவளி பூர்வமாகத் தாமே ஒரு பாதி இராஜபுத்திரர் என்பதையும் அவர் மறந்திருக்க முடியாது. ஆக அவரின் கீழ் ஜெய் சிங், ஜஸ்வந்த் சிங் மட்டுமன்றி, இன்னும் பல இராஜபுத்திரத் தளபதிகளும் இருந்தனர். உதாரணமாக, முகுந்த சிங் ஹாதா, ரத்தன் சிங், தயாள் சிங், ஜாப்லா, அர்ஜுன் சிங், சுஜன் சிங் சிசோடியா, கிராத் சிங், குமார் ராம் சிங், ராண் அமர் சிங், முக்கம் சிங், ஜாதவ் ராவ் ஆகிய இராஜபுத்திரர்களை மட்டுமன்றிப் பல மராத்தியர்களையும் இவர் தம் பணியில் நியமித்திருந்தார். 1679—1707 ஆண்டுகளில் மொத்தம் 182 இந்து மன்சப்தார்கள் இருந்தார்கள். அவர்களுள் 73 பேர் இராஜபுத்திரர்கள், 96 பேர் மராத்தியர்கள், 13 பேர் மற்ற இந்துக்களாவர். அது மட்டுமன்று; இந்துக்களுக்கு அக்பரும், ஜஹாங்கீரும், ஷாஜஹானும் அளித்த மன்சப்தார்ப் பதவியைக் காட்டிலும், ஒளரங்கசீப் அதிகமாகவே அச் சமயத்தினர்க்கு அமீர்களின் மன்சப்தார்களின் பதவியை அளித்தார். பேரரசர் அக்பரின் காலத்திலிருந்து பேரரசர் ஒளரங்கசீபின் ஆட்சிக் காலம் வரையில் நியமிக்கப்பட்ட 'அமீர் அக்பர்' 'அமீர் ஆஜம்'மன்சப்தார்கள்பற்றி அடுத்த பக்கங்களில் வரும் அட்டவணைகள் ஒளரங்கசீப் குறுகிய மதப்பற்று உடையவரா அல்லது அக் குற்றச்சாட்டுக்கு அப்பாற்பட்டவரா என்பதை விளக்கும்.

**ஒளரங்கசீப் ஆட்சியில் இந்திய முஸ்லிம் இராஜபுத்திர மராத்திய மன்சப்தார்களின் எண்ணிக்கைச் சதவிகிதம்**

**1658—1678**

| மொத்த முஸ்லிம்கள் | இந்திய முஸ்லிம்கள் | மொத்த இந்துக்கள் | இராஜபுத்திரர், மராத்தியர் |
|---|---|---|---|
| 381 | 65 | 105 | 98 |

**1679—1707**

| மொத்த முஸ்லிம்கள் | இந்திய முஸ்லிம்கள் | மொத்த இந்துக்கள் | இராஜபுத்திரர், மராத்தியர் |
|---|---|---|---|
| 393 | 69 | 182 | 169 |

## இந்து மன்சப்தார்கள் எண்ணிக்கையும் சதவிகிதமும்[1]

| மன்சப்தார் அந்தஸ்து | அக்பர் ஆட்சி | | ஷாஜஹான் ஆட்சி | | ஔரங்கசீப் ஆட்சி 1658-78 | | ஔரங்கசீப் ஆட்சி 1679-1770 | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | மொத்தம் | இந்துக்கள் | மொத்தம் | இந்துக்கள் | மொத்தம் | இந்துக்கள் | மொத்தம் | இந்துக்கள் |
| 7000-லிருந்து 5000 வரை | 7 | 1 | 49 | 12 | 51 | 10 | 79 | 26 |
| 4500-லிருந்து 2000 வரை | 10 | 1 | 88 | 22 | 90 | 18 | 133 | 36 |
| 2700-லிருந்து 1000 வரை | 17 | 6 | 300 | 64 | 345 | 77 | 363 | 120 |
| 900-லிருந்து 500 வரை | 64 | 14 | — | — | — | — | — | — |
| | 98 | 22 | 437 | 98 | 486 | 105 | 575 | 182 |

## மொத்தச் சதவிகிதம்

| | அக்பர் 1585 | ஷாஜஹான் 1628-58 | ஔரங்கசீப் 1658-78 | ஔரங்கசீப் 1679-1707 |
|---|---|---|---|---|
| 5000-லிருந்து 7000 வரை | 14·5 | 24·5 | 19·6 | 32·9 |
| 3000-லிருந்து 4500 வரை | 10·0 | 25·0 | 20·0 | 27·1 |
| 1000-லிருந்து 2700 வரை | 35·3 | 21·3 | 22·3 | 33·1 |
| மொத்தம் | 22·5 | 22·4 | 21·6 | 31·6 |

[1] Dr. M. Athar Ali, The Mughal Nobility under Aurangzeb, p. 31.

## 1658 - 1678 கால நிலவரம்

| அந்தஸ்து | மொத்த முஸ்லிம்கள் | இராஜபுத்திரர்கள் | மராத்தியர்கள் | வேறு இந்துக்கள் | மொத்த இந்துக்கள் | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|
| 5000க்கு மேல் | 41 | 6 | 3 | 1 | 10 | 51 |
| 3000-4500 | 72 | 11 | 6 | 1 | 18 | 90 |
| 1000-2700 | 268 | 54 | 18 | 5 | 77 | 345 |
| | 381 | 71 | 27 | 7 | 105 | 486 |

## 1679 - 1707 கால நிலவரம்

| அந்தஸ்து | மொத்த முஸ்லிம்கள் | இராஜபுத்திரர்கள் | மராத்தியர்கள் | வேறு இந்துக்கள் | மொத்த இந்துக்கள் | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|
| 5000க்கு மேல் | 53 | 5 | 16 | 5 | 26 | 79 |
| 3000-4500 | 97 | 15 | 18 | 3 | 36 | 133 |
| 1000-2700 | 248 | 53 | 62 | 5 | 120 | 368 |
| | 398 | 73 | 96 | 13 | 182 | 575 |

Dr. M. Athar Ali, The Mughal Nobility under Aurangzeb, p. 35.

டாக்டர் அத்தர் அலீ தமது நூலில் மிகவும் அரும்பாடு பட்டுத் திரட்டித் தந்திருக்கும் புள்ளி விவரங்கள், சத விகிதங்கள் ஆகிய யாவும் என்ன நிரூபித்துக் காண்பிக்கின்றன என்றால், பொதுவாக 'ஹிந்துக்களின் பரம எதிரி' என்று குற்றஞ் சாட்டப்படும் பேரரசர் ஔரங்கசீப் எக் காரணங் கொண்டும் தமது மன்சப்தார் பதவிகளையும், அமீர் பதவிகளையும் எந்தக் காலத்திலும் (1707இல் அவர் காலம் செல்லும் வரையில்) முஸ்லிம்களுக்கு மட்டுமே என்று ஒதுக்கி வைக்கவுமில்லை; ஹிந்துக்களை வெளியேற்றிவிடவோ, வேலை நீக்கம் செய்துவிடவோவும் இல்லை; மாறாக, மேலும் மேலும் ஹிந்து இராஜபுத்திரர்களுக்கும் மராத்தியர்களுக்கும் அப் பதவிகளை வழங்கிக் கௌரவித்து உயர்வுபடுத்தியே வந்திருக்கிறார் என்பதையும், பேரரசர் அக்பரைவிட இவர் அதிக அளவில் ஹிந்துக்களுக்குச் சலுகை வழங்கியிருக்கிறா ரென்பதையும் நன்கு நிரூபிக்கின்றன.

## சமமான ஏற்றுமதி வரிகள்

இனி, அடுத்து, வரிகளைப்பற்றிப் பார்ப்போம். 'அப்வாப்', 'பான்தாரி', 'ராஹ்தாரி' போன்ற பொது வகையான வரிகள் நீக்கப்பட்டமை ஒருபுறமிருக்க, (பக். 298-301 காண்க.) ஏற்றுமதி இறக்குமதி வரிகளைப் பொறுத்தவரையில், மதவித்தியாசத்தின் அடிப்படையில் இந்துக்களுக்கு ஒரு விதமாகவும், முஸ்லிம்களுக்கு வேறு விதமாகவும் அவை விதிக்கப்பட்டன என்று சில ஆசிரியர்கள் குறை கூறுகின்றனர். 1665ஆம் ஆண்டில் (ஏப்ரல், 10ஆம் தேதி) இந்துக்கள் இறக்குமதி செய்து வந்த பொருள்கள்மீது 5% வரியும் முஸ்லிம்கள் இறக்குமதி செய்து வந்த பொருள்கள்மீது $2\frac{1}{2}$% வரியும் அரச ஆணை மூலம் ஔரங்கசீப் விதித்ததாகக் கூறப்படுகின்றது. ஆனால், இதை 1667ஆம் ஆண்டில் நீக்கிவிட்டதாகவும், எனினும், இந்துக்கள் மீது இருந்த வரி மட்டும் நீக்கப்படவில்லை என்றும் அவர்கள் கூறுகின்றனர். ஆனால், 'ராஹ்தாரி' 'அப்வாப்' வகையைச் சேர்ந்த இந்த 'மஹ்சூல்' என்னும் சுங்க வரியும் (ஏற்றுமதி, இறக்குமதி அடங்கியது) சேர்ந்து நீக்கப்பட்டதென்று அறிஞர் சர்க்கார் தம் நூலின் பிற்பகுதியில் தாமே ஏற்கிறார். (ஃபர்மான், 1673ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 29ஆம் தேதி—காஃபீ கான் கூற்றின் அடிப்படையில். ஆதாரம், டாக்டர் அத்தர் அலீ—டாக்டர் N. M. சித்தீக்கி.) ஆகவே, உண்மை என்னவெனில், தோற்றத்தில் முஸ்லிம்களுக்குச் சலுகையாகவும் மத வித்தியாசம் காட்டப்பட்டிருப்பதாகவும் காட்சியளிப்பினும், முஸ்லிம்

கள் தாமாகவே செலுத்தக் கடமைப்பட்டுள்ள 2½% 'ஜக்காத்' (Zakat) என்னும் ஏழை வரியை ஔரங்கசீபின் அரசு முஸ்லிம்களிடத்திலிருந்து மட்டும் கட்டாயமாக வசூலித்து வந்தது. இது மொத்தத்தில் இந்துக்கள்மீது விதிக்கப்பட்ட 5% வரிக்குச் சமமாக இருந்து வந்தது. 2½% சுங்க வரியும், 2½% ஏழை வரியும் (ஜக்காத்) சேர்த்து மொத்தம் 5% முஸ்லிம்களும் கட்டி வந்தனர்—அல்லது கட்ட வேண்டி இருந்தது. அவ்வாருயின், முஸ்லிம் நிலக் கிழார்களுக்கு மட்டும் ஏழை வரி கிடையாதா? அவர்களிடத்திருந்து எவ்வாறு அது வசூலிக்கப்பட்டு வந்தது? வணிகர்களிடம் மட்டும் ஏழை வரியை வசூலிப்பானேன்? இறக்குமதி வரியில் மட்டும் ஏன் 2½% கழிக்க வேண்டும்? இவை போன்ற கேள்விகள் நமக்கு இயற்கையாகவே எழுகின்றன. ஆராய்ந்தால், உண்மை நிலை நன்கு புலனுகும். நில வரியைச் செலுத்துபவர்கள் அதிகமாகவே இருந்திருப்பர் போலும்! ஆனுல் நிலக் கிழார்களிடமிருந்து இவ் வரி வசூலிக்கப்பட்டது என மூல ஆதாரங்கள் சொல்லவில்லை. வணிகர்களைப் பொறுத்தவரையில்தான் இவ் வரியே ஒழிய, சமூகத்தின் பிற சாரார்களைப் பொறுத்த வரையில் அவர்களுக்கும் இவ் வரிக்கும் தொடர்பு எவ்விதத்திலும் இருந்ததில்லை. அது மட்டுமன்றி, 'முஸ்லிம்கள் தங்கள் சரக்குகளைச் சிறு சிறு பகுதிகளாகப் பிரித்துவிடுகின்றனர். இப் பழக்கத்தின் மூலமாக இந்துக்களின் சரக்குகளைத் தங்கள் பெயர்களிலேயே அனுப்புகின்றனர். எனவே, சட்டம் (ஷரீஅத்) விதித்த ஜக்காத் வரி செலுத்தப்படாமல் தவிர்க்கப்படுகிறது,' என்கிருர் காஃபீ கான். இதனை ஒட்டிப் பேராசிரியர் சர்க்காரும், 'இந்து வியாபாரிகள் முஸ்லிம்களின் உடந்தையுடன் தங்கள் சரக்குகளை முஸ்லிம்களின் பண்டங்கள் என்று கடத்தத் தூண்டுதல் இருந்தது; இதனுல் அரசுக்கு அதிக நட்டமே விளைந்தது' என்று கூறுகிருர். உண்மை இதுதான்: முஸ்லிம்கள் இந்துக்களைப் போன்றே 2½% சுங்க வரியும், 2½% ஜக்காத் வரியும் செலுத்த வேண்டி இருந்தது. இதிலிருந்து தப்பித்துக்கொள்ளவும், ஏமாற்றவும் முஸ்லிம் வியாபாரிகள் தம் 2½% வரியை இறக்குமதி வரியாக அளித்து, ஜக்காத் வரியைக் கொடுக்காமலே ஏமாற்றி வந்தனர். அதனுல்தான் காஃபீ கான் தெளிவாக 'ஜக்காத் வரி ஏமாற்றப்பட்ட'தெனக் கூறியிருக்கிருர். எனவே, இதனுல் அறியக் கிடக்கும் உண்மை என்னவெனில், ஔரங்கசீப் மத வித்தியாச அடிப்படை காரணமாக இந்துக்கள், முஸ்லிம்கள்மீது வெவ்வேறு விதமான வரியை விதிக்கவில்லை. அப்படியே இந்துக்கள்மீது வெறுப்புக் கொண்டு அவர் பாரபட்சமாக விதித்திருப்பாரேயானுல்,

அங்ஙனம் விதித்த 5% வரியை ஏன் இரண்டே ஆண்டுகளில் நீக்கினர்? அவ்வாருயின், (1666ஆம் ஆண்டில் சிவாஜி ஆக்ராவிலிருந்து தப்பிய பிறகு) இந்துக்கள்மீது மிகுந்த கோபம் கொண்டு, அவ் வரியைத் தொடர்ந்து நீடித்திருக்கவேண்டுமே? ஏன் அவ்வாறு தொடர்ந்து நீடிக்காமல், அதை 1667ஆம் ஆண்டில் மற்ருேர் ஆணை மூலம் நீக்கிவிட்டார்? ஏன் மீண்டும் 1682இல் முஸ்லிம்கள்மீது விதித்தார்? ஆனுல், சர்க்கார், காஃபீ கானின் ஆதாரத்தில், இந்துக்கள்மீது இருந்த வரி நீக்கப்படவில்லை என்று கூறினுலும், ஔரங்கசீப் ஆட்சிக்கால முழுதும் காஃபீ கானும் கூட இந்துக்கள் 5% வரிதான் கட்டி வந்தார்களா என்று தெளிவுபடுத்தவில்லை.

மற்ருேர் ஐயப்பாடும் எழுவது இயற்கை: அதாவது, முஸ்லிம்களுக்கு 2½% சலுகை இல்லையெனில், இந்துக்கள் தாங்கள் ஏற்றுமதி செய்யும் பொருள்களைச் சிறு சிறு பகுதிகளாக்கி அனுப்ப முஸ்லிம் வணிகர்களின் உதவியை நாடுவானேன்? உண்மையில், இந்துக்கள் முஸ்லிம்கள்மீது பொதுவாக விதிக்கப்பட்ட 5% வரியைக் கட்டுவார்கள், முஸ்லிம்கள் 2½% ஜக்காத் வரியையும் சேர்த்துக் கொடுப்பார்கள் என்று எதிர்பார்த்த பொழுது அவர்கள் ஏமாற்றுவதை ஔரங்கசீப் கண்டு கொண்டார்.

ஆக, பேரரசின் ஆட்சியில் வணிகர்கள் நிறைந்திருந்தனர். வணிகர்களுக்கு ஈடுகட்ட வரி என்பது ஒருபுறமிருக்கட்டும். ஆராய்ந்து பார்ப்பின், உண்மைநிலை என்னவெனில், முஸ்லிம் வியாபாரிகள் ஔரங்கசீபை அதிகமாகவே ஏமாற்றி வந்தனர். முஸ்லிம் வணிக நண்பர்கள் மூலம் இந்து நண்பர்களும் முஸ்லிம்களைப் போன்றே அரசாங்கத்தை ஏமாற்றி வந்தனர். எவ்வாறு முஹம்மத் பின் துக்ளக் ஆட்சியில் மக்கள் மன்னரைத் தவருகப் புரிந்து கொண்டு ஏமாற்றி வந்தனரோ, அவ்வாறே இந்து வியாபாரிகள் முஸ்லிம் வியாபாரிகளிடம் தோழமை கொண்டு, தங்கள் சரக்குகளை முஸ்லிம் வியாபாரிகள் மூலம் ஏற்றுமதி இறக்குமதி செய்து வந்தனர். இந் நிலையைப் பல முஸ்லிம் வணிகர்கள் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு 'ஜக்காத் வரியையும் கொடுக்காமல், ஏற்றுமதி வரியையும் கொடுக்காமல் பேரரசரை ஏமாற்றி வந்தனர்' என்று தெளிவாகக் காஃபீ கானே கூறுகிருர். ஆக மொத்தத்தில் எல்லோர்மீதும் விதிக்கப்பட்டிருந்த ஏற்றுமதி வரி 5 சதவிகிதமே. இந்து வியாபாரிகளிடம் தோழமை கொண்டு முஸ்லிம் வியாபாரிகள் தங்கள் சரக்குக் கட்டுகளைச் சிறுசிறு

கட்டுகளாகவும், வரிக்கு உட்படாதவாறும் ஏற்றுமதி செய்து வந்தனர். இந்து நண்பர்களின் சரக்குகளையும் இது போன்றே செய்து வரச் செய்தனர். இதனுல் தங்களுக்கு நட்பும், இந்து நண்பர்களிடத்திருந்து பெறும் சிறு தொகையும் ஆதாயமாக இருப்பது ஒருபுறம்; மற்ரொரு புறத்தில், தாங்கள் ஏழை வரி செலுத்தாமலே ஏய்த்து வந்ததனுல் அதன் லாபமும் கிடைத்தது. (இரட்டிப்பு லாபம்.) இதுதான் உண்மை நிலையாகும். அப்படி இல்லையென்ருல், உண்மையில் இரு சாராரும் அரசாங்கத்தை ஏமாற்றவில்லையென்ருல், 2 ஆண்டுகளுக்குப் பிறகு அவ் வரியை அவர் நீக்க வேண்டியதில்லையே! அப்படி ஒரு சாராருக்குச்சலுகை வழங்கவும், மற்ரொரு சாராருக்குத் தண்டனையளிக்கவும் அவர் கருதி இருந்தால், மேலும் மேலும் அல்லவா அவ் வரியைச் சுமத்திவிட்டிருக்க வேண்டும்? வரியை அவர் முற்றிலும் நீக்குவானேன்? இரு சாராருக்கும் பயன் அளிப்பானேன்?

## கூற்றுகளும் பதில்களும்

இனி, அடுத்துக் குற்றச்சாட்டுகளைப் பார்ப்போம்: (1) ஔரங்கசீப் இஸ்லாத்தின் மூலக் கோட்பாடாகிய 'கலிமா'வை(வணக்கத்திற்குரியவன் அல்லாவைத் தவிர வேறு யாரும் இலர்; நபிகள் நாயகம் இறைவனின் இறுதித் தூதராவார்கள் என்னும் மூலக் கோட்பாட்டை) நாணயத்திலிருந்து அகற்றியதாகக் குற்றஞ்சாட்டப்படுகிறது. முஸ்லிம்கள் மட்டுமன்றி, நாட்டில் வதியும் வெவ்வேறு வகையான மதத்தைத் தழுவியவர்களும் பொதுவாகப் பயன்படுத்தும் நாணயங்களில் வெறும் இஸ்லாமிய மூலவாசகக் கோட்பாடு இடம் பெறுவது நியாயமாகாது என்னும் பரந்த நோக்குடனேயே ஔரங்கசீப் அவ் வாசகத்தை அகற்றி யிருக்க, ஏனோ இங்கு ஒரு குற்றம் வலியக் கற்பிக்கப்படுகின்றது! ஷேர் ஷாகூட முன்பு தமது நாணயத்திலிருந்து அக் 'கலிமா' வாசகத்தை அகற்றியுள்ளாரே! நாணயத்தில் ஒரு மன்னர் தமது மதக் கோட்பாட்டை வலியப் புகுத்துவது அவரது மதப்பற்று வெறியை வெளிப்படுத்துமா? அல்லது முன்பு தவருகப் புகுத்தப்பட்டிருப்பதைக் களைவது அவரது வைதிக மூர்க்கத்தை வெளிப்படுத்துமா?

(2) பேரரசர் அக்பர் ஓர் இராஜதந்திரி; அப் பேரரசர் மக்களுடன் இணக்கமாக இருப்பதாகக் கருதிப் பாரசீகர்கள் பின்பற்றிவந்த நௌரோஜ் (Navroz) என்னும் புத்தாண்டு விழா வழக்கத்தை இந்தியாவில் அமலுக்குக் கொண்டுவந்தார். இந்தப் பழக்கமும் முறையும் இந்துக்களுடையனவல்ல. ஆனுல்,

ஜொராஸ்திரியர்கள் மார்ச் மாதம் 21ஆம் தேதியைப் 'புதிய நாள்' என்றழைத்துச் சிறப்பாக, மன்னர் பிறந்த நாளாக அதைப் பாவிப்பர். அன்று மன்னர் தம்மையே நிறுத்து, இதன் எடைக்குச் சமமான பொன், வெள்ளி, பொருள்களைப் பரிசாகக் கொடுக்கும் வழக்கம் ஏற்படுத்தப்பட்டது. இப் பழக்கத்தை ஜஹாங்கீரும் பின்பற்றினூர்; ஆனால், ஷாஜஹான் பின்பற்ற வில்லை. ஔரங்கசீபும் 1658ஆம் ஆண்டிலேயே இப் பழக் கத்தை நிறுத்திவிட்டார். அவர் அவ்வாறு நிறுத்தக் காரணம், நம் நாட்டின் பழக்கத்திலிருந்து வந்ததாலோ இந்து மன்னர்கள் ஏற்றுக்கொண்டார்கள் என்பதாலோ அன்று; தம் தந்தை நிறுத் தியதாலும் அன்று. ஆனால், மாறாக, அவர் ஓர் அரசரின் பொறுப் பைப்பற்றியும், கடமைகள், உரிமைகள்பற்றியும் பெருமளவுக்கு உயர்வான எண்ணம் கொண்டிருந்தவர். அவர் கருத்துப்படி, அரசரும் தாமே சுயமாக உழைத்துப் பொருள் ஈட்டி, அந்த வரு மானத்தை நுகரவேண்டும்; மணிமகுடமும் அரச பாரமும் இறைவனால் ஒப்படைக்கப்பட்டவை என்று அம் மன்னர் கருத வேண்டுமேயல்லாது, அவை இவ் வுலகில் அனுபவிக்க வேண்டிய சுவர்க்க போகமென்று கருதலாகாது. இறைவ னுக்கு மறு வுலகில் தமது ஒவ்வொரு செய்கைக்கும் பதில் சொல்லக் கடமைப்பட்டவர் என்ற எண்ணமுடைய இப் பேரரச ரிடம் அரசின் பொருள்களை வாரி இறைக்கவும், பிறந்த நாள் விழாவை நௌரோஜ் அன்று ஆடம்பரமாகக் கோலாகலமாகக் கொண்டாடவும் வேண்டுமென்று எப்படி எதிர்பார்க்க முடியும்? அப்படியே இந்த ஆடம்பரத்தை அவர் நிறுத்திவிட்டதால், இந்தியாவில் வாழ்ந்துவந்த பல்வேறு மக்களுக்கு எவ்வாறு அது தீமையாக ஆகிவிட முடியும்? பிறந்த நாள் விழாக் கொண் டாடிப் பொருளை வாரி வழங்காததால், 'கருமி' எனக் குறை கூறலாமே ஒழிய, மத விஷயத்தில் மக்களைத் துன்புறுத்தினூர் என்று எவ்வாறு கருத முடியும்?

(3) ஔரங்கசீப் அறநெறி ஆணையாளர்—'முஹ்தசிப்' என்னும் அமைச்சர் ஒருவரை நியமித்து, அறநெறிக் கட்டளை களைப் பிறப்பித்து அவற்றைச் சிறிதேனும் வழுவாமலும், உறுதி யுடனும் செயல்படுமாறு கட்டளை யிட்டார். மக்களிடையே காணப்படும் மது, கஞ்சா முதலியன அருந்தும் பழக்கத்தை நிறுத்தவேண்டி, பங்க் (Bang), அபினி, கஞ்சா ஆகிய லாகிரிப் பொருள்கள் தடைசெய்யப்பட்டன. இவற்றை எடுத்துச் செல்வதும் தடை செய்யப்பட்டது. மன்சப்தார் களுக்கும் அஹாதீகளுக்கும் (Ahadis) இராணுவ வீரர்கள்

இவற்றை வழங்காதவாறு கண்ணும் கருத்துமாகப் பார்க்குமாறு சிறப்பான உத்தரவிடப்பட்டது. அதனுடன் சீரணிப் படையினர் அமைக்கப்பட்டனர்; 1659ஆம் ஆண்டு மே 13 அன்று பிறப்பிக்கப்பட்ட கட்டளைப்படி, அபினிக்குத் தேவையான கசகசா விதையான மூலப்பொருளைப் பயிர் செய்வதும் தடை செய்யப்பட்டது. இந் நற்காரியங்கள் கண்டிக்கக்கூடியவையா? முஹ்தசிபைப் போன்று சிவாஜியின் அரசியல் அமைப்பிலும் அதே பொறுப்புக்களுடன் 'பண்டித ராவ்' என்னும் அமைச்சர் பணியாற்றவில்லையா? ஏன், ஷேர் ஷா, அக்பர் ஆட்சிகளிலும் அமைச்சரவையில் முஹ்தசிப் என்னும் அமைச்சர் இது போன்ற பணிகளைச் செய்தாரே? முஹ்தசிபின் மேற்கூறிய பணிகள் எல்லாம் தவறு என்று கூற முடியுமா? பேரரசர் ஔரங்கசீப் மேற்கூறிய ஆணைகளில் இந்து முஸ்லிம் என்ற வேற்றுமையையோ வேறுபாடுகளையோ நிலைநாட்டியதாகக் கூறமுடியுமா? ஆக, எந்த ஓர் அரசும், தற்காலத்திலும் சரியே, தம் மக்களை நல்வழிப் படுத்தச் சட்டங்களைப் பிறப்பிக்கும்போது மக்களிடையே பாகுபாடு செய்ய இயலாது. இன்றைய நாளில் அரசு பூரண மதுவிலக்கை அமலாக்குவது இல்லையா? அரசாங்கம் நற்பணியைச் செய்யும்பொழுது மதம் குறுக்கிடுகின்றதா? மதுவிலக்கைக் கண்காணிக்கத் தனி அமைச்சர் ஒருவர் இருப்பதில்லையா? 17ஆம் நூற்றுண்டில் நிகழ்ந்ததும் இதுவே. உண்மை என்னவெனில், ஜஹாங்கீர், ஷாஜஹான் ஆட்சியிலிருந்தே சமுதாயத்தில் அறநெறி ஒழுக்கங்கள் சீர்கெட்டு வந்தன. எனவே, மக்களை நல்லொழுக்கம் மிக்கவர்களாக மாற்றவேண்டி, அபினி கஞ்சா போன்ற லாகிரிப் பொருள்களைத் தடைசெய்தாரே யொழிய, இங்குத் தம் மக்களிடையே மத வித்தியாசம் பாராட்டி அவர் ஆணைகள் விடுத்தாரென்பதற்கு ஆதாரமே இல்லை.[1] தம் மன்சப்தார்களையும் மக்களையும் தீய வழிகளிலிருந்து காப்பதே பேரரசரின் நோக்கமாகும்.[2]

(4) அடுத்து, இசையும் பாடல்களும் நிறுத்தப்பட்டன. இசை யமைப்பாளர்களும், பாடகர்களும் வீட்டிற்கு அனுப்பப்

[1] சில பைராகிகளும், வாமமார்க்கிகளும் கஞ்சாப் புகைப்பதும் அபின் அருந்துவதும் தங்கள் கடவுள் வழிபாட்டு முறைக்கான 'அனுமதிக்கப்பட்ட செயல்கள்' என்று கூறி, ஔரங்கசீப் அந்தப் போதைப் பொருள்களை ஒழித்துக்கட்டிய செயல் இந்து மதத்துக்கு எதிராக எடுக்கப்பட்ட 'வெறித்தனமான நடவடிக்கை' என்று ஓலமிட்டார்கள். இந்து மதம் உட்பட எல்லாச் சமயங்களுமே குடியையும் போதைப் பொருள்களையும் தடை செய்து விட்டிருக்கின்றன என்பதை, ஔரங்கசீப்மீது குற்றம் பாராட்டுகிறவர்கள் கருதிப் பார்ப்பதில்லை.

[2] J. N. Sarkar, Vol. II. p. 461.

பட்டனர். இதற்குக் காஃபீ கான் தம்முடைய நூலில் கூறி யிருப்பது ஒன்றே ஆதாரமாகும். 1669ஆம் ஆண்டில் ஔரங்க சீபின் அரசியல் கருத்துகளில் பெருத்த மாற்றமொன்று நிகழ்ந் தது. அவ் வாண்டில் வரலாற்று ஆசிரியர்கள் தாம் எழுதிய வரலாற்றின் சில பகுதிகளைப் பேரரசருக்குக் காண்பித்தனர். அந் நூல்கள் எல்லாம் பேரரசரை வானளாவப் புகழ்ந்து போற்றும் நூல்களாகவே யிருந்தன. ஆனால், பேரரசரோ தம்மைப் பொறுத்த வரை, இறைவன்தான் எல்லாப் புகழுக்கும் உரியவன்; மனிதன் அன்று, என்று திடமாக நம்பினார். இஸ்லாமிய சமயம் போதிக்கும் திருவசனத்திற்கு மாறாக அரசாங்கக் கருவூலத்தை வற்றச் செய்து, இறைவனைப் புகழ் வதை விடுத்து, பாடகர்கள் தங்கள் நேரத்தையும் அரசாங்கத் தின் பொருளையும் விரசமான பாடல்களில் வீணாக்கி வரு கிறார்கள் என்பதை உணர்ந்த ஔரங்கசீப், பாடகர்களுக்கு அளிக்கப்படும் மானியத் தொகையை மட்டும் நிறுத்தினார். அரசாங்கத்தின் கீழ்ப் பணியாற்றிய இசைவாணர்களைத்தாம் ஓய்வுத் தொகை கொடுத்து வீட்டுக்கு அனுப்பினார் எனக் காஃபீ கான் கூறுகிறாரே யல்லாது, நாட்டில் இசையே இல்லாத வாறு அறவே தடுக்கப்பட்டது என்று கூறவில்லையே! இசை வாணர்களுக்கு நிறைந்த நிலத் தானம் அவர்கள் பேரரசரை அணுகிய பொழுதெல்லாம் வழங்கப்பட்டதாக 'மஆஸிரெ ஆலம்கீரி' கூறுகிறது. உண்மை இவ்வாறிருக்க, இதன் பின் னணியில் வெவ்வேறு கதைகள் புனையப்பட்டன.[1]

இதைப்பற்றிய கதை ஒன்றும் வழக்கில் உள்ளது. ஆனால், இதன் உண்மைக்கு ஆதாரமில்லை; இதனை எளிதில் நம்பவும் முடியவில்லை. மானியத் தொகையை இழந்த பாடகர்கள் ஒன்று கூடி, 'இசை'யை ஒரு கொடும்பாவியாகச் செய்து, அதைப் பேரரசரிடம் இழுத்துச் சென்றனர். தொழுகையிலிருந்த பேரரசரின் கவனத்தை அது ஈர்த்தது. பேரரசர் என்ன வென்று வினவ, அவர்கள் இசையைப் புதைக்கப் போவதாகக் கூறியதாக ஒரு கதை வழக்கில் உள்ளது. ஆனால், உண்மை யில் இந் நிகழ்ச்சி பேரரசர்க்கு இசைமீது வெறுப்பிருந்த தென்றோ, இந்துஸ்தான், கர்னாடகச் சங்கீத நயங்களை அவர் அறவே புரிந்துகொள்ள இயலாதவரா யிருந்தார் என்றோ நிரு பிப்பதாகக் கூறுவது தவறாகும். அரசவைப் பாடகர்களுக்குப் பெருமளவில் அரசாங்கத்திலிருந்து மானியத் தொகை அளிக்கப் பட்டு வந்தது. தாமே ஒரு நற்பணியைச் செய்து பொருளீட்டி

[1] Also E & D Vol. VII,

அதன் வருமானத்தைக் கொண்டு வாழும்போது, தமக்குப் பிறர் காணிக்கையாக அளிக்கும் பொருள்களை ஏற்பது தவறு என்று கருதும்போது, அவர் எவ்வாறு 'இசையை ஆதரிக்கிறேன்' என்கிற பெயரில் மானியங் கொடுப்பதை ஏற்க முடியும்? அது மட்டுமன்றி, ஔரங்கசீப் தம் இளமையில் இலக்கியம், இலக்கணங்களோடு இசையையும் விரும்பிக் கற்றுவந்தார் என்பதற்குப் பெர்னியர் அளிக்கும் சாட்சியத்தையும் நாம் நன்கு நினைவிற் கொள்ள வேண்டும்.[1]

(5) பேரரசர் அக்பர் 'தீனெ இலாஹி' என்றதொரு புதிய கோட்பாட்டைப் புகுத்தி, எல்லோரையும் மண்டியிட்டுச் சிரந் தாழ்த்திக் கீழே விழுந்து வணக்கம் செலுத்தவேண்டு மென்ற முறையைப் புகுத்தினார். அக்பரின் இம் முறைக்கு மாறாக, தமது 11ஆம் ஆட்சியாண்டில், ஏப்ரல் 1670-ல் ஔரங்கசீப் எல்லோரும் வெறுமனே இரு கைகளை உயர்த்தி, சிரந்தாழ்த்தாமல், மண்டியிடாமல், வணக்கம் தெரிவித்தாலே போதும்; அல்லது முஸ்லிம் மன்சப்தார்களைப் பொறுத்த வரையில், 'அஸ்ஸலாமு அலைக்கும்' (இறைவனின் சாந்தியும் சமாதானமும் உங்கள் மீது உண்டாவதாக) என்று கூறினாலே போதும் என்று கட்டளையிட்டார். இது எவ்வாறு தவறாகும்? இம்முறை மனிதப் பண்பையும் உயர்வையும் நிலைநாட்ட வில்லையா? கீழே விழுந்து நமஸ்கரித்தல் இந்து முறை என்பதால் ஔரங்கசீப் அதைத் தடுத்து நிறுத்தினார் என்பது முற்றிலும் பொருந்தாத கூற்றாகும். இப் பிரச்சினையிலும் ஔரங்கசீபைப் பொறுத்தவரை ஒரு நியதியைக் கடைப்பிடித்து வந்தார். அவர் அறிந்துள்ளவரை இறைவனுக்குத்தான் மனிதன் சிரம் தாழ்த்த வேண்டுமேயல்லாது, மனிதர்களுக்கு அன்று என்பதை வலியுறுத்தவே, எவராயிருப்பினும், ஒவ்வொருவரும் தத்தம் சுயமரியாதையைக் காப்பாற்றிக் கொள்ளும் வகையில் கரத்தை மட்டுமே எழுப்பி 'வணக்கம்' என்று தெரிவித்தால் அதுவே போதுமென்று வற்புறுத்தினார்.

(6) அக்பர் காலம் முதற்கொண்டு, மக்கள் பார்வையில் இருக்கவும், மக்கள் செலுத்தும் மரியாதையை ஏற்றுக்கொள்ள

[1] இசைகளைப்பற்றி ஔரங்கசீப் கொண்டிருந்த கருத்தை நான் ஆராய்ந்த மட்டில், ஓர் உண்மை புலனாகின்றது. அதாவது, சங்கீதம் என்பது ஒருவனுக்குப் 'போதை' யூட்டிவிடுகிறது. பாட்டைக் கேட்டுச் சொக்கிப் போகும் ஒருவன் தனது நிலையை மறந்து செயலற்றுவிடுகிறான், அல்லது கடமையில் தவறிவிடுகிறான். ஔரங்கசீப் அனைத்துப் போதையூட்டும் பொருள்கள்மீதும் கொண்டிருந்த அருவருப்பைத்தான் 'மாக்க மூட்டும்' வெற்றுப் பாடல்கள் மீதும் காண்பித்தார் என்று தெரியவருகிறது.

வும் முகலாயப் பேரரசர்கள் 'ஜாரோகா' என்னும் பலகணியில் பேட்டியளிப்பது வழக்கம்.[1] இதை நிறுத்தியதிலும் ஔரங்கசீப் தம் சொந்தக் கருத்திற்கேற்றவாறு நடந்து கொண்டாரே யொழிய, எம் மதத்தையும் அவர் புண்படுத்த நினைத்ததாகக் கூறுவது முற்றிலும் பொருத்தமற்ற தாகும். ஔரங்கசீப் சாதாரணமாகவே எல்லா நேரத்திலும் அரியாசனத்தில் அமர்ந்திருப்பதில்லை என்று பெர்னியர் கூறும் சாட்சியத்தை நாம் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். உண்மை யென்னவெனில், தம்மையும் தம் செயல்களையும் இறைவனின் சேவைக்கு அர்ப்பணிக்க வேண்டும் என்ற மனப்பான்மை கொண்டிருந்த பேரரசருக்குப் பலகணியில் வந்து நிற்பதோ, அடிக்கடி மக்கட்குப் பேட்டி வழங்குவதோ வெறுக்கத் தக்க படாடோபமாகும் எனத் தோன்றிற்றே யல்லாது, அவற்றை இந்துப் பழக்க மென்பதனுலோ, இந்தியப் பண்பாடு என்று கருதியதாலோ அவர் வெறுத்து ஒதுக்கினுர் என்று கூறுவது அவ்வளவு பொருத்த முடையதன்று.

(7) ஔரங்கசீப் ஷீஆக்களை வெறுக்கவில்லை. இவ் வுண்மையை அவருடைய மரண சாசனம் எடுத்துக்காட்டுகிறது. அவர்கள்மீது அவர் மதிப்பு வைத்திருந்தார்; தம் பிள்ளைக்கும் ஷீஆக்களுடன் திருமணத் தொடர்பையும் ஏற்படுத்திக் கொடுத்தார். அவரின்கீழ் எண்ணற்ற ஷீஆக்கள் பணியாற்றினர்.

(8) நம் நாடு விடுதலை பெற்றபின் அளிக்கப்பட்ட அரசியல் அமைப்புச் சட்டம் 'தேவதாசி' அல்லது பொது மகளிர் முறையை அறவே அழிக்க வில்லையா?[2] சமுதாயத்தில் ஏற்றத் தாழ்வுகளின்றி ஒப்புரவுடன் கூடிய சமுதாயத்தை நிறுவுவதே அரசியல் அமைப்பின் நோக்கமாகும். இல்லையாயின், இதனைச் சமூக நல அரசு என எவ்வாறு பாராட்ட முடியும்?

இதைப் போன்றுதான், பேரரசர் ஔரங்கசீபும் பொது மகளிரும், மற்றும் நடனம், இசைத் தொழிலில் ஈடுபட்டுள்ள நாரியரும் தம் நாட்டில் வேறு தொழிலை மேற்கொண்டு, கற்பு மிக்கவர்களாக வாழவேண்டும்; இல்லையாயின் நாட்டை விட்டே வெளியேறிச் சென்றுவிட வேண்டுமெனக் கடுமையான ஆணை ஒன்றைப் பிறப்பித்தார். அன்றைய சூழ்நிலையில் எந்த அடிப்படையிலும் இதனைத் தவறு என்று கூறமுடியுமா? சாதி வெறி

[1] Ibn Hasan 'Central Structure of Mughal Empire' p. 68.

[2] அரசியல் சாசனம் 14, 15 ஷரத்துகளைப் பார்க்க.

யும் தீண்டாமையும் பரவியும் வேரூன்றியும் இருந்த அக் கால 17ஆம் நூற்றுண்டில் பொதுவாகத் தீயபழக்கங்கள் ஒழிக்கப் படவேண்டியவை என்று பேரரசர் கருதியதில் எவ்வாறு தவறு இருக்க முடியும்? மனம் திருந்தி வாழ்பவர்கள் சுதந்தரம் பெற்ற, தன்மான மிக்கவர்களாகத் தலை தூக்கி வாழவேண்டுமென்று கருதியும், அதே நேரத்தில் ஏற்றத்தாழ்வற்ற அறநெறிகளை அடிப்படையாகக் கொண்ட சமுதாயத்தைப்பற்றி இஸ்லாமிடும் ஆணைகளை ஏற்குமுகமாகவும் பேரரசர் தேவதாசி முறையை ஒழித்தாரென்றால், இதில் சாதி மத வித்தியாசங்களுக்கு இடம் ஏது?

(9) பேரரசர் ஔரங்கசீப் தீபாவளி, ஹோலி போன்ற இந்துப் பண்டிகைகளைத் தடுத்து நிறுத்தியதாகக் குற்றஞ் சாட்டப்படுகிறது. பண்டிகைகள் கொண்டாடப்படுவதை அவர் தடுத்து நிறுத்தியதற்கு எவ்வித ஆதாரமும் இல்லை. பெர்னியர், மனுச்சி, காஃபீ கான், முஸ்தயித் கான் ஆகிய எந்தக் குறிப் பாளரும் பண்டிகைகள் கொண்டாடப்படுவதை அவர் அறவே தடுத்தாரெனக் கூறவில்லை. ஆனால், மாறாகப் பேரரசர் பண்டிகை விழாக் காலங்களில் மக்கள் கட்டுக்கடங்காமல் ஆர்ப்பரித்து, அடக்கமின்றிக் குடித்துக் கூத்தடிப்பதையே வெகுவாக வெறுத்தார். அதுபோன்றே முஸ்லிம்கள் கொண் டாடி வந்த முஹர்ரம் பண்டிகையையும் அவர் நிறுத்தவில்லை. அதனை மட்டுப்படுத்த விரும்பினர். தமக்கு முற்பட்ட ஆட்சிக் காலங்களில் தீபாவளிச் சிறப்பு விளக்கு அலங்காரங்களுக்கென்று விதிக்கப்பட்டிருந்த வரிகளை நீக்கிய ஔரங்கசீப் தீபாவளிப் பண்டிகை கொண்டாடப்படுவதைத் தடுத்திருப்பாரா?

முஹர்ரம் சோகத்தை வெளிப்படுத்தும் ஒரு நிகழ்ச்சியாகும். நபிகள் நாயகத்தின் பேரராகிய இமாம் ஹுஸைன் 'கர்பலா' என்னும் போரில் ஜனநாயகத்தின் காப்பாளராக மடிந்தார். சோக நிகழ்ச்சியுடன் கூடிய முஹர்ரம் என்னும் நினைவு நாளை அடக்கத்துடன் கொண்டாடுதற்கு மாறாக, சோகத்தை மறந்து, பேரரசர் ஒரு கட்சி போன்றும், ஹுஸைனை எதிர்த்தோர்கள் மற்றொரு கட்சி போன்றும் கருதிக்கொண்டு, மக்கள் பிளவுபட்டு நின்று, எதிர்ப்பையும் கசப்பையும் வளர்த்து விடும் விபரீதங் களை அவர் மட்டுப்படுத்த விரும்பினர். முஹர்ரம் மாதம் என்பது முஸ்லிம் ஆண்டின் முதல் மாதமாகையால், புது வருடப் பிறப் பாக அதைக் கொண்டாடிய கூட்டம் ஒன்று; 'கர்பலா நிகழ்ச்சி'யை நினைந்து சோக ஊர்வலம் நடத்திய கூட்டம் மற் றொன்று. இவ்வாறு இரு முரண்பட்ட கருத்துக்களுடன்

கேளிக்கையாட்டமும் துயர ஊர்வலமும் ஒன்றுடனென்று மோதிக் கொண்டதன் விபரீத விளைவே, 1669ஆம் ஆண்டில் (10ஆவது ஆட்சியாண்டு) புர்ஹான்பூர் என்னும் ஊரில் தோன்றிய பெருங் கலகமாகும். இதனால்தான் ஔரங்கசீப் 1670-ல் பிறப்பித்த ஆணை யொன்றில், கர்பலாத் துயர நிகழ்ச்சியை நினைந்து யாவரும் வீடடங்கித் துயருற வேண்டு மென்றும், புத்தாண்டு பிறந்துவிட்டதென்று கேலிக்கூத்து நிகழ்த்தலாகாதென்றும் கட்டளையிட்டு விட்டார். இதை 'ஷீஆ-ஸுன்னீ' வேறுபாட்டு மாற்சரியம் என்று கற்பிப்பது அறிவுடைமையாகாது.

ஹோலிப் பண்டிகையில் அக்கால மக்கள் கட்டுக்கடங்காமல், எல்லை மீறிய களிப்பு, மகிழ்ச்சியில் திளைத்திருக்கும்போது அது வீண் கலகங்களுக்கு இடம் அளித்து வந்தது. (தற்காலத்திலுங் கூட வடநாட்டின் பல ஊர்களில் ஹோலியின் பெயரால் நடக்கும் காம வெறிக் களியாட்ட வரம்பு கடந்த விபரீத விஷமங்கள் பல சிந்தனையாளர்களை வெட்கித் தலைகுனியச் செய்கின்றன.) பேரரசர் இவ் விபரீதங்களையே கட்டுப்படுத்தக் கருதி இருக்கக் கூடும். பேராசிரியர் பட்டாசாரியர் கூறி இருப்பது போன்று, 'இந்தியாவுக்கு விஜயம் செய்யும் மேற்கு நாட்டவர் எவரையும் சப்தத்துடன் செல்லும் ஊர்வலமும், தப்பறைகளின் முழக்கங் களும், டமாரங்களின் ஒலியும், சிகப்புத் தூள்கள் தோய்ந்து இருக்கும் உருவங்களும் திடுக்கிடச் செய்யும்.'[1] பேரரசர் இம் மாதிரி விழாக்களில் குழப்பங்கள் நிகழா வண்ணம் ஹோலி, தசமி, தீபாவளி போன்ற விழாக்களில் நடந்த மித மிஞ்சிய போக்கை மட்டுமே கட்டுப்படுத்த முயன்றிருக்க வேண்டும். ஆனால் நேர் மாறாக, அப் பண்டிகைகளை அவர் அறவே தடைப் படுத்தியதாகக் கூறுவது போலிக் கூற்றாகும். எவ்வாறு முஹர்ரம் பண்டிகையின் மித மிஞ்சிய போக்கினைக் கண்டிக்க அவர் விரும் பினாரோ அது போன்று சமமாகவே இவ் விழாக்களையும் கட்டுப் படுத்த எண்ணி, ஆணைகளைப் பிறப்பித்திருக்க வேண்டும். ஆனால், எந் நூல் ஆசிரியரும் பேரரசர் ஔரங்கசீப் அனைத்துப் பண்டிகைகளையும் தடைப்படுத்தியதாக எண்பிக்கும் ஆணை எதனையும் எடுத்துக் காட்டவில்லை என்பதை இங்கு நாம் கூர்மை யாக உற்றுநோக்கவேண்டும். சில ஆசிரியர்களின் கூற்று முரணாய் உள்ளது. அவர் ஹோலிப் பண்டிகையைத் தடைப்படுத் தியதாகச் சிலர் கூறுகிறார்கள். பேராசிரியர் சத்தியநாதய்யரோ, **'இப் பண்டிகைகள் அரசின் கட்டுப்பாட்டிற்குள் வந்தன'** என்று

[1] 'Hindu Festivals' in Vol. III of 'Cultural Heritage of India',

கூறுகிருரேயல்லாது அவை முற்றிலும் தடைப்படுத்தப்பட்டன வென்று கூறவில்லை.

(10) ஔரங்கசீப் 'சதி' என்னும் உடன்கட்டை ஏறும் வழக்கத்தைத் தடைப்படுத்திஞரென்றும், இது அவருக்கு இந்துமதக் கோட்பாட்டின்மீதிருந்தவெறுப்பைவெளிப்படுத்துகிறதென்றும் ஒரு குற்றச்சாட்டைச் சிலர் கற்பித்துவிட் டிருக்கின்றனர். உயிரோடு விதவையைக் கணவனின் சிதையில் வைத்துக் கொளுத்தும் ஈவிரக்கமற்ற கொடுஞ் செயலை ராஜாராம் மோஹனராய் எதிர்ப்பதற்குப் பல ஆண்டுகட்டு முன்பே ஔரங்கசீப் தடுக்க முற்பட்டாரே என்று பாராட்டுவதற்கு மாருக, வேண்டுமென்றே அவர்மீது வீண்பழிசுமத்துவது நியாயமா? இன்றைய நாகரிக உலகம் மெச்சும் நற்செயலை அப் பேரரசர் 300 ஆண்டு கட்டு முன்பே நிலைநாட்டியதற்கு அவரைப் பாராட்டத்தான் வேண்டும்.

(11) முஸ்லிம்கள் தங்கள் தாடியை வளர்ப்பதிலும் ஒரு நியதியையும் ஓர் அளவினையும் கடைப்பிடிக்கவேண்டும் என்று அவர் வற்புறுத்தியதாகக் கூறப்படுகிறது. அவ்வாறே வற்புறுத்தி இருப்பினும் சரியே, இதஞல் பேரரசர் வைதிகர் என்ருே பெரும்பான்மை மக்களுக்கு இதஞல் நட்டம் விளைவிக்கக் கருதிஞர் என்ருே சாற்றுவது எப்படிப் பொருந்தும்? ரஷ்யாவின் 'மகா பீட்டர்' (Peter the Great) என்னும் மன்னன் மேற்கு நாடுகளைப் பார்த்து, தன் மக்களும் அந் நாட்டினரைப் பின்பற்றவேண்டும் என்று கருதித் தாடி வளர்த்தால் அதற்கு ஈடாகத் 'தாடிவரி' கொடுக்கவேண்டும் என்று வற்புறுத்தவில்லையா? பெண்களும் நடனம் ஆடவேண்டும், புகைபிடிக்கலாம் என்று பீட்டர் வற்புறுத்தவில்லையா?

உண்மை என்னவெனில், அரியணை ஏறிய உடனே, அதற்குப் பின்போ பேரரசர் தொடர்ந்து ஆணைகளைப் பிறப்பித்த பொழுது, இவ் வாணைகளால் சில மாற்றங்கள் நிகழ்ந்து, மரபான முறைகள் கைவிடப்பட்டன. ஔரங்கசீபின் ஆட்சியில் வாழ்ந்துவந்த இந் நாட்டுக் குடிமக்கள், தம் மதத்திற்கும் இவ் வாணைகளுக்கும் தொடர்பு என்ன இருக்க முடியும் என்பதை ஆராயாது, தம் 'இந்து மதத்திற்கு ஆபத்து' (Hinduism in danger) என்று அஞ்சி இருப்பர். இதுவே அவர்களது வெறுப்புக்குக் காரணமாகும்.

## ஔரங்கசீபும் சர்மதும்

ஔரங்கசீபுக்குச் சகிப்புத் தன்மையோ, மதத் தாராள நோக்கமோ, பரந்த மனப்பான்மையோ கிடையாதென்றும், தமது குறுகிய வைதிக முஸ்லிம் மனப்போக்கையே எதிலும் வெளிப்படுத்தினரென்றும் அவர்மீது பொதுவான குற்றச் சாட்டைப் பல ஆசிரியர்களும் சுமத்துகின்றனர். இதற்கு உதா ரணமாக, சர்மத் என்பார் தண்டிக்கப்பட்ட விதத்தைப் பல அறி ஞர்கள் சுட்டிக் காட்டுகின்றனர். ஆனல், உண்மை வேறுவித மாக உள்ளது. யார் இந்த 'சர்மத்'? 'சர்மத்' என்பது ஒரு புனை பெயர். அவர் எங்குப் பிறந்தார், எப்பொழுது பிறந்தார் என்பனபற்றி யெல்லாம் முழு விவரங்களை அவரது காலத் திலேயே எவராலும் அறிய முடியவில்லை. ஆனல், அவர் பல ஆண்டுகள் வரை யூதராக இருந்ததாகவும், யூத மதத்திலேயே பிறந்ததாகவும், பின்னர் இஸ்லாம் மதத்தைத் தழுவியதாகவும் கூறப்படுகின்றது. வியாபார நிமித்தம் இந்தியாவுக்கு வந்தவர் களுள் அவர் ஒருவர் எனவும், ஆனல் மதத்திலும் தத்துவத் திலும் ஈர்க்கப்பட்டு அவற்றிடை அவர் ஆழ்ந்து இருந்தாரென வும் நம்பப்பட்டு வந்தது.[1] இஸ்லாம் மதத்தை ஏற்றதும், 'முஹம்மத் சையத்' என்று அவர் அழைக்கப்பட்டார். ஆனல், பொதுவான புனை பெயராகிய 'சர்மத்' என்பதே அவருக்கு நிலையாகி விட்டது. நூல் ஒன்றையும் அவர் எழுதவில்லை; மாருகத் தத்துவ ஆராய்ச்சியில் ஈடுபடுவதாகப் பறைசாற்றிக் கொண்டு, ஆடையின்றி, முழு அம்மணமாகத் தெருக்களில் அலைந்து திரிந்து வந்தார்! இங்கு நாம் மிக முக்கியமாகக் கவனிக்க வேண்டியது என்னவெனில், சர்மத் என்பாருக்குத் தாரா ஷுக்கோ நல்லாதரவை நல்கிவந்தார். அவருடன் தாரா ஷுக்கோவின் பகிரங்கத் தொடர்புகளும், இரகசியத் தொடர்புகளும் அதிகரித்த வண்ணம் இருந்தன. தாரா ஷுக்கோ வாரிசுரிமைப் போரில் தோல்வி கண்டு இறந்த பின்னரும், சர்மத் தமக்கிருந்த அரசியல் செல்வாக்கைப் பயன் படுத்தி, எந் நேரத்திலும் ஔரங்கசீபின் ஆட்சியைக் கவிழ்ப் பார் என்ற அச்சம் நிலவி வந்தது. அச் சூழ்நிலையில் சர்ம தின் போக்கும் மிகவும் கண்டிக்கத்தக்கதாக இருந்தது. 1. 'தொழுகை மானத்தை மறைக்கவல்லது', 'ஆடை ஈமா னின் ஒரு பாதி' என்ற நபிகள் நாயகத்தின் திருவாய் மொழி களுக்கு எதிர்ப்பாக முழு நிர்வாணக் கோலமாக அலைந்து திரிந்து கொண்டிருப்பவர் எவ்வாறு தம்மைத் தாமே இஸ்லாமிய

[1] Dr. K. R. Qanungo, 'Dara Shukoh' Vol. I.

சமயத்தையும் நபிகளின் வழியையும் பின்பற்றுபவர் என்று கூறிக் கொள்ள முடியும்? 2. ஷேக் அஹ்மத் சர்ஹிந்தும், இன்னும் பல அறிஞர்களும் வாழ்ந்த அக் காலத்தில் நிர்வாணக் கோலமாகத் திரிபவரின் சொற்கள் எவ்வாறு அறிஞர்களுக்கு விளக்கம் தரமுடியும்? எனவே, மார்க்க அறிஞர்களே முஹம்மத் சையத் என்னும் சர்மத் என்பாரைச் சமய விவாதத்தில் தோற் கடித்தனர். உதாரணமாக, மதிப்பிற்குரிய ஆதி சங்கரர் பௌத் தப்பிட்சுகளையும், ஹஸ்தங்கரையும் விவாதத்தில் தோற்கடிக்க வில்லையா? அதுபோன்றே இங்கே சர்மதும் தோற்கடிக்கப் பட்டார். எனவே, உண்மையில் அரசியலில் செல்வாக்குள்ள சர்மதினால் ஆபத்து இருப்பதை உணர்ந்த மார்க்க அறிஞர்கள் பேரரசரிடம் மரண தண்டனையைப் பரிந்துரைத்தார்கள். ஆனால், இத் தண்டனை மதத்தை நிலைநாட்ட அளிக்கப்பட்ட தன்று. மாறாக, அரசியல் வெற்றிக்காக மேற்கொள்ளப்பட்ட தண்டனையே யாகும். உதாரணமாக, ஃபிரான்சின் டாம்ரெமி கிராமத்தின் புகழ்வாய்ந்த வீரப்பெண்மணி ஜோான் ஆஃப் ஆர்க்கை (Joan of Arc) எரிக்கும்பொழுது அவர்மீது பேய் பிசாசு ஏறிக் கொண்டிருப்பதாகக் கற்பித்து, மதம் எனும் போர் வையைக் காட்டினும், அது ஓர் அரசியல் கொலைதானே? அது போன்றே, சர்மதுக்கு விதிக்கப்பட்ட தண்டனையும் அரசியல் கொலையேயாகும். அறிஞர் கானுங்கோ (Qanungo) 'தாரா ஷுக்கோ' என்னும் தமது நூலில் இக் கருத்தை ஏற் கின்றார். 'தாரா கொலையுண்ட பின்னர், டில்லியில் வாழ்ந் திருந்த குடிமக்கள்மீது வரம்பிகந்த செல்வாக்கினைப் படர விட் டிருந்த சர்மதைக் கண்ட ஔரங்கசீப் அவர் அரசியலில் பேரா பத்தை உண்டுபண்ணக் கூடிய ஒரு பயங்கரப் பேர்வழி என் பதைத் தெரிந்து கொண்டார். அல்லாமலும், அவர்மீது ஒரு தெய்வ நிந்தனையாளர், இஸ்லாமிய சட்ட திட்டங்களுக்கு மாறு வினைவிப்பவர் என்னும் குற்றச்சாட்டொன்றும் அரசவையி லிருந்த சமய வல்லுநர்களால் சுமத்தப்பட்டது,' என்றும் கானுங்கோ அறைகின்றார். மேலும், சர்மதுக்கு இரு வாய்ப்பு கள் வழங்கப்பட்டன. ஒன்று, அவர் தமது நிர்வாணத்தை மூடி மறைத்து, மானியாக, நாகரிகமுள்ள மனிதனாக நடமாட வேண்டும்; அல்லது தம் தலையை இழக்க வேண்டும் என்று அவர் அறிவிக்கப்பட்டார். 'துறவி பிந்திய வாய்ப்பைத் தேர்ந் தெடுத்தார்; வீரத் தியாகி வீர மரணம் எய்துவது போன்று இறந்தார்.'[1]

[1] Dr. K. R. Qanungo, 'Dara Shukoh', Vol. I, Ch. 'Dara and Sufi Sarmad', p. 375. Also, Bernier, 'The Travels', p. 317. சர்மத் பிறந்த

இதிலிருந்து பின்வரும் சில உண்மைகள் தெளிவாகின்றன: (1) ஔரங்கசீப் சர்மத்மீது தாமாகவே மரணதண்டனையை விதிக்க வில்லை; அந் நிர்வாணப் பக்கிரியின் செல்வாக்கைக் கண்டஞ்சி, உலமாக்கள் விதித்த தண்டனையை ஏற்றுக் கொண்டார். (2) சர்மத் உயிர்வாழ வாய்ப்புக் கொடுக்கப் பட்ட பின்னரும், பயமுறுத்தலுக்குப் பின்னரும்கூட, நிர் வாணக் கோலத்தை விட விரும்பவில்லை. (3) அப்படியே மதக் கருத்து வேற்றுமை காரணமாகத்தான் தண்டித்தாரென்றால், பேரரசர் ஔரங்கசீப் பிற முஸ்லிம், இந்துத் துறவிகளை ஏன் அவ்வாறு தண்டிக்கவில்லை? தாரா ஷுக்கோவுக்கு நண்பர் களாகச் சர்மத் மட்டுமன்றி, இன்னும் பல ஸூஃபீகள் (Sufis) என அழைக்கப்பட்ட வேறு முஸ்லிம் துறவிகளும் இருந்தனர். அவர்களும் தண்டிக்கப்பட்டிருக்கலாமே? சர்மதின் மரண தண் டனைக்கு அவருடைய கோட்பாடுகளும், போலி வேடமும், தாராவின் நட்பும், அரசியலில் செல்வாக்கும், மக்களை மயக்கிக் கவர்ந்த சூழ்ச்சியுமே முக்கியக் காரணங்களாகும்; ஔரங்க சீபின் மதக் கொள்கையன்று.

## ஜசியா வரி

பிரித்தாளும் தந்திரச் சூழ்ச்சியில் கைதேர்ந்த வல்லமை மிக்கவர்களாகிய பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள், பிரிட்டிஷ் வர லாற்று ஆராய்ச்சியாளர்கள், மற்றும் சில எதிர் மனப்பான்மை கொண்டவர்கள் எல்லாரும் ஒருமுகமாகச் சேர்ந்து, ஔரங்க சீபின்மீது ஒரு பெருங் கறையைப் படியவிட்டு விட்டார்கள். அப்பேரரசர் தம்மளவில் ஒரு வைதிக முஸ்லிம் வைரியாக விளங் கியதுடன் நில்லாமல், இந்துக்களையும் பிற மதத்தினரையும் துன்புறுத்தவென்றும், அவர்கள் தங்கள் மதங்களைத் துறந்து இஸ்லாத்தைத் தழுவிக் கொள்ளுதற்கான மறைமுகமான கட்டாயத்தை வற்புறுத்துதற்கென்றும் அவர்களை ‘இரண்டாந் தரப் பிரஜைகள்’ என்னும் அந்தஸ்துக்குத் தாழ்த்தி விட்டு, அவர்கள்மீது ஜசியா என்னும் தலைவரியை விதித்து உபத்திர வங்களுக்கு உட்படுத்தினர் என்பது ஒரு பெருங் குற்றச்சாட் டாகும். இப் பொய்க் குற்றச்சாட்டை அவர்கள் வலியுறுத்துவ

மேனிக்கு நிர்வாணக் கோலத்துடன் டில்லி வீதிகளில் அலைந்து திரிவ தைக் கண்ட பெர்னியர் நெடுநாட்கள்வரை அந்த அநாகரிகம் பீடித்த மனிதனை அருவருப்புடன் வெறுத்ததாகக் குறிப்பிட்டுள்ளார். மானத்தை மூடி மறைக்கச் சொல்லிப் போதிக்கும் இஸ்லாமிய சமயத் துக்கு நேர்முரணாக நடந்து மானமிழந்த சர்மத், பின்னர்த் தமதுயிரை யும் இழந்ததில் வியப்பொன்றுமில்லை.

தற்காக, அந்த அடாத தலைவரி விதிப்பை எதிர்த்தே ஔரங்க சீபின் ஆட்சிக் காலத்தில் அத்தனை கலகங்களும் தலைவிரித் தாடின என்று வரலாற்று முரண்பாடுகளைத் தங்கள் உசிதம் போல் சரடுகோத்துப் பின்னி விட்டார்கள். அவர்கள் கூற்றுப் படி ஜசியா வரி விதிப்பை எதிர்த்துக் கிளப்பப்பட்டதாக வருணிக்கப்படும் கலகங்களின் வருணனை உண்மைக்கு எத் துணைப் புறம்பானதென்பதை முதலில் கவனிப்போம்.

(1) ஜாத்கள் ஜசியா வரியை எதிர்த்துக் கிளர்ந்தெழுந் தார்கள் என்று பலர் கூறுகின்றனர். ஔரங்கசீப் ஜசியா வரியை விதித்தது, 2-4-1679-இல்;[1] ஆனால், நாம் முன்பே விளக்கியுள்ளவாறு, ஜாத்கள் கலகம் புரிந்ததோ 1669ஆம் ஆண்டில்! எனவே, இந்த இரண்டுக்கும் ஏதும் சம்பந்த முண்டா? பத்தாண்டு முன் பின் முரண்பாட்டு ஏசல் இது.

(2) சத்நாமியர்களின் கலகமும் ஜசியா வரி விதிப்பின் விளைவே என்று சாற்றப்படுகின்றது. ஆனால், வரலாறோ அவ் வரி விதிக்கப்படுவதற்கு 7 ஆண்டுகட்கு முன்னரே, 1672 மே மாதத்தில் அது நிகழ்ந்ததாக நமக்கு அறிவிக்கிறது. ஏழாண்டு முன் பின் முரண்பாட்டு வீண் குற்றச்சாட்டு இது.

(3) சீக்கியத் தலைவர் தேஜ் பஹதூருக்கு மரண தண் டனை விதிக்கப்பட்டது 1675இல்; அதாவது, ஜசியா வரி விதிப் புக்கு 4 ஆண்டுகட்கு முன்பு. எனவே, அச் சீக்கியரின் எழுச் சிக் கலகத்தை இவ் வரி விதிப்புடன் இணைத்துக் காரணம் கற் பிப்பது முறையாகுமா?

(4) ஔரங்கசீப் மீவார்மீது போரெழுந்தது, அவ் வரி விதிப்புக்கு ஓராண்டுக்கு முன்பு—அதாவது, 1678இல்.

(5) முன்னரே நாம் நன்கு விளக்கிக் காட்டியுள்ளவாறு, இப் பேரரசர் அரியணை ஏறுவதற்கு 13 ஆண்டுகளுக்கு முன் னரே—அதாவது, ஜசியா வரி தோன்றுவதற்கு 35 ஆண்டு கட்கு முன்பே வீரர் சிவாஜி எழுச்சியுற்றார். எனவே, அவரு டைய எழுச்சிக்கு எவ்வாறு நாம் ‘ஜசியா வரி விதிப்புக்கு

[1] கா∴பீ கான் ஜசியா வரி ஔரங்கசீபின் 22-ம் ஆட்சியாண்டில் விதிக் கப்பட்டதாகக் கூறுகிறார். இதையே ஆதரித்து ‘மஆஸிரெ ஆலம் கீரி’யின் ஆசிரியர் முஸ்தயித்கான், ஹிஜ்ரி 1080 ச∴பர் மாதத்தில்—ஔரங்கசீபின் 22-ஆவது ஆட்சியாண்டில்—கி.பி. 1679-ல் ஷை வரி விதிக்கப்பட்டதென்கிறார்.

எதிர்ப்புத் தெரிவித்த கிளர்ச்சி' என்று காரணம் கற்பிக்க முடியும்?

ஜாத், சத்னுமியர், சீக்கியர் கலகங்களுக்கும், மீவார்ப் போருக்கும், சிவாஜி எழுச்சிக்கும் ஜசியா வரி விதிப்புடன் யாதொரு விதமான தொடர்பையும் கொஞ்சமும் கற்பிப்பதற்கில்லை. எனினும், ஔரங்கசீபைக் குற்றவாளியாக்கியே தீர வேண்டுமென்னும் ஒரே குறிக்கோளுடன் அனேக ஆசிரியர்கள் வரலாற்று உண்மையைத் திரித்து, மெருகுபூசி, உண்மை நிலையைத் தலைகீழாக மாற்றிக் காட்டிவிடுகிறார்கள். இப்படியே, 1680-க்குப் பிறகு ஔரங்கசீப் நெடுங்காலம் தக்காணத்தில் தங்கிவிட்ட காலத்தில் அங்கு நிகழ்ந்த அரசியல் குழப்பச் சம்பந்தமான போர்களுக்கான காரணங்களையும் கொஞ்சமும் பொருத்தமின்றி, ஜசியா வரி விதிப்புடன் இணைத்துக் காட்டி அவர்கள் ஏதேதோ எழுதிவிடுகிறார்கள்.

ஔரங்கசீப்மீது மட்டுமன்றி, ஆரம்பகால இஸ்லாமியக் குடியரசு நிலவிய வேறு நாடுகளிலும் ஜசியா வரி விதிக்கப்பட்டிருந்ததை மேல்நாட்டு வரலாற்றாசிரியர்கள் பலர் நெடுகவே தவறான விளக்கங் கொடுத்து, 'முஸ்லிம் ஆட்சியாளர்கள் தங்களின் கீழிருந்த வேற்று மதத்தினர்பால் செலுத்திய கொடுங்கோன்மை இது' என்று விடாமல் பிரசாரம் செய்து, அப்பொய்ப் பிரசாரத்தை மெய் போலத் தோன்றச் செய்து விட்டார்கள். எனவே, அவ்வாறு நிலைநாட்டப்பட்ட தவறான கருத்தை நாம் முதலில் நீக்கிக்கொண்டு, 'ஜசியா' என்றால் உண்மையில் அது என்ன? என்பதன் சரியான விளக்கத்தைப் புரிந்து கொள்ள வேண்டியது கடமையாகிறது.

**ஜசியா என்றால் என்ன?** திருக் குர்ஆனுக்கு மொழி பெயர்ப்பும் விளக்கங்களும் ஆங்கிலத்தில் வரைந்த அறிஞர், மௌலானா முஹம்மதலீ (M A, LL.B.) என்பவர் இதுபற்றிய சரியான கருத்தைப் பின்வருமாறு தெரிவிக்கிறார்: 'ஜிஸ்யா (Jizyah) என்னும் சொல், ஜஸா (Jaza) என்னும் மூலச் சொல்லினின்று பிறந்த சொல்லாகும். ஜஸா என்பதற்கு, ''அவன் திருப்தியளித்தான்'' என்பது பொருளாம். **லேன்ஸ் லெக்ஸிகன்** (என்னும் அரப் அகராதி) ஜிஸ்யாவுக்கு அளித்திருக்கும் விளக்கம் இது: ''முஸ்லிம் அரசிலுள்ள சுதந்தரமுள்ள குடி மக்களாக வாழும் முஸ்லிமல்லாத பிரஜைகளிடத்திருந்து வசூலிக்கப்படும் வரி இது; இவ் வரியைக் கொடுப்பதன் மூலம் இவர்கள் தங்கள் பாதுகாப்பை உறுதிப்படுத்தும் ஒப்பந்தத்தை வலுப்பெறச்

செய்து கொள்கின்றனர்.'' அல்லது, பஹ்ருல் முஹீத் என்னும் விளக்க நூலின் வாசகப்படி, ''ஜிஸ்யா வரி, முஸ்லிமல்லாதாருக்கு உத்தரவாதம் அளிக்கப்பட்டுள்ள பாதுகாப்பிற்கு அணித்தாக அவர்களால் இறுக்கப்படும் ஈட்டுத் தொகையாகும்; எனவே, முஸ்லிமல்லாத குடிமக்கள் இராணுவச் சேவையினின்று விலக்களிக்கப்பட்டிருந்தார்கள்''...'[1] அறிஞர் நிக்கலஸ் அக்னைடீஸ் என்பார் 'ஜஸா' என்னும் மூலச் சொல்லிலிருந்து தோன்றிய ஜசியா என்னும் சொல் 'ஈடு' என்று பொருள்படும் எனக் கூறுகிறார்.[2] டாக்டர் K. A. நிஜாமி என்பவர் இது பாரசீக மொழிச் சொல் என்றும், 'கஸீத்' (Gazith) என்னும் பாரசீகச் சொல்லே அரபி மொழியில் 'ஜசியா' என்று மருவி, பொதுவாக வரியைக் குறிப்பிடும் பொழுது 'ஜிஸ்யா' என அரேபியர்களால் அழைக்கப்பட்டதென்றும் நவில்கிறார். இவரது கூற்றை 'இஸ்லாமியக் கலைக் களஞ்சியம்' முற்றும் ஆதரிக்கிறது. 'கி.பி. எட்டாம் நூற்றாண்டு வரையிலும், அதற்குச் சில நூற்றாண்டுகளுக்குப் பின்புங்கூட முஸ்லிம் அரசாங்கம் வரி விதிப்பின் மூலம் கிடைத்த வருமானத்தை ஜிஸ்யா என்னும் பொதுச் சொல்லாலேயே குறித்து வந்தது!'[3]

ஜசியா வரிக்கான சொல் விளக்கம் ஒருபுறமிருக்க, இஸ்லாம் தோன்றிய காலத்திலிருந்து, முஸ்லிம்களுக்கு இரண்டு முக்கிய கடமைகளை அது விதித்து விட்டிருக்கிறது. ஒன்று, ஒவ்வொரு முஸ்லிம் குடிமகனும் ஒவ்வோராண்டும் தனது நிகர வருமானத்தில் 2½% ஜக்காத் வரியாக அரசாங்கக் கஜானாவில் செலுத்தி விடவேண்டும்; வயது வந்த, உடல்நலம் பாதிக்கப்படாத ஒவ்வோர் ஆடவனும் ராணுவத்தில் அவனவனுடைய தகுதிக்கேற்றவாறு பங்கு ஏற்கவேண்டும் என்பது நியதி. அப்படியானால், முஸ்லிம் அரசு செயல்பட்டு வரும் நாட்டில் வதிகின்ற முஸ்லிம் அல்லாதார் நிலை என்ன? அவர்கள் ஜக்காத் வரி கொடுக்க வேண்டியதில்லை; கொடுக்கக்கூடாது. இப்படியே, தாமாக வலிய முன்வரும் பேர்வழிகளை யன்றி, வேறெந்த அன்னிய மதத்தினரையும் கட்டாய இராணுவத்தில் சேருமாறு வற்புறுத்தக் கூடாது; ஆனால், அவர்கள் யாவர்க்கும் அரசு பாதுகாப்பு நல்கிக் காப்பாற்ற வேண்டும். முஸ்லிம் அரசாங்கம் 'திம்மீ' என்னும் அன்னிய மதத் தோழர்களை அமானிதமாகப்

[1] Maulana Muhammad Ali's 'The Holy Quran—Text Translation and Commentary' (Revised edition, Pakistan, 1951), p. 391.

[2] 'Jaza, meaning Compensation'—Nicolas Agnides, 'Mohammedan Theories of Finance and Taxation', p. 398.

[3] Encyclopaedia of Islam, Vol. II, pp. 902-903.

போற்றிக் காவல் காத்தமைக்காக அவர்களே வலிய, மிகக் குறைவாக, அரசுக்கு ஈந்த வரி ஜசியா என்று அழைக்கப்பட்டது. இந்தச் சிறு கட்டண வரியும் பெண்களால், குழந்தைகளால், அடிமைகளால், குருடர் செவிடர் ஊமையர்களால், துறவிகளால், ஏழைகளால், பிச்சைக்காரர்களால் செலுத்தப் பட்டதில்லை. அவர்கள் அவ் வரி விதிப்பினின்றும் விலக்களிக்கப்பட்டனர். எனவே, முஸ்லிம் ஆட்சியில் முஸ்லிமல்லாதார் ஜக்காத் வரி செலுத்தாமல், இராணுவ சேவை புரியாமல், அற்பக் கட்டணத்தை ஜசியாவாகச் செலுத்தி, பாதுகாப்பு உட்படச் சகல சலுகைகளையும் ஆதாயங்களையும் முழுமையாக அடைந்துவந்தனர். இஸ்லாமிய உலக வரலாறு கற்பித்த இதே நற்பாடத்தைத்தான் ஔரங்கசீப் தமது ஆட்சிக்குட்பட்டிருந்த முஸ்லிமல்லாதார்மீது புகட்டினார்.

ஔரங்கசீப் ஜசியா வரியை விதித்தார். அவர் இவ்வரியை விதித்தது வரலாற்று உண்மை. ஆனால் யார் மீது? எப்பொழுது? அவ்வாறு விதித்தபொழுது மதவேறுபாடுதான் காரணமாக இருந்ததா அல்லது வேறு பல அரசியல் காரணங்களும் இருந்தனவா? இவை போன்ற கேள்விகளுக்கு விடை காணுதல் ஈண்டு அவசியமாகிறது. ஏனெனில், மதவேறுபாடு காரணமாக இருப்பின், 80 வரிகளை நீக்கிய பேரரசர் இவ் வரி மூலம் நிறைந்த வருவாயைப் பெற இயலாது என்று அறிந்தும், தாம் அரியணை ஏறி 20 ஆண்டுகளுக்குப் பிறகு இந்த ஜசியா வரியை விதிப்பானேன்?

கி.பி. 6, 7ஆம் நூற்றாண்டுகளில் இஸ்லாம் வெற்றி கண்டபின், இஸ்லாமிய ஆட்சியில் கிறித்துவ யூதச் சிறுபான்மையினரும் வாழ்ந்து வந்தனர். அச் சிறுபான்மையோரின் உரிமைகளைக் காப்பது அரசின் கடமையாயிற்று. இஸ்லாம் வளர்ச்சி பெற்றுப் பிற நாடுகள்மீது வெற்றி கண்ட பொழுது, அந்த அந்த நாட்டு மக்கள் பெரும்பான்மையோராக இருப்பினும், அவர்கள் பாதுகாக்கப்பட வேண்டியவர்கள் —(திம்மீகள்) என்று அழைக்கப்பட்டனர். இந்த வரலாற்று உண்மையை அறிந்த மாமன்னர் ஔரங்கசீப் வளர்ச்சி பெற்று வரும் தமது பரந்த பேரரசின் எல்லாப் பகுதிகளிலும் வாழ்ந்து வந்த அத்தனை குடிமக்களையும் போற்றிக் காப்பதே தமது கடனென்று கருதினார். ஆனால், பல வரிகள் நீக்கப்பட்டு விட்டமையாலும், $2\frac{1}{2}\%$ ஜக்காத் வரி செலுத்த வேண்டிய முஸ்லிம் குடிமக்களே கூடச் சில சமயங்களில் ஏய்ப்பு வித்தையைக் கடைப்பிடித்தமையாலும், அரசுக்குரிய வருமானத்தை ஓரளவு ஈடு

கட்டலாமென்னும் பரந்த நோக்குடன், அரசாங்கம் சிறுபான்மை வகுப்பினருக்கும் ஒரே மாதிரியான பாதுகாப்பை நல்கி வருவதற்கு அறிகுறியாக, ஜசியா வரியை அமலுக்குக் கொண்டு வந்தார். அதிலும், அச் சிறுபான்மையினரின் தோள்மீது சுமக்க முடியாத வரிப்பளுவைச் சுமத்தக் கூடாதென்னும் மனிதாபிமானமே அவரது உள்ளத்துள் குடியிருந்தது. அவர்களுடைய உயிர், பொருள், உடமைகளைப் பாதுகாப்பது அரசின் கடமை; அக் கடமையை அது நிறைவேற்றுவதற்கு அவர்கள் செலுத்திய சிறு கட்டணம்தான் ஜசியா வரி. முஸ்லிமல்லாதோர் 'இரண்டாந்தரக் குடிமக்களாக'க் கருதப்பட்டனர் என்னும் கூற்று இங்கே பொய்த்து விடுகிறது. முஸ்லிம்களைப் போன்றே மற்ற மதத்தினரும் சம அந்தஸ்தான பிரஜா உரிமை பெற்று, முஸ்லிம் குடிமக்கள் செலுத்திய பெரும் ஜக்காத் வரிக்கு மாருகச் சிறு தொகையை ஜசியாவாக மனமொப்பித் தந்தனர். இதுவே உண்மை. 'அவர்கள் தங்கள் மதத்தைத் துறந்து இஸ்லாத்தை ஏற்றுவிட்டால், ஜசியா வரி செலுத்த வேண்டியிருக்காது; எனவே, மதம் மாறச் செய்யும் தூண்டுகோல் இது' என்னும் கூற்றும் பொய்யே. ஏனென்ருல், சிறுபான்மையினர் எவரே கொஞ்சப் பணத்தை ஜசியா வரியாகக் கொடுத்து நிம்மதியுடனிருப்பதை விடுத்து, இஸ்லாத்தை ஏற்பதன் மூலம் $2\frac{1}{2}\%$ என்னும் அபரிமிதமான ஜக்காத்தைச் செலுத்தவும், இராணுவச் சேவை உபத்திரவங்களை வலிய வரவழைத்துக் கொள்ளவும் மனமொப்புவர்?

**வரி விதிப்பின் விவரம் :** அவ் வரி விதிக்கப்பட்ட நிலையையும் அதன் தன்மையையும் டாக்டர் குரைஷி என்பவர் தரும் விளக்கம் தெளிவுபடுத்துகிறது. இந்துக்களின்மீது 10, 20 அல்லது 40 'தங்க' (தங்கம் அல்ல) நாணயம் என்று, அதாவது ஆண்டுக்கு ரூ. $3\frac{1}{8}$, ரூ. $6\frac{1}{4}$, ரூ. $12\frac{1}{2}$ என்னும் வீதத்தில் அவரவர் செல்வநிலைக்குத் தகுந்தாற்போன்று ஜசியா வரி விதிக்கப்பட்டது. ஒன்றும் செய்ய இயலாத, வயது முதிர்ந்த கிழவர்கள், ஊனமுடையோர், குருடர், தங்களின் நியாய பூர்வமான எல்லாச் செலவும் போக இவ் வரியைக் கட்ட இயலாதவர்கள் ஆகியோருக்கு விதிவிலக்கு அளிக்கப்பட்டது. துறவிகள், பூசாரிகள், தாமே சுயமாகச் சம்பாதிக்க இயலாதோர், தங்கள் நேரத்தையும் சக்திகளையும் பூஜையில் செலவிடுபவர்கள் ஆகியோரும் இதைச் செலுத்த வேண்டியதில்லை. ஜசியா வரி இராணுவச் சேவையில் ஈடுபடாதவர்களுக்கு மட்டுமே விதிக்கப்பட்டது. கோட்பாட்டளவில் முஸ்லிம்களுக்கு இராணுவச் சேவை அவசியம். பெண்கள், குழந்தைகள், அரசாங்க ஊழியர்கள் ஆகியோரிட

மும் ஜசியா வரி வசூலிக்கப்படுவதில்லை. உழவர்களும் அவ் வரியைக் கட்டவில்லை என்பதற்கும் ஆதாரம் உள்ளது. வரியும் இலகுவாகவே இருந்திருக்கவேண்டும். ஏனெனில், இதனால் அரசாங்கத்திற்கு நிறைந்த வருமானம் கிடைக்கவில்லை.'[1]

அறிஞர்கள் அனைவரும் ஒருமித்த கருத்துகளையே வலியுறுத்தியுள்ளனர். உழவர்கள்மீது ஜசியா வரி விதிக்கப்படவில்லை; தச்சர்கள், கொல்லர்கள், பொற்கொல்லர்கள், கொத்தர்கள், கூலி வேலை செய்வோர் ஆகிய யாரும் இதைக் கட்ட வேண்டியதில்லை. அரசாங்க ஊழியர்கள் சிறிய பணியில் இருப்பினும் சரியே, தளபதிகளாக இருப்பினும் சரியே, இதனைக் கட்டவில்லை. எனவே, **எல்லாச் செல்வர்கள்மீதும் என்று அல்லாமல், இராணுவச் சேவையிலோ, அரசாங்க ஊழியத்திலோ ஈடுபட மறுத்து, போர்க்கொடியை உயர்த்தும் வாய்ப்புகளைப் பெற்றவர்களிடத்திருந்து மட்டுமே ஜசியா வரி வசூலிக்க முயற்சி எடுக்கப்பட்டது.** ஔரங்கசீபிடம் நூற்றுக்கணக்கான இந்து மன்சப்தார்கள் இருந்தனர். அவர்களிடமும் அது வசூலிக்கப்படவில்லை. ஔரங்கசீபின் இந்து திவான்களில் குறிப்பிடத்தக்கவர் ரசிக் தாஸ் (Rasik Das) என்பவர் ஆவார். அவரிடம் வசூலிக்கப்படவில்லை. பொதுவாக இந்துத் துறவிகள் அனைவருக்கும் விலக்கு அளிக்கப்பட்டிருந்தது. துறவிகளின் வரிசையில் பொதுவாகவே அந்தணர்களுக்குச் சிறப்பான இடம் அளிக்கப்பட்டிருந்தது.

இப்படியெல்லாம் இருந்தும், ஔரங்கசீபின்மீது குற்றம் கற்பிக்கிறவர்கள், 'இந்துக்களிடத்திருந்தும், முஸ்லிமல்லாதாரிடத்திருந்தும் தானே இவ் வரி வசூலிக்கப்பட்டது? அப்படியானால், அவர்கள் வெளிநாட்டிலிருந்து வந்தா இங்குக் குடியேறினார்கள்? ஏன் அவர்கள்மீது மட்டும் முகலாயப் பேரரசர் இந்தத் தனித்தன்மை மிக்க வரியைச் சுமத்த வேண்டும்?' என்று கேட்கிறார்கள். அப் பிரஜைகள் முஸ்லிம்களாக விளங்கவில்லை என்னும் காரணத்துக்காக ஜசியா வரி அவர்கள்மீது திணிக்கப்படவில்லை; ஆனால், அவர்கள் அரசினிடத்திருந்து பெற்ற பாதுகாப்புக்கான ஒரு கட்டணமாகத்தான் செலுத்தினார்கள். இஸ்லாமிய கலைக்களஞ்சியம், வால். I, பக். 1051-ல் இப்படி எழுதுகிறது :

[1] I. H. Qureshi, 'Law applying to non-Muslims' in 'History and Culture of the People of India' Vol. VI., and 'The Delhi Sultanate Administration'.

'(Non - Muslims) may obtain security and protection for themselves, their families and goods by paying Jizya... by payment of which...make a contract with the Islamic community, so that they are not only tolerated, but even have a claim for protection if they are poor...Only the adult males in the full possession of their physical and mental faculties and having the means to pay are liable to tax.'

சிற்றரசர்கள் தங்கள் நலத்தைப் பாதுகாக்கும் பேரரசர்களுக்குக் கப்பம் கட்டுவது தொன்று தொட்டு நிலவி வரும் அனைத்து நாடுகளின் பழக்கமாகும். கப்பத் தொகையைப் பெற்றுக் கொள்ளும் பேரரசர் அச் சிற்றரசர்களுக்கு வேண்டிய சகல உதவிகளை, ஒத்தாசைகளை, பாதுகாப்பை அளித்து வருவார். அதே போன்று, முஸ்லிம் மன்னர் ஆட்சி செலுத்தும் நாட்டில் வதியும் முஸ்லிமல்லாத குடிமக்கள், முஸ்லிம் பிரஜைகள் செலுத்தும் ஜக்காத் முதலிய வரிகளைக் கொடுக்காமல், இராணுவச் சேவைக்கு முற்படாமல், ஜசியா என்னும் கப்பத் தொகையை அரசுக்குச் செலுத்திப் பாதுகாவலை நிலைநாட்டிக் கொள்வார்கள். ஔரங்கசீப் முஸ்லிமல்லாத குடிமக்களுக்கும் சமமான பாதுகாப்பையே வழங்கினர்; அவர்களுள் பலருக்கு மன்சப்தார்ப் பதவியும் வழங்கினர். எனவே, தாங்கள் நியாயபூர்வமாகப் பெற்றுக்கொண்ட நல்லாட்சிப் பாதுகாப்புக்கு ஈடாக அவர்கள் மனமுவந்து ஜசியா 'வரியைக் கப்பமாகச் செலுத்தி, மாமன்னர்க்கு நன்றிக் கடன் தெரிவித்துக் கொண்டார்கள். பிற்காலத்தில் வந்த பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் தங்கள் வெறுப்பைக் கொட்டிக் கவிழ்க்கும் ஆர்வத்தில் ஔரங்கசீபையும், பொதுவாகவே ஜசியா வரியையும்பற்றி யெல்லாம் தவருன பிரசாரங்களைப் புரிந்து விட்டார்கள். இஸ்லாம் தோன்றிய நாளாக, ஔரங்கசீப் காலம் வரையில் உலகின் எத்தனையோ முஸ்லிம் நாடுகளில் அத்தனை முஸ்லிமல்லாதாரான குடிமகனும் ஜசியா வரி என்னும் சிறு கப்பத் தொகையை மனமுவந்து செலுத்தியதாகத்தான் வரலாறு நிரூபிக்கிறதன்றி, சில ஆங்கிலேயர்கள் வேண்டுமென்றே திரித்துரைப்பதே போன்று, அக் குடிமக்கள் 'கசக்கிப் பிழியப்பட வில்லை'.

இஸ்லாத்தின் இரண்டாவது கலீஃபாவாய் விளங்கிய உமர் என்பவரின் ஆட்சியின் போது, சைப்ரஸ் தீவு முற்றிலும் வெற்றி கொள்ளப்படாத நிலையில், அம் மக்களே ஜசியா என்னும் ஈட்டு வரியைக் கொடுக்க முன்வந்தபோது, அவர் அதனை ஏற்கவில்லை. காரணம், அத் தீவு முழுமையாக வெற்றி

கொள்ளப்படவில்லையென்றும், தமது ஆட்சியினால் அங்குள்ள மக்களுக்குப் பூரணமான பாதுகாப்பு அளிக்க இயலவில்லையென்றும் கூறினர். ஔரங்கசீப் இவ் வரலாற்று உண்மையை நன்கறிவார். எனவே, அவர் இஸ்லாமிய நெறி தவறவில்லை; முஸ்லிமல்லாதாரைத் 'தலைவரி' விதித்துத் துன்புறுத்தவில்லை. அவர் மட்டும் தம் கீழிருந்த கோடிக்கணக்கான முஸ்லிமல்லாத குடிமக்களின் வெறுப்புக்கு ஆளாகிவிட்டிருப்பாரானால், ஜசியா வரியை அவர்கள் மனமாரத் தர மறுத்துப் போராட்டம் தொடங்கி யிருப்பரேயானால், கி.பி. 1707 வரை அவரை உயிர் வாழ விட்டு வைத்திருக்க மாட்டார்கள்; ஜசியா வரி விதிக்கப் பட்ட 1679 அல்லது 1680-ம் ஆண்டிலேயே அவரையும் அவரது பேரரசையும் தீர்த்துக் கட்டிவிட்டிருப்பார்கள்!

ஔரங்கசீப் ஜசியா வரியை நியாயபூர்வமாய் விதித்தார்; பெரும்பாலான குடிமக்கள் தங்கள் பாதுகாப்புக்கு நன்றியறிவிப்பாகவும், கட்டணத் தீர்வையாகவும் மனத் திருப்தியுடன் அதைக் கொடுத்தார்கள். ஆனால், பதினெட்டாம் நூற்றாண்டில் பிரிட்டிஷ் பேரரசை விசாலமாக்கிக் கொண்ட ஆங்கிலேயர்கள்தாம் இல்லாத கற்பனைகளை விவரித்து, இந்து - முஸ்லிம் பிளவுக்கு வழிவகுத்து விட்டார்கள். ஆனால், மற்றொரு கண்ணோட்டத்துடன் இதை நோக்குவோம் :

**எதிர்க் கண்ணோட்டம் :** ஜசியா என்பது மதவரியன்று; ஆனால், அது ஒரு ராணுவ வரியேதான் என்போமானால், அக்பர் பேரரசர் தமக்கு முன்பிருந்த டில்லி சுல்தான்கள் விதித்திருந்த அதை நீக்குவானேன்? ஔரங்கசீப் அதை மீண்டும் கொணர்ந்து நுழைப்பானேன்? என்று சிலர் கேட்கின்றனர். அன்றியும், இப் பயனிலா வரி மூலம் வசூலான தொகை அப்படியொன்றும் மிகப் பெரும் செல்வ நிதியன்றே! என்றும் அவர்கள் கேட்கின்றனர். எடுத்துக் காட்டாக, பாதுஷாப்பூர் என்னும் பர்கானவில் 1680-81ஆம் ஆண்டில் வசூலான மொத்தத் தொகை விவரங்களை அக்காலப் பதிவேடு இப்படி வழங்குகிறது :—

அந்தப் பர்கானவிலிருந்த மொத்த முஸ்லிமல்லாத மக்கள் தொகை 1855.

ஜசியா வரி விதிப்பிலிருந்து விலக்குப் பெற்றவர்கள் 1320.

எனவே, ஜசியா வரி செலுத்தியவர்கள் 535.

இந்த 535 பேரும் எவ்வளவு தொகையைச் செலுத்திஞர்கள் என்பதற்கான விவரம் பின்வருமாறு:

ஆண்டு வருமானம் ரூ. 520 வரையுள்ளவர்கள் ரூ. 3-2-0 வீதமும், ரூ. 520 முதல் ரூ. 2500 வரையுள்ளவர்கள் ரூ. 6-4-0 வீதமும், ரூ. 2500க்கு மேல் வருமானமுடையவர்கள் ரூ. 12-8-0 வீதமும் ஜசியா வரி செலுத்த வேண்டும் என்பது அடிப்படை நியதியாகும். இந்த அடிப்படையை முற்சொன்ன 535 பேருக்கும் பொருத்திய வகையில், நிகரம் ரூ. 2950-0-0 மட்டுமே வசூலாயிற்று. எப்படியென்ருல் :—

| அடிப்படை வீதம் | நபர் | தொகை |
|---|---|---|
| ரூ. | | |
| (1) 3-2-0 | 302 | ரூ. 943-12-0 |
| (2) 6-4-0 | 145 | ரூ. 906- 4-0 |
| (3) 12-8-0 | 88 | ரூ. 1100- 0-0 |
| | 535 | ரூ. 2950- 0-0 |

இவ்வளவு சிறு தொகையை வசூலிக்க ஔரங்கசீப் ஏன் வைராக்கியத்துடன் முற்படவேண்டும்? இதனுலன்ருே சிவாஜியேகூட எதிர்ப்புத் தெரிவித்து ஔரங்கசீபுக்குக் கடிதம் எழுதினுர்? என்றெல்லாம் கேள்வி எழுவது நியாயமே. சிவாஜி அக் கடிதத்தை எழுதவில்லை யென்றும், சிவாஜியின் பெயரால் நீலாப் பிரபு (Nila Prabhu) என்னும் அந்தணராகிய பாரசீக மொழி வல்லுநரொருவர் அழகிய பார்சீ நடையில் அதை வரைந்தாரென்றும் நிரூபணமாகி யிருக்கிறது. எப்படி யிருப்பினும், ஔரங்கசீப் ஏன் வலிய இந்துக்களின் வெறுப்புக்கும் மனக் கசப்புக்கும் ஆளாகி யிருக்க வேண்டும்? என்றெல்லாம் கேட்கப்படுவதுமுண்டு. நியாயந்தான்! இன்றைய கண்ணேட்டத்தில் இப்படி யெல்லாம் வினவலாம். ஆனுல், அன்றைய 17ஆம் நூற்ருண்டின் சூழ்நிலையில் என்ன கதியில் பொருளாதார நிலையும், வரி விதிப்பு முறையும் அமைந்து கிடந்தன என்பதைத் திட்டவட்டமாக எப்படி நாம் கூறமுடியும்? பொதுவாக, ஔரங்கசீப் இந்துக்களைத் துன்புறுத்தும் நோக்குடன் அவ் வரி விதிப்பைச் சுமத்தி யிருந்தாலன்ருே இவ் வாதம் எழுகின்றது? ஆனுல், அவரளவில் அப்படி நினைத்ததாகச் சொல்ல முடியவில்லை. ஏனென்ருல், அப் பேரரசர் அனைத்து முஸ்லிம்

களுக்கும் சலுகைகளை வழங்கிவிடவுமில்லை; அனைத்து இந்துக் களையும் கொடுமைகளுக்கு உள்ளாக்கிவிடவுமில்லை என்னும் உண்மையை அவருடைய நூற்றுக்கணக்கான கடிதங்களும் குறிப்புகளும் நிரூபித்துக் காட்டுகின்றன. பொதுவாக வரலாற்று நிகழ்ச்சிகளை ஆராயுமிடத்து, ஜசியா வரி விதிப்பிலிருந்து ஆரம்பத்தில் விலக்களிக்கப்பட்டிருந்த பிராமணர்களுள் சிலர்—(அதாவது, புரோகிதரல்லாத உத்தியோகஸ்தர் முதலியோர்) ஜசியா வரி விதிப்புக்கு உட்படுத்தப்பட்டபோதுதான், சுயநலம் பாதிக்கப்பட்ட இவர்கள் முணுமுணுத்த தாகவும், எதிர்ப்புத் தெரிவித்ததாகவும் தெரிய வருகின்றன. டாக்டர் C. K. கரீம் என்பவர் தமது நூலில், 'ஜசியா வரி விதிப்புக்கு மதம் என்னும் வேடத்தைப் புனைந்து விடுவதில் எந்தச் சிரமத்தையும் அடையவில்லை......(இந்தியாவில்) முதன் முதலாக ஜசியா வரி விதிக்கப்பட்டபோது, பிராமண குலத்தினர் அவர்களுடைய புரோகிதத் தொழில் காரணமாகவும், கல்வித்துறை ஈடுபாட்டின் காரணமாகவும் இதினின்று விலக்களிக்கப்பட்டனர்......உண்மையிலேயே புரோகிதர்களாக இலங்காத, வேறு அலுவல்களைப் பார்த்துவந்த பிராமணர்கள் இராணுவத்தில் சேர்ந்து பணிபுரிய வேண்டும் என்று வற்புறுத்தப்பட்ட சந்தர்ப்பங்கள் வந்து வாய்த்தன...... ஃபிரோஜ்ஷா துக்ளக்கும், ஔரங்கசீபும் இப்படிப்பட்ட கொள்கையைக் கடைப்பிடிக்க வேண்டிய கட்டம் வந்தவுடன், ஆணவம் பிடித்த அந்தணர்களின் உள்ளத்துள் அது பெரும் புரட்சியைக் கிளப்பி விட்டது' என்று வரைகிறார்.[1] இதுவே உண்மை. எதுவரை அந்தணர் குலம் முழுதும் விலக்குப் பெற்றிருந்ததோ அதுவரை ஜசியாவைப் பாராட்டிய பிராமணர்கள், தாங்களும் ராணுவச் சேவை புரிய வேண்டும், அல்லது ஜசியா கட்டணம் செலுத்த வேண்டும் என்னும் கட்டத்தை எட்டியவுடன் எதிர்ப்புத் தெரிவிக்க முற்பட்டனர். எல்லாம் சுயநலம்!

இங்கு நாம் ஷம்ஸ் சிராஜ் அஃபீஃப் என்பவர் தமது அரிய 'தாரிக்கெ ஃபிரோஜ்ஷா' என்னும் நூலில் தரும் ஒரு தகவலைக் கவனிக்க வேண்டும். இந்துத் துறவிகள், புரோகிதர்கள் என்னும் வரிசையில் அந்தணர்கள் அமர்த்தப்பெற்று, ஜசியாவிலிருந்து ஆரம்பகால முதலே சிறப்பான விலக்கு விதியளிக்கப் பெற்றிருந்தனர். ஃபிரோஜ்ஷா துக்ளக்தாம் முதன் முதலாக அவ் விலக்குப் பெற்ற பிராமணர்கள்மீதும் ஜசியா வரியை விதித்தார். எனவே, இவர்கள் கொதித்தெழுந்தனர்;

[1] 'What happened in Indian History' p. 81.

உண்ணுவிரதமிருந்தனர். ஆனாலும், வரிச் சுமை கம்மியாக்கப் பட்டதே யன்றி, முற்றும் நீக்கப்படவில்லை. எனவே, அதுவரை ஜசியாவுக்கு எதிர்ப்புத் தெரிவிக்காத அந்தணர்கள், தங்கள் தன்னலம் பாதிக்கப்பட்டதும் கிளர்ந்தெழுந்தார்கள் என்று அவ்வாசிரியர் கூறுகிறார்.

இதே போன்றுதான் ஔரங்கசீபின் ஆட்சியிலும் நிகழ்ந்தது. விலக்களிக்கப்பட்ட சில பிராமணர்கள் வரி விதிப் புக்கோ ராணுவச் சேவைக்கோ உட்படுத்தப்பட்டதும் நீலாப் பிரபு மூலம் கண்டனக் கடிதத்தைப் பேரரசருக்கு எழுதியதாகத் தெரிய வருகிறது. எவ்வாறாயினும், அவர் விடாப்பிடியாய் இதில் கண்டிப்புச் செலுத்தியது கண்டிக்கப்படத் தக்கதுதான். ஏனெனில், இந் நாட்டிற் பிறந்து இந் நாட்டிலேயே வாழும் மக்கள்மீது அவர் சந்தேகக்கண் கொண்டு பார்வையோட்டினார் என்றும், இஸ்லாமிய மதத் தத்துவ அடிப்படைக்கே முக்கியத் துவம் கொடுத்தார் என்றும், விலக்குப் பெற்றிருந்த இனத்தின ரையும் அவர் வரி விதிப்புக்கு உள்ளாக்கி மகிழ்ந்தார் என்றும் பிற மதத்தினர் கருத்துத் தெரிவிப்பதற்கு அவர் வித்தூன்றி விட்டார். ஜசியா வரி தன்னளவில் கொடுமையற்றதே யென்றாலும், ஔரங்கசீப் அதை விதித்த முறையும், காலமும் நியாயமற்றன வென்பதே இந் நூலாசிரியரின் திட்டவட்டமான கருத்தாகும். நியாயமான வரியையும் தேவையற்ற நேரத்தில் அவர் புகுத்தியதால், தமது பெயரையும் கெடுத்துக் கொண் டார்; ஜசியாவுக்கும் கெட்ட பெயரைச் சம்பாதித்துத் தந்து விட்டார். ஔரங்கசீப் அரசியல் விவேக நுண்மதிக் குறைவு படைத்தவர் என்பதற்கு இதுவுமோர் எடுத்துக்காட்டு. அவர் இவ் வரியை விதித்தது இமாலயத் தவறேயாகும்.

## 'இந்துக்களுக்கு இடமில்லை' என்னும் குற்றச்சாட்டு

இனி, அடுத்த குற்றச்சாட்டைக் கவனிப்போம். பேரரசர் ஔரங்கசீப் தமது அரசாங்கத்தில் வேலை பார்த்துவந்த இந்து எழுத்தர்களையும் கணக்கர்களையும் வேலை நீக்கம் செய்து, அப்படிக் காலியான இடங்களிலெல்லாம் முஸ்லிம்களை நியமித்து விட்டார் என்பது ஒரு பொதுவான குற்றச்சாட்டாகும். இதுவும் உண்மைக்குப் புறம்பானதே. ஒரு பொய் திரும்பத் திரும்ப உறுதியுடன் இயம்பப் பெறுமானால், அதுவே உண்மையாக ஆகி விடும் என்பது ஹிட்லர் என்னும் ஜெர்மானிய சர்வாதிகாரி யின் கூற்றாகும். அதைப் போன்று, ஔரங்கசீப்மீது சுமத்தப் பட்டுள்ள இப் பொய்க் குற்றச்சாட்டு, மீண்டும் மீண்டும் ஒரே

மாதிரி பல ஆண்டுகளாக ஒப்பிக்கப்பட்டு, மெய் போலத் தோற்றமளிக்கச் செய்யப்பட்டு விட்டது. நாம் முன்பு எடுத்து வழங்கியுள்ள மன்சப்தார்ப் பட்டியல்களில் எத்தனை மடங்கு கூடுதலான விகிதாசாரத்தை இந்துக்களும் 'அமீரெ ஆஜம்' என்னும் உயரிய அந்தஸ்தில் பெற்றிருந்தனர் என்பதைப் புள்ளி விவரங்களுடன் விளக்கியுள்ளோம். மேலும், அக்பர் பேரரசரின் காலத்தில் இந்துக்களுக்கு வழங்கப்பட்ட சலுகையினும் 8 மடங்கத்துணை அதிகமான சலுகையை ஔரங்கசீப் வழங்கினர் என்பதையும் நாம் எடுத்துக் காட்டியுள்ளோம். உயர் மட்டத்தில் இருந்த பிரபுக்களையும் அமீர்களையும் பொறுத்த மட்டிலேயே அத்துணைச் சகாயமும் சலுகைகளும் காண்பிக்கப்பட்டன வென்றால், மிகவும் சாதாரண அடி மட்டத்திலிருந்த உத்தியோகஸ்தர்களான கணக்கர்களைப்பற்றியும், எழுத்தர்களைப்பற்றியும் நாம் சொல்லவும் வேண்டுமோ? நாட்டின் ஆட்சிக்குத் தேவைப்படும் எண்ணற்ற எழுத்தர்களையும் கணக்கர்களையும் ஔரங்கசீப் வெளியிலுள்ள முஸ்லிம் நாடுகளிலிருந்து தருவித்து, அவர்கள் வசம் சகலவற்றையும் ஒப்படைத்திருக்க முடியுமா? இந்தியாவிலுள்ள இந்துக்களுக்குப் பதிலாகப் பாரசீக, அராபிய துருக்கி நாட்டு முஸ்லிம்களா இங்கு வந்து சேர்ந்தார்கள்? இன்று மட்டும் அல்லாமல், 17ஆம் நூற்றாண்டிலும்கூட இந்துப் பெருங்குடி மக்களின் மக்கள் தொகை 85 முதல் 90% வரை கூடுதலாக இருந்திருக்கத்தான் வேண்டும். இதில் சந்தேகத்திற்கோ, வாக்குவாதத்திற்கோ இடமே இல்லை. இந் நிலையில், அதிலும் கீழ்மட்டத்தில் பல நூற்றுக்கணக்கான கணக்கர்களையும் எழுத்தர்களையும் ஔரங்கசீப் நீக்கிவிட்டு, உள்ளூர் முஸ்லிம் எழுத்தர்களை எவ்வாறு புகுத்தியிருக்க முடியும்?[1] அது முற்றிலும் முடியாதன்றே? அவ்வாறு முயல ஔரங்கசீப் முற்பட்டிருப்பாரேயானல், அது முற்றிலும் மடமையான செயலாகும். மாறாக, ஔரங்கசீபே அரசாங்க நியமனங்களுக்கும் மதத்திற்கும் யாதொரு தொடர்பும் இல்லை என்றும் மதம் குறுக்கிடலாகாது என்றும் கூறியுள்ளார்.[2]

இந்து அமீர்கள், தளபதிகள், உபதளபதிகளன்றி, பல நூற்றுக்கணக்கான இந்து எழுத்தர்களும் ஔரங்கசீபின் ஆட்சியில் பணிவிடையில் இருந்தனர். மாகாணங்களிலும் பல இந்துக்கள் திவான்களாகவும், வஜீர்களாகவும், ஃபவுஜ்தார்

[1] Prof. R. Sathianathier—History of India, Vol. II. p. 390. J. N. Sarkar, History of Aurangzeb, Vol. III. & IV.

[2] 'Religion has no connection with secular business, and in matters of this kind bigotry should find no place'—Aurangzeb's Letters,

களாகவும் பணியாற்றி வந்தனர். குஜராத் மாகாணத்தின் திவானுகப் பணியாற்றிவந்த ரசிக்தாஸ் என்பவருக்கு ஔரங்க சீப் நிலவரி ஆணைகளைப் பிறப்பித்ததை முன்னரே பார்த் தோம்.

எழுத்தர்களும், கணக்கர்களும் கரோரிகள் (Karori) என்று அழைக்கப்பட்டனர். இவர்களில் பெரும்பாலானோர் 'காயஸ்தர்' குடும்பத்தைச் சார்ந்தவர்கள். இவர்களும் அந்த ணர்களின் ஒரு பிரிவினரே. காயஸ்தர்கள் மட்டுமின்றி, பிற பிரிவினரும் அச் சேவகத்தில் சேர்த்துக்கொள்ளப்பட்டனர். ஆனல், அதே நேரத்தில் அரசாங்க அலுவலகங்களின் பணி களில் சேர்வதற்கும் முஸ்லிம்களுட்பட இந்தியர்கள் எல்லோருக் கும் தாராளமாக வாய்ப்புக் கொடுக்கப்படவில்லை யென்பது உண்மை. இதன் காரணம், நிர்வாக மொழியாகப் பாரசீக மொழி இருந்ததுதான் ஆகும். ஆயினும், பாரசீகர்களும் தாராளமாகச் சேர்த்துக் கொள்ளப்படவில்லை என்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கது.[1] ஆனல், இந்துக்கள் நீக்கப்பட்டனரா? என்பதுதான் கேள்வி. இங்கு ஔரங்கசீபின் ஆட்சியில் நிகழ்ந்த நிகழ்ச்சி ஒன்றை நடந்தவாறே குறிப்பிடுவது மிகவும் பொருத்த முடையதாகும்.

போர் வீரர் ஒருவர் மாதச் சம்பளம் வாங்கச் சம்பளம் பட்டு வாடாச் செய்யப்படுமிடத்திற்குச் சென்று, வெகுநேரம் காத் திருந்து பார்த்தார். அந்தக் கணக்கர் கவனிப்பதாகத் தெரிய வில்லை. நீண்ட நேரம் பொறுத்திருந்தும் அந்தக் கணக்கர் தம் வேலையைக் கவனித்துக் கொண்டிருந்தாரே தவிர, இந்தப் போர் வீரரை ஏறெடுத்தும் பார்க்கவில்லை. எனவே, ஆத்திரமடைந்த இப் போர் வீரர் கோபாவேசத் துடன் அந்தக் கணக்கருடைய பல்லை உடைக்கப் போவ தாகப் பயமுறுத்தினுர். அந்தக் கணக்கர் ஒன்றும் சொல்லவில்லை; சம்பளத்தைக் கொடுத்துவிட்டார்... ...வஞ்சம் தீர்க்கக் கருதிய அந்தக் கணக்கர் அந்தப் போர் வீரரின் குறிப்பேடுகளில் அப் போர்வீரரைப்பற்றிய விளக்கக் குறிப்புக் களில் அப் போர்வீரருக்கு மேல் வரிசையில் இரண்டு பற்கள் இல்லை என்று குறிப்பு எழுதினுர்... ...சில மாதங்கள் கழிந்தன. மீண்டும் சம்பளம் பெற அந்தப் போர்வீரர் கணக்கரிடம் சென்றுர்...ஆனல், குறிப்பேட்டில் குறிப்பிடப்பட்டிருப்பதற்கு மாருகப் போர்வீரருக்கு இரண்டு பற்கள் அதிகமாக இருந்தன...

[1] Elliot & Dowson, Vol. VII, p. 295.

எனவே, குறிப்பேட்டின்படி சம்பளத்திற்கு உரியவர் அந்த நபர் இல்லை எனக் கணக்கர் அறிவித்து விட்டார்......போர் வீரருக்கு வேறு வழியே இல்லை...குறிப்பேட்டில் உள்ளவாறே அந்தப் போர் வீரர் இரண்டு பற்களைப் பிடுங்கிக்கொள்ளச் சம்மதித்தார் என்று இந் நிகழ்ச்சியை மனுச்சி தம் நூலில் குறிப்பிட்டுள்ளார்.[1] மேற்கண்ட நிகழ்ச்சியிலிருந்து ஓர் உண்மையை நாம் அறிய முடிகிறது. எழுத்தர்களும் கணக்கர்களும் முகலாயர்களின் பேரரசில் பெரும் வல்லமையைப் பெற்றிருந்தனர். அதனுடன், லஞ்சம் பெறுவதிலும் அவர்களுக்கு ஈடு இணை கூறமுடியாது. மேலும், ஔரங்கசீபின் ஆட்சியில், குறிப்பாக எழுத்தர்கள் மிகவும் ஒழுங்குமுறை யின்றி நடந்து கொண்டார்கள் என்பதற்கும் ஆதாரங்கள் நிறைந்துள்ளன. ஓர் உதாரணத்தை மட்டும் கொடுக்கலாம்:

ஷஹாபுத்தீன் தாலிஷ் என்பார் ஓர் எழுத்தாளர்; குறிப்பாசிரியர்; வரலாற்று ஆசிரியர்; புலவர் போன்று அழகிய நடையில் எழுத வல்லவர். தாலிஷ், ஷாயிஸ்தகானின் கீழும், மீர் ஜும்லாவின் கீழும் பணியாற்றியுள்ளார். 1659-1665 வரையில் உள்ள கணக்கர்கள், எழுத்தர்கள் ஆகியோரின் ஆதிக்கத்தை விவரிக்கும் பொழுது தாலிஷ் கூறுகிறார்: ‘இந்தத் திருட்டு எழுத்தர்கள் எவ்வாறு போர் வீரர்களை நச்சரிக்கிறார்கள், நசுக்குகிறார்கள் என்பதைப் பேரரசரிடம் சென்று எவரேனும் ஒருவர் முழுமையாகவும், தாராளமாகவும் எடுத்துச் சொல்லுவார் என்று திடமாக நம்புகிறேன்......இராணுவம் இந்து எழுத்தர்களாலும் கணக்கர்களாலும் நெருப்பை வணங்கும் அடிமையைவிட மிகவும் கேவலமாகவும், யூதனின் அசுத்தமான நாயைவிட மிக மட்டமாகவும் நடத்தப்படுகிறது......உதவித்தொகை பெறுபவர்கள் தங்கள் ஊதியத் தொகையைப் பெறும்வரை கச்சேரியில் கடுமையான தொந்தரவுகளுக்கு ஆளாக்கப்படுகிறார்கள்.’[2] இக் கூற்றிலிருந்து எழுத்தர்களின் தொந்தரவுகள், கணக்கர்களின் தொல்லைகள் முதலியன வெளியாவது ஒருபுறமிருக்க, மக்களின் கல்வியறிவு நிலையும் மிகவும் பின்தங்கிய நிலையிலேயே இருந்திருக்கவேண்டும் என்பதும் தெளிவாகிறது. மன்சப்தாரி முறை மிக ஆழமாக வேரூன்றி இருந்ததாகச் சொல்லப்படும் அந்த 17ஆம் நூற்றாண்டிலேயே இராணுவம் எழுத்தர்களாலும், கணக்கர்களாலும் மிகக் கேவலமாக நடத்தப்பட்டது என்றால், எழுத்தர்களின் செல்வ நிலையையும் செல்வாக்கையும் அவர்கள்

[1] மனுச்சி, வால். II, பக். 449.
[2] Bodleian MSS 589: 129 & 131a quoted by Jadunath Sarkar, ‘Mughal Administration’ p. 167.

இழைத்த கொடுமையையும் நாம் ஒருவாறு யூகிக்கலாம் அல்லவா? ஆகவே, அச் சூழ்நிலையில் தாலிஷ் குறிப்பிட்டவாறு பேரரசரிடம் பல புகார்கள் முறையிடப்பட்டதன் பேரில், மிகவும் படுமோசமாக நடந்துகொண்ட சில எழுத்தர்கள் நீக்கப்பட்டிருத்தல் கூடும். அவர்களுள் இந்து எழுத்தர்களும் இருந்திருக்கலாம். ஆனல், இதனல் இந்து எழுத்தர்கள் அனைவரும் நீக்கப்பட்டனர் என்ரே, முஸ்லிம் எழுத்தர்கள் அனைவருமே ஒழுங்காக நடந்து கொண்டிருப்பர் என்ரே கூறிவிட முடியாது. எனவே, அச் சூழ்நிலையில் ஔரங்கசீப் செய்தது இதுதான்: முதலில் பேரரசர், லஞ்சம் வாங்குவதாகவும் கொடுமையுடன் நடப்பதாகவும் புகாருக்கு உட்பட்ட இந்து எழுத்தர்கள் பலரை வேலை நீக்கம் செய்யுமாறு உத்தரவிட்டார். ஆனல், அடுத்த ஆண்டில் ஒரே பணியில் ஓர் இந்து எழுத்தரும், ஒரு முஸ்லிம் எழுத்தரும் ஒத்தாற்போல் நியமிக்கப்பட்டனர். இதுதான் உண்மையாகும். இதற்கு மாருக, இந்துக்கள் யாவரும் நீக்கப்பட்டனர் என்று கூறுவது பொருத்தமற்றது. பேராசிரியர் ஜஅஃபர் காஃபீ கானின் ஆதாரத்தை எடுத்துக் காட்டி, ஔரங்கசீபின் எதிரிகள் பேனைப் பெருமாளாக்கி விட்டனர் என்கிருர். என்னவெனில், ஹிஜ்ரி 1082ஆம் ஆண்டில், கையூட்டம் பெறும் இந்து எழுத்தர்கள், திவான்கள், நிலவரி வசூலிப்போர்கள் ஆகியோரை நீக்குமாறும், அவ்விடங்களில் முஸ்லிம்கள் நியமிக்கப்படலாம் என்றும் ஓர் உத்தரவு பிறப்பிக்கப்பட்டது; என்ருலும், இந்த உத்தரவை மற்ருெரு ஃபர்மான் சிவில் இராணுவ இலாக்காக்களில் ஓர் இந்து, ஒரு முஸ்லிம் என்று மாறி மாறி நியமிக்கப்பட வேண்டும் என்று மாற்றி விட்டது. ஏனெனில், இதனல் ஒருவர் மற்ருெருவருக்குக் கையூட்டம் பெறுவதற்குத் தடையாக இருப்பார். எனவே, எம்முறையாலேனும் லஞ்சம் தடுக்கப்படவேண்டும் என்பதே மன்னரின் குறிக்கோள். ஏனெனில் காஃபீ கான், மனுச்சி, தாலிஷ், பூஜிதர் பூஜியோ[1] ஆகிய அறிஞர்களின் ஆதாரங்கள் அன்றைய சூழ்நிலையில் லஞ்சம் அதிகமாகத் தாண்டவமாடிற்று என்பதையே நிரூபிக்கின்றன. உண்மை இவ்வாறிருக்க, ஔரங்கசீபின் நன்முயற்சிகளுக்கு மாற்றமான விளக்கங்களையும் உண்மைக்குப் புறம்பான கருத்துகளையும் பொருத்திக் காட்டி முரணன தோற்றத்தை உருவாக்கி விடுவது பழைய மரபாகி விட்டது.

[1] Father Buzeo என்னும் போர்த்துகீசியர் ஒரு கணித மேதாவி; தாராவுக்கும் ஔரங்கசீபுக்கும் நண்பர்; ஜஅஃபர் கானுக்கும் (ஔரங்கசீபின் தலைமைச் செயலருக்கும்) நண்பராவார். — மனுச்சி, வால். II, பக். 154.

## ஔரங்கசீபும் ஆலயங்களும்

ஔரங்கசீப் இந்து ஆலயங்களை யெல்லாம் இடித்தார் என்பது ஒரு பெருங் குற்றச்சாட்டு. மீண்டும் மீண்டும் ஒரு கருத்தை வலியுறுத்திப் பேரரசர் கொடுமையுண்டு பண்ணிய தாகச் சித்திரிக்கும் நூல்கள் அதே பேரரசரின் நீதி மனப் பான்மையையும், அன்னாரின் சமயச் சகிப்புத் தன்மையையும் எண்பிக்கும் முறையில் அக்காலத்தவர்கள் விட்டுச் சென்ற குறிப்புகளைப்பற்றி ஏன் எதுவுமே கூறுவது கிடையாது? பேரரச ரின் தாராள சகிப்பு மனப்பான்மையை வெளியிட்டுக் காண்பிக் கும் பல ஆணைகளுள் ஒன்றையேனும், காப்டன் அலெக்சாந்தர் ஹாமில்டன், ஓவிங்டன் ஆகியோர் வழங்கும் ஆதாரங் களுள் எதையேனும் நூலாசிரியர்கள் குறிப்பிடுவதே கிடை யாது. இது ஏன்? இஸ்லாத்தின் அடிப்படைக் கருத்துகளையும் திருமறையின் விளக்கங்களையும் விவரிக்கும் அறிஞர்கள் அவற்றை ஒருபுறம் கூறிவிட்டு, மறுபுறம் அதே உரைகல்லில் ஆராயாமல் வேறுவிதமாகத் திரும்பி விடுகின்றனர்.

முதலாவதாக, இஸ்லாமிய சமயமோ அல்லது எந்த மதமோ ஆலயங்களை அழிக்குமாறு போதிக்க வில்லை. சமயச் சகிப்புத் தன்மைக்குக் கலங்கரை விளக்கமாக அமைந் தார்கள் நபிகள் நாயகம். அன்னார் யூதர்களுக்கும், கிறித்துவர் களுக்கும், பிறர்க்கும் சமயச் சகிப்புத் தன்மையை நடைமுறை யில் தம் சீரிய செயல்களால் எடுத்துக் காட்டினார்கள்; வாழ்ந்து காட்டினார்கள். எதிரிகளும் போற்றித் தலைசாய்க்கும் வண்ணம் அவர்களின் செயல்கள் மிளிர்ந்தன. இஸ்லாம் போற்றிடும் வலியுறுத்தும் சிறந்த குணநலன் ஒன்று இருக்குமேயாயின், அது சகிப்புத் தன்மைதான்; வேறு ஒன்றுமில்லை. மக்காவில் இருக்கும் பொழுதும் சரி, மதீனாவில் இருக்கும் பொழுதும் சரி, நபிகள் நாயகம் சகிப்புத் தன்மைக்கு எடுத்துக்காட்டாக, அழகிய முன் மாதிரியாக விளங்கினார்கள். சமயச் சகிப்புத் தன்மையை வலி யுறுத்தும் மதம் அதே சகிப்புத் தன்மையை உதறித் தள்ள வேண்டும் என்று போதிப்பதாகச் சாற்றுவது வரலாற்று உண் மைக்கு முற்றிலும் மாறானது. பிற சமய மக்கள் முஸ்லிம்களிடத் தில் சகிப்பற்ற தன்மையுடன் நடந்து கொண்டனர் என்பதற்குத் தான் பல வரலாற்று உதாரணங்கள் உள்ளன.[1]

[1] One of the commonest charges brought against Islam historically and as a religion by Western writers is that it is intolerent. This is turning the tables with a vengeance when one remembers various facts—one remembers that not a Muslim is left alive in Spain or Sicily or Apulia—one remembers that not a Muslim was left alive and not a

இஸ்லாமிய சமயம் சகிப்புத் தன்மையைத் திட்டவட்டமாகத் தனது திருமறையின் பல திருவசனங்கள் மூலம் வற்புறுத்தி விட்டிருக்கும்போது (உ - ம். 2 : 256), அத் திருமறையைப் பன்முறையும் திரும்பத் திரும்ப ஓதிப் பொருளுணர்ந்த பெரு ஞானியாகிய பேரரசர் ஔரங்கசீப், சமய வெறி கொண்டு, சகிப்புத் தன்மையை உதறி யெறிந்து அவ்வழியில் சென்றிருப்பாரா? என்பதே வினவாகும். அப்படி அவர் சகிப்புத் தன்மையைக் கடைப்பிடித்திருந்தால், ஏன் வரலாற்றாசிரியர்கள் பலர் 'ஔரங்கசீப் மதவெறி பிடித்து இந்துக் கோயில்களை இடித்துத் தள்ளினார்' என்று ஓயாமல் வரைகின்றார்கள் என்னும் கேள்வி நியாயமாகவே எழுகின்றது. மனுச்சியோ, பெர்னியரோ பேரரசர் இந்து ஆலயங்களை அழிக்குமாறு கட்டளை பிறப்பித்தார் என்று எங்கும் குறிப்பிட வில்லை. டாக்டர் C. K. கரீம் தமது நூலாகிய 'What happened in Indian History' என்னும் ஆராய்ச்சி நூல் பக். 136–ல் 'ஔரங்கசீப் இந்துக் கோயில்களை இடித்து நிர்மூலமாக்கினார் என்னும் குற்றச் சாட்டும் முழுப் புரட்டேயாகும்' என்று வரைந்துவிட்டிருக்கிறார். சமீபத்தில் வெளியான ஒரு பத்திரிகைக் கட்டுரையில், சில மன்னிக்க முடியாத(கற்பழித்தல்)குற்றங்களைப் புரிந்த சில கயவர்கள் ஒரு காசி ஆலயத்துள் புகுந்து அங்குப் புகலிடம் தேடி, மீண்டும் அதே குற்றங்களை அங்கிருந்தவாறே தொடர்ந்து புரிந்து வந்தமையால் வெகுண்ட பேரரசர் அக் கயவர் பதுங்கிக் கிடக்கும் கயமைத் தொழில் புரிந்த இடத்தைத்தான் தகர்த்து அவர்களைக் கைது செய்யக் கட்டளையிட்டாரன்றி, மதவெறி பிடித்துக் கோவிலை இடித்துத் தரை மட்டமாக்கச் சொல்லி ஏவலிடவில்லை என்று தகவல் அறிவிக்கப்பட்டிருந்தது. இங்ஙனமெல்லா மிருந்தும், மஆசிரெ ஆலம்கீரி, பாதுஷா நாமா, மிர்அத்தெ அஹ்மதீ, தாரீக்கெ ஃபெரிஷ்தா ஆகிய நூல்கள் மசூதிகள் பல தகர்க்கப் பட்டதாகப் பட்டியல்களைத் தருகின்றன. இது ஒருபுற மிருக்க, அதே நேரத்தில் பேரரசர் ஔரங்கசீபே கூட, மசூதிகள் தகர்க்கப்பட்டதாகச் செய்தி வந்திருப்பதைக் கேட்டு அதிர்ச்சி யுற்றார் என்றும் கேள்வியுறுகிறோம். எனவே, வரலாற்று மாணவன் என்ற கண்கொண்டு இப் பிரச்சினையை உற்றுநோக்குங் கால், நிச்சயமாக இரண்டிலும் உண்மை இருக்கும். ஆனால்,

---

mosque left standing in Greece ... Md. Marmaduke Pickthall, 'Cultural side of Islam', Lectures delivered in Madras - V Lecture ('Tolerance').

'The extinction of race consciousness as between Muslims is one of the outstanding moral achievements of Islam and in the contemporary world there is a crying need for the propogation of this Islamic virtue'—Arnold Toynbee.

உண்மையோ இல்லையோ, இன்று வரை ஒரு பகுதியை நாம் அறிந்துள்ளோம்; அறிய வேண்டிய மறு பகுதியை இதுவரை அறியவில்லை.

பேரரசர் ஔரங்கசீபின் ஆணை ஒன்று, ஓர் மசூதியில் (அஹமத் நகர்) முஸ்லிம்கள் தொழுகையினின்று தடுக்கப்படுவதாகக் கூறுகின்றது. எனவே, அந் நகர்க் கொத்தவாலுக்கும் வஜீருக்கும் பேரரசர் கட்டளை ஒன்றைப் பிறப்பித்தார்: 'ஆலம்கீர் விடுக்கும் ஃபர்மான்.....நகர வாசலுக்கு அருகில் ஜுமுஆ மஸ்ஜித் அமைந்திருக்கிறது. அம் மசூதியில் ஓர்ஆண்டு காலமாக முசல்மான்களை அவர்கள் (இந்துக்கள்) தொழுவதிலிருந்தும் தடுக்கின்றனர்; இனி எவரும் முசல்மான்களைத் தொந்தரவு செய்யாமல் கவனித்துக் கொள்ளவும்.' இந்த ஃபர்மான் மிர்அத்தெ அஹ்மதீயில் இணைக்கப்பட்டுள்ளதென்று S. M. ஜஅஃபர் மேற்கோள் வழங்குகிறார்.[1] பேரரசரே தமக்கு மாற்றமான செய்தி கிடைத்திருப்பதைச் சுட்டிக்காட்டி, அதே நேரத்தில் மிகவும் நயமாக, இதமாக, தடுக்கும் மக்களைத் தடுக்காமல் இருக்கும்படி கேட்டுக்கொள்ளுமாறுதான் மேற்கண்ட ஆணை மூலம் கட்டளையிடுகிறாரே ஒழிய, இதற்கு எதிர் நடவடிக்கையாக ஆலயங்களை இடிக்கவேண்டும் என்று ஏவி விட்டுள்ளாரா?

**இந்துக் கோயில்களுக்கு ஔரங்கசீபின் ஆணைகள்:** இந்த ஃபர்மான் ஔரங்கசீப் அரியணை ஏறிய 12ஆம் ஆண்டில் (கி.பி. 1671இல்) பிறப்பிக்கப்பட்டது. 12 ஆண்டுகள் வரை தொடர்ந்து மசூதிகள் பல அழிக்கப்பட்டுத்தாம் வந்தன. எவ்வாறு ஜாத்தியர்கள் கல்லறைகளை நிர்மூலமாக்கினார்கள்— குறிப்பாக, அக்பரின் கல்லறையைத் தரைமட்டமாக்கினார்கள் என்பதை நாம் நம்ப இயலாதோ, அதுபோன்றே பொறுமைக்கும் சகிப்புத் தன்மைக்கும் பெயர் போன இந் நாட்டினர், மசூதிகளை அழித்திருக்க முடியுமா என்பதை நம்ப முடிவதில்லை. ஆனால், பேரரசரின் மேற்குறிப்பிட்ட ஆணை இதனை உறுதிப்படுத்துகின்றது. இது போன்றே, அனைவரும் நம்புவதற்கு மாறாக, ஔரங்கசீப் காசி விசுவநாதர் கோயிலுட்பட அனேக வரஞ்சி ஆலயங்களுக்கு நிலங்களைத் தானமாக வழங்கியுள்ளார்! இது நம்ப முடியாத செய்தியாகத் தோன்றலாம். எனினும், உண்மையில் அவருடைய ஆணைகள் இவற்றை நிரூபிக்கின்றன. இதனினும் விந்தைக்குரியது என்னவென்றால், ஔரங்கசீப் கோயில்கள் கட்டுவதற்கு மானியத் தொகைகளை அளித்தார்!

[1] S. M. Jaffar, 'History of the Mughal Empire—Babur to Aurangzeb' p. 291.

**உதாரணங்கள் :** (1) ராஜா ராம் சிங் (Raja Ram Sing) என்பாருக்குக் கோயில் கட்ட மானியம் வழங்கி, 'மஹா ராஜாதி ராஜா' என்ற விருதும் அளிக்கத்தக்க அளவுக்கு மரியாதை செய்தார். இக் கோயிலைக் கட்டி முடித்தவர் முஹல்லா மாதவ ராவ் என்பவராவார். (2) மற்றோர் ஆலயம் 'பகவத் கோசெய்ன்' (Bagavat Gosain) ஆகும். (கி.பி. 1682.) (3) காசி நகரிலேயே ஒரு மசூதிக்கு அருகில் 'கோசெய்ன் ராமஜீவன்' என்பவருக்கு ஆலயம் ஒன்றைக் கட்டுவிக்குமாறு கி.பி. 1689ஆம் ஆண்டில் ஔரங்கசீப் ஆணை பிறப்பித்தார். அவ்வாலயம் கட்டி முடிக்கப்பட்ட பின்னர், அவருக்கு நிலமானியங்கள் கொடுக்கப்பட்டன. ஔரங்கசீப் உண்மையில் மத விவகாரங்களில் பெரிதும் தாராளத் தன்மையைக் கடைப்பிடித்தார். **காசியில் இருந்த வைதிக அந்தணர்களுக்குத் தீமையும் அநீதியும் விளைவிக்கப்பட்ட செயலைக் கண்டித்ததோடு நின்று விடாமல், தமது கவர்னருக்கும் மடல் ஒன்றையும் தீட்டி,** கொடுமை இழைப்பவர்களைத் தண்டிக்குமாறு உத்தரவுமிட்டார்.

பேரரசர் ஔரங்கசீப் காசியின் ஆளுநர் அபுல் ஹசன் என்பவருக்குக் கி.பி. 1660ஆம் ஆண்டில், ஃபர்மான் ஒன்றைப் பிறப்பித்தார். சமீபத்தில் Royal Asiatic Society of Bengal என்னும் அரசினர் கலைக்கழகம் இந்த ஆணையைப் பதிப்பித்தது. அதன் வாசகம் பின்வருமாறு:

'நீதி மிகுந்த ஆட்சி நிலவும் எமது மேன்மை மிகுந்த பேரவைக்கு இப்பொழுது செய்தி வந்துள்ளது...சிலர் காசி நகரிலிருக்கும் இந்துக் குடிமக்களைத் துன்புறுத்தி வருகின்றனர்...அங்குள்ள கோயில்களை நிர்வகிக்கும் சில பிராமணர்களையும் (துன்புறுத்தி வருகின்றனர்)...அந்தணர்களை அவர்களின் பழைய பதவிகளிலிருந்து நீக்கவும் விரும்புகின்றனர்...

'நாம் விடுக்கும் அரசாக்கினை என்னவென்றால், எந்த ஒரு மனிதனும் சட்ட விரோதமான முறையில் தலையிடுவதோ, அந்தணர்களையும் மற்றுமுள்ள இந்துக்களையும் உபத்திரவப் படுத்துவதோ அறவே தகாது. அவர்கள் வகித்துவரும் பொறுப்பில் அவர்கள் தொடர்ந்து நீடித்துச் செயல்படுவதுடன், முழு மனவமைதி பெற்று, இறைவன் எமக்களித்துள்ள இம் மாபெரும் சாம்ராஜ்யத்தின் சுபிட்சத்தின் பொருட்டாகத் தொடர்ந்து பிரார்த்தித்துப் பூஜிக்க விடப்படுவார்களாக...இதை ஓர் அவசரக் கட்டளையாகக் கருதி உடனே நடவடிக்கை எடுக்கவும்.'

டாக்டர் அத்தர் அலீ தமது நூலில், 'அதே நேரத்தில்... இந்து, ஜெயின ஆலயங்களுக்கும் பூஜிதர்களுக்கும் மானியங்கள் வழங்கப்பட்டன; அவை இன்றும் நீடித்து நிற்கின்றன என்று ஞான சந்திரர் (பம்பாய்) வரைகிறூர்' என்று குறிப்பிட்டுள்ளார்.[1] K. K. தத்தா என்பவர் வரிசைப்படுத்திக் காட்டியுள்ள அரசு ஆணைகள் பல இந்துக்களுக்கு, குறிப்பாக அந்தணர்களுக்கு மானியம் வழங்கப்பட்டதைக் குறிப்பிடுகின்றன என்றும் புள்ளி விவரங்களுடன் அவர் அறிவிக்கிறூர்.

**ஔரங்கசீபின் சகிப்புத்தன்மை :** கி.பி. 1679-ல் ஜசியா வரி விதிக்கப்பட்டிருந்தும்கூட, 1699-ல், ஹர்துவாய் மாவட்டத்திலுள்ள கோபமாவ் (Gopamau in Hardoi District) என்னுமூரில் நவநீதராய் என்பவர் அரசாங்க மானியம் பெற்று, கோபிநாத் ஆலயம் என்னும் கீர்த்திமிகு கோயிலொன்றை நிர்மாணித்து, நேர்த்தியான தடாக மொன்றை வெட்டுவித்தார் என்பதையும் நாம் கவனிக்க வேண்டுமென்று A. Fuhrer என்பவர் 'Archaeological Survey of India' என்னும் நூலின் 279ஆம் பக்கத்தில் குறிப்பிட்டுள்ளார். பொதுவாக இந்துக்கள் பால், குறிப்பாக அந்தணர்கள்பால் சகிப்புத் தன்மையையும் கருணையையும் இப் பேரரசர் வெளிக்காட்டி வந்தார் என்பதற்கு இன்னம் எத்தனையோ எடுத்துக்காட்டுகளை வழங்க முடியும். எனவே, பல ஆசிரியர்கள் மீண்டும் மீண்டும் அவரோர் 'இந்துமத எதிரி' என்று குறிப்பிடும் குற்றச்சாட்டுக்கு உண்மையான அடிப்படை இருப்பதாகத் தோன்றவில்லை. அதுமட்டுமன்றி, அக்காலத்தில் வாழ்ந்துவந்த, சூரத் நகரில் சில ஆண்டுகள் தங்கி வாழ்ந்து வந்த காப்டன் அலெக்ஸாந்தர் ஹாமில்டன் (Captain Alexander Hamilton) என்பவரும் ஔரங்கசீபின் ஆட்சியில் சமயச் சகிப்புத் தன்மைக்கு எடுத்துக்காட்டாகப் பொதுவாகப் பாரசீகர்கள், கிறித்துவர்கள், இந்துக்கள் ஆகிய யாவரும் தங்கள் மதக் கடமைகளை ஆற்ற முடிந்தது என்பதைத் தெளிவுபடக் கூறுகிறூர்.[2]

பேரரசரின் ஆணையையோ அலெக்ஸாந்தர் ஹாமில்டனின் சாட்சியத்தையோ பொதுவாக வரலாற்று மாணவர்கள் ஒதுக்குதல் கூடாது. மேற்கூறிய இரண்டு சாட்சியங்களும் பேரரசர் சகிப்புத் தன்மையுடன்தான் நடந்து கொண்டார் என்பதை உறுதிப்படுத்துகின்றன.

[1] 'The Mughal Nobility under Aurangzeb' p. 98 (note).

[2] Captain Alexander Hamilton—'A New Account of the East Indies' Vol. I, pp. 159, 162 and 163.

அவ்வாறாயின், உண்மையில் ஆலயங்கள் அழிக்கப்படவே யில்லையா? முஸ்தயித் கான் (மஆசிரெ ஆலம்கீரியின் ஆசிரியர்) போன்ற அறிஞர்களின் எடுத்துக் காட்டுகளுக்கு விளக்கம் என்ன? என்ற கேள்விகள் எழத்தான் செய்கின்றன. **அங்குமிங்குமாகச் சில ஆலயங்கள் நிச்சயமாகத் தகர்க்கப்பட்டிருக்கவே வேண்டும். ஆனால், அதற்குரிய காரணங்களையோ, விளக்கங்களையோ அவ்வம் மாநில ஆளுநர்களின் செயல்களில்தாம் காணவேண்டுமே யல்லாது, பேரரசர் ஔரங்கசீபின் சமயக் கொள்கையேதான் காரணமென்று சொல்வது வஞ்சகத்துடன் சொல்லப்படும் தலைகீழ்ப் பாடமாகும்.** ஏனெனில், மேற்கூறிய ஆணைகள் மட்டுமல்லாது, அவருடைய நூற்றுக்கணக்கான தீர்ப்புகளும், ஆணைகளும், கடிதங்களும் நிச்சயமாக அவர் சமயச் சகிப்புத் தன்மையுடையவ ரென்றே சாற்றுகின்றன. ஆனால், மாநில ஆளுநர்களின் இசைவுடன், கலகங்களின்போது சில ஆலயங்கள் தகர்க்கப்பட்டிருக்கத்தான் வேண்டும். இக் கருத்தையே டாக்டர் பெர்சீவல் ஸ்பியரும் வலியுறுத்துகிறார். '**அவரது (ஔரங்கசீப்) சமயச் சகிப்பற்ற தன்மை எனப் பொதுவாகக் கூறப்படுவது அவருக்கெதிரான சில கட்டுக் கதைகளின் அடிப்படையில் எழுந்தவையாகும்; அவை அங்கு மிங்குமாக நடந்த சில நிகழ்ச்சிகளினால் எழுந்தவை; உதாரணமாகக் காசிக் கோயில் நிலமொன்றில் எழுப்பப்பட்ட மசூதி ஒன்றாகும்.**'[1] ஆகவே, அங்குமிங்குமாக நடந்த சில நிகழ்ச்சிகளை வைத்துக்கொண்டு, ஔரங்கசீப் இந்துக்கள் அனைவரையும் கொடுமைப் படுத்தினார் என்றோ, அவர்களின் உரிமைகளைப் பறித்து வந்தார் என்றோ கூறுவது பொருத்தமாகாது.

**சில கேள்விகள் :** அவ்வாறாயின், சில கேள்விகள் எழுகின்றன : (1) பேரரசர் ஆலயங்களை இடிப்பதைத் தம்முடைய கொள்கையாக வைத்திருந்திருப்பாரேயானால், இது சார்பாக அவர் பிறப்பித்த ஆணைகள் எங்கே? ராய் பிந்த்ராபன் மால் என்னும் இந்து திவான்கூட இவற்றைப்பற்றிக் கூறவில்லையே, ஏன்? ராய் பிந்த்ராபன் மால் என்னும் இந்துத் திவானின் சாட்சியம் அல்லவா மிக முக்கியமானது? 1696ஆம் ஆண்டு வரையிலான வரலாற்றை இவர் எழுதியுள்ளார். ஆனால், நாம் ராய் பிந்த்ராபன் அல்லது மராத்திய ஆசிரியர் 'பீம்சேன்' என்பாரின் ஆதாரங்களை ஆராயாமல், பார்க்காமல், **மஆசிரெ ஆலம்கீரியின்** ஆசிரியர் முஹம்மத் முஸ்தயிக் கானின் ஆதாரத்தை மட்டும் ஏற்பானேன்? 'ஆலயங்கள் அழிக்கப்பட்டன!'

[1] Dr. Percival Spear, 'History of India'—Vol. II p. 56.

என்று முஸ்தயித் கான் தமக்கிருந்த குருட்டு இஸ்லாமிய பக்தி காரணமாக எதையும் மிகைபடுத்திக் கூறி யிருப்பதாகக் கொள்ள வேண்டி வருகிறது. ஏனென்ருல், தாரா ஷுக்கோ வின் நண்பராக விளங்கிய ராய் பிந்த்ராபன் ஔரங்கசீப் ஆலயங்களைத் தகர்த்தார் என்று ஓரிடத்திலும் குறிப்பிட வில்லை. (2) அவ்வாறே அவர் ஆட்சிக்கு வருவதற்கு முன்பும், தொடர்ந்து பல ஆண்டுகளுக்குப் பின்பும் அதே கொள் கையைப் பின்பற்றி இருப்பாரேயாளுல், பெரும்பான்மையான இந்துக்கள் வாழும் நாட்டில் 50 ஆண்டுவரை அவரால் ஆட்சி புரிந்திருக்க முடியுமா? இந்தியப் பண்பாட்டினைப் பார் புகழ விளக்கி நிற்கும் பெரும் ஆலயங்கள் இன்றும் புகழைப் பரப்பிக் கொண்டிருக்குமா? (3) சீக்கிய குரு தேஜ் பகதூர்மீது பேரரசர் பகைமை பூண்டிருந்தாரே, அப்படியாளுல் அவர் ஏன் சீக்கிய ஆலயங்களை இடிக்கவில்லை? (4) ஔரங்கசீப் ஆலயங்களை யிடித்தது மெய்யென்ருல், மஹாராஷ்டிர மண்டல வீரர் சிவாஜி யின் எழுச்சியை ஒட்டி, ஔரங்கசீபின்கீழ்ப் பணியாற்றிவந்த ஜெய் சிங், ஜஸ்வந்த் சிங், ராம் சிங், கிராத் சிங் போன்ற பல பிரதம தளபதிகளும் நூற்றுக் கணக்கான இந்து, மராத்திய மன்சப்தார்களும் நிச்சயமாக அவரது கொள்கையை எதிர்த் திருப்பார்கள்; புரட்சி செய்திருப்பார்கள். ராஜபுத்திரர்களே சில ஆண்டுகளில் பதவிகளை உதறியெறிந்து வெளியேறி யிருப் பார்கள். அவ்வாறு நிகழாதது ஏன்? (5) ஜஸியா வரி விதிக் கப்பட்டபோது அதனைக் கண்டித்து 1679ஆம் ஆண்டில் சிவாஜி பேரரசருக்குக் கடிதம் எழுதினர். (அதன் வாசகத்தை வடித்தவர் நீலாப் பிரபு ஆவார் என்பதை முன்னரே குறிப்பிட் டுள்ளோம்.) அக் கடிதத்தில் சிவாஜி ஜஸியா வரி விதிக்கப்படு வதை மட்டும் கண்டித்துள்ளாரே யொழிய, ஔரங்கசீப் ஆல யங்களை இடித்துள்ளதாக அதில் எங்குமே குறிப்பிடவே இல்லை. செய்தி உண்மையாக இருந்தால், நிச்சயம் அது கண் டனத்துக்குள்ளாகி யிருக்கும். பல ஆண்டுகளாக அநியாயமான முறையில் ஆலயங்கள் அழிக்கப்பட்டிருக்குமேயாளுல், நிச்சய மாக அந் நிகழ்ச்சி பெருங் கலகங்களைக் கிளப்பிவிட்டிருக்க வேண்டுமே! அதைச் சிவாஜி சீற்றத்துடன் குறிப்பிட்டிருக்க வேண்டுமே! மிக முக்கியத்துவம் வாய்ந்த அந்தச் செய்தியைத் தானே அவர் கடிதத்தில் முதல் எதிர்ப்புக் கணையாகத் தொடுத் திருக்க வேண்டும்? அதற்கு நேர் மாருகத் தத்துவங்களின் அடிப்படையில் விதிக்கப்பட்ட ஜஸியா வரியைப்பற்றி மட்டும் எதிர்ப்புத் தெரிவித்து விட்டு, ஆலயங்களைப்பற்றி வேறு எந்தக்

கடிதத்திலுங்கூட ஒரு மூச்சும் விடவில்லை.[1] (6) அவ்வாறே உண்மையில் ஔரங்கசீபின் மதக் கொள்கைமீது குறைகூற, அல்லது அதை வன்மையாய்க் கண்டிக்க விரும்பியிருந்தால், சிவாஜிக்குப் பல வாய்ப்புகளிருந்தன. குறிப்பாக, இரண்டைச் சொல்லலாம்; அவற்றைப் பயன்படுத்தியிருக்கலாமே:

(அ) 1665ஆம் ஆண்டில் ஜெய் சிங் புரந்தர்க் கோட்டையைக் கைப்பற்றச் சென்ற போது, தாம் ஔரங்கசீபை எதிர்ப்பது அவருடைய மதக்கொள்கை காரணமாகத்தான் என்று சிவாஜி அந்த ராஜபுத்திர அமீரிடம் சொல்லியிருக்கலாமே? அரியணை ஏறியதிலிருந்து ஔரங்கசீப் இந்து எதிர்ப்புக் கொள்கையைப் பின்பற்றியிருப்பாரேயானால், நிச்சயமாகச் சிவாஜி ஜெய் சிங்கைச் சந்தித்த போது அதைக் குறிப்பிட்டிருக்க வேண்டும். ஆனால், ஒன்றும் கூறக் காணோம்! (ஆ) ஆக்ராவிற்குச் சிவாஜியும் சாம்பாஜியும் போயிருந்த போது அவருக்குரிய மன்சப்தார்ப் பதவியைப்பற்றிதான் பேச்சு எழுந்து, பிணக்கு மூண்டதே தவிர, உண்மையில் ஔரங்கசீபின் மதக் கொள்கைதான் சிவாஜியின் எழுச்சிக்குக் காரணமாக இருந்திருக்குமேயானால், மிகத் தெளிவாகப் பேரவையிலேயே அம் மராத்திய பெருவீரர் அதனை அல்லவா சுட்டிக் காட்டி நெருப்புக் கக்கி யிருப்பார்? ஏன் அவர் அப்படிச் செய்யவில்லை? ஆலயங்களைப்பற்றிச் சொல்லி இருந்தால், சிவாஜிக்கு ஆதரவு கிடைத்திருக்குமே!

ஔரங்கசீபைப் பொறுத்தவரை, ஆலயங்களை இடிப்பதையும் இந்துக்களைத் துன்புறுத்துவதையும் தம் மதக் கொள்கையென அவர் பின்பற்றி வந்தார் என்று கூறுவது வரலாற்று உண்மைக்குப் புறம்பாகும்;[2] பேராசிரியர் ஜஅஃபர் கூறியிருப்பது

[1] J. N. சர்க்காரின் 'The House of Shivaji' என்னும் நூலில், 1664-1665 ஆண்டுகளில் சிவாஜி ஔரங்கசீபுக்கு எழுதிய கடிதங்களும், பேரரசர் சிவாஜிக்கு 14-7-1659ல் எழுதிய கடிதமும், மற்றும் பலவும் இடம்பெற்றுள்ளன. இவற்றுள் எந்த ஒரு மூலையிலும் ஆலயங்கள் இடிக்கப்பட்டன என்பதற்கான சிறு குறிப்புங்கூடத் தொக்கி நிற்கக் காணோம்.

[2] ஔரங்கசீபின் ஆட்சிக்கு உட்பட்டிருந்த கல்கத்தா காளி கோவில், காசி விசுவநாதராலயம், பூரி ஜெகந்நாதராலயம், திருப்பதி வேங்கடேசப் பெருமாள் கோவில், உஜ்ஜயினியிலுள்ள பெரும் பெருங் கோவில்கள் ஆகிய யாவும் எவ்வாறு அவருடைய ஆதரவையும், சகிப்புத் தன்மையையும் பெற்று நீடித்து நின்றன என்பதை எவரும் கருதிப் பார்ப்பதில்லை. வரலாற்றில் ஒருதலைப்பட்சமாக வருணிக்கப்படும் ஔரங்கசீபின் குறுகிய மதக் கோட்பாடும், இந்து மதத்தின்பால் காண்பிக்கப்பட்ட எதிர்ப்பும் மெய்யாயிருந்திருக்குமானால், முகலாயப் பேரரசின் வட்டாரத்திற்குள்ளிருந்த ஒரே ஓர் ஆலயமாவது தப்பிப் பிழைத்திருக்க முடியுமா?

போல், 'எங்குக் குடிமக்கள் ஆளும் மன்னரை வெறுக்கின்றனரோ, அங்கு எவ்வளவு சகிப்புத்தன்மை காட்டப்படினும், அது பயன்படுவதில்லை. ஆகவே, வணக்க ஸ்தலங்களே பல வேளைகளில் அரசியல் எதிர்ப்புக் கலக மூட்டும் நிலையங்களாகவும், எதிர்ப்பாளர்களின் பாசறைகளாகவும் மாறிவிடுகின்றன. (சில சமயங்களில் அங்கு) விஷமிகளும் இடம் பெற்றுவிடுகின்றனர்.' இதுதான் ஔரங்கசீபின் காலத்திலும் நிகழ்ந்திருக்கவேண்டும்; அரசியல் காரணங்களுக்காகக் கிளர்ச்சிகளையோ எதிர்ப்புகளையோ கிளர்ச்சிக்காரர்களையோ அடக்க முயற்சிக்கும் போது, சில ஆலயங்கள் அழிந்துபட நேர்ந்திருக்கும்.

நாடு முழுதும் நிறைந்திருக்கும் ஆலயங்களையெல்லாம் அழிப்பதை ஒரு கொள்கையாக ஏற்று, அதை நடைமுறையில் செயல்படுத்த ஔரங்கசீப் முனைந்திருந்தாலும், அது அறிவீனச் செயலாவது மட்டுமன்றி, முற்றிலும் இயலாத காரியமும் ஆகிவிட்டிருக்கும். அறிஞர் ஸ்டான்லி லேன்பூல் 'ஔரங்கசீப்' என்னும் தம் நூலில் கூறியிருப்பது போன்று, பலம் பொருந்திய இராணுவத்தையும் வளர்ச்சியடைந்த போக்குவரத்து வசதிகளையும் பெற்றிருந்த பிரிட்டிஷாரும் கூடத் துணிந்து செய்ய நினைந்திடாத ஒரு செயலை ஔரங்கசீப் செய்து முடிக்கக் காலடியெடுத்து வைத்திருப்பாரா என்பது ஐயத்திற்குரியதே! மேலும் லேன்பூல் கூறுகிறார்: 'இதனால் நாட்டின் எல்லா ஆலயங்களும் அழிந்து விட்டதாக அவசர முடிவுக்கு வந்துவிடக் கூடாது... மேலும் ஔரங்கசீப் என்ன என்ன ஆணையிட்டாரோ அவை முற்றும் அமலாக்கப்பட்டனவாகவோ வார்த்தைக்கு வார்த்தையாக, ஆலயங்கள் அனைத்தும் அழிக்கப்பட்டு விட்டனவாகவோ கருதுதல் கூடாது.' நடந்தது என்னவெனில், சில வழிகெட்ட அந்தணர்களை அச்சுறுத்துவதற்காகவும், முஸ்லிம்கள் மீண்டும் இந்துக்களாக மதமாறி விடாமல் தடுப்பதற்காகவும் இம் முயற்சி மேற்கொள்ளப்பட்டிருக்க வேண்டும் எனக் கருதுகிறார் லேன்பூல்.

ஆக, தாரா ஷுக்கோவின் மறைவுக்குப் பின்பும் மதமாற்ற நிகழ்ச்சி தொடர்ந்து நடைபெற்றிருத்தல் கூடும். இதனைத் தடைப்படுத்தும் முகமாகச் சில தனிப்பட்ட ஆணைகள் பிறப்பிக்கப்பட்டிருத்தல் கூடும். அச் சூழ்நிலையில், பிரசாரத்தைத் தடுத்து நிறுத்தவும், மத மாற்றத்தைக் கட்டுப்படுத்தவும் உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருக்கும் நிலையில், அந்த அந்த ஃபவுஜ்தாரின் அத்து மீறிய செயல்கள் அங்கங்கே வரம்பு மீறிவிட்டிருக்கக் கூடும். ஆக, முஸ்தயித் கான் அந்தணர்களையும் அற

வோர்களையும் சாடி இருப்பதனாலும், இந்து மதத் தத்துவக் கோட்பாடுகளைக் குறைவுபடுத்திக் கூறி இருப்பதாலும், பேரரசரை 'மதக் காவலர்' எனப் புகழ்ந்து இருப்பதாலும், உருவ வழிபாடு உடனடியாக நிறுத்தப்பட்டது என்று கூறுவதனாலும், அஞ்ஞானம் மாய்ந்தது என்பதனாலும் இது தல நிகழ்ச்சியை மிகைபடுத்திப் போற்றிப் புகழும் வெற்றுப் புகழாரம் என்பது மிகத் தெளிவாகிறது. இல்லையாயின், ஔரங்கசீபை 'மதக் காவலர்' என்றும், 'புனிதமானவர்' என்றும் ஏத்திப் புகழ வேண்டிய அவசியம் இல்லையே? மற்றொரு முக்கியமான கருத்து என்னவெனில், எவ்வாறு அக்பரைப்பற்றி ஆராயுமிடத்து பதௌனி (Badauni) என்னும் மூலக் குறிப்பாளரின் கருத்தை நாம் ஏற்பதில்லையோ, அவ்வாறே பக்தவார் கான், முஸ்தயித் கான் ஆகியோரின் கருத்தை ஔரங்கசீபின் மதக் கொள்கைபற்றிய வரையில் ஏற்பது பொருத்தமன்று.

## ஔரங்கசீபின் ஆட்சியில் இந்துமத போதகர்கள்

தாரா ஷுக்கோவின் தாராளக் கொள்கை வைதிகராகக் கருதப்படும் ஔரங்கசீபின் ஆட்சியிலும் நீடித்தது. அரசியல் எதிரிகளாகவும், அரசியற் போட்டியாளர்களாகவும், ஆபத்தை என்றும் விளைவிக்கக் கூடியவர்களாகவும் விளங்கிய, அரசியற் கோட்டையில் புகலிடம் தேடிய போலித் துறவிகளைத்தாம் ஔரங்கசீப் அகற்றினாரே ஒழிய, உண்மையான மதபோதகர்களைக் கண்டிக்கவும் இல்லை, தண்டித்ததும் இல்லை. எவ்வாறு அவர் ஷேக் முஹ்சின் பானி, முஹிப்புல்லா போன்றோரைத் தண்டிக்காமல், சர்மதை மட்டும் அப்புறப்படுத்தினாரோ அது போன்றே, இராஜஸ்தானிலும், லாஹூரிலும் வாழ்ந்து வந்த பல இந்துத் துறவிகளை ஔரங்கசீப் துன்புறுத்தவும் இல்லை; கண்டிக்கவும் இல்லை. சில உதாரணங்களை இங்குப் பார்ப்போம்:

(1) **பாபாலால் (Babalal).** 17ஆம் நூற்றாண்டின் இறுதி வரையில் 'பக்தி மார்க்கம்' குறிப்பாக வட இந்தியாவில் மேலோங்கியே இருந்தது. கபீர்தாசின் வழியைப் பின்பற்றியவர்களைக் 'கபீர் பந்தி' (Kabir Panti) என்று அழைத்தனர். அக்பரின் தாராளக் கொள்கையை ஒட்டி, தாரா ஷுக்கோவும் அந்த மரபை வளர்த்து வந்தார். தாரா பல இந்துத் துறவிகளுடன் தொடர்பு கொண்டிருந்தார். அவர்களுள் பாபாலால் என்பவரும் ஒரு சிறந்த இந்துத் துறவியாவார்.

பாபாலால் ஜஹாங்கீரின் ஆட்சியில் 1627ஆம் ஆண்டில் பிறந்தவர்; ஔரங்கசீபின் ஆட்சியின் பிற்பகுதி வரை உயிர்

வாழ்ந்தாரென்று கூறப்படுகிறது. தாரா பாபாலாலுடன் முதன் முதலில் 1653ஆம் ஆண்டில் தொடர்பு கொண்டார். பாபா லால் ஒரு வைணவர்; சேத்தன் சுவாமியின் சீடர்; துவாரகா ஆலயத்தில் ஆழ்ந்த நம்பிக்கை உடையவர். பாபாலால் மூல் தானில் சென்று தங்கினுர். லாஹூரில் ராய் சந்திர பன் பிரஹ்மன் (Rai Chandra Bhan Brahman) என்னும் அந்தணர் இல்லத்தில் இருவருக்கும் சமய விவாதம் நிகழ்ந்தது. விவாதம் உர்தூ மொழியில் நடைபெற்றது. பாபாலாலின் தத்துவக் கருத்துகளும், குறிப்பாக இந்து சமய விவாதமும் 'நாதிருல் நுக்கத்' (Nadirul Nukat) என்னும் நூலில் காணப்படுகின்றன.

1653ஆம் ஆண்டிற்குப் பிறகு பல ஆண்டுகள் பாபாலால் உயிர் வாழ்ந்தும், பாபாலாலுக்கும் தாராவுக்கும் இடையே நிலவிய நெருக்கத்தை உணர்ந்தும், பேரரசர் பாபாலாலேத் தண்டிக்கவில்லே என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

(2) **இராஜஸ்தானின் மூன்று அறிஞர்கள்:** ஔரங்கசீபின் ஆட்சியின்போது பல மத போதகர்களும், இந்துமத அறிஞர் களும் இராஜஸ்தானில் வாழ்ந்து வந்தனர். இராஜஸ்தானம் வைணவத்தின் பிறப்பிடங்களுள் குறிப்பிடத்தக்க ஒன்ருகும். ராமநந்தா, மீராபாய் போன்ரேரின் பிறப்பிடம் அம் மாநிலம். ஔரங்கசீபின் ஆட்சியில் அதே வைணவமும் பக்தி இயக்க மும் தழைத்தோங்கின எனில், அது மிகையாகாது. அல்லது வேறு விதமாகச் சொன்ஞல், ஆலயங்கள் அழிக்கப்பட்டன எனவும், இந்துக்களுக்கு இழிவு ஏற்பட்டது எனவும் சொல்லப்படும் ஔரங்கசீபின் ஆட்சியிலேயே வைணம் பரவி வருவதைப் பேரரசரின் பணியாள்களோ, தல அதிகாரிகளோ தடைப்படுத்த வில்லே. இதனேத்தான் அக்காலத்தில் வாழ்ந்து வந்த (அ) வைரஜா (Wairaja), (ஆ) விப்ரபோத் (Viprabodh) என்னும் நூலாசிரியர், (இ) 'பக்ஷிமத்ரி ஸ்தோத்ரம்' (Pashchimadri Stotram) என்னும் நூலின் ஆசிரியர் லக்ஷ்மீ லால் (Lakshimi Lal) ஆகிய மூன்று அறிஞர்களும் நிருபிக் கின்றனர்.

டாக்டர் S. N. சர்மாவின் கருத்துப்படி, வைரஜா என்பவர் எல்லே கடந்த இந்து இஸ்லாமிய தத்துவக் கருத்துக்களே ஒன்ருக இணேக்கும் பாலமாகத் திகழ விரும்பினுர் என்று அறி கிரேம். இவரும், தாரா கபீர்தாசர் போன்று வெறும் வெளிக் காட்சிகளிலும், புறச் சடங்குகளிலும், பெரிய ஆரவாரங்களிலும் நம்பிக்கை வையாது, மதத்தின் உண்மையான மூச்சில்

நம்பிக்கை கொண்டிருந்தார். இந்துமதம் குறையுடையதாக இருப்பின், அதைக் காலத்திற்கேற்றவாறு மாற்றி ஒரு மத்திய வழியை அமைத்திட வேண்டும் என்று இவர் திட்டமாக நம்பினர்.

அடுத்து, **விப்ரபோத்** என்னும் நூலாசிரியரின் வாழ்க்கை வரலாற்றை நாம் முழுதும் அறிய முடியவில்லை. இந் நூலாசிரியர் 1751 விக்ரம ஆண்டிற்குச் சமமாக, கி.பி. 1680ஆம் ஆண்டில் இந்நூலை வெளியிட்டார் எனப்படுகிறது. இவரும் பெரும் வைணவரே. இவருக்கு 'ஹரி'க் கடவுளிடத்தில் பக்திமிகு நம்பிக்கை இருந்தது; யோகத்திலும் ஞானத்திலும் நம்பிக்கை இல்லை. எவ்வாறு யோகி, துறவி, ஞானி என்று சொல்லிக் கொண்டு அலைந்து திரிவது தவறுகுமோ அவ்வாறே 'ஷேக்' என்றும் 'பண்டிட்' என்றும் கூறிக் கொண்டு அலைவதும் தவறே ஆகும் என்று இவர் கருதினர்.

அடுத்து, **லக்ஷ்மீலால்** என்பாரைப்பற்றிப் பார்ப்போம். இவரது முழு வாழ்க்கை வரலாற்றையும் அறிய முடியவில்லை. இவர் 1651ஆம் ஆண்டில் **பக்ஷிமத்ரி ஸ்தோத்ரம்** என்னும் நூலை இராஜஸ்தான் மொழியில் எழுதியுள்ளார். லக்ஷ்மீலாலும் ஔரங்கசீபின் ஆட்சியில் பல ஆண்டுகள் வரை உயிர் வாழ்ந்தார். இவர், இறைவனின் பல பெயர்கள் ஒரே உண்மையையே குறிக்கின்றன என்று நம்பினர், எழுதினர், பிரசாரம் செய்தார். ஆகவே, ஔரங்கசீபின் ஆட்சியில் லக்ஷ்மீலால், பாபா லால், வைரஜா, விப்ரபோத் ஆசிரியர், இன்னும் பற்பல இந்துமத போதகர்கள் எல்லாம் யாதொரு தீங்குமின்றித் தங்கள் மதக் கருத்துகளைப் பரப்பி வந்தனர்.

## ஔரங்கசீபின் அரசு
## மதச் சார்புடைய அரசு அன்று

இனி, ஔரங்கசீபின் அரசு மதச் சார்புடையதா என்பதை ஆராய்வோம். பேராசிரியர் சர்க்கார், டாக்டர் திருப்பதி, டாக்டர் அஷ்ரஃப், டாக்டர் ஈசுவரி பிரசாத், டாக்டர் ஹியூம், பேராசிரியர் லால் ஆகிய அறிஞர்கள் பொதுவாக டெல்லி சுல்தான்கள் ஆட்சியிலும் முகலாயர்கள் ஆட்சியிலும் நிலவிய அரசியல் அமைப்பைப் பொறுத்தவரை அது பொதுநல அரசன்று என்றும், மதச் சார்புடைய அரசேதான் என்றும் வன்மையாகக் கூறுகின்றனர். அவ்வாறு கூற முக்கியமான காரணம், மத்திய கால இந்திய அரசைப் பொறுத்தவரை

'ஷரீஅத்' என்னும் இஸ்லாமிய சட்டம் அரசுக்கு அடிப்படையான சட்டமாக அமைந்திருந்தது. எனவே, அந்த அடிப்படையின்மீது ஆட்சி இருந்திருக்குமேயானால், அது மதச்சார்புடைய அரசுதான் என்றும், எனவே, அதனுல் மக்களிடையே வேறுபாடு கற்பிக்கப்பட்டிருக்குமென்றும் கருதுகின்றனர். ஆனுல், இக்கருத்தை டாக்டர் குரைஷி, பேராசிரியர் முஹம்மது ஹபீப் போன்ருேர் ஏற்றுக் கொள்வதில்லே. 'ஷரீஅத் (இஸ்லாமிய சட்டத்)தின் உயர்வும் ஆதிக்கமும் சுல்தான்களின் ஆட்சியைப் பொறுத்தவரை மதச்சார்புடைய அரசு ஆக மாற்றின என்று சிலர் தவருன முடிவுக்கு வருகின்றனர்' என்று டாக்டர் குரைஷி கூறுகிருர்.[1] பேராசியர் ஹபீப் 'இந்தியாவில் முஸ்லிம் அரசு ஒரு மதச் சார்புடைய அரசு அன்று; உண்மையில், அதன் அடித்தளம் மதச்சார்பற்றது ஆகும்' என்கிருர்.

**விஜயநகர அரசும் முஸ்லிம் அரசும்:** பேராசிரியர் லால் விஜயநகரப் பேரரசுக்கும் முகலாயப் பேரரசுக்கும் உள்ள பொது அமைப்புகளே ஒப்பிட்டு, முகலாய அரசும் மதச்சார்புடைய அரசு என்று நிலேநாட்ட முயற்சிக்கின்ருர். இவரது கூற்றுப்படி, விஜயநகரிலும் சரி, முகலாயரின் காலத்திலும் சரியே, தர்மசாஸ்திரமும் திருமறையும் சட்டங்கள் இயற்றப்படுவதற்கு அடிப்படையாக இருந்தன. விஜயநகரப் பேரரசைப் பொறுத்தவரையில், இந்து அரசியல் அமைப்பின் சாரம் தர்ம சாஸ்திரத்தில் அடங்கியிருக்கிற தென்றும், விஜயநகரப் பேரரசர்கள் தர்ம சாஸ்திரத்திற்கு உட்பட்டு நடந்தார்கள் என்றும், அதனே மீறுதற்கு அவர்கள் வலிமை பெற்றிருக்கவில்லே யென்றும் டாக்டர் வெங்கட்ரமணய்யாவின் கூற்றை லால் எடுத்துக் கையாளுகின்ருர்; டெல்லி சுல்தான்களும் முகலாயப் பேரரசர்களும் தன்னிச்சைப்படி ஆளும் எதேச்சாதிகாரிகளாக ஆட்சி புரிந்தார்க ளென்றும் இவர் கூறுகின்ருர். அப்படியாயின், ஷரீஅத் சட்டத்திற்கு இடமேது? எனினும், இதற்கு உதாரணமாக எவ்வாறு அரசியல் அறிஞர் ஹாப்ஸ்(Hobbes)மனித அமைப்பையும் மனித இயற்கையையும் தவருக மதிப்பிட்டாரோ, அவ்வாறே தர்மசாஸ்திரக்காரர்கள் மனித அமைப்பைத் தவருக மதிப்பிட்டதாகவும் அல் பரூனி கருதுகின்ருர். இன்னும் ஒருபடி மேலே சென்று, மதச்சார்புடைய அரசு என்பதற்கு மூன்று உரைகல்கள் இருப்பதாக அவர் குறிப்பிடுகின்ருர். அவை,

1. இறைவனின் சட்டம் - இதனே ஏற்றுக்கொள்ள வேண்டும்.
2. பேரரசரோ மன்னரோ இதனே அமல் செய்ய வேண்டும்.

[1] Dr. I. H. Qureshi—Administration under Delhi Sultanate.

3. மதத்தைப் பரப்பும் சமய ஊழியர்கள் அல்லது பரப்பாளர்கள் இருத்தல் வேண்டும். இவை மூன்றும் எந்த ஓர் அரசின்கீழ் இருக்குமேயாயினும், அதனை மதச் சார்புடைய அரசு என்று கருத வேண்டுமெனக் கூறுகின்றார்.

**மார்க்க அறிஞர்களும் ஞானிகளும் :** இஸ்லாமிய சமயத்தில் மதப்பரப்பாளர்கள் இலர் என்பதை யாவரும் நன்கறிவர். ஆனால், மத்தியகால இந்தியாவைப் பொறுத்தவரை 'உலமாக்கள்' (Ulemas) என்னும் மார்க்க அறிஞர்கள் பேரரசருக்கும் அரசாங்கத்துக்கும் உறுதுணையாக இருந்த போதிலும், அவர்கள் சட்டத்தை நிர்வகிப்பவர்களாகவும் அல்லது ஓரளவுக்கு நீதியை நிர்வகிக்கும் நீதிபதிகளாகவும் இருந்தனர் எனக் கருதுதல்தான் முறையாகும். அவர்கள் மதப் பரப்பாளர்கள் அல்லர்; புராதன கால இந்தியாவில் எவ்வாறு பிராமணர்கள் வேதத்தை அறிந்திருந்ததன் காரணத்தால் செல்வாக்கைப் பெற்றிருந்தார்களோ, அவ்வாறே மத்தியகால இந்தியாவிலும் உலமாக்கள் செல்வாக்கைப் பெற்றிருந்தனர் என்பது உண்மைதான். ஆயினும், அவர்களை ஒரு வகுப்பார் என்றோ, அல்லது வேதம் ஓதுதலை மட்டும் தொழிலாக ஏற்றுக்கொண்டவர்கள் என்றோ கருதுவது பொருந்தாது. உண்மையில், பெரும்பான்மையான உலமாக்களுக்கு எதிராக மத்தியகால இந்தியாவில் இஸ்லாமியர்களிடையே மற்றொரு பிரிவினராகக் கருதப்படும் சூஃபீகள் என்னும் ஞானியர்கள் எழுந்ததும் உண்மையாகும். ஆயினும், சூஃபீ ஞானிகளுக்கும் உலமாக்களுக்கும் பொதுவாக இருந்தது திருக் குர்ஆன் ஆகும். ஆனால், உலமாக்கள் அரசாங்கத்தைச் சுற்றி வட்டமிடும் பதவிகளை நாடிய கழுகுகளாக இருந்தனர் என்பது ஒரு விதத்தில் உண்மையாயினும், அவர்களை ஒரு தனி வகுப்பார் எனக் கருதுதல் தவறாகும். ஏனெனில், அவர்கள் திருமறையையும் இஸ்லாமிய சட்டத்தையும்பற்றிய விளக்கங்களை அளித்தார்களே யொழிய, பூசையையோ சடங்குகள் நிகழ்த்துவதையோ தொழிலாகக் கொண்டிருக்கவில்லை. ரொமிலா தாப்பர் கூறுவதுபோல், 'உலமாக்களைவிட, இஸ்லாம் வலியுறுத்தும் சமத்துவத்தைச் சூஃபீ ஞானிகளே மதித்தனர். இதனாலேயே அவர்கள் தொழிலாளர்கள், உழவர்கள் ஆகியோருடன் தொடர்பு கொள்ள முடிந்தது.' டாக்டர் குரைஷி கூறுவது போல, 'மதச்சார்புடைய அரசின் மிக முக்கியமான சிறப்புத்தன்மை என்னவெனில், மதத்தைப் பொறுத்தவரை, வேதியர்கள் ஒரு தொழிலென அதனை மேற்கொண்டிருந்தனர்; அது முஸ்லிம் அரசின் அமைப்பில் இருந்தது கிடையாது;

சட்ட அறிஞர்களும் சாதாரண மக்களைப் போன்றே எந்த ஒரு சட்டத்திலிருந்தும் குறைகளிலிருந்தும் சலுகை பெற்றுத் தப்பித்துக்கொள்ள முடியாது. உலமாக்களும் 'உம்ராக்களைப்' (பிரபுக்கள்) போன்று சிறப்பான இடத்தைப் பெற்றிருந்தனரே ஒழிய அவர்களது வாயினின்று உதிர்வனவெல்லாம் வேத வாக்கு எனக் கருதப்படவில்லை. மற்றும், ஔரங்கசீப் உலமாக்கள் வழங்கிய தீர்ப்புக்கும் மேலாகத் தாமே தீர்ப்புகளை அளித்துவந்தார் என்பதற்கு ஔரங்கசீபின் பல தீர்ப்புகளும் ஆணைகளும் சான்றுகின்றன. ஔரங்கசீபைப் பொறுத்தவரை அவர் குர்ஆனை ஏற்று நடந்தாலும், அதனை நாட்டின் சட்டமாகச் செய்திடவில்லை. மாருக, 'ஃபத்வாயெ ஆலம்கீர்' என்னும் சட்டத் தொகுப்பைத் தயாரித்தார். தம்மைப் பொறுத்தவரையில் குர்ஆனின் ஆணைகளை அமல்படுத்த முயன்றபோதிலும், சட்டம், நீதி, நிர்வாகம் ஆகியவற்றில் அவர் தம் பாரசீக மரபுகள் சட்டங்கள் ஆகியவற்றையே அமல்படுத்தினர். இக் கருத்து 'நிர்வாகம்', 'சட்டமும் நீதியும்' ஆகிய அத்தியாயங்களிலிருந்து தெளிவுபடும். இஸ்லாமிய மதத்தில் ஞானம் அதிகமாக இருந்த 'உலமாக்கள்' என்னும் அறிஞர்களுக்குச் சிறப்பான இடம் அவையில் இருந்தது. ஆனல், அவர்கள் சமயப்பரப்பாளர்கள் அல்லர். அவர்களைப் பேரரசர் பல நேரங்களில் எதிர்த்ததுண்டு. 'சூஃபீகள்' என்னும் ஞானிகள் அரசவையிலிருந்து ஒதுங்கி வாழ்ந்தார்கள். எனவே, ஔரங்கசீபின் அரசு மதச்சார்புடையது ஆகாது.

**ஓர் எடுத்துக்காட்டு :** 1700ஆம் ஆண்டின் புனித ரம்ஜான் மாதத்தில் சாதராக் கோட்டையிலிருந்து கொண்டு எதிர்த்துத் தாக்கிய சிலர் கைது செய்யப்பட்டனர். (அது அக் கோட்டை வீழ்ச்சியுறும் நேரம்.) அவர்களுள் நால்வர் முஸ்லிம்களும், ஒன்பது பேர் மராத்திய இந்துக்களும் ஆவர். இக் கைதிகள் நடத்தப்படவேண்டிய விதத்தைப்பற்றிப் பிரதம காஜியான முஃப்தீ காஸிம் முஹம்மத் அக்ரம் என்பவரிடம் ஔரங்கசீப் வினவினர். அதற்கு முஃப்தீ, முஸ்லிம் கைதிகளுக்கு 3 ஆண்டு சிறைவாசத்தையும், இந்துக் கைதிகளுக்கு வேறுவிதக் குரூரத் தண்டனையையும் பரிந்துரைத்தார்; ஆனல், ஔரங்கசீப் இதனை ஏற்கவில்லை. 'இந்தத் தீர்மானம் ஹனஃபி சித்தாந்தத்தை அனுசரித்த தீர்மானம். இராஜாங்கத்தின் பாதுகாப்பிற்கு ஊறு நேரிடாதபடி வேறுவிதத் தீர்ப்புச் செய்யவும்' என ஆணையிட்டார். இதன் பின்னர் முப்தீ ஃபத்வாயெ ஆலம்கீரியின்படி 'போரில் சிறைப்பிடிக்கப்பட்ட இந்து, முஸ்லிம் கைதிகள்

சமமாகவே தண்டிக்கப்பட வேண்டும் (கொலைத் தண்டனை)' என்று தீர்ப்பு அளித்தார்; இதனை ஒளரங்கசீப் ஏற்றுக்கொண்டார்.

**ஒளரங்கசீபும் ஷரீஅத் சட்டமும் :** மேற்கூறிய எடுத்துக் காட்டிலிருந்து இரண்டு உண்மைகள் தெளிவாகின்றன: (1) நீதியைப் பொறுத்தவரையில் ஒளரங்கசீப் இந்து முஸ்லிம் களிடையே பிரிவு, பாகுபாடு பாராட்டியது கிடையாது. (2) காஜிகளின், உலமாக்களின் ஆணைகளை அவர் எல்லா நேரங்களிலும் ஏற்றுக்கொண்டது கிடையாது. எனவே, உல மாக்களைப் பொறுத்த வரையில், அவர்களுக்கு இஸ்லாமிய மத ஞானமும், இஸ்லாமிய சட்ட நுணுக்கத்தின் ஞானமும், விளக் கங்கள் அளிக்கவல்ல திறமையும் இருந்தன என்பது உண்மை தான். அவர்களுள் சிறந்த சட்ட அறிஞராகக் கருதப்பட்ட ஒருவர், 'ஷேகுல் இஸ்லாம்' என அழைக்கப்பட்டாரென் பதும் உண்மைதான். ஆனால், ஒளரங்கசீபோ உலமாக் களின் தீர்ப்பையோ, 'ஷேகுல் இஸ்லாம்' வழங்கிய தீர்ப் பையோ, பரிந்துரைத்தலையோ முழுதும் ஏற்றுக்கொண்டது கிடையாது. அவர்களுக்குண்டான குறைபாடுகளை அவர் முற்றிலும் உணர்ந்திருந்தார். மேலும், உலமாக்களோ மார்க்க அறிஞர்களோ பேரரசரின் தீர்ப்பை மாற்றவோ, புறக்கணிக் கவோ அதிகாரம் பெற்றிருக்கவில்லை. மன்னர் 'ஷரீஅத்' என்னும் சட்டத்தை மக்கட் பாதுகாப்புக்கென்று மட்டும் ஏற்றாரே ஒழிய, அதையே எல்லாக் காலங்களிலும் அமல்படுத்தி விடவும் இல்லை. இப்னு ஹசன் என்பவர் கூறுவதுபோல, 'ஷரீஅத்தைப் பாதுகாப்பதில் இரு முறைகள் உண்டு; ஒன்று, அதன் அறிவை வளர்ப்பது, மற்றொன்று அதனை அமல்படுத்து வது.' இதில் பிந்தியது பேரரசரின் பொறுப்பாகும். மார்க்க அறிஞர்கள் விளக்கங்களை அளித்திருக்கலாமே ஒழியப் பேரரச ரையே பகைத்துக் கொள்வது என்பது இயலாதது ஆகும். மேலும், இஸ்லாத்தைப் பொறுத்த வரையில், அரசினரால் நியமிக்கப்பட்ட அல்லது அரச அங்கீகாரம் பெற்ற மத குரு மார்கள் என்றோ, அவர்களின் தனிப் பரம்பரை என்றோ, பாரம் பரியம் என்றோ எதுவும் கிடையாது. 'ஐனெ அக்பர்' நூலின் மொழி பெயர்ப்பாளராகிய அறிஞர் பிளாக்மேன் (Blochman) என்பாரும் 'இஸ்லாமிய அரசில் சமய குருமார்கள் கிடையார்' என்று ஒப்புகிறார். இது எல்லோரும் அறிந்ததே.

ஷரீஅத் என்னும் சட்டத்திற்குத் திருமறையும் நபிகள் நாய கத்தின் வாய் மொழிகளும் தாம் அடிப்படைச் சான்றுகளாகும். இந்தியாவிலும் மத்திய காலத்தில் மத ஆதிக்கம் ஒரு விதத்தில்

நிலவிற்றென்பதை மறுத்தற்கில்லை. ஆனால், இதுபற்றி அடிப்படையில் தவருன அபிப்பிராயம் எழுந்ததற்கு 'ஷரீஅத்' என்னும் இஸ்லாமிய சட்ட அடிப்படையில் ஆளுக்கொரு நீதி வழங்கப்பட்டது என்று மேற்கு நாட்டவர்கள் செய்து வந்த பொய்ப் பிரசாரமே காரணம் ஆகும். ஆனால், ஔரங்கசீபைப் பொறுத்தவரையில், ஷரீஅத்தும் திருமறையும் அவரது ஜீவ நாடியாக இருந்தன என்பதை ஒப்புக்கொண்டாலும், அவர் விழைந்த குறிக்கோள்களும் நடந்துகொண்ட முறையும், ஷரீஅத்திற்குக் கட்டுப்பட்டனவல்ல என்பதை நிரூபிக்கின்றன. ஆயினும், பேராசிரியர் லால், 'விஜயநகரப் பேரரசிலும், முகலாயப் பேரரசிலும் குறிக்கோள்கள் ஏறத்தாழ ஒன்றே...இவ்விரண்டிலும் மத அறிவுரையாளர்கள் (பிராமணர்களும், உலமாக்களும்) நிறைந்த ஆதிக்கத்தையும் செல்வாக்கையும் பெற்றிருந்தனர். மேலும், இவ்விரு பேரரசிலும் மதச் சட்டமே உயர்வாக இருந்ததால் இவ் விரு அரசுகளும் சமயச் சார்புடைய அரசுகளே!' என்று முடிக்கிறார். பேராசிரியர் முஜீப் பேராசிரியர் லாலின் இக் கருத்துக்குத் தகுந்த பதில் அளித்துள்ளார்.

ஷரீஅத் சட்டத்திலும் சமயக் கருத்துகளிலும் இரு மார்க்க அறிஞர்கள் ஔரங்கசீபிற்கு முன்மாதிரியாக இருந்தனர் என டபிள்யூ சி. ஸ்மித் என்பாரும், பெர்சீவல் ஸ்பியர் என்பாரும் குறிப்பிடுகின்றனர். (1) ஷேக் அஹ்மத் சர்ஹிந்த் (1562-1624), (2) அப்துல் ஹமீத் முஹத்தித் (1551-1642) என்போர் அவ்விரு அறிஞர்கள் ஆவர்.[1] ஷேக் அஹ்மத் சர்ஹிந்த் ஒரு சிந்தனையாளர். அரபிய, பாரசீக இஸ்லாமிய ஞானம் படைத்தவர். ஆனால், ஔரங்கசீபின் இளமையிலேயே இறந்து விட்ட இச் சிந்தனையாளரின் கருத்துகள் பெரும் அளவுக்கு (40 ஆண்டுகட்குப் பிறகும்) பேரரசரை ஈர்த்தன என்பதற்குப் பல ஆதாரங்கள் உள்ளன. பெர்சீவல் ஸ்பியர்கூட 'ஔரங்கசீப், 17ஆம் நூற்றாண்டின் கருத்துகளுக்கு வலிமை கொடுத்த சர்ஹிந்தின் கருத்துகளின் பிரதிநிதியாக இருந்ததாக'க் கருதுகிறார்.

ஆனால், ஷரீஅத் என்று சொல்லிவிட்டாலே வீண் மருட்சி அடையும் அறிஞர்கள் பலரிருக்கின்றனர்.[2] பழங்கால இந்தியா

[1] ஔரங்கசீப் அரியணை ஏறுவதற்குப் பல ஆண்டுகளுக்கு முன்பே இவர்கள் இறந்துவிட்டனர். ஆனால், இவர்கள் நாட்டிலும், மத்திய கால இந்திய முஸ்லிம்களிடையேயும் செல்வாக்கைப் பெற்றிருந்தனர். இவ்விரு அறிஞர்களின் கருத்துகளால் பேரரசர் ஔரங்கசீப் ஈர்க்கப்பட்டார்

[2] Dr. Yusuf Hussain, Medieval Indian Culture.

வில் தர்ம சாஸ்திரமும் மனுநீதி சாஸ்திரமும் சட்டங்களைப் பார்க்கினும் உயர்ந்தனவாகக் கருதப்பட்டதைப்போல, மத்திய கால இந்தியாவிலும் ஷரீஅத் சட்டம் மூலச் சட்டமாகக் கருதப் பட்டு வந்தது. ஆயினும், இந்திய வரலாற்றின் மத்திய காலத்தில் முஸ்லிம் மன்னர்கள் அனைவரும் உண்மையில் சட்டங்களுக்கு உட் பட்டு இஸ்லாம் காட்டும் உண்மையான சகிப்புத் தன்மையைக் கடைப்பிடித்தார்களா என்பது சந்தேகத்திற்குரியதும், ஆராய்ச்சிக் குரியதும் ஆகும். ஆனால், ஔரங்கசீபைப் பொறுத்தவரையில் அவருடைய செங்கோல் யாருக்காகவும் வளைந்து கொடுக்க வில்லை. ஆலம்கீர் நீதியுடனும், குறிப்பாக இஸ்லாமிய சட்டத் தின் அடிப்படையிலும், அவருடைய நேர்மையான முடிவை எல்லோரும் ஏற்றுக்கொள்ளக்கூடிய அளவிலும் ஒழுகிக் கொண் டார் என்பதில் சந்தேகமேயில்லை. அறிஞர்கள் மஜூம்தார், ராய் சௌத்ரீ, தத்தா ஆகியோர் கூறியதுபோல, 'ஔரங்கசீப் தெய்வ பக்தியுள்ள ஒரு முஸ்லிம்; மேலும், கடும் ஆசாரமிக்கவர் (Puritan) போன்று புனிதக் குர்ஆனின் கட்டளைகளை மகிழ்ச்சி யுடனும் உற்சாகத்துடனும் கடைப்பிடித்து வந்தார்.' ஆனால், அதே நேரத்தில் ஷரீஅத் சட்டத்தை மீறுமலும், நீதியை வளைக் காமலும், தாமும் வளைந்து கொடுக்காமலும் அவர் ஆட்சி புரிய முயன்றார்.

அறிஞர் லேன்பூல் கருதுவது போல், 'ஔரங்கசீப் அவரு டைய தந்தையைவிடச் சிறந்த அறிவுள்ளவர்; தந்தையைக் காட்டிலும் நீதியுள்ளவர்; இரக்கமுள்ளவர்...அன்பு கொண்ட அரசர்...எனினும் அவருடைய தன்னடக்கம், கடமையுணர்ச்சி, நீதி மனப்பான்மை, மக்கள் நலன் ஆகிய ஒன்றுமே பயனளிக்க வில்லை.'

முடிவாக, ஔரங்கசீபைப்பற்றியும் அவர் கடைப்பிடித்த மதக் கொள்கைபற்றியும் சிலஎதிரிகள் அவரை வேண்டுமென்றே வரலாற்றின் ஏடுகளில் எத்துணைக் கறைப்படுத்தியுள்ளார்களோ, அத்துணைப் பொல்லாதவரல்லர் என்றே நாம் கூறலாம். தூய்மையான இசுலாமியராக அவர் இருக்க முயன்றமையால், அவர்மீது மேனாட்டு நூலாசிரியர்கள் உண்மையைத் திரித்தும், கூட்டியும், குறைத்தும் சொல்லி வந்த கூற்றுகளை நாமும் ஆராயாது மரபாகவே ஒப்பித்து வருகிறோம். சிவாஜியின் பண்டித ராவ் போன்று, ஔரங்கசீப் முஹ்தசிப் மூலமாக மக்களின் குடிப்பழக்கத்தையும், சூதாடும் பழக்கத்தையும், பொது மகளிர் தொழிலையும் ஒழித்தார். இஸ்லாம் இவற்றைக் கண்டிப்பதால்

அவர் அவற்றை ஏற்று, அத் தீய பழக்கங்களை ஒழித்ததால் இது தவருகாது.

இந்துக்களைப் பெரும் உயர்பதவிகளில் அவர் அமர்த்திஞர். ஆனுல், லஞ்சம் பெறுவதை அறவே வெறுத்தார். தம் மகனுக இருப்பினும் சரியே தண்டிக்கத் தவறியதில்லை. இதனுலேயே ஜஸ்வந்த் சிங்மீது அவர் வெறுப்புக் கொண்டாரே ஒழிய, அந்த ஜஸ்வந்த் சிங்கைத் தண்டிக்க வில்லை.

கீழ் மட்டத்தில் இருந்த எழுத்தர்களையும் கணக்கர்களையும், லஞ்சம் காரணமாக, எவராக இருப்பினும், நீக்க விரும்பினுர். லஞ்சம் தாண்டவமாடுவதைத் தடுக்க ஒருவர் மற்ருெருவரைத் தடுக்கும் முறையில் நியமனங்களைச் செய்தார் (Doctrine of Checks and balances).

ஔரங்கசீப் ஆன்மிகத் துறையில் சிறந்த துறவி, ஞானி; பேரரசரா யிருந்தும், எளிமையைக் கடைப்பிடித்தார். எனவே, விழாக்களிலும் எளிமையை நாடிஞர். ஆரவாரத்தை, படாடோபத்தை வெறுத்தார். ஆனுல், பிறர் கொண்டாடாவாறு விழாக்களை அவர் தடைப்படுத்தவில்லை.

சமயச் சகிப்புத் தன்மைக்குச் சிகரமாகச் சில இந்து ஆலயங்களைக் கட்டிமுடிக்க அவர் அனுமதி அளித்தார். அவற்றிற்கு நில மானியங்களும் அளித்தார்.

சிவாஜியை அவர் அரசியல் எதிரியாகக் கருதிஞர்; எனினும், தகுந்த மரியாதையை அவருக்குக் கொடுத்தார்; மத வேறுபாடுகளின் கண்கொண்டு இப்பிரச்சினையை அணுகவில்லை. ஔரங்கசீப் அமீன்கானுக்கு எழுதிய கடிதத்தில் (நம்பர் 14-தீர்ப்புகள் அத்தியாயம்) **'உலக விவகாரங்களுக்கும், அரசியல் சம்பந்தப்பட்ட விஷயங்களுக்கும் மதத்துக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை'** என்று திட்டவட்டமாகக் கூறியிருக்கிருர்.

**வரலாற்று உண்மை:** அவ்வாருயின், மக்கள் பேரரசரை வெறுத்தனரா? வெறுத்தால் காரணம் என்ன? இல்லையானுல் கலகங்கள் ஏன்? குழப்பங்கள் ஏன்? உண்மை என்னவெனில், ஔரங்கசீபுக்குத் தண்டனையில் நம்பிக்கை இல்லாததால், மக்களுக்குச் சுதந்திரம் அதிகமாகவே இருந்தது. அக்பரின் தாராளக் கொள்கை காரணமாக மக்கள் இஸ்லாமிய சமயத்தைத் துச்சமாக மதித்திடும் நிலை உருவாகி இருக்கவேண்டும். அக்பரின் புதிய மதக்கொள்கை அபுல் ஃபஸலை ஜஹாங்கீர்

(பீர்சிங் பந்தேளா மூலம்) கொல்லும் அளவுக்குத் துணிவு கொடுத்தது. ஆனல், ஜஹாங்கீரோ மதத்தைப் பொறுத்த வரை அலட்சியமாகவே இருந்தார். பேரரசர் ஷாஜஹானின் காலத்தில் மசூதிகள் சில அழிக்கப்பட்டிருக்கக்கூடும். ஆனல், இஸ்லாமிய கொள்கைகளை அவ்வளவாகப் பின்பற்ருத தாரா ஷுக்கோவைப் பலரும் ஆதரித்து வந்தனர். வாரிசுரிமைப் போரில் தாரா இறந்தார். நாட்டிலிருந்த பெரும்பான்மை யினரின் நெஞ்சில் நிறைந்திருந்த தாராவின் வீழ்ச்சியை ஒட்டி, இஸ்லாமிய சமயத்தில் ஆழ்ந்த பற்றும் பிடிப்பும் கொண்டு, அதன் வழிகளைச் சற்றேனும் வழுவாது பின்பற்றுகிற ஒருவர் மாமன்னராக வந்த பொழுது, மக்களின் மனத்தில் பீதியும் அச்சமும் தோன்றலாயின. அவர் தம் மதத்தைப் பரப்புவார் என நினைத்தனர். அதற்கேற்ருற்போல், ஔரங்கசீப் திருமறை காட்டும் ஆட்சியை அமல்படுத்துவது சிறந்தது என்று கருதினர். ஆனல், அவர் முஸ்லிம் ஆட்சியை நிறுவவும் இல்லை; நிறுவ முயற்சிக்கவும் இல்லை. 1600ஆம் ஆண்டி லிருந்து அரை நூற்றுண்டு காலமாக மாற்றத்தைக் கண்டுவந்த நம் நாட்டினர் ஒரு பேரரசருக்கு நடுநிலைமை, நீதி, நியாயம், நேர்மை, ஒழுங்கு, எளிமை, தண்டனையில் நம்பிக்கை யின்மை, இந்து முஸ்லிம் என்ற வேறுபாடு காட்டாமை ஆகிய குணங்கள் இருப்பதைக் கண்டு வியந்தாலும், இந்து ஆலயங்களுக்கு அருகிலேயே முஸ்லிம்களும் தொழு கையை நிறைவேற்றலாம் என்று அப் பேரரசர் புதிய திசையில் முயற்சியை மேற்கொள்ளும் பொழுது, சுதந் திரம் அதிகமாக இருந்தபொழுது சந்தேகங் கொள்ளலாயினர். எங்குப் பார்ப்பினும் அரசியல் குழப்பங்களும், கலகங்களும், பொதுவான கொள்ளைகளும் நிகழ்ந்து வருவதை அவர் அடக்க முயன்ற பொழுது பொதுமக்களே பேரரசரை வெறுத்தனர். இவ்வெறுப்புக் கசப்பாக மாறியது. சில ஆண்டுகளுக்குப் பிறகு ஜசியா வரியை அவர் விதித்ததும் மக்கள் அதிர்ச்சி அடைந்ததுடன், இதுவே இஸ்லாம் போலும்! என்று கருத லாயினர். ஆக, நேர்மை, ஒழுங்கு, நீதி என்பன யாருக்கும் எல் லோருக்கும் பொதுவான, தேவையான பண்புகள் என்பதை மறந்தனர். விளைவு, மக்கள் அச்சம் கொள்ள ஆரம்பித்தனர். ஔரங்கசீபை மேலும் வெறுத்தனர். இதுதான் உண்மை.

ஆயினும் ஔரங்கசீபிற்கு மத வைராக்கியமும், ஆழ்ந்த பற்றும், வெறித் தன்மையைப் போன்ற விருப்பும் கடுகு அள

விற்குக் கூட அறவே கிடையாது என்று கூறுவது முழுப் பூசனிக் காயைச் சோற்றில் மறைப்பதற்கு ஒப்பாகும். அதே நேரத்தில் ஔரங்கசீப் ஈவு இரக்க மற்றவர், சமயவெறி கொண்டவர், இவரது மதக் கொள்கைதான் இப் பேரரசின் வீழ்ச்சிக்குக் காரணம் என்றெல்லாம் கூறுவது கலப்படமற்ற பொய்யாகும்; கண்டிக்கத் தக்க விஷமப் பிரசாரமாகும். ஔரங்கசீப் முற்றிலும் சமயச் சகிப்புத் தன்மை அற்றவர் அல்லர். அவர் தம் மளவில் ஒரு வைதிக முஸ்லிம்; அவ் வைதிகத் தன்மையைத் தம் குடும்ப விஷயத்தில் மட்டுமே பொருத்திக் கொண்டார். பொது மக்கள் மீதோ, ஆட்சியின் போதோ இஸ்லாமிய வைதிகத்தை அவர் எவர்மீதும் வலியத் திணிக்கவில்லை; அதை ஏற்காதவர்களை நச்சரிக்க வில்லை.

# 19. ஔரங்கசீபின் சட்டமும் நீதியும்

## பொது, கீழ், மேல் நீதிமன்றங்கள்

இன்றைய அளவிலேயே பொதுச் சட்டம் ஒன்றை உருவாக்க இடர்ப்பாடுகள் ஏற்படுவதைக் காண்கிறோம். அவ்வாறாயின், 17ஆம் நூற்றாண்டின் நிலை எவ்வாறு இருந்திருக்கக் கூடும் என்பதை நாம் ஒருவாறு யூகிக்க முடியும் அல்லவா? மேலும், மத்திய கால இந்தியாவில் அன்றைய சூழ்நிலையில் நாட்டு மக்கள் அனைவருக்கும் ஒரே பொதுவான சட்டங்கள் என்று கூறினால், அக்கூற்றைப் பலர் ஏற்றுக்கொண்டிருப்பர் என்பது நினைக்க முடியாத ஒன்றாகும். சிலராவது அவற்றை எதிர்த்திருப்பார்கள். எனினும், வெகு காலமாகப் பின்பற்றப் பட்டு வந்த மரபான சட்டங்களையும், நீதிமன்ற முறைகளையும் பேரரசர் ஏற்றுக்கொண்டார். ஆகவே, நீதிமன்றங்கள் இரு வகைகளாகப் பிரிக்கப்பட்டிருந்தன. (1) பொது நீதிமன்றங்கள். இங்கு வேறுபாடு இன்றிப் பொது மக்களனைவரும் இம் மன்றங்களின் ஆணைகளுக்கு உட்பட்டிருக்க வேண்டும். (2) சமய விவகாரங்களைப் பொறுத்தவரை, தனி நீதிமன்றங்கள் வழக்குகளை நடத்த வேண்டும். இங்கிலாந்தில் இரண்டாம் ஹென்றியின் ஆட்சிக் காலம் வரையிலும், அதன்பின் சில ஆண்டுகள் வரையிலும் வழக்கு மன்றங்கள் இரு வகைகளாகப் பிரிக்கப்பட்டு, அவற்றுள் ஒன்றில் மதகுருமார்கள் (பிஷப், ஆர்ச்பிஷப் போன்றோர்) தனித்திருந்த சமய நீதிமன்றங்களில் விசாரிக்கப்பட்டு வந்தனர் என்பதையும் நாம் இங்கு நினைவில் வைத்துக்கொள்ளலாம்.

நம் நாட்டில் பழங்காலத்தில் மன்னர்களேகூட நீதி மன்றங்களில் உயர் நீதிபதிகளாக அமர்ந்து வழக்குகளுக்குத் தீர்ப்பளித்துள்ளனர். அதே போன்று, இஸ்லாமிய வரலாற்றில்

எவ்வாறு நபிகள் நாயகமவர்கள் தாமே மன்றங்களில் அமர்ந்து வழக்குகளை விசாரித்து, நீதிபதியாகப் பணியாற்றினார்கள் என்பதை இஸ்லாமியக் கலைக்களஞ்சியம் விளக்குகின்றது. கீழ் நிலைகளில், பிற் காலத்தில் பல நீதிமன்றங்கள் எழலாயின. இம் மன்றங்களை 'நஸர் ஃபில் மஸாலிம்' (Nazar Fil Mazalim) என்று வழங்கினர். இந்த மரபை ஒட்டிப் பேரரசர் ஔரங்கசீபும் உயர்நீதி மன்றம் ஒன்றை ஏற்படுத்தினார்; இதில் தாமே உயர்நீதிபதியாகப் பொறுப்பும் ஏற்றார். இம் மன்றம் 'திவானெ மஸாலிம்' (Diwan-i-Mazalim) என்று வழங்கப்பட்டது.[1]

வாரத்தில் ஒரு நாளான புதன்கிழமை யன்று, ஔரங்கசீப் நீதி மன்றத்தில் தாமே அமர்ந்து வழக்குகளை விசாரிப்பார். சனி, ஞாயிறு, திங்கள், புதன்கிழமைகளில் மட்டும் அவர் 'தர்பாருக்கு'ச் (பேரவை) செல்வதில்லை யென்கிறார் J. N. சர்க்கார். அவர் அமர்ந்திருக்கும் நீதிமன்றத்தில் இரு நீதிபதிகளும் உடன் இருப்பர். ஒருவர் பொதுச் சட்டத்தின்கீழ் வழக்குகளை நடத்தும் நீதிபதி; இவர் 'ஆதில்' (Adil) என்று அழைக்கப்பட்டார். மற்றொருவர் மதவிவகார வழக்குகளை நடத்தும் நீதிபதி. இவர் 'காஜி' (Qazi) என்று அழைக்கப் பட்டார்; இருவரும் பேரரசருக்கு அருகிலேயே வீற்றிருப்பர். இவ் விரு நீதிபதிகள் மட்டுமன்றி, நீதிமன்றத்தில் மத விற்பன்னர்கள்—'உலமாக்கள்' (Ulamas) எனப்படுவோரும் வீற்றிருப்பர்.[2] இவர்களை அடுத்து, ஃபத்வா என்னும் மார்க்கத் தீர்ப்பு (Precedents and Equity law) வழங்கும் தகுதியுடைய, சிறப்பு மிகு பயிற்சி பெற்ற முஃப்தீகள் என்னும் விவேகிகள் உடன் இருப்பர். 'தாரோகா' (Daroga) என்னும் பணியாள் வாதி பிரதிவாதிகளைப் பேரரசர்முன் அழைத்து வந்து நிறுத்துவார். கீழ் நீதிமன்றங்களிலிருந்து வரும் வழக்குகளைப் பிரதம நீதிபதி யாகிய காஜியுல் குஜ்ஜாத் விசாரிப்பார். அவசியம் ஏற்படும் போதும், ஐயம் எழும்போதும், பேரரசர் காஜி, ஆதில், உலமா ஆகியோரின் கருத்துகளையும், சட்ட நுணுக்கங்களையும் கேட்டறிந்து தெளிவுபடுத்திக் கொள்ளுவார்; இறுதியாகத் தாமே தீர்ப்பு வழங்குவார். உடனே மாநில ஆளுநர்களுக்கும், திவான் களுக்கும் ஆணைகள் பிறப்பிக்கப்படும். மூன்று குறைபாடுகள் இதில் இருந்தன.

**குறைகள் :** (1) நீதிமன்றங்கள் அடுக்கு அடுக்காக இராமல், ஒரு சீரமைப்புப் பெற்று இராமல் இயங்கி வந்தன.

[1] H. A. R. Gibb—'Mohammedanism' p. 71.

[2] ஆலிம் என்றால், கற்றறிந்த மேதை யென்பது பொருள். இச் சொல்லின் பன்மையே 'உலமா' ஆகும். அறிஞர்கள் என்பது இதன் பொருளாம்.

(2) அவை நாடு முழுமைக்கும் ஒரே சீராக, ஒரு கட்டமைப்பின் அடிப்படையில் பரவி நிற்கவில்லை. (3) உயர்மட்டத்தில் வழக்குகள் குவிந்த வண்ணமாக இருந்தன.

இம் முறையில் நிறைகளும் இல்லாமல் இல்லை.

**நிறைகள் :** (1) 17ஆம் நூற்றுண்டிலும் மிகவும் எளியவருக்கும் நீதி கிடைத்தது; மிகவும் துரிதமாகவும் கிடைத்தது. (2) பேரரசரே நீதி மனப்பான்மை உடையவராக இருந்ததால், அன்னாரிடம் முறையிடுவதன் மூலம் வெகு எளிதில் நீதி கிட்டிற்று. வாதப் பிரதிவாதங்களை அறிந்து, கீழ்க் கோர்ட்டுத் தீர்ப்பு அளிக்கப்பட்டதன் அடிப்படையில் மன்னரே நேரடியாகவும், துரிதமாகவும் தீர்ப்பை வழங்க முடிந்தது; தேவையான இடங்களில் கருணையும் காட்ட முடிந்தது. சில வழக்குகளில் கடுமையாகவும் இருக்க முடிந்தது. (3) ஆதில், காஜியுல் குஜ்ஜாத், உலமாக்கள், 'முஃப்தீகள்' ஆகிய அனைவருமே நீதிமன்றத்தில் கூடியிருப்பதனுல், நீதியும் தீர்ப்பும் எளிதில் கிடைத்தன. வழக்குகள் ஒத்திப்போடப்பட்டுக் காலதாமதப் படுத்தப்படுதற்கு வாய்ப்புகள் குறைவே.[1]

அடித் தளத்தைப் பொறுத்தவரையில், ஊர்களில் பொது நீதிமன்றங்களும் கிராமப் பஞ்சாயத்துப் பொது மன்றங்களும் இயங்கி வந்தன. ஊரின் மன்றங்களில் காஜிகளே தீர்ப்பு வழங்கி வந்தனர். ஆனுல், காஜிகளுக்குத் தகுந்த அதிகாரங்கள் அன்று அளிக்கப்படவில்லை என்று பெர்னியர் கூறியுள்ளார். உண்மையில், சூபாவின் ஆளுநர்களே சில சமயங்களில் சில மாநிலங்களில் நீதிபதிகளாக ஓரிரு நாள்களில் மட்டுமே வழக்குகளை விசாரித்து வந்தனர். உதாரணமாக, குஜராத் மாகாணத்தில் அவ்வாறு இருந்ததை அறிந்து, சனி, ஞாயிறு, திங்கள், செவ்வாய், வியாழன் ஆகிய கிழமைகளில் நீதிமன்றம் கூட வேண்டும் என்றும், புதன் கிழமையில் மட்டுமே சுபேதார் மன்றம் (மாகாணப் பேரவை) கூடவேண்டும் என்றும், வெள்ளிக்கிழமை விடுமுறை நாளென்று அறிவிக்கப்படவேண்டும் என்றும் பேரரசர் ஔரங்கசீப் உத்தரவிட்டார்.

## இஸ்லாமிய சட்டம்

இஸ்லாமிய சட்டத்திற்கு அடிப்படைகள் மூன்று : (1) திருமறை—திருக் குர்ஆன். (2) நபிகள் நாயகத்தின்

[1] 'காலங்கடந்து வழங்கும் நியாயத் தீர்ப்பு நீதியை மறுப்பதாகும்'—Justice delayed is justice denied—என்பது ஆங்கிலப் பழமொழி. இந்நிலை ஔரங்கசீப் ஆட்சியில் இல்லை.

'ஹதீத்' என்னும் திருவாய் மொழிகள். இவை இரண்டும் மூலவேர்கள் ஆகும். (3) 'இஜ்மா' என்னும் சட்ட நுண்ணறிவாளரின் ஒருமித்த கருத்தாகும். [இஸ்லாமிய சட்டம் எப்படி உருவாயிற்று? அதன் பல்வேறு நிலைகள் என்ன? ஔரங்கசீப் ஆலம்கீரின் கரத்திடை அச் சட்டம் என்ன முன்னேற்றங்களை யெல்லாம் பெற்றுக் கொண்டது என்கிற முழுத் தகவலையும் தமிழ் நாட்டுப் பாட நூல் நிறுவனக் கல்லூரி வரிசை எண் 547 '**இந்திய இசுலாமியர் சட்டம்**' என்னும் சிறப்பான நூல் நன்கெடுத்து இயம்புவதை மாணவர்கள் பயின்றால் முற்றும் துலக்கமாகும்.]

நம் நாட்டில் பேரரசர் ஔரங்கசீப் திருமறையாகிய திருக்குர்ஆன், ஹதீதுகள், இமாம்கள் (குறிப்பாக, மூத்த இமாம் அபூஹனீஃபா) வழங்கியுள்ள 'இஜ்மா' விளக்கங்கள் ஆகியவற்றின் அடிப்படை ஆதாரங்களில் சட்டத் தொகுப்பு ஒன்றை உருவாக்கினார். இது '**ஃபத்வாயெ ஆலம்கீரி**' என்று அழைக்கப்படும். இச் சட்டத் தொகுப்பை அறிஞர்களின் குழு வொன்று தயாரித்தது. அக்காலத்தில் இதற்கு மொத்தம் 2 லட்சம் ரூபாய் செலவிடப்பட்டது. ஷேக் நிஜாம் என்பவர் அக்காலத்திய சிறந்த சட்ட வல்லுநர், மார்க்க அறிஞரும் கூட ஆவார். இந்த ஷேக் நிஜாம் ஆலம்கீரின் சட்டத்தொகுப்புக் குழுவுக்குத் தலைமை தாங்கினார். இதனைத் தயாரித்த குழுவில் சிறப்பான இடத்தைப் பெற்ற மற்றவர்கள், ஷேக் சிராஜ் யஹ்யா, ஷீராஜ், ஷுல்ஃபி அப்துல்லா ஆகியோராவர். 'ஃபத்வா' அரபியில் தயாரிக்கப்பட்டது. பின்னர், ஷுல்ஃபி அப்துல்லா என்னும் முற்சொன்ன மார்க்க அறிஞர், இத்தொகுப்பைப் பாரசீக மொழியில் மொழிபெயர்க்குமாறு பணிக்கப்பட்டார். இந்தக் குழு முக்கியமான பொறுப்பை ஏற்றுக்கொண்டது. ஏனெனில், இஸ்லாமிய உலகு இதன் அடிப்படைகளை உற்றுநோக்கி ஆராய்ந்து ஏற்று நடக்க ஆரம்பித்தது. 10 வால்யூம்களில் வெளியான இந்த 'ஃபத்வா' 1,00,000 வாக்கியங்களைக் கொண்ட ஒரு பெரு நூலாகும் என்று 'மிர்அத்தெ ஆலம்' நூலில் பக்தாவர் கான் வரைந்துள்ளார்.[1] குற்றங்களைத் திருமறை ஹத் (Had), தாஜித் (Tajid), கிஸாஸ் (Khisas), தாஷிர் (Tashir) என்று நான்கு வகைகளாகப் பிரிப்பதாக மேற்கோள் காட்டி ஜாதுநாத் சர்க்கார் விளக்குகிறார். முதல் வகையில் திருட்டு, கொள்ளை, ஒழுக்க நெறிகளை மீறுதல் (Immorality), குடிப்பழக்கம், மது தயாரித்தல், பகற்கொள்ளை ஆகிய குற்றங்கள் குறிக்கப்பட்

[1] Elliot & Dowson, Vol. VII, pp. 156 - 162.

டுள்ளன. இரண்டாவது வகையில் முதல்வகைக் குற்றங்கள் சிலவும் சேர்க்கப்பட்டுள்ளன. ஆனால், இதற்கான தண்டனை முதல் வகையைவிட இலகுவானது. கிஸாஸ் என்னும் மூன்றும் வகையில் குறிப்பாகக் கொலைக்குற்றம் சேர்க்கப்பட்டுள்ளது. 'தாஷிர்' என்னும் நாலாவது வகையில் வேறு சில குற்றங்கள் விசாரிக்கப்படும். இது சாதாரணமாகப் பொது மக்களை இழிவு படுத்துவது போன்றவற்றுக்கான தண்டனையாக (Lynching) இருக்கும். இது வழக்கின் தன்மையைப் பொறுத்ததே ஒழியக் காஜி அல்லது மன்னரின் விருப்பத்தைப் பொறுத்தது அன்று.

## ஔரங்கசீபின் குற்றச் சட்டம்
## (Penal Code of Aurangzeb)

1672ஆம் ஆண்டு ஜூன் மாதம் 16ஆம் தேதி குஜராத் மாகாணத் திவானுக்குப் பேரரசர் ஃபர்மான் ஒன்றைவிடுத்தார். அந்தக் கட்டளையில், நீதிமன்றத்துக்கு வழக்குகளை எடுத்துச் செல்லாமல், பல நாள்களுக்குக் குற்றவாளிகளென்று கருதப் பட்டோரைச் சிறையில் நீடித்து அடைத்து வைப்பது முற்றிலும் தவறு என்று கூறிக் கண்டித்துள்ளார். எனவே, ஔரங்கசீப் சட்டத்தின் ஆட்சியை (Rule of Law) நிலைநாட்ட முயற்சித்தார் என்றால் அது மிகையாகாது. அந்த ஃபர்மானின் வாசகம் பின் வருமாறு:

எந்த ஒரு குற்றத்தின் காரணமாகவும் சிறைக்குள் காவற் கைதிகளாக அடைத்து வைக்கப்பட்டிருக்கும் பேர்வழிகளின் மீதான குற்றச்சாட்டை விசாரித்து முடிக்காமல் தல அதிகாரிகள் அக் கைதிகள் விஷயத்தில் காலதாமதம் புரிந்து வருவதாகப் பேரரசர் துயருடன் கேள்வியுறுகிறார். நியாயமான காரணம் இன்றிச் சிறைப்படுத்தப்படுவதைத் தவிர்க்கக் கீழ்க்கண்ட திட்டங்கள் இடப்படுகின்றன:

1. ஒரு திருட்டுக் குற்றம் காஜியின் முன் நிரூபிக்கப்பட்ட பிறகு, அல்லது குற்றவாளியே தன் குற்றத்தை ஒப்புக்கொண்ட பிறகு, 'ஹத்' என்ற நிலை உருவாகுமேயானால், காஜி தம் எதிரிலேயே தண்டனையை நிறைவேற்றச் செய்யவேண்டும்.

2. ஊரில் திருட்டு அதிகமாகி விட்டால், திருடன் பிடிபட்டாலும், திருட்டுக் குற்றம் நிரூபிக்கப்பட்ட பின்பும் அவனைச் சிரச்சேதம் செய்து விடாதீர்கள்; ஏனெனில், இதுவே அவனிழைத்த முதல் குற்றமாகவும் இருக்கக்கூடும்,

3. ஒருவன் ஒரே ஒரு முறை ('ஹத்' என்னும் வகையில் சேராத) 'நிசாப்' என்னும் அளவுக்குக் குற்றம் செய்துவிட்டால், அவனைச் சிறையில் வைத்திருங்கள். மீண்டும் மீண்டும் அம்மாதிரிக் குற்றங்களை அவன் செய்வானேயானால், அவனுக்கு நீண்ட காலச் சிறைத் தண்டனையை அளியுங்கள்.

4. நீண்டகாலத் தண்டனை அவனுக்கு அளிக்கப்பட்ட பிறகு, களவாடப்பட்ட சொத்துகளை அவற்றின் சொந்தக்காரரிடம்—சட்டப்படி அவரே சொந்தக்காரர் என்பது நிரூபிக்கப்பட்ட பிறகு ஒப்படைக்கவும். அப்படிச் சொந்தக்காரர் இல்லையானால் (இறந்து விட்டிருந்தால்) அதை 'பைத்துல் மாலில்' ஒப்படைக்கவும்.

5. தண்டனைக்குப் பிறகும் குற்றவாளியானவன் மீண்டும் மீண்டும் குற்றங்களைச் செய்தால், ஹத் அளவுக்கு அதிகரித்து விட்டால், முன்பைவிட நீண்டகாலத் தண்டனை விதிக்கவும்.

6. ஒருவன் பிரேதங்களடக்கப்பட்டுள்ள சவக் குழிகளைத் தோண்டுவானேயானால், அவனைக் கைது செய்து, கண்டித்து, பிறகு விடுவிக்கவும். இதையே அவன் தனது நிரந்தரத் தொழிலாகக் கொண்டிருந்தால் அவனை நாட்டை விட்டு வெளியேற்றி விடவும்.

7. ஒருவன் வழிப்பறி கொள்ளையில் ஈடுபட்டால், அதற்குரிய தண்டனை அவன்மீது விதிக்கப்படவேண்டும். அவனுக்கு மரண தண்டனை கொடுக்காவிட்டால், 'ஹத்' அளவுக்கு உரிய தண்டனை எதுவோ, அதை அவன்மீது விதிக்க வேண்டும். இதில் மாநில ஆளுநரையும் கலந்து ஆலோசிக்கலாம்.

8. ஒருவன் திருடிய பொருளை மற்றொருவனிடம் கொடுத்து வைத்திருந்தால், அந்த மற்றவனும் திருடனுக்கு உடந்தையாக இருந்தானென்பது நிரூபிக்கப்பட்டால், இதுவே இவன் புரிந்த முதல் உடந்தைக் குற்றம் என்றால், இவனைத் 'தாஷிர்' குற்ற அளவுக்குத் தண்டிக்க வேண்டும்; ஆனால், இதுவே இவனது நெடுநாளைய பழக்கமாக இருப்பின், இவனைக் கைது செய்து சிறையில் வைக்கவேண்டும் — (இவன் திருந்தும்வரை). மீண்டும் மீண்டும் இவன் அதே குற்றத்தைச் செய்தால் இவனை நிரந்தரமாகச் சிறைப்படுத்தவும்.

9. ஆனால், ஒரு குற்றமும் அறியாதவர்கள் (களவாடப் பட்ட பொருள் எனத் தெரிந்தோ தெரியாமலோ) ஒரு பொருளை

வாங்கிவிட்டால், அவர்களைத் தண்டிக்கக் கூடாது; ஆனால் அப் பொருளுக்குரிய உண்மையான உரிமையாளரிடம் அதை ஒப் படைக்கவேண்டும்; இல்லையாயின், பைத்துல் மாலில் சேர்ப் பித்துவிடவேண்டும்.

10. ஒருவன் வழக்கமாகவே பகற் கொள்ளையில் ஈடுபட்டு, மக்களைக் கொள்ளையடித்தும் அவர்களின் உயிர்களுக்கு ஆபத்து விளைத்தும் வருவானாயின், குற்றம் நிரூபிக்கப்பட்ட பிறகு அவ னுக்கு(க் 'கிஸாஸ்') மரண தண்டனை விதிக்க வேண்டும்.

11. 'கிராகியா'க்கள்[1] போன்ற, வழக்கமாகவே நெடுகக் கொள்ளையடிக்கும் கொள்ளைக்காரர்களுக்கும் சொத்துகளைப் பறிப்பவர்களுக்கும் குற்றம் நிரூபிக்கப்பட்ட பிறகு, பொதுமக் களின் நலனில் அக்கறை கொண்டு, இறுதிக்கட்ட மரண தண் டனை விதிக்கப்படவேண்டும்.

12. கழுத்தை நெரித்துக் கொல்பவர்கள், தக் (Thugs) கொள்ளைக்காரர்கள் ஆவார்கள். ஒரு கொள்ளைக்காரனின் முதல் குற்றத்தைத் 'தாஷிர்' குற்றமாகக் கருதித் தண்டிக்கவேண்டும்; ஆனால், அவன் கழுத்தை நெரித்துக் கொல்லும் பழக்கத் தையே வழமையாகக் கொண்டிருந்தால், அதுவும் சட்டப்படி நிரூபிக்கப்பட்டு விட்டால், அவனை மக்களுக்கே அடையாளம் தெரியுமானால், கொள்ளை அடித்த பொருள்கள் அவனிடம் கைப் பற்றப்பட்டால், ஆளுநர் அவனைப்பற்றிக் கேள்விப்பட்டிருந் தால், குற்றம் நிரூபிக்கப்பட்டபின் அவன்மீது மரண தண் டனையை விதிக்கவேண்டும்.

13. ஒருவன் திருடியதாகவோ, கொள்ளை யடித்த தாகவோ, மக்களைக் கொன்று விட்டதாகவோ சந்தேகம் எழு மானால், அலுவலர்களும் சந்தேகிப்பார்களானால், சட்டத்தின் படி அவன்மீது குற்றப்பத்திரிகை தயாரித்து, அவனைக் காஜி யிடம் வழக்கு விசாரிக்க அனுப்பிவைக்கவும்.

14. எவனாவது பிறர் வீடுகளுக்குத் தீயிட்டு, தீ வைத்த பின் பொருள்களைக் களவாடுவானானால், 'பங்' (Bang) போன்ற லாகிரிப் பொருள்களைப் (பொருள் அபகரிக்கும் நோக்கத்துடன்) பிறருக்குப் பிரயோகிப்பானானால், குற்றம் நிரூபணமான பிறகு அவன்மீது கடுமையான சிறைத் தண்டனை விதிக்கவும். அவன்

[1] குஜராத் மாநிலத்தில் அக்காலத்தில் வாழ்ந்த துணிகரமிக்க, படு கொள்ளை நிகழ்த்துவதையே தொழிலாகக் கொண்ட கொள்ளைக் கூட்டத்தினர் 'Graghis' என்று அழைக்கப்பட்டனர்,

சிறைத் தண்டனை முடிந்து விடுவிக்கப்பட்ட பின்பும் அதையே தொழிலாகச் செய்தால், இறுதியான மரண தண்டனையை அளிக்கவும்.

15. கும்பலாகக் கூடி ஒரு கூட்டத்தினர் போர் புரியும் வகையில் ஆயுதங்களைச் சேகரித்தால், ஆயுதங்களைத் தயாரித்து இன்னும் போர்த் தாக்குதலைத் தொடங்கவில்லையானால், அவர்களைக் கைது செய்து சிறைப்படுத்தலாம். போர் புரிய அவர்கள் ஓர் இடத்தைத் தேர்ந்தெடுத்துக் கொண்டால், அவர்களை எதிர்த்துத் தாக்குங்கள்; கூட்டத்தைக் கலைத்து விடுங்கள். அவர்கள் கலைந்து விட்டால் அவர்களைத் தாக்காதீர்கள்; கொல்லாதீர்கள். பொருள்கள் கைப்பற்றப்பட்டால், அவர்கள் உண்மையாகப் பிழையுணர்ந்து பச்சாத்தாபப்பட்டால், அவற்றை அவர்களிடம் திரும்ப ஒப்படைத்துவிடுங்கள்.

16. கள்ள நாணயம் தயாரிப்பவன் முதல் தடவை அக் குற்றத்தைச் செய்தால் அவனுக்குத் 'தாஷிர்' தண்டனை கொடுத்தபின் விடுவிக்க வேண்டும்; இதனையே அவன் தொழிலாகக் கொண்டிருந்தால், அவன் மனம் திருந்தும்வரை சிறைவாசம் கொடுக்க வேண்டும்; பிறகும் அவன் தனது தொழிலைக் கைவிடாவிட்டால், ஆயுட்காலச் சிறைவாசம் அவனுக்கு விதிக்கப்படவேண்டும்.

17. யாதும் அறியாதவர்கள் கள்ள நாணயத்தை வைத்திருப்பார்களேயானால், அவர்கள் தண்டிக்கப்படக் கூடாது; ஆனால், அந் நாணயங்களைக் கைப்பற்றி அழித்துவிட வேண்டும்.

18. ஒருவன் களவாடிய நகைகளைத் தங்க நாணயமாக மாற்றுவதாகப் போலி வேடம் போட்டால், அவனைக் கைது செய்து சிறைப்படுத்த வேண்டும். சொத்தை உரியவரிடம் சேர்ப்பிக்க வேண்டும்.

19. ஒருவன் மற்றொருவனுடைய மனைவியைக் கற்பழித்தால், குழந்தை, மகள், மகன் ஆகியோரை வஞ்சகமாக அபகரித்துச் சென்றால், குற்றம் நிரூபிக்கப்பட்டபின் மனைவியையோ, குழந்தையையோ, மகளையோ, மகனையோ உரியவரிடம் ஒப்படைக்கும்வரை குற்றவாளியைச் சிறைப்படுத்த வேண்டும்; அல்லது அவன் இறக்கும்வரை சிறைவாசம் விதிக்க வேண்டும்.

20. சூதாட்டத்திற்குத் தாஷிர் அளவிலான சிறைவாசமே தண்டனையாகும். மீண்டும் தொடர்ந்து அவன் சூதாடினுல், நீண்டகாலச் சிறைவாசம் விதிக்கவும். சேர்க்கப்பட்ட பொருள்கள் உரியவரிடம் ஒப்படைக்கப்பட வேண்டும்; அல்லது அவை அரசாங்கத்தின் பொதுச் சொத்தாகும்.

21. மது விற்கப்படும் பொழுது, விற்பவனுக்குக் கசையடி கொடுக்கவேண்டும். அவன் மீண்டும் அதனை விற்ருல் அவனுக்குச் சிறைவாசம் விதிக்கவேண்டும்.

22. 'பங்' மற்றும் பிற லாகிரிப் பொருள்கள் விற்போர் தண்டிக்கப்படவேண்டும்; இதையே தொழிலாகக் கொண்டு விற்பவர்களுக்கு அவர்கள் திருந்தும் வரை சிறைவாசம் அளிக்கப்படவேண்டும்.

23. கள்ளச் சாராயம் காய்ச்சுவோர்களுக்குக் கசையடி கொடுத்துத் தண்டிக்கவேண்டும்; அவர்கள் மீண்டும் செய்யாதவாறு தண்டித்துப் பேரரசருக்கு உடன் தெரிவிக்க வேண்டும்.

24. ஒரு மனிதன் மற்ருெரு மனிதன்மீது பொய் வழக்குக் கற்பித்து ஆளுநரின் விசாரணை யளவுக்குக் கொண்டு சென்று, சொத்துப் பாழாகுமாறு செய்துவிடுவானுனல், அவன் எந்த அளவுக்கு இப்படிப்பட்ட வீண் நஷ்டத்தை விளைவித்தானே அந்த அளவுக்கு அதைச் சம்பந்தப்பட்ட நஷ்டவாளிகளுக்கு வழங்கி ஈடு செய்துவிட வேண்டும்.

25. சட்டத்தின்படி கொலைக் குற்றம் ஒருவன்மீது நிரூபிக்கப்பட்டுவிட்டால், அவனைச் சிறையில் வைத்திருக்க வேண்டும்; பேரரசருக்கு வழக்கின் விவரங்களைத் தெரிவிக்க வேண்டும்.

26. ஃபவுஜ்தார் முன் சமர்ப்பிக்கப்படும் கைதிகளை உடனடியாக முன்விசாரணை நடத்தி, அரசின் நிலங்களைப் பொறுத்ததாக இருப்பின், அவர்கள்மீது தகுந்த நடவடிக்கை யெடுக்க வருவாய்த்துறை அதிகாரிகளிடம் அனுப்பிவைக்க வேண்டும்.

27. அவ்வாறு இல்லையாயின், மேற்கண்ட ஏதாவது ஒரு ஷரத்தின் பொருத்தமான அடிப்படையில் குறிப்பிட்ட வழக்குகளுக்குப் பரிகாரம் தேடவேண்டும்.

28. ஒவ்வொரு மாதமும் கச்சேரியில் (சிறைச்சாலையில்) இருக்கும் கைதிகளின் நிலையையும், பொலீஸின் பொறுப்பில் இருக்கும் கைதிகளின் நிலையையும் விசாரிக்க வேண்டும்.

29. நிரபராதிகளை விடுவிக்க வேண்டும்; குற்றவாளிகள் மீது உடனடியாக வழக்குத் தொடர வற்புறுத்த வேண்டும்.

30. (பொலீஸ் பாதுகாப்பில்) ஒருவர் கைது செய்யப் பட்டுக் கொண்டுவரப் படுவாரேயானால், அல்லது நிலத்தீர்வை அலுவலர்களாலோ, வாதியின் புகார் பேரிலோ கைது செய் யப்படுவாரேயானால் 'கொத்தவால்' (பொலீஸ் மேலதிகாரி) நேரே ஒரு விசாரணை நடத்தவேண்டும். கைது செய்யப் பட்டவர் (விசாரணைக்குப் பிறகு) நிரபராதியாக இருப்பின், அவரை விடுவித்துவிட வேண்டும்; இல்லையாயின், அவர்மீது வழக்குத் தொடரக் 'காஜி'யிடம் அனுப்பி வைக்கவேண்டும்.

**சட்ட ஆட்சி:** மேற்கூறிய குற்றச் சட்டம் (Penal Code) ஔரங்கசீபின் அறிவுக் கூர்மையையும், சிறந்த ஆற்றலையும், சட்ட நுணுக்கத் திறமையையும் பறைசாற்றுகின்றன. தற்காலக் குற்றச் சட்டங்கள் பலவற்றின் அடிப்படைகள் ஔரங்கசீபின் கருத்துகளில் மிளிர்வதைப் பார்க்கின்றோம்.[1] அது மாத்திர மன்று; ஔரங்கசீபின் குற்றச் சட்டம் பொதுச் சட்டத்தின் (Common Law) அடிப்படையில் அமைந்துள்ளது. ஆராய்ந்து பார்ப்பின், இது நன்கு புலனாகும். பொதுச் சட்டம் என்பதற்கு நிரூபணமாக—ஓர் உதாரணமாக—இச் சட்டம் அமைந்துள் ளது. பேரரசர் குற்ற விவகாரங்களைப் பொறுத்தவரை மத வேறுபாடுகளைப் பாராட்டவில்லை. நீதிமன்றங்களும் குற்றச் சட்டங்களும் எல்லோருக்கும் பொதுவாகவே அமைந்திருந்தன. மத அடிப்படையில் இல்லாமல், அனைவருக்கும் பொதுவான பொதுச் சட்டங்கள் அமல் நடத்தப்பட்டால் அச் சூழ்நிலையைச் 'சட்டத்தின் ஆட்சி' (Rule of Law) என்கிறோம். உண்மையில், பேரரசர் ஔரங்கசீப் அந்தக் குறிக்கோளை அடையவே முயற் சித்தார் என்பதற்கும், குறிப்பாக மேற்கூறிய குற்றச் சட்டத் தொகுப்பில் தம் சமயச் சட்டத்திலிருந்தும் வேறுபட்டிருந்தார் என்பதற்கும் சான்றுகள் நிறைந்துள்ளன.

**பொதுச் சட்டமும் ஔரங்கசீபின் சட்டமும்:** பொதுச் சட்டம் என்றால் என்ன? பிரிட்டானியக் கலைக் களஞ்சியம் (வால். IV, பக். 756) இதற்கு நல்ல விளக்கம் அளிக்கிறது. கலைக் களஞ்சி யத்தின் அடிப்படையில் ஔரங்கசீபின் இந்த 17ஆம் நூற்றாண் டின் குற்றச் சட்டத்தை உற்றுப் பார்க்கும்போது, உறுதியாக

[1] ஔரங்கசீபின் 'பத்வாயெ ஆலம்கீரி' தான் மெக்காலே தயாரித்த தற் கால இந்தியச் சட்டங்களுக்கு ஆதாரமாக இருந்தது என்றால் அது மிகையாகாது.

மேற்குறிப்பிட்ட 30 பிரிவுகளிலும் ஔரங்கசீப் முஸ்லிம் என்றோ, இந்து என்றோ பிரிவு பாகுபாடு படுத்தவே இல்லை. அவரது கட்டளை அவ்வாறு தெரிவிக்கவுமில்லை; பொதுச் சட்டமாகவும் (Common Law) விளங்கிற்று.

இரண்டாவதாக, ஔரங்கசீப் இஸ்லாமிய ஷரீஅத் சட்டத்தினின்றும் சற்று விலகியே இப்பொதுச் சட்டத்தை உருவாக்கினார் என்பதற்குப் பல உதாரணங்களை அளிக்கலாம்.

**உதாரணங்கள் :** (1) ஷரீஅத் சட்டப்படி திருடன் புரியும் முதற் குற்றத்திற்கு அவனுடைய விரல்களைத் துண்டிக்க வேண்டும். ஆனால், ஔரங்கசீப் இதை ஏற்காமல், குற்றவாளிக்குச் சிறைவாசத் தண்டனையையே அளிக்கிறார். அது மாத்திரமன்று. நீண்டகாலம் திருட்டுக் குற்றம் புரிகிறவர்களுக்கும் சித்திரவதை அளிக்கச் சொல்லாமல், நீடித்த ஆண்டுகட்குச் சிறைவாசத்தையே பரிந்துரைத்துள்ளார்.

(2) கற்பழித்தலுக்கு இஸ்லாமிய சட்டம் மிகவும் கடுமையான தண்டனையை அளிக்கிறது. சூழ்நிலையை ஒட்டிக் குற்றவாளி பெண்ணாக இருப்பினும் சரியே, 100 கசையடி கொடுக்கப்படவேண்டும். இது போன்றே, கடத்தல் குற்றமும் கடுமையாகத் தண்டிக்கப்படக்கூடியதே. ஆனால், இத்தகு மூர்க்கத் தண்டனை வழங்கும் இஸ்லாமிய சட்டத்தைப் பிற மக்கள்மீது திணிக்கும் பொழுது, வன்மையான எதிர்ப்பு எழக்கூடும். அது நியாயமான எதிர்ப்பாகவும் விளங்கக்கூடும். எனவே, தீவிரத் தண்டனைக்கு மாறாகக் கடத்தலுக்கு 'ஆயுள் தண்டனையை' ஔரங்கசீப் பரிந்துரைத்துள்ளார். இவ்விரு உதாரணங்களும் இஸ்லாமிய சட்டத்தை எல்லோர்மீதும் திணிக்க வேண்டும் என்று கருதாமல் நாட்டில் வாழும் அனைவருக்கும் நியாயமான—பொதுவான—சட்டத்தையே ஆலம்கீர் சட்டமாக அளித்தார் என்பதைத் தெளிவுபடுத்துகின்றன. ஆனால், அதே நேரத்தில், இஸ்லாமிய சட்டத்தை இந் நாட்டில் அமல்படுத்த இயலாது என்று ஔரங்கசீப் கருதிவிட்டார் போலும் என்ற தவறான முடிவுக்கும் வந்துவிடக் கூடாது. அது போன்றே இக் குற்றச் சட்டத்தை மதச் சட்டம் என்று கருதுதலும் தவறாகும். ஏனெனில், ஔரங்கசீபின் சட்டம் இஸ்லாமிய சட்டத்திற்கு மற்றொரு விளக்கமும் அன்று; இஸ்லாமிய மதச் சட்டமுமாகாது என்பது மிகவும் தெளிவு.

ஔரங்கசீபின் சட்டம் குற்ற இயல்களைப் பொறுத்தவரை இஸ்லாமிய சட்டத்தை முழுக்க முழுக்கப் பின்பற்றுவதாகவும்

சொல்ல முடியாது; அதை முற்றிலும் புறக்கணிப்பதாகவும் கூற முடியாது. ஷரீஅத் அல்லது 'ஷர்' என்றாலே 'இறை ஆணையின், இறை வழிகாட்டலின் பொது வழி' என்று பொருள்படும்.

ஷரீஅத் என்னும் இஸ்லாமிய சட்டமும், திருமறையின் விளக்கங்களும் மனிதப் பகுத்தறிவின் குறைகளை நன்றாக உணர்த்துகின்றன. நன்மை எது, தீமை எது என்பதனைப் பகுத்தறிவு தானாகவே பிரித்து உணர்ந்து கொள்ளுதல் இயலாது. இதற்கு இறைவனின் திருஉள்ளமும் வழிகாட்டுதலும் மிகவும் தேவைப்படுகின்றன; இதனால்தான் திருமறையும் தேவைப்படுகின்றது. இதற்கு விளக்கம் அளிக்க இறைத்தூதர்களும் தேவைப்படுகின்றனர். அறிஞர் கிப் (Gibb) தமது 'Mohammedanism' என்னும் நூல், பக். 62-ல் இதை நன்கு விளக்கிக் காட்டியுள்ளார். ஆகவே, குறைபாடுடைய மனித அறிவுக்கு நல்லவை கெட்டவை எனப் பாகுபாடு செய்யவும், பிரித்தறியவும், ஹத்து (Hadd) என்னும் எல்லைக்கோடுகள் ஏற்படுத்திக்கொள்ளவும் ஷரீஅத் துணைபுரிகின்றது. ஷரீஅத் சட்டம் மனிதவாழ்க்கையின் எல்லா அம்சங்களையும் தழுவி நிற்கின்றது. இறைவனுக்கு மனிதன் ஆற்றவேண்டிய பணிகளிலிருந்து மனிதன் மற்றொருவனுக்குப் புரியவேண்டிய தொண்டு முதற்கொண்டு, குற்றவகைகள் அனைத்தையும்பற்றி எல்லாம் விளக்கமாக எடுத்துக் கூறுகிறது. அது குறுகிய எல்லைக்கு உட்பட்டது அன்று; இறைவனின் துணையையும் வழிகாட்டலையும் நாடுகிறது; அதே நேரத்தில் பகுத்தறிவுக்கும் ஒத்தது. எனவே, ஷரீஅத் சட்டத்தின் அடிப்படை மிக அகன்றதாகும். அது குற்றச் சட்டத்தையும் குற்றச் சட்ட முறைகளையும் (Criminal Code and Criminal Procedure Code), சிவில் சட்டத்தையும் சிவில் சட்ட முறைகளையும் (Civil Code and Civil Procedure Code) தன்னகத்தே உள்ளடக்கியுள்ளது.

ஔரங்கசீப் இவ்வளவு நுணுக்கங்களையும் நன்கு தேர்ந்தறிந்து, முஸ்லிம்களுக்கென்று மட்டுமல்லாமல், தம் ஆளுகையின் கீழுள்ள சகல சமய வழிபாட்டினருக்கும் பொருத்தமான, ஆனால் ஷரீஅத்துக்கு முற்றிலும் நேர் முரணாகாத முறையில் மிகக் கெட்டிக்காரத்தனமாகச் சட்டங்களை உருவாக்கி, எதிர்கால பிரிட்டிஷ் ஆட்சியாளரே கூட அவரது வழியில் சென்று சட்டமியற்றத்தக்க முறையில் முன்மாதிரியை உண்டுபண்ணி விட்டார்.

**தற்காலச் சட்டமும் ஔரங்கசீபின் சட்டமும்:** தற்காலச் சட்டங்கள் குற்றங்களை 5 வகைகளாகப் பிரித்துள்ளன. அவை யாவன:

1. அரசின் பாதுகாப்புக்கு வெளி, உள், எதிரான குற்றங்கள்.

2. பொது அதிகாரிகள், நீதி நிர்வாகத்திற்கு எதிரான குற்றங்கள்.

3. பொதுமக்களுக்கு எதிரான குற்றங்கள்.

4. தனி நபர்களுக்கு எதிரான குற்றங்கள்.

5. சொத்துகளுக்கு எதிரான குற்றங்கள்.

உண்மையில் ஆராய்ந்து பார்க்கும்போது, இன்று நம் நாட்டில் இருக்கும் சட்டங்கள் பலவற்றின் மூலக் கருத்துகள் சில ஔரங்கசீபின் ஃபத்வாயெ ஆலம்கீரியில் இருப்பதைக் காண லாம். இன்று நம் நாட்டில் இருக்கும் சட்டங்கள் எல்லாம் பொதுச்சட்டங்களே. உதாரணமாக: (1) இந்தியன் குற்றச் சட்டம் (Indian Penal Code), (2) குற்றமுறைச் சட்டம் (Criminal Procedure Code), (3) சிவில்முறைச் சட்டம் (Civil Procedure Code), (4) நடைமுறைக் குற்ற இயல் சட்டம் (Criminal Rules of Practice) ஆகியவையாகும். இவற்றை 19ஆம் நூற்றுண்டில்தான் அறிஞர் மெக்காலேயின் தலை மையின் கீழ் அமைந்த சட்ட நிபுணர்களின் குழு ஒன்று தயாரித்தது. இக் குழுவில் மெக்காலே தலைவராகவும் மேலும் மூவர் உறுப்பினர்களாகவும் பணியாற்றினர். இச் சட்டங்கள் குறிப்பிடும் தண்டனைகளும், நீதி நிர்வாக முறைகளும் ஔரங்கசீப் வகுத்த முறைகளுக்கு ஒத்தவாறு அமைந்திருக் கின்றனவெனக் கூறும்பொழுது, நம்மால் அதை எளிதில் நம்ப முடியவில்லை. எனினும், இதை நிரூபிக்கச் சில சட்டங்கள் ஔரங்கசீபின் குற்றச் சட்டத்தைப் பின்பற்றி இருக்கின்றன என்பதற்கு உதாரணங்கள்:

1. ஔரங்கசீபின் ஷரத்து, முதற் குற்றம் மன்னிக்கப்பட வேண்டும்; அதே குற்றத்தை மீண்டும் செய்தால் நீண்டகாலத் தண்டனை விதிக்கவேண்டும். இவற்றை (First Admonition, Sec. 562 Cr. P. C. ) உடன் ஒப்பிடலாம்.

2. ஔரங்கசீபின் ஷரத்துகளான 3, 4, 5, 8 நீண்ட காலத் தண்டனையை செக்ஷன் 75 இந்தியன் பீனல் கோடு (I. P. C.) உடன் ஒப்பிடலாம்.

3. ஔரங்கசீபின் ஷரத்துகள் 4, 9, சொத்துகள் ஒப் படைக்கப்படல் சம்பந்தமானவை. இவற்றை (சொத்துகளைச் சேர்ப்பித்தல், பறிமுதல்) என்ற நடைமுறைக் குற்ற இயல் தொகுப்புக் கூறும் முறையுடன் ஒப்பிடலாம். (Criminal Rules of Practice - 'Forfeiture of Properties').

4. ஔரங்கசீபின் 10, 12, 13, 14 ஷரத்துகளை இந்தியன் பீனல் கோடு 'தீவிரமான குற்றம்'—கொள்ளை எனக் கூறும் பிரிவுடன் ஒப்பிடலாம் (Grave offence—Dacoity—Committal to Sessions Court—Sec. 395—I. P. C.)

5. வழக்கமான திருடன்—ஔரங்கசீபின் ஷரத்து 2, 10—இதனை இ. பீ. கோ. செக்ஷன் 379 உடன் ஒப்பிடலாம்.

6. ஔரங்கசீபின் ஷரத்து 19—மனைவி, மக்கள், பொருள் களைக் கடத்துதல்—இது செஷன்ஸ் கோர்ட் வழக்கு ஆகும். ஆனால், சாதாரணமாக 7 ஆண்டிலிருந்து 14 ஆண்டுகள் வரை யில் (ஆயுள் தண்டனை என்று கூறப்படுவது) தற்பொழுது தண் டனை விதிக்கப்படுகிறது. ஔரங்கசீப் ஆயுள் கால தண்டனை யையே 'இறக்கும் வரை' விதிக்கிறார். (Abduction—Sessions Case, Punishment 7 Years R. I.)

இறுதியாக, நீதியிலும், நிர்வாகத்திலும், சட்டம் இயற்ற லிலும், சட்ட முறைகளிலும், மதக் கொள்கைகளிலும் ஔரங்கசீப் உலகிற்கு ஒரு புரியாத புதிராகவே விளங்கினார்.

# 20. ஔரங்கசீபின் தீர்ப்புகளும் கடிதங்களும்

1. ஔரங்கசீப் இளவரசராக இருக்கும்பொழுதே அனைவரிடத்தும் அன்பு பாராட்டி வந்தார்; குறிப்பாகப் பிரதமர் சஅதுல்லா கான், அலீ மர்தான் கான், சையத் மீரான் ஆகிய பிரபுக்களிடம் மிகவும் நட்புடனும், அடக்கத்துடனும் நடந்துகொண்டார். இதனைப் பேரரசர் ஷாஜஹான் வெறுத்தார். ஷாஜஹான் ஔரங்கசீபுக்குக் கடிதம் ஒன்றை எழுதிய பொழுது, 'என் மைந்தனே, அரசர்களும் அரசின் புத்திரர்களும் தங்கள் உயர் பிறவிக்குத் தக்க பெருந்தன்மை மிக்கவர்களாய் மிடுக்குடன் இருக்கவேண்டும். ஆனால், நீயோ என் உத்தியோகஸ்தர்கள் ஒவ்வொருவரிடமும் அடிமையைப்போன்று நடந்துகொள்வதாகக் கேள்விப்படுகின்றேன். நீ உன் வருங் காலத்திலும் இவ்வாறே நடந்துகொண்டால், உன் மரியாதையை நீ இழக்க நேரிடும்' என்று குறிப்பிட்டார்.

தம் தந்தைக்கு எழுதிய பதில் கடிதத்தில் ஔரங்கசீப் பின் வருமாறு வரைந்தார்: 'தந்தையே, தங்கள் கருணையாலும் அன்பினாலும் தங்களுக்கு மரியாதை செலுத்திக் கொள்ளும் இவ் வடிமைக்கு விடுத்திருந்த திருமுகம் தங்கள் ஆணையைப் போலக் கிடைத்தது. உண்மையான ஞானியும் ஆன்மிக ஆசிரியருமாகிய தாங்கள் நீடூழி வாழ வேண்டும். தாங்கள் புகழ்பவர்களையும் இகழ்பவர்களையும் கண்ணியப்படுத்துகிறீர்கள். இது ஒரு நல்ல பாடமாகும். அடிமைகளுக்கெல்லாம் எஜமானனும் கூட இப் பூவுலகையும், நகரங்களையும், வானத்தையும், யாவற்றையும் படைத்த ஆண்டவன் ஒருவன் விதித்த கட்டளைகளின் மீது மட்டுமே நம்பிக்கை வைத்து வாழ்கின்றான் என்பது நிரூபிக்கப்படுகிறது. நான்கு இமாம்களில் ஒருவரான மாலிக் இப்னு அனஸ் அவர்கள் காட்டிய வழிப்படி நடக்கின்றேன். அவர்கள் கூறியதுபோல், எவனொருவன் தன்னைத் தானே

தாழ்த்திக்கொண்டு பணிவுடன் நடக்கின்ருனே, அவன்மீது ஆண்டவன் கண்ணியத்தைச் சொரிகின்ருன்.

'அன்னியனுடைய மனத்தைப் புண்படுத்துவது மிகவும் பாவம் என்று நான் கருதுகிறேன்; அது மட்டுமன்றித் தீய ஒழுக்கம் என்றும் நினைக்கிறேன். தங்களை மறுத்துக் கூறுவதாய்த் தாங்கள் நினைக்கக்கூடாது. என் பாவங்களை மன்னித்து அருளுமாறு வேண்டிக் கொள்கிறேன்.'[1]

மேற்கூறிய கடிதம் ஔரங்கசீபின் குண நலன்களையும் எந்த அளவுக்குப் பிறருடைய கருத்துகளையும் பண்புகளையும் ஒழுக்கங்களையும் அவர் போற்றி மதிக்கின்ருர் என்பதையும் எடுத்துக் காட்டுவதாக அமைந்துள்ளது.

2. இளவரசர் முகம்மது ஆஜம் ஷாவுக்கு, இனயத்துல்லா கான் கடிதம் எழுதியிருந்தார். அக் கடிதத்தில், இனயத்துல்லா ஜாகிர்களைத் தமக்களிக்க வேண்டுமெனக் கேட்டிருந்தார். அம் மனுப் பத்திரங்களெல்லாம் பேரரசருக்கு அனுப்பி வைக்கப்பட்டன. மனுவில் குறிப்பிட்டுள்ளது என்னவெனில்: 'முகலாயப் பேரரசில் மூன்று தலைமுறையாக சையத் ஆலா என்பவர் ஊழியம் புரிந்து வந்தாலும் அவர் குடியிலும் கேளிக்கைகளிலும் காலத்தைக் கழித்துவருவதுடன், மத விரோதமான நடவடிக்கைகளிலும் ஈடுபட்டு வருகிருர். அவருக்கு ஜாகிர் நிலம் வழங்கப்பட்டுள்ளது. அவரைத் தண்டிக்கும் பொருட்டு அவருடைய ஜாகிரைப் பறித்து எனக்கு அளிக்கவேண்டும்.' இம் மனுவிற்குப் பேரரசர் ஔரங்கசீப் கீழ்க்கண்டவாறு பதிலளித்தார்: 'மத விஷயங்களில் நீயே சீர்திருத்தம் செய்ய விரும்புவதும், மற்ருெருவரின் ஜாகிரைப் பறித்து உனக்களிக்கும்படி நீ பிரார்த்திப்பதும் வேடிக்கையாகவும் கேலிக் கூத்தாகவும் உள்ளன. ஒரு தலைமுறையிலேயே ஒருவர் அனுபவித்து வரும் ஜாகிர் நிலங்களை மாற்றுவதோ பறிப்பதோ தகாத செயல் ஆகும். நிலைமை இவ்வாறு இருக்க, மூன்று தலைமுறைகளாக ஒருவர் அனுபவித்து வரும் ஜாகிரை மாற்றும்படி நீ எவ்வாறு கூற முடியும்? ஒருவருடைய வார்த்தையைக் கேட்டுக்கொண்டு மற்ருெருவருடைய ஜாகிரை மாற்றிவிட மாட்டேன். என்னைப் பொறுத்தவரை என்னிடம் ஊழியம் புரியும் என் புத்திரனும் (முஹம்மது ஆஜமும்) சையத் ஆலாவும் இருவரும் எனக்குச் சமமே. ஆயினும், சையத் ஆலா உயர்ந்த குடும்பத்தைச் சார்ந்தவராயிருப்

[1] J. N. Sarkar, 'Anecdotes of Aurangzeb'

பதால், அவரே ஆயிரம் மடங்கு உன்னினும் சிறந்தவராயிருக்க வேண்டும். என் புத்திரன் நியாயமின்றித் தன் பிரியப்படி செய்யுமாறு ஷாஜஹான் செய்ததுபோல் நான் அனுமதிக்காம லிருப்பது இறைவனின் கிருபையே ஆகும்.'

மேற்கூறிய கடிதத்தில் பேரரசர் ஔரங்கசீப் 'நீதிக்கடல்' என்ற இலக்கணத்திற்குரியவர் என்பதை நிலைநாட்டியுள்ளார். தாரா ஷுக்கோ விஷயத்தில் தம் தந்தை செய்த தவற்றைத் தாமும் செய்ய இவர் விரும்பவில்லை.

**ஔரங்கசீப் தம் மகனைத் தண்டித்தல் :**

3. இளவரசர் ஆஜமின் நடவடிக்கையைப்பற்றி அதிகாரி ஒருவர் பேரரசருக்குக் குறைகூறிக் கடிதம் எழுதினார். 'இளவரசர் மஹல்தாராகிய நூருன்னிஸாவை மிக இழிவாக நடத்தினர். அவ் விளவரசியின் வேண்டுகோளை மீறித் தவருக நடந்துகொண்டார். அவ் விளவரசி எனக்கு வேண்டுகோள் விடுத்ததை யொட்டி நான் இளவரசரைத் தடை செய்துள்ளேன். தங்கள் பதிலை எதிர்பார்க்கிறேன்.'

பேரரசர் ஔரங்கசீப் இதற்குப் பதில் எழுதியபோது, 'என்னிடமிருந்து மறு உத்தரவு வரும்வரை உன் மாகாணத்தின் மன்சப்தார்களும், காஜா குலீ கானும், மாளவ மன்னரும் தங்கள் துருப்புகளைக் கொண்டு, இளவரசன் வெளியில் செல்லாமலும், அவன் யாருக்கும் பேட்டியளிக்காமலும் தடுத்து நிறுத்துதல் வேண்டும்.' இச் செய்தியை யறிந்த இளவரசர் தம்மை மன்னித்தருளுமாறு தந்தைக்கெழுதினர். இதற்குப் பேரரசர் ஔரங்கசீப் இப்படிப் பதில் எழுதினர்: 'உன் செயல்கள் தண்டிக்காமல் விடப்படா. உன் ஜாகிர்களை நான் மாற்றவில்லை. ஆனல், உனக்கு ரொக்க அபராதமும் நான் விதிக்காவிடில், மீண்டும் நீ இவ்வாறு தகாத காரியங்களைச் செய்யத் துணிவாய். எனவே, முன் யோசனை இல்லாமலும் இழிகுணத்துடனும், மூடத்தனமாகவும் நீ நடந்து கொண்டதால், உன்னுடைய சொந்த வருவாயிலிருந்து ரூ. 50,000-த்தை அரசாங்கக் கருவூலத்தில் கட்டவேண்டும். உன் குற்றத்திற்கு இதுவே தகுந்த தண்டனையாகும்.'

மேற்கூறிய கடிதங்களிலிருந்து ஔரங்கசீப் ஆலம்கீர் தாம் ஈன்றெடுத்த மைந்தனுக்கே நடுநிலை கொண்டு தண்டனை விதித்தார் என்பது உறுதியாகிறது.

**மகன் எனப் பாராது ஆஜமையும் தண்டித்தல்:**

4. இளவரசர் ஆஜம் அஹ்மதாபாதிற்கு ஆளுநராக நியமிக்கப்பட்டிருந்தார். அந் நகருக்குச் சுமார் 80 மைல் தூரத்திலிருக்கும் சூரத் நகரில் சில வர்த்தகர்களை மராத்தியர்கள் கொள்ளை யடித்துச் சென்றனர். அக் காலையில் அமானத் கான் என்பவர் அந் நகரின் வருவாய்த் தண்டல் அதிகாரியாகப் பணியாற்றிவந்தார். அவராலும் இளவரசராலும் இதனைத் தடுத்து நிறுத்த முடியவில்லை. கொள்ளைக்காரர்களை ஒழித்துக் கட்டி, நகரின் அமைதியைக் காப்பது ஆளுநரின் கடமை என்று கருதியதால் ஔரங்கசீப் கீழ்க்கண்ட தீர்ப்பை அளித்தார்: '(அ) இளவரசனின் அந்தஸ்தைக் குறைக்க விரும்புகிறேன். இதற்கு அவனது வருவாயிலிருந்து ரூ. 5000-த்தைக் குறைக்கிறேன். (ஆ) கொள்ளையடிக்கப்பட்டவர்கள் எவ்வளவு தொகையை இழந்தார்களோ அதற்கு நிகரான பணத்தை இளவரசன் அலுவலகரிடத்திருந்து பெற்று, நட்ட ஈடாகக் கொடுக்க வேண்டும். (இ) இவன் (ஆஜம்) ஓர் அரச குமாரனாக இராமல் சாதாரண அலுவலனாக இருந்திருப்பானேயானால், விசாரணை நடத்திய பின்பே இக் கட்டளையை விதித்திருப்பேன். விசாரணையின்றி இப்படிச் செய்வதே அந்த இளவரசனுக்கு ஒரு பெரும் தண்டனையாகும்.

'மருந்தால் ஒழியாத வியாதி தீரா வியாதியேயாகும்; அறிவில்லா மனிதருக்கு ஒன்றுமே வேண்டுவதில்லை.' இச் செயல் பாராட்டற்குரியது என்பதை யார் மறுக்க இயலும்?

**'தண்டனைக்குச் சாட்சியங்கள் தேவை':**

5. ஃபிரோஸ் ஜங் கான் என்பவர் ஔரங்கசீபின் தளபதிகளுள் ஒருவராவார். இவருடைய சேனைகள் தக்காணத்தை நோக்கிப் படையெடுத்துச் சென்றன. ஃபிரோஸ் ஜங்கின் ராணுவ அதிகாரிகளுள் ஒருவரான முஹம்மது ஆக்கில் கான் (Muhammad Aqil Khan) என்பவர் வழிப்பறி கொள்ளையில் ஈடுபட்டார். இக் குற்றத்திற்காக அவர் கொலைக் குற்றம் செய்ததற்குச் சமமாகக் கருதப்பட்டுத் தண்டிக்கப்பட்டார். அவருக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டது. இதனைப் பிரதமர் அசத் கான் மூலமாகக் கேள்விப்பட்ட பேரரசர் ஃபிரோஜ் கானுக்கு எழுதினார்: 'சட்டப்படி சரியான சாட்சியங்களில்லாமலே இறைவன் படைப்புகளில் ஒன்றை மரண தண்டனை மூலமாக அழிக்கும் பொறுப்பை உன்மீது நீயே சுமத்திக் கொண்டாய். கொலையுண்டவருடைய சந்ததியார்களுள் ஒருவர் உனது

தீர்ப்பை அங்கீகரிக்க மறுத்து எதிர்த்தால், அன்று உன்மீது வஞ்சம் தீர்த்துக் கொள்வதை நான் எவ்வாறு தடுக்க முடியும்? ஏனெனில், குற்றச் சட்டத்தில் பாரபட்சம் காட்டுவது குர்ஆன் விதிகளுக்கு முற்றிலும் விரோதமாகும்.'

மேற்கூறிய தீர்ப்பில் பேரரசர் ஔரங்கசீப் திருக் குர்ஆன் போதிக்கும் விளக்கத்தைப் பின்பற்ற வேண்டும் என்றும், பாரபட்சம் காட்டுவதும், சாட்சியங்களின்றித் தண்டிப்பதும் தவறு என்றும், குற்றத்துக்குப் பொருந்தாவாறு கடுமையாகத் தண்டிக்கக்கூடாது என்றும் வலியுறுத்தி யிருப்பதை நாம் ஆழச் சிந்திக்க வேண்டும். இவையெல்லாம் பேரரசரை நீதியுடையவர் என்றே வலியுறுத்துகின்றன.

6. காஜா சர்புலந்த் கான் (Khaja Sarbuland Khan) என்பவர் மன்சப்தார்களுள் ஒருவர். இவருக்குச் சம்பளம் பட்டுவாடாச் செய்யும் பணி அளிக்கப்பட்டிருந்தது. இவர் பூர்விகமாகப் பாரசீகத்தில் வசித்துவந்தவர்; தம் தந்தையின் காலத்தில் இந்தியாவுக்கு வந்தவர். சர்புலந்த் கான் தம்மைப் போன்ற ஷீஆக்கள் பலருக்கு வேலைகள் அளித்துவந்தார். தம் வகுப்பினர் ஒருவருக்கு வேலை தருமாறு பரிந்துரைத்துப் பேரரசருக்கு அவர் கடிதம் எழுதியபோது, 'நம்பிக்கையுள்ள ஊழியனின் கோரிக்கையையும் பரிந்துரைத்தலையும் அங்கீகரிக்கின்றேன்' என்று ஔரங்கசீப் அதற்குப் பதில் எழுதினார். பிறகு இவர் நடந்துகொண்ட முறையால் திருப்தியுற்று இவரையே ஒரு மாகாணத்தின் கவர்னராகவும் நியமித்தார். அப்பொழுது ஔரங்கசீப் தம் ஆணையில் குறிப்பிட்டார்: 'புதுக் கவர்னருக்குச் சட்டப்படி ஆபரணங்களும், குதிரைகளும், பரிவாரங்களும் அளிக்கப்பட வேண்டும். இவர் அப் பதவிக்குரிய தொழில்களைத் தெய்வபக்தியுடன் ஆற்றுவதற்கு இறைவன் அருள்புரிவானாக.'

**'மன்னன் இறைவனின் பிரதிநிதி'**

7. பஹ்ராமந்த் கான் (Bahramand Khan) என்பவரும் ஓர் உயர் மன்சப்தாராகப் பணியாற்றிவந்தார். அவர் தம் உயர்அதிகாரியான மிர்ஜா முயீஜ் என்பாருக்குத் தம் குறைகளையும்நெருக்கடிகளையும் கடிதம் மூலம் எழுதிக்கொண்டார். இக் கடிதத்தை மிர்ஜா முயீஜ் பேரரசருக்கு அனுப்பியபோது, பேரரசர் அதில் எழுதினார்: 'உண்மை நிகழ்ச்சிகளை எழுதியிருப்பதை வரவேற்கிறேன். மௌனம் பலமான சிறைச்சாலைகளை யெல்லாம் திறந்துவிடுமென்பதை நினைவில் வைத்துக்கொள். கூண்டில்

அடைபட்டிருக்கும் கிளி எதையோ உளறிக்கொண்டிருக்கும். ஆனால், எம் மனிதனும் தன் நடத்தையைச் சீர்திருத்திக் கொள்வதே இல்லை. நான் பார்த்தவரையில், ஒவ்வொருவனும் தன் சுயத் தேவையைத் திருப்தி செய்வதில் மட்டுமே கவனத்தைச் செலுத்துகிறான். உலகோர் கொள்கையின்படி, ஒரு மன்னன் இறைவனின் பிரதிநிதியாவான். எப்போது ஒரு மன்னன் தன் ஊழியரை நோக்கி உங்கள் கோரிக்கைகளை வெளியிடுங்கள் என்று கூறுகிறானோ அப்போது அவ் ஊழியர்கள் தெரிவித்த கோரிக்கைகளை நிறைவேற்றுவது அவனது கடமையாகி விடுகிறது.'

8. முக்லிஸ் கான் (Muqlis Khan) என்பவர் உயர்அதிகாரியாக இருந்தபோது, தம்கீழ்ப் பணிபுரிந்து வந்த சுல்தான் முகம்மது என்பவரின் ஊதியத் தொகையை உயர்த்துமாறும், அதிகமான ஜாகிர்களை வழங்குமாறும் விடுத்த வேண்டுகோளில் பேரரசர் ஔரங்கசீப் குறிப்பிட்டார்: 'நாம் செய்யும் நற்காரியங்கள் அனைத்தும் நம் நன்மையின் பொருட்டேயாகும். அது போன்றே நாம் செய்யும் பாவச் செயல்களுக்கு உரிய பலன்களை நாமே அனுபவிக்க வேண்டும்.

'பரிந்துரைத்திருக்கும் ஊழியர் சையது குடும்பத்தைச் சார்ந்த சுல்தான் முகம்மதுவின் பக்தியையும் பரிசுத்தத்தையும் பற்றி நான் கேள்விப்பட்டுள்ளேன். ஆனால், அவருடைய திறமையை அறிவதற்கு எனக்கு வாய்ப்பில்லை.

'எவ்வாறாயினும், ஊழியம் புரிபவர் தமக்குக் கிடைக்கும் கூலிக்கு ஏற்றவாறு தகுதியான வேலை செய்தாலன்றி ஊதியத் தொகையைத் தாமே நியாயமாய்ச் சம்பாதித்தது என்று கருதலாகாது. நியாயமாய்ச் சம்பாதித்த தொகையே யோக்கியமான நடத்தையின் வெளிப்பாடாகும்.

'நீ ஒரு பெரும் முடிச்சை உன் கை விரல்களால் அவிழ்க்க முடியாவிட்டாலும், உன் வாழ்நாள்கள் என்னும் பெரும் கூலியின் முடிச்சுப் பாதங்களின் முயற்சியாலேயே அவிழ்க்கப்படுகின்றது என்பதை நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும்.'

9. பேரரசர் ஔரங்கசீப் 1690ஆம் ஆண்டுக்குப் பிறகு பீஜப்பூர், கோல்கொண்டா அரசுகளின்மீது படையெடுக்கத் தக்காணம் வந்தபோது பிரதமர் செய்தி யொன்றைப் பேரரசருக்கு அனுப்பினார். அவர் அச் செய்தியில், 'எல்லாம் வல்ல இறைவனுக்கே புகழ் உரித்தாகும். சர்வ வல்லமையுள்ள,

மகிமை பொருந்திய இறைவனின் கருணையினாலும் என்றும் குன்றாத தங்களின் நல்லதிருஷ்டத்தினாலும் இரு பெரும் அரசுகள் வெல்லப்பட்டன. இனியும் இங்கே தங்கியிராமல் வட இந்தியாவிற்குத் திரும்புவதே சிறத்ததாகும்' என்று எழுதியதற்குப் பதில் அளிக்கையில், பேரரசர் எழுதினார்: 'தலைமுறை தலைமுறையாக நம்மிடம் சேவை புரியும் உங்களைப் போன்ற பிரதமர் இவ்வாறு ஆலோசனை வழங்கி யிருப்பதைக் கேட்டு முற்றிலும் வியப்படைகின்றேன். நீங்கள் குறிப்பிட்டுள்ளபடி இனி நாம் செய்ய வேண்டியது ஒன்றுமில்லையென மக்கள் அறிந்து கொள்ளும்படி செய்ய வேண்டுமானால், அது உண்மைக்கு மாறாக இருக்கும். என் உடலில் ஆன்மா இருக்கும் வரை—எள்ளளவேனும் இருக்கும் வரை—வேலையிலிருந்தும் கஷ்டத்திலிருந்தும் விடுபட்டிருப்பது என்பது என்னால் ஒரு போதும் இயலாத காரியமாகும்.

'வாழ்க்கையாகிய யாத்திரையின் வழி ஒருபோதும் மழமழவென்று இருக்க முடியாது. கலக்கமடைந்த என் உள்ளம் இல்லத்தின்மீது அவாக்கொண்டிருப்பது இயலாது. பனித்துளிகள் செடிகளிலிருந்து நீங்கிவிட்டபோதிலும், தோட்டத்திற்கு அதன் நினைவு இருந்தே தீரும். நெடுந்தூரம் பிரயாணம் செய்பவனுக்கு வழிகாட்டி ஒருவரும் தேவையில்லை.

'பேரரசர் ஷாஜஹான் டில்லியிலும் ஆக்ராவிலும் வீணே தங்கி இராமல் இடைவிடாது நாடு முழுதும் சுற்றுப்பிரயாணம் செய்திருப்பாரேயானால், அவருடைய முடிவு நஷ்டமான முடிவாக ஏற்பட்டிருக்காது.

'எனவே, நீங்கள் மீண்டும் இம் மாதிரியான கோரிக்கைகளைச் சமர்ப்பியாதிருந்தால், என்னால் மேலும் பல கோட்டைகளை முற்றுகையிட்டு வெற்றி காண முடியும்.

'நான் எங்கிருந்தபோதிலும், எப்படி இருந்தபோதிலும், என் சுற்றுச் சார்புகளையெல்லாம் மறந்து அவற்றை மனத்திலிருந்து நீக்கி மரணத்தைச் சுலபமாக்கிக்கொண்டே இருப்பேன். இதுவும் இறைவனின் அருள் என நினைக்கிறேன்.

'நீங்களும் உங்கள் இருதயத்தை உலகப் பாசங்களோடு பிணைத்துவைத்திருக்கும் கட்டுகளையெல்லாம் கொஞ்சம் கொஞ்சமாக அவிழ்த்துவிடுங்கள்; அவ்வாறில்லையாயின், நீங்கள் எதிர்பாராத காலத்தில் உங்களை மரணம் திடீரென அணுகினால் பாசக்கயிறு உங்களை வருத்தத்துடன் இழுத்துச் செல்லும்.'

மேற்கூறிய கடிதம் ஔரங்கசீப் எந்த அளவுக்கு ஒரு பேரரசர் ஆற்ற வேண்டிய கடமைகளைப்பற்றி உயர்வான கருத்துக் கொண்டிருந்தார் என்பதைத் தெளிவுபடுத்துகிறது. அதுமட்டுமன்றி, அவர் தத்துவக் கருத்துகளை வாரியும் வழங்கியுள்ளார். அகன்ற பேரரசை ஆட்சி புரிந்துவந்த அவரது உள்ளத்தில் நிறைந்திருந்த எல்லையற்ற பரிசுத்தத் தன்மையையும், தம் செயல்களனைத்திற்கும் இறைவனிடம் பதில் சொல்லத் தாம் கடமைப்பட்டவர் என்பதையும் ஔரங்கசீப் நினைத்துப்பார்த்து, உலக பாசங்களிலிருந்து எவரும் தம்மை விடுவித்துக் கொள்ள வேண்டுமென்று வலியுறுத்தி இருப்பதும் போற்றற்குரியதாகும். எனவே, இக் கடிதமும் இன்னும் பல கடிதங்களும் உறுதியாக ஔரங்கசீபுக்கு அறத்தின் ஆட்சிமீது நம்பிக்கை இருந்ததென்பதை நிரூபிக்கின்றன. மேலும், பேரரசர் ஷாஜஹான் தம் குடிமக்களின் நலன்களைக் கவனியாமல் வாழ்நாளை வீணே கழித்து வந்தார் என்பதையும் இக் கடிதம் உறுதிப்படுத்துகிறது.

10. ஔரங்கசீபின் பிரதமராயிருந்த அசத் கான் என்பாரின் பேரர் மிர்ஜா தபக்கூர் (Mirza Tabaqqur) என்பவர் எப்போதும் எல்லோரிடத்தும் முரட்டுத்தனமாகவும் மூர்க்கத்தனமாகவும் நடந்துவந்தார். அவரது தீச்செயலுக்கு அவர் பாட்டனுடைய பதவியும் செல்வாக்குமே காரணமாகும்.

ஆக்ரா நகருக்கு வந்திருந்த கணேசர் என்பாரின் மனைவியை மிர்ஜா குதிரைமீது கடத்திச் சென்றார். சில நிமிடங்களிலேயே மக்கள் பலரும் மிர்ஜாவின் அடாத செயலை எதிர்த்துக் கூட்டமாய்க் கூடிக் கொத்தவாலுக்குச் செய்தியைச் சொல்லியனுப்பி, உடனே தடுத்து நிறுத்துமாறும் அப் பெண்ணை விடுவிக்குமாறும் வற்புறுத்தினர். அன்றைய பொழுதிற்குள் அப் பெண் திரும்ப அனுப்பப்பட்டாலும், மக்களின் உள்ளம் கொதிப்படைந்தது. செய்தியை அறிந்த பேரரசர் ஔரங்கசீப் பிரதம மந்திரி அசத் கானுக்குச் செய்தியனுப்பி அவருடைய பேரனைத் தண்டித்துச் சிறையிலடைக்குமாறு உத்தரவிட்டார். பேரரசர் கூறினார்: 'பிரதமர் என் கட்டளைப்படி கொத்தவாலுக்கு எழுத வேண்டியது.

'அந்த முழு மூடனாகிய உதவாக்கரையான மிர்ஜா தபக்கூர் என்பவனை டில்லிக் கோட்டையில் சிறைவைக்க வேண்டும். அவனுடைய தாயார் வாஞ்சை காரணமாகத் தன் மகனைவிட்டுப் பிரிய மனமில்லாவிடில், டில்லி கவர்னர் அவன்

தாயாரையும் மரியாதையுடன் கோட்டைக்குள் அழைத்துச் சென்று மைந்தனுடன் கூடவே சிறையிலிருக்குமாறு செய்ய வேண்டும். அதுபோன்றே அச் சீமாட்டிக்கு (கணேசரின் மனேவி) தகுதியான மிக்க மரியாதையைச் சமர்ப்பித்து அம் மாதிற்கியைந்த ஒரு விடுதியையும் ஏற்பாடு செய்யவேண்டும்.

'கடவுள் என்னுடைய அடைக்கலத்தில் ஒப்படைத்திருக்கும் ஜனங்களுக்கு இடுக்கண் ஏற்படா வண்ணம் பாதுகாக்க வேண்டியது என் கடமையாகும். எவ்வாறு ஓர் எலி ஒரு வளையிலிருந்து தப்பிவிடுமோ அவ்வாறு இந்தத் தீயவனும் தப்பிவிடாமல் 50 ஆள்கள் இவனைச் சுற்றிக் காவலிருக்கும்படி செய்ய வேண்டும்.

'இத்தகைய பிசாசுத் தன்மை கொண்ட நடத்தையுடைய புத்திரர்கள் நல்லோர்கள் என்று புகழ் ஈட்டிய தம் பெற்றோர்களுக்கு இழிவைத் தேடித் தருபவர்கள் ஆவார்கள்.'

அதுபோன்றே அசத் கானுக்கும் பேரரசர் தனியே கடிதமொன்றை எழுதினார்: 'என் சிறிய தாயாரின் பேரனை வேறு யாரும் தண்டிக்கக்கூடாது; என் வாழ்நாள் நீடித்தால், மரணம் என்னை அணுகாமல் இருந்தால், இறைவனின் நாட்டமிருந்தால், நான் டில்லிக்குத் திரும்பிச் செல்லும்போது நானே என் கரங்களால் அத் தீயவனைத் தண்டிப்பேன். அவன் எனக்குப் புத்திரன் போன்றவன்தான். அப் புத்திரன் துஷ்டனாயிருந்தால் என்ன செய்ய முடியும்? ஓர் அடிமையை அடிப்பது அவன் எஜமானனை அகௌரவப்படுத்துவதன்றி வேறு என்னவாகும்?'

மேற்கூறிய ஆணையும், தீர்ப்பும், கடிதமும் பேரரசர் ஔரங்கசீப் மக்களிடையே இந்து முஸ்லிம் என்று வேறுபாடு படுத்தியதாகக் கூறப்படும் பொய்க் கோட்டையின் சுவர்களைத் தகர்த்து எறிகின்றன. ஏனெனில், பிரதமர் அசத் கான் என்பவரே பேரரசர் ஔரங்கசீபுக்குச் சிற்றப்பா முறையில் உறவு கொண்டவர். மும்தாஜ் மஹலின் தங்கையொருவரை அசத் கான் திருமணம் செய்திருந்தார். எனவே, தம் உறவு முறையென்பதையும் கருதாது மிர்ஜாவைத் தண்டித்து ஆணை பிறப்பித்ததும், அவன் தப்பிக்காதவாறு கடுமையான உத்தர விட்டதும் ஔரங்கசீபின் நீதி மனப்பான்மையைத் தெளிவாக எடுத்துக்காட்டுகின்றன.

**சிறப்பான அமைச்சர்கள் யார்?**

11. 'ஒரு பேரரசர் அளவுகடந்த தயவு காட்டவும் கூடாது, கொடுமைப்படுத்தவும் கூடாது. ஏனெனில், அதிக அன்பு

காட்டினுலோ அளவுக்கு மீறிய கொடுமை புரிந்தாலோ, அரியாசனத்திற்கே ஆபத்து ஏற்படும். அளவுகடந்த இரக்கம் காட்டினுலோ மக்கள் அச்சம் இழந்து எதையும் துணிவாகச் செய்யும் அசட்டை மனப்பான்மை ஏற்படும். அதுவன்றி, மிகக் கொடுமையுடன் நடந்துகொண்டாலோ மக்களுக்கு வெறுப்பும் கோபமும் உண்டாகும். என்னுடைய உறவினர் சுல்தான் உலுக் பேக் இதுபோன்றே எடுத்ததற்கெல்லாம் கொலைத் தண்டனை கொடுத்து வந்தார். எனவே, அவருடைய மகனே அவரைக் கைதுசெய்து, முடியரசை இழக்கச் செய்தான்.

'அதுபோன்றே மகிமை பொருந்திய என் முப்பாட்டன் ஹுமாயூன் பாதுஷா அசட்டையாகவும் எதற்கெடுத்தாலும் விவரம் புரியாமலே மன்னித்தும் வந்ததனுல்தான் ஷேர்ஷா ஆட்சி வளர்ந்தது. ஷேர்ஷாவின் தந்தை ஹசன் என்பவர் தம் மகனைக் கண்டிக்குமாறு ஹுமாயூனிடம் கேட்டுக்கொண்டும் யாதொன்றும் செய்யவில்லை.

'இதனுல் எந்தப் பேரரசரும் நிம்மதியாகவும், சோம்பலாகவும் மெத்தனமாயிருத்தல் கூடாது. அசட்டையாக இருந்தால் பேரரசையே அது அழித்துவிடும். எப்போதும் சுறுசுறுப்பாகவே இருக்கவேண்டும். இதுவே அரசாங்கத்திற்குச் செழிப்பைக் கொடுக்கும்.

'உன் பணியாள்களின் தகுதி, திறமை, வயது ஆகியவற்றை அறிந்து அவற்றுக்கு ஏற்றவாறு பணிகளைக் கொடுக்க வேண்டும். வயோதிகர் செய்யும் வேலையை இளைஞர்களைச் செய்யச் சொல்லக்கூடாது. ஏனெனில், இது அவர்களால் இயலாது. இளைஞர்கள் செய்யும் வேலையை வயோதிகர்களைச் செய்யுமாறு சொல்லக்கூடாது. ஏனெனில், இதனை வயோதிகர்கள் அகௌரவமாகக் கருதுவார்கள்.

**ஜுல்ஃபிகார் கானுக்கு :**

12. 'நீங்கள் நல்ல ஒழுக்கத்திற்கு மாருக இரண்டு விவகாரங்களில் தன்னிச்சையாக நடந்துகொண்டு இருக்கின்றீர்கள். முதலாவது, என் பாளையத்திற்கு அருகிலேயே எதிரிப்படைகள் வரும் அளவுக்கு அனுமதித்து இருக்கிறீர்கள். இரண்டாவதாக, அந்தத் தவற்றை மறைக்க என்னைப் பார்க்க உத்தரவு கேட்டு இருக்கிறீர்கள். இவ் விரண்டிலும் சட்ட விரோதமாயும் கட்டளைகளை மீறியும் நடந்துகொண்டிருக்கிறீர்கள்,

'இறைவனுக்கு இணக்கமாய் நடந்துகொள்ளுங்கள்; இறைவனுடைய திருத்தூதருக்கு (நபிகள் நாயகம்) இணக்கமாய் நடந்துகொள்ளுங்கள். உங்கள் தலைவருக்கு(அரசருக்கு) இணக்கமாய் நடந்துகொள்ளுங்கள்.'

**ஆளுநருக்குத் தேவையான குணநலன்கள்**

13. சர்புலந்த் கான் என்பவரைச் சூபாவின் ஆளுநராக நியமிக்கலாமென்று சிபாரிசு வந்தது. அதற்கு ஔரங்கசீப் மறுமொழி கூறி, மாகாணப் பிரதமத் திவானுகவே அவரை உறுதிப்படுத்தினர். 'அரிஸ்டாட்டில் ஒரு காலத்தில் அலெக்சாந்தருக்கு வரைந்த நிருபத்தில், அரசாங்கம் கண்டிப்புடன் இருக்க வேண்டுமேயல்லாது, நஷ்டத்தை ஏற்படுத்துவதாக இருக்கக் கூடாது, அரசாங்கம் பலவீனமாக இருக்கக்கூடாது, மிருகத் தன்மை உடையதாகவும் இருக்கக்கூடாது என்று எழுதினர். சர்புலந்த் கானிடம் பிடிவாத குணமும், ஒரு கட்சியைச் சார்ந்திருக்கும் மனப்போக்கும் உள்ளனவே ஒழிய, நடுநிலை வகிக்க அவருக்குத் தெரியாது. சர்புலந்த் கான் நாணயமும்சத்தியமும் உடையவர் என்பதை ஒப்புக்கொள்கிறேன்; ஆனல், தந்திரசாலி அல்லர். தந்திரம் இன்றி அரசாட்சி செய்வது இயலாது. போரிலும் தந்திரங்களைக் கையாள வேண்டிய நேரங்கள் உண்டு. அறிவு நுணுக்கமும், யூகமும், தந்திரமும் இன்றியமையாக் குணங்கள் ஆகும். இத்தகு ஆனல் சிறப்பான ஆற்றல்கள் சர்புலந்த் கானிடம் இருப்பதாகச் சொல்ல முடியாது.'

14. ஔரங்கசீப் ஒரு பேரரசருக்குரிய பண்பினைப் பெற்று, நீதியுடன் நடந்துகொண்டார். இந்து முஸ்லிம் என்ற குறுகிய நோக்கங்கள் அவரது உள்ளத்துள் அடங்கிக் கிடக்கவில்லை என்பதை, அவர் முஹம்மத் அமீன் கான் என்பவருக்கு எழுதிய கடிதம் நிரூபிக்கின்றது. முஹம்மத் அமீன் கான் என்பவர் சாதராவில் தாரோகாவாக நியமிக்கப்பட்டிருந்தார்; அதாவது, முகலாயத் துருப்புகளுக்குப் பொருள்களை வழங்கும் பதவியில் இருந்தார். திவான் பதவிக்குப் பதவி உயர்வு கேட்டுப் பின்வருமாறு பேரரசருக்கு அவர் மனுச் செய்தார்: 'இந்த வயது முதிர்ந்த அடிமை பால்க் பகுதியில் முன்பு புரிந்த ஊழியத்தைக் கருதி, நன்மைகள் கிடைக்கும் என எதிர்பார்த்தேன். இப்பொழுது ஆண்டவன்மேல் நம்பிக்கை வைத்துத் தங்கள் சமுகத்துக்கு எழுதிக் கொள்கிறேன். இந்தப் பழைய ஊழியனுக்கு இந்தப் பதவி உயர்வைக் கொடுத்தால் இஸ்லாமியர் ஒருவனுக்கு உதவி செய்வதாகும்.'

ஔரங்கசீப் இதற்குப் பதில் எழுதினுர்: 'நீ நெடுநாள் ஊழியன் என்பதை நான் மறுக்கவில்லை. ஆனுல், உலக விவகாரங்களுக்கும், அரசாங்கம் சம்பந்தப்பட்ட விஷயங்களுக்கும், மதத்திற்கும் என்ன சம்பந்தம் உள்ளது? அரசாங்க விஷயங்களில் மதம் குறுக்கிடல் ஆகாது. நீ கூறும் இம் மாதிரியான சட்டத்தை அமல்படுத்திஞல், இந்து அரசர்களையும், அவர்களுடைய பரிவாரங்கள் சந்ததிகள் எல்லோரையும் நான் அடியோடு ஒழித்துவிட வேண்டிவரும். நல்ல சாமர்த்தியமுள்ள உத்தியோகஸ்தர்களை வேலையிலிருந்து நீக்கப் புத்திமான்கள் ஒருபோதும் சம்மதிக்க மாட்டார்கள். நீ கேட்கும் உத்தியோகத்திற்கு உரிய தகுதிகள் சில உன்னிடம் இருப்பினும், முழுத் தகுதியை நீ பெறவில்லை. அன்றியும், மேலும் சில காரணங்களும் உள்ளன.'[1]

15. புஜர்க் உம்மத் கான் என்பவர் பீஹார் மாகாண ஆளுநராகப் பணியாற்றி வந்தார். இவர் ஷாயிஸ்தகானின் மகன். புஜர்க் உம்மத் கான் ஒரு தடவை அப்துர் ரஹ்மான் என்பவரை விசாரணை இன்றியும் மேலிடத்துக்குத் தெரிவிக்காமலும் வேலை நீக்கம் செய்துவிட்டார். இதுபற்றி யார் அலீ பே என்பவர் முறையிட்டார். யார் அலீ பே பிரதம நர்விஸ் (எழுத்தர்) ஆக இருந்தார். ஔரங்கசீப் தீர்ப்பு அளித்துக் கடிதம் எழுதிஞர். 'இந்த அடிமையே (ஔரங்கசீப்) எப்பொழுதும் பலவீனமாக இருக்கிருன். மேல் உத்தியோகம், கீழ் உத்தியோகம் பார்க்கிற எல்லா ஊழியரும் பலவீனர்களே. பலம் என்பது பரிசுத்தமான இறைவனுக்கு மட்டுமே ஏற்புடைத்தான அடைமொழியாகும். ஆனுல், இங்கு ஆளுநரே வேலையிலிருந்து நீக்கி இருப்பதால் வேலை நீக்கத்தை ஏற்கிறேன். வேறு காரணம் எதுவும் இருக்க வேண்டும். இது தகுந்த தண்டனையே. அதுபோன்றே (அவசரப்பட்டு விசாரணையின்றிச் செய்ததால்) ஆளுநருக்கும் தண்டனை விதிக்க அவருடைய சம்பளத்தில் 500 ரூபாயினைக் குறைப்பதே முறையாகும். இது ஜாகிர்களில் நிறுத்திக் கொள்ளப்படும்.'[2]

[1] T. W. Arnold, 'The Preaching of Islam', p. 214.

[2] Billimora என்பவர் திரட்டித் தந்துள்ள இக் கடிதங்கள் யாவும் ஔரங்கசீபின் பாரபட்சமற்ற நேரிய குணங்களைப் படம் பிடித்துக் காட்டுகின்றன.

# 21. ஔரங்கசீபின் குடும்பமும் அன்றாட வாழ்க்கையும்

பேரரசுகள் நிலைத்திருப்பதும் வீழ்வதும் அவற்றின் மீது ஆட்சி செலுத்தும் பேரரசர்களின் ஒழுக்கம், தனித்திறமை, அன்றாட அலுவல்கள் ஆகியவற்றைப் பொறுத்துள்ளன. ஷாஜஹான் தமது ஆட்சி முற்றிலும் மலர்ச்சி பெற இயலாமற்போயினமைக்கு, அவர் நாடு முழுதும் சுற்றிவந்து நாட்டின் நிலையை அறியத் தவறிவிட்டது காரணம் ஆகும். ஆனால், அவர் மைந்தர் ஔரங்கசீபிடம் சுறுசுறுப்புக் காணப்பட்டது. ஜஹாங்கீரும் ஷாஜஹானும் அளவுக்கு அதிகமாகவே சுகபோக வாழ்வை நாடினார்கள். நேர்மாறாக ஔரங்கசீபோ, எளிமையையும் சுறுசுறுப்பான வாழ்க்கையையுமே நாடினார், போற்றினார், பின்பற்றினார். ஔரங்கசீப் தம் மகன் முஅஜ்ஜமுக்கெழுதிய கடிதம் ஒன்றில், 'பேரரசராயிருப்பவர் இன்ப வாழ்வையும் ஓய்வாக இருத்தலையும் விரும்புபவராக இருக்கக்கூடாது; ஏனெனில், இவையே ராஜ்யங்கள் வீழ்வதற்கும் அரசர்களின் அதிகாரங்கள் அழிவதற்கும் மிக ஆபத்தான காரணங்களாகும். எப்பொழுதும், எவ்வளவு முடியுமோ அந்த அளவுக்கு நகர்ந்துகொண்டே இருக்கவேண்டும். பேரரசர்களும் தண்ணீரும் ஒரே நிலையில் நிற்பது தீமையாகும். நீர் தேக்கத்தால் பாசிபிடித்து விடுகிறது; மன்னனின் அதிகாரமும் கையைவிட்டு நழுவி விடுகின்றது' என்று குறிப்பிட்டுள்ளார்.

ஔரங்கசீப் சொல்லில் மட்டுமன்றி, தம் செயல்களிலும் சகலவற்றையும் நிரூபித்துக் காட்டினார்.

**அவரது அன்றாட அலுவல்கள்**[1]

காலை மணி 5. எழுந்திருத்தல்—வைகறைத் தொழுகை—திருக் குர்ஆன் ஓதுதல்.

[1] J. N. Sarkar, 'Anecdotes of Aurangzeb', p. 59

7-30 இரகசியக் கூடத்தில் நியாய விசாரணைகள்
8-30, பேட்டி அளித்தல்—பார்வை இடல் (படைகள்)
9-15 பொதுப்பேரவை —'தர்பார்' நடத்துதல்
11-00 தனிப் பேட்டியும் பிற விவகாரங்களும்
11-50 அந்தப்புரத்தில் இளைப்பாறுதல்
(12-30—2-00) நடுப்பகல் தொழுகை
பிற்பகல் 2-30 தனி அறை—படிப்பு—அரசியல் விவகாரங்கள்—கையெழுத்து மற்றும் பிற.
5-00 பிற்பகல் தொழுகை.
5-30 இரகசிய ஆலோசனைகள்—கூட்டம்.
6-00 முன்னிரவு அல்லது மாலை மறையும் (Maghrib) நேரத் தொழுகை.
6-30 'திவானெ காஸ்' என்னும் உலமாக்கள், பிரபுக்கள் கூட்டம் ஆலோசனை.
8-00 ஆலோசனை மன்றம் கலைதல் — இரவுத் தொழுகை.
9-00 திருக் குர்ஆன் ஓதுதல், தியானம் புரிதல்.
11-00 (அல்லது நள்ளிரவில்) படுக்கைக்குச் செல்லுதல்.

ஐங்காலத் தொழுகையை ஔரங்கசீப் எல்லோருடனும், எளியவர் என்றும் பேரரசர் என்றும் பாராமல், தோளுடன் தோள் உரசி நின்று, பள்ளிவாசலுக்குச் சென்றே நிறைவேற்றி வந்தார்.

இரகசிய மண்டபத்திற்குள் நம்பிக்கைக்குப் பாத்திரமான சிலர் மட்டுமே அனுமதிக்கப்படுவர். இந்த ஒரு மணி நேரத்தில் தான் சூபாக்களிலிருந்து (மாகாணங்களிலிருந்து) வந்திருக்கும் செய்திகளையும், அமைச்சர்கள், கீழ்மன்றத் தீர்ப்புகள்பற்றிய விவரங்களையும் அறிந்துகொள்ள வேண்டும்.

படைகளைப் பார்வை யிடுதலும் யானைகளின் போட்டியும் முதலியன எல்லாம் காலையில் நடந்தாலும், அரசியல் விவரங்களைப்பற்றி முடிவெடுக்கவும், சிந்திக்கவும் மற்றொரு வாய்ப்பு இந் நேரத்தில் கிடைக்கும்.

பொதுப் பேரவையின்போது மட்டும்தான் அவர் அரியாசனத்தில் அமர்ந்திருப்பார்; பிற நேரங்களில் அரியணையில் அமர்வதே கிடையாது.

பகல் 11 மணிக்குப் பிறகு நடத்தப்படும் தனிப் பேட்டியில் அரசியல் விவகாரங்கள் முழுவதும் நடைபெறும். கடிதங்களுக்குப் பதில்கள், சுபேதார்களுக்கும் திவான்களுக்கும் ஆணைகள் —ஃபர்மான்கள் எழுதுதல் எல்லாம் இந் நேரத்தில்தான் நடைபெறும்.

பகல் தொழுகைக்கு முன் அவர் சற்று உறங்குவார். பிறகு மசூதியில் எல்லோருடனும் சேர்ந்து நின்று தொழுகை நடத்துவார். சிறிது உறங்கும்பொழுதும், உயர்ந்த கட்டிலில் அல்லது படுக்கைகளில் அல்லாமல், தரையில் புலித்தோல் ஒன்றின் மீதே படுத்து உறங்கி இளைப்பாறுவார் என்கிறார் மனுச்சி.

பகல் தொழுகைக்கும் பிற்பகல் தொழுகைக்கும் இடைப்பட்ட நேரத்தில் அரபி, பாரசீக மொழி நூல்களையும், தத்துவ நூல்களையும், திருமறையின் விளக்கங்களையும், உலமாக்கள் என்னும் அறிஞர்களின் விளக்கங்களையும், கீழ் மன்றங்களின் தீர்ப்புகளையும் படித்துக் கொண்டும், மேற் கொண்டு முடிவெடுக்கும் வகையில் ஆராய்ந்து கொண்டும் இருப்பார். இமாம் கஜ்ஜாலி, ஷேக் அஷ்ரஃப், யஹ்யா, ஷீராஜி ஆகிய அறிஞர்களின் பாரசீக எழுத்தோவியங்களை எப்பொழுதும் விரும்பிப் படிப்பார். பாக்கள் இயற்றவும் ஔரங்க சீபுக்குத் தெரிந்திருந்தும், அதை அவ்வளவாக விரும்புவதில்லை; உரைநடை இலக்கியத்தையே பாராட்டி வளர்த்தார்.

இரகசிய ஆலோசனைக் கூட்டம் என்பது, பிரபுக்களும் உயர் மன்சப்தார்களும் அமீர்களும் பேரரசருக்கு எதிரில் வந்திருந்து மரியாதை செய்தலையே குறிக்கும். மரியாதையை ஏற்றுக்கொண்டு, அவர்களுடன் அவர் கலந்து உரையாடி நட்புடன் பழகுவார். இதன் பின்னர், முன்னிரவுத் தொழுகைக்குச் சென்று, அதை முடித்துக்கொண்டு திரும்பித் 'திவானெ காஸ்' பேரவைக்குச் செல்வார்.

பேரவையில் அரியாசனத்தில் அவர் அமர்ந்திருக்கும்போது உடனுக்குடன் ஆணைகளும் தீர்ப்புகளும் வழங்கப்படும். பேரவைக் கூட்டம் சுறுசுறுப்பாகவே நடைபெறும். கூட்டம் கலைந்த பிறகு பேரரசர் இரவுத் தொழுகைக்கு மசூதிக்குச் செல்லுவார்.

**உழைப்பிலும் சுறுசுறுப்பிலும் நெப்போலியன் :** தொழுகையிலிருந்து திரும்பி அந்தப்புரம் சென்று உணவருந்திய பிறகும்,

படிப்பு எழுத்து ஆகியவை தொடர்ந்து நடைபெறும். இம்மாதிரியான அன்றாட அலுவல்கள் மூன்று நாள்களில் மட்டும் சற்று மாற்றிக் கொள்ளப்படும். வெள்ளிக்கிழமை புனித நாளாகக் கருதப்படுவதால், அன்றைத் தினம் அரசாங்க விடுமுறை நாளாக ஆக்கப்பட்டது. எனவே, வெள்ளிக்கிழமைகளில் 'தர்பார்'—பொதுப் பேரவை கூடுவது கிடையாது. அது போன்றே, புதன்கிழமை யன்றும் பேரரசர் தர்பார் நடத்துவது கிடையாது. எனவே, அன்று மட்டும் அவர் காலை 9 மணிக்குப் பிறகு நேரே தனி மன்றத்திற்குச் சென்று நீதி அளிக்கும் முகமாகக் கீழ்மன்றங்களிலிருந்து வரும் வழக்குகளை விசாரிப்பார். அப்பொழுது ஔரங்கசீபைச் சுற்றிச் சூழ்ந்து சட்ட நிபுணர்களும், பிரதம காஜி, உலமாக்கள், முஃப்தீகள், நீதிபதிகள், பிரதம கொத்தவால் ஆகியோர் அனைவரும் வீற்றிருப்பர். வாதி-பிரதிவாதிகளின் வழக்குகளை மாமன்னரே விசாரித்துத் தீர்ப்பு வழங்குவார். வியாழக்கிழமைகளிலும் பாதி நாள் அரசாங்க விடுமுறையே என்று கூற வேண்டும். ஏனெனில், வியாழக் கிழமை பிற்பகலிலும் பேரவை கூடுவது இல்லை; உலமாக்கள், அமீர்கள் ஆகியோரின் கூட்டமும் கூடுவது கிடையாது. தனியே இறைவணக்கம் செலுத்துவதில் வியாழன் பிற்பகற் பொழுதையும், வெள்ளிக்கிழமை நாள் முழுவதையும் ஔரங்கசீப் கழிப்பார். ஆகமொத்தத்தில் அப் பேரரசர் துயில் கொள்ளும் நேரம் மூன்று அல்லது நான்கு மணிகளுக்குமேல் நீடிக்காது. **ஆலம்கீர் நாமா**வை மேற்கோள் காட்டிப் பேராசிரியர் சர்க்கார் இதனைக் குறிப்பிட்டுள்ளார். நெப்போலியன் 5 மணி நேர மட்டுமே தூங்குவது வழக்கம் என்பது வரலாறு கண்ட உண்மை.

**பெர்னியர் சாட்சியம் :** இத்தகைய சுறுசுறுப்புடனும் தனியாத ஆற்றல்களுடனும் ஓரிரண்டு ஆண்டுகள் அல்ல, சற்றேறக் குறைய 50 ஆண்டுகளுக்குத் தொடர்ந்து பணியாற்றி வந்தார் ஔரங்கசீப். போரிலும் அமைதிக் காலத்திலும், உடல்நலம் குன்றியபோதும் உடல்நலன் பெற்றிருந்தபோதும், கோடையிலும் குளிரிலும், காற்றுக் காலங்களிலும் மழைக் காலங்களிலும் சலியாது சளைக்காது ஓயாது இத்தகைய அன்றாடக் கடமைகளை அவர் நிறைவேற்றி வந்தார். அரச கடமைகளையும், சமய ஒழுக்க நெறிகளையும், குடும்பப் பொறுப்புகளையும் நிறைவேற்றுவதில் பேரரசர் ஔரங்கசீபுக்கு இணை யாருமிலர் என்றே கூறலாம். பேரரசராக ஔரங்கசீப் தம்மைப் பிரகடனப்படுத்திக்கொள்வதற்கு முன்பு ஒரு முறை நோயால் பாதிக்கப்பட்ட போது அவரை அக்கறையுடன் கவனித்துச் சிகிச்சை யளித்த

பெர்னியர், உடல் நலிவுற்றிருக்கையிலும் ஔரங்கசீப் மிகவும் சுறுசுறுப்புடனிருந்ததாக வியந்து கூறினர்.[1]

இனி, ஔரங்கசீபின் குடும்பத்தைப்பற்றிப் பார்ப்போம்.

## மனைவியர்

ஔரங்கசீபின் முதல் திருமணம் அவருடைய 19ஆவது வயதில் நடந்தது. இதற்கு ஓர் ஆண்டிற்கு முன்பே திருமண உறவுபற்றிய பேச்சுகள் தொடங்கின. 1637ஆம் ஆண்டில் திருமணத்திற்குச் சில நாள்களுக்கு முன்புதான் அவர் தக்காணத்திலிருந்து ஆக்ராவுக்குத் திரும்பி வந்திருந்தார். ஷா நவாஸ் கானின் மகள் தில்ரோஜ் பானு என்பாருடன் திருமணம் 1637ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 16ஆம் தேதியன்று காலை 4 மணிக்கு நடந்தது. திருமணத்தின்போது ஔரங்கசீபின் தம்பி முராத் பக்ஷே மாப்பிள்ளைத் தோழனுக ஔரங்கசீபுடன் சென்ருர். இளவரசர் ஔரங்கசீப் தம் மனைவிக்குப் பெரும் மஹர்த் தொகையைக் கொடுத்தார்.[2]

ஔரங்கசீபின் முதல் மனைவியாகிய தில்ரோஜ் பானு தம் கணவர் வாரிசுரிமைப் போரில் கலந்துகொள்வதற்கும் அதில் வெற்றி பெறுவதற்கும் முன்பே இறந்துவிட்டார். அதாவது, 1657ஆம் ஆண்டு அக்டோபர் 8ஆம் தேதி இவர் இறந்தார். தம் கணவருடன் இம் மாது 20 ஆண்டுகள் வாழ்ந்திருந்தார் என்றும், அதற்கிடையில் ஐந்து குழந்தைகள் இத் தம்பதியருக்குப் பிறந்தார்களென்றும் வரலாற்ருசிரியர்கள் குறிப்பிடுகின்றனர்.

முதல் மனைவி இறந்த பின்னர் ஔரங்கசீப் இரண்டாம் திருமணம் செய்து கொண்டிருக்க வேண்டும் என்று தெரியவருகிறது. நவாப் பாய் (Nawab Bai) என்னும் பெண்ணை அவர் இரண்டாம் திருமணம் செய்து கொண்டது உண்மை. நவாப் பாய் என்னும் பெயரிலுள்ள 'பாய்' என்னும் சொல் இந்துப் பெயராக இருக்கக்கூடும் எனக் கருதி, இந்து இராஜபுத்திர உதிரக்

[1] 'Travels', p. 125.

[2] 'மஹர்' என்ருல் என்ன? முஸ்லிம் கணவன் ஒவ்வொருவனும் தன் தன் மனைவிக்குத் தவருமல் இதைத் தந்தே தீரவேண்டும் என்னும் சுவைமிக்க தகவல் முழுதும் முன்னம் நாம் குறிப்பிட்ட 'இந்திய இசுலாமியர் சட்டம்' என்னும் நூலில் நன்கு விளக்கப்பட்டிருப்பதைக் காணலாம். தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தில் இந்நூல் கிடைக்கும். ஔரங்கசீப் தம் முதல் மனைவியாகிய தில்ரோஜ் பானுவுக்கு ரூ. 4 லட்சம் மஹராக அளித்ததாக ஜாதுநாத் சர்க்கார் தமது நூலில் குறிப்பிடுகிருர்.

கலப்புள்ள பெண் இரண்டாந் தாரமாய் வாய்த்ததாக மனுச்சி கூறுகிறார். ஆனால், இந்த இரண்டாவது திருமணம் எப்பொழுது நடந்தது என்று அவர் குறிப்பிடவில்லை. இப் பெண் காஷ்மீர் சிற்றரசர் குடும்பம் ஒன்றைச் சார்ந்தவள் என்று பாரசீகக் குறிப்புகள் கூறுகின்றன. இவள் சையத் ஷாஹ் மீர் என்னும் ஞானியாகிய பெரியார் வழியில் வந்த முஸ்லிம் சிற்றரசரான ராஜவ்ரி ராஜாவின் மகள் என நம்பப்படுகிறது. சையத் ஷாஹ் மீரிடம் ஷாஜஹானுக்கு நிறைந்த பக்தி இருந்தது. முஹம்மத் சுல்தான், முஅஜ்ஜம், பத்ருன்னிசா என்னும் பிள்ளைகள் நவாப் பாயின் குழந்தைகள் என 'மஆசிரெ ஆலம்கீரி'யின் ஆசிரியர் கூறியுள்ளார். ஆனால், அதே நேரத்தில், சுல்தான் பிறந்த ஆண்டு 1639 என்று சொல்லப்படுகிறது. அதாவது, 1638-ல் நவாப் பாய் ஔரங்கசீபின் இரண்டாந் தாரமாக வாழ்க்கைப் பட்டிருக்க வேண்டும். எனினும், முதல் மனைவியின் மூத்த மகளான ஜேபுன்னிசா 1638ஆம் ஆண்டிலேயே பிறந்துள்ளார் என்பதையும், பொதுவாகவே ஔரங்கசீப் தெய்வ, மத பக்தி உடையவர் என்பதையும், முதல் திருமணம் ஆன ஓர் ஆண்டிற் குள் மற்றொரு திருமணத்தைப் பேரரசர் ஷாஜஹான் ஔரங்க சீபுக்குச் செய்து வைத்திருக்க முடியாது, அதிலும் தம் குரு மகானின் தோன்றலாகிய நவாப் பாயை தில்ரோஜ் பானுவுக்குச் சக்களத்தியாக்கி யிருக்க முடியாது என்பதையும் நாம் ஒருங்கே கருத்தில் கொண்டு சிந்தித்துப் பார்த்தால், மேலும் அனேக வர லாற்றுச் செய்திகள் நமக்குத் தெரியவில்லை என்பது புலனாகும்.

ஔரங்காபாதெ மஹல் என்னும் மற்றொரு பெண்ணையும் ஔரங்கசீப் திருமணம் செய்து கொண்டதாகக் கூறுகிறார் பேராசிரியர் சர்க்கார். ஆனால், அவர் இத் திருமண ஆண்டினைக் குறிப்பிடவில்லை; எனினும், இந்த மனையாட்டி இறந்த ஆண்டை மட்டும் குறிப்பிட்டுள்ளார். இம் மாது 1688ஆம் ஆண்டில் இறந் தார் எனக் கூறப்படுகிறது. ஔரங்காபாதெ மஹலுக்கு மெஹ்ருன்னிசா என்னும் பெண் குழந்தை 18-9-1661-ல் பிறந்தது. ஆராய்ந்து பார்த்தால், சில குறிப்புகள் முன்னுக்குப் பின் முரண்பாடாக உள்ளன. உதயபூரி மஹல் அல்லது 'பாய் உதயபூரி' என்னும் நான்காவது மனைவியும் ஔரங்கசீபுக்கு இருந்ததாகச் சொல்கிறார்கள். முதல் திருமணத்தைப்பற்றி நல்லவிதமாகப் பல குறிப்பாளர்கள் வருணித்துவிட்டிருக்க, பேரரசர் புரிந்து கொண்டதாகச் சொல்லப்படும் பிற திருமணங் களைப்பற்றி எவருமே முழு விவரங்களை அளிக்கவில்லை. ஆனால், அதே நேரத்தில் உதயபூரி மஹலுக்கு ஓர் ஆண் குழந்தை பிறந் தது என அறிஞர் முஸ்தயித் கான் கருதுகிறார். இக் குழந்

தைக்கு முஹம்மத் காம் பக்ஷ் (Muhammad Khambaksh) எனப் பெயரிடப்பட்டதாக அறிஞர்கள் கூறுகின்றனர்.

இஸ்லாமிய கலைக் களஞ்சியமும் ஔரங்கசீபுக்குத் தாரமாக வாய்த்தவர்கள் நான்கு மனைவியர் எனக் குறிப்பிடுகின்றது: (1) ரஹ்மத்துன்னிசா, (2) நவாப் பாய், (3) ஔரங்காபாதெ மஹல், (4) உதயபூரி.

இறுதியாக, எல்லா ஆதாரங்களையும் தொகுத்துக் கணக்கிட்டுப் பார்க்கும்போது, ஔரங்கசீபின் முதல் மனைவி தில்ரோஜ் பானு பேகம் 1657ஆம் ஆண்டில் இறந்தபின், ரஹ்மத்துன்னிசா என்னும் நவாப் பாயை அவர் திருமணம் செய்திருக்கக்கூடும். நவாப் பாய் 1691ஆம் ஆண்டில் (ஔரங்கசீபின் 73ஆவது வயதில்) இறந்தார். 3-வது, 4-வது திருமணங்களைப்பற்றி முழு விவரங்கள் தெரியவில்லை. முஸ்தயித் கான் 'மஆசிரெ ஆலம்கீரி'யில் ஔரங்கசீபிற்குத் தில்ரோஜ் பானு பேகம், நவாப் பாய், பாய் உதயபூரி, ஔரங்காபாதெ மஹல் என்று 4 மனைவியர் இருந்ததாகக் குறிப்பிட்டாலும், தில்ரோஜ் பானுவைத் தவிர்த்து மீதி மூவரின் இஸ்லாமிய பெயர்களைக் குறிப்பிடவில்லை. நவாப் பாய், பாய் உதயபூரி ஆகிய இரு பெயர்களும் ஒருவரையே குறிக்கக்கூடும் என்று கருத இடமுள்ளது. சில சமயங்களில் மட்டுமே ஒன்றுக்கும் மேற்பட்ட திருமணம் செய்துகொள்ளலாம் என்ற சிறப்புச் சலுகை (உரிமை அன்று) இஸ்லாம் அளித்திருப்பதை வரலாற்றாசிரியர்கள் நினைவில் வைத்து, ஔரங்கசீபும் நான்கு மனைவிகளை மணந்து கொண்டதாகக் கருதியிருக்கக்கூடும் எனப் பல அறிஞர்கள் கருதுகின்றனர்.

## மக்கள்

ஔரங்கசீபுக்கு ஐந்து ஆண் மக்களும், ஐந்து மகள்களும் பிறந்திருந்ததாக முஸ்தயித் கான் குறிப்பிடுகின்றார்.

1. 1638ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 15ஆம் தேதி தில்ரோஜ்பானு பேகத்திற்குப் பெண் குழந்தை பிறந்தது. இக் குழந்தைக்கு ஜேபுன்னிசா (Zebunnisa) என்று ஔரங்கசீப் பெயர் சூட்டினார். இப் பெண் குழந்தை வளர்ந்ததும் கல்வி பயில ஏற்பாடு செய்யப்பட்டது. ஹஃபீஜா மர்யம் (Hafiza Maryam) என்னும் ஆசிரியை ஜேபுன்னிஸாவுக்குக் கல்வி புகட்ட நியமிக்கப்பட்டார். அரபி, பாரசீக மொழியில் கல்வி அளிக்கப்பட்டது. ஜேபுன்னிசா பிறகு வளர்ந்து பெரும் புலமை

எய்தினாள். அரபி, பாரசீக மொழிகளில் உரைநடையிலும் அவள் சிறந்து விளங்கினாள். அராபிய மொழி உரைநடையில் ஜேபுன்னிசா எழுதிய அராபிய நூல் ஒன்றிற்கு விரிவுரை விளக்கமாக முல்லா சஃபீயுத்தீன் அர்தப்லா என்பவர் பாரசீக மொழியில் அதை மொழி பெயர்த்தார். 1702ஆம் ஆண்டு மே மாதம் 26ஆம் தேதி ஜேபுன்னிசா இறந்தாள்.

2. ஔரங்கசீபின் இரண்டாவது குழந்தையும் பெண்தான். இவருடைய பெயர் ஜீனத்துன்னிசா என்பதாகும் (Zeenathunnisa). இவர் 1643ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 5ஆம் தேதி பிறந்தவர். இவர் இறக்கும்வரை தம் தந்தைக்கு மிகவும் உதவியாக நற்பணிகள் செய்து வந்தார். மிகக் கவனமாக நினைவில் வைத்துக்கொள்ள வேண்டியது என்னவெனில், ஔரங்கசீபின் மகள் ஜீனத்துன்னிசாதான் சிவாஜியின் பேரன் ஷாஹு என்னும் இளவரசரை மதம் மாற்ற முயற்சிக்காமல் இந்துவாகவே 13 ஆண்டுகள் வரை வளர்த்தார். (ஆக்ரா செல்லும்போது ஷாஹுவுக்கு வயது 7. ஔரங்கசீப்தான் சாம்பாஜியின் இந்த மகனுக்கு ஷாஹு என்று பெயரிட்டார். அப் பெயரே நிலைத்தது.) ஜீனத்துன்னிசா 1721ஆம் ஆண்டில் மே மாதம் 7ஆம் தேதி இறந்தார். இவரும் தில்ரோஜ் பேகத்தின் மகள் ஆவார்.

3. 1639ஆம் ஆண்டிலேயே நவம்பர் 14-ல் ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அக் குழந்தைக்கு முஹம்மத் சுல்தான் என்று பெயரிடப்பட்டது. ஔரங்கசீபுக்கும் நவாப் பாய்க்கும் பிறந்த முதல் ஆண் குழந்தை இதுவே. (ஆதாரம், மஆசிரெ ஆலம்கீரி.) நாம் முன்னமே குறிப்பிட்டபடி, ஔரங்கசீபுக்கும் நவாப் பாய்க்கும் நடந்த திருமணத்தைப்பற்றிய செய்திகளை அறிய முடியவில்லை.

4. 1644ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 4ஆம் தேதி மற்றோர் ஆண் குழந்தை பிறந்தது. இக் குழந்தைக்கு முஹம்மத் முஅஜ்ஜம் எனப் பெயர் இடப்பட்டது. இக் குழந்தையும் நவாப் பாய்க்குப் பிறந்தது. இந்த இரண்டாம் இளவரசரே தக்காணத்தின் ஆளுநராகவும், சில காலம் மேற்கு மண்டலத்தின் ஆளுநராகவும், பிரதம தளபதியாகவும் பணியாற்றியவராவார். இவர் ராஜா ரூப்சிங் என்பாரின் மகளை மணந்துகொண்டார். நாம் முன்பு குறிப்பிட்ட சுல்தான் துரோகச் செயல்களில் ஈடுபட்டதனால், ஔரங்கசீப் தம் மகன் என்றும் பாராமல், நீதியுடன் நடந்துகொள்ள வேண்டி அவரைச் சிறையில்

அடைக்கவும் தயங்கவில்லை. முஹம்மத் சுல்தானுக்கு 1676ஆம் ஆண்டு டிசம்பரில் தண்டனை விதிக்கப்பட்டது. இதனால்தான் முஹம்மத் முஅஜ்ஜம் உயிருடனிருந்த மூத்த மகன் என்னும் நிலையில் தம் தந்தை ஔரங்கசீப் இறந்ததும் 'ஷாஆலம்' என்ற பட்டத்துடன் அரியணை ஏறினார்.

5. பத்ருன்னிசா (Badrunnisa) என்னும் பெயர், மற்றொரு பெண் குழந்தைக்குச் சூட்டப்பட்டது. ஔரங்கசீபின் இந்த மூன்றாவது மகள் 1647ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 17ஆம் தேதி பிறந்தார். இக் குழந்தையும் நவாப் பாய்க்குப் பிறந்ததே.

6. அடுத்துப் பிறந்த 6ஆவது குழந்தையும் பெண் குழந்தையே. இக் குழந்தை 1651ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 2ஆம் தேதி மூல்தானில் பிறந்தது. ஔரங்கசீப் இந்த 4ஆவது மகளுக்கு ஜப்தத்துன்னிசா (Zabdatunnisa) என்று பெயரிட்டார். வயது அடைந்தபின் இப்பெண்ணை ஔரங்கசீப் கொன்றுவிட்டதாகத் தவறான பிரசாரம் செய்யப்படுகிறது. ஜப்தத்துன்னிசாவைத் தாரா ஷுக்கோவின் மகன் சிஃபிர் ஷுக்கோ (Siphir Shukoh) (சுலைமானின் தம்பி) என்பவருக்கு 1673ஆம் ஆண்டு ஜனவரி 30ஆம் தேதியில் திருமணம் செய்து கொடுத்த ஔரங்கசீப் தாராவை அரசியல் போட்டியிலிருந்து அகற்றியதைப்போல சிஃபிர் ஷுக்கோவை அகற்றவில்லை என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது ஆகும்.

7. ஔரங்கசீபுக்கு மூன்றாவது ஆண் குழந்தை புர்ஹான்பூர் (Burhanpur) என்னும் ஊரில் பேரரசர் முகாம் இருக்கையில், 1653ஆம் ஆண்டில் ஜூன் மாதம் 28ஆம் தேதியன்று பிறந்தது. இக் குழந்தைக்கு முஹம்மது ஆஜம் என்று பெயரிடப்பட்டது. இது தில்ரோஜ் பானு பேகத்திற்குப் பிறந்தது (மஆசிரெ ஆலம்கீரி).

8. அடுத்த ஆண் குழந்தை 1658ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 11ஆம் தேதியன்று பிறந்தது. அக் குழந்தைக்கு 'அக்பர்' எனப் பெயரிடப்பட்டது. ஆனால், மஆசிரெ ஆலம்கீரி கூட அக்பரின் தாயாரின் பெயரைக் குறிப்பிடவில்லை. ஆஜமும் அக்பரும் தந்தைக்கு எதிராகப் பல தடவைகளில் நடந்து கொண்டனர். ஆஜம் மராத்தியர்களிடம் கையூட்டம் பெற்றதும், அக்பர் இராஜபுத்திரர்களின் கைப்பாவையாக மாறித் தந்தை ஔரங்கசீபை எதிர்த்துப் பிறகு பாரசீகம் ஓடியதன்

காரணமாக ஆட்சிபுரியும் வாய்ப்பை இழந்ததும்பற்றி முன்பே பார்த்தோம்.

9. ஔரங்காபாதெ மஹல் பெற்ற ஒரே சிசு பெண்ணுகும். அப் பெண் குழந்தை 1661, செப்டம்பர் 18-ல் பிறந்தது. மெஹ்ருன்னிஸா என்று பெயரிடப்பட்டது. 1706-ல் இப் பெண் மாண்டாள்.

10. முன்பே நாம் குறிப்பிட்டபடி, உதயபுரி மஹலுக்குப் பிறந்த ஒரே மகன் பெயர் முஹம்மத் காம் பக்ஷ் ஆகும். 24-2-1667 அன்று டில்லியில் பிறந்த இவன், தந்தை காலமான பின்னர் மூண்ட வாரிசுரிமைப் போரில், 1709 ஜனவரியில் ஹைதராபாதுக்கருகே கொலையுண்டான்.

ஔரங்கசீபுக்குத் தம் பிள்ளைகளிடத்துப் பாசம் நிறைய இருந்தது; ஆனால், அதே சமயத்தில் கண்டிப்பும் இருந்தது. தம் பிள்ளைகளாக இருப்பினும், அவர் தம் நெஞ்சை நெகிழவிட்டதில்லை. மகனே ஆயினும் துரோகச் செயலையும் நயவஞ்சகத்தையும் அவர் மன்னித்ததில்லை; கண்டிக்கத் தவறியதில்லை; அளவுக்கு மீறிய உரிமையைக் கொடுத்ததில்லை; மரண தண்டனை கொடுக்கவும் பின்வாங்கியதில்லை. வழி தவறியபோது ஒரு மகனுக்கு மரண தண்டனை கூட விதித்தார். சிறப்பையும், சீரிய குண நலன்களையும், தூய இஸ்லாமிய உணர்வையும் தம் பிள்ளைகளிடம் அவர் எதிர்பார்த்தார்; அக் குறிக்கோள்களை நோக்கியே பிள்ளைகள்மீது பாசத்தைக் கொட்டி வளர்த்தார். சுருக்கமாகச் சொன்னால், குடும்ப வாழ்க்கையிலும் எல்லையை அவர் மீறியதில்லை. மத்திபமான வழியையே அவர் கடைப்பிடித்தார். எனினும், ஔரங்கசீப் தம் மகன்களை எதிர்கால மன்னர்களாக உயரத்தக்க முறையில் வளர்ப்பதில் தவறிவிட்டார் என்றே கருதவேண்டும்.




ஆங்கிலேயர்கள் மூவரை முடி துறக்கச் செய்து, பர்மாவுக்கு

ஆலம்கீர்

| ஜப்தத்-துன்னிசா | முஹம்மத் ஆஜம் | முஹம்மத் அக்பர் | மெஹ்ருன்னிஸா | முஹம்மத் காம் பக்ஷ் |
|---|---|---|---|---|
| 1651 | 1653-1707 | 1658-1704 | 1661-1706 | 1667-1709 |
| | | நெக்சியர் 1719 | | |

நாடு கடத்திக் கண்களைப் பிடுங்கிக் குருடர்களாக்கினார்கள்,

# 22. மராத்தியர்களுடன் மீண்டும் தொடர்பு

மராத்தியர்களை ஒன்றுபடுத்திக் கட்டிக் காத்துச் சிவாஜி வளர்த்த மராத்திய அரசு அவருக்குப் பின் நீடிக்காமற் போய் விடும் என்பது சாம்பாஜியின் வளர்ச்சியின் மூலமே நன்கு புரிந்து விட்டது. 1680ஆம் ஆண்டில் சிவாஜி இறந்த பொழுது அவருடைய மூத்த மகன் சாம்பாஜி அரசாளுவதற்கு முற்றிலும் அருகதை யற்றவராக இருந்தார். எனவே, இராஜாராம் 10 வயதை எட்டி இருந்தபோதிலும், அண்ணுஜி தத்தோ என்பாரின் தலைமையின்கீழ்க் கூடிய அவையினர் சிலர் ராய்கட் கோட்டையில் இச் சிறுவனையே மன்னராகத் தேர்ந்தெடுத்தனர். ஆகவே, மராத்தியர்களிடையே பிளவு ஏற்படுவது முற்றிலும் உறுதியாயிற்று. ஆனால், இராஜாராமைத் தேர்ந்தெடுத்தவர்கள் பிராமணர்களின் ஆதிக்கம் ஓங்கி இருந்ததை உறுதிப் படுத்தினர். எனவே, இதற்குப் போட்டியாக மூத்த சாம்பாஜியையே மன்னராக ஏற்றுக்கொள்வதாகப் பலரும் விசுவாசப் பிரமாணம் செய்துகொள்ளத் தினந்தோறும் சாம்பாஜியின் அவைக்கு வந்துகொண்டிருந்தனர். அண்ணுஜி இராஜாராமுக்கு வாரிசு உரிமையை நிலைநாட்டி அவனை அரியணையில் அமர்த்த, ஹம்பீர் ராவ் என்னும் தளபதி அண்ணுஜியைக் கைது செய்ய,



முதுமையில் ஔரங்கசீப்

பிறகு சாம்பாஜியையே அனைவரும் மன்னராக ஏற்றுக்கொள்ள —இன்னம் இவை போன்ற பிற நிகழ்ச்சிகள் பலவும் பேரரசருக்குத் துணைபுரிவதுபோல் நிகழ்ந்துகொண்டு இருந்தன. 1681ஆம் ஆண்டில் சாம்பாஜி மராத்திய மன்னராக அரியணை ஏறினார். அடுத்த ஆண்டு மே மாதம் 18ஆம் தேதி ராஜா ஷாஹு பிறந்தார்.

**சாம்பாஜியின் எதிர்ப்பு:** 1681ஆம் ஆண்டிலிருந்தே பேரரசரை எதிர்த்துச் சாம்பாஜியின் படைகள் பழையபடி போரிடத் தொடங்கின. சாம்பாஜி போர்க்கொடியை உயர்த்தக் குறிப்பான காரணம் எதுவுமில்லை. ஆயினும், தந்தையைப் போல் அல்லாது வட இந்தியப் பகுதிகளுக்குச் சென்று இவர் நேரடிப் போரில் இறங்குவதிலும், இடங்களைக் கொள்ளையடிப்பதிலும் ஈடுபட்டார். ஔரங்கசீபின் ஒரு மகனான இளவரசன் அக்பர் தன் தந்தையிடத்திருந்து பிரிந்து, இராஜபுத்திரர்களுடனும் சாம்பாஜியுடனும் நட்புறவு கொண்டு, அவர்களின் கைப் பாவையாக இயங்கி வந்ததுதான் ஔரங்கசீபைத் தக்காணம் நோக்கி வருமாறு தூண்டியது.

'அக்பர் தங்கள் கட்சியில் வந்து சேர்வதைக் கேள்விப்பட்ட மராத்தியர்கள் காந்தேஷின் வடபகுதி நகர்களிலும் தாரங் காவுவிலும் இன்னும் பிற இடங்களிலும் கொள்ளையடித்து எண்ணற்ற செல்வத்தைத் திரட்டினர். ஹம்பீர் ராவ் என்பாரின் தலைமையிலிருந்த கொள்ளைக்கூட்டம்......புர்ஹான்பூரின் புற நகர்ப் பகுதியான பஹதூர்பூரா மீது பாய்ந்து வீழ்ந்து, ஒரு நொடிப்பொழுதில், ஊரிலுள்ளவர்கள் என்ன நிகழ்கின்றது என்பதை அறியுமுன்னே அங்கிருந்த எண்ணிறந்த கடைகளிலிருந்தும் வீடுகளிலிருந்தும் மகத்தான அளவுக்குக் கொள்ளைப் பொருள்களைத் திரட்டிக்கொண்டது. மற்றும் நகரச் சுவருக்கு வெளியேயுள்ள பதினேழு பேட்டைகளும் அவ்வாறே சூறையாடப்பட்டன. இந்தத் திடீர்த் தாக்குதலான படுகொள்ளை எத்தகு மின்வேக வியப்புடன் நிகழ்ந்ததென்றால், எவனும் ஒரு செப்புக்காசைப் பதுக்கிக்கொள்ளவோ அப்புறப்படுத்தவோ, அல்லது தன் மனைவிமக்களைக் காப்பாற்றிக்கொள்ளவோ அறவே இயலாமற் போயிற்று.........ஒவ்வொரு பேட்டையிலிருந்தும் இலட்சக்கணக்கான ரூபாய் மதிப்புள்ள கொள்ளைப்பொருள்கள் சுருட்டி வாரப்பட்டன. கண்ணியமிக்க பல கனவான்கள் தங்கள் குடும்பம் கண்ணெதிரே மானபங்கத்துக்கு இரையாவதைக் காணக்கூடாதென்று, மனைவியரையும் மகள்களையும் கொன்றுவிட்டு, அசட்டுத் துணிச்சலுடன் கொள்ளைக்காரர்களை

எதிர்த்து மாண்டனர். மூன்று நாள்கள்வரை மராத்தியர்கள் தொடர்ந்து அப் புறநகர்ப் பகுதிகளைத் தங்கள் உள்ளம் சாந்தியடையும் மட்டில், யாதொருவித எதிர்ப்புமின்றிப் படுகொள்ளை நிகழ்த்தினார்கள்; ஒவ்வொரு வீட்டின் தரையையும் தோண்டிப் புரட்டினார்கள்; பல தலைமுறைகளுக்கு முன்பிருந்து அங்கே புதையுண்டு கிடந்த புதையல்களையும் செல்வங்களையும் வாரி மூட்டை கட்டிக் கொண்டார்கள்' என்று ஜாதுநாத் சர்க்கார் வருணிக்கிறார்[1]. அஹ்மத் நகர் செல்லும் வழியில் முகலாயத் தளபதி கானெ ஜஹான், மற்றொரு மராத்தியப் படை ஔரங்காபாதை நோக்கிச் செல்வதை அறிந்தார். இதற்கிடையில் இளவரசர் அக்பர், நாம் முன்பு கூறியுள்ளதே போல், இராஜபுத்திரத் தலைவரால் கைவிடப்பட்டு (பக். 214), சாம்பாஜியின் உதவியை நாடி, இவரிடம் வந்து கலந்து கொண்டார்.

## சாம்பாஜியின் முயற்சிகள்

ஆனால், மராத்திய மண்டலத்தில் சிவாஜிக்குப் பின் நிர்வாகம் ஒழுங்காக நடைபெற்றதாகத் தோன்றவில்லை. அண்ணாஜி தத்தோ, சிவாஜியின் மூன்றாவது மனைவியாகிய சோய்ரா பாய் (ராஜாராமின் தாயார்), ஹீராஜி, பாலாஜி பிரபு ஆகியோர் அனைவர்மீதும் சாம்பாஜி சதிக்குற்றம் சாட்டினார். தம்மை எதிர்த்துச் சூழ்ச்சி செய்ததாக அவர் தீர்மானித்தார். சோய்ரா பாயைத் தவிர்த்து, அண்ணாஜி தத்தோ, சோமாஜி, பாலாஜி, மற்றும் 20 பேர்கள் எல்லாம் யானையின் கால்களிடையே இடர விடப்பட்டு, மிதித்துக் கொல்லப்பட்டனர்.[2] எனவே, சிவாஜியின்கீழ் அமைந்திருந்த ஒன்றுகூடிய அமைப்பையும், ஒற்றுமையையும் சாம்பாஜியின்கீழ்க் காண முடியவில்லை. கவிகலாஷ் என்னும் கனோஜிப் பிராமணரே சாம்பாஜி சீரழிவதற்குக் காரணமாக இருந்தாரெனில் அது மிகையாகாது. சாம்பாஜி அக்பரைச் சந்தித்தபோது ஔரங்கசீபை எதிர்க்குமாறு அக்பருக்கு அவர் ஆலோசனை கூறினார். சாம்பாஜியின் ஆலோசனையின்படி அக்பர் நடக்க இருந்தபோது, பேரரசரே புர்ஹான்பூரை 1681ஆம் ஆண்டு நவம்பர் 13ஆந் தேதி வந்தடைந்தார். அடுத்த ஆண்டு மார்ச் 22ஆம் தேதி அன்று ஔரங்காபாதுக்கு அவர் வந்து சேர்ந்தார்.

[1] 'Short History of Aurangazeb' pp. 288, 289.

[2] Kincaid and Parasuis, 'History of the Marattas'

ஔரங்கசீப் திலேர் கானை அஹ்மத் நகருக்கும், தளபதி ராவ் புந்தேலா என்னும் இந்துத் தளபதியை ஷஹாபுத்தீன் என்பவருடன் நாஸிக் நோக்கியும் அனுப்பி வைத்தார். தளபதி ராவ் நாஸிக்கிற்கு அருகில் ஓரிரு இடங்களைப் பிடித்துக்கொண்டார். இதற்கு முன்பு பீஜப்பூர்மீது போர் தொடுத்திருந்ததனால் இளவரசர் ஆஜமை ஔரங்கசீப் தாரூர் நோக்கி அனுப்பி வைத்திருந்தார் என்பதை முன்னமே பார்த்தோம். மராத்திய மண்டலத்திலும் பீஜப்பூரை அடுத்துள்ள பகுதிகளிலும் வெற்றியும் தோல்வியும் மாறி மாறி நிகழ்ந்துவந்தன. 1685ஆம் ஆண்டிலும் போர் தொடர்ந்து நடைபெற்று வந்தது. ஆனால், சாம்பாஜி தம் தந்தை விட்டுச்சென்ற மராத்திய மண்டலத்தைப் பாதுகாத்துச் செவ்வனே ஆட்சி புரிவதைக் கைவிட்டு, இளவரசர் அக்பர் தம் முகாமில் இருக்கும் நல்வாய்ப்பையும் சரிவரப் பயன்படுத்தாது, புரோச் (Broach) நகரைத் தாக்குவதிலும், கோவாவைக் கைப்பற்ற முயல்வதிலும் தம் பொருளையும் பொன்னான நேரத்தையும் வீணடித்து வந்தார். சாம்பாஜியோ இராஜபுத்திரர்களோ இளவரசன் அக்பர் எதிர்பார்த்த உதவிகளை அவனுக்கு அளித்திருப்பார்களேயானால், நாட்டின் வரலாற்றுப் போக்கு மாறிவிட்டிருக்கக் கூடும். அவர்களின் கோழைத்தனத்தையும் இயலாமையையும் அறிந்து, அக்பர் நாட்டை விட்டுப் பாரசீகத்துக்கு 1687-ல் ஓடிவிட்டான். வீரர் சிவாஜியின் மகன் என்ற பெருமையை இழக்கும் முறையில் சாம்பாஜி குடியிலும் கேளிக்கைகளிலும், வனிதையரின் வலைவீச்சுகளிலும் தம்மையே மறந்து காலத்தைக் கழித்துவந்தார். எனவே, சங்கமேசுவர் கோட்டை முகலாயத் தளபதிகளிடம் வீழ்ச்சி பெற்றதில் விந்தையில்லை.

அரசியல் சூழ்நிலையைச் சரிவரப் புரிந்துகொள்ள முடியாததால்தான் சாம்பாஜி தேவையற்ற முறையில் இரத்தத்தைச் சிந்த நேரிட்டது. இதனால் அவரை எதிர்த்து உள்நாட்டிலேயே ஒருபுறம் குழப்பமும் புரட்சியும் தோன்றின. இவற்றை அறியாது, அவர் ஆங்கிலேயர்களுடனும் போர்ச்சுகீசியர்களுடனும் அனாவசியமாய் மறுபுறம் போர் தொடுத்தார். உதாரணமாகக் கேம்சாவன்த் என்பார் சாவன்த்வாடியைச் சுற்றிச் சாம்பாஜியை எதிர்த்து மிக வெளிப்படையாகவே பகைமையைப் பாராட்டலாயினர். துளுவநாயக், ராமதளவி ஆகியோரையும் சாவன்த் தம்முடன் கூட்டாக இணைத்துக்கொண்டு சாம்பாஜியின் வலிமையைக் குறைக்கத் திட்டமிட்டார்,

## சாம்பாஜியின் வீழ்ச்சி

இதற்கிடையில், நிரந்தரத்தன்மையைத் தம் அரசு இழந்து வருவதை அறியாது, பலமான உறவுண்டுபண்ணிக் கொள்ளலாம் என்னும் நப்பாசையுடன் பீஜப்பூர், கோல்கொண்டாவிற்கு நிதி உதவி செய்யத் துணிந்தது சாம்பாஜியின் அறிவீனமாகும். பல ஆண்டுகளாகவே தக்காணத்தின் இறுதி வெற்றியை நழுவ விட்டுவந்த பேரரசர் தம் இறுதி மூச்சு வரை போராடி எப்படியும் வெற்றி பெற்றே தீருவது என்று அசைக்க முடியாத அளவுக்கு ஒரு முடிவுக்கு வந்தார். ஷா ஆலம் பீஜப்பூர் எல்லை வழியாகப் படைகளை நடத்தி வந்து, பெல்காமுக்கு அருகிலிருக்கும் சில கோட்டைகளையும் நகரங்களையும் கைப்பற்றிக் கொள்ளைப் பொருள்களை எடுத்துச் சென்றார். ஷா ஆலம் 1684ஆம் ஆண்டில் பெல்காமுக்கு அருகில் வெற்றிகரமான தாக்குதலைத் தொடங்கியதே சாம்பாஜிக்குப் பெரிய பேரிடியாகும். அங்கிருந்து கோவா சென்று, போர்ச்சுகீசியர்களை ஷா ஆலம் பணிய வைத்தார். சாம்பாஜி அவர்களைத் தாக்கிக் கொள்ளையடித்துச் செல்லாவாறு தாம் காப்பாற்றியதற்காகப் போர்ச்சுகீசியர்களிடத்திருந்து காப்புத் தொகையைத் தருமாறு அவர் வேண்டினார். அதன் பின்னர்க் கோவாவிலிருந்து மேலும் வடக்கே சென்று, வெங்கூர்லா பகுதிகளை ஷா ஆலம் சுட்டுப் பொசுக்கினார். முகலாயர்களுக்கு மேற்குக் கடற்கரை வழியே போர்ச்சுகீசியர்கள்மூலம் அனுப்பப்பட்ட பொருள்களைப் பெற மராத்தியர்களுடைய பகுதிகள்மீது முகலாயப் படையினர் பாய்ந்தனர். ஆனால், மராத்தியர்கள் ஷா ஆலமின் படைகளைச் சுற்றிச் சூழ்ந்து, அவற்றைத் தோற்கடித்துப் பொருள்களையும் கொள்ளையடித்து, முகலாயர்கள் மராத்தியர்களைக் கண்டு அஞ்சி வடக்கே ஓடுமாறு செய்தனர்.

**சாம்பாஜி கைது செய்யப்படல் :** இளவரசர் ஆஜமின் படைகள் மீண்டும் தெற்கே நகர்ந்து பெல்காமைக் கைப்பற்றின. பேரரசர் 1688ஆம் ஆண்டு ஜனவரி 25ஆம் தேதி அன்று ஹைதராபாதை விட்டுப் புறப்பட்டார். அதே ஆண்டில் முகலாய முகாம்கள் பலவற்றிலும், பீஜப்பூரிலும், மற்றும் பிற பகுதிகளிலும் 'பிளேக்' என்னும் கொள்ளை நோய் பரவிற்று. எனினும், அதே ஆண்டில் தளராத உறுதியுடன் பீஜப்பூருக்கு வெகு சமீபத்தில் பாளையம் இறங்கினார் பேரரசர். இதற்கிடையில், சாம்பாஜியின் உற்ற நண்பரும் பிரதம ஆலோசகருமான கவிகலாஷாவை ஷர்கே குடும்பத்தினர் விரட்டி அடித்தனர். சாம்பாஜி தம் நண்பரைக் காப்பாற்ற, சங்கமேஷ்வருக்குப் படையுடன்

சென்று, இதற்குக் காரணமாக இருந்த பிரஹலாத் நிராஜி (Prahlad Niraji) என்பவரைக் கைது செய்தார். கவிகலாஷை விடுவித்த சாம்பாஜி, ராஜ்கர் திரும்பு முன்னரே மீண்டும் குடி மயக்கத்தில் ஆழ்ந்தார். இதனை யறிந்த முக்கர்ரப் கான் (Mukarrab Khan) என்னும் தளபதி மிகவும் குறைவான படையுடன் (1000 காலாட்படை வீரர்கள்) சங்கமேஷ்வரை நோக்கி விரைந்து சென்றார். கவிகலாஷே வாளேந்திப் போராடியது விந்தைக்குரியது மட்டுமன்றி, வேடிக்கையானதும் கூட. ஆனால், சாம்பாஜியோ அந் நிலையிலும் குடிமயக்கத்தில் ஆழ்ந்திருந்ததனால் கவிகலாஷ் வீட்டுத் தரையிலிருந்த பொந்துக்குள் புகுந்து ஒளிந்து கொண்டார். சாம்பாஜி மிகக் கேவலமான முறையில் போரிடாது கைது செய்யப்படுதற்குரிய சூழ்நிலையை ஏற்படுத்திக் கொண்டதற்கு அவரேதாம் காரணமாவார். சாம்பாஜியைக் கைது செய்த முக்கர்ரப் கானும்[1] பேரரசரின் பரிவாரத்தினர் பலரும் நிச்சயமாக பிரமித்துப் போயிருப்பர். ஏனெனில் எதிர்பார்த்ததற்கு மாறாகச் சாம்பாஜி தம் தந்தையின் பேராற்றல், அஞ்சாநெஞ்சம், போர்த்திமை, அரசியல் கூர்மை போன்ற சில நற்குணங்கள் யாவற்றையும் தம் காலின்கீழ்ப் போட்டுத் துவைத்துத் தவிடு பொடியாக்கிச் சிவாஜியின் புகழைத் தாழ்ச்சியுறுமாறு செய்து விட்டார்.

சாம்பாஜியின் கைது முகலாயர்களின் படைகளிடையே காட்டுத் தீப்போல் பரவிற்று. பேரரசர் ஔரங்கசீப் சாம்பாஜி கைதான விதத்தை அறிந்து மட்டிலாத மகிழ்ச்சி யடைந்தாலும், மண்டியிட்டுச் சிரந்தாழ்த்தி இறைவனுக்கு நன்றி செலுத்தினர். எனினும், இதனை மாபெரும் வெற்றி என்று கருதிவிட இயலாது. ஆயினும், ரூஹுல்லா கானின் மற்றும் சிலஅவையினரின் கருத்துக்கிணங்கப் பேரரசர் சாம்பாஜிக்கு விடுதலை அளிக்க விரும்பிய போதிலும், அம் மராத்தியர் அதற்கு முற்றிலும் அருகதையற்றவராகத் தம்மை ஆக்கிக்கொண்டார். ஏனெனில், சாம்பாஜி பேரரசரையும், உலமாக்கள் சபையையும், இஸ்லாமிய சமயத்தையும், இறைத் தூதர் நபிகள் நாயகத்தையும், குர்ஆன் திருமறையையும் ஒரே மூச்சில் வசை புராணமாகச் சாடியபோது பேரரசின் மேல்சபை சாம்பாஜிக்கு மரண தண்டனையை விதித்தது. சாம்பாஜியும் அவருடன் பிடிபட்டவர்களும் மிகக் குரூரமான மரண தண்டனையை அனுபவித்தனர்.

[1] சாம்பாஜியைக் கைது செய்தவர் ஷேக் நிஜாம் என்பவராவார் என்பது ஹாமிதுத்தீனின், சர்க்காரின் கூற்றும்.

சாம்பாஜியின் வீழ்ச்சிக்கு அவருடைய தீக்குணங்கள் காரணமாகும். சிவாஜி பிற சமயத்தவர்களையும், பிறமத நூல்களையும், பிறரின் பண்புகளையும் போற்றும் பண்பைப் பெற்றிருந்தார். ஆனால், சாம்பாஜி பேரரசின் வலிமையை அறியத் தவறியது அவருடைய அறிவீனத்தை நன்கு விளக்குகின்றது. தம்மை எதிர்த்துச் சதி செய்ததாகக் குற்றஞ்சாட்டிச் சாம்பாஜி பிறரைத் தண்டித்த முறை பிறகு அவருக்கே தீங்காக முடிந்தது. முற்பகல் இன்னா செய்யின் பிற்பகல் தாமே விளையும் என்பதை இந்நிகழ்ச்சி நிரூபிக்கின்றது.

சாம்பாஜி இறந்த பின்னும், மராத்தியர்கள் தொடர்ந்து ஔரங்கசீபை எதிர்த்துப் போரிட்டனர். அவர்கள் தங்களுக்கிடையே இருந்த பூசல்களை மறந்தனர். சிறைப்பட்டிருந்த ராஜாராம் (சாம்பாஜியின் தம்பி) ராய்கர் கோட்டையில் மன்னராக முடிசூட்டப்பட்டார். மராத்தியர்கள் பேரரசரை எதிர்த்துப் போரிடத் தீர்மானித்ததனால் ஔரங்கசீப் ராய்கரை நோக்கிப் படைகளை அனுப்ப நேரிட்டது. அப்பொழுது சையத் அப்துல்லா கான் என்பார் பீஜப்பூரின் சுபேதாராக இருந்தார். இவருடைய படைகள் ராய்கரை நோக்கி வருவதை யறிந்த ராஜாராம் யோகி போன்று மாறுவேடமிட்டுத் தெற்கே ஷிமோகா மாவட்டத்திலிருக்கும் பெட்னூர்க் கோட்டைக்குத் தப்பி ஓடிப் பிறகு ராமசந்திர நீலகண்டர் என்னும் அமைச்சரின் ஆலோசனையின் பேரில், செஞ்சிக் கோட்டைக்கு ஓடினர். இதற்கிடையில் முகலாயப் படைகள் 1689ஆம் ஆண்டில் ராய்கரைக் கைப்பற்றின. அக் கோட்டையிலிருந்து சாம்பாஜியின், ராஜாராமின் மனைவியர்கள், சாம்பாஜியின் 7 வயது நிறைந்த சிறுவன் ஷாஹு ஆகியோர் கைது செய்யப்பட்டனர். பெண்கள் அனைவரும் மரியாதையுடனும் இங்கிதமாகவும் நடத்தப்பட்டனர். இளவரசர் ஷாஹு 7000 அந்தஸ்து மன்சப்தார்ப் பதவி உயர்வு அளிக்கப்பட்டு, நாம் முன்பு கூறியவாறு, ஔரங்கசீபின் ஒரு மகளாலேயே வளர்த்துவரப்பட்டார்.

**ஔரங்கசீப்-டாக்டர் கேரேரி சந்திப்பு :** 1688-89ஆம் ஆண்டுகளில் ராய்ச்சூர், அதோனி, சீரா, பெங்களூர், தெற்கே தமிழகத்தில் வந்தவாசி, காஞ்சீபுரம், மஹாராட்டிராவில் பெல்காம், ராய்கர் ஆகிய பகுதிகள் எல்லாம் ஔரங்கசீபின் ஆணைகளுக்கும் ஆட்சிக்கும் உட்பட்டிருந்தன. ஆயினும், ராஜாராம் பேரரசருக்கு அடங்கி நடந்ததாகத் தோன்றவில்லை. இராஜபுதனத்தை விட்டுப் புறப்பட்ட பேரரசர் ஔரங்காபாத் நகரை 1682ஆம் ஆண்டு மார்ச் 22-23ஆம் தேதி அடைந்திருந்தார். அடுத்த

ஆண்டில் அவர் அஹமதுநகருக்குச் சென்றார்; 1682ஆம் ஆண்டில் ஷோலாப்பூரை அடைந்தார். இதற்கு அடுத்த ஆண்டில் முற்றுகைக்காகப் பீஜப்பூர் சென்றார். இதைத் தொடர்ந்து குல்பர்கா, பீடார், கோல்கொண்டா ஆகிய நகர் களுக்கும் விஜயம் செய்து, படைகளுடன் அவ்வப்போது பீமா நதியைக் கடந்து பூனா வந்தடைந்தார். 1690ஆம் ஆண்டு கல்கலா என்னுமிடத்தில் (Galgala) பாளையம் இறங்கியிருந் தார். இங்குத் தான் 1695ஆம் ஆண்டில் ஔரங்கசீபை டாக்டர் காமில்லி கேரேரி (Dr. Gemelli Gareri) சந்தித்தார். ஔரங்கசீப் தம்முடைய 80ஆவது வயதிலும் சுறுசுறுப்புடனும், திறமையுடனும் செயலாற்றி வருவதையும், மூக்குக் கண்ணாடி இல்லாமலே தஸ்தாவேஜுகளில் கையெழுத்திட்டு வருவதை யும் பார்த்து டாக்டர் கேரேரி வியந்து விட்டார். கல்கலா முகாம் சுமார் 30 மைல் சுற்றளவில் அமைந்திருந்ததாகவும், கூடாரங் களே 3 மைல் அளவில் அமைந்திருந்தனவாகவும், அம் முகாமி லேயே 250 அங்காடிகள் இருந்தனவாகவும் டாக்டர் கேரேரி குறிப்பிட்டுள்ளார். 1695ஆம் ஆண்டு மார்ச் மாதம் 21ஆம் தேதி காலை 10 மணிக்குப் பேரரசர் ஔரங்கசீப் தமக்குப் பேட்டி அளித்ததாக டாக்டர் கேரேரி குறிப்பிட்டுள்ளார். 1695-ல் இருந்து 1699 வரை நான்கு ஆண்டுகள் பீஜப்பூருக்கு அருகில் இருக்கும் பிரமபுரியில் பேரரசர் தங்கியிருந்தார். இங் கிருந்தபடியே மராத்தியர்கள் தொடுத்த போரில், அவர் தளபதி களுக்கும் படைகளுக்கும் உத்தரவு அளித்தவண்ணமாக இருந்தார்.

ஆனால், ராஜாராம் ராய்கரை விட்டுச் செஞ்சிக் கோட் டைக்குச் சென்ற பின்னர், ஔரங்கசீப் எதிர்பார்த்ததற்கு மாறாக, அவருடைய இக்கட்டுகள் பன்மடங்காகப் பெருகின. ஏனெனில், சாம்பாஜி அல்லது ராஜாராம் என்ற ஒரு தலை வருக்கு மாறாக, ஒவ்வொரு மராத்திய போர்வீரனும் தலைவ ரின்றியே குழப்பத்தை உருவாக்கிவிட்டுப் பேரரசுக்குத் தொல்லை களை அளித்து வந்தான். இச் சூழ்நிலையைப் பேராசிரியர் சர்க்கார் 'மக்களின் போர்' (Peoples' War) என்று வர்ணிக் கின்றார். அதுமட்டுமன்றிப் பேரரசின் படைகளால், சுற்றிச் சூழ்ந்துள்ள மராத்திய படைகளை எதிர்த்துத் தாக்கி வெற்றி பெற முடியவில்லை.

**முகலாயர்களின் இடர்ப்பாடுகள் :** 1690ஆம் ஆண்டில் ருஸ்தும் கான் என்னும் தளபதியை மராத்தியர்கள் கைது செய்து, அவருடைய பொருள்களைக் கொள்ளை யடித்தனர்.

ஆனால், பேரரசரோ இஃது ஒரு மிக எளிய இராணுவ நடவடிக்கை எனத் தவருகக் கருதி, இதனைத் தடுக்கவேண்டிய முயற்சிகளை எடுத்துக்கொள்ளத் தவறிவிட்டார். 1692ஆம் ஆண்டில் மீண்டும் ஒருமுறை மராத்தியர்கள் இரு முகலாயத் தளபதிகளைக் கைது செய்தனர். அந் நேரத்தில் கிழக்குக் கர்நாடகப் பகுதிக்கும் பேரரசு தளபதிகளை அனுப்பவேண்டியிருந்தது. ஆனால், மராத்திய தளபதிகளான சாந்தாஜி கோர்பட், தானுஜி ஜாதேவ், ஹனுமந்த் ராவ் ஆகியோர் எங்கெங்கும் சுற்றிவந்து, படையெடுப்புகளை நிகழ்த்தி, முகலாயப் படையினரைக் கொள்ளை யடித்து, ஔரங்கசீபுக்குத் தொல்லைகளை அளித்து வந்தனர். தெற்கே கர்நாடகத்திலும், தக்காணத்தில் பீஜப்பூரிலிருந்து பீடார் வரையிலும், ராய்ச்சூரிலிருந்து மால்காட் வரையிலும் பிடியா நாயக் என்னும் மராத்தியத் தளபதியும் தம்மால் இயன்றவரை பேரரசின் படைகளை ஆங்காங்கே முறியடித்து வந்தார். எனவே, ஔரங்கசீப் தக்காணத்தில் இருக்கையில் அவருடைய படைகளை மராத்தியர்கள் தேனீக்கள் போல் மொய்த்துக் கொண்டனர். இதனுல் முகலாயர்களால் ஒவ்வொரு முக்கிய நகருக்கும் பாதுகாப்பு அளிக்க முடியவில்லை. 1695-லிருந்து 1699 வரை ஔரங்கசீபுக்கு மராத்தியர்களால் தலைவலி வளர்ந்து கொண்டே வந்தது. இது போதாதென்று, 1692ஆம் ஆண்டில் ஔரங்கசீபின் இளைய மகனுன காம் பக்ஷ் எதிரிகளுடன் பேச்சுவார்த்தைகளில் ஈடுபட்டு, மராத்தியர்களுக்கு விட்டுக் கொடுக்கவும் காத்திருந்தான். எனவே, ஔரங்கசீப் இதைக் கண்டு பொல்லாக் கோபம் கொண்டு மனம் உடைந்தார்; தம் மகன் எனவும் பாராது காம் பக்ஷையும் கைது செய்தார்.

**17ஆம் நூற்றுண்டின் இறுதி :** மராத்திய மண்டலத்தில் 1699ஆம் ஆண்டிலிருந்து 1705ஆம் ஆண்டு வரையிலான 6 ஆண்டுகளுக்கு நேரில் முற்றுகை இடவும், இடங்களை வெற்றி கொள்ளவும் வேண்டி ஔரங்கசீப் தாமே தலைமைப் பொறுப்பை ஏற்று நடத்தினுர். பேரரசர் ஔரங்கசீப் இதற்கு முன்பு பலரை நம்பி மோசம் போனுர். ஜெய் சிங் மட்டுமே அவருடைய நம்பிக்கையை நாசப்படுத்தவில்லை. ஔரங்கசீபிற்கு ஜஸ்வந்த் சிங் துரோகம் செய்தார். மைந்தரான முஅஜ்ஜமே கூட மராத்தியர்களுடன் இரகசியத் தொடர்பு வைத்துக்கொண்டு தந்தைக்குத் துரோகம் இழைத்தார். பஹாத்துர் கான் சிவாஜியிடம் லஞ்சம் வாங்கிப் பேரரசருக்குத் துரோகம் இழைத்தார். இளவரசன் அக்பர் சாம்பாஜியையும் இராஜபுத்திரர்களையும் நம்பித் தந்தை ஔரங்கசீபிற்குத் துரோகம் செய்தான். அண்மையில்

காம் பக்ஷும் துரோகச் செயலில் ஈடுபடலானான். எனவே, பேரரசர் எவரையும் நம்பிப் பயனில்லை என்ற முடிவுக்கு வந்து, தாமே சேனைக்குத் தலைமைப் பொறுப்பை ஏற்றார்.

ஔரங்கசீப் ஒரு கோட்டையைப் பிடித்து, மற்றொன்றைக் கோட்டை விட்டு வந்தார் என்று சர்க்கார் கூறினாலும், பேரரசர் சற்றேறக்குறையப் பத்து ஆண்டுகளுக்குக் காட்டிய பொறுமையும் சகிப்புத்தன்மையும் எவர் மனத்தையும் கலங்கிடச்செய்வனவாகும். கொரில்லாப் போர் முறையில் நம்பிக்கையுள்ள மராத்தியர்கள் நேர் நின்று போர்க்களத்தில் வீரத்தைக் காட்டுவதில் நம்பிக்கையில்லாதவர்கள். கூட்டம் கூட்டமாக எதிரிப் படைகளைத் தாக்கிக் கொள்ளை அடிப்பது, பிறகு சிதறிச் செல்வது, மீண்டும் எதிர்பாராத விதத்தில் கொள்ளைகளில் ஈடுபடுவது ஆகிய அனைத்தும், (முன்பே இருந்த) முகலாயர்களின் தொல்லைகளைப் பன்மடங்காக ஆக்கின. தளபதி ராய் பந்தேலாவின் கீழ்ப் பணிபுரிந்து வந்த வரலாற்று அறிஞர், குறிப்பாளர் பீம்சென் (Bhim Sen) என்பாரும் தம் 'தில்குஷா' என்னும் நூலில் மராத்தியர்கள் கொள்ளை யடிப்பதிலும், அழிவு வேலைகளிலும் ஈடுபட்டு வந்ததையும், ஔரங்கசீபின் வெற்றி பெற இயலாத போர் முறைகளைப்பற்றியும் குறைகூறி யுள்ளார். 'அவருடைய எஞ்சி யிருந்த வாழ்நாள்கள் அதே பழைய பரிதாபகரமான கதையாக முடிந்தன. பெருத்த செலவு, நேரம், உழைப்பு ஆகியவற்றுக்குப் பிறகு கைப்பற்றப்பட்ட கோட்டைகளைச் சில மாதங்களுக்குப் பிறகு மராத்தியர்கள் பிடித்துக் கொள்வர். எனவே, மீண்டும் இவற்றைப் பிடிக்க முற்றுகை தோன்றும். அவருடைய வீரர்களும் பின்செல்வோரும் கரை காணாத வெள்ளம் பெருகியோடும் நதிகளையும், புதைமணல் அடர்ந்த பாதைகளையும், கரடுமுரடான மலைப்பாதைகளையும் கடந்து சேனையுடன் செல்லும்போது எண்ணற்ற துன்பங்களை அனுபவித்தார்கள். திடீரென்று சுமை தூக்குபவர்கள் காணப் படமாட்டார்கள். பொருள்களைச் சுமந்து செல்லும் மிருகங்கள் களைப்பாலும் பசியாலும் வாடி மடிந்தன. எப்பொழுதும் போலவே அவர் முகாம்களில் பொருள் தட்டுப்பாடு இருந்து வந்தது. அவருடைய வீரர்கள் போரினால் களைப்புற்று வந்தனர். வடஇந்தியாவிற்குத் திரும்பிச் சென்றுவிடலாமே என்று எவராவது யோசனை கூறினால், அவரைக் கோழை எனவும் சோம்பேறி என்வும் ஔரங்கசீப் திட்டிக் கடிந்து கொள்ளுவார்' என்கிறார் காஃபீ கான்.

## ஔரங்கசீபின் 'தீபகற்பப் போர்'

ஔரங்கசீபின் மராத்தியப் போர்களை நெப்போலியன் (ஸ்பெயின்) தீபகற்பப் போரில் கலந்து கொண்ட சூழ்நிலையுடன் பேராசிரியர் சர்க்கார் ஒப்பிடுகின்றார். அவர், 'முகலாய தளகர்த்தர்களிடையே நிலவிய பரஸ்பரப் பொறாமை உணர்ச்சிகள், நெப்போலியனின் தளகர்த்தர்களிடையே நிலவிய பொறாமைகள் தீபகற்பப் போரில் பிரெஞ்சுக்காரர்களின் நலன்களை அழித்தது போன்று, இங்கும் அழித்தன' என்கிறார்.[1] ஆக, ஔரங்கசீப் ஆறாண்டு காலத்தில் (1) சாதரா, (2) பார்லி, (3) பன்ஹலா, (4) கேள்நா, (5) கொந்தணா, (6) இராய்கர், (7) தோர்ணா, (8) வஜின்ஜேரா (Wajingera) ஆகிய எட்டுக் கோட்டைகளையும் பகுதிகளையும் கைப்பற்றி, மராத்தியர்களை அடக்கி ஒடுக்கிப் பணியவைக்கும் முயற்சியில் ஈடுபடலானார்.

இராஜாராம் பதவி ஏற்றதிலிருந்து மராத்திய மண்டலத்தின் வெற்றி தோல்விகளையும், இராஜாராமின் ஆட்சி நலன்களையும் இங்குச் சற்று உற்றுநோக்குவோம்.

1689-ல் நீலகண்ட பின்லே என்பார் பேஷ்வாவாக இருந்தார். இராமச்சந்திர நீலகண்டர் அமத்தியர். இவர்தாம் இராஜாராமைச் செஞ்சிக் கோட்டையில் பதுங்கி யிருக்குமாறு ஆலோசனை கூறியவர். நீலாஜி என்பார் பிரதம நீதிபதி.

முன்பு திலேர் கான் சிறந்த தளகர்த்தராகப் பணியாற்றியது போலப் பின்பு ஔரங்கசீபிற்கு ஜுல்ஃபிகர் கான் (Zulfikar Khan) என்னும் சிறந்த தளபதியின் தளராத தொண்டு கிடைத்தது. 1689ஆம் ஆண்டு நவம்பர் மாதம் முதல் தேதி இராஜாராம் பேஷ்வா நீலகண்டருடன் செஞ்சிக் கோட்டைக்கு வந்தார். இதற்கிடையில் ஔரங்கசீபின் கரத்திடை வடக்கே பல கோட்டைகள் விழுந்தன. அவை (1) சால்ஹீர், (2) திரும்பக், (3) சிங்கர், (4) இராஜ்கர், (5) இராய்கர், (6) பன்ஹலா ஆகியவையாகும். 1699-ல் ருஸ்தம் கான் சாதராப் பகுதியில் சுழன்று சுழன்று சாந்தாஜி, தானாஜி ஆகியோரை எதிர்த்துப் போரிட்டபோது உயிர் நீத்தார். இதனைத் தொடர்ந்து பேரரசரே சாதராவுக்கு அருகில் பாளையம் இறங்கினார். அப்போது பேரரசரின் முகாமைக் கொள்ளையடிக்கச் சென்ற

[1] 'Peninsular War of Napoleon'—A Short History & History Vol. V.

சாந்தாஜி கோர்பட் வெற்றியின்றித் திரும்ப நேரிட்டது. சாதராவில் பேரரசர் இருப்பதைக் கண்ட மராத்தியர்கள் தெற்கே பெல்காம், கார்வார் நோக்கிப் படையெடுத்துத் தொல்லைகளை விளைத்து வந்தனர். இனி, அடுத்துத் தமிழகத்தைப் பார்ப்போம்.

## கர்நாடகம் அல்லது தமிழ்நாடு

கர்நாடகத்தைப் பொறுத்தவரை கிழக்குக் கர்நாடகம் என்றும், மேற்குக் கர்நாடகம் என்றும் அல்லது ஹைதராபாத் கர்நாடகம், பீஜப்பூர் கர்நாடகம் என்றும் இரு பிரிவுகளாகப் பிரித்து இருந்தனர். ஹைதராபாத் கர்நாடகத்தில் கடப்பா, மேற்கே பெங்களூர், மைசூர் ஆகிய பகுதிகள் அடங்கி யிருந்தன. பீஜப்பூர் கர்நாடகத்தில் பெங்களூரிலிருந்து கிழக்குப் பகுதிகளும், வடக்கே சதுரங்கப்பட்டணத்திலிருந்து தெற்கே தஞ்சாவூர் வரை உள்ள பகுதிகளும் சேர்ந்து இருந்தன. ஆனால், தமிழகத்தில் தஞ்சை வரைக்கும் அதற்குத் தெற்கிலுள்ள பகுதிகளிலும், வேலூர், செஞ்சிப் பகுதிகளிலும் பாளையக்காரர்களும் நாயக்கர்களும் ஆட்சியில் இருந்த போதிலும், பீஜப்பூருக்கு அவர்கள் உட்பட்டு இருந்தனர். சிவாஜியின் கர்நாடகப் படையெடுப்பு அமைதி நிரம்பிய தமிழகத்தின் அரசியல் நிலையை மாற்றியமைத்தது.

ஆனால், ஔரங்கசீப் கோல்கொண்டாவையும் பீஜப்பூரையும் இணைத்துக் கொண்டபோது இப் பகுதிகளுக்குப் புதிய தளகர்த்தர்களையும் ஆளுநர்களையும் நியமிக்கவேண்டிய பொறுப்பு ஏற்பட்டது. முஹம்மது இப்ருஹீம், முஹம்மது அலீபேக் ஆகியோர் செங்கற்பட்டு, காஞ்சீபுரம், (சென்னை) பூந்தமல்லி ஆகிய பகுதிகளுக்கு இராணுவ நிர்வாகிகளாக நியமிக்கப்பட்டனர். இவ் விருவருக்கும் மேலாக ரூஹுல்லா கானைப் பேரரசர் மேற்பார்வையிட நியமித்திருந்தார். ஹீராஜி அனுப்பிய மராத்தியப் படைகள் ஆர்க்காட்டை முற்றுகையிடவே காஞ்சீபுரத்தில் வாழ்ந்து வந்த பிராமணர்கள் மராத்தியர்களின் கொள்ளைக்கு அஞ்சி, வடக்கே சென்னைக்கு ஓடினார்கள். இந்நிலையை அறிந்த பேரரசர் இஸ்மாயீல் கான், யாகப்ப நாயக்கர், முஹம்மத் சாதிக் ஆகியோரைக் கர்நாடகத்திற்கு விரைந்து சென்று காஞ்சீபுரத்தைக் காக்குமாறு செய்தார். இவர்களின் படைகள் மராத்தியர்களை விரட்டி யடித்து, வந்தவாசியையும், சேத்துப்பட்டையும் கைப்பற்றின. கிழக்குப் பகுதிகளில் கடல் மூலமாகப் பொருள்களை இறக்குமதி செய்துவந்த சில ஆங்கி

லேயருக்கு மராத்திய-முகலாயப் போர்களினல் பொருள்கள் வருவது தடைப்பட்டன.

**செஞ்சி, பரங்கிப்பேட்டை :**

இராஜாராம் செஞ்சிக் கோட்டையை அடைந்ததும் அமைதியான ஆட்சி ஒன்றை ஏற்படுத்த முயன்று, பிரஹலாத நிராஜி என்பவரைப் பிரதிநிதியாக நியமித்தார். அரசப் பிரதி நிதியான நிராஜி, இராஜாராமை அபினி போன்ற லாகிரிப் பொருள்களை உபயோகிக்கச் செய்து மயங்கி இருக்கச் செய்து, அரச அதிகாரங்களைத் தாமே பறித்துக்கொண்டு விட்டார்.

இதற்கிடையில் டச்சு, பிரெஞ்சு, ஆங்கிலக் கம்பெனிகள் ஒவ்வொன்றும் இராஜாராமின் அமைச்சருடன் தொடர்பு கொண்டு, தத்தம் வியாபார நலன்களை வளர்த்துக்கொள்ள முயன்றன. மேலும், பேரரசர் அனுப்பிய தளபதிகளும் சூழ் நிலையை அறிந்து, இராஜாராமுடன் இரகசியத் தொடர்புகளை வைத்துக்கொள்ள முயன்றனர். எனவே, மீண்டும் ஒருமுறை ஜுல்ஃபிகார் கானைச் செஞ்சி நோக்கிப் பேரரசர் அனுப்பிவைத் தார். அப் படைகள் வருவதைக் கண்டு அஞ்சிய இராஜாராம் தெற்கே தஞ்சை நோக்கி ஓட்டமெடுத்தார். இராஜாராமும் தம் சகோதரர் சாம்பாஜியைப் போன்றே கோழையாக நடுங்கி, சிவாஜியின் வீரத்திற்கு இழுக்கை ஏற்படுத்தினர். இராஜாராம் தப்பி ஓடியதையும் மராத்தியப் படைகள் மேலும் தெற்கே நகர் வதையும் கண்ட மக்கள் மேலும் தெற்குப் பகுதிகளுக்கோ அல் லது புதுவை, கடலூர், காரைப் பகுதிகளுக்கோ ஓடிச்சென்று, பிரெஞ்சு, டச்சுக் கம்பெனிகளின் கோட்டைகளில் புகலிடம் தேடினர்.

**ஜுல்ஃபிகார் கானும் தள்பத்ராயும்:** செஞ்சிக்கோட்டை மூன்று குன்றுகளிடையே அமைந்துள்ளது. இம் மூன்று குன்றுகளையும் இராஜகிரி, கிருஷ்ணகிரி, சந்திர அந்தர்கூ என்று வழங்குவர். இக் கோட்டைகளைச் சுற்றியுள்ள அகழியின் அகலம் 80 அடி; கோட்டைச் சுவர்களின் கனம் 60 அடி. மூன்று கோட்டைகளுக் கும் மூன்று வாயில்கள் உள்ளன. அவை ஆர்க்காடு அல்லது வேலூர் வாயில், புதுவை வாயில், இராஜகிரி வாயில் என்பன வாகும். இந்தக் கோட்டையைத் தாக்க ஜுல்ஃபிகார் கான் 1690ஆம் ஆண்டில் அங்கு வந்தார். ஆனல், அவர் 1690-91ஆம் ஆண்டுகளில் நேரடியாகக் கோட்டையைத் தாக்கி வெற்றி பெருமல், தெற்கு நோக்கிச் செல்லலானர். பின்பு,

1692-ல்தான் செஞ்சியை அவர் முற்றுகையிடத் தொடங்கினர். ஜுல்ஃபிகாரின் படைகளை முறியடிக்க இராஜாராமின் முகவரின் படைகள் காஞ்சீபுரம் எல்லையில் திடீரெனப் புகுந்தன. காவிரிப் பாக்கத்தில் சாந்தாஜி அலீமர்தான் கானை எதிர்பாராத முறையில் கைது செய்தார். ஜுல்ஃபிகார் தம்மைச் சூழ மராத்தியப் படைகள் பெருகி இருப்பதைக் கண்டார். முகலாயர்களின் படைகளைச் செஞ்சிக்கு வெளியிலேயே மராத்தியர்கள் தடுத்து நிறுத்தியிருந்தது ஒருபுறம் இருக்க, முகலாயர்களுக்குச் செஞ்சிக்கு அருகில் இருந்து ஆணைகளைப் பிறப்பித்து வந்த காம்பக்ஷுடன் பேச்சு வார்த்தைகளை நடத்திக்கொண்டும் வந்தனர். இதற்கிடையில், ஔரங்கசீப் இறந்து விட்டார் என்றொரு பொய் வதந்தியும் பரவிற்று. ஜுல்ஃபிகார் கான் தம் படைகளை வந்தவாசிக்கு அருகில் மீட்டுக் கொண்டு நகர்ந்தார். செஞ்சிக்கும் வந்தவாசிக்கும் இடையே உள்ள தூரம் சுமார் 40 கி. மீ. அவ்வாறு முகலாயர்கள் வந்தவாசிக்கு நகர்ந்து செல்வதையும் இருபது ஆயிரம் மராத்திய வீரர்கள் தடுத்து நிறுத்தினர். ஔரங்கசீபின் இந்துத் தளபதியாகிய தள்பத்ராயும் அவரது பந்தேலாப் படைகளும் ஜுல்ஃபிகாருக்குத் தக்க தருணத்தில் உதவிபுரியக் காத்துநின்றன. இதற்கிடையில், அசாலத் கானும் இராஜாராமுடன் இரகசியத் தொடர்புகளை வளர்த்து வரலானர். இறுதியாகப் பத்து நாள்களுக்குப் பிறகு பெரும் படைகள் வந்தவாசியையும் செஞ்சியையும் நோக்கி வந்த பின்னர்த்தான் ஜுல்ஃபிகாருக்குப் பாதி வெற்றி கிட்டியது. 1695ஆம் ஆண்டு வரை வடக்கே சென்னையிலிருந்து தெற்கே பறங்கிப்பேட்டை வரை மூன்று அரசுகளின் ஆதிக்கம் தமிழகத்தில் நிலவி வந்தது: (1) விஜயநகரப் பேரரசின் நாயக்கர்கள், (2) முன்னாள் பீஜப்பூர், கோல்கொண்டாவின் பிரதிநிதிகள், (3) இவ்வரசுகளை இணைத்துக்கொண்ட ஔரங்கசீபின் ஆதிக்கம். தஞ்சையில் வெங்காஜியின் ஆட்சி நீடித்து வந்ததனல், வடக்கே செஞ்சியிலும் மராத்தியர்கள் இம்மூன்று அரசுகளுக்கும் போட்டியாக முளைத்தனர்.

செஞ்சியில் முழுமையான வெற்றியைக் காணமுடியாமையால் ஜுல்ஃபிகார் கான் 1694-ல் தென்னார்க்காடு மாவட்டத்தை வெற்றி கொள்ள முனைந்தபோது, புதுவைக்கு அருகிலுள்ள பெரும்முக்கள் என்னும் இடத்தைத் தள்பத்ராய் கைப்பற்றிப் பேரரசுடன் இணைத்துக்கொண்டார். ஜுல்ஃபிகார் கடலூரிலும் மற்றும் அவ் வட்டாரங்களிலுமிருந்த பல கோட்டைகளைப் பிடித்துக்கொண்டார். தெற்கே திருச்சி வரை சென்ற ஜுல்ஃபிகாரின் படைகள் வந்தவாசிக்குத் திரும்பி, இறுதியாக

1696ஆம் ஆண்டில் தானுஜீ ஜாதேவ் வடக்கே வேலூருக்குச் சென்றுகொண்டிருந்த போது செஞ்சியை முற்றுகையிட்டுக் கைப்பற்றிக் கொண்டன. இதற்கிடையில் பெங்களூரிலிருந்தும் முகலாயப் படைகள் உதவியை நாடிச் செஞ்சிக்கு ஓடிவரவே, மராத்தியர்கள் ஜுல்ஃபிகாரின் படையினர் வசம் செஞ்சிக் கோட்டையை விட்டுக்கொடுக்க நேரிட்டது. அக் கோட்டை வீழ்ந்ததும், இராஜாராம் 1698ஆம் ஆண்டில் மகாராஷ்டிரத்திற்கு மீண்டும் திரும்பினுர். இரண்டு ஆண்டுகள் வரை அவர் ஔரங்கசீபிற்கு எதிராக மராத்திய மண்டலத்தைப் பாதுகாத்து வந்தார். இறுதியாக, மார்ச்சு 2, 1700ஆம் ஆண்டில் அவர் இறந்தார்.

ஆக மொத்தத்தில், ஔரங்கசீப் மராத்திய மண்டலத்தில் பற்பல கோட்டைகளைப் பிடித்துக்கொண்ட பின், தம் இறுதி நாள்கள் நெருங்கி வருவதை உணர்ந்தார்.

# 23. ஔரங்கசீபின் இறுதி நாள்கள்

மராத்தியர்களின் அரசியற் போக்கு முகலாயர்களின் அரசியல் நிலையை வெகுவாகப் பாதித்தது. 1680ஆம் ஆண்டில் சிவாஜி இறக்கவே, சாம்பாஜி ஆட்சிக்கு வந்தார். ஆனால், சாம்பாஜிக்கு எதிர்ப்பு இல்லாமல் இல்லை. சாம்பாஜியின் அரசியல் விவேகக் குறைவு காரணமாக மராத்தியர்களிடையே உட்பகை வளரத் தொடங்கியது. 1689ஆம் ஆண்டில் சாம்பாஜி தோல்வியுறவே, அவருக்கு மரண தண்டனை அளிக்கப்பட்டது. இராஜாராம் (சாம்பாஜியின் தம்பி—சொய்ராபாய் மகன்) தெற்கே செஞ்சிக் கோட்டைக்குத் தப்பிச் சென்று 'பிரதிநிதி (Pratinidi) ஆட்சி'யை ஏற்படுத்தினார். இதிலிருந்துதான் ஔரங்கசீபின் இறுதி நாள்கள் தொடங்கியதாகக் கூறவேண்டும். செஞ்சிக் கோட்டையும் ஜுல்ஃபிகார் கானின் கரத்திடை வீழ்ந்தது. 1699ஆம் ஆண்டிலிருந்து, ஔரங்கசீப் 1707ஆம் ஆண்டில் இறக்கும்வரை அப் பேரரசர் தாமே நேரே மராத்திய மண்டலத்திற்குச் சென்று ஒவ்வொரு கோட்டையாகக் கைப்பற்றி வந்தார்.

1695ஆம் ஆண்டு மே மாதத்தில் மூத்த மகன் ஷாஆலம் (என்னும் முஅஜ்ஜ)மை வடக்கே அனுப்பி வைத்துவிட்டுப் பேரரசர் தக்காணத்திலுள்ள பஹதூர்கர் என்னும் ஊரை வந்தடைந்தார். ஔரங்கசீபுக்குத் துணைநின்ற தளபதிகள் காசிம் கான், ஹிம்மத் கான் என்னும் இருவராவர். 1698-ல் இராஜாராம் சாதராவுக்குத் திரும்பினார். ஔரங்கசீபின் தளபதிகளும் துருப்புகளும் சொல்லொணா இடர்ப்பாடுகளை எதிர்நோக்க வேண்டி இருந்தன: நதிகள் குறுக்கிட்டன; அவற்றில் எப்பொழுதும் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடும்; பாதைகளோ கரடுமுரடானவை; சுற்றி வளைந்து நெளிந்து செல்லும் மலைக் குன்றுகள்; திடீரென்று மராத்தியர்களும் முகலாயர்களின்

பொருள்களை இருக்கும் இடம் தெரியாமல் சூறையாடிக்கொண்டு ஓடிவிடுவார்கள். சுமைகளைச் சுமக்கும் விலங்குகளும், கடுமையாய் உழைத்துக் களைப்பு மிகுதியால் இறந்துபட்டன. பொருள்களின் விலைகள் ஏறிக்கொண்டே சென்றன; அவை கிடைப்பதும் அரிதாகி வந்தது. களைப்பு மிகுதியால் ஔரங்க சீபின் அமீர்களே ஆக்ராவுக்குத் திரும்புமாறு அறிவுரை பகர்ந்து வந்தனர். இதனைக் கேட்டதும் ஔரங்கசீப் சீறி விழுவார்; கோழைகள், சோம்பேறிகள் எனத் திட்டுவார். துருப்பு களிடையேயும், தளபதிகளிடையேயும் பரஸ்பரப் பொறாமைக் குணங்கள் தலைகாட்டி வந்தன. எவ்வாறு நெப்போலியனின் மார்ஷல்களிடையே மூண்ட பரஸ்பரச் சண்டைகள் நெப்போலி யனின் வீழ்ச்சிக்குக் காரணமாக இருந்தனவோ, அவ்வாறே இதுவும் ஔரங்கசீபின் சரிவிற்குக் காரணமாக இருந்தது.[1]

**1689-லிருந்து 1705வரை:** 1689ஆம் ஆண்டிலிருந்து 6 ஆண்டுகளுக்கிடையே (1705க்குள்) ஔரங்கசீப் 8 கோட்டை களைக் கைப்பற்றித் தம்மகத்தே இழக்காமல் வைத்துக்கொண் டார். அப் பேரரசர் அப்பொழுது 81 வயதை அடைந்திருந்தார். தம்முடைய 81ஆம் வயதிலிருந்து 87ஆம் வயது வரையிலான மிகவும் தள்ளாத வயதிலும், ஆற்றல், சுறுசுறுப்பு, வீரம் ஆகிய ஏதொன்றும் அவருக்குக் குறையாமல் இருந்ததோடுமட்டுமன்றி, அவர் வெற்றிகள் பலவற்றைப் பெற்றும் தந்தார் என்பதே விந்தையிலும் விந்தையாகும். தோர்ணக் கோட்டையைப் பிடியா நாயக் என்பவரிடம் ஔரங்கசீப் தாமே முற்றுகை யிட்ட பிறகு அது வீழ்ச்சியுற்றதுபோல், வஜின்ஜேராவும் அவரது நேர்முற்றுகைக்குப் பின்னர்த்தான் விழுந்தது. வஜின்ஜேராவின் வெற்றி சிறந்த வெற்றியாகும். எனினும், மராத்திய மண்டலத்தில் குழப்பம் மூண்டது. இராஜா ராம் இறந்தபின் மராத்திய மண்டலத்தில் (1700க்குப் பிறகு) இராஜாராமின் மனைவி தாராபாய்(Tarabai)சிறந்த பங்கை ஆற்றி ஞள். எனினும், மராத்தியர்கள் மீண்டும் பழையபடி கொள்ளை யடிப்பதில் ஈடுபடலானார்கள். சிநோஞ்ச், மண்டகார், மாளவம், மற்றும் எங்கெங்கெல்லாம் அவர்கள் சென்றார்களோ அங்கங் கெல்லாம் படுகொள்ளை யடித்துச் சென்றார்கள். ஆட்சியின் உச்சி யில் ஆற்றலுடனும் உடல் வலிமையுடனும் இருந்தபொழுதே மராத்தியர்களைக் கட்டுப்படுத்த முடியாத பேரரசரால் தள்ளாத வயதில் அவர்களை எப்படிக் கட்டுப்படுத்த முடியும்? எனி

[1] Prof. S. R. Sharma, Mughal Rule in India. Also Lane-poole, Aurangzeb.

னும், அவர் ஓரளவுக்குச் சில கோட்டைகளைக் கைப்பற்றினர். மராத்தியர்கள் தங்களிடையே பிளவுபட்டுக் கிடந்தாலும், முகலாயர்களே அயராது பேரரசருக்குக் கொடுத்து வந்த தொல்லைகள் இப்பொழுதுதான் இவரைத் தீவிரமாகச் சிந்திக்கச் செய்தன. அதே நேரத்தில் தம் படைத் தளகர்த்தர்கள் பலர் தோல்வி கண்டு வருவதையும் அவரே பார்த்தார். பசியும் பிணியும் ஒரு புறமும், மொத்தத்தில் தோல்விகள் மறுபுறமும் அலைக்கழித்த நேரத்தில் பஞ்சம் தோன்றிற்று; பிளேக் நோயும் பரவ ஆரம்பித்தது. இதனை அறிஞர் காஃபீ கான் சுருங்கக்கூறி விளங்க வைக்கிறார்: 'பலர் இறந்தனர்; கானைகளும் ஒட்டகைகளும் மாண்டு மடிந்தன. பிளேக் நோயும் பரவ ஆரம்பித்தது.' எனவே, 1702ஆம் ஆண்டில் ஓரளவு வெற்றி கிடைத்ததும் ஔரங்கசீப் அஹ்மத் நகருக்குச் சென்றார். 1706ஆம் ஆண்டிலும் மராத்தியர்கள் மீண்டும் தொல்லை கொடுத்து வந்தனர். இச்சூழ்நிலையில் ஔரங்கசீபுக்கு ஆறாத் துயரங்கள் நெடுகப் பெருகி வந்தன. அவருடைய பிள்ளைகளும் உறவினர்களும் ஒவ்வொருவராக மரித்து வந்தனர்.

ஔரங்கசீபின் இறுதிக் கடிதம் (ஆஜமுக்கு): 'இறைவனின் சாந்தியும் சமாதானமும் உன்மீது உண்டாவதாக!

'என்னை முதுமை வந்தடைந்துவிட்டது; பலவீனம் வல்லமை பெற்றதாகி விட்டது. சக்தி என் உறுப்புகளை விட்டோடி விட்டது. நான் தனியாகவே வந்தேன்; தனியாகவே செல்கிறேன். நான் யார் என்றோ, இதுவரை நான் என்ன செய்து கொண்டிருந்தேன் என்றோ எனக்குத் தெரியாது. நோன்பில் கழித்த நேரங்கள் தவிர மற்ற நேரங்கள் எல்லாம் துயரத்தையே விட்டுச் சென்றுள்ளன. நான் நாட்டில் அரசாங்கத்தை நடத்தவில்லை; குடியானவர்களுக்கு நலன்களைச் செய்துவிடவில்லை.

'மதிக்க முடியாத உயிர் வீணே கழிந்துவிட்டது. எஜமான் (இறைவன்) என் வீட்டில் தங்கி இருந்தான். ஆனால், என் இருண்ட கண்கள் அவனது ஜோதியழகைக் கண்டுகொள்ளவில்லை. வாழ்வு நீடிப்பதில்லை; அதிக நாள்கள் வரை அது இருப்பதாகத் தோன்றவில்லை; வருங்காலத்தைப்பற்றி நம்பிக்கையும் இல்லை.

'என் காய்ச்சல் என்னைவிட்டுப் புறப்பட்டு விட்டது. வெறும் தோலையும் உமியையும் விட்டுச் சென்றுள்ளது. பீஜப்பூர் சென்ற காம் பக்ஷ் இங்குத்தான் இருக்கிறான் (வந்துவிட்டான்).

அவனைவிட நீதான் நெருக்கமாக இருக்கிறாய். ஷா ஆலம்தான் வெகு தூரத்தில் உள்ளான். பேரன் முஹம்மத் ஆஜம் (வங்காளம்) இந்துஸ்தானத்திலிருந்து திரும்பிவிட்டான்.

'எல்லாப் போர் வீரர்களும் குழப்பம் அடைந்தவர்களின் உணர்வைப் பெற்றுள்ளார்கள்; என்னைப் போன்று கலக்கமடைந்துள்ளார்கள்; என் எஜமான் புறப்படுவதனால், பாதரசத்தைப் போன்று கதிகலங்கி நிற்கின்றனர்.

'நான் (இவ்வுலகிற்கு) வரும்பொழுது ஒன்றும் கொண்டு வரவில்லை; செல்லும்பொழுது பாபச் சுமைகளைக் கொண்டு செல்கின்றேன்; எனக்கு என்ன தண்டனை கிட்டுமோ எனக்குத் தெரியாது. இறைவனின் அன்பையும் அருளையும்பற்றி எனக்கு நிறைந்த நம்பிக்கை உள்ளது; என்னுடைய ஆன்மா பிரியும் போது எது துணை நிற்கும்! சுழற்காற்று எவ்வாறிருப்பினும் நீரில் என் படகை மிதக்க விடுகிறேன். (பாடல்). அருளாளனும் இறைவன் எல்லா அடிமைகளையும் காப்பாற்றுவான்; ஆயினும், புறக்கண்களின் பார்வையில் என் மகன்களின் கடமை என்னவெனில், இறைவனின் படைப்புகள் எவையும் நீதியின்றிக் கொல்லப்படக்கூடாது.

'என்னுடைய பேரன் பஹதூருக்கு என் ஆசிகள்; பார்க்க வேண்டும் என்ற அவா பூர்த்தியாகவில்லை; இறைவன்தான் நம் அனைவரின் உள்ளங்களையும் அறியக் கூடியவன்.

'விடைபெறுகிறேன்! விடைபெறுகிறேன்! விடைபெறுகிறேன்!'

பிரிட்டிஷ் மியூசியத்தில் 26240 எண்ணிடப்பட்டுப் பாதுகாக்கப்பட்டு வரும் இக் கடிதம் உண்மையில் உள்ளத்தை நெகிழச் செய்யும். 90 ஆண்டுகள் வாழ்ந்த, 50 ஆண்டுகள் ஆட்சிபுரிந்த மாமன்னர் மனமுருகி இறுதி யாத்திரையை நினைத்து எழுதிய வரிகள் எல்லாருடைய மனத்தையும் கலங்கச் செய்யும். இறப்பைக் கண்டு அஞ்சி மனம் மாறியவரின் எழுத்துகள் அல்ல இவை. தாம் கொண்ட கொள்கைகளுக்காக நீதிநெறி வழுவாது அவர் நடந்துகொண்ட மனச்சாட்சியின் தெளிவான உணர்ச்சிகளை வெளிப்படுத்தும் உன்னதச் சொற்களே இவை.

இது போன்றே காம்பக்ஷுக்கும் அவர் தம் கைப்பட ஒரு கடிதத்தை எழுதினார்;

**இறுதிக் கடிதம்** (காம்பக்ஷுக்கு) : 'என் அருமை மகனே! கண்மணியே! நான் ஆட்சியின் உச்சியில் இருக்கும்போதே இறைவனின் சித்தத்திற்கு அடிபணிதல் வேண்டும் என அறிவுரை கூறினேன்; நானே எல்லைக்கும் சக்திக்கும் உரிய அளவில் அதன்படி நடக்க முயற்சித்தேன்; இறைவன் வேறுவிதமாக நாடினான்! யாரும் என்னைக் கேட்கவில்லை. நான் இறக்கும் தறுவாயில் உள்ளேன். யாருக்கும் ஒரு நன்மையும் பயக்காது, நானே பாபங்களின் பலன்களைச் சுமந்து செல்வேன். இவ்வுலகிற்குத் தன்னந்தனியாக வந்த நான் பெரும் சுமைகளுடன் செல்வது விந்தை அல்லவா? நான் எந்தப் பக்கத்தில் பார்வையைத் திருப்பினாலும் இறைவனைத் தவிர வேறு எவரையும் பார்க்க முடிவதில்லை.

'இராணுவத்தைப்பற்றியும் (அரசாங்க அலுவலர்களைப்பற்றியும்) உடன் கூட்டத்தவர்களைப்பற்றியுமான எண்ணங்களே என் கவலைக்குக் காரணமாகும். இறைவன் அவனது மக்களுக்குப் பாதுகாப்பு அளிப்பான்; எனினும், இது முஸ்லிம்களுடைய கடமையும், என் மகன்களுடைய கடமையும் ஆகும். முழுச் சக்தியுடன் இருக்கும்பொழுதே அவர்களைக் காப்பாற்ற என்னால் முடியவில்லை; இப்பொழுது நான் என்னையே பாதுகாத்துக்கொள்ள முடியவில்லையே! என் உறுப்புகள் செயலிழந்து வருகின்றன. அடங்கிவரும் மூச்சு மீண்டும் திரும்பும் என்ற நம்பிக்கை இல்லை. இந் நிலையில் நான் (இறைவனை) வணங்காமல் வேறு என்ன செய்ய இயலும்? உன் தாயார் உதயபூரி மஹல் பேகம் என் காய்ச்சலின்போது உடல்நலனைப் பார்த்துப் பேணி வந்தார். (மறு உலகிற்கு) என்னுடன் வர விரும்புகிறார். நான் உன்னையும் உன் குழந்தைகளையும் இறைவனிடம் ஒப்படைக்கிறேன்.

'உலகின்மீது பற்றுதல் கொண்டவர்கள் ஏமாற்று வித்தைக்காரர்களாவர். (அவர்கள் கோதுமையை மாதிரியாகக் காட்டுவார்கள்; ஆனால் பார்லியை அனுப்பி வைப்பார்கள்.) அவர்களின் மீது அதிக நம்பிக்கை வைக்காதே. சுட்டிக்காட்டல் மூலமே வேலைகள் நடைபெற வேண்டும். தாரா ஷுக்கோ நிலையான நற்பணிகளைச் செய்யவில்லை. எனவேதான், அவர் தோல்வியைக் கண்டார். அவருடைய பரிவாரங்களின் சம்பளங்களை அவர் அதிகரித்தார்; ஆனால், அவர்களிடத்திருந்து மிகக் குறைந்த வேலைகளையே அவரால் பெற முடிந்தது. இதனால்தான் அவர் அதிருப்தி அடைந்தார். உன்னுடைய சம்பளத்திற்குள் உன் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளவும்.

'சொல்ல வேண்டியதைச் சொல்லிவிட்டேன்; உன்னிட மிருந்து விடை பெறுகிறேன்.'[1]

**ஔரங்கசீபும் மார்க்கஸ் அரேலியசும்:** நாம் முன்பே ஔரங்க சீபின் கருத்துகள் சிலவற்றையும் அவரது தத்துவங்களையும் ரோமானிய பேரரசர் மார்க்கஸ் அரேலியஸுடன் ஒப்பிட்டதை மீண்டும் இங்கு நினைவுபடுத்த விரும்புகிறோம். இரு பேரரசர் களிடையேயும் ஓர் ஒற்றுமையைக் காணமுடியும்; அதுதான் தத்துவார்த்த உள்ளம். இறுதிக் கடிதங்களிலும், தள்ளாத வயதிலும் மக்களுக்குத் தாம் ஆற்றவேண்டிய கடமைகள் எல்லாவற்றையும் செய்தும், உழவர்களுக்கும் பொதுவாக மக் களுக்கும் மேலும் பல நலன்களைச் செய்ய முடியவில்லையே என்று ஔரங்கசீப் உள்ளம் ஏங்கியதைப் பார்க்கும்போது, இம் மாதிரி வேறொரு பேரரசர் உதாரணமாக அமைய முடியுமா என்பது சந்தேகமே. ஏன், அவருடைய முப்பாட்டனார்கூட (அக்பர்) இம் மாதிரியான தத்துவக் கருத்தோவியங்களை விட்டுச் செல்ல வில்லை; தம் உள்ளத்தைத் திறந்து காட்டியதில்லை.

**காஃபீ கான் கூற்று:** ஔரங்கசீபின் இறுதி நாள்களைப் பற்றிக் காஃபீ கான் படம்பிடித்துக் காட்டியுள்ளார். (ஆதாரம், எலியட் டௌஸன், VII, பக். 382-87.)

1705-ம் ஆண்டு ஏப்ரல் மாதம் பேரரசர் கடுமையாக நோயுற்றார். அவரது உடல் முழுதும் வலி கண்டிருந்தது. இது எல்லோருக்கும் அச்சத்தை ஏற்படுத்தியது. ஆயினும், அவர் முயன்று பொதுப் பேரவையில் வந்து அமர்ந்தார்; தம் அரச அலுவல்களைப் பார்க்கத் தொடங்கினார். இது அவர் மக்களுக்கு ஓர் ஆறுதலை அளித்தது. எனினும், அவருடைய ஜுரம் அதி கரித்தது; மூர்ச்சையானார். இச் செய்தி மக்களிடையே பரவி 10, 15 நாள்களுக்கு இராணுவமும் முகாமும் ஒரே துக்கத்தில் ஆழ்ந்தன. ஆனால், இறைவனின் அருளால் அவர் சற்றுச் சுக மடைந்தார்; அவ்வப்பொழுது பேரவையில் அமர்ந்து மக்களுக்கு ஆறுதல் அளித்து வந்தார். இராணுவம் எதிரியின் (மராத்தி யர்கள்) நாட்டில் இருந்தது; இந்தப் பேரிடி (பேரரசரின் மரணம்) ஏற்படுமாயின், மலைகளும் கோபமடைந்த நிராகரிப் பாளர்களும் (Kaffirs) உள்ள அந் நாட்டில் ஓர் ஆன்மாகூடத் தப்ப முடியாது.

[1] India Office Library MS letter, No. 1544.

அவர் உடல்நிலை சீர்பெற்றதும் அஹ்மத் நகருக்குப் புறப்பட்டார் (ஜனவரி 20, 1706ஆம் ஆண்டு). இளவரசர் முஹம்மத் ஆஜம் அஹ்மதாபாதில் இருந்தார். இவர் தம் தந்தையின் உடல்நிலையைக் கேள்விப்பட்டதும், அஹ்மதாபாதின் தட்ப வெப்ப நிலை தமக்கு ஒத்துவரவில்லை என்றும், அதனால் தம் தந்தையைப் பார்க்கத் தாம் புறப்பட்டு வருவதற்கு உத்தரவு வழங்கவேண்டும் என்றும் தம் தந்தைக்கு எழுதினார். இது பேரரசருக்கு அதிருப்தியை அளித்தது; இதுபோன்றே தம் தந்தை ஷாஜஹானுக்குத் தாம் முன்பு கடிதம் எழுதியதாகவும், 'ஹவா' என்னும் சொல்லைச் சிலேடையாக்கிக் கிண்டல் செய்தார் என்பதாகவும் தம் மகனுக்கு ஔரங்கசீப் பதில் அளித்தார். ஆனால், மீண்டும் மீண்டும் இளவரசர் மாறுதல் விரும்பி எழுதவே, அவர் மாளவத்திற்கு மாற்றல் செய்யப்பட்டார். ஆனால், இளவரசர் உஜ்ஜயினுக்குச் செல்லாமல், மீண்டும் பேரரசரைப் பார்க்க வருவதற்கு உத்தரவு கேட்டார். இறுதியாக உத்தரவு அளிக்கப்பட்டது. இளவரசர் அம் மாத இறுதியில் (அஹ்மத் நகர் போய்ச்) சேர்ந்தார். அஹ்மதாபாத் சூபா முஹம்மத் இப்ருஹீம் கானுக்குக் கொடுக்கப்பட்டது...இளவரசர் ஆஜம் தந்தையின் பேரவையை வந்தடைந்ததும், தம் துணிவின்மீதும் தைரியத்தின் மீதும் இருந்த நம்பிக்கையும், தாம் இராணுவத்தில் அடைந்திருந்த பெருமையும், அஹ்மதாபாதில் கிடைத்த செல்வ நிதியும் எல்லாம் சேர்ந்து தாமே அரசராக ஆகி, எல்லாச் செல்வத்தையும் அடையவேண்டும் என்னும் அவாவுக்கு இரையானார். ஆஜம் காம் பக்ஷுக்கெதிராகச் சண்டையிடுவதற்கு வேண்டிய நொண்டிச் சாக்கை ஏற்படுத்திக் கொண்டார்...பேரரசர் சற்று உடற் சுகமுற்றார்.

தம் உடல் நிலை குன்றி வருவதை ஔரங்கசீபின் கூர்மையான முன்னறிவு உணர்த்திற்று. தினந்தோறும் ஆஜமின் முஸ்தீப்புகள் பெருகி வந்தன. அவருக்குக் (ஔரங்கசீப்) கட்டப்படாத, அவிழ்த்துவிடப்பட்ட, இரண்டு சிங்கங்களை விட்டுவிட்டால் என்ன ஆகும் என்று தெரியும்.........எனவே, காம்பக்ஷை இராஜ மரியாதைகளுடன் பீஜப்பூருக்கு அனுப்பிவைத்தார்....... ஆஜமை மாளவத்திற்கு அனுப்பிவைத்தார்.........

இரு இளவரசர்களும் புறப்பட்ட பிறகு பேரரசரின் உடல் நிலை மிகவும் மோசமாகிவிட்டது. ஜுரம் கடுமையாயிற்று. கடுஞ்சுரமாக இருந்தும், அவர் தம் ஐங்காலத் தொழுகையை 5, 6 நாள் நீரினால் புறச்சுத்தம் செய்து கொள்ளாமலே நிறைவேற்றி வந்தார்.

இச் சூழ்நிலையில் ஹாமிதுத்தீன் கான் வரைந்த கடிதம் ஒன்றில், பேரரசர் யானை ஒன்றையும் விலைமதிக்க முடியாத வைரக் கல் ஒன்றையும் தர்மமாகக் கொடுக்கவேண்டும் என்று சோதிடர்கள் பரிந்துரைப்பதாகக் குறிப்பிட்டிருந்தார். ஆனால், அதற்குப் பேரரசர் வரைந்த பதிலில், யானையைத் தர்மமாக அளிப்பது இந்துக்களின், உடுக்குலங்களை வணங்குவோர்களின் பழக்கமாகும் என்று எழுதச் சொன்னார். ஆனால், பிரதம காஜிக்கு 4000 ரூபாய் கொடுத்து, அதை ஏழைகளுக்குத் தர்மமாகப் பங்கிடுமாறு கூறினார். அவர் காஜிக்கு எழுதுவித்த அதே கடிதத்தில் 'இந்த மண்ணாலான படைப்பைச் சீக்கிரமே புதைக்கும் இடத்திற்கு எடுத்துச் செல்லுங்கள்; சவப் பெட்டி ஒன்றுமின்றி மண்ணிலேயே சார்த்திவிடுங்கள்' என்று கோரினார்.

ஔரங்கசீப் தமது நாட்டைத் தம் மைந்தர்களிடையே சமமாகப் பிரித்து மரண சாசனம் தம் கைப்பட வரைந்து ஹாமிதுத்தீன் கானிடம் ஒப்படைத்துச் சென்றதாகக் கூறப்படுகிறது.

## முதிர்ச்சியிலும் தளர்ச்சி இல்லை

காஃபீ கானின் கூற்று, ஔரங்கசீப் தமது தள்ளாத 90ஆம் வயதிலும் தளர்ச்சி அடைந்துவிடவில்லை என்பதையே நிரூபிக்கிறது. அவர் தம் மைந்தர்களைக் கண்டு அஞ்சவில்லை. சூபாவின் கவர்னர்களாக இருக்கும் தம் மைந்தர்கள் மக்களுக்கு ஆற்ற வேண்டிய கடமையுடையவர்கள் என்பதை உணர்ந்த அவர், இவ் வுண்மையைப் பிள்ளைகளுக்கும் தாம் இறக்கும் வரையிலும் உணர்த்த விரும்பினார். அதே நேரத்தில் தம் பிள்ளைகளுக்கிடையே மற்றொரு வாரிசுரிமைப் போர் மூளாவாறு தவிர்க்கவே அவர் விரும்பினார். இதனால்தான் தம் பிள்ளைகளுக்குத் தம் பேரரசைப் பிரித்துக் கொடுக்கவும் அவர் திட்டமிட்டார்.[1] தந்தை செய்த குற்றங்களையும் தவறுகளையும் நிச்சயமாக அவர் நன்றாக அறிந்திருந்தார். ஆகவே, தம் தந்தையைப் போன்று தாமும் தம் மூத்த மகன் முஹம்மத் சுல்தான் மீது மட்டும் அன்பைச் சொரிந்து, பிற குழந்தைகளுக்கு அதை மறுத்ததில்லை. காம் பக்ஷ் கடைசிப் பிள்ளையாக இருந்ததால் அவன் மாட்டுச் சற்றுச் செல்லமாக நடந்து கொண்டாரே தவிர, ஷாஜஹான் தாராவிடம் காட்டிய ஒருதலைப்பட்ச அன்புபோல் ஓரவஞ்சனை செய்ததில்லை. அவருடைய இறுதி நாள்கள் மிகவும் கசப்

[1] பேரரசர் ஷாஜஹான் தாம் பெற்ற எல்லாப் பிள்ளைகளையும் சரிசமமாய் நடத்தாதது தவறென்று கண்டித்த ஔரங்கசீப் அதே தவற்றைத் தாமும் இழைக்கமாட்டாரல்லவா?

புடையன என்று கூறமுடியாது. ஏனெனில், அவர் 50 ஆண்டு வரை சளைக்காது, தளராது, நீதி மிக்க ஆட்சி புரிந்துவந்தார். அவருடைய சத்தியத்தையும் நல்ல அன்பு உள்ளத்தையும் அவருடைய குடிமக்கள் புரிந்து கொள்ளாமல், அவர் இஸ்லாம் மதத்தைப் பரப்பி விடுவாரோ என்று அஞ்சித் தப்புக் கணக்குப் போட்டனர். தம் பிள்ளைகளுக்குத் தேவையான பயிற்சியை அவர் அளித்தார். அவர் கண்டுவந்தது அரசியல் தோல்வியே! இதுவே அவருக்குக் கசப்பை வாரி வாரி அளித்தது. எதற்கும் அடங்காத மக்கள் நல்ல உள்ளத்தையும் நீதியையும் தவருக எடைபோட்டு விட்டார்களே எனக் கண்டுதான் அவரது உள் ளம் நெகிழ்ந்தது; தோல்வி ஏற்பட்டு வருவதைக் கண்டு உள்ளம் துயரடைந்தது. ஆனல், எந் நிலையிலும் இறைவனை வணங்க அவர் தவறியதேயில்லை. எனவே, அவர் விரும்பிய வாறே, இறைவன்மாட்டுக் கெஞ்சிக் கேட்டு விண்ணப்பித்த படியே, ஒரு வெள்ளிக்கிழமையன்று காலையில் அவரது உள்ளம் சாந்தி அடைந்து, இறைவனடி சேர்ந்தார்.

**ஔரங்கசீபின் மரண சாசனம்:** ஹாமிதுத்தீன் கானுக்குப் பேரரசர் தாமே எழுதி விட்டுச் சென்ற 'வசிய்யத்' என்னும் உயில் ஒன்று உண்டு. அவரது மற்ருேர் இறுதிச் சாசனமும் இருப்பதாகக் கூறப்படுகிறது. அது இந்திய ஆபீஸ் நூலகத்தி லிருந்து பெறப்பட்டது.[1]

**படுக்கையில் விட்டுச்சென்ற உயில்:** '(வாழ்க்கையில்) ஒன் றும் இயலாதவனுக நான் வந்தேன்; இயலாதவனுகவே திரும் பிச் செல்கின்றேன். என் பிள்ளைகளுள் எவர் அரசராகும் நற்பாக்கியத்தைப் பெற்ருலும், காம் பக்ஷுக்கு ஹைதராபாத், பீஜப்பூர் மாகாணங்கள் அளிக்கப்பட்டன சரியே என்று திருப்தி அடைந்துவிட்டால், காம் பக்ஷைத் தொந்தரவு செய்யக் கூடாது. அசத் கானைவிட எவரொருவரும், யாரும் சிறந்த வஜீராக இருக்கவும் முடியாது; இருக்கவும் இல்லை. தக்காணத் தின் திவான் தியானத் கான் (Diyanath Khan) பேரரசின் வேறு எந்தப் பணியாளர்களையும்விட மிகச் சிறந்தவர். உண்மையான அன்புடன் முஹம்மத் ஆஜம் ஷாவை நான் கெஞ்சிக் கேட்டுக் கொள்வேன். என்னுடைய வாழ்நாளிலே நானே முன்னின்று பேரரசைப் பிரித்துக் கொடுத்துள்ள முறைக்கு அவர் ஒப்புக்

[1] India office library MS No 1344 (f), 49 (b) is said to have been written with his own hand, and left under the pillow of his Death Bed. Another will of Aurangzeb is given in 'Ahkami Alamgiri' ascribed to Hamiduddeen Khan.

கொள்வாரேயானால், இராஜ்யங்களிடையே போர் இருக்காது, மனித குலமும் கொல்லப்படாது. என்னுடைய பரம்பரைப் பணியாள்களை நீக்கிவிடாதீர்கள். அவர்களைத் தொந்தரவும் செய்யாதீர்கள்.

'அரியாசனத்தில் அமருபவர் ஆக்ரா, டெல்லி என்னும் இரு சூபாக்களை எடுத்துக் கொள்ளவேண்டும். இவ் விரண்டையும் யார் பெறுகிறாரோ அவர் பழைய பேரரசின் நான்கு சூபாக்களை—ஆக்ரா, மாளவம், குஜராத், அஜ்மீர் — பெறுவார். மேலும், தக்காணத்தின் நான்கு சூபாக்களும் இதனுள் அடங்கியுள்ளன. இவற்றையும்—காந்தேஷ், பீரார், அவுரங்காபாத், பீடார், அதன் துறைமுகங்களும்—அவரே பெறுவார். பின்னால் குறிப்பிடப்பட்ட பகுதியை எவர் எடுத்துக் கொண்டாலும் அவர் பழைய பேரரசின் 11 சூபாக்களைப் பெறுவார். டெல்லி, பஞ்சாப், காபூல், மூல்தான், தட்டா (சிந்து), காஷ்மீர், வங்காளம், ஒரிஸா, பீஹார், இலாஹாபாத், அவத்.'

**ஹாமிதுத்தீன் கானுக்கு விட்டுச் சென்ற சாசனம் :** 'எல்லாப் புகழும் இறைவனுக்கே! இறைவனுக்குத் திருப்தியை அளிக்கும் அவன் நல்லடியார்களுக்கு நல்லருள் உண்டாவதாக! என் இறுதிச் சாசனத்தை விட்டுச் செல்கிறேன்.

'**முதலாவதாக:** இந்த ஆன்மா இருந்த உடலை எளிய துணியால் போர்த்துங்கள். (நபியின் பேரர்) ஹசன் அவர்கள் தாம் அருள், மன்னிப்பின் வாயிற்படியாவார். இறுதிக் கடன்கள் எவ்வாறு செய்யப்படவேண்டும் என்று இளவரசர் அலிஜாவிடம் (ஆஜமிடம்) கூறப்பட்டு உள்ளது. அதைப் பெற்றுக் கொள்ளவும்.

'**இரண்டாவதாக:** நான் தொப்பி தைத்துச் சேர்த்த பணம் நான்கு ரூபாய் இரண்டு அணு மஹல்தார் அஜ்யா பேக் (Ajya Beg) இடம் உள்ளது. அந்தத் தொகையைப் பெற்று இந்த இயலாத படைப்பின்மீது செலவிடவும். (இறுதி யாத்திரைக்குத் துணி, சவப்பெட்டி போன்றவைமீது செலவிடப்படவேண்டியது.) திருமறை திருக் குர்ஆனை எழுதி விற்றதன் மூலம் 405 ரூபாயைச் சேர்த்து எனது பணப்பையில் வைத்துள்ளேன். நான் இறக்கும் நாளன்று ஏழைகளுக்கும் பகீர்களுக்கும் (Faqirs) தர்மம் கொடுங்கள். குறிப்பாக, ஷீஆக்கள் திருக் குர்ஆனை (அதன் வருமானத்தைப்) புனிதமாகக் கருதுவதனால், அத்

தொகையை என்மீது (இறுதி யாத்திரைமீது) செலவழிக் காதீர்கள்.[1]

'மூன்றாவதாக: தேவையான பொருள்களை இளவரசர் ஆலிஜா (ஆஜம்) இடத்திருந்து பெற்றுக்கொள்ளவும். எல்லா வற்றிற்கும் அவரே பொறுப்பு ஏற்பார். இயலாத இம் மனிதன் எவருக்கும் பொறுப்பாக முடியாது; ஏனெனில், இறந்தவர்கள் வாழ்பவர்களின் தயவில் இருக்கின்றார்கள்.

'நான்காவதாக: இந்த இயலாதவனின் தலையை மூட வேண்டாம்; அது திறந்தவாறே இருக்கட்டும்.

'ஐந்தாவதாக: என்னுடைய சவப்பெட்டியை முரட்டு வெள்ளைத் துணியால் போர்த்துங்கள். (சவக்குழி அல்லது கல்லறை மீதான) மேல்அலங்காரங்களைத் தவிர்க்கவும்; நபிகள் நாயகத்திற்குச் செய்யப்படும் விழாக் கொண்டாட்டங்களை எனக்கு அளிக்காமல் தவிர்க்க வேண்டும்.

'ஆறாவதாக: இந்த இயலாதவனைக் காடுகளிலும் பாலைகளிலும் பின்தொடர்ந்த பணியாள்களை என் வாரிசு அன்புடனே நடத்தவேண்டும். அவர்கள் தவறு செய்தாலும் கூட, அதற்குப் பகரமாக மன்னிப்பையும் அன்பையுமே அவ் வாரிசு காட்டவேண்டும்.

'ஏழாவதாக: பாரசீகர்களைப் போன்று வேறு எந்த இனத்தவர்களும் எழுத்தர்களாக மிளிர்வது முடியாது. முத்தசாதி என்னும் போரிலும் கூட, ஹுமாயூன் காலம் முதற்கொண்டு இன்றுவரை பணியாள்கள் களத்தைவிட்டுப் புறங்காட்டி ஓடியதும் இல்லை; அவர்களின் கால்கள் நடுக்கங்கொண்டு துவண்டு போனதும் இல்லை. மேலும், அவர்கள் இதுவரை ஒரு நாளும் அடிபணியாதவர்களாக இருந்ததுமில்லை; அவர்கள் எஜமானருக்குத் துரோகம் செய்ததுமில்லை.[2]

'எட்டாவதாக: தூரானியர்கள் எப்பொழுதும் போர் வீரர்களாகவே இருந்துள்ளனர். அவர்கள் தாக்குதலிலும், திடீர்த் தாக்குதலிலும், இரவு நேரங்களில் முற்றுகை யிடுவதிலும், எதிரியைத் தடுத்து நிறுத்துவதிலும் வல்லவர்கள். போருக்கு

[1] ஔரங்கசீப் ஷீஆக்களின் எதிரியல்லர் என்பதற்கான சரியான சான்று இது.

[2] இந்தியர்களினும் பாரசிகர்களே தனிசிறந்தவர்கள் என்று ஔரங்கசீப் சிலாகிக்கிறார் இங்கே.

மத்தியிலும் அவர்களைப் பின்வாங்க உத்தரவிட்டால், அவர்கள் வெட்கமோ வேதனையோ அடைவது கிடையாது. இந்துஸ்தானியர்கள் தங்கள் தலைகளையாவது கொடுப்பார்கள்; ஆனால் தங்கள் இடங்களை விட்டு நகரவே மாட்டார்கள். இந்துஸ்தானியர்களிலிருந்து தூரானியர்கள் வெகு தூரமானவர்கள்.

'**ஒன்பதாவதாக:** சையிதுகளை—நபிகள் நாயகத்தின் வழித் தோன்றல்களை மிகவும் கண்ணியமாக நடத்தவேண்டும்.

'**பத்தாவதாக:** கூடியவரை நாட்டை ஆளுபவர் (ஓரிடத்தில் நிலையாய்க் குந்தி) நகராமல் இருக்கக்கூடாது; அவர் ஓர் இடத்தில் கட்டுண்டுபோய்த் தங்குவதைத் தவிர்க்கவேண்டும். இது (ஒரே இடத்தில் முடங்கி இருப்பது) தோற்றத்திற்குப் பாதுகாப்பை அளிப்பதாகத் தோன்றலாம். ஆனால், இது முடிவில் ஆயிரம் பேரிடிகளையும் தொந்தரவுகளையும் கொடுக்கும்.

'**பதினொன்றாவதாக:** பேரரசர் ஷாஜஹான் தாரா ஷுக்கோவை இந்த அளவுக்கு நடத்தி இராவிட்டால், அவரது முடிவும் அத்துணை வருந்தத்தக்கதாக இருந்திருக்காது.

'**பன்னிரண்டாவதாக:** அரசாங்கத்தின் முக்கியத் தூண் நாட்டின் நிலவரங்களைப்பற்றி அறிந்துகொள்ளுதலே ஆகும். ஒரு நிமிடத்தில் அசட்டையாக இருப்பது பல ஆண்டுகளுக்கு இழுக்கைக் கொடுக்கவல்லது.

'இந்தப் பன்னிரண்டு குறிப்புகளுடன் நான் முடித்து விட்டேன்.'

ஔரங்கசீபின் இரு சாசனங்களும் அவரது உள்ளக்கிடக்கையையும், நற்பண்புகளையும், இறுதி யாத்திரையின் நேரத்திலும் மரணத்திற்கு அவர் அஞ்சவில்லை என்பதையும் கண்ணாடி போன்று எடுத்துக் காட்டுகின்றன. ஸ்பெயின் நாட்டுப் பேரரசர் ஐந்தாம் சார்லஸ் இறக்கும் தறுவாயில் இரண்டு கடிகாரங்கள் காண்பிக்கும் நேரத்தைக் காட்டுமாறு கூறினாராம். வெவ்வேறு நேரத்தைக் காட்டிய அக் கடிகாரங்களைப் பார்த்து, இவ்விரண்டு கடிகாரங்களையே சரிவர ஒத்தவாறு இயங்கச் செய்ய இயலாதபோது, தம் மக்கள் யாவரும் ஒரே மாதிரி ஒத்து இருக்கவேண்டுமென்று தாம் விரும்பியதை நினைத்து அவர் வருந்தினாராம். பதினாறும் லூயீ மன்னன் தனது கழுத்தருகே 'கில்லட்டின்' கருவியின் வெட்டுகத்தி நெருங்கியபோது அதைக் கண்டு பயந்து, தான் ஒரு குற்றமும் செய்யவில்லை எனக் கதறினான். ஆனால்,

அவ்வாறே நடந்து வந்தனர். உதாரணமாகக் குஜராத்தின் மனோகர் தாஸ் என்பவர் இராஜா பட்டம் பெறுவதற்காக 50,000 ரூபாய் கொடுத்து அதனைப் பெற்றதாக அறிஞர் சர்க்கார் கூறுகிறார். மற்றுமோர் உதாரணமாக, காபில் கான் (Qabil Khan) என்பார் 12 லட்சம் ரூபாயைச் சற்றேறக் குறைய 5 ஆண்டுகளுக்குள்ளாக லஞ்சம் மூலமாகவே சம்பாதித்ததாகக் கூறப்படுகிறது.

இறுதியாக, பேரரசர் ஔரங்கசீப் தம்மைப் பொறுத்த வரையில் தாம் தூய்மையுடனிருந்து, அறநெறி வழுவாது நடந்து கொண்ட போதிலும், தம் குடிமக்களை அறம் வழுவாது நடக்குமாறு செய்ய முயன்ற வகையில் அவர் கண்டது தோல்வியே!

மன்னர் உயிர்நீத்த 28, துல்கஅதா, 1118 ஹிஜ்ரியாண்டின் தேதி கிறித்து சகாப்தக் கணக்குப்படி மார்ச், 1707 என்று தெரிகிறது. எப்படிக் கணக்கிட்டாலும், இப்புவியிடை 50 ஆண்டும், 27 நாள்களும் ஆட்சி செலுத்திய ஔரங்கசீப் அமைதியுடன் (பிப்ரவரி 21அன்று) கண் துஞ்சினர்.

அவர் விரும்பியவாறு அவரது மரணம் வெள்ளிக்கிழமையன்று காலை 8 மணிக்குத்தான் நிகழ்ந்தது. கைவிரல்கள் ஜெபமாலையை உருட்ட, உதடுகள் கலிமா மந்திரத்தை உச்சரிக்க, மெது மெதுவாய், அமைதியாக அவரது மூச்சு அடங்கிற்று. அவரது சடலம் அவர் தூங்கும் அறையிலேயே வைக்கப்பட்டது. முஹம்மத் ஆஜம் வருவதற்காக எதிர்பார்க்கப்பட்டது. அவர் 25 கோஸ் தூரத்தில் இருந்தார். முஹம்மத் ஆஜம் அடுத்த நாள் (22ஆம் தேதி) வந்து சேர்ந்தார். தௌலத்தாபாதிற்கு அருகேயுள்ள குல்தாபாதிற்கு அச் சடலம் புதைப்பதற்குக் கொண்டு செல்லப்பட்டது. இது ஔரங்காபாதுக்குச் சமீபத்திலேயே உள்ளது. ஷேக் ஜெய்னுத்தீன் என்னும் ஞானப் பெரியாரின் கல்லறைக் கருகிலேயே தம் உடலைப் புதைக்கவேண்டும் என ஔரங்கசீப் விரும்பி இருந்தார். அவ்வாறே அடக்கப்பட்ட புதைகுழி மண்ணுலேயே ஆனது; பளிங்கினுல் அன்று. 50 ஆண்டுகளுக்கு மேலாகப் புகழ் பெற்று நீதி நேர்மையுடன் ஆட்சி புரிந்த சிறந்த பேரரசர் மண்ணறையில் அமைதி கொண்டுள்ளார்.

# 24. ஔரங்கசீப் ஆட்சியில் மக்கள் நிலையும் ஆட்சியின் விளைவுகளும்

ஷாஜஹான் ஆட்சியில் தாஜ்மஹாலும், ஆக்ரா டெல்லி கோட்டைகளும், மசூதிகளும், மயிலாசனமும் இந்திய நாட்டுக் கலைகளின் மேம்பாட்டையும் அழகையும் எடுத்துக் காட்டும் வண்ணப் பளிங்கு மாளிகைகளாக மிளிர்ந்தன. ஆனால், ஔரங்கசீப் ஆட்சியில் இம்மாதிரியான கலைக்கூடமோ, ஓவியக் கூடமோ அமைக்கப்படவில்லை என்பது ஒப்புக்கொள்ளப்பட வேண்டிய ஒரு மாபெரும் குறையே ஆகும். ஆனால், வரலாற்றில் ஒவ்வொரு காலத்தையும் பொற்காலமாக மாற்றிவிட முடியாது. கிரேக்க வரலாற்றில் பெரிக்ளீஸின் காலத்தையும், இங்கிலாந்தில் எலிசபெத்தின் ஆட்சியையும், இந்தியாவில் சோழர்கள், குப்தர்கள் ஆட்சிக் காலத்தையும்தாம் ஒரு சில பொற்காலமாகக் குறிப்பிட முடியுமே யொழிய, ஒவ்வொரு நாட்டிலும் ஆட்சி புரிந்த ஒவ்வொரு வமிசமும் தனது காலத்தைப் பொற்காலமாக உருவாக்கியதுமில்லை; அவ்வாறு செய்தலும் எளிதன்று. ஆகவே, மாபெரும் எதிர்ப்புகளுக்கிடையில் ஐம்பது ஆண்டுகளுக்கு ஔரங்கசீபின் ஆட்சி நீடித்ததே ஒரு பெரும் விந்தைக்குரிய செய்தியாகும். அவரது ஆட்சி நீடிக்க ஔரங்கசீபின் சொந்த நற்குணங்களும் குறிப்பிடத்தக்க சில காரணங்களாகும். எளிமையிலும், நடையுடைகளிலும், விருப்பு வெறுப்புகளிலும் ஆலிவர் கிராம்வெல்லைப் போன்றும், பியூரிட்டானியரைப் போன்றும் இருந்தார் ஔரங்கசீப். குடியானவர்களுக்கு இவர் குறிப்பாக நன்மைகளைச் செய்த போதிலும், இவரது ஆட்சியில் குழப்பமும், ஒழுங்கின்மையும், கொள்ளைகளும் தாண்டவமாடின. ஆக, மக்களின் நிலை அவ்வளவாக உயர்ந்திருக்கவில்லை யென்பதை ஏற்கத்தான் வேண்டும்.

**உள்நாட்டுக் குழப்பம்:** ஔரங்கசீபிற்கு நீதி நேர்மை மனப்பான்மை ஒருபுறமிருந்த போதிலும், பேரரசர் என்ற முறையில் தாம் பிற பகுதிகளை வெற்றி கொள்வதற்கு முன்னர், முன்பே தமக்குட்பட்ட பகுதிகளில் ஒழுங்கு அமைதி ஆகியவை பாதுகாக்கப்பட்டு வருகின்றனவா என்று ஆய்ந்து அவற்றுக்குரிய நடவடிக்கைகளை அவர் மேற்கொண்டிருக்க வேண்டும். இது அவரது சிறப்பான கடமையுமாகும். சிவாஜியின் கொள்கைகளும், பிற மக்களின் கலகங்களும் முகலாயப் பேரரசைச் சீரழித்து வந்தன என்பதனை உணர்ந்து, அவற்றுக்குரிய நடவடிக்கைகளை உடனுக்குடன் எடுத்திருக்க வேண்டுமே யல்லாது மேற்குப்புற மாகாணங்கள்மீது படையெடுப்பதும், மேற்கெல்லைகளைக் காப்பதுமே தமது முதற்கடமையெனக் கருதி, அப் பகுதிகளுக்குப் பெரும் படைகளை நடத்திச் சென்றது மாபெரும் தவருகும்.[1] இதனுல் நாட்டில் அரை நூற்றுண்டிற்குக் குழப்பமும் அமைதியின்மையுமே நிலவின. இவற்றின் விளைவாக, உழவர்களும் வணிகர்களும் அமைதியுடன் கூடிய சுபிட்சமான வாழ்க்கையை அனுபவிக்க முடியவில்லை.

**இடையருப் போர்கள் :** அரசியல் விவேகமிருந்தும், கூர்ந்த அறிவைப் பெற்றிருந்தும், அரசியல் சூழ்நிலையையும், அரசியல் எதிரிகளையும், நண்பர்களையும் ஔரங்கசீப் சரியாக எடைபோடத் தவறிவிட்டார். தந்திரத்தாலோ, போர் உபாயங்களாலோ அவரால் மராத்தியர்களைக் கட்டுப்படுத்த முடியவில்லை. ஆனுல், சிவாஜி இறந்த பின்னர், மராத்தியர்களுக்கெதிராக இடைவிடாத போர்களில் ஈடுபட்டது ஔரங்கசீபின் அரசியல் கூர்மை மழுங்கிவிட்டது என்பதையே எடுத்துக்காட்டுகிறது. மேற்கு எல்லைப்புறங்களிலும் தக்காணத்திலும் ஓயாது போர்களில் ஈடுபட்டது பேரரசுக்கு மட்டும் பெரும் நட்டம் என்று இல்லாமல், பேரரசரின் உடல் நிலையையும் பாதித்தது. ஆள் தொகையைப் பொறுத்த வரை முகலாயப் பேரரசு 1,70,00,000 வீரர்களையும் தளபதிகளையும் இழக்க நேர்ந்தது; பல கோடி ரூபாயையும் இழக்க நேர்ந்தது. இதனுல், மொத்தத்தில் நாடு முழுதும் பஞ்சமே தலைவிரித்துத் தாண்டவமாடிற்று. இதனைப் புதுவையில் பிரெஞ்சுக் கவர்னராகப் பணியாற்றி வந்த ஃபிரான்சிஸ் மார்த்தின் என்பவர் கூட நன்ருக உணர்ந்திருந்தார். அவர் இதைத் தமது குறிப்புகளிலும் சுட்டிக் காட்டியுள்ளார்.

[1] 'The spell of Mughal invincibility was broken by Sivaji and his destructive work was carried to undreamt of heights by his successors' —Sir Jadunath Sarkar, History of Aurangzeb, Vol. V, p. 437.

சாந்தாஜி கோர்பட் வெற்றியின்றித் திரும்ப நேரிட்டது. சாதராவில் பேரரசர் இருப்பதைக் கண்ட மராத்தியர்கள் தெற்கே பெல்காம், கார்வார் நோக்கிப் படையெடுத்துத் தொல்லைகளை விளைத்து வந்தனர். இனி, அடுத்துத் தமிழகத்தைப் பார்ப்போம்.

## கர்நாடகம் அல்லது தமிழ்நாடு

கர்நாடகத்தைப் பொறுத்தவரை கிழக்குக் கர்நாடகம் என்றும், மேற்குக் கர்நாடகம் என்றும் அல்லது ஹைதராபாத் கர்நாடகம், பீஜப்பூர் கர்நாடகம் என்றும் இரு பிரிவுகளாகப் பிரித்து இருந்தனர். ஹைதராபாத் கர்நாடகத்தில் கடப்பா, மேற்கே பெங்களூர், மைசூர் ஆகிய பகுதிகள் அடங்கி யிருந்தன. பீஜப்பூர் கர்நாடகத்தில் பெங்களூரிலிருந்து கிழக்குப் பகுதிகளும், வடக்கே சதுரங்கப்பட்டணத்திலிருந்து தெற்கே தஞ்சாவூர் வரை உள்ள பகுதிகளும் சேர்ந்து இருந்தன. ஆனால், தமிழகத்தில் தஞ்சை வரைக்கும் அதற்குத் தெற்கிலுள்ள பகுதிகளிலும், வேலூர், செஞ்சிப் பகுதிகளிலும் பாளையக்காரர்களும் நாயக்கர்களும் ஆட்சியில் இருந்த போதிலும், பீஜப்பூருக்கு அவர்கள் உட்பட்டு இருந்தனர். சிவாஜியின் கர்நாடகப் படையெடுப்பு அமைதி நிரம்பிய தமிழகத்தின் அரசியல் நிலையை மாற்றியமைத்தது.

ஆனால், ஔரங்கசீப் கோல்கொண்டாவையும் பீஜப்பூரையும் இணைத்துக் கொண்டபோது இப் பகுதிகளுக்குப் புதிய தளகர்த்தர்களையும் ஆளுநர்களையும் நியமிக்கவேண்டிய பொறுப்பு ஏற்பட்டது. முஹம்மது இப்ருஹீம், முஹம்மது அலீபேக் ஆகியோர் செங்கற்பட்டு, காஞ்சீபுரம், (சென்னை) பூந்தமல்லி ஆகிய பகுதிகளுக்கு இராணுவ நிர்வாகிகளாக நியமிக்கப்பட்டனர். இவ் விருவருக்கும் மேலாக ரூஹுல்லா கானைப் பேரரசர் மேற்பார்வையிட நியமித்திருந்தார். ஹீராஜி அனுப்பிய மராத்தியப் படைகள் ஆர்க்காட்டை முற்றுகையிடவே காஞ்சீபுரத்தில் வாழ்ந்து வந்த பிராமணர்கள் மராத்தியர்களின் கொள்ளைக்கு அஞ்சி, வடக்கே சென்னைக்கு ஓடினார்கள். இந் நிலையை அறிந்த பேரரசர் இஸ்மாயீல் கான், யாகப்ப நாயக்கர், முஹம்மத் சாதிக் ஆகியோரைக் கர்நாடகத்திற்கு விரைந்து சென்று காஞ்சீபுரத்தைக் காக்குமாறு செய்தார். இவர்களின் படைகள் மராத்தியர்களை விரட்டி யடித்து, வந்தவாசியையும், சேத்துப்பட்டையும் கைப்பற்றின. கிழக்குப் பகுதிகளில் கடல் மூலமாகப் பொருள்களை இறக்குமதி செய்துவந்த சில ஆங்கி

சிக்கி மூன்று மாதங்களுக்குக் குறையாமல் நேரத்தை வீணுக்க வேண்டி வந்தது. அது மாத்திரமின்றி, நெசவுத் தொழிலும் பாதிக்கப்பட்டதாக அறிஞர் பெர்னியர் கருதுகிருர். இதனுல் நெசவாளர்களால் பண்டகசாலேகளுக்குத் தேவையான ஏற்று மதிக்குரிய துணிமணிகளேக் காலாகாலத்தில் கொண்டுபோய்ச் சேர்ப்பிக்க முடியவில்லே. இது ஒருபுறம் இருக்க, சில ஐரோப் பியர்கள் தாங்களும் வணிகர்களே என்று சொல்லிக் கொண்டு, கொள்ளேகளில் ஈடுபட்டு வந்ததனுல், வெளிநாட்டு, உள்நாட்டு வாணிகமும் பாதிக்கப்பட்டு விட்டது.

**மக்களே ஏமாற்றி வந்த எத்தர்கள்:** நல்லெண்ணம் கொண்டு ஔரங்கசீப் அப்வாப், ராஹ்தாரிக் காணிக்கைகள் ஆகிய வற்றை எல்லாம் நீக்கிவிட்டிருந்தும் கூட, வெவ்வேறு தல அதி காரிகளும் பேரரசின் சிறுசிறு பணியாளர்களும், பேரரசர் அறியாவாறு பற்பல காணிக்கைகளேத் தைரியமாகவே மக் களிடத்திருந்து வசூலித்து வந்தனர். இவை யெல்லாம் கொடுமை என்பதில் எள்ளளவு சந்தேகமுமில்லே. இம்மாதிரி யான காணிக்கைகளே வசூலிப்பதற்கு முக்கியமாக, குறைபாடும் தீங்கும் நிறைந்த மன்சப்தாரி முறையே காரணமாகும், எவ்வா றெனில், பேரரசருடன் இராணுவமே நகர்ந்து செல்லும்போது போர் வீரர்கள் மட்டுமன்றி அமைச்சர்கள், உயர் அதிகாரிகள், பணியாள்கள், தர்வேஷுகள் என்று அழைக்கப்பட்ட துறவியர் ஆகியோர் எல்லாம் பெருங் கூட்டமாக உடன் சென்றனர். அறிஞர் எஸ். ஜே. ஓவன் என்பார் முகலாயப் பேரரசு வீழ்ச்சி அடைவதற்கு இம் மாதிரியான போர் முறைதான் காரணம் என் கிருர். இம் மாதிரி உடன்தொடர்ந்து செல்லும் இராணுவத்தை அறிஞர் சர்க்கார் 'நடமாடும் கூடார நகரம்' (Moving City of Tents) என்று வர்ணிக்கின்ருர். பற்பல பணியாள்களும் பஞ்ச ராக்கள் (Banjaras) என்னும் கூட்டத்தவர்களும், இவர்கள் முகலாய இராணுவத்தினரா அல்லது கொள்ளேக் கூட்டத்தினரா என்று வித்தியாசம் அறிய இயலாதவாறு மக்களிடத்திருந்து கிடைத்ததை எல்லாம் கைப்பற்றி வந்தனர். இவற்றிற்கெல் லாம் மேலாக, நாட்டில் ஆங்காங்கே வாழ்ந்துவந்த ஜாகிர்தார் களும் தங்களின் விருப்பப்படி வரிகளே வசூலித்து வந்தனர்.

**திவாலாகும் நிலே (Bankruptcy):** அறிஞர் ஜாதுநாத் சர்க் கார் ஔரங்கசீபின் இறுதிக்காலத்தில் நாடு திவாலாகும் நிதி நிலே உருவாகி விட்டதாகக் கருதுகின்ருர். எவ்வாறு பிரெஞ்சுப் புரட்சி தோன்றுவதற்கு 14ஆம் லூயியின் ஆட்சி வித்தாக அமைந்ததோ, அவ்வாறே முகலாயப் பேரரசு வீழ்வதற்கு

ஔரங்கசீபின் ஆட்சி வித்தாக அமைந்துவிட்டது என்று சர்க்கார் கூறுகிறார். இவ் விரு பேரரசர்களுக்குமிடையே உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை நாம் முன்பே பார்த்துவிட்டோம். ஆனால், ஔரங்கசீப் அமைதியின் அவசியத்தை உணர்ந்தும், அமைதியை நிலைநாட்ட அவரால் முடியவில்லை என்பதைத் தான் இவ் ஒப்புவமை எண்பிக்கிறது. ஆனால், உண்மையில் ஔரங்கசீப் உளவியலின் அடிப்படை உண்மையை உணரத் தவறிவிட்டார். அது என்னவெனில், போருக்குப் பின் அமைதியும், அமைதிக் காலத்தில் நிரந்தரத் தன்மையும், அதன் பின்னர் விரிவாக்கமும் தொடர்ந்து அடுத்தடுத்து நடைபெற வேண்டும் என்பதை ஔரங்கசீப் உணரவில்லை. ஆகவே, நிற்காமல் நீண்டு நடைபெற்ற போர்கள் காரணமாகச் சேனையின் எண்ணிக்கைப் பலம் அதிகரிக்கப்பட்டு வந்ததே ஒழிய, அது என்றும் குறைக்கப்பட்டதுமில்லை; ஔரங்கசீப் அதற்கு வாய்ப் பளிக்கவுமில்லை. மேலும், மூன்று ஆண்டுகளாகச் சுபேதார், மன்சப்தார் ஆகியோரின் சம்பளங்கள் கொடுக்கப்படாமல் பாக்கி நின்றுவிட்டன. மராத்தியர்களின் தொல்லைகளைச் சமாளிப்பதற்காக வேண்டிப் படைப்பலம் பெருக்கப்பட்டதே யொழிய, அது குறைக்கப்படவுமில்லை; நிதிநிலை சீராக்கப்படவுமில்லை. அடுத்து, அவரது ஆட்சியில் பொதுவாக எங்கும் இலஞ்சம் தாண்டவமாடி வந்தது என்பதை மறுக்க இயலாது. இலஞ்சம் வழங்குவதன் மூலம் கோட்டைகளும் வீழ்த்தாட்டப் பட்டன. இராஜபுத்திரர்களே இலஞ்சம் வாங்கிக் கொண்டு, தக்காணத்தில் மராத்தியர்களுடனும் பிற மக்களுடனும் இணைந்து கொண்டு, பேரரசுக்கு எதிராக நடந்து வந்தனர். அதே சமயத்தில், அந்த இராஜபுத்திரர்கள் தங்கள் மனைவி மக்களைத் துறந்து வெகுதூரம் கடந்துவந்து தக்காணப் போர் களில் (அதாவது மராத்தியப் போர்களில்) தங்கள் வாழ்நாள் களைக் கழிக்க முடியாதெனச் சொல்லிக் கொண்டிருந்தனர்.

**நிர்வாகச் சரிவு :** பொருள்களின் விலைகள் பன்மடங்காக உயர்ந்து வந்தன. குழப்பம் காரணமாக 17ஆம் நூற்றாண்டிலும் பணவீக்கம் இருந்தது. இதனால் மக்களுக்குத் தொல்லைகளும் துன்பமும் விளைந்தமை ஒருபுறம் இருக்க, மறுபுறத்தில் அரசுக் குச் சமாளிக்க முடியாத செலவுப் பெருக்கம் அதிகரித்துக் கொண்டே வந்தது. ஜாத்தியர்களின் மற்றும் பல கூட்டத் தினரின் கலகங்கள் காரணமாக மன்சப்தார்கள், இராணுவத் தினர்கள் ஆகியோரின் எண்ணிக்கையைப் பெருக்கவேண்டி நேரிட்டமையால், நிர்வாகச் செலவு அதிகரித்துக்கொண்டே

வந்தது. இதனால் நிர்வாகம் பழுதடைந்து வருவது உறுதி யாயிற்று.

**மக்களின் ஏழ்மையும், ஆளுநர்களின் திறமையின்மையும், இயலாமையும் :** சுபேதார்கள் ஒரு பணியிலிருந்து மற்றொரு பணிக்கும், சிவில் நிர்வாகத்திலிருந்து இராணுவத்திற்கும் அடிக் கடி மாற்றப்பட்டு வந்தமையால் இவ் விரு சாராருக்கும் பொது வாகப் பிரதிகூலங்களே விளைந்தன. மாகாணத்தின் சுபே தாராகப் பதவியேற்ற புதிய அமீரெ ஆஜம் நிலத்தின் தன்மை யையோ, குத்தகைச் சட்டங்களையோ அறிந்து அமல்படுத்துவ தற்கு முன்பாகவே மீண்டும் மற்றொரு பதவிக்கு மாற்றப்பட்டு விட்டமையால், நிர்வாகம் ஒழுங்காக நடைபெற முடிவதில்லை என்பது ஒருபுறமிருக்க, சுபேதார்கள் நிர்வாக விவகாரங்களில் தங்களுக்கு ஏற்ற முடிவுகளைத் தாமே செய்துகொள்ளும் தன்மை யற்றிருந்தார்கள் என்பதும் குறிப்பிடத்தக்க உண்மையாகும். ஆகவே, மாகாண ஆளுநர்கள் பல நேரங்களில் செயலிழந்து நிற்கும் நிலை உருவாகிவிட்டது. பீம்சன் என்னும் மூலக் குறிப் பாளரும், சில ஆண்டுகளாக ஆளுநர்களுக்கேகூடச் சம்பளத் தொகை கொடுபடாமல் பாக்கி நின்றுவிட்டமையால் அவர் களிடம் ஏழ்மை குடிகொண்டதாகவும், அவர்கள் பட்டினியால் வாடியதாகவும் கூறுகிறார்.

**ஓய்வின்மை :** பேரரசர் ஔரங்கசீப் ஓய்வின் அவசியத்தை உணர்ந்ததாகத் தெரியவில்லை. ஓயாது போர்களில் ஈடுபட்ட தனால் முகலாயப் பிரபுக்களின் அழிவுக்கும், பேரரசின் சரிவுக் கும் தம்மை அறியாமலேயே அவர் வித்திட நேர்ந்தது. ஓய்வு காலத்தில்தான் இலக்கியமும் கலையும் போட்டி போட்டுக் கொண்டு வளர்ச்சி அடையும் என்பதை அவர் உணரத் தவறி விட்டார். காஃபீ கான், முஸ்தயித் கான், முஹம்மது காசிம், ராய் பிந்த்ராபன் மால் ஆகிய வரலாற்று ஆசிரியர்கள் பலர் வாழ்ந்து வந்தாலும், ஷாஜஹான் ஆட்சியில் வாழ்ந்த ஜகன்னாத பண்டித ராஜாவைப் போன்றோ அல்லது அக்பர் ஆட்சியின் போது இந்தியில் இராமாயணத்தை எழுதிய கவி துளசிதாசரைப் போன்றோ எழுத்துலக வல்லுநர்களை ஔரங்க சீப் ஆட்சி உருவாக்கவில்லை என்பது மறுக்க முடியாத உண்மை யாகும். அபுல் ஃபசலின் இடத்தை ஜஅஃபர் ஜதல்லி (Jaffar Jatalli) என்னும் புலவர் நிரப்பினாலும், அது முழுமையான நிறைவு பெற்ற சிறப்பான தொண்டாக முடியாது.

**பிரபுத்துவத்தின் வீழ்ச்சி :** முகலாய பிரபுக்கள் பலர் ஔரங்கசீப் எதிர்பார்த்ததற்கு மாறாக, அவர் ஒழுகி நடந்த

எளிய, தூய்மையான வாழ்க்கைக்கு முற்றிலும் எதிராகக் குடியிலும், கேளிக்கைகளிலும், இன்னும் பல தீய வழிகளிலும் ஈடுபடலாயினர். பேரரசர் ஔரங்கசீபினுடைய உறவினர் தபக்கூர் என்பவரின் இழிசெயல் ஒன்றே உயர்மட்டத்தில் இருந்துவந்த முகலாயப் பிரபுக்களின் அறநிலை எந்த அளவுக்குச் சரிந்துவிட்டது என்பதைத் தெளிவாக்குகின்றது. மிதமிஞ்சிய குடி, மற்ற இழிசெயல்கள் முதலியன காரணமாகத்தான் ஔரங்கசீப் முஹ்தசிப் என்னும் அமைச்சர் ஒருவரை நியமிக்க நேரிட்டது. எனவே, முகலாயப் பிரபுக்கள் பலர் தங்கள் செயல்கள் மதத்திற்கு எதிரானவை என்பதையோ, அறத்திற்கு அப்பாற்பட்டன என்பதையோ தம் கவனத்தில் கொள்ளாது ஒழுங்கீனமாக நடந்து வந்தனர்.

**பேரவையினர் அட்டை போல் உறிஞ்சுதல் :** ஔரங்கசீபின் ஆட்சியில் பொதுப்பணியை உயர்மதிப்பிற்கும் பொறுப்பிற்கும் உரிய பணியாகக் கருதாது, மன்சப்தார்கள் தங்கள் சொந்த நலன்களை வளர்த்துக்கொள்ளும் சாதனமாகவும், சொத்துகளைச் சேகரிக்க உதவும் கருவியாகவும் கருதி ஒழுங்கீனமாக நடந்து வந்தனர். இதனால்தான், உயர் மன்சப்தார்ப் பதவியும் அமீரெ ஆஜம் பதவிகளும் அரச குடும்பத்தினருக்கும், மற்றும் உயர் பிரபுக்களின் பதவிகளை முன்னமே வகித்து வந்த உறவினர்களுக்கும் மட்டுமே பகிர்ந்து கொடுக்கப்பட்டன. எவ்வரசிலும் இம்மாதிரியான ஊழல்கள் நிலவுவது இயற்கையே யாயினும், ஔரங்கசீபின் ஆட்சியில் இவை சற்று மிகுதியாகவே காணப்பட்டன. இதனை அறிஞர் சர்க்கார் மேலும் பெரிதுபடுத்தித் தமது நூலில் சுட்டிக் காட்டுகின்றார்.

**கல்வியின்மை :** பொது மக்களுக்குப் பொதுவாக வடமொழியிலும், பாரசீகம், அராபிய மொழிகளிலும் பள்ளிகளும் பாடசாலைகளும் இருந்தன. ஆயினும், உயர் கல்வியென்றோ, கல்லூரி - பல்கலைக் கழகக் கல்வியென்றோ கூறிடும் அளவுக்கு மக்களின் கல்வி நிலை ஓங்கியிருந்தது என்று சொல்லிவிட முடியாது. அவற்றிற்குரிய ஆதாரங்களும் காணப்படவில்லை. ஆயினும், தாரா ஷுக்கோ, ஜஹானாரா, பாபாலால் லட்சுமீலால், ஏன், பேரரசர் ஔரங்கசீப் ஆகியோரின் தத்துவக் கோட்பாட்டு நூல்கள் பொதுமக்களின் கல்வி நிலையை உணர்த்துவனவாக இருப்பினும், உயர் பிரபுக்களின் கல்வி நிலைதான் பின்தங்கியிருந்தது. பிரபுக்களைப் பொறுத்தவரை பலதாரத் திருமணங்கள் அதிகமாகவே இருந்தன. இதனாலும் சமூகத் தீமைகளாலும் சட்டப்படி செல்லும் குழந்தைகளுக்குச் சமமாக, மதச்சட்டமோ

நாட்டுச் சட்டமோ அங்கீகரிக்காத குழந்தைகளுக்கும் சொத்து களில் சமபங்கு அளிக்கப்பட்டது. ஆக, பிரபுக்களுக்குத் தேவையான உயர் கல்வி அளிக்கப்பட்டதாகத் தோன்ற வில்லே. மேலும், பேரரசர் ஔரங்கசீப் கூட ஷா ஆலம், காம் பக்ஷ் ஆகிய இளவரசர்களுக்குத் தேவைப்பட்ட சரியான கல்வியை அளித்திருந்தால் அவர்களிடம் பேரரசை இழப்பதற் குரிய சில குணங்கள் இருந்திரா.

**சமூகத் தீமைகள் :** முகலாயர்களின் சமூகத்தில் இந்து - முஸ்லிம் என்ற பாகுபாடின்றிப் பல தீய வழக்கங்கள் சமுதாயத் தின் வேர்களே அழித்துக் கொண்டிருந்தன. சூது, கள், காமம் ஆகிய பாதகங்கள் அச் சமுதாயத்தையும் சீரழித்து வந்தன. சட்டம் தடைப்படுத்திவிட்ட போதினும், பல உயர் பிரபுக்கள் இரகசியமாகவே குடித்து வந்தனர். பொதுவாக, மக்களிடம் மௌடிக எண்ணங்களும் மூட நம்பிக்கைகளும் பரவலாகவும், வேரூன்றியும் இருந்தன. இந்து-முஸ்லிம் என்ற பாகு பாடின்றிக் குருநாதர்–சிஷ்யர், ஷேக்-பீர் போன்ற உறவு முறைகளும், குறிகளே வணங்கும் வழக்கங்களும் எங்கும் காணப் பட்டன. இந்துத் துறவிகளின் தத்துவங்கள்பால் பல முஸ்லிம்கள் ஈர்க்கப்பட்டனர். காலஞ்சென்ற முஸ்லிம் ஞானசிரியர்களின், மகான்களின் கல்லறைச் சமாதிகளுக்கு முஸ்லிம்களும் இந்துக் களும் சாரிசாரியாகச் சென்று வணங்குவது பொது வழக்கமாக மாறி வந்தது.

**ஊழல்கள் :** நிர்வாகக் குறைகள் மட்டுமன்றிக் கையூட் டம் பெறுதல் தடுக்க முடியாத பழக்கமாக மாறிவிட்டது. எவ்வலுவலகத்திலும் மன்சப்தார்களுக்கோ, அவர்களின் சிறு பணியாள்களுக்கோ இலஞ்சம் வழங்காத வரையில் எந்தப் பொதுப் பணியும் சரிவர நடைபெற்றதாகத் தோன்றவில்லே. இதனே முழுமையாகவும் நிறைவாகவும் கட்டுப்படுத்தும் முக மாகத்தான் நிர்வாகத்தின் அடித்தளத்தில் பேரரசர் ஔரங்க சீப் ஓர் இந்துக் கணக்கரையும், ஒரு முஸ்லிம் கணக்கரையும், ஒருவர் மற்ெெருருவருக்குத் தடையாக இருக்குமாறு நியமிக்கும் வழக்கத்தை மேற்கொண்டார். அவ்வாறிருந்தும், இலஞ்சம் பெருகி வந்ததே ஒழியக் குறைந்ததாகத் தோன்றவில்லே. குறிப் பாக, இராஜா ஜஸ்வந்த் சிங்கே கையூட்டம் பெற்றுப் பேரரச ருக்கு எதிராக நடந்து கொண்டார் என்பதைப் பார்த்தோம். ஏன், இளவரசர் ஆஜமும், அவரைப் போன்று மற்றும் பலரும்

அவ்வாறே நடந்து வந்தனர். உதாரணமாகக் குஜராத்தின் மனோகர் தாஸ் என்பவர் இராஜா பட்டம் பெறுவதற்காக 50,000 ரூபாய் கொடுத்து அதனைப் பெற்றதாக அறிஞர் சர்க்கார் கூறுகிறார். மற்றுமோர் உதாரணமாக, காபில் கான் (Qabil Khan) என்பார் 12 லட்சம் ரூபாயைச் சற்றேறக் குறைய 5 ஆண்டுகளுக்குள்ளாக லஞ்சம் மூலமாகவே சம்பாதித்ததாகக் கூறப்படுகிறது.

இறுதியாக, பேரரசர் ஔரங்கசீப் தம்மைப் பொறுத்த வரையில் தாம் தூய்மையுடனிருந்து, அறநெறி வழுவாது நடந்து கொண்ட போதிலும், தம் குடிமக்களை அறம் வழுவாது நடக்குமாறு செய்ய முயன்ற வகையில் அவர் கண்டது தோல்வியே!

# 25. ஔரங்கசீபின் குணநலன்கள்

பேரரசர் ஔரங்கசீப் பல உயரிய நற்குணங்களைப் பெற்றிருந்த போதிலும், அவர் முற்றிலும் குறையற்றவர் அல்லர். வேந்தரின் உருவில் ஒரு ஞானியாக அவர் இருந்த போதிலும், அரசியல் ரீதியிலும் சொந்த ரீதியிலும் அவரிடத்துப் பல குறைகள் காணப்பட்டுத்தான் வந்தன. எனினும், அவருக்கிருந்த ஒரு நிறை என்னவென்ருல், கூர்மையான அரசியல் நோக்காகும். இந்த அறிவுக் கூர்மை பாரசீகர்கள் இந்தியாவின் மீது படையெடுத்து வந்து விடாதபடி தடுக்க அவர் வடமேற்கு எல்லைப்புற அரண்களைக் காக்க முற்பட்ட யோசனையினின்று நன்கு புலனுகின்றது. மற்றும், அதே அறிவுக் கூர்மையின் விளைவே, அவர் ஷாயிஸ்த கான் மூலமும் மீர் ஜும்லா மூலமும் வங்காளம், அஸ்ஸாம் ஆகிய மாநிலங்களைப் பேரரசுடன் இணைத்துக் கொண்டதாகும். இளவரசர் அக்பர் இராஜபுத்திரர்களுடன் இணைந்து கொண்டபோது, அவர்களிடத்திருந்து அவரைப் பிரித்து வைத்த முறையும் ஔரங்கசீபின் அரசியல் நுட்பத் திறனைக் காட்டுகின்றது.

பேரரசர் தமக்கு நேர் கீழ்ப் பணிபுரியும் அமீர்களையும் மன்சப்தார்களையும் தேர்ந்தெடுப்பதிலும் தம் நுண்ணறிவையும் முன்ஞேக்கையும் தவருது வெளிப்படுத்தி வந்தார். ஜெய் சிங்கின் விசுவாசப் பணி அவருக்கு உறுதுணையாக அமைந்தது. ஆஜம், திலேர் கான், ஜஸ்வந்த் சிங் மற்றும் பலரையும் தேவைப்பட்டபொழுதெல்லாம் பயன்படுத்திக்கொண்ட முறை அவரது நீதி மனப்பான்மையைத் தெளிவாக்கிற்று. சிவாஜியிடம் அவர் நடந்துகொண்ட விதம் அரசியலில் சிவாஜியினும் திறமை குறைந்தவரல்லர் என்பதை எடுத்துக் காட்டும்.

பேரரசர் ஔரங்கசீபிடம் காணப்பட்ட மிக முக்கியமான குறை என்னவென்ருல், அவர் முன்ஞேக்குடையவராக இருந்

தும், தம் காலத்தில் நிலவி வந்த அரசியல் சூழ்நிலையை முழுமையாகவும் சரியான கோணத்திலும் அளவிடத் தவறி விட்டார். இதன் பலனாக, அவரால் மராத்தியர்கள்மீது வெற்றி கொள்ள முடியாமற்போய், சிவாஜி இறந்தபின் அவர்களை அடக்குவதில் காலத்தையும் பொருளையும் வீணடிக்கும்படியாக வும் ஆயிற்று. இவ்வாறே ஜாத்துகள், சத்னமியர்கள், சீக்கி யர்கள் ஆகியோரின் கலகங்களின் தன்மையைப் புரிந்து கொள்ள இயலாத நிலையிலும் இந்தியாவின் வடமேற்கு எல்லைப் புற மாகாணங்களிலும், அதற்கு அப்பாலும், கிழக்குப் பகுதி களிலும், தக்காணத்திலும் வெற்றி வாகை சூடக் கருதி அவர் ஓயாமல் போர்களில் ஈடுபட்டு வந்தார். இஸ்லாமிய கலைக் களஞ்சிய ஆசிரியர் குறிப்பிட்டதுபோல முகாமில் பிறந்து, முகாமிலேயே காலத்தைக் கழித்து, முகாம் ஒன்றிலேயே அவர் இறக்க நேரிட்டது.

ஜஸியா நியாயபூர்வமான வரியே என்றாலும், 1679ஆம் ஆண்டில் ஔரங்கசீப் ஹஸன் அப்தலில் இருந்து திரும்புகையில் நாட்டில் நிலவிய கலகங்களின் சூழ்நிலை அவரை அவ்வரியை இந்துக்கள்மீது விதிக்கத் தூண்டியபோதிலும், அது விதிக்கப் பட்ட காலமும் அதன் முறையும் உறுதியாகத் தவறு என்றுதான் சொல்ல வேண்டும். ஏனெனில், இவ்வரி விதிப்பின் மூலம் கலகம் செய்யும் இந்துப் பிரபுக்களுள் அல்லது இந்து உயர்குடி மக்களுள் சிலர் கலகத்தைக் கைவிடுவர் என்று அவர் எதிர் பார்த்தது வீண் போயிற்று.

**அரசியல் கூர்மை மழுங்குதல் :** 1680ஆம் ஆண்டிற்கு முன் பாக ஔரங்கசீபிற்கு அரசியல் கூர்மை இருந்திருப்பின், அவர் மராத்தியர்களின் நட்பை நாடியிருக்க வேண்டும். இராஜ புத்திரர்கள் ஔரங்கசீபின் முப்பாட்டனுருக்குத் தூணாக அமைந் தது போன்று, தமக்கும் அவர்கள் உறுதுணையாக இருக்க வேண்டுமே என்று அவர்களின் நட்பையும் இவர் ஆவலுடன் நாடியிருக்க வேண்டும். இதை விடுத்து, நேர் மாறாக, 1680ஆம் ஆண்டு வரை இராஜபுத்திரர்களுக்கு அளித்துவந்த சலுகை களைப் பிடுங்கி, அவர்கள்மீது பகைமை பாராட்டி, மராத்தியர் களுக்குப் பதவிகளை அளித்து, இவர்களின் நட்பைப் பெற முயன்றது ஔரங்கசீபின் அரசியல் மதியீனமாகும். சற்றேறக் குறைய இருபத்தைந்து ஆண்டுகள் மட்டில் தமக்கு அடிபணிய மறுத்து, ஓயாது போர்க் கொடி உயர்த்தி வந்த மராத்தியர்கள் அவர்களுடைய தலைவர் மரித்த பின்னராவது அடிபணிய மாட் டார்களா என்று எதிர்பார்த்து ஏமாந்து, பதவிகள் அளித்தும்

பயன்படாது போயினவே, அப்படிப்பட்ட நிலையில் அவர்கள்மீது பேரரசர் போரெழுந்து சென்றது அன்னாரின் அரசியல் அறிவுக் கூர்மை முற்றிலும் மழுங்கிவிட்டது என்பதையே நன்கெடுத்துக் காட்டுகின்றது.

**ஒரே நேரத்தில் வெவ்வேறு குறிக்கோள்கள் :** ஆங்கிலப் புலவர் ஒருவர் 'ஒரே வழி, ஒரே பாதை, ஒரே இலட்சியம் யாருக்கும் தேவை' என்று சுட்டிக் காட்டியது போல், ஔரங்க சீபிற்கு ஒரே குறிக்கோள் இருந்ததாகத் தெரியவில்லை. அவருக்கு ஒரே நேரத்தில் வெவ்வேறு குறிக்கோள்கள் இருந்து வந்தன. வடமேற்கு எல்லைப்புறப் பகுதிகளைக் காத்து நிற்பது; முடியுமானால், அவ்வெல்லைகளுக்கும் அப்பால் படைகளை அழைத்துச் சென்று வெற்றி காண்பது; உள்நாட்டில் அவ்வப் போது எழுந்து வரும் கலகங்களை அடக்கி வருவது; அதே நேரத்தில், நிர்வாக இயந்திரம் மூலம் குடியானவர்களுக்கும் மற்றும் பலருக்கும் உதவி செய்வது போன்ற வெவ்வேறு இலக்கு களையும் இலட்சியங்களையும் அவர் வகுத்துக்கொண்டாரே ஒழிய, உள்நாட்டுக் குழப்பங்கள் முற்றிலும் ஓய்ந்த பின்னர், அல்லது நாட்டின் அமைதியைச் சில ஆண்டுகளுக்காவது முற்றி லும் காத்த பின்னர் நாட்டு எல்லைகளைப் பரப்பும் இலட்சியத்தில் ஈடுபடலாம் என்று அவர் நினைக்கவில்லை. இதன் விளைவு, ஓயாத போராட்டம், நிதி நாசம், அனைத்தும் பாழ்!

**தொடர்ச்சியான முயற்சியின்மை :** பேரரசர் ஔரங்கசீப் சிறந்த ஆற்றல் படைத்தவர்; மிகவும் சுறுசுறுப்புள்ளவர் என் பதை மறுத்தல் இயலாதெனினும், அரசியல் முயற்சிகளைப் பொறுத்தவரை, அவர் மேற்கொண்ட செயலொன்று முடிந்த பின், அதன் விளைவுகளை அலசி ஆராய்ந்து, அவ்வாராய்ச்சி முடிவுக்கேற்ப ஒழுங்கான தொடர் முயற்சியில் இறங்கினாரா என்பதுதான் கேள்வியாகும். உதாரணமாக, கோல்கொண்டா அரசு இணைக்கப்பட்டு, குத்துப் ஷா மன்னருக்கு மானியத் தொகை ஒதுக்கப்பட்ட பின்னர், அச் சிற்றரசு மாற்றி அமைக் கப்பட்டதாகவோ, சீரமைக்கப்பட்டதாகவோ தெரியவில்லை. இதனால் அப் பகுதிகளில் வாழும் மக்களின் எஜமானர்களில்தாம் மாற்றம் நிகழ்ந்திருக்குமேயல்லாது, நிர்வாகச் சீரமைப்பு அல்லது மக்கள்நல அபிவிருத்தித் திட்டம் ஏதேனும் ஏற்பட்டிருக் குமா என்பது ஐயப்பாட்டிற்குரியதாகும். மற்றோர் உதாரணம்: தம்மிடம் சேவைபுரிந்த சத்ரசால் தம்மை எதிர்த்துப் போர்க் கொடியை உயர்த்தியபொழுது, இவரது கலகங்களை யெல்லாம் அற்பமான வெற்றுத் தொல்லைகளெனக் கருதிப் பேரரசர்

அவற்றை ஒதுக்கினரே யொழிய, சத்ரசாலின் பிரச்சினைக்குரிய தீர்வைக் காண முயலவில்லை. சிறு உளிதான் பெரும் மலையை யும் பிளக்க வல்லது என்பதனை ஔரங்கசீப் மறந்துவிட்டார். ஆகவே, பெரும் முயற்சிகள் எடுத்து இவர்களது பிரச்சினைகளைப் புரிந்துகொண்டு, அவற்றினுக்கேற்ற தொடர் நடவடிக்கைகளை எடுக்க அவர் தவறிவிட்டார்.

## சொந்தக் குணநலன்கள்

**நிறைகள் :** (1) பேரரசர் ஔரங்கசீபிடம் பல நற்குணங் கள் காணப்பட்டன. இங்கு ஓரிரண்டை மட்டும் குறிப்பிடலாம். நாம் ஆரம்ப அத்தியாயத்தில் விவரித்துள்ளது போல், அவர் தம் இளமையில் யானைக் களியாட்டத்தின்போது காட்டிய அசாத்தியத் துணிவு அவர் வளர்ந்தால் எத்துணை அளவுக்கு வீரமுடையவராக இருப்பார் என்பதை நிரூபித்தது. தள்ளாடும் வயதிலும் கூட அவருடைய போராற்றலும் பேராற்றலும் குறைய வில்லை. ஹசன் அப்தல் போர்க்களமாயினும், புரந்தர், வாய் முதலிய கோட்டைகளைப் பிடிப்பதிலாயினும், ஹுசைன் ஏரிக்கு அருகில் போரிட்ட போதிலாயினும் அவரது போர்த்திறமை யிலோ, போர்த்தந்திர யுக்திகளிலோ சரிவோ, தளர்வோ ஏற் பட்டதாகக் கூறவே முடியாது.

அவரது ஒழுக்கங்களில் தூய்மையும் நேர்மையும் காணப் பட்டன. அவரது குணத்தின்மீது, நன்னடக்கைகள்மீது பொதுவாக எவராலுமே பழுது சொல்ல முடியாது. இவருடைய மன்சப்தார்களும் மக்களுட் பலரும் குடித்துக் கும்மாளமிட்டுக் குதூகலம் கொண்டாடி வந்த அதே நேரத்தில், இவர் மதுவருந் தாமலும், தவறான ஒழுக்க நெறியில் வழுக்கி விழாமலும் நன் னடக்கைக்கான விதிகளைக் கடைப்பிடித்து வந்ததே இவரது பண்பின் உயர்வைக் காட்டுகின்றது. ஔரங்கசீப் என்றைக் குமே இறைவனது கட்டளைக்கு மாறு செய்ததில்லை; தொழுகை, நோன்பு முதலிய கடமைகளை மறந்தும் கைவிட்டதில்லை. இறை அச்சப்பாடு மிக்கவர் அவர் என்பதில் எவரும் கருத்து வேற்றுமை கொண்டதில்லை.

**குறைகள் :** ஔரங்கசீபிடம் சில குறைகளும் காணப்பட் டன. இவற்றை மறுப்பதற்கில்லை.

இப் பேரரசருக்குச் சொந்த விருப்பு வெறுப்புகள் சற்று அதிகமாகவே இருந்தன. தாரா ஷுக்கோவிற்கு ஔரங்க சீபின் மீதிருந்த வெறுப்பினும் அதிகமான அளவுக்கே ஔரங்க

சீபிற்குத் தாராவின்மீது வெறுப்பு இருந்தது. ஷாஜஹான் தாரா ஷுக்கோவுக்கு அளித்து வந்த சலுகைகள் அனைத்தின் காரணமாக, ஔரங்கசீப் தம் அண்ணன்மீது அத்துணையளவுக்கு வெறுப்புக் கொள்ளுமாறு நேர்ந்துவிட்டது. இந்துக்கள்மீதோ இந்து மதத்தின்மீதோ ஔரங்கசீபிற்கு வெறுப்பு இருந்தது என்று சொல்வதைக் காட்டிலும், கலகக்காரர்கள் யாராக இருப்பினும் அவர்களை ஔரங்கசீப் முற்றும் வெறுத்து வந்தார் என்று சொல்வதே பொருத்தமுடைத்தாகும். தம் மக்கள் தமக்கு முற்றிலும் கட்டுப்பட்டு நடப்பார்கள், அடக்க குணம் குடி கொண்டவர்களாயிலங்குவர் என்றெல்லாம் பேரரசர் எதிர் பார்த்தார். ஆனால் இதில் அவர் ஏமாற்றம் அடைந்த பொழுது, எவராக இருப்பினும் சரியென்று துணிந்து, தமது வெறுப்புக்கு ஆளாகியவர்கள்மீது தம் சினத்தையும் வெறுப்பையும் வெளிப் படையாகக் காட்டிக் கொள்ளத் தவறியதில்லை. இது சில சமயங்களில் அறிவுக்கப்பாற்பட்ட எல்லையையும் கடந்து நின்றது.

ஔரங்கசீப் அறவே அன்புள்ளம் இல்லாதவரல்லர். ஆயினும், அவருக்கு எவர்மீதும் வெகுவாகப் பாச உணர்ச்சி மிகுந்திருந்ததாகக் கூற முடியாது. ஷாஜஹான், மும்தாஜ் மஹல், தாரா ஷுக்கோ, முராது பக்ஷ், ஷுஜா ஆகியோர்மீது அவர் தம் பாசத்தைச் செலுத்தித் தம்மை அடிமையாக்கிக் கொள்ளவில்லை. அதுபோன்றே, தம் மக்களான ஆஜம், முஅஜ்ஜம், சுல்தான், அக்பர் ஆகியோர்மீது கூட அவர் அளவு கடந்த பாசம் கொண்டதாகத் தெரியவில்லை. தம் அக்காள் ஜஹானாரா மீதும், தம் மகன் காம் பக்ஷ்மீதும் சிறிதளவு அன்பும் பாசமும் கொண்டிருந்தார். எனினும், அவரது நீதி மனப்பான்மைமீது பாச உணர்ச்சி வெற்றி கொள்ளவில்லை.

ஔரங்கசீப் எளிதில் எவரையும் நம்பிவிட மாட்டார். தாம் ஈன்ற மைந்தர்களேயாயினும், அவர்களைச் சீக்கிரத்தில் அவர் நம்புவதில்லை. அதுபோன்றே, ஒரு காரியத்தை ஒருவரிடம் ஒப்படைத்துவிட்ட பின்னரும் அவரை இவர் முழுமையாக நம்புவதும் இல்லை. உதாரணமாக, தம் மகன் முஅஜ்ஜமைத் தக்காணத்திற்கு அனுப்பினால், ஓரிரு மாதங்களுக்குள் அல்லது உடனுக்குடன் கூடவே திலேர் கான் என்னும் தளபதியையும் அனுப்பி வைப்பார். இச் செயல் அவரது அவநம்பிக்கையினால் பிறந்தது ஆகும்.

ஔரங்கசீபிடம் காணப்பட்ட மிகப் பெரும் குறை என்னவெனில், தம் ஆட்சியின்கீழ்ப் பணியாற்றிய பிரதம அமைச்சர்,

தளபதிகள் முதல் சிறுசிறு மன்சப்தார்கள், பொதுப் பணியாளர்கள் அனைவரும் தாம் பிறப்பிக்கும் கட்டளைப்படித்தான் செயலில் ஈடுபட வேண்டுமென நினைப்பார். சூழ்நிலைகளுக்கு ஏற்றவாறு எவரும் உசிதம்போல் முடிவுகளை எடுத்தல் கூடாது என நினைப்பார். இவ்வாறு அதிகாரங்கள் பெரிதும் குவிந்திருந்ததால்தான் பேரரசருக்குப் பெரும் தீமையாக அக் குவியல் முடிந்தது. ஒருவிதத்தில் இது ஷாஜஹானிடத்திலும் காணப்பட்ட குறையுமாகும். உதாரணமாக, ஔரங்கசீப் இளவரசராக இருந்தபொழுது, பேரரசர் ஷாஜஹானும் இவ்வாறு வற்புறுத்தியதனாலேயே காண்டஹார்ப் பகுதியை ஔரங்கசீப் இழக்க நேரிட்டது. ஆகவே, குடும்பத்தில் பரம்பரையாகக் காணப்பட்ட சொந்தக் குணநலன்களின் குறையாகும் இது. இதனை ஔரங்கசீப் எல்லை கடந்த அளவுக்கு இழுத்துச் சென்றார்; தாம் நேரே பார்த்து முடிவு எடுத்தாலொழியப் பிறரது முடிவையோ பிறரது கருத்தையோ இவர் என்றும் ஏற்றதில்லை. அதே நேரத்தில் தம்முடைய மதிப்பீடும் முடிவுமே சிறந்தன என ஓரளவிற்கு இறுமாப்புக் கொண்டிருந்தார் எனத் தவறான முடிவிற்கும் வந்துவிடக் கூடாது. எவ்வாறாயினும், அதிகாரங்கள் பல தம்மிடம் குவிந்திருப்பதை இவர் பெரிதும் விரும்பினார். இதன் பயனாக, இவர்பால் அதிகார மனப்பான்மை வேரூன்றி வளரலாயிற்று. இதனை ஆராய்ந்துதான் ஔரங்கசீப் ஓர் இலாகாவின் தலைவராக இருக்கலாமே அல்லாது, சிறந்த ராஜதந்திரியாக இருத்தல் இயலாது என அறிஞர் ஜாதுநாத் சர்க்கார் கருதுகின்றார் போலும்![1]

[1] 'Bisetting sin of over centralisation......such a king cannot be called political or even administrative genius.. ...he was fit to be a departmental head, not a statesman' — Sir Jadunath Sarkar, History of Aurangzeb, Vol. V, p. 478.

# 26. மதிப்பீடு

ஔரங்கசீப் ஆலம்கீர் ஈடு இணையற்ற பேரரசர்; பேரரசர்களுள் சிறந்தவர்; நல்லாட்சிக்குத் தம்மைச் சுற்றிலுமிருந்த சூழ்நிலைகளுக்கு ஏற்றவாறு இலக்கணத்தை வகுத்துக் கொண்டு, அந்தக் குறிக்கோளை ஒட்டி நடக்க முயற்சித்தவர்; ஆட்சியின் சிகரத்தில் இருந்த பொழுதும் தம்மால் இயன்றவரை நேரிய முறைகளையும், தார்மிக, நல்லொழுக்க முறைகளையும் கடைப்பிடித்தவர்; தவறியும், ஒழுக்கத்தின் பாதையை விட்டு விலகி அப்பாற் செல்ல மனத்தாலும் கற்பனை செய்தறியாதவர்; இளம் வயது முதற் கொண்டே நல்லறத்தை நம்பி வாழ முயற்சித்தவர்; ஒருவரின் பிறப்பன்று, ஆனால் அவரவர் கருமமே பெருமைக்கும் சிறுமைக்கும் காரணம் என்பதை அறிந்தவர்.

**வீரமும் வணக்கமும் :** இளமையிலும் இவர் தம் தந்தையின் கட்டளைகளுக்குக் கட்டுப்பட்டு நடந்தார். தம் சிறு வயதிலும் வீரத்தைக் காட்ட வேண்டிய நேரத்தில் இவர் தவறாது தமது வீரத்தை வெளிக்காட்டினார். கல்வி என்பது வெறுமனே படிப்பதிலும் எழுதுவதிலும் மட்டுமே உள்ளது என்று கருதாது, திருமறையையும் தாய் மொழியான பாரசீக மொழியின் நூல்களையும் நன்றாக வேரூன்றி அறிந்து உணர்ந்து அவற்றின் படிப்பினைகளையும் தத்துவங்களையும் இவர் கற்றுக் கொண்டார். ஆனால், அதே நேரத்தில் இவர் வடமொழி இலக்கியங்களை அல்லது இந்துமதத் தத்துவக் கோட்பாடுகளையும் அறிந்து கொண்டிருப்பாரேயானால், பேரரசர் என்ற முறையில் மக்களிடத்தில் இவருக்கு மதிப்பு அதிகமாகி இருக்கக் கூடும்; இவரும் பயன் அடைந்திருப்பார். அனேகமாக, இவர் வடமொழிக் கல்வியில் ஆர்வம் அதிகமாகக் காண்பிக்காததற்குத் தம் அண்ணன்மீது கொண்டிருந்த வெறுப்பும் காரணமாக இருக்கக்கூடும். எனினும் தாராஷுக்கோவுக்கு வெறும் பகட்டு ஆரவாரங்களே கல்வி

யளவிலும் காணப்பட்ட நேரத்தில், ஔரங்கசீப் மட்டும் தத்துவ விவாதங்களில் ஈடுபட்டு, வாழ்க்கையை வீணடிக்காமல், திருமறை காட்டும் மரியாதையுடன் நிதர்சனமான சூழ்நிலைகளுக்கு ஏற்றவாறு தம்மைப் பக்குவப்படுத்திக் கொண்டார். தாரா ஷுக்கோ கோழையைப் போன்று பல பல இடங்களில் அஞ்சி ஓடிய நேரங்களில், ஔரங்கசீப் தைரியமாக மரணத்திற்கு அஞ்சாமல் போர்க் களத்திலேயே தொழுகையை நடத்தியவர்; இளம் வயதில் தாய் தந்தை இட்ட ஆணைகளைச் சிரமேற் கொண்டு நடந்தவர். தந்தைக்கும் சகோதரர்களுக்கும் உரிய இடத்தையே இவர் கொடுத்தார். ஆனால், ஔரங்கசீபிடம் காணப்பட்ட நற்குணங்களைப் பலரால் புரிந்து கொள்ள முடியவே இல்லை. அண்ணன் தாரா ஷுக்கோவே ஔரங்கசீபை 'நமாஜி'—தொழுகையாளி அல்லது சீரிய வணக்கம் புரிபவர் என்று அழைத்தமை, மிகவும் பொருத்தமுடைத்தாகும். ஏனெனில், தொழுகை என்பது எவருடைய உள்ளத்தையும் பரிபக்குவப்படுத்தவல்லது. இறைவனின் ஏகத்துவத்தையும், மனிதன் இறைவனுக்கு மட்டுமே அடிமை என்னும் படைப்பின் உயரிய தத்துவத்தையும், இறைவனுடைய படைப்பில் சமுதாயத்தினரிடையே ஜாதியின் பெயரால் ஏற்படுத்தப்படும் ஏற்றத் தாழ்வுகள் மூடத்தன்மையானவை என்பதையும், அற ஒளியில் நடப்பவர்களுக்கு உள் ஒளி உண்டு என்பதையும், மனித வாழ்க்கை நொடிப் பொழுதில் மறையவல்லது என்பதையும், நிரந்தரமான வீடு மண் அறையேயன்றி, மாட மாளிகை கூட கோபுரங்கள் அல்ல என்பதையும், இவ்வுலகில் திருமறையும் இஸ்லாமும் இவற்றையே காட்டுகின்றன என்பதையும் நன்கு அறிந்திருந்தார் ஔரங்கசீப்.

**பெருந்தன்மை :** குணநலன்களில் நிச்சயமாக இவர் நபிகள் நாயகத்தின் வழியைக் கடைப்பிடிக்க உறுதி கொண்டார். ஆகவே, அந்த நபி காண்பித்த சகிப்புத்தன்மை, பொறுமை, பெருந்தன்மை, நன்மை பயத்தல் ஆகிய அத்தனை நற்குணங்களையும் இவர் பேணிப் பின்பற்ற முயற்சித்தார். சிவாஜியைப் போற்றி, அவரை ஓர் அரசியல் எதிரியாக மட்டுமே கருதி, அவரிடம் நடந்து கொண்ட முறையும், அவர் ஆக்ராவில் மூர்ச்சையாகி வீழ்ந்தபோது அவர்மீது ஔரங்கசீப் சொரிந்த அன்பும், அவர் தப்பிச் செல்லுமுன் அவருக்கு மன்சப்தார்ப் பதவியும் ஜாகிர் நிலமும் அளித்துக் கௌரவித்ததும், இவரது பெருந்தன்மைக்குரிய நற்குணங்களாம். இவ்வண்ணமே, குதுப்ஷா மன்னருக்கும், பீஜப்பூர் மன்னருக்கும் ஓய்வுத் தொகை அளித்துக் கௌரவித்ததும், தம் மைந்தருக்கு ஷீஆ குல இளவரசி

யைத் திருமணம் செய்துவைக்க ஏற்பாடு செய்ததும் இவரது அரசியல் துறையின் பெருந்தன்மையையே காட்டுகின்றன. அரசியல் தந்திர வினைத்திட்பம் என்பது வேறு; வஞ்சகம், சூழ்ச்சி என்பன வேறு. பிற்சொல்லப்பட்ட தீக்குணங்களைக் கொண்டவர் அல்லர் இவர். தாரா ஷுக்கோவை அரசியல் போட்டியிலிருந்து இவர் அகற்றினார். ஆனால், அவர் பெற்றிருந்த பிள்ளைகளைக் கொல்லவில்லை. சிபிர் ஷுக்கோவுக்குத் தம் மகளையே இவர் திருமணம் செய்து கொடுத்தார். குடித்துப் புரண்டு கூத்தடிப்பதன்மூலம், முராத் பக்ஷ் தாம் ஆளுவதற்குத் தகுதி யற்றவர் என்பதை நன்கு நிரூபித்துவிட்டார். போட்டி முடியவில்லை; போர் ஓயவில்லை; இப்படிப்பட்ட தருணத்தில் கேளிக்கையில் ஈடுபடுவது முட்டாள்தனம் என்று முராதுக்குத் தோன்றவில்லை. அறிவுக்கூர்மை படைத்த ஔரங்கசீப் இதனை உணர்ந்து சூழ்நிலையைத் தமக்குச் சாதகமாக்கிக் கொண்டார். இது அரசியல் திறமையாகும்; சூது ஆகாது. ஆனால், அதே நேரத்தில், தம் தம்பிமீது இவர் கொண்டிருந்த பாசம் காரணமாக, அவர் மகன் இஜித் பக்ஷுக்குத் (Izid Baksh) தம் மகள் மெஹ்ருன்னிசாவைத் திருமணம் செய்து கொடுத்தார்.

**நடுநிலையும் நீதி மனப்பான்மையும்:** நேர்மைக்கும் நல்லொழுக்கத்திற்கும் இவர் தாமே முன்மாதிரியாக இருந்து காட்டினார். தம் மகனே ஆயினும் சரி, அநீதியையும் நேர்மை அற்ற தன்மையையும் தண்டிக்க இவர் தவறியதில்லை. ஒழுங்கு தவறியதனால் தம் மகனையே கொன்று விடவும் தயங்கவில்லை. அவன் (முஹம்மத் சுல்தான்) வஞ்சகத்திலும் சூழ்ச்சியிலும் இறங்கி வெகு தூரம் சென்றதையறிந்து இவர் அவனைச் சிறையில் வைக்கத் தவறவில்லை. நிச்சயமாக அரசின் நலன்களுக்கு மாறாக நடந்துகொண்ட ராம்சிங்கை இவர் தண்டித்திருக்கலாம். ஆனால், அவருக்கு இவர் தண்டனையே கொடுக்கவில்லை. அதே சமயத்தில் தம் மகனுக்குக் கடும் தண்டனையை அளித்து, நீதியுள்ளவராக இவர் தம்மை உலகுக்குப் பறையறைவித்து விட்டார். தம் மூத்த மகன் முஅஜ்ஜம் லஞ்சம் வாங்கியபோது, அவரைக் கைது செய்யவும் இவர் தவறவில்லை. ஆனால், அதே நேரத்தில், ஜஸ்வந்த் சிங்கை இவர் தண்டிக்கவில்லை; கண்டித்தார். காரணம், ஜஸ்வந்த் சிங் அரசாங்கத்தின் பிரதம தளபதி. முஅஜ்ஜமோ பயிற்சி பெற்று மன்னராக வரவேண்டியவர். இளவரசர் ஆஜமும் ஔரங்கசீபின் நீதிமிக்க செங்கோலின் அடிக்குத் தப்பவில்லை. காம் பக்ஷுக்கு அதுபோன்றே சபலம் தோன்றிய பொழுது, அவர் செஞ்சியில் இருக்கையில் கைது செய்யப்பட்டார்,

ஔரங்கசீபின் பெருந்தன்மைக்கும் நீதி மனப்பான்மைக்கும் ஓர் எடுத்துக்காட்டு என்னவென்ருல், ஔரங்கசீபின் மகள் ஜீனத்துன்னிசாவினுல் கால் நூற்ருண்டு காலம் வரை வளர்க்கப் பட்ட ஷாஹு முஸ்லிமாக மதம் மாற்றம் செய்யப்படாமல் மீண்டும் திரும்ப ராய்கருக்கு மன்னராக இருக்குமாறே அனுப்பப் பட்டதாகும். ஜுல்ஃபிகார் கான் ஔரங்கசீப் இறந்த பின்னர், 1707ஆம் ஆண்டில் ஷாஹுவை ராய்கருக்கு அனுப்பி வைத் தாலும், 25 ஆண்டுகள் வரை தம் மகள் ஜீனத்துன்னிசாவினுல் வளர்க்கப்பட்ட அவரை மத மாற்றம் செய்யச் சிந்திக்காதவர், மத மாற்றம் செய்திடாதவர், நடுநிலேயும் நீதி மனப்பான்மையும் அற்றவராக இருந்திருக்க முடியுமா? ஷாஹு சாப்பிடாத நேரங் களில் ஔரங்கசீப் மனம் வருந்தி ஷாஹுவைச் சாப்பிடச் செய்யும் படியும், நன்ருகப் பேணி வளர்க்குமாறு தம் மகளுக் கும் பணியாள்களுக்கும் உத்தரவிட்ட வண்ணமும் இருப்பார்.

**எளிமை :** ஔரங்கசீப் எளிமையின் இருப்பிடமாவார். இவரது எளிமைக்கு ஓர் எடுத்துக்காட்டு: பட்டணைத் திண்டு மெத்தைகள் மீது உல்லாசமாயுறங்க வேண்டியவர் புலித் தோல் மீது அல்லது வெற்றுத் தரையில் படுத்து உறங்கியதும், இறைச்சிக்கறி உணவை அதிகமாக உண்ணுமல், பார்லி, கோதுமை ரொட்டியை உணவாக உட்கொண்டதும் விந்தை அல்லவா? இவ் விந்தையிலும் வியப்பூட்டுவது என்னவென்ருல், இவருடைய தாய்க்குப் பிரமிப்பூட்டும் சலவைக்கல் மாளிகை கட்டிய தந்தை ஷாஜஹான் சொந்த சொத்து இன்னதென்றும், அரசாங்கச் சொத்துகள் இன்னவையென்றும் வித்தியாசம் பாராட்டாமல் நடந்து கொண்டதற்கு மாருக, அவருடைய மகனுன இவர் மிகக் குறைந்த செலவில் தம் வாழ்க்கையை நடத்தி வந்ததுதான்! ஔரங்கசீபின் 80ஆவது வயதில் கல் கலாவில் இவரைக் கண்ட டாக்டர் காரே இவருடைய எளிமை யையும் சுறுசுறுப்பையும் கண்டு பிரமித்து விட்டதுடன், அத்தகு எளிமையை இவர் பிறர்மீது வலியத் திணிக்கவில்லே என்று கூறியிருப்பதையும் நாம் கவனிக்க வேண்டும். எல்லோரும் தன்னேப் போன்று சிக்கனமாகவே இருக்கவேண்டும் என்று நினைப்பவன் கருமி; தன்னேப் போன்று பிறரும் தாராளமாகச் செலவுசெய்ய வேண்டுமென்று கருதுபவன் ஊதாரி; ஔரங்க சீபிடம் இம்மாதிரியான அற்ப குணங்கள் என்றும் இருந்ததில்லே. பாடகர்களுக்கு ஓய்வுத் தொகை யளித்தார்; அவர்கள் பாடும் கவைக்குதவாத பாடல்களே மட்டும் நிறுத்தினுர்.

## நீதிக் கடல்

ஔரங்கசீப் நீதிக்கடல், எளிமையின் எடுத்துக்காட்டு என்றெல்லாம் ஹாமில்டனும், ஓவிங்டனும், ஃப்ரையரும், காரேயும் ஒப்புக்கொண்டுவிட்டனர். அறத்தை நாடியதுபோன்று அன்பின் வழியிலும் நடக்க இவர் முயற்சித்தார். அன்பும் காதலும் பளிங்கு மண்டபத்திலும், பெரும் மாளிகைகளை நிர்மாணிப்பதிலும் அடங்கி இருப்பதில்லை. அவை உள்ளத்தில் மிளிர வேண்டும். அகத்தில் இருப்பவை செயல்களாகப் பரிமளிக்கவேண்டும். தம் தாயின்மீது தந்தை கொண்டிருந்த பாசத்தின் அளவுக்கு ஔரங்கசீபும் தம் தாரத்தின்மீது காதலுற்றிருந்ததற்கு அறிகுறியாகப் பெரும் நினைவுச்சின்ன மாளிகைகளைக் கட்டியிருக்க முடியும். ஆனால், தாமே தொப்பி தைத்தும், குர்ஆன் எழுதி விற்றும் சிறு தொழிலைச் செய்து பணம் ஈட்டி அதன் வருவாயைக் கொண்டு வாழ்க்கை நடத்தவேண்டும் என்று கருதி இருந்தவர் தம் மனைவிமீது கனிவுமிக்க காதல் கொண்டிருப்பினும், எவ்வாறு கோடிக்கணக்கான ரூபாய் செலவிட்டு மாளிகைகளை நிர்மாணிக்க முற்படுவார்? நாயகத் திருமேனியும், முதல் நான்கு கலீஃபாக்களும் எவ்வாறு எளிமையாகவும் தூய்மையாகவும் நடந்து காட்டிச் சென்றார்களோ அவ்வாறான எளிமையை மேற்கொண்டவரால் எவ்வாறு எளிமையைப் பின்பற்றாது படாடோபமாக இருக்க முடியும்?

## குறைகள்

எனினும், ஔரங்கசீப் முற்றிலும் குறை அற்றவர் அல்லர். மனிதனே குறைகளின் கூட்டுச் சரக்குத்தானே! முற்றிலும் நிறையுள்ளவன் இறைவனைத் தவிர்த்து எவருமிலர். ஔரங்கசீபிடம் கடுமையும் கண்டிப்பும் அளவுக்குமீறிக் காணப்பட்டன. எனினும், இரக்க சுபாவமும் அதிகமாகவே இருந்தது. இவர் மனிதனின் குறைபாடுகளை உணராதவர். உதாரணமாக, மராத்திய மண்டலத்தில் 1699ஆம் ஆண்டிற்குப் பிறகு சில வெற்றிகள் ஏற்பட்டபோது, இனியும் போராடுவது தேவையற்றது என்று முகலாய தளபதிகள் சுட்டிக் காட்டியபொழுது அவர்கள்மீது அந்தத் தள்ளாத வயதிலும் கடும் சினம் கொண்டார். அவர்கள் துரோகிகள் என்றும், விசுவாசம் அற்றவர்கள் என்றும் சீறுவார்.[1] ஆயினும், தமது 90ஆவது வயதிலும் கண்களுக்குக்

[1] ஔரங்கசீப் முற்றும் இல்லறத்தை வெறுத்து, தக்காணப் போர்க்களங்களிலேயே நிரந்தரமாய்க் குடியிருந்துவிட நினைத்தாரேயொழிய, தளபதிகளும், மற்றுமுள்ள ராணுவத்தினரும் அவரவர் மனைவியரையும், பிள்ளைகுட்டிகளையும் வடக்கே டில்லி, ஆக்ராவில் விட்டுவிட்டு

கண்ணுடி போட்டுக் கொள்ளாமலே எழுதினர், படித்தார், கூர்ந்து பார்த்தார் என்ருல், அவருக்கு இருந்த உடற்கட்டையும், உடல் வலிமையையும் நாம் வியக்காமல் இருக்க முடியாது.

இவர் தமது உள்ளத்தில் உள்ளதை மறைக்காதவர்; ஒளிக்காதவர்; பொருமைக் குணங்களுக்கு அப்பாற்பட்டவர். தந்தை ஷாஜஹானுக்குத் தம் உள்ளக்கிடக்கையைக் கடிதம் மூலம் இவர் தெரிவித்து விட்டார். ஷாஜஹான் அவருக்குரிய கடமைகளைச் செய்யத் தவறிவிட்டார் என்பதையும், தமது குறிக்கோள் என்ன என்பதையும் இவர் கடிதம் மூலம் அறிவித்தார். ஆனல், அதே நேரத்தில் முள்ளை முள்ளாலேயே எடுப்பதுபோல், தம் தந்தை தம்மைக் கைதுசெய்யப் போகிருர் என்பதை உணர்ந்ததும், தம் மகனை அனுப்பி அதனைத் தடுக்கச் செய்தார். ஔரங்கசீப் தந்தையைக் கொல்லவில்லை. பாச உணர்ச்சிகள் அவரிடம் நிறைய இருந்தன. சகோதர வாஞ்சையும் நிறைய இருந்தது. தந்தைக்கு அனைத்துச் சவுகரியங்களையும் செய்து கொடுத்து ஆக்ராவிலேயே தங்கச் செய்து பூரண ஓய்வு எடுக்கச் செய்தார். இதில் நயவஞ்சகத்திற்கோ, பொருமைக்கோ இடமில்லை.

## விருப்பு வெறுப்புகள்

ஔரங்கசீபுக்கு ஆழ்ந்த விருப்பு வெறுப்புகள் இருக்கத்தாம் செய்தன. ஆனல், மகனைவிடத் தந்தை ஷாஜஹானுக்கு விருப்பு வெறுப்புகள் நிறைந்தும், ஆழ்ந்தும் இருந்தன. ஜஹானரா ஷாஜஹானை வேண்டிக் கொண்டதன் பேரில்தான் ஔரங்கசீப் மீண்டும் தக்காண கவர்னராக நியமிக்கப்பட்டார். ஷாஜஹான் தம் மூத்த மகள் ஜஹானராவின் சொல்லுக்கு மாற்றமாக நடந்தது இல்லை. ஆனல், ஔரங்கசீபோ தம் மூத்த மகள் ஜேபுன்னிசாவுக்கு முற்றிலும் கட்டுப்பட்டவர் அல்லர். இவர் ஜேபுன்னிசாவைப் பெண் புலவராகவும், எழுத்தாளியாகவும், உரை ஆசிரியையாகவும் உயரத்தக்கவாறு வளர்த்தார். உரிய காலத்தில் தம் பிள்ளைகள் எல்லோருக்கும் இவர் அரசியல் பயிற்சியைக் கொடுக்கத் தவறியதில்லை. இங்ஙனமே, ஒழுக்கக் கட்டுப்பாடுகளையும், அறநெறிகளையும், இஸ்லாமிய கொள்கைகளையும் மீறிய தம் மகனைக் கொன்றுவிடவும் தவறவில்லை. ஷாஜஹான் முராத் பக்ஷுக்கோ, ஷுஜாவுக்கோ அரசியல் பயிற்சியும் போர்ப் பயிற்சியும் அளிக்கவில்லை. ஆனல்,

வந்து பிரிவாற்ருமையால் துடிக்கின்றனரே என்பதைக் கிஞ்சித்தும் கருதாமலே போய்விட்டார்.

ஔரங்கசீபோ, முஅஜ்ஜம், ஆஜம், காம் பக்ஷ், அக்பர், சுல்தான் ஆகிய அனைவருக்கும் பயிற்சியை அளித்தார். ஆனால், அவர்களுள் சிலர் துரோகத் தன்மையுடன் நடந்துகொண்டால் ஔரங்கசீப் எப்படிக் குற்றவாளியாக முடியும்?

**நன்றியுணர்வு**

ஔரங்கசீப் நன்றியுணர்வு கொண்டவர். இங்ஙனமே பிறரும் தம்மிடம் விசுவாசத்துடன், நன்றியுணர்வுடன், கடப்பாட்டு உணர்ச்சியுடன் நடந்துகொள்ள வேண்டும் என்று இவர் எதிர்பார்த்தது முற்றிலும் நியாயமே. ஔரங்கசீபின் நட்புக்கும், அன்புக்கும், நம்பிக்கைக்கும் பாத்திரமானவர் ராஜா ஜெய்சிங் மட்டுமே ஆவார். ஜெய்சிங்கிடம் காணப்பட்ட அளவுக்கு விசுவாசமும், கடப்பாட்டு உணர்வும் ஜஸ்வந்த் சிங்கிடம் இல்லாமற் போய்விட்ட போதுதான் ஔரங்கசீப் அதிர்ச்சி அடைந்தார். இவர் தாமிட்ட திட்டங்களை யெல்லாம் தவறுமல் திலேர் கான் அமலாக்கியபோது, தம் மகன் ஆஜமைவிட அவர்மீது மிகுந்த பற்றுக் கொண்டுவிட்டார்.

## போராற்றலும் யுக்திகளும்

போர்முனையிலும் ஔரங்கசீப் ஈடிணையற்றவர். போர்க்களத் தலைவராகப் பணியாற்றும் திறமை தமக்குண்டு என்பதை அவர் பலமுறை நிரூபித்துவிட்டார். தார்மத் போர்க்களம் தம் அரசியல் வாழ்வின் மீட்சியா, வீழ்ச்சியா என்பதை உணர ஔரங்கசீப் நேரிட அதில் தலைமை ஏற்றுக் கொண்டது மட்டுமன்றி, ஜஸ்வந்த் சிங்கையும் புறமுதுகு காட்டுமாறு செய்தார்; பீரங்கி, காலாட் படை, குதிரைப் படைகளை ஒழுங்காகச் சீராக அமைத்துக் கொடுத்தார்; தாக்குதல், திடீர்த் தாக்குதல், முற்றுகை முதலிய சகலவற்றின் யுக்திகளையும் நன்றாக அறிந்திருந்தார். தள்ளாத வயதிலும் வஜின்ஜேரா, பன்ஹலா, ராய்கர், சிங்கர், தோர்னுக் கோட்டைகளைப் பெரும் கஷ்டங்களுக்கிடையே இவர் கைப்பற்றியது இவரது போர்த் திறமைகளையும் போர்த் தலைமை ஆற்றலையுமே குறிக்கின்றது.

ஔரங்கசீப் தம் பதினைந்தாம் வயதில் யானையை எதிர்த்து வீழ்த்திச் சாய்த்த காலம் முதற்கொண்டு வீரம் மிக்கவர் என்பதைப் பல நேரங்களில், பல இடங்களில் நிரூபித்துவிட்டார். சிறந்த போர்த் திறமையும் வீரமும் மிக்கவர் ஆகையால்தான், இந்துஸ்தானியர்கள் பின்வாங்கமாட்டார்கள், தூரானியர்கள்

பின்வாங்குவது போர் யுக்திகளுள் ஒன்று எனக் கூறுவர் என்று தம் கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார்.

அரசியல் சூரப்பார்வையைப் பெற்றிருந்த இப்பேரரசர் தவ ருகவும் கணக்குப் போட்டுவிட்டார். இவர் ஒரு சிறந்த போர்த் தளபதியாகவும் போர் வீரராகவும் விளங்கியுங்கூட, இரண்டு வெவ்வேறு போர் முனைகளில் ஏககாலத்தில் வெற்றி அடைய இயலாது என்பதை மறந்துவிட்டார். ஒன்றுக்கொன்று வெகு தொலைவில் இரு முனைகளில் இவர் போர்த்திட்டமிட்டது மாபெரும் தவருகும்.[1] இக் கருத்தை அறிஞர் ஓவன் எடுத்தியம்பி யுள்ளார். பேரரசர் ஔரங்கசீப் ஒரே நேரத்தில் இரு வேறு குறிக்கோள்களை அடைய முயற்சித்தது அவரது போர் யுக்திகளின் நிதர்சனக் குறைவைக் காட்டுகிறதென்றுதான் ஓவன் கூறினுரே ஒழிய, போர் ஆற்றலில் குறைந்தவர் என்று கூறவில்லை. இதிலிருந்து ஓர் உண்மை புலனுகின்றது. அரசியல் தந்திரியாக விளங்கிய ஔரங்கசீப் பீஜப்பூர், கோல்கொண் டாவை இணைக்காது விட்டிருந்தாலும் அவர் எதிர்பார்த்த வெற்றி களைப் பெற்றிருக்க இயலாது. ஏனெனில், பல தனி அரசுகள் ஏககாலத்தில் அவரை எதிர்க்கத் தொடங்கின. எனவே, எங் கெங்கு அவருடைய போர்த் திறமையும், தளபதிப் பொறுப்பும் தேவைப்பட்டனவோ அங்கங்கெல்லாம் அவர் போர்க்களத் தில் குதித்துப் போராடியுள்ளார். குறிப்பாகத் தர்மத் போர்க் களத்தில் பல உபதளபதிகளும் வீரர்களும் மனம் சோர்வுற் றிருக்கையிலும், தாமே அதிதீரத்துடன் போர் புரிந்து தைரியத்தை ஊட்டினுர். நெப்போலியன் இத்தாலிய, எகிப்திய போர்க்களங்களில் தம் படைகளை ஏவிப் போரிட்டதற்கு ஒப் பாகும் இது. நெப்போலியன் லிப்சிக் போர்க்களத்திலும், இறுதிப் போராகிய வாட்டர்லூவிலும் (Waterloo) தோல்வி கண்டார். தோல்வியே காணுத அம் மாவீரரே, வரலாற்றுப் புகழ்கொண்ட தளபதியே தோல்வி காண நேர்ந்தது. ஔரங்கசீபோ, பல போர்க்களங்களில் வெற்றி பெற்றும் சிலவற்றில் தோல்வியுற்றும் தம் தள்ளாத 87ஆவது வயதிலும் வஜின்ஜேரா கோட்டையைத் தாமே நேர்நின்று முற்றுகையை நடத்தி வெற்றி கண்டார். ஆகவே, போர்த்திறமையிலும் வீரத்திலும் அலெக்சாந்தர், ஹானிபல், தாரிச், நெப்போலியன் ஆகியோருடன் அவரை ஏன் ஒப்பிடக்கூடாது?

[1] சென்ற உலகப் போரில் ஜெர்மானிய நாஜி சர்வாதிகாரி ஹிட்லர் ஏக காலத்தில் கிழக்கே ரஷ்யாவை எதிர்த்தும், மேற்கே நேசப் படை யினரை எதிர்த்தும் இரு போர்முனைகளை ஏற்படுத்திக் கொண்டதால் அடியோடு ஒழிந்தான் என்பதை இங்கு நாம் நினைவுகூரலாம்.

**மீர்அத்தெ ஆலமின் சாட்சியம் :** 'இந் நூலைப் படிப்போர் அறிந்துகொள்வார்களாக: இறைவனின் இந்த அடிமையாகிய நான் என் கண்களால் கண்டவாறே மிகச் சிறந்த மன்னராயிலங்கிய, நற்பழக்கங்களின் சிகரமாகிய முஜஃப்ஃபர் முஹையத்தீன் முஹம்மத் ஔரங்கசீப் ஆலம்கீரின் குண நலன்களை விவரிக்கிறேன்: இயற்கையிலேயே இறைவனைத் தொழுது வணங்கும் சுபாவமுடைய இந்தப் பேரரசர் மத பக்தியில் மிக ஆர்வமுள்ளவர். இமாம் அபூஹனீஃபாவின் (அவர்மீது சாந்தியும் சமாதானமும் உண்டாவதாக!) கோட்பாடுகளைப் பின்பற்றுபவர்; சமயத்தின் ஐந்து அடிப்படைக் கோட்பாடுகளை நிறுவ முயற்சிக்கிறார். முறைப்படி "ஒலு" (தொழுவதற்காகக் கை கால்கள் சுத்தம் செய்தல்) செய்துவிட்டுத் தம் பெரும் பகுதி நேரத்தை இறைவனின் வணக்கத்தில் செலவழிக்கிறார். மத்தியிலும், தனித்தும், கூட்டத்திடையேயும் நின்று தொழுகையை நடத்துகிறார். வெள்ளிக்கிழமைகளிலும் மற்றப் புனித நாள்களிலும் நோன்பு நோற்கிறார். எல்லா முஸ்லிம்களுடனும் சேர்ந்தே வெள்ளிக்கிழமைத் தொழுகையை ஜுமுஆ மசூதியில் நடத்துகிறார்......

'இவர் பதவிக்கு வருவதற்குமுன் தம்முடைய வருமானத்தில் பெரும் பகுதியைத் தர்மமாகக் கொடுத்தார். இப்பொழுதும் தமக்கென்று டில்லியைச் சுற்றியுள்ள ஓரிரு கிராமங்களிலுள்ள உப்பு எடுக்கும் களங்கள் 2 அல்லது 3ஐ மட்டுமே சொந்தச் சொத்தாக வைத்துள்ளார். இவரால் மக்காவுக்கு யாத்திரை செல்ல முடிவதில்லை...பாட்டுகளை நிறுத்திவிட்டார்...பாடகர்களுக்கு நிலத்தானங்களை வழங்குகிறார்...தங்க, வெள்ளிப் பாத்திரங்களை இவர் உபயோகிப்பதில்லை.'

## அக்பரும் ஔரங்கசீபும்

பக்தாவர் கான் மேலும் கூறுகிறார் :

'மேன்மை தங்கிய பேரரசர் மதத்தைப் பாதுகாக்கக் குழு ஒன்றை அமைத்துள்ளார். மிகவும் நம்பிக்கைக்குப் பாத்திரமான நூல்களின் தொகுப்பு ஒன்றைத் தயாரிக்குமாறு அதைப் பணித்துள்ளார். இறைவன் உதவியால் ஃபத்வாயெ ஆலம்கீரி என்னும் இந்தப் பணி முடிந்தால், உலகிலேயே அது மிகச் சிறந்த சட்டத் தொகுப்பாகக் காட்சியளிக்கும்...

'இளமையிலேயே இவர் திருமறையின் சில அத்தியாயங்களை மனனம் செய்துள்ளார். ஷேக் அஷ்ரஃப் யஹ்யா, இமாம்

கஜ்ஜாலி ஆகிய பெரியார்களின் நூல்களைத் துருவிப் படிப்பார். இவரது கையெழுத்து மிக அழகாக இருக்கும். கையெழுத்துக் கலையில் சிறப்பான முழுத் திறமையை இவர் பெற்றிருக்கிறார். இவர்தம் கைகளாலேயே இரண்டு தடவை புனிதத் திருமறை முழுதையும் பிழையற எழுதியுள்ளார்.[1]

'அவற்றை மக்காவுக்கும் மதீனுவுக்கும் கூட அனுப்பி வைத்தார். இவர் உரைநடை வரைவதில் சிறந்த எழுத்தாளர். (புளுகும்) புலவர்களை இவர் நம்புவதில்லை.

'பேரரசர் தம் அதிருஷ்டமிக்க குழந்தைகளுக்கு நல்ல கல்வியை வழங்கியுள்ளார். இவருடைய ஆதரவினுல் அவர்கள் திருமறையைப் பூரணமாய் நெட்டுருச் செய்து ''ஹாபிஸ்'' களாக விளங்குகிருர்கள்.

'பேரரசரின் சிறப்பு எடுத்துக் காட்டான ஈடிணையற்ற குணநலன்களும், நல்லொழுக்கங்களின் தூய்மையும் சொற்களுக்கு அப்பாற்பட்டனவாம்.'

மறுக்க முடியாத இச் சாட்சியத்தை நாம் ஏற்கத்தான் வேண்டும். பேரரசர் அக்பர் எழுதப் படிக்கத் தெரியாதவர். பேரரசர் ஔரங்கசீபோ அரை நூற்ருண்டுகால போராட்டத்திற்கிடையிலும், போர்களுக்கிடையிலும், அவசரக்கோலமான வாழ்வினூடேயும் சிறந்த போர் ஆற்றல் பெற்றிருந்ததுடன் மட்டும் இன்றி, சிறந்த இலக்கியத் திறமையும் பெற்று, அதை வளர்த்து ஒரு ஞானியுமாயினுர்...சிறந்த எழுத்தாளர்; இதை எவரும் மறுத்திட முடியாது. திருமறையாம் திருக் குர்ஆனை நன்ருக மனப்பாடம் செய்து வைத்திருந்தார். 'ஹாபிஸ்' என்று பாராட்டத்தக்க அளவுக்கு இவர் திருமறையை ஓதிப் பாடம் செய்தது மட்டுமின்றி, அதனை நன்ருக ஆராய்ந்து முழுப் பொருளையும் உணர்ந்தவர். இவர் தம் கைகளாலேயே திருமறையை எழுதியுள்ளார். ஓய்வு நேரங்களில் அழகிய கையெழுத்துக்களில் எழுதப்பட்ட திருமறையை மக்காவுக்கும் மதீனுவுக்கும் அனுப்பி வைத்தார். இலக்கியத்திலும் ஆழ்ந்த பற்று இருந்தது. பாரசீக மொழியில் நல்ல தேர்ச்சி பெற்றிருந்தார் என்பதற்கும், ஓர் எழுத்தாளர் என்பதற்கும் அவரது உரைநடைக் கோவை ஒன்றே சாட்சி பகரும். பாரசீக மொழியில்

[1] ஔரங்கசீபின் கையால் வரையப்பட்ட குர்ஆன் பிரதியின் படி மிகவும் விலை மதிப்புள்ளது; கண்ணுக்குக் கவர்ச்சியூட்டுவது. இப் படிகளை விற்றே இவர் பொருளீட்டினுர்.

இரு எழுத்தாளர்களாய் விளங்கிய சீர்மிகு ஜலாலுத்தீன் ரூமி (Jalaluddin Rumi), இமாம் கஜ்ஜாலி (Imam Gazzali) என்பவர்களியற்றிய மிகச் சிறந்த ஞானமார்க்க நூல்களைத் தேடிப் பிடித்து, விரும்பிப் படித்து, அவற்றை நன்ருக இவர் அறிந்து கொண்டார். ஔரங்கசீப் புத்தகமே கதியென்று வெறும் கபோதியாகிவிடவுமில்லை, வெற்று வரட்டு வேதாந்த தத்துவங்களில் காலத்தைக் கழித்து விடவுமில்லை.

இவர் சிறந்த எழுத்தாளர் என்பதற்கு இவருடைய பலப்பல சிறப்பான கடிதங்களே சாட்சி பகர்கின்றன. ஔரங்கசீப் பல கடிதங்களைத் தம் கைப்படவே எழுதியுள்ளார். ஒவ்வொரு கடிதத்திலும் ஏதாவது ஒரு பழமொழியையும், திருமறையிலிருந்து ஒரு சிறந்த கருத்தையும் மேற்கோள் காட்டுவார். எவ்வாறு தொழுகையும் வணக்கமும் இவரது அன்ருட வாழ்க்கையின் ஒரு முக்கிய பகுதியாக இருந்தனவோ அவ்வாறே கடிதங்கள் எழுதுவதும், திருமறையின் விளக்கங்களைப் பயில்வதும், இலக்கியச் சுவைகளை அனுபவிப்பதும் இவரது அன்ருட அலுவல்களில் குறிப்பிடத்தக்கனவாக இருந்தன. மழை வெய்யில் காலங்கள், அசதி, போர் நிகழும் காலங்கள் என்று இராமல், என்றும் இதே அன்ருட அலுவல்களைச் சளைக்காது, சலியாது இவர் பின்பற்றி வந்தார்.

**ஜஹாங்கீரும் ஔரங்கசீபும் :** அக்பர் தம் மகன் ஜஹாங்கீரை ஒழுக்க நெறிகளில் ஈடுபடுத்தத் தவறிவிட்டார். அவர் ஒரு குடிகாரராகவும், அபினி அருந்துபவராகவும் மாறினுர். எந்த ஒரு மதத்திற்கும், கொள்கைகளுக்கும், ஒழுக்க விதிகளுக்கும் அவருக்கும் தொடர்பு இருந்தது கிடையாது; உலக வாழ்க்கைக் கேளிக்கைகளில் ஈடுபட்டு, ஆட்சியை நூர்ஜஹானிடத்தில் ஒப்படைத்துவிட்டால் அதுவே போதும் என்றிருந்தார். இதற்கு அக்பரின் விருப்பு வெறுப்புகளும், அவரது தவறுகளுமே காரணமாகும். ஜஹாங்கீருக்குத் தம் சுயக்கேளிக்கை வாழ்வுக்கே நேரம் இல்லாத போது, ஷாஜஹானைத் திருத்தி வாழச் செய்வது அவரால் எப்படி இயலும்? ஆனுல், ஔரங்கசீபோ தாம் மட்டும் ஓர் இலக்கிய கர்த்தாவாக இருந்துவிடாமல், தம் பிள்ளைகள் அனைவரையும், சுல்தான், அக்பர் உட்பட அனைவரையும் இலக்கிய, சமய கல்விகளில் ஈடுபடச் செய்தார். ஆஜமும், ஷாஆலமும் திருமறையை நன்ருக ஓதி முடித்தவர்கள்; இலக்கியத்தில் ஈடுபாடு கொண்டவர்கள். ஔரங்கசீப் தந்தை மகனுக்கு ஆற்றவேண்டிய கடமைகளைச் செய்து முடித்

தார். இதனுல்தான் ஜேபுன்னிசா ஒரு பெண் புலவராக ஆக முடிந்தது.

ஔரங்கசீபின் எளிமைக்கு நிகர் ஔரங்கசீபே! தந்தை ஷாஜஹான் படாடோபத்திலும், ஆடை அலங்காரங்களிலும் பிரியம் உடையவர். இதற்கு நேர்மாருனவர் ஔரங்கசீப். எளிமையின் சிகரம் ஔரங்கசீப். உடைகளில் எப்பொழுதும் வெள்ளை உடையையும், ஒரேவிதமான ஆடையையுமே தேர்ந்தெடுத்தார். இவர் முத்து, வைரம், வெள்ளி, தங்க நகைகளை விரும்புவதில்லை. ஆனுல், அரசரின் சிறப்பு உரிமைகளிலும் பேரவையில் ஒழுங்கு கட்டுப்பாட்டுச் சீரமைப்பிலும் கடுமையாக இருப்பார். உதாரணமாகப் பேரரசர் மட்டுமே பல்லக்கில் ஏறிச் செல்ல உரிமைபெற்றிருந்தார். இளவரசருக்கும் இது மறுக்கப் பட்டது. அமீர்களும், உயர் மன்சப்தார்களும் முதல் வரிசையில் பேரவையில் நிறுத்தப்பட்டார்கள். அரச அதிகாரங்கள் இருப்பினும், தோற்றத்திற்கு மட்டுமே இன்றி, உண்மையில் இவரது உள்ளத்திலும் எளிமைதான் குடிகொண்டிருந்தது.

ஔரங்கசீப் ஒரு சட்ட நிபுணர்; நீதி நெறியாளர். இவர் காலத்தில் அறிஞர்கள் பலர் வழங்கியுள்ள சாட்சியங்களை நாம் அங்கங்கே பார்த்துள்ளோம். அவர் ஒரு 'நீதிக்கடல்'. பதவி உயர்வு மதத்தாலும், சமயத்தாலும் பெறக்கூடியன அல்ல என்றும், அவ்வாருயின் இந்துக்கள் பலர் வேலைகளை இழக்க நேரிடும் என்றும் கூறி இருக்க, இவர் நீதி மனப்பான்மை இல்லாதவர் எனக் குற்றஞ் சுமத்துவது பொருந்தாது. நீதி மனப்பான்மையும் சட்ட நுணுக்கமும் பெற்றிருந்ததனுல்தான், சட்ட நிபுணர்களின் குழுவை இவரால் அமைக்க முடிந்தது. ஆனுல், கண்மூடித்தனமாகச் சட்டத்தைப் பின்பற்றுபவர் அல்லர் ஔரங்கசீப். பொதுச் சட்டத்தை ஏற்படுத்த முயற்சித்ததெல்லாம் சட்டம் இலகுவாக்கப்பட்டு, நீதி அனைவருக்கும் கிடைத்தல் வேண்டும் என்பதற்காகவேயாகும். இவர் அவசரப் பட்டு நீதியை வழங்கிடவும் இல்லை. தகுந்த விசாரணைகளையும் சாட்சியங்களையும் நம்பவேண்டும் என்று முஸ்லிம் சட்டம் கூறுவதை இவர் ஏற்றுக்கொண்டார். சாட்சியங்கள்மீதான சட்டத்தை (On evidence and law) திருமறை அடிப்படையாயமைத்துக் கருத்துகளை அளித்துள்ளதை ஔரங்கசீப் அறிந்திருந்தார். இவர் உணவு வகைகளிலும் வெகுவாகச் சுவைத்து நறுஞ்சுவைப் பேருண்டியைச் சாப்பிட்டுப் பழகியவர் அல்லர். பல அமீர்களும் மன்சப்தார்களும் கொண்டாட்ட மிக்க கோலாகல வாழ்க்கையை நடத்தி வந்த காலத்தில் இவர் மிக எளிமை

யான உணவையே சாப்பிட்டு வந்தார். கேட்டாலே சிரிப்பு வரும் ரொட்டி, நீர், கொரிந்தாப் பழம், சுவைத்துச் சாப்பிடத் தக்க 'கர்தா' (Kharda) என்னும் பிசின் (Chewing Gum) ஆகியவைதாம் ஔரங்கசீப் வேண்டி விரும்பியவையாம். சொந்த வாழ்க்கையில் இவர் எளிமையைக் கடைப்பிடித்தது மட்டுமன்றிப் பல சீமான்கள் சாதாரணமாக அனுபவிப்பன வற்றையும் சற்றும் நுகராது ஒதுக்கித் தள்ளினுர் ஔரங்கசீப்.[1] ஔரங்கசீபிடம் எந்தவிதத் தீமையும் காணப்படவில்லை. தந்தையும், பாட்டனும், முப்பாட்டனும் லாகிரிப் பொருள்களை உபயோகித்து வந்ததற்கு மாருக, ஔரங்கசீப் அவற்றை அடியுடன் வெறுத்தொதுக்கினுர் என்பது போற்றுதற்குரியது அல்லவா? எனவே, தம்மைப் போன்றே மக்களும் மதுக் குடிக்கோ போதைப் பொருள்களுக்கோ இரையாகக்கூடாது என்றுஇவர் விரும்பினுர். உண்மையில், இவர் பேரரசர் அக்பரையும்விடச் சிறந்தவர்; ஔரங்கசீபின் பேரரசு, மராத்தியர்கள் எதிர்த்தும், இவர் இறக்கும் தறுவாயில் தெற்கே தஞ்சை வரையில் பரவி இருந்தது என்னும் உண்மை ஒன்றே, இடையூறுகள் எவ்வளவு இருப்பினும் அவற்றைச் சமாளித்து வெற்றிகாணும் திறமை இவருக்கு இருந்ததென்பதைப் புலப்படுத்துகின்றது. அக்பரால் பெஷாவரையும் சாமர்க்கந்தையும் தம் பேரரசுக்குள் இணைக்க முடியவில்லை; அஸ்ஸாம் பகுதியை இணைக்க இயலவில்லை. ஔரங்கசீபின் பேரரசோ கிழக்கே சிட்டகாங் வரையிலும் (அன்றைய அஸ்ஸாம்) பரவி நின்றது. காஷ்மீரும் இணைந்திருந்தது. கோல்கொண்டா, பீஜப்பூர் இணைந்துவிட்டன. எனவே, அதன் பகுதிகளும் இணைந்தன. இராஜபுத்திரர்களின் துணை இருந்தும், அக்பரால் பீஜப்பூருக்குத் தெற்கே தமது ஆதிக்கத்தை விஸ்தரிக்க முடியவில்லை. வட ஆசியப் பகுதிகளில் ஷாஜஹான் தோற்றுர்; ஔரங்கசீப் வெற்றி கண்டார். மன்சப்தாரி முறையும், இராணுவ முறையின் குறைகளும் இல்லாமற்போய், வேகமான ஊர்திகளும் போக்குவரத்தும் இருந்திருக்குமேயானுல், ஔரங்கசீபினுல் மேலும் சிறந்த வெற்றிகளைப் பெற்றிருக்க முடியும். நாட்டின் நிலவரங்களை நேரில் அறிதல், சுறுசுறுப்பாக இருத்தல், தீவிர சிந்தனைக்குப் பிறகு நிதான முடிவுக்கு வருதல், மக்களின் நலன்களைப் பேணுதல் ஆகிய பண்புகளில் இவர் சிறந்த பேரரசராக இருக்க முயற்சித்ததில், இஸ்லாத்தின் இரண்டாவது கலீஃபாவா யிலங்கிய உமர்கத்தாபின் வழிமுறைகளையே முழுக்க முழுக்கப் பின்பற்றினுர்.

[1] 'Anecdotes of Aurangzeb'

**அறிஞர் சர்க்காரின் கூற்று :** பேரரசர்களின் திறமையை நிறுத்துப் பார்க்கும்பொழுது, ஔரங்கசீப் முகலாயப் பேரரசர்கள் எல்லோரையும்விட மிகச் சிறந்தவர் என்று கருதினுல் அது தவருகாது. ஆனுல், சர்க்காரின் கருத்துப்படி, 'ஒரு முகலாயராகிய அக்பரைத் தவிர இவர் முகலாயர்களுள் மிகச் சிறந்தவர்....தமது 90ஆவது வயதில் இவர் இறந்தாலும் தம் இறுதி நாள்கள் வரையிலும் எந்த ஆற்றலும் அழிந்துவிடாமல், யாவும் (சீராக, ஒழுங்காக) இருந்தன என்று எல்லா வரலாற்று ஆசிரியர்களும் ஒப்புக்கொள்கின்றனர். இவர் ஒரு தடவை பார்த்த முகத்தை என்றும் மறப்பதே இல்லே. எல்லா உடற் சக்திகளும் இவர் இறக்கும் வரையிலும் இருந்தன. கடைசிக் காலத்தில் சிறிது காது மந்தமாக இருந்தார்...ஔரங்கசீப் கடைசிக் காலத்தில் முதலாம் நெப்போலியனைப் போன்றுதாம் இருந்தார்...அவ்வளவு சிறந்த அரசராயிலங்கியும் இவரை ஒரு சிறந்த அரசியல் அல்லது நிர்வாக அறிஞர், நிபுணர் என்று சொல்ல முடியாது. நிர்வாகத்தின் ஒரு பிரிவின் தலேவராக இருப்பதற்கு முற்றிலும் தகுதி பெற்றவர்...அரசியல் ரீதியாகப் பார்க்கும்போது ஔரங்கசீப் ஒரு பெருந் தோல்வியே.'

மூலக் குறிப்பாளர்களான பெர்னியர், காஃபீ கான், பக்த்வார் கான், முஸ்தயித் கான் ஆகியோர் ஔரங்கசீபிடம் போற்றற்குரிய குணங்கள் நிறைந்து காணப்பட்டன என்று குறிப்பிட்டிருக்கும்போது, அக் குண நலன்களுள் ஒன்றையுமே குறிப்பிடாது, பொதுவாக ஆட்சித்துறை ஒன்றின் தலேமைப் பதவிக்குத்தான் இவர் தகுதி பெற்றவர் என்று சர்க்கார் கூறுவது நடுநிலேயுடன் ஆராயாது வஞ்சத்துடன் கூறப்படும் தீர்ப்பாகும். இது முற்றிலும் ஏற்புடைத்தன்று. ஏனெனில், வாரிசுரிமைப் போரை நேரிற் கண்டு ஔரங்கசீபுக்கு எதிராகக் கடிதங்களே எழுதிய பெர்னியரேகூட இறுதியில், ஔரங்கசீபின் ஆட்சியைப் பல ஆண்டுகள்வரை கண்கூடாகப் பார்த்த பின்னர், 'சிறப்பான அரசியல் பேரறிஞர்' (Consummate Statesman) என்று சொல்லிச் சென்றுள்ளார்.[1] இது இவரது சொந்தக் குண நலன்களேப் பொறுத்த வரையில் முற்றிலும் உண்மையாம்.

[1] 'The prince is endowed with a versatile and rare geuius, that he is a consummate statesman and a great king' 'The Travels in the Mughal Empire'—Vol. II. p. 199.

ஔரங்கசீபின் தோல்விக்கு அறிஞர் காஃபீ கான் இரு காரணங்களைக் காட்டுகின்றார்: 1. ஔரங்கசீப் குற்றச்சட்டத்தையும் சட்டத்தொகையையும் அளித்தாலும், தண்டனையின் மீது அவருக்கு நம்பிக்கை இல்லாததால், தண்டிப்பதில்லை. 2. கீழ்மட்டத்தில் இருக்கும் ரெவின்யூ அதிகாரிகள், அரசாங்க அலுவலர்கள் பலர் இவரிட்ட ஆணைகளுக்கு மாருக நடந்து வந்தனர்.

**பெர்னியர் சாட்சியம் :** 'நாட்டின் சூழ்நிலைகளும், பிறப்பு, கல்வி ஆகியவையும் ஔரங்கசீப் பின்பற்றிய முறைகளில் முற்றிலும் உதவி நல்க வில்லை என்ருலும், இளவரசர் ஔரங்கசீப் அபூர்வமான ஒரு சிறந்த அறிஞர்; சிறப்பான, முற்றுப் பெற்ற அரசியல் பேரறிஞர்; சிறந்த மாமன்னர் என்பதை நாம் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்.'

**லேன்பூல் மதிப்பீடு :** ஔரங்கசீப் அவர் தந்தையைவிட ஒப்பிட முடியாத அளவுக்கு எவ்வளவோ சிறந்தவர். அறிவுக் கூர்மையுள்ள மனிதர்; நீதியுள்ள அரசர்; அதிகமான கருணையும், தயையும் கொண்ட மன்னர். அவரது ஒதுங்கி இருக்கும் மனப்பான்மையாலும், அவநம்பிக்கைக் குணத்தாலும் அவரது எல்லாத் தன்னடக்கமும், கடமை உணர்ச்சியும், நீதி மனப்பான்மையும் மக்கள் மனத்தில் இடம் பெருமலே போயின. இவர் பூண்டிருந்த துறவித் தன்மையும், சிக்கனத்தனமும், வாழ்க்கையின் எளிமையும் ஷாஜஹானின் பேரொளியைக் கண்ட நாட்டினருக்கு ஏற்க முடியாதனவாக இருந்தன. **இனத்திலும் மதத்திலும்** அந்நியரான ஒருவர் தங்களுக்கு மன்னராக இருப்பாரேயாளுல், தங்களுடைய பணப் பைகளைக் காலியாக்கிஞலும் சரியே, அவர் மன்னராகவே இருந்துவிட்டுப் போகட்டுமே என்றுதான் அவருடைய பெரும்பான்மையான குடிமக்கள் கருதலாயினர். ஔரங்கசீபுக்கு இதைத்தான் செய்ய விருப்பமில்லை. இவரது மிக உயர்ந்த அமைப்பும் சுபாவமுமே இவர்தம் மக்களை இவரிடத்திருந்து வெகு தூரத்தில் பிரித்து வைத்தன. இவரது வளையாத நேர்மைத் தன்மையும், அறப்பண்புகளும், இவருடைய மக்களின் மனத்தைக் குலுங்க வைத்தன. இவரைப் போன்ற உயர்ந்த இலட்சியங்களைக் கொண்ட மன்னர்கள் மிகவும் அபூர்வமே! ஔரங்கசீபைப்பற்றி, 'எதிர்முரணுன குண நலன்களின் விந்தையான கூட்டு' என்று வர்ணிப்பதுண்டு.

இவர் குணநலன்களில் ஒரு பரம வைதிகர். இவரிடம் மிக உயர்ந்த எல்லா நற்குணங்களும் இருந்தன. இவர் எல்லா நல்லொழுக்கங்களையும் பின்பற்றி ஒழுகினார். ஆனால், (மக்களிடத்திருந்து) அன்பை மட்டும் இவரால் பரிசாக அடைய முடியவில்லை.'[1]

**எல்ஃபின்ஸ்டன் மதிப்பீடு :** 'ஔரங்கசீப் மேற்கொண்ட முயற்சிகளையும், துரதிருஷ்டங்களும் கஷ்டங்களும் அவரைச் சூழ்ந்திருந்த நிலையையும் கவனத்தில்கொண்டு பார்க்கும்போது, அவரது விடாமுயற்சிகளைப் போற்றாமல் இருக்கமுடியாது. (தள்ளாடும் வயதில்) களைப்புற்ற இவர் முற்றுகையிடலும், மீண்டும் தாக்கச் செல்லுதலும் வயதிற்கு ஏற்ற செயல்கள் அல்ல...ஆனால், இவை எல்லாவற்றிலும் ஔரங்கசீப் பெரும் பலத்தைப் பெற்றிருந்தார். இவரே நேரில் எல்லா அரசாங்க அலுவல்களையும் பார்த்தார். போர்த் திட்டங்களைத் தாமே நேரே வகுத்து, உத்தரவுகளும் அறிக்கைகளும் பிறப்பித்து வந்தார்.

எந்த ஒரு மாநில மாவட்டக் கலெக்டர் நியமனமும், ஓர் எழுத்தரின் நியமனமும் இவருடைய கவனத்திலிருந்து தப்பியதில்லை......இவை யெல்லாம் உளவாளிகள்மூலம் நடைபெற்று வந்தன. ஔரங்கசீப் அந்த வயதிலும் சுறுசுறுப்பாக நிர்வாகத்தை நடத்திய முறையைப் பார்க்கும்போது, எந்தக் காலத்திலும் காண முடியாத சிறப்பாகவே இலங்கும்.

'இவர் வாழ்க்கையின் ஒவ்வோர் அம்சத்திலும் நன்மையைச் செய்து வந்தவர். சத்தியத்தைக் கடைப்பிடித்தவர்; ஒழுக்க விதிகளைத் தவறாது சிரமேற்கொண்டு நடந்தவர்; அரசியல் மதியூகி; அரசியல் விற்பன்னர்; மார்க்க மேதைகளைப் போற்றியவர்; மார்க்க வழிகளைப் பின்பற்றி நடந்தவர்; சொந்த விருப்பு வெறுப்புகளுக்கு இடம் கொடாதவர்; பிற மத மக்களையும் அனுசரித்து நடக்க முயன்றவர்; சொந்த வாழ்விலும் எல்லைகளைக் கடக்காதவர்; அற்ப இச்சைகளுக்கு அப்பாற்பட்டவர்; உயரிய குணங்களைத் தாமே தம் பிள்ளைகளுக்கும் ஊட்டியவர்; அரசியலிலும் சொந்த வாழ்விலும் நடுநிலையைக் கடைப்பிடித்தவர்; அகவாழ்விலும் புறவாழ்விலும் எளிமைக்கும் உயரிய குறிக்கோள்களுக்கும் எடுத்துக்காட்டானவர்; மன்னர்களுக்கு

[1] Lane-poole, 'Aurangzeb' p. 86-87.

முன்மாதிரியானவர்; பேரரசராக இருந்தும் இலக்கிய, சட்டப் படைப்புகளைப் போற்றியவர்; அளித்தவர். இலக்கிய, சட்டச் சிறப்பு அறிவு பெற்றிருந்தவர்; தம் 90ஆவது வயதிலும் உடல் வலிமையும், உள்ளமும், உயர்வும், உடற்சக்திகளும் குன்றுமலே இருந்தவர். தாம் நாடியவாறே வெள்ளிக்கிழமைக் காலையில் இறைவனடி சேர்ந்தார் என்றுல் அவரைப் பொறுத்த வரையில் அவரது வாழ்க்கையை வெற்றி என்று சொல்வதா தோல்வி என்பதா? முடிவு இதுதான்: ஔரங்கசீப் புரியாத ஒரு புதிர்—அரச உடையில் ஒரு ஞானி. அசோகர் 'தத்துவ ஞானியரசர்' (Philosopher King). அக்பர் 'தேசிய அரசர்' (National King). ஔரங்கசீபோ, தர்வேஷ் அரசர் (Terwesh King)—அதாவது. 'துறவி அரசர்'!

